# பாலகாண்டம்

(முதற் பகுதி)




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## பாலகாண்டம்

(முதற்பகுதி)




அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

1957

Rs 6 - 00

# உள்ளுறை

# கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு



# முகவுரை

திருவாளர் T. M. நாராயணசாமி பிள்ளை அவர்கள் M. A., B. L., M. L. C.
(துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்)

"அங்கணெடு மதில்புடைசூழ் அயோத்தி என்னும்
அணிநகரத்துலகனைத்தும் விளக்கும் சோதி
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி
விண்முழுதும் உய்யக்கொண்டவீரன் தன்னைச்
செங்கண் நெடுங் கருமுகிலை இராமன் தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள்
எங்கள் தனி முதல்வனை எம்பெருமான் தன்னை
என்றுகொலோ கண்குளிரக்காணு நாளே."

(குலசேகராழ்வார்)

நம் காலத்தவராகிய சுப்பிரமணிய பாரதியார் தமிழுக்கும் தமிழிசைக்கும் ஓர் புத்துயிர் கொடுத்து இறவாது நிற்கும் இனிய பாடல்களைப் பாடியுள்ளார். தமிழ் மறுமலர்ச்சிக் கவிகளின் தந்தையென்றே அவரைக் கூறலாம். அவரது உணர்ச்சி நிறைந்த செந்தமிழ்ப் பாடல்களால் தமிழ் உலகெங்கும் முழங்குகின்றது. சென்ற காலத்தின் பழுதில்லாத தமிழ்த் திறத்தை அடிப்படையாகக்கொண்டு காலத்திற்கு ஏற்றவாறு புதிய உயிர் தமிழுக்கு அளித்திருக்கிறார். தமிழ்ப் பெருங்காப்பியங்களையும் பிற நூல்களையும் நன்கு கற்றுத் தெளிந்தவர். அவரைப் போன்று கம்பர்காவியத்தை ஆராய்ந்து திளைத்தவர் ஒரு சிலரேயாவர். அவருக்கு ஆங்கிலத்திலும் வடமொழியிலும் நல்ல தேர்ச்சியுண்டு. பல மொழிகளில் உள்ள நூல்களையும் ஐயம் திரிபறக் கற்ற அப் பெரும் புலவர்,

"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவர் போல் இளங்கோவைப்போல், பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை"

எனக் கம்பரை வியந்து பாராட்டியுள்ளனர். "கம்பன் பிறந்த தமிழ் நாடு" என்று குதூகலம் அடைகின்றார்.

இராம சரிதத்தை விரித்துரைக்கும் நூல்களுள் வடமொழியில் வான்மீகி முனிவர் இயற்றிய இராமாயணமும், தமிழில் கம்பர் இயற்றிய இராமாவதார நூலும் மிகச் சிறப்புடையன. மிகமிகப் பழங்காலத்துக்கு முன்பே இராம கதை தமிழ் நாட்டில்

பரவியதென்பது, சிலப்பதிகாரம், புறநானூறு முதலிய பழந் தமிழ்நூல்களால் அறியப்படும். படிப்போர்க்குப் படிக்குந் தோறும் புதிய புதிய சுவையும் நயமும் தந்து மகிழ்வூட்டுவது கம்பர் இயற்றிய செந்தமிழ்க் காப்பியம். இந்நூல் "நவில் தொறும் நூல் நயம் போலும்" என்னும் தமிழ் மறைக்குச் சிறந்த இலக்கியமாக அமைந்துள்ளது.

ஒரு சிறந்த கவிதையின் சீரிய இலக்கணங்களைக் கம்பரே கோதாவரி நதியையும், பம்பைப் பொய்கையையும் வருணிக்கும் போது விளக்கியிருக்கின்றார். அந்த விளக்கத்திலிருந்து நல்ல கவிதை, ஆழ்ந்த பொருளையும், இசையையும், இனிமையையும், பெருமித நடையையும், ஆழம், அமைதி, தெளிவு என்பவற்றை யும் தன்னகத்தே கொண்டு, மக்கள் மனதை வளம்படுத்தி உயர்த்தி இலக்கியத்துக்கே ஒரு சிறந்த அணியாக விளங்கும் என்று அறிகின்றோம். மேற்கூறிய பண்புகள் அனைத்தும் நிறைந்த காப்பியத்தை இயற்றியவர் ஆதலின் கம்பரை ஆன்றோர் கவிச் சக்கரவர்த்தியெனப் போற்றுகின்றனர்.

அமரகவியாகிய கம்பர் இயற்றிய காப்பியத்தில், சிலப்பதிகா ரத்தில் காணும் முத்தமிழ்த் திறமும் கண்டு மகிழலாம். சீவக சிந்தாமணியில் உள்ள காவிய அமைதியும், திருமுறைகள், திவ்யப் பிரபந்தங்கள் முதலிய அருள் நூல்களிற் காணும் பக்திச் சுவை முதலிய பல நலங்களும், திருக்குறளிற் காணும் அறங்களும் இந் நூலில் ஒருசேரக் காணலாம். மேலும் கவிதையின் நிகழ்ச்சி களைப் படிப்போர் தம் கண்முன் உருவாகக்கண்டு மகிழும் நிலை யில் சொல்லோவியமாக இக்காப்பியத்தில் அமைத்துக் காட்டியுள் ளார். கல்வியிற் பெரியவர் எனப்பட்ட இக் கவிஞர்பிரான் இவற் றுடன் கதாபாத்திரங்களின் மனோதத்துவ நிலைகளை வியக்கத்தக்க வழியில் இந்நூலில் உணர்த்தியுள்ளார்.

இந்தக் காப்பியம் முதன் முதலில் ஏட்டுச்சுவடி வடிவிற் கிடைத்தது. பலர் தங்கட்குச் கிடைத்த ஏட்டுப் பிரதிகளைப் பார்த்து இந்நூலை அச்சிட்டிருக்கின்றனர். பல காரணங்களினால் ஏட்டுச் சுவடிகளிலும் அச்சுப் பிரதிகளிலும் அளவு கடந்த பாட பேதங்கள் தோன்றியுள்ளன. தமிழ் நாட்டிலும் பிறவிடங்களி லும் உள்ள கம்பராமாயண ஏட்டுச் சுவடிகளுள் பழமை வாய்ந்த திருந்திய சுவடிகள் சிதைந்து அழியுமுன் அவற்றையெல்லாம் தேடிப்பெற்று இதுவரை வெளிவந்த அச்சுப் புத்தகங்களுடன் ஒப்புநோக்கிக் கிடைத்த பாட பேதங்களை யெல்லாம் வரிசைப் படுத்திப் பிற்சேர்க்கையாகத் தந்து, அவற்றுள் கம்பர் வாக் கெனக் கொள்ளத்தக்க, திருந்திய பாடங்களுடன் இந்நூலை வெளி யிடுதல் சிறந்த தமிழ்ப்பணியாகும்.

இவ்வாறு கம்ப ராமாயணத்தைத் திருந்திய பதிப்பாக ஆராய்ந்து வெளியிடுவதென்பது, பல்கலைக் கழகம் போன்ற கூட்டமைப்பினாலல்லது தனிப்பட்ட அறிஞர்களாற் செய்து முடிக்கக்கூடிய எளிய செயலன்று. தமிழிலக்கியத்தையும் கலைகளையும் வளர்ப்பதே தமது பெருநோக்கமாகக் கொண்டு காலஞ் சென்ற நமது பெருங் கொடைவள்ளல் உயர்திரு. செட்டிநாட்டரசர் டாக்டர் ராஜா ஸர். அண்ணாமலைச் செட்டியார் அவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை நிறுவினர், அப்பெருந்தகையைப் போன்றே அவரது அருமை மகனார் டாக்டர். ராஜா ஸர். முத்தைய செட்டியார் அவர்களும் தந்தையின் அடிச்சுவட்டைப் பின்பற்றித் தமிழ் மொழியையும், தமிழிசையையும் போற்றி வளர்த்து வருகின்றனர், ஆகவே இப் பெரும் பதிப்புப்பணியை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ஏற்று நடத்துவது எவ்வாற்றானும் பொருந்தும். இவ்வுண்மையினை நன்குணர்ந்த தமிழ்த் தாயின் தவப்புதல்வரும் பேரறிஞருமான டாக்டர் ஆர். கே. சண்முகம் செட்டியார், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக இருந்தபொழுது, கம்ப ராமாயணத்தைத் திருந்திய பதிப்பாகப் பாடபேதங்களுடன் வெளியிடுவதற்கு, வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்கள். அதன் பயனாக 1955-ம் ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் வெள்ளிவிழாமலராகச் சுந்தர காண்டத்தின் முதற்பகுதி பாடபேதங்களுடனும் உரை விளக்கத்துடனும் வெளியிடப்பெற்றது,

பல்கலைக்கழகத்தார் தொடங்கிய கம்பராமாயணம் பதிப்புப் பணியில், இப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித் துறையினருடன் தமிழ் நாட்டில் உள்ள செந்தமிழ்ப் பேரறிஞர் பலரும் கலந்து கொள்வது நன்றென்னும் கருத்துடன் பல்கலைக் கழகத்தாரால் கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழுவொன்று 13—10—55ல் அமைக்கப்பெற்றது. இக்குழுவின் ஆதரவு பெற்றுச் சுந்தரகாண்டத்தின் பிற்பகுதி பாட பேதங்களுடன் சென்ற ஆண்டில் வெளியிடப்பெற்றது. கம்பராமாயணத்தைப் பாலகாண்டம் தொடங்கி, ஆண்டுதோறும் ஒவ்வொரு காண்டமாக வெளியிடுவதற்குரிய திட்டங்கள் பதிப்பாசிரியர் குழுவினரால் வகுக்கப்பட்டன. அத்திட்டத்தின்படி பால காண்டத்தின் முதற்பகுதி பொழிப்புரை, விசேடவுரை, பாடபேதங்கள் ஆகியவற்றுடன் திருந்திய பதிப்பாக இப்பொழுது வெளிவருகின்றது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் வேண்டுகோட்கிணங்கி, திருந்திய முறையில் இப்பதிப்பு வெளிவருவதற்கு வேண்டிய ஆய்வுரைகளையும், குறிப்புக்களையும் தந்துதவிய பதிப்பாசிரியர் குழுவினராகிய ராவ் சாகிப், திரு. மு. இராகவையங்கார். திரு.

தெ. பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளை. திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை, திரு. பி. ஸ்ரீ. ஆச்சாரியார், திரு. ஏ. சி பால் நாடார், திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை, திரு. லெ. ப.கரு. இராமநாதஞ்செட்டியார், திரு. அ. சிதம்பரநாதச் செட்டியார் ஆகிய அன்பர்களுக்கும், இக் குழுவின் தலைவரும், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியருமாகிய, சொல்லின் செல்வர், டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கட்கும் பல்கலைக் கழகத்தின் நன்றி உரியதாகும்.

பாலகாண்டம் முதற் பகுதியிலுள்ள சில படலங்களுக்கு உரையெழுதியும், இப்பதிப்புப் பணியினைச் சிறந்த முறையில் கண்காணித்தும் உதவிய பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவர் வித்துவான் திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., பி.எல். அவர்களுக்கும், இதன்கண் சில படலங்களுக்குச் சிறந்த முறையில் உரையெழுதி உதவி புரிந்த ராவ்சாகிப். திரு.மு. இராகவையங்கார் அவர்களுக்கும், உரையெழுதும் பணியில் ஈடுபட்டு இப்பதிப்பிற்கு உதவி செய்த தமிழாராய்ச்சித் துறை விரிவுரையாளர்கள் திரு. கி. கி. இராமாநுஜ ஐயங்கார், திரு. வித்துவான் ச. தண்டபாணி தேசிகர் ஆகியோர்க்கும் பல்கலைக் கழகத்தின் பாராட்டு உரியதாகும்.

இப்பதிப்பிற்கு இன்றியமையாத ஏட்டுச் சுவடிகளைத் தந்து உதவிவரும் மதுரைத் தமிழ்ச்சங்கத்தார்க்கும், தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலையத்தார்க்கும், மற்றும் பல அன்பர்களுக்கும் பல்கலைக் கழகத்தின் நன்றியுரியதாகும். இச்சுவடிகளை ஒப்புநோக்கிப் பாடபேதங்களைத் தொகுத்து வரிசைப்படுத்தும் பணியினைச் செம்மையாக நிறைவேற்றிய தமிழ் ஆராய்ச்சித் துறையினர்க்கும், இப்புத்தகத்தை அச்சிடும் பணியில் ஈடுபட்டுத் திருத்தப்படிகளை ஒப்புநோக்கியுதவிய திரு. டி. கே. இராமாநுஜ ஐயங்கார், வித்துவான் சிரோமணி பி. எஸ். இராமாநுஜாசாரியார். திரு. எஸ். திருநாவுக்கரசு எம்,ஏ. முதலியோர்க்கும் எனது வாழ்த்து உரியதாகும்.

இந்த பாகம் வெளிவருவதற்கு பல்கலைக் கழக மான்யக் குழு ரூபாய் இருபதாயிரம் கொடுத்து பேருதவி புரிந்திருக்கிறார்கள். இக்கொடைக்கு இப் பல்கலைக் கழகத்தின் நன்றியுரியது. இத் தமிழ்ப்பணி இனிது நிறைவேறும் வண்ணம், இந்திய அரசாங்கமும், சென்னை அரசாங்கமும், அவ்வப்போது வேண்டும் பொருளுதவி புரிந்து ஆதரித்து வரும் என நம்புகிறேன்.

9—9—57.
அண்ணாமலைநகர்.

**தி. மூ. நாராயணசாமி பிள்ளை.**

# பதிப்புரை

சொல்லின் செல்வர் டாக்டர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள், B.A.,B.L.
(தமிழ்ப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம்)

செந்தமிழ் நாட்டின் செழுங்கலை நியமமாகத் திகழும் அண்ணு மலைப் பல்கலைக் கழகம், தோன்றிய நாள்முதல் தமிழ் மொழியும் தமிழ் நாடும் வளம் பெற்றேங்கும் வண்ணம் சிறந்த முறையிற் கலைப்பணி புரிந்துவருவதனை யாவரும் உணர்வர். இப்பல்கலைக் கழகம் மேற்கொண்டுள்ள தமிழ்ப்பணிகளுள் கம்பராமாயணப் பதிப்புப் பணியும் ஒன்ருகும்.

'' ஆயுந்தொறுந்தொறும் இன்பந் தரும் தமிழ் '' என்ற உண்மையை எல்லோரும் உணர்ந்து மகிழும் வண்ணம் இக் காலத்தில் நமக்குக் கிடைத்துள்ள செந்தமிழ்க் காப்பியங்களுள் கவிச்சக்கரவர்த்தி கம்பர் பாடிய இராமாயணம் முதல் வரிசையில் வைத்து எண்ணத்தகும் சிறப்புடையதாகும். புவியினுக்கு அணி யாய் ஆன்ற பொருள்தந்து சான்றேர் கவிகளுக்கு இலக்கியமாய் விளங்கும் இப்பெருங் காப்பியத்தின் சுவைநலங்களைப் புலவர் களேயன்றிப் பொதுமக்களும் துய்த்து மகிழும் முறையில் தெளி வான பொழிப்புரை, குறிப்பு, பாடபேதங்கள் ஆகியவற்றுடன் திருந்திய பதிப்பாக வெளியிடுவது, தமிழ்நாட்டின் கண்ணெனத் திகழும் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் சீரிய கடமையா யிற்று. இக்கடமையினை நன்குணர்ந்த பல்கலைக் கழகம் தனது வெள்ளிவிழா மலராகச் சுந்தரகாண்டத்தின் முதற்பகுதியினையும் அதன் இரண்டாம் பகுதியினையும் வெளியிட்டு மகிழ்ந்தது.

பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறையின் சார்பில், தமிழ் நாட்டுப் பேரறிஞர் பலருடைய ஒத்துழைப்புடன் கம்பராமா யணம் முழுவதையும் பாடபேதங்கள், உரை முதலியவற்ரேடு பாலகாண்டம் முதலாக வெளியிடுதற்குரிய திட்டத்தினைப் பல்கலைக் கழகத்தார் வகுத்தனர். அத்திட்டத்தின்படி இப் பொழுது பாலகாண்டத்தின் முதற்பகுதி வெளிவருகின்றது.

உயர்வற வுயர்ந்த இறைவன், வானுலகும் மண்ணுலகும் வாழ, இவ்வுலகில் கதிரவன் குலத்தில் தயரதன் புதல்வனுகிய இராமபிரானுகத் தோன்றி, வசிட்ட முனிவன்பால் கலைபயின்று வளர்ந்து, விசுவாமித்திர முனிவனுடன் சென்று, தன் கை வண்ணமாகிய போர்த்திறத்தால் மைவண்ணத்தரக்கியாகிய

தாடகையை யொழித்து, தவமுனிவன் செய்த பெருவேள்வியைக் காத்து, திருவடியாகிய கால் வண்ணத்தால் அகலிகையின் சாபம் அகற்றி, மிதிலை நகரத்துட்போந்து, நற்குணங்களுக்கெல்லாம் கொள்கலமாய் விளங்கும் சீதாபிராட்டியை மணந்து, எதிர்ப்பட்ட பரசுராமனை வென்று அயோத்தி நகர்க்கு மீண்ட செய்தியை விரித்துரைக்கும் பகுதி பாலகாண்டமாகும். இக்காண்டம் இருபத்திரண்டு படலங்களையுடையது. அவற்றுள் பாயிரமும் முதற் பத்துப் படலங்களும் அடங்கியதாகப் பாலகாண்டத்தின் முதற் பகுதி இப்பொழுது வெளியிடப் பெறுகின்றது.

இதன்கண், அகலிகைப் படலத்துக்கும் மிதிலைக் காட்சிப் படலத்துக்கும் பேராசிரியர் ராவ்சாகிப், திரு. மு. இராகவையங்காரவர்கள் உரைவரைந்து உதவியுள்ளார்கள். தமிழாராய்ச்சித் துறைத் தலைவர் பேராசிரியர் வித்துவான் திரு. G. சுப்பிரமணிய பிள்ளை, M., A. B. L. அவர்கள் அரசியற் படலத்துக்கும் திருவவதாரப் படலத்துக்கும் உரையெழுதியுள்ளார்கள். தமிழாராய்ச்சித் துறை விரிவுரையாளர்களாகிய திரு. தி. கி. இராமாநுஜ ஐயங்கார் அவர்கள் பாயிரப் பாடல்கள், ஆற்றுப் படலம், கையடைப் படலம், வேள்விப் படலம் ஆகியவற்றுக்கும், வித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகரவர்கள் நாட்டுப் படலம், நகரப் படலம், தாடகைவதைப் படலம் ஆகியவற்றிற்கும் உரைவரைந்துள்ளார்கள்.

பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவர் பேராசிரியர் திரு. G. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தலைமையில் அத்துறை விரிவுரையாளர்களாகிய திரு. தி. கி. இராமாநுஜ ஐயங்கார், வித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர், வித்துவான் சிரோமணி திரு. P. S. இராமாநுஜாசாரியார், திரு. S. திருநாவுக்கரசு, M.A., வித்துவான் திரு. வை. சுந்தரேச வாண்டையார் ஆகியோர் பாலகாண்டத்தின் அச்சுப்புத்தகங்களோடு நாற்பதுக்கு மேற்பட்ட ஓலைச்சுவடிகளை ஒப்புநோக்கித் தொகுத்த பாடவேறுபாடுகள் இதன்கண் பிற்சேர்க்கையாகத் தரப்பெற்றுள்ளன.

பல்கலைக் கழகத்தாரது வேண்டுகோட் கிணங்கி, கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழுவில் உறுப்பினராயிருந்து இப்பதிப்பு சிறக்கும் வகையில் அவ்வப்போது தக்க ஆய்வுரைகளை வழங்கிய அன்பர்கள் அனைவர்க்கும், உரையெழுதியுதவிய அறிஞர்களுக்கும், இப்பணி இனிது நிறைவேறும் வண்ணம் பொருளுதவி புரிந்து வரும் இந்தியப் பேராசினர்க்கும் பல்கலைக் கழகத்தின் சார்பில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இப்பதிப்புக்கு வேண்டிய ஏட்டுச் சுவடிகளைக் கொடுத்து உதவி வரும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தார்க்கும், தஞ்சை, சரசுவதி மகால் நூல்நிலையத்தார்க்கும் மற்றும் பல அன்பர்களுக்கும் பல்கலைக்கழகத்தின் நன்றி உரியதாகும்.

இத்தகைய தமிழ்த் தொண்டுகள் சிறப்பாக நிகழ்தற்கு ஊக்கமளித்து அன்போடு ஆவன புரிந்து வரும் அண்ணாமலைப் பல்கலைக் கழக இணைவேந்தரும் பெருங்கொடை வள்ளலும் ஆகிய டாக்டர் ராஜா சர். M. A. முத்தைய செட்டியார், B, A., M. L. A. அவர்களுக்கும், பல்கலைக் கழகத் துணைவேந்தரும் செந்தமிழ்ப் பேரன்பரும் ஆகிய திருவாளர் T. M. நாராயணசாமி பிள்ளை, M.A., B.L., M.L.C. அவர்களுக்கும் தமிழ்மக்களது அன்புகனிந்த பாராட்டும் வாழ்த்தும் என்றும் உரியனவாம்.

இப்பதிப்பினைக் கண்கவர் வனப்புடன் திருந்திய முறையில் அச்சிட்டுதவிய சென்னைக் கமர்ஷியல் அச்சகத்தாரது பணி பாராட்டற்கு உரியதாகும்.

ரா. பி. சேதுப்பிள்ளை,
தலைவர், கம்பராமாயணப் பதிப்பாசிரியர் குழு.

கவிச்சக்கரவர்த்தி கம்பர் இயற்றிய

# இராமாயணம்

## சிறப்புப் பாயிரம்

[நூல் செய்த ஆசிரியன் தானே இயற்றுவதும் தகுதியுள்ள பிறர் இயம்புவதும் எனச் சிறப்புப் பாயிரம் இருவகைப்படும். அவற்றுள் இச்சிறப்புப்பாயிரம் பிறர் பலர் இயற்றிய செய்யுட்களைக் கொண்டு அமைந்தது. பிறர் கூறும் பாயிரத்துள் நூலை ஆக்கியோன் பெயரும், அந்நூல் எதன்வழி வந்ததென்பதும், அந்நூல் வழங்கும் எல்லையும், அந்நூலின் பெயரும், அதன் யாப்பும், அதன் நுவல்பொருளும், அதனைக் கேட்போர் தகுதியும், கேட்போர் பெறும் பயனும், அந்நூல் இயற்றப்பட்ட காலமும் இடமும் காரணமும் முதலியவை ஏற்றபெற்றி விளக்கப்படும். இவற்றை அறிதலால் நூல்பயில்வார் இடர்ப்படாது பயில்வர். ஆதலால் பாயிரம் ஒவ்வொரு நூலுக்கும் இன்றியமையாத உறுப்பாய் முதலிடம் பெற்று விளங்கும்.

அம்முறையுள், பின்வரும் சிறப்புப்பாயிரப் பாடல்களால், இந்நூலினை ஆக்கிய ஆசிரியர் பெயரும், பெருமையும், ஊரும், இந்நூலின் பெயரும், நுவல்பொருளும், இந்நூல் அரங்கேறிய காலமும், இடமும், நூலியற்றியபடியும், இந்நூலின் பெரும்பிரிவு, சிறுபிரிவு, செய்யுட்டொகை முதலிய உறுப்புக்களும், நூலுள் அமைந்த கவித்திறமும் இராமகதை இயற்றிய புலவர் பிறர் இவரிவரென்பதும், அவர்தம் கவித்திறமும், இராம நாமத்தின் பெருமையும், இவ்விராமாயண நூலால் எய்தும் பயனும் பேசப்பட்டுள்ளன. இந்நூலாசிரியர் பெயர் கம்பர் என்பது வெளிப்படை.

இப்பாயிரப் பாடல்களுள் இந்நூல், இராமகாதை (5, 6, 12), இராமன் திருக்கதை (11), விசயப்பாடல் (14), இராமாயணம் (15), மாக்கதை (16), இராமகதை (17) இராமன்கதை (18), இராமாவதாரம் (19), திருக்கதை (20) இராகவன்கதை (21) என்று பலபெயர்களாற் சுட்டப்படுகிறது. ஒரு நூலுக்கு இவ்வாறு பலபெயர்வழக்கு இயைபுடையதாகாது.

ஆகவே மேற்குறித்த பல பெயர்கள், இராமாயணம் அல்லது இராமகதை என்னும் பொருளில் வழங்கிய மறுபெயர்களாகக் கொள்ளல் தகும்.

ஆயின் இந்நூற்குக் கம்பர் இட்ட பெயர்தான் யாது? எனின் இராமாவதாரம் என்பதே கம்பர் இட்டபெயர் என்க. இதனை ஆசிரியர். 'இராமாவதாரப் பேர்த்தொடை நிரம்பிய தோமறு மாக்கதை' (தற்சிறப்புப்பாயிரம் 11) என்று கூறுவதாலும், சிறப்புப்பாயிரத்து 19-ஆம் செய்யுள் இராமாவதாரம் என்று சுட்டுதலாலும் அறியலாம். கம்பர் இயற்றிய இராமகதையைப் புறத்திரட்டு என்னும் பழந்தொகைநூல் இராமாவதாரம் என்றே சுட்டுதலும் நோக்கத்தகும்.

சிறப்புப்பாயிரப்பாடல்கள் ஏடுகளில் ஒருமுறையின்றி முன் பின்னாக மாறி வரையப்பட்டுள்ளன. அவற்றை ஒருவாறுவகைப் படுத்தித் தலைப்புக்கள் இட்டு இங்கே காட்டலாயிற்று.]

### ஆக்கியோன் பெயரும் பெருமையும் 1–5

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

1. நாரணன் விளையாட் டெல்லா
 நாரத முனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தா
 னறிந்தவான் மீகி யென்பான்
சீரணி சோழ நாட்டுத்
 திருவழுந் தூருள் வாழ்வோன்
காரணி கொடையான் கம்பன்
 றமிழினாற் கவிதை செய்தான்.

நாரணன் விளையாட்டு எல்லாம் நாரதமுனிவன் கூற,
ஆரணக் கவிதை செய்தான்; அறிந்த வான்மீகி என்பான்;
சீர் அணி சோழநாட்டுத் திருவழுந்தூருள் வாழ்வோன்
கார் அணி கொடையான் கம்பன், தமிழினால் கவிதை செய்தான்.

பொழிப்பு:—திருமால் (இராமபிரானாகத் தோன்றிப் புரிந்தருளிய) திருவிளையாடல்களையெல்லாம், நாரத முனிவன் கூற அறிந்த வான்மீகி என்று சிறப்பித்துச் சொல்லப் படுகிற முனிவன், வேதப் பாடல்களால் (வடமொழியில் இராமாயண நூலாக)

இயற்றினன். சிறப்பு மிக்க சோழநாட்டுத் திருவழுந்தூருள் வாழ்வோனும், மேகம் போன்ற கொடையுடையவனும் ஆன **கம்பன்** என்பான், (அத்திருவிளையாடல்களையெல்லாம்) தமிழ் மொழியிற் சிறந்த செய்யுட்களால் (இராமாவதார நூலாக) இயற்றினன் என்றவாறு.

குறிப்பு :— வேதத்தாற் பேசப்படும் திருமால் இராம பிரானாக அவதரித்த நிலையில் வேதம் வான்மீகி முனிவன் வாக்கில் இராமாயணமாகத் தோற்றியதாதலின் 'ஆரணக் கவிதை' என்றார். 'வான்மீகி யென்பான் ஆரணக்கவிதை செய் தான் என்க. கம்பன் செய்தது தமிழில் எனவே வான்மீகி செய்தது வடமொழியில் என்பது பெறப்படும். வான்மீகிமுனிவன் நாரதமுனிவன்கூற அறிந்து கூறினன் எனவே, கம்பர் திருவழுந் தூருள்வாழும் கலைச்செல்வர் கூற அறிந்து கூறினர் என்பது உய்த் துணரப்படும். ''விழுந்த நாயிறதெழுவதன்முன் மறை வேதிய ருடன் ஆராய்ந்து – எழுந்த நாயிறு விழுவதன் முன் கவி பாடினது எழுநூறே'' என்னும் பாயிரப்பாடல் (7) இங்கு நோக்கத்தகும். அணி - உவமவுருபு. காரணிகொடையாவது கைம்மாறு கருதாது கொடுக்கும் (நூற்) கொடையாம். (1)

**2.** வாழ்வார் திருவெண்ணெய் நல்லூர்ச்
★ சடையப்பன் வாழ்த்துப்பெறத்
தாழ்வா ருயரப் புலவோ
ரகவிரு டானகலப்
போழ்வார் கதிரி னுதித்ததெய்
வப்புல மைக்கம்பநாட்
டாழ்வார் பதத்தைச்சிந் திப்பவர்க்
கியாது மரியதன்றே.

வாழ்வு ஆர் திருவெண்ணெய்நல்லூர்ச்
சடையப்பன் வர்ழ்த்துப் பெறத்
தாழ்வார் உயரப் புலவோர்
அக இருள் தான் அகலப்
போழ் வார் கதிரின் உதித்த
தெய்வப்புலமைக் கம்பநாட்
டாழ்வார் பதத்தைச் சிந்திப்பவர்க்கு
யாதும் அரியதன்று ஏ.

பொ :—செல்வவளம் மிக்க திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பவள்ளல் வாழ்த்துப்பெறவும், தாழ்வார் உயர்வெய்தவும், அறிஞர் உள்ளத்தில் இருள் நீங்கவும், ஊடுருவிச் செல்லும் நீண்ட கிரணங்களையுடைய சூரியன் போலத் தோன்றிய தெய்வப் புலமை வாய்ந்த கம்பநாட்டாழ்வார் திருவடிகளை நினைவார்க்கு எதுவும் செய்தற்கரியதன்று.

கு :—வாழ்வு – செல்வம். பெற உயர அகல கதிரின் உதித்த தெய்வப் புலமைக் கம்பநாட்டாழ்வார் என இயையும். கம்பர்க்குச் சூரியன் உவமை. செங்கதிர்த்தோற்றத்தால், கோயில்களில் கடவுளர்க்கும், அரண்மனைகளில் அரசர்க்கும் காலை மங்கலம் பாடுதலும், வணங்குவார் (மகிழ்ச்சியான்) உயர்தலும், உலகத்து(ப் புற) இருள் நீங்குதலும் நிகழ்தல் போலக் கம்பர் தோற்றத்தால் சடையப்பன் வாழ்த்துப்பெறுதலும், அறியாமையால் தீநெறிக்கட்சென்று தாழ்பவர் (இவர் இயற்றிய இராமாவதார நூலால்) நல்லறிவுபெற்று மேம்படுதலும், (இவர் நூலால் இறைநிலையும், உயிர்நிலையும், இறைவனை உயிர்கள் சென்று அடையும் நெறியும், அடையவொட்டாது தடுக்கும் பகைநிலையும், பகை நீங்கி அடையும் பயனும் ஆகிய ஐந்து வகையும் பற்றிய அறிவு பெற்றமையால்) புலவருள்ளத்து இருள் நீங்குதலும் நிகழ்தலின் கதிரின் உதித்த என்றார். தாழ்வார் என்பது, வணங்குபவர், இழிபவர் என்னும் இருபொருளும் உடையது. கம்பரால் சடையப்பர் வாழ்த்துப் பெற்றமை,

"வண்ண மாலைக் கைபரப்பி
உலகை வளைந்த இருளெல்லாம்
உண்ண எண்ணித் தண்மதியத்
துதயத்தெழுந்த நிலாக் கற்றை
விண்ணும் மண்ணும் திசையனைத்தும்
விழுங்கிக்கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன்
புகழ்போல் எங்கும் பரந்துளதால்".

(மிதிலைக் காட்சிப். 73)

என்பது முதலிய பாடல்களால் விளங்கும். (2)

3\. அம்பரா வணிசடை யரன யன்முதல்
★ உம்பரான் முனிவரால் யோக ராலுயர்
இம்பராற் பிணிக்கரு மிராம வேழஞ்சேர்
கம்பராம் புலவரைக் கருத்தி ருத்துவாம்.

அம்பு அரா அணி சடை அரன் அயன் முதல்
உம்பரால் முனிவரால் யோகரால் உயர்
இம்பரால் பிணிக்க அரும் இராமவேழம் சேர்
கம்பராம் புலவரைக் கருத்து இருத்துவாம்.

பொ :—கங்கையையும் பாம்பையும் அணிந்த சடையையுடைய சிவபெருமானும் பிரமனும் முதலிய மேல் உலகத்தவர்களாலும், முனிவர்களாலும், யோகிகளாலும், சிறந்த இவ்வுலகத்தவர்களாலும், தம் மனத்தே நிலையாகத் தங்கும்படி பிணித்துக் கொள்ளுதற்கரிய இராமபிரானுகிய யானையானது (தானே விரும்பி) வந்து கட்டுப்பட்டுள்ள தறிபோல்பவரான கம்பர் என்னும் புலவரை எம் உள்ளத்தே இருத்துவோம்.

கு :—அம்பு – நீர், இங்கே கங்கையாற்றைக் குறித்துநின்றது. அரா – பாம்பு. 'விண்ணுக்கடங்காது வெற்புக்கடங்காது மண்ணுக்கடங்காது வரும் பெருவேகமுடைய கங்கையாறு சடையுள் ஒடுங்கும்படி தாங்கியும், கொல்லுந்தன்மைவாய்ந்த கொடிய விடப்பாம்புகளை அவற்றின் வெம்மையொடுங்க அணியாகப் பூண்டும் செயற்கருஞ்செயல் புரிந்தவன் என்பார், 'அம்பராவணிசடை அரன்' என்றார். முனிவர் - மனநலமுடையார். யோகர் - கரணங்கள் பிறவிடயங்களிற் செல்லாது ஒடுங்க இறைவனை அகக்கண்ணாற் கண்டு சிந்தித்திருப்போர். இத்தகைய ஆற்றல்வாய்ந்தோராலும் பற்றிக் கொள்ளுதற்கரிய இராமபிரானுகிய வேழம், கம்பருடைய பத்தியாகிய பாசத்தில் தானேவந்து கட்டுண்டது என்று கம்பர்பெருமை கூறியவாறு. உம்பர் - மேலுலகத்தார் ; தேவர். இம்பர் – இவ்வுலகத்தார்; மக்கள். பிணித்தல் – கட்டல். பெருமிதமும் தோற்றப் பொலிவும் தாள்பற்றியவரை மேல்கொண்டு தாங்குதலும் உடைமையால் இறைவனை யானையாக உருவகிப்பர் பெரியோர். 'என்னனை என்னப்பன் எம்பெருமான்' என்பது திருவாய்மொழி (3. 9. 1.). (3)

4. சம்ப நாடன் னுமைசெவி சாற்றுபூங்
★ கொம்ப னுடன் கொழுந னிராமப்பேர்
பம்ப நாடழைக் குங்கதை பாச்செய்த
கம்ப நாடன் கழறலை யிற்கொள்வாம்.

சம்பு, அ நாள் தன் உமை செவி சாற்று பூங்
கொம்பு அனுள் தன் கொழுநன் இராமப்பேர்
பம்ப நாள் தழைக்கும் கதை, பாச் செய்த
கம்பநாடன் கழல் தலையில் கொள்வாம்.

பொ :—சிவபெருமானுல் பண்டு உமாதேவியின் திருச்செவி களிலே சொல்லப்பட்டதும், பூங்கொம்புபோல்பவளாகிய சீதா பிராட்டியின் நாயகனுடைய இராமன் என்னும் பெயர் செறியப் புதுமை மிகுவதும் ஆன கதையைச் செய்யுளுருவிற் செய்த (புலவர் பெருமானுகிய) கம்பநாடருடைய திருவடிகளை வணங்குவோம்.

கு :—சம்பு-சிவபெருமான். இது, 'திருமால் திருநாமம் ஆயிரத் துள்ளும் எந்த ஒருபெயரைப் பாராயணம் செய்தால் ஆயிரம் திரு நாமமும் பாராயணம் செய்ததாகுமோ அந்த ஒரு பெயரை அருளுக' என்ற உமாதேவிக்குச் சிவபிரான் 'இராமநாம பாரா யணமே ஆயிரநாம பாராயணத்தோடொக்கும்' என்று கூறிய விருத்தாந்தத்தை உட்கொண்டு கூறியது. பம்ப – செறிய. நாள்– புதுமை. கம்பர், கம்பநாடர், கம்பநாட்டாழ்வார், கம்பநா டுடையவள்ளல், கவிச்சக்கரவர்த்தி முதலியவை இந்நூலாசிரியர் பெயர்கள். (4)

பெரியன் பதிப்புள் இச்செய்யுளின்பின் பின்வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது :—

4 (a) இம்பரும் உம்பர்தாமும் ஏத்திய இராம காதை
தம்பமா முத்தி [1]சேர்தல் சத்தியம் சத்தி யம்மே
அம்பரம் தன்னின் மேவும் ஆதித்தன் புதல்வன் ஞானக்
கம்பன்செங் கமல பாதம் கருத்துற இருத்து வாமே.

5. ஆதவன் புதல்வன் முத்தி
★ யறிவினை யளிக்கு [2]மையன்
போதவ னிராம காதை
புகன்றருள் புனிதன் மண்மேற்
கோதவஞ் [3]சற்று மில்லான்
கொண்டன்மா றன்னை யொப்பான்
மாதவன் கம்பன் செம்பொன்
மலரடி [4]தொழுது வாழ்வாம்.

---

1. சேர்த்தல், 2. அண்ணல், 3. சிறிதும், 4. சென்னிவைப்பாம் என்பன வ பெருந்தொகையிற்கண்ட பிரதிபேதம்.

ஆதவன்புதல்வன், முத்தி அறிவினை
அளிக்கும் ஐயன்,
போதவன் இராம காதை புகன்றருள்
புனிதன், மண்மேல்
கோது அவம் சற்றும் இல்லான்,
கொண்டல் மால் தன்னை ஒப்பான்,
மாதவன் கம்பன் செம்பொன்
மலர் அடி தொழுது வாழ்வாம்.

பொ :— சூரியன்மரபில் தோன்றியவனும், வீடு அடைதற்குரிய அறிவை உதவும் பெரியோனும், நினைவார் உள்ளக்கமலத்தில் எழுந்தருளியிருப்பவனும் ஆன இராமபிரானுடைய சரிதையை உரைத்த தூயோனும், குற்றமும், பயனில்செயலும் சிறிதும் இல்லாதவனும், மேகம்போல்பவனான திருமாலை ஒத்தவனும், பெருந்தவம் உடையவனும் ஆன கம்பனுடைய செவ்விய அழகிய தாமரைமலர்போலும் திருவடிகளைத் தொழுது வாழ்வோம்.

இச்செய்யுள் 40 என்னும் குறியீடுள்ள பெரியன் பதிப்பில் உள்ளது. (5)

## நூல் அரங்கேறிய காலமும் இடமும்

6. எண்ணிய சகாத்த மெண்ணூற்
றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர்
தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை
பங்குனி யத்த நாளில்
கண்ணிய வரங்கர் முன்னே
கவியரங் கேற்றி னானே.

எண்ணிய சகாத்தம் எண்ணூற்றேழின்மேல் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய்நல்லூர்தன்னிலே கம்பநாடன்
பண்ணிய இராமகாதை பங்குனி அத்தநாளில்
கண்ணிய அரங்கர்முன்னே கவியரங்கு ஏற்றினான் ஏ.

பொ :—கம்பநாடன், சடையவள்ளல் வாழ்வொடு தங்கிய திருவெண்ணெய்நல்லூரில் தான் இயற்றிய இராமகதையை, மக்களால் காலங்கணித்தற்குப் பயன்படுத்தப்பட்ட சக ஆண்டு எண்ணூற்றேழின்மேற் செல்லாநின்ற பங்குனியத்தநன்னாளில் மதிப்பு வாய்ந்த திருவரங்கர்முன்பு பாவலர்குழுவில் ஏற்றுக்கொள்ளச் செய்தான்.

கு :—எண் நூற்றேழின்மேல் என்று பிரித்து, (ஆயிரத்துக்கு மேல்) எண்ணப்படுகின்ற நூற்றேழின்மேல்=சகஆண்டு ஆயிரத்துநூற்றேழின்மேல் என்று பொருள்கூறுவாரும் உண்டு. (6)

## நூல் இயற்றியபடி

7. கழுந்த ராயுள கழல்பணி யாதவர்
கதிர்மணி முடிமீதே
அழுந்த வாளிக டொடுசிலை யிராகவ
வபிநவ கவிநாதன்
விழுந்த நாயிற தெழுவதன் முன்மறை
வேதிய ருடனாராய்ந்
தெழுந்த நாயிறு விழுவதன் முன்கவி
பாடின தெழுநூறே.

கழுந்தராய் உள கழல் பணியாதவர்
கதிர் மணி முடி மீதே
அழுந்த வாளிகள் தொடு சிலை இராகவ
அபிநவ கவி நாதன்
விழுந்த நாயிறது எழுவதன்முன்
மறை வேதியருடன் ஆராய்ந்து
எழுந்த நாயிறு விழுவதன்முன்
கவிபாடினது எழுநூறே.

பொ :—உலக்கைக்கழுந்துபோல மழுங்கிய அறிவினரும் (தன்) திருவடிகளை வணங்காதவரும் ஆகிய அரக்கருடைய ஒளி வீசும் மணிகள் பதித்த மகுடம் அணிந்த தலையின்கண் அழுந்தும் படி அம்புகளை ஏவிய வில்லையேந்திய இராமபிரானுடையபுதுமைக் கவியரசாகிய கம்பன், அத்தமித்த சூரியன் உதிப்பதன்முன் வேதம் வல்லார்களுடன் (இராம சரிதம் கூறும் பழைய நூல்களை)

ஆராய்ந்து (தெளிந்து) உதித்த சூரியன் அத்தமிப்பதன்முன் இயற்றிய கவி எழுநூறு.

கு :—இராகவன் பெருமை பாடுதல் கவிகளுக்கு அரிது. அதனைப் புதுமையும் சிறப்பும் அமையப்பாடுதலின் 'இராகவ அபிநவ கவி நாதன்' என்றார். 'உலகம் படைத்தான் கவி' (திருவாய்மொழி 3-9-10), 'திருமாலவன் கவி' என்று சடகோபர் கூறுதலும் இங்கு நோக்கத்தகும். அபிநவம் – புதுமை. (7)

## நூலின் உறுப்புக்கள்

8. கரைசெறி காண்ட மேழு
கதைகளா யிரத்தெண் ணூறு
பரவுறு சமரம் பத்துப்
படலநூற் றிருபத் தெட்டே
உரைசெயும் விருத்தம் பன்னீ
ராயிரத் தொருபத் தாறு
வரமிகு கம்பன் சொன்ன
வண்ணமுந் தொண்ணூற் றுறே.

கரை செறி காண்டம் ஏழு, கதைகள் ஆயிரத்தெண்ணூறு,
பரவு உறு சமரம் பத்து, படலம் நூற்றிருபத்தெட்டே,
உரைசெயும் விருத்தம் பன்னீராயிரத்து ஒருபத்தாறு
வரம் மிகு கம்பன் சொன்ன வண்ணமும் தொண்ணூற்றுறே.

பொ :—மேன்மைமிக்க கம்பன் (இந்நூலின்கண்) சொல்லிய எல்லையொடு பொருந்திய காண்டங்கள் ஏழு, படலம் நூற்றிருபத்தெட்டு, விருத்தம் பன்னீராயிரத்தொருபத்தாறு, வண்ணம் தொண்ணூற்றுறு, கதைகள் ஆயிரத்தெண்ணூறு, போர் பத்து.

கு :—இச்செய்யுள் உத்தரகாண்டமும் அடங்கக்கொண்டு நூலுறுப்புக்களை நுவல்கிறது. உத்தரகாண்டம் கம்பர் செய்ததன்று என்பது ஆராய்ச்சியாளர் கண்டவுண்மை. அன்றியும், உறுப்புக்களின் தொகை கூறும் பகுதிகளில் பிரதிபேதம் மிகவுண்மையால் நூல் முழுதும் ஆய்ந்தபின்பே உறுப்புக்களின் தொகை முடிவு செய்யத்தகும். (8)

## கம்பர் கவித்திறம் 9-11

9. [1]தராதலத்தி னுள்ள தமிழ்க்குற்ற மெல்லாம்
★ அராவு மரமாயிற் றன்றே—இராவணன்மேல்
[2]அம்புநாட் டாழ்வா னடி[3]பணியு மாதித்தன்
[4]கம்பநாட் டாழ்வான் கவி.

தராதலத்தின் உள்ள தமிழ்க் குற்றம் எல்லாம்
அராவும் அரம் ஆயிற்று அன்று ஏ—இராவணன்மேல்
அம்பு நாட்டு ஆழ்வான் அடிபணியும் ஆதித்தன்
கம்பநாட்டாழ்வான் கவி.

பொ :—இராவணன்மேல் அம்பு பதிய எய்த சூரியனுன இராம பிரானுடைய திருவடிகளை வணங்கும் ஆதித்தன்மகனுகிய கம்ப நாட்டாழ்வான் கவி, உலகிலுள்ள தமிழ்க் கவிகளிற் (காணப் படும்) குற்றங்களையெல்லாம் அராவிப் போக்கும் அரமாயிற்று.

கு :—ஆழ்வான் - சூரியன் (சினேந், தாதுகாண். 102). இராம பிரானை இராமதிவாகரன் என்று வழங்குவர் பெரியோர் (திவா கரன் - சூரியன்) (9)

10. அம்பிலே சிலையை நாட்டி
★ யமரர்க்கன் றமுத மீந்த
தம்பிரா னென்னத் தானுந்
தமிழிலே தாலை நாட்டிக்
கம்பநா டுடைய வள்ளல்
கவிச்சக்ர வர்த்தி பார்மேல்
நம்புபா மாலை யாலே
நரர்க்குமின் னமுத மீந்தான்.

அம்பிலே சிலையை நாட்டி அமரர்க்கு அன்று அமுதம் ஈந்த
தம்பிரான் என்ன, தானும் தமிழிலே தாலை நாட்டி,
கம்பநாடு உடைய வள்ளல் கவிச் சக்ரவர்த்தி, பார்மேல்
நம்பு பாமாலையாலே நரர்க்கும் இன் அமுதம் ஈந்தான்.

---

1. தராதலத்தில் 2. அம்பினல் வீழ்த்தான் 3. பரவும் 4. கம்பநாடாள் வான் என்பவை பெருந்தொகையிற் கண்ட பாடம் (பக். 346).

பொ :—(திருப்பாற்) கடலில் மந்தரமலையை நட்டு(க் கடைந்து) தேவர்களுக்குப் பண்டு அமுதம் வழங்கிய தம்முடைய இறைவனாகிய திருமால்போலக் கம்பநாடுடைய வள்ளலும் கவிச் சக்கரவர்த்தியும் ஆகிய கம்பர், தாமும், தமிழாகிய கடலிலே தம்முடைய நாவாகிய மந்தரமலையை நட்டு (க் கடைந்தெடுத்து அமைத்த) விரும்பும் கவிமாலையாலே (மண்ணுலகத்திலுள்ள) மக்களுக்கும் இனிய அமுதைத் தந்தார்.

கு :—அம்பு - கடல்; அது திருப்பாற்கடலை உணர்த்தி நின்றது. சிலை - (மந்தர)மலை. அமரர் - அழிவற்றவர் ; தேவர். பிரான் - கடவுள். தால் - நா. நம்பு - விருப்பம். அமுதுபோல் வாயுணவாய் நரைதிரை மூப்பொழித்து உடல்வளம் ஒன்றே பேணுவதாகாமல், இராமகதை செவியுணவாய் அறிவின்வளம்பேணி, வீடும் தரவல்லதாதலின் இன்னமுதம் என்றார். இவ்வாறு தேவரமுதினும் சிறந்த இராம கதையாகிய கவியமுதுதந்த பெருங்கொடைத் திறம்பற்றிக் கம்பரை வள்ளல் என்றார். (10)

11. இம்பர் நாட்டிற் செல்வமெல்லா
★ மெய்தி யரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா
வோங்கு நீழ லிருந்தாலும்
செம்பொன் மேரு வனையபுயத்
திறல்சே ரிராமன் றிருக்கதையிற்
கம்ப நாடன் கவிதையிற்போற்
கற்றோர்க் கிதயங் களியாதே.

இம்பர்நாட்டில் செல்வம் எல்லாம் எய்தி
அரசு ஆண்டு இருந்தாலும்
உம்பர்நாட்டில் கற்பகக்கா
ஓங்கும் நீழல் இருந்தாலும்,
செம்பொன் மேரு அனைய புயத்திறல் சேர்
இராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதையில் போல்
கற்றோர்க்கு இதயம் களியாதே.

பொ :—இவ்வுலகிலுள்ள செல்வங்களையெல்லாம் அடைந்து (அதன்மேல்) அரசபதவி பெற்று ஆட்சிசெலுத்திக்கொண்

டிருந்தாலும்,தேவருலகில் ஓங்கிய கற்பகச்சோலையின்நிழலில் தங்கி (அரசுசெலுத்தி)னுலும், செவ்விய பொன்மலையாகிய மேருவை யொத்த புயத்தின்வலி மிக்க இராமன் திருக்கதையில் கம்ப நாடன் கவியில் கற்றோர்க்கு மனம் களித்தல்போல மற்றவற்றில் மனம் களிப்படையாது.

கு :—கம்பர் இயற்றிய இராமகதை மக்களுக்கு இனியதாய் மகிழ்ச்சியளித்தல் முன்பாட்டால் பொதுவாகக் கூறப்பட்டது. இப்பாட்டால், அது கற்ருேர்க்கு மகிழ்ச்சியளித்தல் சிறப்பாகக் கூறப்பட்டது. (11)

## இராமகதை இயற்றிய புலவர்பெயர்களும் அவர்தம் கவித்திறமும்

12. நாரதன் கருப்பஞ் சாருய்
☆ நல்லவான் மீகன் பாகாய்ச்
சீரணி போதன் வட்டாய்ச்
செய்தனன் காளி தாசன்
பாரமு தருந்தப் பஞ்ச
தாரையாய்ச் செய்தான் கம்பன்
வாரமா மிராம காதை
வளமுறை திருத்தி னுனே.

**நாரதன் கருப்பஞ்சாருய், நல்ல வான்மீகன் பாகாய்,**
**சீர் அணி போதன் வட்டாய்ச் செய்தனன்; காளிதாசன்,**
**பார் அமுது அருந்தப் பஞ்சதாரையாய்ச் செய்தான்; கம்பன்,**
**வாரம் ஆம் இராமகாதை வளமுறை திருத்தினுன் ஏ.**

பொ :—அன்பு விளையும் இராம கதையை, உலகினர் அமுது போல் அருந்தும்படி, நாரதன் கரும்பின் சாருக இயற்றினுன் ; நல்லோனுன வான்மீகிமுனிவன் பாகாக இயற்றினுன்; சிறப்பு மிகுதியையுடைய போதாயனன் வட்டாக இயற்றினுன் ; காளி தாசன் சருக்கரையாக இயற்றினுன்; கம்பன் (அக்காரவடிசி லென்னும்) உணவாக முறைப்படி செவ்விதாக இயற்றினுன்.

கு :—இராம காதை(யைப்) பார், அமுதருந்த நாரதன் கருப் பஞ்சாருய்ச் செய்தனன் என இயையும். பிற பெயர்களோடும் இவ்வாறே ஒட்டுக. செய்தான் என்னும் பயனிலை நாரதன் வான்

மிகி போதன் என்னும் எழுவாய்களோடு தனித்தனி இயையும். ஆய் - ஆக. போதாயனன் என்பது போதன் என விகாரப்பட்டு நின்றதுபோலும். பஞ்சதாரை - சருக்கரை. வளம் - உணவு (கலித். 20), ஈண்டு அக்காரவடிசிலை யுணர்த்திநின்றது. (12)

### இராமநாமத்தின் பெருமை

**13.** நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
★ தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே யிராமவென் றிரண்டெ ழுத்தினால்.

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே,
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே,
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே,
இம்மையே இ'ராம' என்று இரண்டு எழுத்தினால்.

பொ :—ராம என்று சொல்லப்படுகிற இரண்டு எழுத்தினையும் ஓதுதலால் இப்பிறப்பிலே மேம்பாடும் செல்வமும் மிகும்; தீங்கும் (அதற்குக் காரணமாகிய) பாவமும் கெட்டு ஒழியும்; பிறப்பும் இறப்பும் இன்றி ஒழியும்.

கு:—நன்மை – மேம்பாடு (திருக்குறள். 300); சிறப்பும் ஆம். **நல்குதல் – ஈண்டு மிகுதல்.** தின்மை – தீமை. (13)

பெரியன் பதிப்புள் இச்செய்யுளின்பின் பின்வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது.

13 (a) ஓராயிர மகம்புரி பயனை யுய்க்குமே
நராதிபர் செல்வமும் புகழும் நல்குமே
விராயெனும் பவங்களை வேர றுக்குமே
இராமவென் றொருமொழி யியம்புங் காலையே.

### நூற்பயன் 14-23

**14.** மற்றொரு தவமும் வேண்டா
★ மணிமதி லிலங்கை மூதூர்
செற்றவன் விசயப் பாட
றெளிந்ததி லொன்று தன்னைக்

கற்றவர் கேட்போர் நெஞ்சிற்
கருதுவோ ரிவர்கள் பார்மேல்
உற்றர சாள்வர் பின்னு
மும்பராய் வீட்டிற் சேர்வார்.

மற்று ஒரு தவமும் வேண்டா; மணி மதில் இலங்கை மூதூர்
செற்றவன் விசயப் பாடல் தெளிந்து, அதில் ஒன்று தன்னைக்
கற்றவர் கேட்போர் நெஞ்சில் கருதுவோர் இவர்கள், பார்மேல்
உற்று அரசு ஆள்வர்; பின்னும் உம்பராய் வீட்டில் சேர்வார்.

பொ:—மணிகள் அழுத்திய மதிலரணுடைய இலங்கையாகிய பழைய நகரத்தை அழித்த இராமபிரானுடைய வெற்றிப்பாடலாகிய இந்நூல் (நற்பயன் அளிக்கவல்லது என்று) தெளிந்து அதனுள் ஒரு பாடலைக் கற்றோரும் கேட்போரும் மனத்தினால் நினைவோரும் ஆகிய இவர்கள், பூமியின்கண் நிலைத்து அரசாள்வர்; மேலும் தேவராய் வீட்டுலகிற் சேர்வர். இப்பயன்களை அடைதற்கு வேறு ஒரு தவமும் செய்யவேண்டா. (14)

15. வென்றிசே ரிலங்கை யானை
வென்றமால் வீர மோத
நின்றரா மாய ணத்தி
னிகழ்ந்திடு கதைக டம்மில்
ஒன்றினைப் படித்தோர் தாமு
முரைத்திடக் கேட்டோர் தாமும்
நன்றிது வென்றோர் தாமு
நரகம தெய்தி டாரே.

வென்றிசேர் இலங்கையானை வென்ற மால் வீரம் ஓத
நின்ற ராமாயணத்தில் நிகழ்ந்திடு கதைகள் தம்மில்
ஒன்றினைப் படித்தோர்தாமும் உரைத்திடக் கேட்டோர்தாமும்
'நன்று இது' என்றோர் தாமும் நரகமது எய்திடார் ஏ.

பொ—வெற்றியையுடைய இலங்கைநகரத் தரச(னான இராவண)னைவென்ற பெரியோனது வீரச்செயல்களைப் பேசுதலால் நிலைத்த இராமகாதையில் விளங்குகின்ற கதைகளில் ஒன்றைப்

படித்தோரும், சொல்லக் கேட்டோரும், (கேட்டு) 'இது நன்று' என்று பாராட்டியவர்களும் நரகம் புகார்.

கு :—நிகழ்தல் – விளங்குதல், (பதிற்றுப்பத்து 49.15. உரை) (15)

16. இறுவ ரம்பிலி ராமவென் றோரும்பர்
★ நிறுவ ரென்பது நிச்சய மாதலால்
மறுவின் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவ ரென்பது பேசவும் வேண்டுமோ.

இறு வரம்பில் இராம என்றோர், உம்பர்
நிறுவர் என்பது நிச்சயம், ஆதலால்
மறு இல் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவர் என்பது பேசவும் வேண்டுமோ ?

பொ :—சாகும் எல்லையிலே இராம என்று கூறியவர் மேலுலகத்தில் நிலையாக வைக்கப்படுவர் என்பது உறுதி. ஆதலால், குற்றமற்ற பெரிய (இராம) கதையைக் கேட்பவர் வைகுந்தமும் பெறுவர் என்பது கூறாதே அமையும்.

கு :—உம்பர் - மேலுலகம். நிறுவுவர் என்பது நிறுவர் என நின்றது, விகாரம்; செயப்படுபொருளைச் செய்ததுபோலக் கூறியது. (16)

17. அன்ன தான மகிலநற் றானங்கள்
கன்னி தானங் கபிலையின் றானமே
சொன்ன தானப் பலனெனச் சொல்லுவார்
மன்னி ராம கதைமற வார்க்கரோ.

அன்னதானம் அகில நல் தானங்கள்
கன்னி தானம் கபிலையின் தானமே
சொன்ன தானப் பலன் எனச் சொல்லுவார்.
மன் இராமகதை மறவார்க்கு அரோ.

பொ : (பெருந்) தலைவனாகிய இராமபிரானுடைய கதையை மறவாதவர்க்கு அன்னதானமும் நல்ல பூமிதானங்களும் கன்னிகா

தானமும் கோதானமும் சுவர்ணதானமும் (செய்த) பயன் (எய்தும்) என்று சொல்லுவர் பெரியோர்.

கு:—அன்னதானம் – சோற்றுக்கொடை அகிலம் - பூமி. (இரகுவம்மிசம். சிதை வ. 72). கபிலை - பசுக்களில் ஒருவகை. இன் சாரியை. சொன்னம் – சுவர்ணம்; பொன். (17)

**18.** வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள பாடையா தொன்றி னுயினும்
திடமுள ரகுகுலத் திராமன் றன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரே.

வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடம் உள பாடை யாது ஒன்றின் ஆயினும்,
திடம் உள ரகுகுலத்து இராமன்தன் கதை
அடைவுடன் கேட்பவர் அமரர் ஆவர் ஏ.

பொ:—வடமொழி தென்மொழி வடுகு கன்னடம் (என்னும் மொழிகளுள்) யாதொரு மொழியாலாயினும், (இவையன்றி) ஆற்றலுள்ள வேறு எந்த ஒரு மொழியாலாயினும் மெய்ம்மை யுள்ள ரகுகுலத்துத் தோன்றிய இராமபிரான் கதையை முறை யாகக் கேட்பவர் தேவராவர்.

கு:—கலை - பாஷை; மொழி. 'தென்கலையே முதலுள்ள பல கலை' (நகரப். 49) என்பது கந்தபுராணம். இடம் – ஆற்றல்; வலிமை (பிங்கலம்). திடம்-வாய்மை; சத்தியம். 'உயர்கதி பெறு வது திடனே' (617·2) என்பது தேவாரம். (18)

**19.** இத்த லத்தினி ராமாவ தாரமே
பத்தி செய்து பரிவுடன் கேட்பரேல்
புத்தி ரர்த்தரும் புண்ணிய முந்தரும்
அத்த லத்தில வன்பத மெய்துமே.

இத்தலத்தின் இராமாவதாரமே
பத்திசெய்து பரிவுடன் கேட்பரேல்
புத்திரர்த் தரும் புண்ணியமும் தரும்
அத்தலத்தில் அவன்பதம் எய்தும் ஏ!

பொ :—இவ்வுலகில் இராமாவதாரம் (என்னும் இந்நூலைப்) பத்திசெய்து ஆசையோடு கேட்பாராயின், (அவ்வாறு கேட்பவர்க்கு இந்நூல்) புத்திரரைத் தரும்; புண்ணியத்தையும் தரும்; அவ்வுலகில் இறைவன் திருவடிப்பேறும் கிட்டும்.

கு :—தலம்-உலகம் 'ஏழ்தலம் உருவவிடைந்து' (4·7) என்பது திருவாசகம். பரிவு – ஆசை. (19)

**20.** ஆதியரி யோநம நராயணர் திருக்கதை
★ யறிந்தனு தினம்பரவுவோர்
நீதியனு போகநெறி நின்றுநெடு நாளதி
னிறந்துசக தண்டமுழுதுக்
காதிபர்க ளாயரசு செய்துள நினைத்தது
கிடைத்தருள் பொறுத்து முடிவில்
சோதிவடி வாயழிவின் முத்திபெறு வாரென
வுரைத்தசுரு தித்தொகைகளே.

ஆதி 'அரி ஓம் நம' நராயணர் திருக்கதை
அறிந்து, அனுதினம் பரவுவோர்,
நீதி அனுபோக நெறி நின்று, நெடுநாள் அதின்
இறந்து, சகதண்டம் முழுதுக்கு
ஆதிபர்களாய், அரசு செய்து, உளம் நினைத்தது
கிடைத்து, அருள் பொறுத்து, முடிவில்
சோதிவடிவாய் அழிவு இல் முத்தி பெறுவார் என
உரைத்த சுருதித்தொகைகள் ஏ.

பொ :—முதலில் 'ஹரி : ஓம் நமோ நாராயணாய' என்று வணங்கப்படுகிற இறைவனுடைய திருக்கதை (யாகிய இந்த இராமாவதார நூலின் நயங்களை) அறிந்து நாள்தோறும் பாடுவோர், அறத்தொடு கூடிய இன்பநுகர் (ச்சிக்குரிய இல்லற) நெறியில் நெடுநாள் வாழ்ந்து, (பின்) அதினின்று நீங்கி உலக முழுதுக்கும் தலைவர்களாய் அரசாண்டு, (தாம்) நினைத்தது கிடைக்கப்பெற்று, (இறைவன்) அருளுக்கிலக்காய், எல்லையற்ற ஒளிவடிவாய், அழிவற்ற வீடு பெறுவர் என்று வேதங்கள் கூறின.

கு :—நாராயணர் என்பது சந்தநோக்கி நராயணர் என நின்றது, விகாரம். பரவுதல்–பாடுதல்; 'யாழிற் பரவுமின்' (10) என்பது கல்லாடம். அதிபர் என்பது ஆதிபர் என முதல்நீண்டது. சுருதி – வேதம். (20)

**21.** இராகவன் கதையி லொருகவி தன்னி
★ லேகபா தத்தினை யுரைப்போர்
பராவரு மலரோ னுலகினி லவனும்
பன்முறை வழுத்தவீற் றிருந்து
புராதன மறையு மண்டர்பொற் பதமும்
பொன்றுநா ளதனினும் பொன்று
அராவணை யமல னுலகெனும் பரம
பதத்தினை யடைகுவ ரன்றே.

இராகவன்கதையில் ஒரு கவிதன்னில்
ஏக பாதத்தினை உரைப்போர்,
பராவு அரும் மலரோன் உலகினில், அவனும்
பல் முறை வழுத்த வீற்றிருந்து,
புராதனம் அறையும் அண்டர் பொன் பதமும்
பொன்றும் நாள் அதனினும், பொன்று
அரா அணை அமலன் உலகெனும் பரம
பதத்தினை அடைகுவர் அன்று ஏ.

பொ :—இராமன்கதையுள் ஒரு பாடலில் ஓர் அடியைச் சொல்வோரும், புகழ்தற்கரிய பிரமனுலகில் அப்பிரமனும் பல வகையால் துதிக்கும்படி பொலிவொடு தங்கி, (பின்) பழமை பேசப்படுகிற தேவருடைய அழகிய உலகங்களும் அழியும் நாளாகிய அவ் வூழி காலத்திலும் அழியாத பாம்பணைப் பரமனுன திருமால் உலகு என்று சொல்லப்படுகிற பரமபதத்தை அடைவார்கள்.

கு :—இராகவன் – ரகு என்னும் அரசன்வழி வந்தோன் ; இராமன். ஏகம் – ஒன்று. பாதம் – அடி. பராவுதல் – புகழ்தல். உரைப்போரும் என உம்மை விரிக்க. பதம் – இடம்; உலகம். பொற்பதமும் என்பதனுள் உம்மை சிறப்பும்மை. பொன்றுதல் – அழிதல். அரா – பாம்பு. ஓரடியுரைப்போரும் வீடுபெறுவர் எனவே பாடல் முழுதும் உரைப்போரும் கதை முழுதும் உரைப்போரும் பெறும் பயன் கூறவேண்டாதாயிற்று. (21)

**22.** இனையநற் காதை முற்று
★ மெழுதினோர் வியந்தோர் கற்றோர்
அனையது தன்னைச் சொல்வோர்க்
கரும்பொருள் கொடுத்துக் கேட்டோர்

கனைகடற் புடவி மீதே
காவலர்க் கரசாய் வாழ்ந்து
வினையம தறுத்து மேலாம்
விண்ணவன் பதத்திற் சேர்வார்.

இனைய நல் காதை முற்றும் எழுதினோர்,
வியந்தோர், கற்றோர்,
அனையது தன்னைச் சொல்வோர்க்கு
அரும்பொருள் கொடுத்துக் கேட்டோர்
கனைகடல் புடவி மீது காவலர்க்கு
அரசு ஆய் வாழ்ந்து,
வினையம் அது அறுத்து, மேல் ஆம்
விண்ணவன் பதத்தில் சேர்வார்.

பொ :—இத்துணை நல்லதாகிய (இராம) காதையை முற்றும் எழுதினோரும் நன்குமதித்தோரும் படித்தவர்களும் அதனைச் சொல்லுபவர்களுக்கு அருமையான பொருள்களை (ஊதியமாக)க் கொடுத்துக் கேட்டோரும், ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட பூமியின்கண் அரசர்க்கரசாய் வாழ்ந்து, பழவினைத் தொடர்பு அறுத்து, உயர்ந்த கடவுளடியை அடைவர்.

கு :—கனைதல் - ஒலித்தல். புடவி - பூமி. வினையம் - பழவினை.
(22)

23. நாடிய பொருள்கை கூடு
ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும்
வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை
நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன்
றோள்வலி கூறு வோர்க்கே.

நாடிய பொருள் கைகூடும், ஞானமும் புகழும் உண்டாம்,
வீடு இயல் வழி அது ஆக்கும் வேரி அம் கமலை நோக்கும்
நீடிய அரக்கர் சேனை நீறுபட்டு அழிய வாகை
சூடிய சிலை இராமன் தோள்வலி கூறுவோர்க்கே.

பொ :—(புருஷகாரமாய் நின்று, உயிர்கள்) வீட்டுலகிற் செல்லுதற்குரிய நெறியை ஆக்குகின்ற நறுமணமுள்ள அழகிய தாமரைமலரில் வாழ்பவளாகிய திருமகளால் நோக்கப்பட்ட, வரபலத்தால் பெரிய அரக்கர்படை துகளாய் அழியும்படி வெற்றி மாலை சூடிய, வில் ஏந்திய இராமபிரானுடைய தோள்வலி கூறுவோர்க்கு விரும்பியபொருள் கிட்டும், அறிவும் புகழும் உண்டாகும்.

கு :—கமலை நோக்கும் தோள், வாகை சூடிய தோள், இராமன் தோள் என இயையும். வாகை சூடிய சிலையெனினும் அமையும். கோதண்டராமன், பரசுராமன் பலராமன் என்பாரின் வேறு என்பார் சிலையிராமன் என்றார். பொருள் எனவே கல்வியும் செல்வமும் பெறப்படும். கல்வியால் ஞானமும் பொருளால் புகழும் எய்தலால் ஞானமும் புகழும் உண்டாம் என்றார். ஞானம் வீடடைதற்கு ஏது. புகழ் இம்மைப் பயன். தோள் வலி என்றது அத்தோளின் ஆற்றல் கூறும் காவியத்தை. (23)

# காப்புப் பாடல்கள்

[இத்தலைப்பின்கீழ்வரும் பாடல்களுள் 30, 31, 32ஆம் பாடல்கள் அச்சுப் பிரதிகளிலும் ஏட்டுச் சுவடிகளிலும் உள்ளவை. மற்றவை ஓலைச்சுவடிகளிற் கண்டவை. 'உலகம் யாவையும்' என்று பின்னே கடவுள்வாழ்த்துத் தொடங்குதலால் இவை நூற்குப் புறத்தே ஆசிரியரால் இயற்றிச் சேர்க்கப்பட்ட காப்புப் பாடல்கள் என்று கொள்ளத்தகும். இவற்றுள், சில பாடல்கள் இந்நூலை ஓலைச்சுவடியில் எழுதியவர்களால் தங்கள் பணி இனிது நிறைவுறல் கருதி எழுதிச் சேர்க்கப்பட்டனவாகவும் இருக்கலாம். 33-ஆம் பாடல் இந்நூற்குப் பதிகம் போன்றிருத்தலால், காப்புப் பாடல்களின் முடிவில் சேர்க்கலாயிற்று. ஏடுகளில் முன்பின்னாக ஒரு முறையின்றி வரையப்பட்ட இப்பாடல்கள், இங்கே ஒரு முறைப்படத் தொகுத்துத் தலைப்புக்களிட்டுக் காட்டப்பட்டுள்ளன.]

பொது

24. ஒன்றாய்ப் பலவா யுளனாயில
★ னாயு ரைப்போர்க்
கன்றாய்ப் பரமா யருவாயுரு
வாகி மேன்மை
குன்றாத ஞானக் கொழுந்தாய்க்குண
மூன்றுந் தந்து
நின்றானி யாவ னவனீள்கழல்
சென்னி வைப்பாம்.

ஒன்று ஆய்ப் பல ஆய் உளன் ஆய் இலன் ஆய் உரைப்போர்க்கு
அன்று ஆய்ப் பரம் ஆய் அரு ஆய் உரு ஆகி மேன்மை
குன்றாத ஞானக் கொழுந்து ஆய்க் குணம் மூன்றும் தந்து
நின்றான் இயாவன் அவன் நீள் கழல் சென்னி வைப்பாம்.

பொ :—சொல்லுவோர்க்கு (அரியநிலையில்) ஒரு பொருளாகியும் பல பொருளாகியும், உள்ளவனாகியும் இல்லாதவனாகியும், முன்னதாகியும் அன்றாகியும், உருவுடையதாகியும் உருவற்றதாகியும் உயர்வுகுன்றாத அறிவின்கொழுந்தாகியும் (சாத்துவிகம் இராசதம்

தாமசம் என்னும்) குணங்கள் மூன்றினையும் தந்து நின்றவன் எவனோ (அவனே இறைவன்) அவனுடைய பெருமையால் உயர்ந்த திருவடிகளைத் தலையின்கண் சூடுவோம்.

கு :—நூலின் அகத்தே 'உலகம் யாவையும்' என்று கடவுள் வாழ்த்துத் தொடங்குதலால் இச்செய்யுள்முதல் உள்ள பாடல்கள் நூலின் புறத்தே வைத்த காப்புப் பாடல்களாகத் தொகுக்கப் பட்டன. அவற்றுள் இச்செய்யுள், பெயரும் உருவமும் கொண்டு ஒரு கடவுளைச் சுட்டி வாழ்த்தாமல் பொது வகையால் வணக்கம் கூறிய 'உலகம் யாவையும்' என்று தொடங்கும் செய்யுள் போல்வது. (24)

இச்செய்யுள் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் மட்டும் உளது. 40 என்னும் குறியீடுள்ள பெரியன் பதிப்பில் பின்வருமாறு ஒரு பாடல் காணப்படுகிறது:—

24 (a) ஒன்றாய் இரண்டு சுடராய் ஒரு மூன்றும் ஆகிப்
பொன்றாத வேதம் ஒருநான்கொடு ஐம்பூதம் ஆகி
அன்றாகி *அண்டத் தகத்தாகிப் புறத்தும் ஆகி
நின்றான் ஒருவன் அவன் நீள்கழல் நெஞ்சில் வைப்பாம்.

## திருமால் 25–26

25; காயும்வெண் பிறைநிகர் கடுவொ டுங்கெயிற்
★ றாயிரம் பணாமுடி யனந்தன் மீமிசை
மேயநான் மறைதொழ விழித்து றங்கிய
மாயன்மா மலரடி வணங்கி யேத்துவாம்.

காயும் வெண் பிறை நிகர் கடு ஒடுங்கு எயிற்று
ஆயிரம் பணாமுடி அனந்தன் மீமிசை
மேய நால் மறை தொழ விழித்து உறங்கிய
மாயன் மா மலர் அடி வணங்கி ஏத்துவாம்.

பொ :—நிலவெறிக்கின்ற வெள்ளிய பிறைச் சந்திரன் போன்ற விடம் தங்கிய பற்களையும், படத்தொடுகூடிய ஆயிரம் முடிகளையும் உடைய ஆதிசேடன்மீது, பொருந்திய நான்கு வேதங்களும்

* 'அண்டத் தகத்தாகியப் புறத்துமாகி' என்று பெரியன் பதிப்புள் காணப்படினும், அப்பாடத்தால் ஓசை சிதைவுறும்; பொருட் சிறப்பும் இன்றாம். ஆதலால் 'அண்டத்தகத்தாகிப் புறத்தும் ஆகி' என்று ஓசையமைதியும் பொருளியையும் உடைய பாடம் கொள்ளப்பட்டது.

வணங்க அறிதுயில் அமர்ந்த திருமாலின் அழகிய மலர்போலும் திருவடிகளை (மனம் மெய்களால்) வணங்கி, (வாயால்) வாழ்த்து வோம், (25)

இச்செய்யுள் 26 என்னும் குறியீடுள்ள சுவடியில் மட்டும் உள்ளது.

**26.** நீல மாங்கட னேமியங் தடக்கை
★ மாலை மால்கெட வணங்குது மகிழ்ந்தே.

நீலம் ஆம் கடல் நேமி அம் தடக்கை
மாலை மால் கெட வணங்குதும் மகிழ்ந்தே.

பொ :—(தம் திருமேனி நிறத்தால்) நீல நிறம் அடைந்த திருப் பாற்கடலின்கண் (பள்ளிகொண்ட) சக்கரம் ஏந்திய பெரிய கையினையுடைய திருமாலை (நம்முடைய) மயக்கம் ஒழியும்படி மகிழ்ந்து வணங்குவோம். (26)

இது, 44 என்னும் குறியீடுள்ள சுவடியில் மட்டும் உள்ளது. 40 என்னும் குறியீடுள்ள பெரியன் பதிப்புள் திருமகள் விஷய மாகப் பின்வருமாறு ஒரு பாடல் காணப்படுகிறது:—

26 (a) மாதுளங் கனியைச் சோதி
வயங்கிரு நிதியை வாசத்
தாதுகு நறுமென் செய்ய
தாமரைத் துணைமென் போதை
மோதுபாற் கடலின் முன்னாள்
முளைத்துநாற் கரத்தில் ஏந்தும்
போதுதா யாகத் தோன்றும்
பொன்னடி போற்றி செய்வாம்

## இராமபிரான் 27-28

**27.** பராவரு மறைபயில் பரமன் பங்கயக்
★ கராதல நிறைபயில் கருணைக் கண்ணினன்
அராவணைத் துயிறுறந் தயோத்தி மேவிய
இராகவன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம்.

பராவு அரு மறை பயில் பரமன் பங்கயக்
கராதலம் நிறைபயில் கருணைக்கண்ணினன்
அரா அணைத் துயில் துறந்து அயோத்தி மேவிய
இராகவன் மலர் அடி இறைஞ்சி ஏத்துவாம்.

பொ :—துதிக்கப்படுகிற அரிய வேதங்கள் முறையிடுகின்ற பரமனும், தாமரை மலர்போன்ற கைத்தலங்களையும் நிறைகருணை பொருந்திய கண்களையும் உடையவனும், பாம்பணையில் உறங்கும் உறக்கத்தைவிட்டு அயோத்தியிலே சேர்ந்தவனும் ஆன (இரகுவின் வழி வந்த) இராமபிரானுடைய தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கித் துதிப்போம்.

கு :—கரதலம் என்பது எதுகை நோக்கிக் கராதலம் என நீண்டு நின்றது, விகாரம். நிறைகருணை பயில் கண்ணினன் என இயையும். (27)

**28.** கலங்கா மதியுங் கதிரோன் புரவிப்
★ பொலன்கா மணித்தேரும் போகா—இலங்கா
புரத்தானை வானோர் புரத்தேற விட்ட
சரத்தானை நெஞ்சே தரி.

கலங்கா மதியும் கதிரோன் புரவிப்
பொலன் கா மணித் தேரும் போகா இலங்கா
புரத்தானை வானோர் புரத்து ஏறவிட்ட
சரத்தானை நெஞ்சே ! தரி.

பொ :—மனமே ! காலம் தவறாது தோன்றும் சந்திரனுடைய விமானமும், சூரியனுடைய குதிரைகள் பூட்டிய பொன்மயமான காப்பமைந்த அழகிய தேரும் இடையே செல்லாத இலங்காபுரத்தரசனை இராவணனை வென்று வீரசொர்க்கத்தே செல்லவிட்ட அம்புகளையுடைய இராமபிரானை நினை.

கு :—பின்னே சூரியன் தேரும் என்றதற்கேற்ப முன்னே சந்திரன் விமானமும் என்று பொருள் உரைக்கலாயிற்று. பொலன் - பொன். கா – காப்பு. மணி - அழகு. வானோர்புரம் – வீரசொர்க்கம். சரம் – அம்பு. (28)

இச் செய்யுள் 44 என்னும் குறியீடுள்ள சுவடியில் மட்டும் காணப்படுகிறது.

**29.** நாராய ணாய நமவென்னு நன்னெஞ்சர்
★ பாராளும் பாதம் பணிந்தேத்து மாறறியேன்
காராரு மேனிக் கருணா கரமூர்த்திக்
காராத னையென் னறியாமை யொன்றுமே.

நாராயணாய நம: என்னும் நல் நெஞ்சர்
பார் ஆளும் பாதம் பணிந்து ஏத்துமாறு அறியேன்;
கார் ஆரும் மேனிக் கருணாகரமூர்த்திக்கு
ஆராதனை என் அறியாமை ஒன்றுமே.

பொ:—திருமந்திரத்தின் பொருளை நினையும் நல்ல மனமுடைய பெரியோர் உலகை ஆட்சி செய்யும் (இறைவன்) திருவடிகளை வணங்கித் துதிக்கும் முறையினை யான் அறியேன்; (ஆதலால்) மேகம் போன்ற (கரிய) திருமேனியை யுடையவனும் கருணைக்கு உறைவிடமாகியவனுமான இறைவனுக்கு என் அறியாமை ஒன்றுமே ஆராதனை (யாவது).

கு:—திருமந்திரத்தின் பொருளை நினைதலாவது, அடியார்க் கடிமை புக்கவன்றே இறைவனுக்கு அடிமையாதல் நிரம்பும் என்பது அறிதலாம். கருணாகரன் - இராமபிரான் திருநாமங் களுள் ஒன்று. "வருணாலயத்தை வழிவேண்டிச் சரணமாகக் கிடந்த கருணாகரப் பெருமானையும்" (இராமாநுஜார்ய திவ்ய சரிதை. பக். 64) எனப் பெரியோரும், "இலங்கையெறிந்த கருணா கரன்" (கலிங்கத்துப்பரணி கடைதிறப்பு 44) எனச் சயங் கொண்டாரும், 'கருணையார் கலி' (அயோத்தியா. குகப். 69) 'கருணையங்கடல்' (யுத்த. வருணனை வழிவேண்டு படலம் 5) என இந்நூலாசிரியர் தாமும் கூறுதல் காண்க. ஆராதனை - பூசை. (29)

இப்பாட்டு 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் மட்டும் உள்ளது.

**சடகோபர்**

**30.** தருகை நீண்ட தயரதன் றான்றரும்
★ இருகை வேழத் திராகவன் றன்கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே.

தரு கை நீண்ட தயரதன் தான் தரும்
இரு கை வேழத்து இராகவன்தன் கதை
திருகு ஐ வேலைத் தரைமிசை செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பது ஏ.

பொ :—பெருங்கொடையாளியான தயரதன் தந்த இரண்டு கைகளையுடைய யானைபோல்வானாகிய இராமபிரான் சரிதத்தை மாறுபாடுடைய அழகிய கடலாற் சூழப்பட்ட உலகில் (தமிழ்ப் பாடலாகச்) சொல்லுதற்குக் குருகூரிலுள்ள தலைவராகிய சடகோபருடைய ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகள் காப்பாம்.

கு :—தருகை - கொடை. தான், அசை. திருகு - மாறுபாடு. (30)

## அனுமன்

31. அஞ்சிலே யொன்று பெற்றா
★ னஞ்சிலே யொன்றைத் தாவி
அஞ்சிலே யொன்றா றாக
வாருயிர் காக்க வேகி
அஞ்சிலே யொன்று பெற்ற
வணங்கைக்கண் டயலா ரூரில்
அஞ்சிலே யொன்று வைத்தா
னவனெம்மை யளித்துக் காப்பான்.

அஞ்சிலே ஒன்று பெற்றான்
அஞ்சிலே ஒன்றைத் தாவி,
அஞ்சிலே ஒன்று ஆறு ஆக
ஆர் உயிர் காக்க ஏகி,
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக்
கண்டு, அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான்,
அவன் எம்மை அளித்துக் காப்பான்.

பொ :—ஐந்து பூதங்களுள் ஒன்றாகிய வாயுவினாற் பெறப்பட்டவனும், பெறற் கரிய பிராட்டியின் உயிரைக் காக்கும் பொருட்டு, ஐந்து பூதங்களுள் ஒன்றாகிய ஆகாயம் வழியாக, ஐந்து பூதங்களுள் ஒன்றாகிய நீரைத் தாண்டிச் சென்று, ஐம்பூதங்களுள்

ஒன்றாகிய நிலத்தாற் பெறப்பட்ட தெய்வமகளாகிய பிராட்டியைப் பகைவர் ஊராகிய இலங்கையிற் கண்டு, அவ்வூரில், ஐம்பூதங் களுள் ஒன்றாகிய தீயை வைத்தவனுமான, அவன் (அனுமன்) எம்மைக் கருணைசெய்து காப்பான்.

கு :—தாவி ஏகி எனவும், அயலார் ஊரில் கண்டு எனவும் இயையும். அயலார் ஊரில் என்பது மீட்டும் கூட்டிக்கொள்ளும் படி இடைநிலைவிளக்காய்நின்றது. '**வாரி கடந்தேகி வஞ்சி ஆருயிர் பொன்றாது கண்டு**' என்னும் இராமசெயப்பகுதி 'ஆருயிர் காக்க ஏகி' என்பதன் விளக்கமாய் அமைந்தமையும் நோக்கத் தகும். 'ஆரியற்காக ஏகி' என்று பாடம் கொண்டு, 'நல் லோனான இராமபிராமன்பொருட்டுச் சென்று' என்று பொரு ளுரைப்பாரும் உண்டு. இது சொற்பொருட் பின் வருநிலை என் னும் அணி தழுவியது. (31)

26 என்னும் குறியீடுள்ள சுவடியுள் இச்செய்யுளின்பின் ஒரு செய்யுள் பின்வருமாறு காணப்படுகிறது:—

31 (a) எவ்வி டத்தும் இராமன் சரிதையாம்
அவ்வி டத்தினும் அஞ்சலி யத்தனுப்
பவ்வ மிக்க புகழ்த்திருப் பாற்கடல்
தெய்வ தாசனைச் சிந்தைசெய் வாமரோ.

14 என்னும் குறியீடுள்ள சுவடியுள் பின்வருமாறு ஒரு செய் யுள் சிதைந்து காணப்படுகிறது :—

31 (b) இருகரமு மிருபதமு முப்போது
மருள்பொழி........................
...............பரவமரர்சிறை மீட்டேகுந்
திருவதனத் தமர்ந்த நோக்கும்
பொருள் பரவுந் திருநெடுமால்
...............பொற்பு மாதர்
கருவினிடம் புகுதாத மாருதியா
மனுமானைக் கருத்துள் வைப்பாம்,

### கலைமகள்

**32.** புத்தகம் படிக மாலை
குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகம் தரித்த செங்கை
விமலையை யமலை தன்னை

மொய்த்தகொந் தளக பார
முகிழ்முலைத் தவள மேனி
மைத்தகு கருங்கட் செவ்வா
யணங்கினை வணங்கல் செய்வாம்.

புத்தகம் படிகமாலை குண்டிகை
பொருள் சேர் ஞான
வித்தகம் தரித்த செங்கை
விமலையை அமலைதன்னை
மொய்த்த கொந்து அளகபார
முகிழ் முலைத் தவள மேனி
மைத் தகு கருங்கண் செவ்வாய்
அணங்கினை வணங்கல் செய்வாம்.

பொ :—புத்தகமும் பளிங்குமணிமாலையும் கமண்டலமும் பொருள்பொதிந்த ஞானமுத்திரையும் தாங்கிய செவ்விய கைத் தலங்களையுடையவளும், குற்றமற்ற திருக்குணங்களும் செயலும் உடையவளும், அடர்ந்த பூங்கொத்தணிந்த குழற்கற்றையினையும் தாமரையரும்பு போன்ற தனங்களையும் வெண்மைநிறம் வாய்ந்த திருமேனியினையும் மைதிட்டப்பெற்ற சிறந்த கரிய கண்களையும் சிவந்த அதரத்தினையும் உடைய சரசுவதி தேவியை வணங்கு வோம்.

கு :—குண்டிகை - கமண்டலம். ஞானவித்தகம் - ஞான முத் திரை. விமலை அமலை என்பவை மலமற்றவள் என்ற ஒரு பொரு ளுடையன ஆதலின் முன்னதற்குக் குற்றமற்ற திருக்குணங்களை யுடையாள் என்றும் பின்னதற்குக் குற்றமற்ற செயல்களையுடை யாள் என்றும் கொண்டு உரைவரையலாயிற்று. அளகம் - கூந்தல். முகிழ் – கோங்கரும்பும் ஆம். தவளம் - வெண்மை. (32)

26 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வருமாறு ஒரு பாடல் காணப்படுகிறது :—

**விநாயகன்**

32 (a) எக்க ணக்கு மிறந்த பெருமையன்
பொக்க ணத்தன் புலியத ளாடையன்
முக்க ணத்தன் வரம்பெற்ற மூப்பனை
அக்க ணத்தி னவனடி தாழ்ந்தனம்.

40 என்னும் குறியீடுள்ள பெரியன்பதிப்பிற் பின்வருமாறு ஒரு பாடல் விநாயக வணக்கமாகக் காணப்படுகிறது :—

32 (b) தழைசெவிச் சிறுகட் டாழ்கைத்
தந்தசிந் துரமுந் தாரை
மழைமதத் தறுகட் சித்ர
வாரண முகத்து வாழ்வை
இழையிடைக் கலசக் கொங்கை
யிமகிரி மடந்தை யீன்ற
குழவியைத் தொழுவ னன்பாற்
குறைவற நிறைக வென்றே.

### பதிகம் (ஏகவிருத்த ராமாயணம்)

**33.** பராவரு மிராமன் மாதோ
டிளவல்பின் படரக் கான்போய்
விராதனைக் கரனை மானைக்
கவந்தனை வென்றி கொண்டு
மராமரம் வாலி மார்பு
துளைத்தணை வகுத்துப் பின்னர்
இராவணன் குலமும் பொன்ற
வெய்துட னயோத்தி வந்தான்.

பராவரும் இராமன், மாதோடு இளவல்
பின் படரக் கான் போய்,
விராதனைக் கரனை மானைக்
கவந்தனை வென்றி கொண்டு,
மராமரம் வாலி மார்பு துளைத்து,
அணை வகுத்துப் பின்னர்
இராவணன் குலமும் பொன்ற எய்து,
உடன் அயோத்தி வந்தான்.

பொ :—புகழப்படுகிற இராமபிரான், பிராட்டியும் தம்பியும் பின்தொடரக் கானகம்புக்கு, விராதனையும் கரனையும் மாரீசனையும் கவந்தனையும் வென்று, மராமரங்களையும் வாலிமார்பையும் துளைத்து (க், கடலில்) அணைகட்டி (அதன் வழியாக இலங்கையை அடைந்து), பின் இராவணன் குலமும் அழிய எய்து உடனே அயோத்திக்கு மீண்டான்.

கு :—மான் என்றது மான் வடிவில்வந்த மாரீசனை. 'இராமன் மாதோடு இளவல் பின்படரக் கான்போய்' என்றமையால் பாலகாண்ட அயோத்தியாகாண்டக் கதைப்பகுதியும், 'விராதனைக் கரனை மானைக் கவந்தனை வென்றி கொண்டு' என்றமையால் ஆரணியகாண்டக் கதைப்பகுதியும், 'மராமரம் வாலிமார்பு துளைத்து' என்றமையால் கிஷ்கிந்தாகாண்டக் கதைப்பகுதியும், 'அணைவகுத்து இராவணன் குலமும் பொன்ற எய்து' என்றமையால் யுத்தகாண்டக் கதைப்பகுதியும் தொகுத்துரைக்கப்பட்டன. 'பிராட்டியைவிட்டு வணங்கி உய்தி பெறுக' என்று இராவணன்பால் கூறும்படி அனுப்பிய தூதன்செயல் கூறும் சுந்தர காண்டக் கதைப்பகுதி யுத்தகாண்டக் கதைப்பகுதியுள் (உறுப்பாய்) அடங்கிநின்றது. (33)

---

# தற்சிறப்புப் பாயிரம்

[தற்சிறப்புப் பாயிரம் என்பது நூல்செய்த ஆசிரியன் தானே கூறும் பாயிரமாகும். இப்பாயிரத்துள், கடவுள்வாழ்த்தும், நூல் அரங்கேறுங்கால் அந்த அவைக்களத்துள்ள ஆன்றோர் குழுவை வணங்கும் அவையடக்கமும், நூலின் பெயரும், நுவல் பொருளும், நூல் வரலாறும், நூல் இயற்றிய காலமும் இடமும், இயற்றுவித்தோன் பெயர் முதலியனவும் கூறப்படுவது உண்டு.

கம்பர் கூறிய இத் தற்சிறப்புப் பாயிரத்துள், கடவுள் வணக்கமும், அவையடக்கமும், இந்நூல் வரலாறும், நூலின் பெயரும், நூலியற்றிய இடமும், கூறப்பட்டுள்ளன. இவற்றுள். கடவுள்வாழ்த்து, முதன் மூன்று பாடல்களால் கூறப்பட்டது. அது, ஏற்புடைக் கடவுள் வாழ்த்தாகும். அதனுள், முதற் கடவுளது இலக்கணம் கூறி, உண்மைநூலறிவுக்குப் பயன் அம் முதற் கடவுளுடைய குணங்களையும் செயல்களையும் நினைந்தும் வாழ்த்தியும் அவனடியடைந்தும் உய்தல் என்பது விளக்கப் பட்டது. இவ்வாழ்த்துப் பாடல்கள் திருக்குறட் கடவுள்வாழ்த் தின் பொருள் செறிந்தனவாக உள்ளன.

கடவுள் வாழ்த்தின் முதற் பாட்டு,

‘அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு’

என்னும் திருக்குறள் முதற்பாடலின் விரியாகவுள்ளது.

இரண்டாம் பாட்டு,

‘கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை’
‘இருள்சே ரிருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு’

என்பவற்றின் பொருளும் கருத்தும் தழுவியது.

மூன்றும் பாட்டு,

‘கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றுள் தொழாஅர் எனின்’

என்னும் திருக்குறட் பாடலையும், அடிசேர்தல் கூறும் பிற திருக் குறட் பாக்களையும் தழுவியது.

4-ஆம் பாடல் முதல் 9-ஆம் பாடல் வரை அவையடக்கம் கூறப்பட்டது. அவையாவது, நூல் அரங்கேறுமிடத்துள்ள அறிவும் ஒழுக்கமும் அமைந்த ஆன்ேறார்குழு. அடக்கமாவது, அவர்க்கு அடங்கி வழிபடுகிளவி கூறுதலாம். இனி அவையடக்கம் என்பதற்கு நல்லோரவைக்கு அடங்குதல்; தீயோரவையை அடக்குதல் என்று பொருள் கூறலும் ஆம். இங்கே கூறிய அவையடக்கம் நல்லோரவைபற்றி யெழுந்ததாகும்.

10-ஆம் பாடல் இந்நூல் வரலாறு கூறுவது. 11-ஆம் பாடல் இந்நூலின் பெயரும் இதனை இயற்றுவித்தார் பெயரும் இந்நூல் இயற்றப்பட்ட இடமும் குறிப்பதாம்.]

---

ஸ்ரீ:

# பாலகாண்டம்

——————:o:——————

## தற்சிறப்புப் பாயிரம்

### கடவுள்வாழ்த்து 1—3

1. உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணுங்களே.

உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகு இலா விளையாட்டு உடையார் அவர்
தலைவர், அன்னவர்க்கே சரண் நாங்கள் ஏ.

பொ :—எல்லா உலகங்களையும் தோற்றுவித்தலும் நிலைபெறும்படி செய்தலும் அழித்தலும் ஆகிய செயல்களை ஒழியாத அளவற்ற விளையாட்டாக உடையவர் எவரோ அவர் தலைவர்; அவர்க்கே நாங்கள் அடைக்கலம்.

கு :—உலகம் என்பது மங்கல மொழி. மங்கல மொழியால் தொடங்குதல் மரபு. அலகு – அளவு. தன்வினை யுணர்த்தும் பெறுதல் என்னும் சொல், பெறுத்தல் என ஒற்றிரட்டிநின்று பிறவினை யுணர்த்திநின்றது. 'பெறுத்திப் போந்தான்' (பெரியாழ்வார்திருமொழி 2-9. 9) என்னும் அருளிச்செயலும் இங்கு நோக்கத்தகும். விளையாட்டுடையார் எவர்? அவர் தலைவர் என எவர் என்னும் ஒரு சொல் வருவித்துரைக்கப் பட்டது. 'உயர்வற வுயர் நலம் உடையவன் யவன் அவன்'* என்னும் திருவாய்மொழியும் இங்கு நோக்கத்தகும். 'உடையவராகிய அவர் தலைவர்' எனினும் ஆம். 'சரணங்களே' என்று பாடங்கொண்டு, உலகம்

* முதற் பத்து, முதல் திருவாய்மொழி 1.

யாவையும் என்பதை மீட்டும் கூட்டி, 'அன்னவர்க்கே உலகம் யாவையும் சரணங்கள்' என்று இயைத்து, அவர்க்கே உலகம் யாவையும் அடைக்கலப்பொருள்கள் என உரை கூறுதலும் அமையும். இதனால் உலக காரணத்துவம் முதலிய இறைவன் இயல்புகளும், உடையானும் உடைமையும், காப்போனும் காக்கப் படுவனவும் முதலாக இறைவனுக்கும் உலகுக்கும் உள்ள தொடர் பும் கூறப்பட்டன. 'நிலை பொறுத்தலும்' எனப் பாடம் கொண்டு, அவ்வுலகங்களின் நிலையைத் தாங்கலும் என உரை கூறலும் ஆம். (1)

**2.** சிற்கு ணத்தர் தெரிவரு நன்னிலை
எற்கு ணர்த்தரி தெண்ணிய மூன்றனுள்
முற்கு ணத்தவ ரேமுத லோரவர்
நற்கு ணக்கட லாடுத னன்றரோ.

சித் குணத்தர் தெரிவு அரும் நல் நிலை,
எற்கு உணர்த்த அரிது, எண்ணிய மூன்றனுள்
முன் குணத்தவரே முதலோர், அவர்
நல் குணக் கடல் ஆடுதல் நன்று! அரோ.

பொ :—ஞானிகளும் உணர்தற்கு அரிய (அத் தலைவருடைய) நல்ல இயல்பை (அறியாமையுடைய) என்னால் உணர்த்தல் இயலாது; எண்ணப்பட்ட மூன்றுகுணங்களுள் முதலதாகிய சத்துவ குணம் உடையவரே தலைவர்; அவருடைய நல்ல குணமாகிய கடலிலே மூழ்கித் திளைத்தலே இன்பம்.

கு :—சிற்குணத்தரும் என உம்மை விரிக்க. சிற்குணத்தர் தெரி வரும் என்பதற்கு ஞானிகளால் அறியப்படுகிற எனினும் ஆம். எற்கு – என்னால்; உருபுமயக்கம். உணர்த்த அரிது என்பது உணர்த்தரிது என நின்றது, விகாரம். முதலோர் என்றது முன் பாட்டிற் கூறிய தலைவர் என்பதனை உணர்த்திநின்றது. வான் மீகத்துள், 'எவன் குணவான்', என்று தொடங்கும் வான்மீகி முனிவர்வினாக்களுக்கு, நாரதமுனிவர் கூறும் விடையும் இங்கு நோக்கத்தகும். குணத்தைக் கடலாக உருவகித்தமைக்கு ஏற்ப, அக் குணங்களை நினைந்தும் வாழ்த்தியும் உருகியுருகி ஈடுபடுதலை ஆடுதல் என்று உருவகவாய்பாட்டாற் கூறினர். இனி, 'சிற் குணத்தர் தெரிவரும் நன்னிலை' என்பதற்கு 'அறிவே உருவாகிய இறைவனுடைய அறிதற்கரிய நல்லியல்பை' என்று பொருள் கூறுவாரும் உண்டு. (2)

3. ஆதி யந்த மரியென யாவையும்
ஓதி ஞரல கில்லன வுள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி நன்மையன்
பாத மல்லது பற்றலர் பற்றிலார்.

ஆதி அந்தம் அரி என யாவையும்,
ஓதினூர், அலகு இல்லன உள்ளன
வேதம் என்பன மெய் நெறி நன்மையன்
பாதம் அல்லது பற்றலர், பற்று இலார்.

பொ :—அளவற்றனவும் என்றும் அழியாதுநிற்பனவும் ஆன வேதம் என்று சொல்லப்பட்ட எல்லாவற்றையும் தொடங்கும் போதும் முடிக்கும்போதும் 'அரி: ஓம்' என்று கூறிக் கற்றவர் களும் பற்றற்றவர்களுமான பெரியோர்கள், உண்மையான நெறி யும் பயனுமாக விளங்கும் இறைவனுடைய திருவடிகளையே (தஞ்சமாகப்) பற்றுவர் ; பிறி தொன்றைப் பற்றூர்.

கு :—பாதமல்லது பற்றலர் எனவே பாதம் பற்றுவர் என்பது பெறப்படும், படவே, பெரியோர் ஒழுகலாறு கொண்டு யாமும் அவ்விறைவன் திருவடிகளையே பற்றுவோம் என்பது இசை யெச்சம். இதனுல் செய்வதும் தவிர்வதும் ஒருங்கு கூறப்பட்டன. 'எல்லாத் தர்மங்களையும் விட்டு, என்னைப் பற்று' என்னும் சரம சுலோகப்பகுதியும் இங்கு நோக்கத்தகும். பற்றிலார் மெய்ந் நெறி நன்மையன் பாதமல்லது பற்றலர் என்றது, பின் இக்காவி யத்துள் பல இடங்களில் விரித்துப் பேசப்படுகிற தண்டகவன முனிவர், விடணன் முதலியோர் இக் காவிய நாயகனுன இராம பிரானை அடியடைந்துய்ந்த வரலாறுகளுக்குத் தோற்றுவாய் போல் அமைந்தமை காணத்தகும். 'ஆதியந்தம் அரியன' எனப் பாடம் கொண்டு, உரைவிரிப்பாரும் உண்டு. (3)

## அவையடக்கம் 4-9

4. ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவு நக்குபு புக்கென
ஆசை பற்றிய றையலுற் றேன்மற்றிக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ.

ஓசை பெற்று உயர் பாற்கடல் உற்று ஒரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென
ஆசை பற்றி அறையல் உற்றேன்; மற்று இக்
காசு இல் கொற்றத்து இராமன் கதை அரோ.

பொ :—சிறிய பூனையானது, ஒலியுடையதாய்ச் சிறந்த திருப்பாற்கடலையடைந்து, (அக்கடலில் உள்ள பால்) முழுவதையும் ஆசையால் நக்கப் புக்காற்போல, (சிறியவனாகிய யானும் அப்பாற்கடல்போல் மிக்க) இந்தக் குற்றமற்ற வெற்றியையுடைய இராமபிரானுடைய (இசையமைதி பெற்று உயர்ந்த) கதையைப் பத்தியால் சொல்லத் தொடங்கினேன்.

கு :—ஓசை – 1 ஒலி, 2 இசை. பூசை - பூனை. நக்குபு எனும் செய்தெனெச்சத்தை நக்க எனச் செயவெனெச்சமாகத் திரிக்க. ஆசை பற்றி என்பது இடைநிலைவிளக்காய் முன்னும் பின்னும் இயைந்துநின்றது. உவமையாகிய பாற்கடலுக்குக் கூறிய அடைமொழிகளை உவமேயமாகிய இராமகதைக்கும் இணைத்துப் பொருள் உரைக்கலாயிற்று. நினைந்து முற்றுவிக்கவும் முடியாத இராமகதையைப் பேசி முற்றுவிக்கப்புக்க என் செயல், பருகி முழுதும் உட்கொள்ளுதற்கு அரிய பாற்கடலை, நக்கி முழுதும் உட்கொள்ளப்புக்க பூனையின் செயல்போல் நகைவிளைப்பதொன்று என்றவாறு. (4)

5. நொய்தி னொய்யசொ னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்தொளை
யெய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே.

நொய்தின் நொய்ய சொல் நூற்கலுற்றேன்: எனை?
வைத வைவின் மராமரம் ஏழ் தொளை
எய்த எய்தவற்கு எய்திய மாக்கதை
செய்த செய் தவன் சொல் நின்ற தேயத்தே.

பொ :—(வேடனைச்) சபித்த சாபமொழியால், ஏழு மராமரங்களும் ஒருங்கே தொளைபடும்படி எய்த இராமபிரானுக்கு உரியதாக எய்திய பெருமை வாய்ந்த கதையை இயற்றிய வான்மீகிமுனிவன் புகழ் நிலைத்த இந்நிலத்தில், மெல்லியதினும்

மெல்லியதாகிய சொற்களால் நூல் செய்யத் தொடங்கினேன்; என் பேதைமை இருந்தவாறு என்னை?

கு :—'வைதவைவின் எய்திய மாக்கதை' என்பது வசையே இசையாகவல்ல வான்மீகி முனிவர் சொல்லின் ஆற்றலும் மாண்பும் விளக்கி நின்றது. 'செய்தவன்' என்பது தவத்தின் விளைவான மனத்தூய்மையும் உண்மையறிவும் உடையவன் என்பதை விளக்கிநின்றது. 'வைத வைவின்.........எய்திய மாக்கதை' என்பது பழையதொரு வரலாற்றை உட்கொண்டு எழுந்தது. அவ்வரலாறுவது :—வான்மீகிமுனிவர் ஒரு நாள் தமசாநதியில் நீராடச் செல்லுங்கால், வழியிடையே, வேடன் ஒருவன், சேவலும் பெடையுமாய் மகிழ்ந்திருந்த கிரவுஞ்சப் பறவைகளுள், ஆண்பறவையை அம்பெய்து கொல்ல, அதுகண்ட முனிவர் சினந்து, 'வேட! கிரவுஞ்சப் பறவைகளுள், காமமயக்கமுற்ற ஆண்பறவையைக் கொன்றதனல் நீ என்றும் நற்கதி அடைய மாட்டாய்' என்னும் பொருளுடைய ஒரு வடமொழிப் பாடலால் வேடனைச் சபித்துச் சென்று சினம் தணிந்து, நீராடிக் கடன் முடித்து, ஆச்சிரமம் சேர்ந்து, நீராடச் செல்லுகையில் நிகழ்ந்தவற்றைச் சிந்தித்து, வேடன்மேல் தாம் கூறிய வசை, 'திருமகள் நாயகனே! ஆணும் பெண்ணும் ஆகிய அரக்கர்கூட்டத்துள், காமமயக்கமுடைய ஆண்மகனைக் கொன்ற அச்செயலால் நீ நெடுங்காலம் வாழ்வாய்' என்ற பொருளுடைய மங்கலப் பாதலாகவும் அமைந்த நிலை கண்டு வியப்புற்றிருக்குமளவில், பிரமன் அவர் எதிர் தோன்றி, அவர்க்கு அப்பாடலில் அமைந்த இராம சரிதத்தை விரித்துக் கூற, அப்பாடலையே கடவுள்வாழ்த்தாகக் கொண்டு தொடங்கி முனிவர் இராமாயண நூலை இயற்றி முடித்தனர் என்பதாம். வேடனை நோக்கி எழுந்த வசையாதலின், 'வைதவைவு' என்றும் பின் அது தானே மங்கலமாய் இசையாய் இராமகதையாய் முற்றினமையின், 'மராமரம் ஏழ் தொளையெய்த எய்தவற்கு எய்திய மாக்கதை' என்றும் கூறினர். மராமரம் ஏழ் தொளையெய்த எய்தவன் என்றது, இக்காவியநாயகனை இராமபிரானுடைய தோளாற்றலும் வில்லாண்மையும் விளக்கியவாறு. மராமரம் ஏழும் என உம்மை விரிக்க. மாக்கதை என்பதற்குத் திருமகளாகிய சீதாபிராட்டியின் கதை என்று பொருள் கூறுதலும் ஆம். சொல்-புகழ் (திருக்குறள்.387). சொல், ஆகுபெயராய் நூலை உணர்த்திற்று என்று கொள்ளலும் ஆம். நொய்து - மெல்லியது; ஆற்றலற்றது. நூற்கலுற்றேன் - நூல் செய்யத் தொடங்கினேன். இதனல் அவையடக்கமும் முதனூல் வரலாறும் புலனுகும். இனி 'வைதவைவின், மராமரம் ஏழ் தொளை யெய்த' என்று கொண்டு, 'முனிவர் சபித்தசாபம்

தப்பாமல் ஏழு பிறவியும் தொடர்ந்து கேடடைவிப்பதை ஒப்ப, ஒரே அம்பினுல் ஏழு மராமரங்களும் ஒருங்கே தொளைபடும்படி வன்மையோடு குறிதப்பாமல் எய்த என்று பொருள் கூறலும் ஆம். (5)

6. வைய மென்னை யிகழவு மாசெனக்
கெய்த வும்மி தியம்புவ தியாதெனிற்
பொய்யில் கேள்விப் புலமையி ஞேர்புகல்
தெய்வ மாக்கதை மாட்சி தெரிக்கவே.

வையம் என்னை இகழவும், மாசு எனக்கு
எய்தவும், இது இயம்புவது யாது ? எனில்,
பொய்யில் கேள்விப் புலமையிஞேர் புகல்
தெய்வ மாக்கதை மாட்சி தெரிக்கவே.

பொ :—உலகம் என்னை அவமதிக்கவும் அதனுல் என்பால் குற்றம் வந்து சேரவும் யான் இந்நூலை இயற்றுவது எதன் பொருட்டு? என்றுல், பிழைபடாத கேள்வியறிவுடன் நூலறிவுமுடைய புலவர் இயற்றிய தெய்வத்தன்மை வாய்ந்த சிறந்த (இராமாவதார) கதையின் மாண்பினைத் தெரிவித்தற்கே.

கு :—தெரிவிக்க என்பது தெரிக்க என விகாரப்பட்டு நின்றது. (6)

7. துறைய டுத்த விருத்தத் தொகைக்கவிக்
குறைய டுத்த செவிகளுக் கோதில்யாழ்
நறைய டுத்த வசுணநன் மாச்செவிப்
பறைய டுத்தது போலுமென் பாவரோ.

துறை அடுத்த விருத்தத் தொகைக் கவிக்கு
உறை அடுத்த செவிகளுக்கு ஓதில், யாழ்
நறை அடுத்த அசுண நல் மாச் செவிப்
பறை அடுத்தது போலும் என் பா. அரோ.

பொ :—அகமும் புறமும் ஆகிய பொருட் கூறுபாடுடைய பாட்டாகிய தொகைநூற்செய்யுட்களுக்கு இடமாகப் பொருந்திய (புலவர்) காதுகளில் என் பாடலைச் சொன்னுல், யாழிசையாகிய

தேன் பாய்கின்ற அசுணப்பறவையின் காதுகளில் பறையொலி அடுத்தது போலும்.

கு :—தொகைக் கவி என்றது பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் முதலிய ஆன்றோர் பாடல்களை. உறை—இடம். நறை—தேன். அசுணம் இசையறிவுடையதொரு விலங்கு என்பர் நச்சினார்க்கினியர். அது, பறையொலிபடின் இறப்பது. யாழிசை கேட்டு மகிழ்ந்த அசுணமா பறையொலிபட்டவாறே மாய்தல்போலச் சங்கத் தொகைநூற்பாடல்களைக் கேட்டுக் கேட்டு இன்புற்ற புலவர் என் பாடலைக் கேட்பின் மிக வருந்துவர் என்றவாறு. இனி, துறை அடுத்த விருத்தத் தொகைக் கவிக்கு உறையடுத்த செவிகளுக்கு என்பதற்கு அகமும் புறமும் ஆகிய பொருட்கூறுபாடுடைய பாட்டால் 4000 என்று தொகுக்கப்பட்ட தொகைநூற்கவிகளாகிய ஆழ்வார்பாசுரங்களுக்கு இடமாகப் பொருந்திய பெரியோர்காதுகளுக்கு என்று பொருள்கூறுதலும் ஆம். (7)

8. முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
உத்த மக்கவி கட்கொன் றுணர்த்துவன்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ.

முத்தமிழ்த் துறையின் முறை போகிய
உத்தமக் கவிகட்கு ஒன்று உணர்த்துவன் ;
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ ?

பொ :—இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ்க் கடலிலும் அடைவே சென்று கரைகண்ட சிறந்த பாவலர்களுக்கு ஒன்று தெரிவிப்பேன்; அஃது யாது? எனின், பித்தர் பேசியவையும் பேதையர் பேசியவையும் பத்தர் பேசியவையும் ஆராயப்படுவன அல்ல.

கு :—துறை - கடல். 'துறை முற்றிய துளங்கிருக்கை' (851) என்பது மதுரைக் காஞ்சி. எல்லை காணுதற்கரியவாதலின் முத்தமிழும் கடலாக உருவகிக்கப்பட்டன. முறைபோகிய-அடைவே கற்றுத் தேறிய. முறையாவது இயல் இசை நாடகம் என்னும் மூன்றனுள்ளும் இன்னநூல் கற்றபின் இன்னநூல் கற்க வேண்டும் என்னும் இயைபு. கேட்போர் மறாது கேட்டற்பொருட்டு

ஒன்று என்றார். பித்தர் - கலங்கிய மனத்தினர். பேதையர் - பகுத்தறிவற்றவர். பத்தர் - பரவசப்பட்டவர். பன்னுதல் - ஆராய்தல். பன்னப்பெறுபவோ என்பதில் ஓகாரம் எதிர்மறை. (8)

9. அறையு மாடரங் கும்மடப் பிள்ளைகள்
தறையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ
இறையு ஞானமி லாதவென் புன்கவி
முறையி னூலுணர்ந் தாரு முனிவரோ.

அறையும் ஆடு அரங்கும் மடப் பிள்ளைகள்
தறையில் கீறிடில், தச்சரும் காய்வரோ ?
இறையும் ஞானம் இலாத என் புன் கவி
முறையின் நூல் உணர்ந்தாரும் முனிவரோ !

பொ :—சிறுவர் சிறுமியர் வீட்டின் உறுப்பான உள் அறையும் நடன சாலையும் தறையிலே கீறினால் (அதுகண்டு, அவை சிற்ப நூல் முறைப்படி அமையவில்லையென்று ) சிற்பிகளும் முனியார்; அதுபோல முறைப்படி நூல்களை ஓதியுணர்ந்த புலவர்களும் சிறிதும் அறிவில்லாத என்னுடைய புல்லிய கவிகளை(க் கேட்டு, இவை செய்யுள் இலக்கணப்படி இயற்றப்படவில்லை என்று) முனியார்.

கு :—தச்சரும் உணர்ந்தாரும் என்பவற்றுள் உம்மை உயர்வு குறித்தது. காய்வரோ முனிவரோ என்பவற்றுள் ஓகாரம் எதிர் மறைப் பொருளுணர்த்திநின்றது. இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி தழுவியது. (9)

9 (a) எறிகட லுலகந் தன்னுள்
இன்றமிழ்ப் புலவர்க் கெல்லாம்
முறுவலுக் குரிய தாக
மொழிந்தனன் மொழிந்த என்சொற்
சிறுமையும் சிலையி ராமன்
கதைவழிச் செறித றன்னால்
அறிவுடை மாந்தர்க் கெல்லாம்
அமிழ்தமொத் திருக்கு மன்றே.

என்பது அவையடக்கப் பாடல்களுள் ஒன்றாகச் செந்தமிழ் மூன்றாந்தொகுதியின் 42-ஆம் பக்கத்துக் காணப்படுகிறது.

9 (b) புன்சொற்க ளேனும் புதல்வன் குதலைச்சொல் தந்தை
இன்சொற்க ளாகக் கொளலால் முனி யீங்குரைத்த
தென்சொற் றமிழும் வடசொற்றுறையும் தெரிந்தோர்
என்சொற்கள் பொல்லா தெனினும் இகழார்க ளன்றே.

என்பது 24 என்னும் குறியீடுள்ள சுவடியில் காணப்பட்டது.

## நூல்வரலாறு

**10.** தேவ பாடையி னிக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளு முந்திய
நாவி னுருரை யின்படி நான்றமிழ்ப்
பாவி னுலிது ணர்த்திய பண்பரோ.

தேவ பாடையின் இக்கதை செய்தவர்
மூவர், ஆன் அவர்தம்முளும் முந்திய
நாவினர் உரையின்படி நான் தமிழ்ப்
பாவினல் இது உணர்த்திய பண்பு. அரோ.

பொ :—வடமொழியில் இந்த இராம கதையைச் செய்தோர் மூவராவர். அந்த மூன்றுபேருள்ளும் முந்திய நாவீறுடைய வான்மீகிமுனிவர் சொல்லிய முறையே, யான் தமிழ்ப்பாடலால் இக்கதையை உணர்த்திய முறை.

கு :—வடமொழியில் இராம கதை செய்த மூவர், வான்மீகர் வசிட்டர் போதாயனர் என்பர். இவ்வாறன்றி, வான்மீகர் வசிட்டர் அகத்தியர் என்றும் வான்மீகர் வியாஸர் போதாயனர் என்றும், வான்மீகர், பாஸகவி, காளிதாசர் என்றும் பிறவாறும் கூறுவர். ஆன் அசைநிலை. முந்திய நாவினர் – முற்பட்ட நாவீறுடைய வான்மீகர். (10)

10 (a) கால்காட்ட வேகு நெறிக்கண் ணுடை யார்கண்முன்னே
கோல்காட்ட மெல்லக் குருடர்க்கு நடக்கலாமா
மால்காட்டு மின்சொல் முனிவன்வழி காட்டுவேத
நூல்காட்ட ராமன் கதைமேற்றமிழ் நூற்கலுற்றேன்.

என்பது 14 என்னும் குறியீடுள்ள சுவடியிற் கண்ட பாடல்.

### நூற்பெயரும் நூல் இயற்றிய இடமும்

**11.** நடையி னின்றுயர் நாயகன் தோற்றத்தி
னிடைநி கழ்ந்த இராமாவதாரப் பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே.

**நடையில் நின்று உயர் நாயகன் தோற்றத்தி**
**னிடை நிகழ்ந்த இராமாவதாரப் பேர்த்**
**தொடை நிரம்பிய தோம் அறு மாக்கதை,**
**சடையன் வெண்ணெய்நல்லூர்வயின் தந்தது ஏ.**

பொ :— ஒழுக்கநெறியின்கண் வழுவாது நின்றமையால் பெருமை எய்திய தலைமகனை இராமபிரானுடைய புகழிலே தோன்றிய இராமாவதாரம் என்னும் பெயரையுடைய தொடைகள் நிரம்பிய குற்றமற்ற பெரிய இக்கதையானது, சடையன்(என்னும் வள்ளல் வாழ்ந்த) திருவெண்ணெய்நல்லூரில் இயற்றித் தரப்பட்டது.

கு :—தோற்றம் - புகழ். (திருக்குறள். 272.) நிகழ்தல் - உண்டாதல்; தோன்றுதல். பேர் - பெயர். தொடை - எதுகைமோனை முதலிய செய்யுளுறுப்புக்கள்; செய்யுளும் ஆம். இராமாவதாரம் என்பது இந்நூற்பெயர். இது புறத்திரட்டாலும் 'இத்தலத்தில் இராமாவதாரமே' (சிறப்புப் பாயிரம்-19) என்று தொடங்கும் பாடலாலும் புலனும். சடையன் என்பார், இராமாவதார நூலை ஆக்கும்படி கம்பரைப் பாராட்டிப் பெருஞ்சிறப்பொடு புரந்த வள்ளலாவர். இவர், சரராமன், கண்ணன் என்றும் வழங்கப்படுவர், இவர் தமக்குச் செய்த உதவி குறித்துக் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர், இவ்வள்ளற்பெருமானை இந்நூலுள் பல இடங்களில் புகழ்ந்துள்ளனர் என்பர். அவை ஆங்காங்கு விளக்கப்படும். இங்கே குறிக்கப்பட்ட வெண்ணெய்நல்லூர், நடுநாட்டதன்று; சோழவளநாட்டில் பண்டு அப்பெயரால் வழங்கப்பட்டதோர் ஊர்; அவ்வூர்க்கு இப்போது அப்பெயர்வழக்கு இல்லை; கதிராமங்கலம் இரயில் நிலையத்துக்கு வடக்கே உள்ள மூப்பெருமான் திடல் என்பதும் அதைச் சார்ந்த இடங்களும் முன்பு வெண்ணெய்நல்லூர் என்று வழங்கப்பட்டன என்பர். (11)

---

# 1. ஆற்றுப் படலம்

[ஆற்றின் செய்தி பேசும்படலம் ஆற்றுப்படலமாகும். கோசல நாட்டை வளப்படுத்தும் சரயுநதியே இங்கு ஆறு என்று சுட்டப் பட்டது. சரயு இமயமலையிலுள்ள மானச மடுவினின்று பெருகி வருவது; இடையறாத நீர்வருவா யுடையது; பலநூறு கால் களாகப் பிரிந்து பாய்ந்து கோசலநாட்டின் விளைவை மிகுவிப்பது.

(1) சரயுநதியின்வற்றாதநீர்ப்பெருக்குக்குக்காரணமானமழை வளம் கூறப்புக்க ஆசிரியர், கோசலநாட்டு ஆடவர் தம்மனைவி யர்பாலன்றி வேறு மகளிர்பால் மனஞ்செலுத்தாத மாண்பினர்; மகளிர் தத்தம் நாயகர்பாலன்றி வேறு ஆடவர்பால் மனஞ் செலுத்தாத கற்பிற் சிறந்த காரிகையர் என்று அந்நாட்டு மழை வளத்துக்குக் காரணத்தை* முன்னே கூறிக்கொண்டு ஆற்றின் வரவு பேசத் தொடங்குகிறார். இது, இக்காவிய நாயகனாகிய இராமபிரானது பிறர்மனை நயவாத பேராண்மையினையும், இக்காவிய நாயகியும் கற்புக்கு அணிகலனும் ஆன பிராட்டியின் நிறையின் நீர்மையினையும் சுட்டி நின்று, இக்காவியம் நுவலும் சிறந்த பொருள்களுள் முன் எண்ணத்தக்கது இதுவே என்பதனை யும் உணர்த்தியவாறாயிற்று.

சூரிய வெப்பத்தால் உண்டாகிய நீராவி குளிர்ந்த காற்றால் தாக்கப்பட்டு மழை உண்டாகிறது என்பது விஞ்ஞான நூன் முடிவு. மேகம் கடல்நீரைப் பருகி மலையேறிச் சென்று மழை பெய்கிறது என்பது கவி மரபு.

மழை கடவுளது ஆணையால் நிகழ்வது; உலகமும் அதற்கு உறுதியாகிய அறம் பொருளின்பங்களும் நடத்தற்கு ஏதுவாயது; கெடுப்பதும் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே எடுப்பதும் ஆகிய இவையெல்லாம் வல்லது. இத்தகைப் பெருமை வாய்ந்த

---

*'' மழையின்றி மாநிலத்தார்க் கில்லை - மழையும்
தவமிலார் இல்வழி இல்லை. - தவமும்
அரசியல் இல்வழி இல்லை; அரசனும்
இல்வாழ்வார் இல்வழி இல்;''
'' ..........................................மாதரார்
அற்பில் நின்றன அறங்கள், அன்னவர்
கற்பில் நின்றன காலமாரியே ''
(நாட்டுப். 59)

மழை பொழியும் மேகத்தைக் கடவுளர்க்கும் வள்ளல்கட்கும் உவமை கூறுவது உண்டு.

கடவுட் கொள்கையுடையார், அக்கடவுளின் ஆணைவழி நிகழும் மேகத்தைக் கடவுளாகவும், மழையைக் கடவுளின் அருட் பெருக்காகவும் காண்பரன்றே! கெடுத்தலும் எடுத்தலும் வல்ல மேகத்தை அவைவல்ல கடவுளராகவே ஆசிரியர் காண்கின்றார். அக்காட்சியைப் பேசுவது ஆற்றுப்படலத்தின் இரண்டாம் செய்யுள். இக்கடவுட் காட்சி இப்படலத்தே பின்னும் நிகழ்கிறது. அதனை அங்கங்கே காணலாம்.

பொன்மலைமீது பெய்த மழையால் வெள்ளம் பெருகியது. அவ்வெள்ளம் மலைகளைப் பெயர்த்தும் மரங்களைப் பறித்தும் செடிகொடி முதலியவற்றை ஏந்தியும் செல்லும் நிலையைப் பேசப் புக்க ஆசிரியர் மனத்தில் அவர் பேசும் இராமகதையின் ஒரு பகுதி தோன்றுகிறது. அது குரங்குகள் கடலில் அணைகண்டதே. கடலில் அணைகட்டுதற்குக் குரங்குகள் மலையைப் பெயர்த்தும் மரங்களைப் பறித்தும் செடிகொடிகளை ஏந்தியும் சென்றநிலை வெள்ளத்தின் செலவுக்கு உவமமாய்க் கவியுருவில் தோன்றுகிறது.

கடலணைகண்டது இராமாயணகதை நிகழ்ச்சிகளுள் முக்கியமானதொரு செயலாகும். அஃதின்றேல் இராமபிரான் முதலியோர் இலங்கையெய்தல் இயலாது; இராவணவதமும் நிகழ்வதரிது. எனவே கடலணைகண்ட செய்தி கூறியது, இராவணவதத்துக்கும் பிராட்டி சிறைமீட்சிக்கும் ஒரு தோற்றுவாய்போல் அமைந்தது.

இவ்வாறு இராமகதை நிகழ்ச்சிமட்டுமின்றிக் கண்ணபிரானுடைய பாலப்பருவ விளையாட்டுக்களும் ஆசிரியர் உள்ளத்தே நிலைத்துள்ளன. சரயு வெள்ளம் முல்லை நிலத்திற்புக்கு அங்குள்ள பொருள்களையெல்லாம் வாரிக்கொண்டது என்று கூறக்கருதிய ஆசிரியர்க்குச் சரயுவெள்ளம் கண்ணபிரானாகவே தோன்றுகிறது. இக்காட்சியைச் சித்திரிப்பது, 'செறிநறுந் தயிரும்' என்று தொடங்கும் பதினைந்தாம் பாடல்.

இப்படி இப்படலத்தின் முதலிலும் இடையிலும் இக்காப்பிய முழுவதிலும் ஆசிரியர் கண்ட கடவுட்காட்சி இப்படலத்தின் முடிவிலும் தோன்றுகிறது. அக்காட்சியைப் பேசுவது 19-ஆம் பாடல். இனி இப்படல நுவல்பொருட் சுருக்கம் வருமாறு:—

**(2) திருநீறணிந்த சிவபெருமானைப் போல் எழுந்த வெள்ளிய மேகமானது, கடலிற்படிந்து நீரையுண்டு கருத்துத் திருமாலைப் போலமீண்டது. (3) பொன்மலையின் உச்சியிற்படிந்து பரவியது.**

பொன்மலை மீது மேகம் பரவிய தோற்றம், 'நம் மாமனாகிய மலையரசன் சூரியனால் வெப்பம் அடைந்தான்; அவ்வெம்மை தணிய நீராட்டுவிப்போம்' என்று, கடல் அம்மலைமேல் பரவி நின்ற காட்சிபோன்றிருந்தது. (4) தமக்கென ஒன்றும் வேண்டாராய்த் தம்பால் உள்ளவற்றையெல்லாம் நினைந்து நினைந்து தரும் வள்ளல்களைப் போலப் பாட்டம் பாட்டமாக மேகம் மழையைப் பெய்தது. மழைத்தாரை வெள்ளிவிழுதுபோலப் பொன்மலை மீது விழுந்தது. அது, வானுலகு, பொன்மலையைக்கண்டு அது பொன்னுடாகிய தன்னிடத்திருப்பதே தகுமென்று அதை எடுத்துத் தன்னிடத்தாக்கிக் கொள்ளும் பொருட்டு வெள்ளித் தொடர்களை விழ்த்ததுபோல் இருந்தது.

(5) இவ்வாறு பெய்த மழையால் செங்கோல்வேந்தன் புகழ்போலவும், மெய்யறிவுடைய அந்தணர்க்கீந்தகொடைப்பயன் போலவும் வெள்ளம் பெருகியது. (6) குறிஞ்சிநிலமாகிய இமயத்தில் எழுந்த வெள்ளமானது, அம்மலையின் தலையும் மார்பும் தாளும் தழுவி, அங்குள்ள பொருள்களையெல்லாம் கொண்டு விலகிவிரைதலால் விலைமாதரை ஒத்தது. (7) அம்மலையிலுள்ள மணியும் பொன்னும் மயிற்றோகையும் அகிலும் சந்தனமும் ஆனைக்கொம்பும் பிறவும் கொண்டு நடத்தலால் வணிகரை ஒத்தது. (8) பலநிறப்பூக்களும் மகரந்தங்களும் தேனும் பொற்பொடியும் ஆனைமதமும் கலக்கப்பெற்று வானவில்லை ஒத்தது. (9) மலைகளை எடுத்தும் மரங்களைப் பறித்தும் இலை முதலியவற்றை யேந்தியும் நடத்தலால் கடலணைகண்ட குரங்குவெள்ளம் போன்றது. (10) ஈக்களும் வண்டுகளும் மொய்க்க அளவுகடந்து பெருகிய களிப்போடு தெளிவின்றித் தேக்கெறிந்து வருதலால் கட்குடியரை நிகர்த்தது. (11) யானைகளையும் பல மாக்களையும் வரிசைப்படக்கொண்டு செல்லுதலாலும் கொடிகள் தோன்றவந்து தங்குதலாலும் கடலோடு போர்க்குப்புறப்பட்டதுபோல் இருந்தது.

(12—14) சூரியகுலத்துதித்த வேந்தர்களுடைய ஒழுகலாறு போல இடையறாத நீர்ப்பெருக்குடையதாய் உலகத்துக்கு நலன் விளைத்து, உயிர்க்கெல்லாம் தாயின் தனம் போலப் பயன் ஊட்டி நின்ற சரயுநதியானது, குறிஞ்சிநிலத்தினின்று தான் வாரிக்கொண்டு வந்த பொருள்களுடன் அந்நிலத்து மகளிர் இடித்து வைத்த நானப்பொடியும் குங்குமமும் கோட்டம் ஏலம் சந்தனம் சிந்தூரம் நரந்தம் நாகம் பச்சிலை புனுகு முதலிய நறுமணங்கமழும் பொருள்களும் தேனும் கொண்டு, பாலைநிலத்தையடைந்து அதைக் குளிர்வித்து அந்நிலமக்கள், அம்புமாரியாற்கலங்கியோடும்படி அலைத்து அவர்களுடைய கணைகளையும், வில்லையும் வாரிக்கொண்டு செல்லும் தன்மையால் வெற்றிவேந்தர் படை எழுந்து

சென்றதை ஒத்தது; (15) முல்லைநிலத்து ஆயர்பாடியிற்புக்குப் பாற்குடங்களையும் தயிர்க்குடங்களையும் உருட்டி, வெண்ணெயும் நெய்யும் வாரி விழுங்கிக் குருந்தமரத்தையும் மருதமரத்தையும் சாய்த்து, ஆய்ச்சியர்வளைகளையும் துகில்களையும் கவர்ந்து சென்று கண்ணபிரானையும் ஒத்தது; (16) மதயானைபோல மருத நிலத்தையடைந்தது.

மழைபெய்து பெருவெள்ளமெடுத்தால் மேடு பள்ளமாவதும் பள்ளம் மேடாவதும் இயல்புதானே! (17—18) அம்முறையில் சரயுநதிப்பெருக்கால் முல்லை குறிஞ்சியாயிற்று, மருதம் முல்லை யாயிற்று, நெய்தல் மருதமாயிற்று. உயிர்களைத் தம் கதிமாறிப் பிறக்கச்செய்யும் வினைபோல ஒருநிலப் பொருளை வேற்று நிலத்தில் உய்த்துச் சென்ற வெள்ளமானது, பறையறைந்து குழுமிய மள்ளர்களால், சரயுநதியினின்று பல கால்வாய்களிற் செலுத்தப் பட்டு ஒரு குலத்திலிருந்துபிரிந்த கிளைபோலப் பிரிந்தது.

(19—20) இமயமலையிற் பிறந்து கடலளவும் சென்று பரவிய வெள்ளம், தொடக்கத்தில் சரயு என்ற பெயருடன் ஒன்ருக நடப் பினும், முதற்கண் ஒன்ருய் நின்ற பரம்பொருள் பின் பல்வேறு சமயநூல்களால் பலபடப் பேசப்படுவதுபோல், பெருங்கால்க ளாகவும் கிளைக்கால்களாகவும் பிரிந்தது. சோலையிலும் சண்பகக் காடுகளிலும் பொய்கையிலும், குளங்களிலும் கமுகவனத்திலும் வயல்களிலும் உடம்புதோறும் உயிர் போலப் பரவிநின்றது.]

# 1. ஆற்றுப் படலம்

## நுவல்பொருள் உரைத்தல்

**12.** ஆச லம்புரி யைம்பொறி வாளியும்
காச லம்பு முலையவர் கண்ணெனும்
பூச லம்பு நெறியின் புறஞ்செலாக்
கோச லம்புனை யாற்றணி கூறுவாம்.

ஆசு அலம் புரி ஐம்பொறி வாளியும்
காசு அலம்பு முலையவர் கண் எனும்
பூசல் அம்பும், நெறியின் புறம் செலாக்
கோசலம் புனை ஆற்று அணி கூறுவாம்.

பொ :—குற்றத்தையும் துன்பத்தையும் விளைக்கின்ற (ஆடவருடைய) ஐம்பொறிகளாகிய அம்பும், பொற்காசு மாலைகள் கிடந்து ஒலிக்கின்ற தனங்களையுடைய மகளிரின் கண்களென்று சொல்லப்படுகிற போர்வாளியும், தீநெறிக்கட்செல்லாத கோசல நாட்டை அழகுறுத்தும் (சரயுவாகிய) ஆற்றின் பெருமையைப் பேசுவோம்.

கு :—ஆசு அலம் புரி ஐம்பொறி என்றது ஐம்பொறிகளின் இயல்புகூறியவாறு. அம்புபோலக் குறித்த இலக்கிற் பாய்தலால், 'பொறி வாளி', 'கண் எனும் பூசல் அம்பு' என உருவகவாய்பாட்டாற் கூறினர். நோய் விளைக்கவல்லதும் பிறவுறுப்புக்களினும் சிறந்ததும் கண்ணுதலின் அப்பொறி ஒன்றேகொண்டு கூறினர். 'காசலம்பு முலையவர் கண் எனும் பூசல் அம்பு' என்று பின்னே கூறினமையால், முன்னே கூறிய ஐம்பொறிவாளி ஆடவரது என்பது பெறப்பட்டது. நெறியின் புறம் – தீநெறி. 'கோசலம் புனை யாற்றணி' என்பதற்குக் 'கோசல நாட்டணிந்த (மாலை போல்வதாகிய சரயு என்னும்) ஆற்றின் பெருமை' என்று பொருள் கூறலும் ஆம்.

இதனால், கோசலநாட்டு ஆடவர் இல்லறநெறி நின்று தத்தம் மனைவியர்பால் ஐம்புலவின்பமும் ஆரத்துய்க்கும் பெருமாண்பினர் என்பதும், அந்நாட்டு மகளிர், தத்தம் நாயகரையன்றி வேறு ஆடவரை நோக்காத கற்பிற் சிறந்த காரிகையர் என்பதும் கூறி, அதுகொண்டு, இக்காவிய நாயகனான இராமபிரானுடைய பிறன்

மனைநோக்காத பேராண்மையினையும் இக்காவிய நாயகியான பிராட்டியின் கொண்டானையல்லால் அறியாத நிறையின் நீர்மையினையும் புலப்படுத்தி, அதுவே இக்காவியம் நுவல்பொருள்களுள் தலையாயது என்பதும் பெறவைத்தவாறு காண்க. அன்றியும் மேற்கூறிய ஆடவர்மாண்பும் மகளிர்கற்பும் நிலநலத்தாலும் நீர்நலத்தாலும் பிறவியிலே இயல்பாய் விளைந்தன என நாடும் யாறும் ஆகியவற்றின் பெருமையும் ஒருங்கு புலப்படவைத்தவாறும் நோக்கத்தகும்.

20, 24 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இச்செய்யுள், நான்காம் அடியுள், கோசலம் புனல் நாடது கூறுவாம், என்னும் பாடத்துடன், நாட்டுப்படலத்தின் முதற்பாடலாக வரையப் பட்டுளது. (1)

### மேகம் கடலிற்படிந்து நீருண்டு மீண்டமை

**13.** நீற ணிந்த கடவு ணிறத்தவான்
ஆற ணிந்துசென் றார்கலி மேய்ந்தகிற்
சேற ணிந்த முலைத்திரு மங்கைதன்
வீற ணிந்தவன் மேனியின் மீண்டதே.

நீறு அணிந்த கடவுள் நிறத்த வான்,
ஆறு அணிந்து சென்று, ஆர்கலி மேய்ந்து, அகில்
சேறு அணிந்த முலைத் திருமங்கைதன்
வீறு அணிந்தவன் மேனியின் மீண்டதே.

பொ :—திருநீறு பூசிய சிவபெருமானுடைய நிறம்போன்ற வெண்மை நிறமுடைய மேகமானது, (கடலை அடைதற்குரிய வான) வழியை அழகுபடுத்திக்கொண்டு சென்று, கடலில் நீரைப்பருகி, அகிற்குழம்பணிந்த தனங்களையுடைய திருமங்கையினைத் தனக்குப் பெருமையாக (வலத்திருமார்பில்) அணிந்த திருமாலின் திருமேனிபோலக் கருமைநிறம் வாய்ந்து மீண்டது. (2)

### மேகம் மேருமலைமேல் கவிந்து பரவிய தோற்றம்

**14.** பம்பி மேகம் பரந்தது பானுவால்
நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினான்
அம்பி னூட்டுது மென்றகன் குன்றின்மேல்
இம்பர் வாரி யெழுந்தது போன்றதே.

பம்பி மேகம் பரந்தது, 'பானுவால்
நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினன்;
அம்பின் ஆட்டுதும்' என்று, அகன் குன்றின்மேல்
இம்பர் வாரி, எழுந்தது போன்றதே.

பொ ;—அகன்ற மேருமலைமீது மேகம் செறிந்து பரந்தது, (நம் மால்) விரும்பப்படத்தக்க மாமனாகிய மலையரசன் சூரியனால் வெப்பமடைந்தான்; (அவ்வெப்பம் நீங்க) நீராட்டுவோம் என்று இவ்வுலகிலுள்ள கடல் அம்மலைமேல் எழுந்தது போலும்.

கு :—நம்பனாகிய மாதுலன் என்க. நம்பன்-விரும்பத்தக்கான். நம்பு – விருப்பம். குன்று என்றது இமயமலையை. ஆறுகள் மலைகளினின்று பிறத்தலால் அவற்றை மலைகளின் பெண்மக்க ளாகவும், அவை சென்று சேரும் கடலினை அவ்வாறுகளுக்கு நாயகனாகவும் கூறும் வழக்கால் இமயமலை கடலுக்கு மாம னாயிற்று. 'அகன் குன்றின்மேல்' என்பதனை, முன்னும் கூட்டி, 'அகன் குன்றின்மேல் மேகம் பம்பிப் பரந்தது' என்க. குளிர்ந்த இமயமலை சூரியனால் தன் இயல்புமாறி வெம்மையடைந்ததனைக் குளிர்விக்கவேண்டி மேகம் பரந்தது என்று கூறியது, வெப்பத் தால் வரண்ட இடத்தில் நீராவி திரண்டு மழை பொழியும் எனும் தற்கால விஞ்ஞானமுறைக்கு ஏற்றதாய் அமைந்தமை யும் காணலாம். 'நம்பன் மாதுலன்' என்பதற்குச் சிவபிரா னுக்கு மாமனாகிய மலையரசன்' என்று பொருள்கொண்டாரும் உண்டு. (3)

### மழைத்தாரையின் தோற்றம்

15. புள்ளி மால்வரை பொன்னென நோக்கிவான்
வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள்
உள்ளி யுள்ளவெல் லாமுவந் தீயுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே.

'புள்ளி மால்வரை பொன்' என நோக்கி, வான்
வெள்ளி வீழ் இடை வீழ்த்தெனத் தாரைகள்
உள்ளி உள்ள எல்லாம் உவந்து ஈயும் அவ்
வள்ளியோரின் வழங்கின மேகம் ஏ.

பொ :—வானுலகு. மதிக்கத்தக்க பெரிய இமயமலையைப் பொன்மலை என்று நினைந்து, (அதனைத் தன்னிடத்து ஆக்கிக்

கொள்ளக்கருதி) வெள்ளிய சங்கிலித் தொடரை வீழ்த்தினாற் போலவும், (தம்மிடம்) உள்ளவற்றையெல்லாம் நினைந்து நினைந்து மகிழ்ந்து கொடுக்கும் கொடையாளரைப் போலவும் மேகங்கள் தாரைகளைச் சொரிந்தன.

கு :—புள்ளி - மதிப்பு. மால்வரை என்றது இமயமலையினை. அதனைப் பொன்மலை மேருமலை என்று கூறுவது கவிமரபு. வீழ் - சங்கிலித்தொடர். 'புள்ளிமால்வரை பொன்னுலகிடத் தெடுத்துய்த்தல், உள்ளி வான்விடும்வடமெனத்தாரைகள் ஒழுக' (நாட்டுப். 5) என்னும் தேம்பாவணிச் செய்யுள், இப்பாடலின் விளக்கமாய் அமைந்துளது. மழைத்தாரைக்கு வெள்ளிக் கோல்களை உவமை கூறுதலும் உண்டு. 'வெள்ளி வெண் கோனிரைத் தனபோற்கொழுந்தாரைகள்'(33) என்பது சீவகசிந்தாமணி. (4)

### வெள்ளம்பெருகிய நிலை

**16.** மான நேர்ந்தற நோக்கி மனுநெறி
போன தண்குடை வேந்தன் புகழெனை
ஞான முன்னிய நான்மறை யாளர்கைத்
தான மென்னத் தழைத்தது நீத்தமே.

**மானம் நேர்ந்து அறம் நோக்கி மனுநெறி**
**போன தண் குடை வேந்தன் புகழ் என**
**ஞானம் முன்னிய நான்மறையாளர் கைத்**
**தானம் என்னத் தழைத்தது நீத்தமே.**

பொ :—மானம் உடையவனாய், அறநெறி வழுவாது குறிக் கொண்டு, மனுதருமநூல் விதித்த நீதிநெறியிலே ஒழுகிய குளிர்ந்த குடையையுடைய அரசன் புகழ்போலவும், ஞானநெறியின்கண் ஒழுகிய நான்கு வேதமும் வல்ல அந்தணர்கையிலே கொடுத்த தானப் பயன்போலவும் வெள்ளம் மிக்கது.

கு :—மானமாவது எஞ்ஞான்றும் தம்நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர்வாழாமையும் ஆம். நேர்தல் - பொருந்துதல்; உடையனாதல், ஞானம் - ஞானநெறி. அது, பிறப்பறுக்கலுறுவார் மேற்கொள்ளும் கருமம், ஞானம், பத்தி, பிரபத்தி என்னும் நால்வகை நெறிகளுள் ஒன்று. முன்னு தல் - பொருந்துதல்; ஒழுகுதல். தானம் - தானப்பயன். நீத்தம் - வெள்ளம். தானப்பொருள் சிறிதாயினும் பெறுவோர் தகுதியால்

அதனுல் விளையும் பயன் பெரிதாகும். (தானப்பொருள் பெரிதாயின் விளையும் பயன்கூறவேண்டா:) ''உதவி வரைத்தன் றுதவி யுதவி - செயப்பட்டார் சால்பின் வரைத்து'' (105) என்னும் திருக்குறளும், ''உறக்கும் துணையதோர் ஆலம்வித் தீண்டி இறப்ப நிழற் பயந்தா அங்கு - அறப்பயனும், தான் சிறிதாயினும் தக்கார்கைப் பட்டக்கால், வான் சிறிதாப் போர்த்துவிடும்'' (38) என்னும் நாலடிச் செய்யுளும், இங்கே நோக்கத்தகும், 'வெள்ளம் நான்மறையாளர்' கையிலே நல்கிய தானப்பயன் போல மிக்கது' என்ற ஆசிரியர், பின், மாவலியிடம் தானம் பெற்ற வாமனன் மூன்றடியளக்க ஓங்கி வளர்ந்த நிலைக்கு, 'வியந்தவர் வெருக்கொள விசும்பின் ஓங்கினுன் - உயர்ந்தவர்க்கு உதவிய உதவியொப்பவே' (வேள்விப்படலம் 35) என்று இத்தானப்பயனையே உவமை கூறுதலும் காண்க. (5)

### வரையினின்றிழியும் விரைபுனல் தோற்றம் 17-22
### வெள்ளம் விலைமாதரை யொத்தமை

**17.** தலையு மாகமுந் தாளுந் தழீஇயதன்
நிலைநி லாதிறை நின்றது போலவே
மலையி னுள்ளவெ லாங்கொண்டு மண்டலால்
விலையின் மாதரை யொத்தது வெள்ளமே.

**தலையும் ஆகமும் தாளும் தழீஇ, அதன்**
**நிலை நிலாது, இறை நின்றது போலவே**
**மலையின் உள்ள எலாம் கொண்டு, மண்டலால்**
**விலையின் மாதரை ஒத்தது, வெள்ளமே.**

பொ :—தலையும் ஆகமும் தாளும் தழுவி, மலையின் உள்ள எல்லாம் கொண்டு, அதன் நிலை நிலாது இறை நின்றதுபோல மண்டலால், வெள்ளம், விலைமாதரை ஒத்தது.

கு :—விலைமாதர்மேற் கூறுங்கால், '(தம்மைக் காதலிப்பார்) தலையும் மார்பும் காலும் தழுவி, (அவர்பக்கல்) மலைபோலக் குவிந்திருந்த பெரும்பொருள் முழுவதையும் பறித்துக்கொண்டு, கொண்டபொருளளவும் அவர்பால் தங்காது, சிறிது தங்கினது போலக்காட்டி விலகி விரைதலால்' எனவும், வெள்ளத்தின்மேற் கூறுங்கால், 'அம்மலையின், சிகரமும் தாழ்வரையின் மேற்பகுதியும், தாழ்வரையும் ஆகிய இடங்களில் பரவி, அம்மலையின்கண்

உள்ள பொருள்களையெல்லாம் வாரிக்கொண்டு, வாரிக்கொண்ட அப்பொருள்களினளவும் அதன்கண் தங்காது, சிறிது நின்றது போலத்(தோற்றுவித்து) விலகி விரைதலால்' எனவும் பொருள் உரைக்க. தழீஇ - தழுவி. இறை – சிறிது. மண்டல் - விரைதல். விலையின்மாதர் - விலைமாதர்; வேசையர். இச்செய்யுள், செம்மொழிச் சிலேடை பற்றிவந்த உவமையணி தழுவியது. பின் 21 முடியவுள்ள செய்யுட்களும் இவ்வணிதழுவியவையே. (6)

## வெள்ளம் வணிகரை ஒத்தமை

**18.** மணியும் பொன்னு மயிற்றழைப் பீலியும்
அணியு மானைவெண் கோடு மகிலுந்தன்
இணையி லாரமு மின்னகொண் டேகலான்
வணிக மாக்களை யொத்தது வாரியே.

மணியும் பொன்னும் மயில் தழைப் பீலியும்
அணியும் ஆனை வெண் கோடும் அகிலும் தன்
இணை இல் ஆரமும் இன்ன கொண்டு ஏகலான்
வணிக் மாக்களை ஒத்தது வாரியே.

பொ :—முத்து, முதலிய இரத்தினங்களும் பொன்னும் மயிற்றோகையாகிய பீலியும் வரிசையாகக் குவிக்கப்பட்ட வெள்ளிய ஆனைத்தந்தமும் அகிற்கட்டைகளும் ஒப்பில்லாத சந்தனக்கட்டைகளும் ஆகியவற்றையும் இவைபோல்வனவாகிய பிறபொருள்களையும் நிரம்பக் கொண்டு செல்லுதலால், வெள்ளம் வணிகரை ஒத்தது.

கு :—மயிற்றழைப்பீலி – மயிற்றோகையாகிய பீலி; இருபெயரொட்டு. ஆரம் - சந்தனமரம், இன்ன - இவைபோல்வன. (7)

## வெள்ளம் வானவில்லை ஒத்தமை

**19.** பூநி ரைத்துமென் றாது பொருந்தியும்
தேன ளாவியுஞ் செம்பொன் விராவியும்
ஆனை மாமத வாற்றொ டளாவியும்
வான வில்லை நிகர்த்தது வாரியே.

பூ நிரைத்தும் மென் தாது பொருந்தியும்
தேன் அளாவியும் செம்பொன் விராவியும்
ஆனை மா மத ஆற்றொடு அளாவியும்
வான வில்லை நிகர்த்தது வாரியே.

பொ :—(பலநிறப்) பூக்களைப் பரப்பியும், மெல்லிய மகரந்தங்களோடு கூடியும், தேன் கலக்கப்பெற்றும், பொற்பொடிகள் கலக்கப்பெற்றும், ஆறுபோற் பெருகும் ஆனைமதத்தொடு கூடியும், (பல நிறம்தோன்ற நீண்டு வளைந்து சென்றமையால்) வெள்ளம் வானவில்லை யொத்து விளங்கியது.

கு :—பலவகைப் பூக்களும் மகரந்தமும் தேனும் பொன்னும் ஆனைமதமும் கலந்தமையால், பலவகை நிறம் வாய்ந்து வளைந்து நீண்ட ஆற்றுக்குப் பலவகை நிறத்தொடு வளைந்து நீண்டுதோன்றும் வானவில் உவமையாயிற்று. (8)

### மழைவெள்ளம் கடலணைகண்ட கவிவெள்ளம் ஒத்தமை

20. மலையெ டுத்து மரங்கள் பறித்துமா
டிலைமு தற்பொருள் யாவையு மேந்தலான்
அலைக டற்றலை யன்றணை வேண்டிய
நிலையு டைக்கவி நீத்தமந் நீத்தமே.

மலை எடுத்து, மரங்கள் பறித்து, மாடு
இலை முதல் பொருள் யாவையும் ஏந்தலான்,
அலை கடல் தலை, அன்று அணை வேண்டிய
நிலை உடைக் கவி நீத்தம் அ நீத்தமே.

பொ :—மலையை எடுத்து, மரங்களை வேரோடுபிடுங்கி, இருபக்கங்களிலும் இலைமுதலிய எல்லாப் பொருள்களையும் ஏந்தி வருவதால், அந்த மழைவெள்ளம், அக்காலத்து, நிலைபெயர்தலையுடைய கடலில் அணைகட்டவிரும்பிய நிலையுடைய குரங்கு வெள்ளத்தை ஒத்தது.

கு :—மலைஎடுத்தலும் மரங்கள் பறித்தலும் இலைமுதற்பொருள் யாவையும் ஏந்தலும் மழைவெள்ளத்துக்கும் கவிவெள்ளத்துக்கும் பொதுவான செயல்கள். அலைதல் – நிலைபெயர்தல். கடற்றலை – கடலில். கவி - குரங்கு. நீத்தம் - வெள்ளம். (9)

### வெள்ளம் கட்குடியரை ஒத்தமை

21. ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்
தூக்க மேமிகுந் துட்டெளி வின்றியே
தேக்கெ றிந்து வருதலிற் றீம்புனல்
வாக்கு தேனுகர் மாக்களை மானுமே.

ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பு இகந்து
ஊக்கமே மிகுந்து உள் தெளிவு இன்றி ஏ
தேக்கு எறிந்து வருதலில் தீம் புனல்
வாக்கு தேன் நுகர் மாக்களை மானும் ஏ.

பொ :—ஈக்களும் வண்டும் மொய்க்க, எல்லைகடந்து ஊக்கம் மிகுந்து உள் தெளிவின்றித் தேக்கெறிந்துவருதலால் இனிய நீர்ப் பெருக்கு, வார்க்கப்படுகிற கள்ளைக்குடிக்கின்ற மாந்தரை ஒத்தது.

கு :—வெள்ளத்தின்மேற் சொல்லுங்கால் (அதில் தேனும் யானைமதமும் கலந்திருத்தலால் அவற்றை யுண்ணும் பொருட்டு) 'ஈக்களும் வண்டும் மொய்க்கக் கரையைக் கடந்து, வலிமைமிக்குக் கீழ்நீரும் கலங்கி, தேக்கமரங்களை முறித்துக்கொண்டு வருதலால்' எனவும், கட்குடியர்மேற் கூறுங்கால், (அவர்கள் குடித்த கள் கடைவாய்வழி யொழுகுதலால் அதனை உண்ணும் பொருட்டு, 'ஈக்களும் வண்டும் மொய்ப்ப ஒழுக்கநெறிகடந்து, மகிழ்ச்சிமிக்கு, மனங்கலங்கி, ஏப்பமிட்டுக்கொண்டு வருதலால்' எனவும் உரைக்க. வரம்பு - 1 கரை, 2 ஒழுக்கநெறி. ஊக்கம் - 1 வலிமை, 2 மகிழ்ச்சி. தேக்கு - 1 தேக்குமரம், 2 ஏப்பம்.

இச்செய்யுள், பெரிய திருமொழி 1, 1, 10-ஆம் பாட்டுள் 'வண்டறை மாநீர்' என்ற பகுதியில் பெரியவாச்சான் பிள்ளை யால் மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ளது. (10)

### வெள்ளம் போர்ப்படை போன்றமை

22. பணைமு கக்களி யானைபன் மாக்களோ
டணிவ குத்தென வீர்த்திரைத் தார்த்தலின்
மணியு டைக்கொடி தோன்றவுந் தூன்றலாற்
புணரி மேற்பொரப் போவது போன்றதே.

பணை முகக் களி யானை பல் மாக்களோடு
அணி வகுத்தென ஈர்த்து, இரைத்து, ஆர்த்தலின்,
மணி உடைக் கொடி தோன்ற வந்து ஊன்றலால்,
புணரிமேல் பொரப் போவது போன்றது ஏ.

பொ :—பருத்த முகமும் செருக்கும் உடைய யானைகளைப் பல வாகிய மாக்களோடு படைவகுத்தாற்போல இழுத்துக்கொண்டு மிக ஆரவாரித்தலாலும், அழகிய கொடிகள் தோன்ற வந்து ஊன்றுதலாலும் (வெள்ளம்) கடலின்மேற் போர்செய்தற்குப் போவது போன்றது.

கு :—போர்செய்யச் செல்வார் யானைப்படையும் குதிரைப் படையும் (முதலியவை) கொண்டு அணிவகுத்து ஆரவாரித்துச் சென்று அழகிய கொடிகள் தோன்ற நாட்டிப் பொருதல் போல, வெள்ளமும் யானைகளையும் பலவிலங்கினங்களையும் படைவகுத் தாற்போல இழுத்துக்கொண்டு பேரொலியோடு, அழகியபசுங் கொடிகள் தோன்ற வந்து, (கரைகளைக்) குத்துதலால் போர் செய்யச் செல்வார் செயலுடைத்தாயிற்று. வெள்ளம் என்னும் எழுவாய் அதிகாரத்தால் வருவித்துரைக்கப்பட்டது. பணை - பருமை. களி - செருக்கு. மாக்கள்–1. குதிரைகள், 2. விலங்குகள். ஊன்றல் - 1. நடுதல். 2 குத்துதல். புணரி - கடல். பொர - போர் செய்ய. (11)

## சரயுவருணனை 23–31

### சரயுவின் பெருமை

23. இரவி தன்குலத் தெண்ணில்பல் வேந்தர்தம்
பரவு நல்லொழுக் கின்படி பூண்டது
சரயு வென்பது தாய்முலை யன்னதிவ்
வுரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம்.

இரவி தன் குலத்து எண் இல் பல் வேந்தர் தம்
பரவும் நல் ஒழுக்கின் படி பூண்டது,
சரயு என்பது தாய்முலை அன்னது, இவ்
உரவு நீர் நிலத்து ஓங்கும் உயிர்க்கு எலாம்.

பொ :—சரயு என்பது, சூரியகுலத்துத் தோன்றிய எண் இறந்த பல அரசருடைய போற்றுதற்குரிய நல்லொழுக்கத்தின்

(இடையருத்) தன்மையையுடையது; கடல் சூழ்ந்த நிலவுலகத்தில் உள்ள உயிர்களுக்கெல்லாம் தாய்முலைப்பால் போன்றது.

கு :—இரவி - சூரியன். தன் தம் என்பவை சாரியை. பரவுதல்—போற்றுதல்; புகழ்தல். சூரியகுலவேந்தர்தம் இடையறவுபடாத ஒழுக்கநெறிபோலச் சரயுவும் இடையறவுபடாத நீர்ப்பெருக்குடையது என்றவாறு. இதனால், சூரியகுலத்திற் பிறந்த பல அரசர்களுள் ஒவ்வொருவரும் நீங்காத ஒழுக்கமுடையராயினாற்போலச் சரயுவினின்று பிரியும் பலகால்களுள் ஒவ்வொன்றும் வற்றாத நீர்ப்பெருக்குடையவாயின என்பதும் பெறப்படும். (12)

### சரயுநீர்ப் பெருக்கில் நறுமணம் விரவுதல்

24. கொடிச்சிய ரிடித்த சுண்ணங்
★ குங்குமங் கொட்ட மேலம்
நடுக்குறு சந்தம் சிந்தூ
ரத்தொடு நரந்த நாகம்
கடுக்கையார் வேங்கை கோங்கு
பச்சிலை கண்டில் வெண்ணெய்
அடுக்கலி னடுத்த தீந்தே
னகிலொடு நாறு மன்றே.

கொடிச்சியர் இடித்த சுண்ணம்,
குங்குமம், கொட்டம், ஏலம்,
நடுக்கு உறு சந்தம், சிந்தூ
ரத்தொடு, நரந்தம், நாகம்,
கடுக்கை, ஆர், வேங்கை, கோங்கு,
பச்சிலை, கண்டில்வெண்ணெய்,
அடுக்கலின் அடுத்த தீம் தேன்,
அகிலொடு நாறும் அன்று ஏ.

பொ :—(சரயுவெள்ளம்), குறிஞ்சிநிலமகளிர் இடித்த வாசனைப் பொடியும், குங்குமமும் கொட்டமும் ஏலமும் குளிர்ந்த சந்தனமும் சிந்தூரமும் நரந்தமும் நாகமும், கொன்றையும் ஆத்தியும் வேங்கையும் கோங்கும் பச்சிலையும் கண்டில்வெண்ணெயும் மலைத்தேனும் அகிலும் கமழும்.

கு :—சிந்தூரம் - வெட்சி. நரந்தம் - கஸ்தூரி. நாகம் - புன்னை கடுக்கை - கொன்றை. ஆர் - ஆத்தி. கண்டில் வெண்ணெய் - ஒருவகைவாசனைப்பொருள்; புனுகென்றும் பெருஞ்சீரகமென்றும் கூறுவர். அடுக்கல் - மலை. தீம் தேன் - இனியதேன். சரயுவெள்ளம் என்பது அதிகாரத்தால் வருவித்து உரைக்கப்பட்டது. பின் 29-ஆம் பாடல்வரை சரய்வெள்ளம் என்னும் எழுவாய் வருவித்துரைக்க. (13)

**வைய மன்னர்தம் வான்படைபோல வெய்ய பாலையிற் சரயுநீர் விரைதல்**

**25.** எயினர்வாழ் சீறூ ரப்பு
மாரியி னிரியல் போக்கி
வயின்வயின் எயிற்றி மார்கள்
வயிறலைத் தோட வோடி
அயின்முகக் கணையும் வில்லும்
வாரிக்கொண் டலைக்கு நீராற்
செயிர்தரும் கொற்ற மன்னர்
சேனையை மானு மன்றே.

எயினர் வாழ் சீறூர் அப்பு
மாரியின் இரியல் போக்கி,
வயின் வயின் எயிற்றிமார்கள்
வயிறு அலைத்து ஓட ஓடி,
அயில் முகக் கணையும் வில்லும்,
வாரிக்கொண்டு, அலைக்கும் நீரால்,
செயிர் தரும் கொற்ற மன்னர்
சேனையை மானும் அன்று ஏ.

பொ :—எயினர் வாழ்கின்ற சிறிய ஊரினை அம்பு மழையால் அஞ்சியோடச்செய்து, இடந்தோறும் இடந்தோறும் எயிற்றியர் வயிற்றில் அடித்துக்கொண்டு ஓட ஓடி, கூரிய முனையுள்ள அம்பும் வில்லும் ஆகியவற்றை அள்ளிக்கொண்டு அலைக்கும் நீரால், சரயு வெள்ளம், போரை மேற்கொண்ட அரசர்படையினை ஒக்கும்.

கு :—எயினர் சிறூரை அப்புமாரியின் இரியல்போக்குதலும், எயிற்றிமார்கள் வயிறலைத்தோட ஓடலும், கணையும் வில்லும் வாரிக்கொண்டு அலைத்தலும் வெள்ளத்துக்கும் படைக்கும்

பொதுவானதன்மைகள். எயினர் – பாலைநிலமக்கள். சீறூர் – சிற்றூர். அப்புமாரியின் என்பதனை மாரிஅப்பின் என்றுகொண்டு வெள்ளத்துக்கேற்ப மழை நீரால் என உரைக்க. அம்புமாரியின் என்பதற்குப் படைக்கியைய அம்புமழை என்க. இரியல் போக்குதல் – அஞ்சியோடச் செய்தல். வயின் வயின் - இடந்தொறும் இடந்தொறும். எயிற்றிமார் - பாலைநிலத்து மகளிர். எயிற்றிமார் – வயிறு அலைத்து ஓடல் - (வெள்ளம் வருங்கால்) தத்தம் பொருள்களை இழந்தமையாலும் (படை வருங்கால்) தத்தம் கணவர்முதலியோரையிழந்தமையாலும் என்க. அயின் முகக் கணை - கூரிய நுனியையுடைய அம்பு. அலைக்கும் நீரால் 1. அலையை வீசும் தண்ணீரால் 2. வருத்தும் தன்மையால். செயிர் – போர். மானும் – ஒக்கும். செயிர்தரும் சேனை, மன்னர் சேனை என இயையும். (14)

## சரயுவெள்ளம் முல்லையிற்புக்குக் கண்ணனை ஒத்தமை

**26.** செறிநறுந் தயிரும் பாலும்
வெண்ணெயுஞ் சேந்த நெய்யும்
உறியொடு வாரி யுண்டு
குருந்தொடு மருத முந்தி
மறியுடை யாயர் மாதர்
வளைதுகில் வாரு நீராற்
பொறிவரி யரவி னாடும்
புனிதனும் போலு மன்றே.

செறி நறுந்தயிரும் பாலும்
வெண்ணெயும் சேந்த நெய்யும்
உறியொடு வாரி உண்டு,
குருந்தொடு மருதம் உந்தி,
மறி உடை ஆயர் மாதர்
வளை துகில் வாரும் நீரால்,
பொறி வரி அரவின் ஆடும்
புனிதனும் போலும் அன்று ஏ.

பொ ,—பாலும், உறைந்த நல்ல தயிரும் வெண்ணெயும் சிவக்கக் காய்ச்சிய நெய்யும் ஆகியவற்றை உறியோடு வாரிஉண்டு, குருந்தமரத்தையும் மருதமரத்தையும் சாய்த்து, ஆடுகளையுடைய இடைமகளிரின் வளைகளையும் உடைகளையும் கவரும் தன்மையால்

சரயுவெள்ளம், புள்ளிகளையும் கீற்றுக்களையும் உடைய (காளியன் என்னும்) பாம்பில் நடித்த தூயனான கண்ணபிரானையும் ஒக்கும்.

கு :— உறியொடு பால் தயிர் வெண்ணெய் நெய் உண்டலும் குருந்தமும் மருதமும் சாய்த்தலும், இடைமகளிருடைய வளையும் துகிலும் கவர்தலும், சரயுவெள்ளத்துக்கும் கண்ணபிரானுக்கும் பொதுத்தன்மைகள். கண்ணன் இடைக்குலச் சிறுமியருடைய வளையும் துகிலும் கவர்ந்தமை, 'வளை துகில் கைக்கொண்டு' (பெரியாழ்வார் திருமொழி 2-10-1) என்று அருளிச் செயலிலும் பேசப்பட்டது. செறிதல் - உறைதல். சேந்தநெய் – சிவக்கக் காய்ச்சிய நெய். சேத்தல் - சிவத்தல்; 'சேந்தொத்தலர்ந்த' (8) என்றார் சிந்தாமணியினும். மறி – ஆடு. துகில் - ஆடை. பொறி - புள்ளி. அரவு - (காளியன் என்னும்) பாம்பு. (15)

**மருதம்புக்க சரயு வெள்ளம் பொருகரிபோலப் பொலிந்த தோற்றம்**

**27.** கதவினை முட்டி மள்ளர்
கையெடுத் தார்ப்ப வெய்தி
நுதலணி யோடை பொங்க
நுகர்வரி வண்டு கிண்டத்
ததைமணி சிந்த வுந்தித்
தறியிறத் தடக்கை சாய்த்து
மதமழை யானை யென்ன
மருதம்சென் றடைந்த தன்றே.

கதவினை முட்டி, மள்ளர் கை
எடுத்து ஆர்ப்ப எய்தி,
நுதல் அணி ஓடை பொங்க
நுகர் வரி வண்டு கிண்டத்
ததை மணி சிந்த உந்தித்
தறி இறத் தடக்கை சாய்த்து,
மத மழை யானை என்ன
மருதம் சென்று அடைந்தது அன்று ஏ.

பொ ;—சரயு நீர்ப்பெருக்கு. மழைபோலப் பெருகும் மதநீரையுடைய யானைபோல மருதநிலத்துப் புக்கது.

சரயு வெள்ளத்தின்மேற் சொல்லுங்கால், 'மதகுகளின்கதவை முட்டி, உழவர்கள் மகிழ்ச்சியால் கைகளை மேலே தூக்கி ஆரவாரிக்கும்படி சென்று சேர்ந்து, ஆற்றின் மேலிடத்தே இணைக்கப் பட்ட கால்கள் பெருக்கெடுக்கவும், (நீர்க்கரையிலே இரைகளை நாடி) உண்கின்ற சங்குகள் உழவும், செறிந்த மணிகள் சிதறவும் அலைகளைவிசி, கரை உடையாதபடி தடுக்க அணையிடுதற்காக முன்னே ஊன்றிய தறிகள் ஒடியப் பெரிய கரையை அழித்து' என்க. மதயானைமேற் சொல்லுங்கால், 'வீரர்கள் கைகளை மேலே தூக்கி ஆரவாரிக்கும்படி சென்று (பகைவர் நகரவாயிற்) கதவுகளை முட்டி(த்தகர்த்து), நெற்றியில் அணிந்த ஓடை ஒளி வீச, மதநீரை உண்கின்ற கீற்றுக்களையுடைய வண்டு ஙள் கிண்டத் தன்மீது பொருந்திய மணிகள் விழக் கையசைத்துத் தன்னைக் கட்டும் தறி சிதையும்படி பெரியகையினால் சாய்த்து' என்க.

கு: —கதவு – 1 மதகுகளின் கதவு, 2மதிற்கதவு. மள்ளர் –1உழவர், 2 வீரர். உழவர் ஆரவாரித்தல் நீர்பெற்றமையால். வீரர் ஆரவாரித்தல் போர் பெற்றமையால். நுதல் – 1மேலிடம். 2 நெற்றி. ஓடை – 1 கால்வாய், 2. நெற்றிப்பட்டம். பொங்குதல் - 1 மிகுதல் 2 ஒளிவிசுதல். வண்டு - 1சங்கு. 2 தும்பி. மணி - 1 இரத்தினம் 2 யானை முதுகில் இடும் மணி. உந்தி - வீசி. தறி - 1 கரையுடையாதபடி முன் அணையிடுதற்கு ஊன்றும் முளை, 2 யானைகட்டும் தூண். கை - 1 கரை 2 துதிக்கை, முட்டி, எய்தி, உந்தி, சாய்த்து, சென்று அடைந்தது என முடியும். (16)

### வெள்ளத் தோற்றம்

**28.** முல்லையைக் குறிஞ்சி யாக்கி
மருதத்தை முல்லை யாக்கிப்
புல்லிய நெய்த றன்னைப்
பொருவரு மருத மாக்கி
எல்லையில் பொருள்க ளெல்லா
மிடைதடு மாறு நீராற்
செல்லுறு கதியிற் செல்லும்
வினையெனச் சென்ற தன்றே.

முல்லையைக் குறிஞ்சி ஆக்கி,
மருதத்தை முல்லை ஆக்கிப்
புல்லிய நெய்தல் தன்னைப்
பொரு அரு மருதம் ஆக்கி,

எல்லை இல் பொருள்கள் எல்லாம்
இடை தடுமாறும் நீரால்
செல் உறு கதியில் செல்லும்
வினை எனச் சென்றது அன்று ஏ.

பொ :—சரயு நீர்ப்பெருக்கு, முல்லை நிலத்தைக் குறிஞ்சி நிலமாக்கியும், மருதநிலத்தை முல்லைநிலமாக்கியும் இழிந்த நெய்தல் நிலத்தை ஒப்பற்ற மருதநிலமாக்கியும், அளவற்ற பொருள்கள் எல்லாம் வேற்றுநிலத்தே மாறும்படிசெய்யும் தன்மையால் உயிர்கள் செல்லுங்கதியிலே தொடர்ந்து செல்லும் வினைகள் போலச் சென்றது.

கு:—கதி-பிறப்பு, அது மக்கட்கதி, தேவகதி, நரககதி, விலங்கு கதி என நால்வகைப்படும் என்பர். ஒருநிலத்துப்பொருளை வேற்று நிலத்துய்த்த வெள்ளத்துக்கு உயிர்களை ஒருகதியினின்று மற்றொரு கதியில் உய்க்கும் வினை உவமம் ஆயிற்று, 'தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்களெல்லாம் — மாறிய பிறப்பில் தேடி வருவபோல் வந்தவன்றே' (வேள்விப்படலம். 2) என்று இவரே, பின்னும் கூறுவர். '' பல்லாவுள் உய்த்துவிடினும் குழக்கன்று, வல்லதாம் தாய்நாடிக்கோடலைத் - தொல்லைப் பழவினையும் அன்ன தகைத்தே தற்செய்த, கிழவனை நாடிக்கொளற்கு '' என்பது நாலடி (101). பொரு அருமருதம்-ஒப்பில்லாத (உயர்ந்த) மருதம். (17)

சரயுவினின்று பல கால்கள் பிரிதல்

29. காத்தகான் மள்ளர் வெள்ளக்
கலிப்பறை கறங்கக் கைபோய்ச்
சேத்தநீர்த் திவலை பொன்னு
முத்தொடு திரையின் வீசி
நீத்தமான் றலைய வாகி
நிமிர்ந்துபார் கிழிய நீண்டு
கோத்தகா லொன்றி னொன்று
குலமெனப் பிரிந்த வன்றே.

காத்த கால் மள்ளர் வெள்ளக்
கலிப்பறை கறங்கக் கைபோய்ச்
சேத்த நீர்த் திவலை பொன்னும்
முத்தொடு திரையின் வீசி,
நீத்தம் ஆன்று, அலைய ஆகி,
நிமிர்ந்து பார் கிழிய நீண்டு,
கோத்த கால் ஒன்றின் ஒன்று
குலம் எனப் பிரிந்த அன்று ஏ!

பொ :—சரயுவின்கண் இணைக்கப்பட்ட கால்கள், வெள்ளம் நிரம்பியவாய், அலைகளையுடையவாகி விரைந்து (வாய்க்கால்களைக்) காத்துநின்ற கரிய உழவர்களுடைய வெள்ளம் வருவதை யுணர்த்தும் ஒலிமிக்க கிணை என்னும் பறை முழங்க (மதகுகளைக் கடந்துசென்று, செந்நிறமுள்ள நீர்த்துளிகளோடு பொன்னையும் முத்தையும் அலைகளால் (கரையில்) விசி, நிலம் கிழிய நீண்டன வாய், மக்கட்குலம் போல ஒன்றில் நின்று மற்றொன்று பிரிந்தன.

கு :—கால் மள்ளர் - கரிய உழவர், கால் - கருமைநிறம். 'கால் தோய் மேனிக் கண்டகர்' (யுத்த. வானரர்களங்காண் படலம் 21) என்று இவரே கூறுதல் காணலாம். 'கால்காத்தமள்ளர்' என்று கொண்டு, நீர்வரும் வாய்க்காலைக் காத்துநின்ற உழவர் என்று பொருள் கூறுவாரும் உண்டு. வெள்ளக் கலிப்பறை - வெள்ளம் வருவதை உணர்த்தும் ஒலிமிக்க பறை; கிணை. கை போய் - (மதகுகளைக்) கடந்து சென்று. கைபோதல் – கடந்து செல்லுதல். 'நிறையெனும் சிறையைக் கைபோய்' சீவக. (710) சேத்தல் – சிவப்பாதல், ' அவன் வேலிற் சேந்து' (கலித்தொகை 57). திவலை–துளி. நீத்தம் ஆன்று–வெள்ளம் நிரம்பியவாய். (18)

### சரயு பரம்பொருளை ஒத்தமை

**30.** கல்லிடைப் பிறந்து போந்து
கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலு
மியம்பரும் பொருளி தென்னத்
தொல்லையி னொன்றே யாகித்
துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும்
பொருளும்போற் பரந்த தன்றே.

கல் இடைப் பிறந்து போந்து
கடல் இடைக் கலந்த நீத்தம்
எல்லை இல் மறைகளாலும்
இயம்பு அரும் பொருள் இது என்னத்
தொல்லையின் ஒன்றே ஆகித்
துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல் பெருஞ் சமயம் சொல்லும்
பொருளும் போல் பரந்தது அன்று ஏ.

பொ :—இமயமலையிலே தோன்றிச் சென்று கடலிலே கலந்த சரயுவெள்ளமானது, 'அளவில்லாத வேதங்களாலும் சொல்லுதற்கு அரிய பரம்பொருள் (போல்வது) இது' என்று சொல்லும் படி, முன்னே ஒன்ருய்ப்; பின்பு இடம்தொறும், இடம் தொறும், பரவிய ஆராய்தற்குரிய, பலவாகிய, பெரிய, சமய நூல்களால் பேசப்படும் பரம்பொருளும் போலப் (பலவாகிப்)பரவியது.

கு :—கல் இங்கே இமயமலையை உணர்த்தி நின்றது, நீத்தம் - வெள்ளம். தொல்லையின் – முன்னே. துறைதொறும் - இடம் தோறும். நீத்தம், இது, மறைகளாலும் இயம்பரும் பொருள் (போல்வது) என்னத் தொல்லையின் ஒன்றேயாகி(ப்பின்) சமயம் சொல்லும் பொருளும் போல் துறைதொறும் (பலவாகிப்) பரந்தது என இயைக்க. பரந்த சூழ்ச்சிப் பல் பெருஞ்சமயம் என்க. சமயம் என்றது சமய நூல்களை. பொருளும் என்பதனுள் உம்மை உயர்வுசிறப்பு. முன்னே ஒன்ருய் நின்ற பரம்பொருள் பின் இடந்தொறும் இடந்தொறும் வழிபடுவார் விரும்பியவாறு வேறு வேறு உருவும் பேரும் கொண்டுஎங்கும் பரவிநின்றவாறுபோல, முன்னே ஒன்ருய் நின்ற சரயு, பின் பயன்கொள்வார் விரும்பியபடி, பல கால்களும் ஆறுகளும் குளம் ஏரி வாவிகளும் முதலிய நீர்த்துறைகளிலும் வேறுவேறு உருவும் பெயரும்கொண்டு பரவியது என்றபடி. (19)

### சரயு உயிரை ஒத்து விளங்குதல்

**31.** தாதுகு சோலை தோறுஞ்
சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும்
புதுமணற் றடங்க டோறும்

மாதவி வேலிப் பூக வனந்தொறும்
வயல்க டோறும்
ஓதிய வுடம்பு தோறு
முயிரென வுலாய தன்றே.

தாது உகு சோலை தோறும்,
சண்பகக் காடு தோறும்,
போது அவிழ் பொய்கை தோறும்,
புது மணல் தடங்கள் தோறும்,
மாதவி வேலிப் பூக வனம் தொறும்,
வயல்கள் தோறும்,
ஓதிய உடம்பு தோறும், உயிர் என
உலாயது, அன்று ஏ.

பொ :—சரயு நீத்தம், மகரந்தப்பொடிகளைச் சிந்துகின்ற சோலைதோறும், சண்பகவனந்தோறும், அரும்புகள் விரிகின்ற பொய்கைதோறும், புதுமணல் பரப்பப்பட்ட தடாகங்கள் தோறும், குருக்கத்திவேலியிட்ட கமுகவனந்தோறும், வயல்கள் தோறும்—பேசப்பட்ட உடல்கள் தோறும் உயிர் புக்குப் பரவி விளங்குதல் போலப் பரவி விளங்கிற்று.

கு:— சரயு என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. உயிர்கள் நாற்கதிகளிலும் உள்ள உடல்களில் புகுந்து செல்லுதல் போலச் சரயுவெள்ளமும் சோலை முதலியவற்றிற் புகுந்து சென்ற தென்க. (20)

ஆற்றுப்படலம் முற்றிற்று

# 2. நாட்டுப் படலம்

[இது, இக்காவிய நாயகனுன இராமபிரானுல் ஆட்சி செய்யப்பட்ட பெருமையினையுடைய கோசல நாட்டின் வளங்களைத் தொகுத்துக் கூறுவது. அறுபத்தொரு பாடல்களை யுடையது. சில பாடல்கள் பொருளால் தொடர்புடையன. சில பாடல்கள் தொடர்பில்லாதன. இப்படலம் வருணனைப் பகுதியாதலின் பாடல்கள் பல ஏட்டுச் சுவடிகளில் முறைமாறிக் காணப்படுகின்றன.

கோசல நாடு, வான்மீகி முனிவராற் புகழ்ந்து பேசப்பட்டது. கம்ப நாடர், 'ஊமையன் ஒருவன் கள்ளைக் குடித்துவிட்டுப் பேச முயன்றதுபோல யான் அன்பினுல் பேசத் தொடங்கினேன்' என்று முன்னுரை கூறிக்கொண்டு, அந்நாட்டு நீர்வளமும், நில வளமும், தொழிற்சிறப்பும், மாதர் ஆடவர் இயல்பும், அவர்கள் பொழுதுபோக்கும், குடியியல்பும், விளைவும் ஈகையும், இன்ப வாழ்வும், ஒழுக்க நலமும், பொருட் செல்வமும் கல்விச்செல்வமும் பெற்ற அவர அறநெறியும் கூறி, அந்நாடு ஊழி வெள்ளத்தும் அழியாத நலம் உடையது என்று முடிக்கின்ருர். அந்நாட்டு மக்கள் குடிப்பிறப்பால் இயல்பாகவே இயைந்த ஒழுக்க முடையவர்கள். மகளிர் எல்லாரும் செல்வமும் கல்வியும் நிறைந்தவர்களாய் வறியோர்க்குதவியும் வருவிருந்து பேணியும் மகிழ்ந்திருந்தனர். அந்நாட்டு மக்கள் செய்வன யாவும் நல்லறமே யாதலின், அவருள் உயர்வு தாழ்வில்லை. அங்குக் குற்றம் புரிவாரின்மையின் யமபயம் இல்லை. நிகழுஞ் செயல்கள் யாவும் அவரவர் விருப்பொடுபட்டனவாதலின் சினம் எழுவதில்லை. அந்நாட்டு மகளிரின் பொற்பில் நின்றன பொலிவு; அவர்களுடைய பொய்யிலா நிலையில் நின்றன நீதி; அன்பின் நின்றன அறங்கள்; கற்பில் நின்றன கால மழை. இவ்வண்ணம் கோசல நாடு எல்லா நாட்டினும் ஏற்றம் பெற்றதாதற்குரிய எல்லாக் காரணங்களையும் ஒரு சேரத் தொகுத்துக் கூறியிருக்கும் அழகு ஆழ்ந்து படித்தறியத்தக்கது.]

---

## 2. நாட்டுப் படலம்

### கோசலநாட்டின் பெருமை

32, வாங்கரும் பாத நான்கும்
வகுத்தவான் மீகி யென்பான்
தீங்கவி செவிக ளாரத்
தேவரும் பருகச் செய்தான்
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை
யன்பெனு நறவ மாந்தி
மூங்கையான் பேச லுற்று
னென்னயான் மொழிய லுற்றேன்.

வாங்கரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகி என்பான்,
தீங்கவி செவிகள் ஆரத் தேவரும் பருகச் செய்தான்;
ஆங்கு அவன், புகழ்ந்த நாட்டை அன்பு எனும் நறவம் மாந்தி,
மூங்கையான் பேசல் உற்றான் என்ன யான் மொழியல் உற்றேன்.

பொ :—கோடாத நான்கு அடிகளால் முதலில் சுலோகங்களை இயற்றிய வான்மீகி என்று சிறப்பித்துச்சொல்லப்படுகின்ற முனிவர் பெருமான் (இராமகாதையைத்) தேவர்களும் செவிகளால் நிரம்பப் பருகும்படியாக இனிய கவிகளாற் செய்தான். அம்முனிவன் புகழ்ந்த கோசல நாட்டை ஊமையன் பேசத் தொடங்கினாற் போல, யானும் ஆசையென்னும் கள்ளைக் குடித்துப் பேசத் தொடங்கினேன்.

கு:—வான்மீகி என்பான், தேவரும் செவிகள் ஆரப்பருகத் தீங் கவி செய்தான். (அவன் புகழ்ந்த) நாட்டை மூங்கையான் பேச லுற்றான் என யான் மாந்தி மொழியலுற்றேன் என இயைத்துப் பொருள் கொள்க.

மூங்கையான்—ஊமையன். ஊமையன் முழுதும் உணர்ந் திருப்பன். அவற்றை முழுதும் வெளிப்படுத்த உரை வராது. அது போல, வான்மீகி சொன்ன கோசலநாட்டு வளம், ஏதோ பலபிறவி களில் ஈட்டிய புண்ணிய விசேடத்தால் முழுதும் உணரப்பெற்ற தாயினும், அவரைப் போலச் சொல்ல உரைவளம் போதாது. சொல்லாற் சிறிதும், இசையெச்சங்களாற் சிறிதும், குறிப்பாற்

சிறிதும், தொனியாற் சிறிதுமாக உணர்த்த முயலுவேன் என்பார், 'மூங்கையான் பேசலுற்றுன் என' என்றுர். குறை தெரிந்தும் கூற முற்பட்டது ஏன் எனின், ஆசைக் கள்ளைக் குடித்தமையால் என்று காரணங் கூறுகின்றுர். கள் குடித்தவர்கள் தம்வசமழிந்து வந்தனவற்றைத் தொடர்பின்றியே உரைப்பர். அதுபோல, இராமபிரானிடம் வைத்தஅன்பின் வசத்தனுய் நிற்க, அவ்வன்பே அடியேனை இவ்வண்ணம் பணி கொள்ள இங்ஙனம் உரைத்தேன் என்றவாறும். 'ஆசை பற்றி யறையலுற்றேன்' என முன்னர்க் கூறியதும் காண்க. (1)

### மருதவளம்

**33.** வரம்பெலா முத்தந் தத்து
மடையெலாம் பணில மாநீர்க்
குரம்பெலாஞ் செம்பொன் மேதிக்
குழியெலாங் கழுநீர்க் கொள்ளை
பரம்பெலாம் பவளஞ் சாலிப்
பரப்பெலா மன்னம் பாங்கர்க்
கரம்பெலாஞ் செந்தேன் சந்தக்
காவெலாங் களிவண் டீட்டம்.

வரம்பெலாம் முத்தம் ; தத்தும்
மடையெலாம் பணிலம் ; மாநீர்க்
குரம்பெலாம் செம்பொன் ; மேதிக்
குழியெலாம் கழுநீர்க் கொள்ளை ;
பரம்பெலாம் பவளம் ; சாலிப்
பரப்பெலாம் அன்னம் ; பாங்கர்க்
கரம்பெலாம் செந்தேன் ; சந்தக்
கா எலாம் களிவண்டு ஈட்டம்.

பொ :—(வயல்களின்) வரப்புக்களில் எல்லாம் முத்துக்கள்; நீர் ததும்பிக்கொண்டிருக்கிற மடைகள் தோறும் சங்குகள்; மிக்க நீரோடும் (வாய்க்கால்களின்) அணைகளில் எல்லாம், சிவந்த பொன்; எருமைகள் விழுந்து புரளும் குழிகளில் எல்லாம் செங்கழுநீரின் மிகுதி; பரம்படிக்கப் பெற்ற வயல்களில் எல்லாம் பவழங்கள்; நெற்பயிர் பரந்த வயல்களில் எல்லாம் அன்னங்கள், அந்

நெற் பயிருக்குப் பக்கங்களிலுள்ள கரம்புகளில் எல்லாம் செந்தேன்; அழகான சோலைகளில் எல்லாம் தேனுண்டு களித்த வண்டுக்கூட்டங்கள். [இவ்வண்ணம் மருதம் வளமிக்கது என்பதாம்.]

கு :—வரம்பில் முத்துக்களையீன்று சங்குகள் வாய்மடையில் உலாவுகின்றன என்பார், காரண காரிய இயைபு தோன்ற வரம்பெலாம் முத்தம் என்றவர், அடுத்து, தத்தும் மடையெலாம் பணிலம் என்றார். மாநீர்க் குரம்பு—மிக்கநீரைத் தேக்கி வைத்த அணைகள். மிக்க நீரைத் தேக்கக் கரையாத பொருள் தேவை. ஆதலின் உழவர் செம்பொன்னைக் கொண்டு தேக்கினர் என்பார் ‘குரம்பெலாம் செம் பொன்’ என்றார். அணைக்கட்டுக்குப் பக்கங்களில் நீர் பொசிந்து அசும்புபட்டு ஓடும். அதிற் சிறு பள்ளங்கள் இருக்கும். அவற்றில் எருமைகள் விழுந்து புரளும். அந்தக் குழிகளில் செங்கழுநீர் மிகுதியாக முளைத்துப் பூத்துள்ளன என்பதாம். பரம்பு—பரம்படிக்கப்பெற்ற வயல். சாலிப்பரப்பு—நெல்வயல். நெல்வயலில் நென்முதலைச் சூழச் சிறுமீன்கள் சுற்றும். அவற்றை யுண்ண அன்னங்கள் உலவுகின்றன. (2)

**மருதநிலத்தில், பல ஒலிகளும் தம்முட் கலத்தல்**

**34.** ஆறுபா யரவ மள்ள
        ராலைபா யமலை யாலைச்
சாறுபா யோதை வேலைச்
        சங்கின்வாய் பொங்கு மோசை
ஏறுபாய் தமர நீரி
        லெருமைபாய் துழனி யின்ன
மாறுமா றாகித் தம்மின்
        மயங்குமா மருத வேலி.

**ஆறுபாய் அரவம்; மள்ளர் ஆலைபாய் அமலை; ஆலைச் சாறுபாய் ஓதை; வேலைச் சங்கின்வாய் பொங்கும் ஓசை; ஏறுபாய் தமரம்; நீரில் எருமை பாய் துழனி; இன்ன மாறு மாறாகித் தம்மின் மயங்கும் மா மருத வேலி.**

பொ :—(அந்தக் கோசல நாட்டு) மருத நிலத்திலே ஆற்று நீர் பாய்வதால் உண்டான ஓசையும், உழவர்கள் கரும்பாலைகளை ஆட்டுவதால் உண்டாகும் ஓசையும் கரும்பாலைகளிலிருந்து கருப்பஞ்சாறு பாய்வதால் உண்டாகும் ஓசையும் கரைகளில் ஊர்கின்ற

சங்குகளின் வாயிலிருந்து உண்டாகின்ற ஓசையும், காளைகள் (தம்முள் மாறுபட்டு ஒன்றோடொன்று) பாய்தலால் உண்டாகின்ற ஓசையும், தண்ணீரில் எருமைகள் பாய்வதாலுண்டாகின்ற ஓசையும், ஆகிய இவைகள் தம்முள் வேறுபட்டும், கலந்தும் விளங்குகின்றன.

கு—:அரவம் ஆலை ஓதை..............துழனி இன்ன மாறாகி மயங்கும் இடம் மருத வேலி என்க. ஒலியின் மறு பெயர்களான அரவம் அமலை ஓதை தமரம் துழனி முதலியன பின்னர் வருதலின் இது சொற்பொருட் பின்வருநிலையணி. வேலை, கடலுமாம், கடற் சங்கு புதுப்புனலோடு முன்னேறி வந்து மருதநிலத்தில் வைகலும் உண்டு. 'சங்கு' என்றது உயிருள்ள சங்குப் பூச்சியை. ஒலிகள் பிறக்கும் இட வேற்றுமையான் மாறு மாறாயினும் ஒலி நிலவுதற் கிடமாகிய விண்ணிற் கலந்து ஒன்றாயின என்பதாம்.

**(3)**

## மருதமாகிற மன்னனின் திருவோலக்கம்

**35.** தண்டலை மயில்க ளாடத்
தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவி னேங்கக்
குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத்
தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட
மருதம்வீற் றிருக்கு மாதோ.

தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக் குவளை கண்விழித்து நோக்கத்
தெண்டிரை எழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட மருதம் வீற்றிருக்கும் மாதோ!

பொ :—சோலைகளாகிய (அரங்குகளில்) மயில்களாகிய (நடன மகளிர்) ஆடவும், தாமரையாகிய (பெண்கள்) தாமரைப் பூக்களாகிய விளக்குகளைத் தாங்கவும், மேகங்கள் முழவைப்போல ஒலிக்கவும், கருங்குவளை கண்விழித்துக் காணவும், தெளிந்த நீரலைகள் திரைச்சீலையின் தோற்றத்தைக் காட்டவும், இனிய மகரயாழினின்றும் தோன்றுகின்ற இசையைப் போல வண்டுகள் (ரீங்காரம்) செய்யவும், மருதம் என்ற மன்னன் அரசு வீற்றிருப்பன்.

கு :—எழினி-திரை. பக்கலிலுள்ள நீர் நிலைகளின் அலைகளில் சோலை முதலியவற்றின் நிழல் விழ அவ்வலைகள் சித்திர எழினி போலத் திகழ்கின்றன என்பதாம். வீற்றிருத்தல் – பிற தோன்றற்கும் இல்லாத சிறப்போடு இருத்தல், மாது, ஓ அசைகள். மகரயாழ் – நால்வகையாழில் ஒன்று; மகர மீன் வடிவுடையது; பத்தொன்பது நரம்புகளையுடையது. கருவியாகு பெயராய் அதன் இசைக்கு ஆயிற்று. தேம்பிழி – தேனாகிய பிழிந் தெடுக்கப்பட்டது; தேன், தேம்பிழி ஒருபொருட் பன்மொழி. இனிய தேன் எனினுமாம். வீற்றிருக்கும் என்ற வினைச்சொற் சிறப்பாலும், ஆட பாட முதலிய பிற அமைப்புக்களாலும் மருதம் மன்னனாக உருவகிக்கப் பெற்றமை யுணரப்பெறும். (4)

### வண்டு முதலியன தங்கும் இடங்கள்

**36.** தாமரைப் படுவ வண்டுந்
தகைவருந் திருவுந் தண்டார்க்
காமுகர்ப் படுவ மாதர்
கண்களுங் காம னம்பும்
மாமுகிற் படுவ வாரிப்
பவளமும் வயங்கு முத்தும்
நாமுதற் படுவ மெய்யு
நாமநூற் பொருளு மன்னோ.

**தாமரைப் படுவ வண்டும் தகைவுஅரும் திருவும்; தண்டார்க்**
**காமுகர்ப் படுவ மாதர் கண்களும் காமன் அம்பும்;**
**மாமுகில் படுவ வாரிப் பவளமும் வயங்கு முத்தும்;**
**நாமுதல் படுவ மெய்யும் நாம நூல் பொருளும்; மன்னோ**

பொ :—வண்டுகளும், தடுத்தற்கு அரிய திருமகளும் (அந்நாட் டுத்)தாமரையில் தங்குவன. பெண்களின் கண்களும், மன்மத பாணமும் குளிர்ந்த மாலையை அணிந்த காமுகர்களிடம் சென்று தைப்பன. கடற்பவழமும், விளங்குகின்ற முத்துக்களும் கரிய மேகங்களில் உண்டாவன. உண்மையும் விளக்கமான சாத்திரப் பொருள்களும் (மக்களின்) நாநுனியில் விளங்குவன.

கு :—வண்டும் திருவும், கண்களும் அம்பும், பவழமும் முத்தும், மெய்யும் நூற்பொருளும் என இணைத்துக் கூறினர் வினை ஒத்தலின். வண்டு தேன் உள்ளவரையில் இருந்து உண்டு

வேற்றுப் பூக்களிலும் விரைந்தோடிக்கொண்டேயிருக்கும்; திருமகள் நல்வினையுள்ளவரையிலிருந்து வினையுலந்தவிடத்து வேற்றிடம் பிரிவள். இதனை விளக்க 'தகைவரும்' என்ற சொல்லை இடைநிலைத்தீவகமாகப்பெய்து தகை வரும் வண்டும், தகைவரும் திருவும் எனக் கொள்ள வைத்தார். தகைவரும்-தடுத்து நிறுத்துதற்கரிய அவையிரண்டும் இந்நாட்டில் என்றும் தங்க இடந்தருவன தாமரை என நயந்தோன்ற உரைக்கின்றார் 'படுவ' என்ற சொல்லால். திரு தெய்வஞ்சுட்டிய பெயராதலின் திருவும் படுவ என அஃறிணை முடிபேற்றது. காமுகர் என இழிவு தோன்றக் கூறலின் மாதர் என்றது பரத்தையரை. சென்று தைத்தல் ஒற்றுமை பற்றிக் கண்ணையும், காமன் அம்பையும் இணைத்துக் கூறினர். நாம-விளக்கம். நெஞ்சத்து ஊருத ஒன்று எப்போதும் நாநுனியில் இருக்காது ஆதலின் உண்மையும் மெய்நூற்பொருளும் நாநுனியிலுள்ளன என்று மனத்தூய்மையும் கல்விப்பயிற்சியும் கொள்ள வைத்தார். (5)

### சங்குமுதலியன தங்கும் இடங்கள்

**37.** நீரிடை யுறங்குஞ் சங்க
நிழலிடை யுறங்கு மேதி
தாரிடை யுறங்கும் வண்டு
தாமரை யுறங்குஞ் செய்யாள்
தூரிடை யுறங்கு மாமை
துறையிடை யுறங்கு மிப்பி
போரிடை யுறங்கு மன்னம்
பொழிலிடை யுறங்குந் தோகை.

நீரிடை உறங்கும் சங்கம்; நிழலிடை உறங்கும் மேதி;
தாரிடை உறங்கும் வண்டு; தாமரை உறங்கும் செய்யாள்;
தூரிடை உறங்கும் ஆமை; துறையிடை உறங்கும் இப்பி;
போரிடை உறங்கும் அன்னம்; பொழிலிடை உறங்கும் தோகை.

பொ:—சங்குகள் நீரில் உறங்குகின்றன. எருமைகள் நிழலில் உறங்குகின்றன. வண்டுகள் மாந்தர் மாலையில் உறங்குகின்றன. சிவந்த நிறமுடைய திருமகள் செந்தாமரையில் உறங்குகின்றாள். ஆமைகள் சேற்றில் உறங்குகின்றன. முத்துச்சிப்பிகள் நீர்த்துறைகளில் உறங்குகின்றன. அன்னங்கள் வைக்கோற்போர்களில் உறங்குகின்றன. மயில்கள் சோலைகளில் தூங்குகின்றன.

கு:—சங்கு நீரில் உறங்குதலாவது அச்சமின்றி இருத்தல். தூர் புதருமாம். ஆமைகளுள் ஒருவகையான தரையாமை புதருக்குள் மறைந்துகிடக்கும். (6)

## மருதத்தில் கண்மலர்ந்தொளிரும் பொருள்கள்

38. படையுழ வெழுந்த பொன்னும்
பணிலங்க ளுயிர்த்த முத்தும்
இடறிய பரம்பிற் காந்து
மினமணித் தொகையு நெல்லு
மிடைபசுங் கதிரு மீனு
மென்றழைக் கரும்பும் வண்டும்
கடைசியர் முகமும் போதும்
கண்மலர்ந் தொளிரு மாதோ!

படை உழ எழுந்த பொன்னும், பணிலங்கள் உயிர்த்த முத்தும், இடறிய பரம்பில் காந்தும் இனமணித் தொகையும், நெல்லும் மிடை பசுங்கதிரும், மீனும், மென்தழைக் கரும்பும், வண்டும், கடைசியர் முகமும், போதும், கண்மலர்ந்து ஒளிரும் மாதோ.

பொ:—கலப்பை உழுதலால் வெளிப்பட்ட பொன்னும், சங்குகள் பெற்ற முத்துக்களும், பரம்பு அடிக்கப் பெற்ற இடங்களில் ஒளிவிடுகின்ற நவரத்னங்களும், நெல்மணிகள் நெருங்கியுள்ள பசுமையான கதிர்களும், மீன்களும், வண்டும், மகளிர் கண்களைப் போல விளங்கி ஒளிசெய்கின்றன. மெல்லிய தழைகளோடு கூடிய கரும்பு கணுக்கள்தோறும் கிளைத்து விளங்குகின்றன. உழவர் மகளிர்முகம் கண்களோடு மலர்ச்சியாக விளங்குகின்றன. பூக்கள் தேனெடு மலர்ந்து விளங்குகின்றன.

கு:—நெல்லு, மிடை பசுங்கதிர் எனக் கதிருக்கு அடைமொழியாக்குக. நெல்லு, உகரம் சாரியை. கடைசியர் முகம் கண்மலர்ந்தொளிர்தல், தாம் நட்ட பயிர் பசுமைகொண்டமையறிந்து தந்தொழில் வாய்த்தமையும் அதைக்கண்ட தத்தங் கணவர் தம்மை நோக்க, அதனுல் விளைந்த தொழில் வீறு கணவர்களால் உணரப்பட்டமையும் ஏதுவாக விளைந்தது. பரம்பு—பரம்படிக்கப்பெற்ற இடம். (7)

### பாணர்பாடல் மகளிரைத் துயிலெழுப்புதல்

39. தெள்விளிச் சிறியாழ்ப் பாணர்
தேம்பிழி நறவ மாந்தி
வள்விசிக் கருவி பம்ப
வயின்வயின் வழங்கு பாடல்
வெள்ளிவெண் மாடத் தும்பர்
வெயில்விரி பசும்பொற் பள்ளி
எள்ளருங் கருங்கட் டோகை
யின்றுயி லெழுப்பு மன்றே,

**தெள்விளிச் சிறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவ மாந்தி வள்விசிக் கருவி பம்ப வயின் வயின் வழங்கு பாடல் வெள்ளி வெண்மாடத்து உம்பர் வெயில் விரி பசும் பொன் பள்ளி எள்ளரும் கருங்கண் தோகை இன் துயில் எழுப்பும் அன்றே.**

பொ :—தெளிந்த இசையோடு கூடிய சிறிய யாழையுடைய பாணர்கள் தேனுற் சமைத்த கள்ளையுண்டு, வாரால் இழுத்துக் கட்டப்பெற்ற தோற்கருவி(யாகிய மத்தளம்) முழங்க இடங்கள் தோறும் பாடுகின்ற பாடலானது, வெள்ளிய வெண்மாடத் துச்சியில் ஒளிவிடுகின்ற பசிய பொன்னுற் செய்யப்பெற்ற படுக்கையில் இகழ்தற்கரிய கரிய கண்ணிணையுடைய மயில்போலும் மாதர்களை இனிய துயிலிலிருந்து எழுப்பும்.

கு:—பாணர், மாந்தி, கருவிபம்ப, வழங்குபாடல் தோகையைத் துயில் எழுப்பும் என முடிக்க. சிறிய யாழ் 'சிறியாழ்' எனப் பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கது. சிறியாழ்ப் பாணர் – சிறுபாணர். தேம்பிழி, ஒருபொருட்பன்மொழி. பிழிந் தெடுக்கப்படுவதாகலின், பிழி - தேன். முதனிலைத் தொழிலாகு பெயர். இனிய தேன் எனலுமாம். விடியற்காலத்துத் தூக்கமாத லின் இன்துயில் எனப்பட்டது. மாடத்து வைகும் செல்வர் வீட்டு மகளிரை வைகறைப் பண்ணைப் பாடிப் பாணர் எழுப்புதல் மரபு. கருங்கண் தோகை–கரிய பீலிக்கண்களையுடைய மயில் போலும் கருங்கண்களையுடைய மகளிர் என உவமைக்கும் பொரு ளுக்கும் இயையப் பொருள் கொள்ளுக. தேனுற் கள் சமைத்தலை, "தேம்பிழி தேறல் மாந்தி மகிழ்சிறந்து" என்னும் குறிஞ்சிப் பாட்டுப்பகுதிக்கு (155) நச்சினர்க்கினியர் எழுதிய உரையானும் உணர்க. (8)

### கடல்மீனும் கள்ளுண்டு களித்தல்

**40.** ஆலைவாய்க் கரும்பின் றேனு
மரிதலைப் பாளைத் தேனுஞ்
சோலைவாய்க் கனியின் றேனுந்
தொடையிழி யிருலின் றேனும்
மாலைவா யுகுத்த தேனும்
வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப வுண்டு
மீனெலாங் களிக்கு மாதோ.

**ஆலைவாய்க் கரும்பின் தேனும் அரிதலைப் பாளைத் தேனும், சோலைவாய்க் கனியின் தேனும் தொடை இழி இருலின் தேனும், மாலை வாய் உகுத்த தேனும், வரம்பு இகந்து ஓடி, வங்க வேலைவாய் மடுப்ப, உண்டு, மீனெலாம் களிக்கும் மாதோ.**

**பொ :**—கரும்பாலைகளிலிருந்து (பாய்கின்ற) கருப்பஞ்சாருகிய தேனும், அரியப்பட்ட நுனிகளையுடைய பாளையிலிருந்து வடிகின்ற கள்ளும், தொடுத்த அம்பினின்றும் ஒழுகுகின்ற தேனடையிலுள்ள தேனும், ஆடவர்கள் அணிந்துள்ள மாலைகளிலிருந்து சிந்திய தேனும், (நீர் நிலைகளின்) கரைகளைக் கடந்து ஓடி, கப்பல்களோடு கூடிய கடலிற் போய்ச் சேர, (அதனை அங்குள்ள) மீன்கள் எல்லாம் உண்டு களிப்பெய்துகின்றன.

**கு :**—தேன்கள் இகந்து ஓடி மடுப்ப மீனெலாம் உண்டு களிக்கும் எனக் கூட்டுக. மாது, ஓ அசைநிலை. வேடர்கள் மலைகளினுச்சியிலுள்ள தேனடையை அம்பால் எய்வர். அம்பின் நுனியில் நூல் ஒன்று கட்டப்பெற்றிருக்கும். தேனடையிற் சென்று தைத்த அம்பின் இணைத்த நூல் வழியாகத் தேன் இழியும். ஆதலின் தொடையிழி இருலின் தேனும் என்றார். தொடை-அம்பு. இருல்-பெரிய தேனடை. (9)

### மள்ளர் களைபிடுங்காமல் நிற்றல்

**41.** பண்கள்வாய் மிழற்று மின்சொற்
கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகான் முகம்வா யொக்குங்
களையலாற் களையி லாமை

உண்கள்வார் கடைவாய் மள்ளர்
களைகலா துலாவி நிற்பார்
பெண்கள்பால் வைத்த நேயம்
பிழைப்பரோ சிறியோர் பெற்ருல்.

**பண்கள் வாய் மிழற்றும் இன்சொல் கடைசியர் பரந்து நீண்ட கண் கை கால் முகம் வாய் ஒக்கும் களை அலால் களை இலாமை, உண் கள் வார் கடைவாய் மள்ளர், களைகலாது உலாவி நிற்பார்; பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்ருல்.**

பொ :—பண்களைப் போல வாயாற் பேசுகின்ற இனிய சொற்களையுடைய உழத்தியர்களின், அகன்று நீண்ட கண்ணும், கையும், காலும், முகமும் வாயும் ஒக்கும் களையல்லாமல் வேறு களையில்லாமையால் உண்ட கள் ஒழுகுகின்ற கடைவாயினையுடைய மள்ளர்கள் களைபிடுங்காமல் உலாவிநிற்பார்கள். சிறியோர் பெண்களிடத்து வைத்த அன்பைப் பெறின் தவறுவார்களோ? தவருர்கள் என்பதாம்.

கு :—வாய் பண்கள் மிழற்றும் இன்சொற் கடைசியர் எனவும், சிறியோர் நேயம் பெற்ருல் பிழைப்பரோ எனவும் இயைத்துப் பொருள் கொள்க. காதலை வெளிப் படுத்துங்கருவி கண்ணல்லது இல்லாமையின் முதற்கண் கூறப்பெற்றது. அன்றியும் 'பரந்து நீண்ட' என அடைமொழியும் புணர்க்கப்பெற்றது. மள்ளர் களைபிடுங்கும் கடமை தவறுதற்குக் கள்ளுண்டதும் காமமும் காரணம் என்பது. வயலிலுள்ள நீலப்பூ கண்ணையும், தாமரைப்பூ, கை கால் முகம் இவைகளையும், செவ்வல்லிப்பூ வாயையும் ஒத்திருந்தன என்பதாம். இறுதியடி வேற்றுப் பொருள்வைப்பணி பயின்றது. (10)

### மங்கையரின் மிகுதி

**42.** புதுப்புனல் குடையு மாதர்
பூவொடு நாவி பூத்த
கதுப்புறு வெறியே நாறுங்
கருங்கடற் றரங்க மென்ருல்
மதுப்பொதி மழலைச் செவ்வாய்
வாட்கடைக் கண்ணின் மைந்தர்
விதுப்புற நோக்கு மின்னுர்
மிகுதியை விளம்ப லாமோ!

புதுப்புனல் குடையும் மாதர் பூவொடு நாவி பூத்த
கதுப்புறு வெறியே நாறும் கருங்கடல் தரங்கம் என்ருல்,
மதுப் பொதி மழலைச் செவ்வாய் வாள் கடைக்கண்ணின் மைந்தர்
விதுப்புற நோக்கும் மின்னுர் மிகுதியை விளம்பல் ஆமோ !

பொ :—கரிய கடலின் அலைகளும், புதுநீராடுகின்ற மகளிரின் பூவும், கத்தூரியும் அணிந்த கூந்தலின் நறுமணமே கமழும் என்ருல், வாள்போலுங் கூரிய கண்ணுல் வீரமுடைய காளையர் காதல் நோயால் நடுங்க நோக்குகின்ற இனிமை நிறைந்த மழலைச் சொல்லோடு கூடிய சிவந்த வாயையுடைய மின்னற்கொடி போன்ற மகளிரின் மிகுதியைச் சொல்ல முடியுமோ? முடியாதென்பதாம்.

கு:—'கடைக்கணின் நோக்கும் செவ்வாய் மின்னுர்' எனக் கூட்டுக. விதுப்பு-நடுக்கம். மகளிர் நோக்க அதனுற் காமம் கைம்மிக நடுங்குகின்ருர்கள் என்பதாம். (11)

### மைந்தர் கூட்டம்

**43.** வெண்டளக் கலவைச் சேறுங்
குங்கும விரைமென் சாந்தும்
குண்டலக் கோல மைந்தர்
குடைந்தநீர்க் கொள்ளை சாற்றில்
தண்டலைப் பரப்புஞ் சாலி
வேலியும் தழீஇய வைப்பும்
வண்டலிட் டோடு மண்ணு
மதுகர மொய்க்கு மாதோ !

வெண் தளக் கலவைச் சேறும், குங்கும விரை மென் சாந்தும்
குண்டலக் கோல மைந்தர் குடைந்த நீர்க்கொள்ளை சாற்றில்,
தண்டலைப் பரப்பும் சாலி வேலியும் தழீஇய வைப்பும்
வண்டலிட்டு ஓடும் மண்ணும் மதுகரம் மொய்க்கும் மாதோ!

பொ:—சொல்லுமிடத்து, குண்டலம் அணிந்த அழகிய ஆடவர்கள் ஆடிய புது வெள்ளம், (அவர்கள் அணிந்திருந்த) வெண்மையான பச்சைக்கருப்பூர முதலியன கலந்த கலவைகளையும், குங்குமப்பூகலந்த மணமுள்ள மென்மையான சந்தனத்தையும், குளிர்ந்த சோலை இடங்களிலும், நெற்பயிரோடு கூடிய வயல்களிலும்

வயலைச்சார்ந்த இடங்களிலும் வண்டலாகப் படிய வைத்து ஓடும். அதனுல் அங்குள்ள மண்ணிலும் வண்டுகள் மொய்க்கும்.

கு:—சாற்றின், நீர்க்கொள்ளை, சேறும், சாந்தும் வேலியும்வைப் பும் வண்டலிட்டு ஓடும், அதனுல் மண்ணும் மதுகரம். மொய்க்கும் எனக் கூட்டுக. மாது ஓ அசை. தளம் - பச்சைக்கருப்பூரம். கொள்ளை-மிகுதி; கவர்தலுமாம். மணலினும் வண்டு மொய்க்கும் எனவே நீர் கொண்டு வந்த கலவைச் சேறும், சந்தனமும் எத் துணையன? அவற்றையணிந்த மாந்தர் மிகுதி எவ்வளவு? என்று உணரவைத்தவாறு. (12)

### பண்ணைகளின் சிறப்பு

**44.** சேலுண்ட வொண்க ணாரிற்
றிரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி
வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி
கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத்
தேரைதா ராட்டும் பண்ணை.

**சேல் உண்ட ஒண் கணாரில் திரிகின்ற செங்கால் அன்னம் மால் உண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை கால் உண்ட சேற்று மேதி கன்று உள்ளி, கனைப்பச் சோர்ந்த பால் உண்டு துயிலப் பச்சைத் தேரை தாராட்டும் பண்ணை.**

பொ:—சேல்மீனைஒத்த ஒளி பொருந்திய கண்ணையுடைய மகளி ரைப்போலத் திரிகின்ற சிவந்த காலையுடைய அன்னமானது, பெரு மைபொருந்திய தாமரையாகிய படுக்கையிலே கண்வளரச் செய்த இளங்குஞ்சு, முழங்கால் அளவும் மறைத்துள்ள சேற்றினை யுடைய எருமை தன் கன்றை எண்ணிக் கனைத்துப் பொழிந்த பாலைக் குடித்துத் தூங்கப் பச்சைத்தவளைகள் தாலாட்டும் (தன் மையன) வயல்கள்.

கு :—அன்னம் வளர்த்திய பிள்ளை பாலுண்டு துயிலத் தேரை தாராட்டும் என முடிக்க. சேலுண்ட என்பதில் உண்ட உவம உருபு. மேதி கன்று உள்ளிப் பால் சொரிதலை, "கனைத்திளங் கற் றெருமை கன்றுக் கிரங்கி நினைத்து முலை வழியே நின்று பால் சோர" எனவரும் திருப்பாவையானும் (கஉ) அறியலாம். (13)

### சோலையில் திருமணமும் துயிலெடையும்

45. குயிலினம் வதுவை செய்யக்
கொம்பிடைக் குனிக்கு மஞ்ஞை
அயில்விழி மகளி ராடும்
மரங்கினுக் கழகு செய்யப்
பயில்சிறை யரச வன்னம்
பன்மலர்ப் பள்ளி நின்றும்
துயிலெழத் தும்பி காலைச்
செவ்வழி முரல்வ சோலை.

குயிலினம் வதுவை செய்யக் கொம்பிடைக் குனிக்கு மஞ்ஞை
அயில்விழி மகளி ராடும் அரங்கினுக்கு அழகு செய்யப்
பயில்சிறை அரச அன்னம் பன்மலர்ப் பள்ளி நின்றும்
துயில் எழத் தும்பி காலைச் செவ்வழி முரல்வ சோலை.

பொ :—சோலையில் குயிற் கூட்டம் திருமணம் செய்கின்ற அக் கிளைகளிலிருந்து வேல் போலுங் கூரிய கண்களையுடைய பெண்கள் ஆடுகின்ற நாடக அரங்கினும் மிக்கு அழகைச் செய்ய மயில்கள் ஆடும். நெருங்கின சிறகுகளையுடைய அரச அன்னமானது பாராட் டப்பெறுகின்ற மலராகிய படுக்கையிலிருந்து துயிலெழ வண்டு வைகறையிலே செவ்வழிப் பண்ணைப்பாடும்.

கு :—குயிலினம் வதுவைசெய்ய, அக்கொம்பிடை மஞ்ஞை குனிக்கும் எனக் கூட்டுக. மண வீட்டில் மாதர் நடனமாடுதல் மர பாதலின் குயில் மணஞ் செய்ய மயில் ஆடுகிறது. அதனால் அரங்கி னும் திருமண நடனம் அழகு மிகுவதாயிற்று. பன்மலர்-வினைத் தொகை. அன்னந்தூங்குவது தாமரையாகிய ஒரு மலரிலாத லின் பன்னப்படுகின்ற மலர் எனப் பொருள் கொள்ளப்பட்டது. சூதர் மாகதர் பாடத் துயிலெழுதல் அரசமரபாதலின் அரசவன்ன மும் தும்பி பாட எழும்புகின்றது. செவ்வழி–மாலைப்பண்; அதி லும் முல்லை நிலத்திற் குரியது. முல்லை நிலத்து மாலைப்பொழுதில் கள்ளுண்டு தன்னை மறந்து துயின்ற வண்டு மருதத்திற்கு வந் தும் மயக்கந் தீராமையால் வைகறையிலும் அதனைப் பாட அன் னம் எழுந்தது. தும்பி நல் நாற்றத்தில்மட்டும் செல்வது. ''தாதுண் தும்பி போது முரன்றாங்கு'' (மதுரைக் 655) 'இரங் கிசை மிஞிறொடு தும்பிதாதூத' (கலி 33) என்பன தும்பியின் இயல்பை விளக்குவன. (14)

இப்பாடலின் பின் 44, 45 என்னும் குறியிடுள்ள சுவடிகளில் பின்வருமாறு ஓர் அதிகப் பாடல் காணப்படுகிறது :—

45 (a) காளையர் சேறு தன்னைக் கலந்துடன் மிதித்து நட்ட
தாள்களுங் கழுநீர் நாறுந் தடங்கையு மதுவே நாறும்
ஆளையுஞ் சிறிப் பீறி யணிமலர்க் கமுகிற் பாய்ந்த
வாளையும் பாளை நாறும் வயல்களும் அதுவே நாறும்.

### கோசலநாட்டுத் தலைமக்களின் பொழுதுபோக்கு

**46.** பொருந்திய மகளி ரோடு
வதுவையிற் பொருந்து வாரும்
பருந்தொடு நிழல்சென் றன்ன
வியலிசைப் பயன்றுய்ப் பாரும்
மருந்தினு மினிய கேள்வி
செவியுற மாந்து வாரும்
விருந்தினர் முகங்கண் டன்ன
விழாவணி விரும்பு வாரும்.

பொருந்திய மகளிரோடு வதுவையில் பொருந்துவாரும்
பருந்தொடு நிழல் சென்றன்ன இயல்இசைப் பயன் துய்ப்பாரும்
மருந்தினும் இனிய கேள்வி செவி உற மாந்துவாரும்
விருந்தினர் முகம் கண்டு அன்ன விழா அணி விரும்புவாரும்

பொ:—(புதிதாக மணம்) பொருந்திய மகளிரோடு கூடியிருப்பவர்களும், பருந்தோடு அதன் நிழல் பிரியாதுசென்றாற்போலப் பிரிவின்றிச் செல்லும் பாட்டும் பண்ணும் ஆகிய இவற்றின் சுவையை நுகர்பவர்களும், தேவாமுதத்தைக்காட்டிலும் இனிமையான நற்கேள்விகளைக் காதுகுளிரக் கேட்கின்றவர்களும், விருந்தினர் முகத்தைப் பார்த்து (மகிழ்ந்து) அன்ன விழாவின் அணியை விரும்புகின்றவர்களும் (ஆக உள்ளனர். அந்நாட்டுத் தலைமக்கள்.)

கு:—கூடியும், பாடியும் கேட்டும், விருந்திட்டும் பொழுது கழிப்பர் அந்நாட்டு மக்கள்- என்பது கருத்து. பொருந்திய மகளிர்—குலத்தானும், நலத்தானும், கல்வியானும், ஒத்த மணம் பொருந்திய மகளிர். வதுவை-மணத்தின் பின் சடங்கொடு நிகழும் கூட்டம். இது இப்பொருட்டாதலை ''நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியொடு, வதுவையயர்தல் வேண்டி'' (66) எனவரும் அக

நானூற்றினும் காணலாம். இயல்-பாட்டு. பருந்து உவமை. இசை-பண். பருந்தின் நிழல் உவமை. விருந்தினர் முகங்கண்டு என்றது ஈத்துவக்கும் இன்பத்தை நுகர்ந்து என்றவாறும். அன்னவிழாவணி-அன்னம் படைக்கும் விழாவின் முறை. இதனை 'சிறுசோற்றுப் பெருஞ் சிறப்பு' என்னும் பெரிய புராணம். (கழறிற் 155 பாட்டு) அன்னவிழாவணியை விரும்புதலாவது செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருத்தல். (15)

### கோழிப்போர்

**47.** கறுப்புறு மனமுங் கண்ணிற்
சிவப்புறு சூட்டுங் காட்டி
உறுப்புறு படையிற் றூக்கி
யுறுபகை யின்றிச் சீறி
வெறுப்பில களிப்பின் வெம்போர்
மதுகைய வீர வாழ்க்கை
மறுப்பட வாவி பேணு
வாரணம் பொருத்து வாரும்.

**கறுப்புறு மனமும் கண்ணில் சிவப்புறு சூட்டும் காட்டி உறுப்புறு படையில் தாக்கி, உறுபகை இன்றிச் சீறி வெறுப்பு இல களிப்பின் வெம்போர் மதுகைய வீர வாழ்க்கை மறுப் பட ஆவி பேணு வாரணம் பொருத்துவாரும்.**

பொ :—வெகுளியுற்ற மனத்தையும், (கோபத்தாற்) சிவந்த கண்ணைக் காட்டிலும் மிகச் சிவந்திருக்கின்ற உச்சிக்கொண்டையையும் காண்பித்து, காலாகிய ஆயுதத்தால் எதிர்க்கோழியைத் தாக்கி, பொருந்திய பகை சிறிதுமில்லாமலேயே சினந்து, போரில் வெறுப்பிலாதனவும், மதத்தால் விளைந்த களிப்பால், கொடிய போரைச் செய்வதில் வீரம் பொருந்தியனவும், தமது வீரவாழ்வில் குற்றம் உண்டானல் உயிர்வாழாதனவுமான கோழிகளைச் சண்டைக்குப் பொருத்துகின்றவர்களும் (ஆகக் கழிப்பர்).

கு :—காட்டி, தாக்கி, சீறி, வெறுப்பில, மதுகைய பேணு வாரணம்பொருத்துவாரும் என இயைக்க. கறுப்பும்சிவப்பும் வெகுளிப் பொருளவாதலின் கறுப்பு மனத்தையும், சிவப்பு கண், முகம் முதலிய புறவுறுப்புக்களையும் சாரவைத்து மரபு விளக்குதல் காண்க. 'மனத்தினுட் கறுப்பு வைத்து' என்ற பெரிய புராணமும் ஈண்டு

சிந்தித்தற்குரியது. கோழி தன் காலையே ஆயுதமாகக்கொண்டது. தனிப்பாடலில் 'காலாயுதக் கொடியோன்' என முருகனைச் சுட்டி யிருத்தலும் காண்க. உறுப்புறு படையில் தாக்கி என்பதற்கு, காலாகிய உறுப்பில் கட்டிய கத்தியாகியபடையால் தாக்கி எனப் பொருள் கோடலும் உண்டு. சண்டைக்கோழிகாலில் கத்திகட்டி விடுதல் வழக்கம். உறுபகையின்றிச்சீறி என்பது, "கறுவொடு மொன்றேடொன்று காரணமின்றிச் சீறி" (நாட்டுப்-3) என நைடதத்தும் கூறப்பெற்றுள்ளது. வீரவாழ்க்கை மறுப்படலாவது – தோற்றல், முதுகிற்காயம்படல் முதலாயின. உயிர்நீப்பர் மானம்வரின் என்பதற்கிலக்காக வாழ்வன வாரணங்கள் என்பதாம். கறுப்புறு மனம் சிவப்புறு சூட்டு என்பன சொல்முரண். (16)

### எருமைப் போர்

**48.** எருமைநா கீன்ற செங்க
 ணேற்றையோ டேற்றை சீற்றத்
துருமிவை யென்னத் தாக்கி
 யூழுற நெருக்கி யொன்றாய்
விரியிரு ளிரண்டு கூறாய்
 வெகுண்டன வனைய நோக்கி
அரியினங் குஞ்சி யார்ப்ப
 மஞ்சுற வார்க்கின் றாரும்.

எருமை நாகு ஈன்ற செங்கண் ஏற்றையோடு ஏற்றை, சீற்றத்து உரும் இவை என்னத் தாக்கி ஊழ் உற நெருக்கி ஒன்றாய் விரி இருள் இரண்டு கூறாய் வெகுண்டன அனைய நோக்கி அரி இனம் குஞ்சி ஆர்ப்ப மஞ்சு உற ஆர்க்கின்றாரும்.

பொ :—எருமைகள் பெற்ற சிவந்த கண்ணையுடைய கடாக்களோடு கடாக்கள் கோபத்தால், இடிகளைப்போலத் தாக்கி முறையாக நெருக்குதலான் ஒரே பொருளாக (உலக முழுவதும்) விரிந்துள்ள இருள் இருகூறாகித் தம்முள் மாறுபட்டனபோலுள்ள அவற்றைப் பார்த்து, தமது மயிர் முடியில் வண்டுகள் ஒலிக்க வலிமையுடன் ஆரவாரிக்கின்றவர்களும் ஆக இருந்தனர்.

கு :—ஏற்றை ஏற்றொடு தாக்கி நெருக்கி வெகுண்டன அனையவற்றை நோக்கி ஆர்ப்ப ஆர்க்கின்றாரும் எனக் கூட்டுக. எருமை

நாகு-ஈனுக்கன்றுகிய பெண் எருமை. 'எருமையும் மரையும் பெற்றமும் நாகே'என்பது தொல்காப்பியம். மஞ்சு-மைந்து; வலிமை. மஞ்சுற என்பதற்கு ஆர்ப்பரவம் மேகமண்டலத்தையடைய என்றும், மேகத்தைப்போல என்றும் உரைப்பாரும் உளர். இவர்கள் ஆரவாரித்தலால்இவர்கள் தலையிலுள்ள வண்டுகளும் ஆரவாரிக்கின்றன என்பதாம். ஏற்றை ஐ சாரியை. இச்செய்யுள் முல்லை நில மக்கள் எருமைப்போர் செய்வித்து மகிழ்தலைக் காட்டுவதெனலும் ஆம். (17)

**மள்ளர் உழுபகடு உரப்புதல்**

49. முள்ளரை முளரி வெள்ளி
முளையிற முத்தும் பொன்னும்
தள்ளுற மணிகள் சிந்தச்
சலஞ்சலம் புலம்பச் சாலில்
துள்ளிமீன் றுடிப்ப வாமை
தலைபுடை சுரிப்பத் தூம்பின்
உள்வரா லொளிப்ப மள்ள
ருழுபக டுரப்பு வாரும்.

**முள்அரை முளரி வெள்ளி முளை இற முத்தும் பொன்னும் தள்ளுற, மணிகள் சிந்தச் சலஞ்சலம் புலம்பச் சாலில் துள்ளி மீன் துடிப்ப, ஆமை தலை புடை சுரிப்பத் தூம்பி—னுள் வரால் ஒளிப்ப, மள்ளர் உழுபகடு உரப்புவாரும்.**

பொ :—முள்பொருந்திய தண்டினையுடைய தாமரையின் வெண்மையான முளைகள் ஒடிந்துபோகவும், முத்தும் பொன்னும் ஒதுக்கித்தள்ளப்படவும், இரத்தினங்கள் சிதறவும், சலஞ்சலம் என்னும் சங்கு ஒலிக்கவும், உழுபடையின் சாலில் துள்ளி விழுந்த மீன் (கொழுப்பட்டுத்) துடிப்பவும், ஆமை தலையையும் பக்கங்களிலுள்ள கால்களையும் ஓட்டிற்குள் சுருக்கிக் கொள்ளவும், மதகுநீர்க் குழாய்க்குள் வரால் மீன்கள் ஒளித்துக்கொள்ளவும், உழுகின்ற கடாக்களை அதட்டியோட்டுகின்ற உழவர்களும் உள்ளனர்.

கு :—இற, தள்ளுற, சிந்த, புலம்ப, துடிப்ப, சுரிப்ப, ஒளிப்ப உரப்புவாரும் என முடிக்க. முள்ளரை - முள்ளோடுகூடிய அடியினையுடையது. ஆதலின் முள்ளரை முளரி என்பதில் முளரி

வாளா பெயராய்நின்றது. நீர்மட்டத்தின் உள்ளே உள்ள தாமரைமுளை வெண்மையாக இருக்கும் ஆதலின் வெள்ளி முளை என்றார். சலஞ்சலம் - வலம்புரிச்சங்கம் ஆயிரம் சூழ இருப்பது. புலம்ப - ஒலிக்க. இது மருதநிலமக்கள் தொழில்கூறியது. (18)

### விருந்தோம்புதலும்—சுற்றமருந்துதலும்

**50.** முந்துமுக் கனியி னநறு
முதிரையின் முழுத்த நெய்யிற்
செந்தயிர்க் கண்டங் கண்ட
மிடையிடை செறிந்த சோற்றிற்
றந்தமி லிருந்து தாமும்
விருந்தொடும் தமரி னோடும்
அந்தண ரமுத ருண்டி
யயில்வுறு மமலைத் தெங்கும்.

முந்து முக் கனியின் நாறு முதிரையின் முழுத்த நெய்யின்
செந்தயிர்க் கண்டம் கண்டம் இடையிடை செறிந்த சோற்றின்
தந்தம் இல் இருந்து தாமும் விருந்தொடும் தமரினோடும்
அந்தணர் அமுதர் உண்டி அயில்வுறும் அமலைத்து எங்கும்.

பொ :—(தவ ஒழுக்கம் நிறைந்த) அந்தணரும், தேவர்களும் உண்டு எஞ்சிய, உணவாகிய கனிகளுள் முதன்மையான வாழை மா பலா என்னும் முக்கனியையும் பலவகையான பருப்பும், முழுகவிடப்பெறுகின்ற நெய்யும், சிவந்த தயிர்க் கட்டியும், வெல்லமும் இடையிடை விரவ ஆக்கப்பெற்ற சோற்றையும் அந்தணர்க்கு அருத்தி, தத்தம் மனைகளிலிருந்து, விருந்தினர் சுற்றத்தார் இவர்களோடு தாங்களும் உண்ணும் ஆரவாரத்தை யுடையது நாடெங்கும்.

கு :—இதில் அமுதர் என்பதால் தெய்வமும், தமரினோடும் என் பதால் சுற்றத்தாராகிய ஒக்கலும், விருந்தொடும் என்பதால் விருந் தும் தாமும் உணரப்பெறுதலின் "தென் புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்றாங்கு—ஐம்புலத்தாறு ஓம்பல் தலை" என்ற குறட்கருத்து அமைந்திருத்தலை அறியலாம். தெய்வமுதலிய நான்கு கூறித் தென்புலத்தாரைப் பாரிசேடத்தாற்கொள்ள வைத்தார். 'அந்தணர் அமுதர் உண்டி' என்றது, விளைவை மனைக்குக் கொண்டுவந்ததும், தேவர்க்கும் அந்தணர்க்கும் முதல்

ஊட்டிப் பின் ஏனோருடன் பகுத்துண்டல் மரபு என விளக்கிய வாறு. (19)

## நெய்தல்நிலச் சிறப்பு

**51.** முறையறிந் தவாவை நீக்கி
முனிவுழி முனிந்து வெஃகும்
இறையறிந் துயிர்க்கு நல்கு
மிசைகெழு வேந்தன் காக்கப்
பொறைதவிர்ந் துயிர்க்குந் தெய்வப்
பூதலந் தன்னிற் பொன்னின்
நிறைபரஞ் சொரிந்து வங்க
நெடுமுது காற்று நெய்தல்,

**முறை அறிந்து, அவாவை நீக்கி,**
**முனிவுழி முனிந்து, வெஃகும்**
**இறை அறிந்து உயிர்க்கு நல்கும்**
**இசை கெழு வேந்தன் காக்கப்**
**பொறை தவிர்ந்து உயிர்க்கும்**
**தெய்வப் பூதலம் தன்னில், பொன்னின்**
**நிறை பரம் சொரிந்து, வங்கம்,**
**நெடுமுதுகு ஆற்றும் நெய்தல்.**

பொ:—அரசநீதியை ஆராய்ந்துபேராசையைஒழித்து,வெறுக்க வேண்டிய இடத்தில் வெறுத்து, விரும்பத்தக்க வரிப்பணத்தை யறிந்துபெற்று, தன்கீழ்வாழும் குடிகளுக்கே அவற்றை கொடுக்கின்ற புகழ்மிக்க வேந்தன் காப்பதால், பாவமாகிய சுமை நீங்கி இளைப்பாறுகின்ற தெய்வத்தன்மை பொருந்திய பூமியைப்போல, (அயல் நாடுகளிலிருந்து கொண்டு வந்த) பொன்னாகிய நிறைந்த பாரத்தை இறக்கிவிட்டு, கப்பல்களின் நீண்டமுதுகிற்கு ஆறுதல் அளிக்கும் நெய்தல் நிலம்.

கு:— சென்ற பாடல்களில், மக்கள் இயல்பைச் சொல்லி நிலம் பெறுவித்த ஆசிரியர் இச்செய்யுளில் நெய்தல் வங்கமுதுகாற்றும் என நிலத்தின் மேலிட்டு, பொருளொடு புறப்பட்ட கப்பல் பொன்னொடு புகுந்து பாரத்தை இறக்கி ஆறுதலடைகிறது எனச் செல்வ வளத்தைச் சிந்திக்க வைக்கின்றார்.

இச்செய்யுளில், 'முறையறிந்து' என்பது,'முறை செய்து காப்பாற்று மன்னவன்' என்ற குறளையும், 'அவாவை நீக்கி' என்பது செயற்பால செய்யாதிவறல் கூடாது என்ற குறட்கருத்தையும், "முனிவுழி முனிந்து" என்பது "ஓர்ந்து கண்ணோடாது" என்றதன் கருத்தையும், 'வெஃகுமிறையறிந்து' என்பது "அறனீனும்" 'உறுபொருளும்' என்ற குறட்கருத்துக்களையும், உயிர்க்கு நல்கும் என்பது "கொடுத்தலுமின்சொலும்" "பெருங்கொடையான்" "காக்கைகரவா" என்ற குறட்கருத்துக்களையும் உட்கொண்டு எழுந்தவை. (20)

## நெல்லைக் கடிமனையுய்த்தல்

52. எறிதரு மரியின் சும்மை
யெடுத்துவா னிட்ட போர்கள்
குறிகொளும் போத்திற் கொல்வார்
கொன்றநெற் குவைகள் செய்வார்
வறியவர்க் குதவி மிக்க
விருந்துண மனையி னுய்ப்பான்
நெறிகளும் புதையப் பண்டி
நிரைத்துமண் ணெளிய வூர்வார்.

எறிதரும் அரியின் சும்மை
எடுத்து வானிட்ட போர்கள்
குறி கொளும் போத்தின் கொல்வார்,
கொன்ற நெல் குவைகள் செய்வார்,
வறியவர்க்கு உதவி மிக்க
விருந்துண மனையின் உய்ப்பான்
நெறிகளும் புதையப் பண்டி
நிரைத்து மண் நெளிய ஊர்வார்.

பொ :—அடித்த நெல்லரியின் சுமைகளை வாரி ஆகாயம் அளாவ இடப்பட்ட போர்களை, சூடுமுதலிய அடையாளங்கொண்ட கடாக்களால் (கடாவடித்து) வருத்துவார்கள். அப்படிக் கடாவடித்த நெல்லைக் குவிப்பார்கள். ஏழைகளுக்கு (களப்பிச்சையாக) உதவி, மிகுந்தவற்றை விருந்தினர் உண்பதற்கு வீட்டுக்குக் கொண்டு போக வண்டித்தடம் மறையும்படி வண்டிகளை வரிசையாகப் பூட்டி, பூமி நெளிந்து கொடுக்கும்படியாக ஊர்ந்து செல்வார்கள்.

கு :—தாம் உண்ண மனையில் உய்யார் விருந்துண உய்த்தார் என்றது 'தமக்கென்று உலையேற்றார்' என்ற தமிழர் மரபை யுணர்த்தியவாறு. நெறிகளும்புதைய என்றது தெருவேதெரியாமல் நெல் வண்டி மயமாக என்பதுமாம். மண்நெளிய என்றதால் ஒவ்வொரு வண்டியிலும் ஏற்றப்பெற்ற நெல்லின் சுமையளவு கூறியதாம். எறிதரு என்பதற்கு வாளால் அறுக்கப்பெற்ற என்று உரை கூறுவார் சிலர். எறிதல் எறிவாளின் செயல். அரிதல் வேறு எறிதல் வேறு. அரி - அரிவாளால் அரியப்பெற்ற நெற்பயிரின் கற்றை. அரியென்ற சொல்லிலே அப்பொருளடங்கியிருக்க மீட்டும் எறிதருமரி என்னவேண்டாமை ஓர்க. அன்றியும் கட்டு அடித்துப் போரிட்டதைத் திரும்பவும் கடாவடித்தலே மரபு.

குறிகொளும்போத்து - ஏவுவோன் குறிப்பின் வழிச்செல்லும் கடா எனலுமாம். (21)

### மள்ளர் கொள்ளும் பல்வகை வளங்கள்

**53.** கதிர்படு வயலி னுள்ள
கடிகமழ் பொழிலி னுள்ள
முதிர்பல மரத்தி னுள்ள
முதிரைகள் புறவி னுள்ள
பதிபடு கொடியி னுள்ள
படிவளர் குழியி னுள்ள
மதுவள மலரிற் கொள்ளும்
வண்டென மள்ளர் கொள்வார்.

கதிர்படு வயலின் உள்ள, கடிகமழ் பொழிலின் உள்ள, முதிர்பலம் மரத்தின் உள்ள முதிரைகள் புறவின் உள்ள பதிபடு கொடியின் உள்ள படிவளர் குழியின் உள்ள மதுவளம் மலரில் கொள்ளும் வண்டென மள்ளர் கொள்வார்.

பொ:—வயலில் விளைந்த கதிர்களில்உள்ளனவற்றையும், மணம் வீசுகின்ற சோலைகளில் உள்ளனவற்றையும், முதிர்ந்த கனிகளாக மரங்களில் உள்ளனவற்றையும், புன்செய்த்தானியங்களாக முல்லைநிலத்து உள்ளனவற்றையும், பதியமிடப்பெற்ற கொடிகளில் உள்ளவற்றையும், பூமியிலே படர்கின்ற குழிகளில் உள்ளவற்றையும், பூக்களில் தேனாகிய வளத்தைக்கொள்ளும் வண்டைப் போல மள்ளர்கள் கொள்வார்கள்.

கு:—மலரில் மதுவளம் கொள்ளும் வண்டென மள்ளர்கள் உள்ளனஎல்லாம் கொள்வர் என்க. வயல்படு கதிரின் உள்ள என மாற்றிப் பொருள் காண்க. அவை நெல்முதலிய தானியங்கள். முதிரை-அவரை துவரை முதலிய புன்செய்த்தானியங்கள். பதிபடுகொடி-பதியன் இட்டு வளர்க்கப் பெறுகின்ற வள்ளி, காய்வள்ளி, வெற்றிலை முதலியன. படிவளர் குழியிலுள்ள—பூமியில் படரும் பரங்கி பூசனி முதலாயின. மள்ளர்கள் தாம் பயன்கொள்ளும் கொடி மரம் முதலியவற்றிற்கு ஊறு இன்றிக் கொள்ளுதலின் வண்டை ஒத்தனர். (22)

**ஆண்வண்டு, மகளிர் கண்களைப் பெண்வண்டென மயங்குதல்**

**54.** பருவ மங்கையர் பங்கய வாண்முகத்
★ துருவ வுண்கணை யொண்பெடை யாமெனக்
கருதி யன்பொடு காமுற்று வைகலும்
மருத வேலியின் வைகின வண்டரோ.

பருவ மங்கையர் பங்கய வாண்முகத்து
உருவ உண்கணை ஒண்பெடையாம் என,
கருதி அன்பொடு காமுற்று வைகலும்
மருத வேலியின் வைகின வண்டு அரோ.

பொ:—ஆண்வண்டுகள் பருவம்அடைந்தபெண்களின் தாமரை மலர் போன்ற ஒளிபொருந்திய முகத்திலுள்ள அழகினையுடைய மையுண்ட கண்ணை, ஒளிபொருந்திய பெண்வண்டென்று எண்ணி அன்போடு காதலித்து மருத நிலத்திலேயே (பிரியாது) தங்கின என்பதாம்.

கு :—வண்டு கண்ணைப் பெடையாமெனக் கருதி வைகின என முடிக்க. பருவமங்கையர்-மங்கைப்பருவமடைந்த மகளிர். முகம் தாமரைபோன்றிருத்தலின் அதனடுவே கிடக்கும் கண்கள் வண்டெனமருள இடம் உண்டாயிற்று; அன்பொடு காமுற்று என்றது வண்டென்ற பொதுமையான் விளைந்த அன்பும், பின் பெடை வண்டென்றமையால் விளைந்த சிறப்பன்பாகிய காதலும் ஆகிய இரண்டையும் எய்தி என்றபடி. கணைஎன்பது கண்ணை என்பதன் தொகுத்தல். அரோ ஈற்றசை. (23)

உழத்தியர் சிறப்பும் - வாளையின் மதர்ப்பும்

55. வேளை வென்ற வுழத்தியர் வெம்முலை
ஆளை நின்று முனிந்திடு மங்கொர்பால்
பாளை தந்த மதுப்பரு கிப்பரு
வாளை நின்று மதர்க்கு மருங்கெலாம்.

வேளை வென்ற உழத்தியர் வெம்முலை
ஆளை நின்று முனிந்திடும் அங்கு ஓர்பால்
பாளை தந்த மதுப் பருகிப் பரு
வாளை நின்று மதர்க்கும் மருங்கு எலாம்.

பொ :—அம்மருதவேலியின் ஒருபால், மன்மதனையும் வென்ற உழத்தியர்களின் விருப்பத்தை விளைவிக்கும் முலைகள், இடம்பெயராதே நின்று வீரர்களையும் கோபிக்கும்; அந்நிலத்தின் பக்கங்களில் எல்லாம் தென்னம்பாளை தந்த கள்ளைக் குடித்துவிட்டுப் பருத்த வாளைமீன்கள் நின்று செருக்கித்திரியும் என்பதாம்.

கு:—மகளிர்க்கும் மாந்தர்க்கும் காமத்தை விளைவிக்கும் மன்மதனும், தம்மழகால் காமம் எய்தச் செய்தலின் 'வேளை வென்ற' என்றார். முலைநின்று ஆளை முனிந்திடும் என மாறிக் கூட்டுக. பொரும்வீரர் தம் நிலைபெயராமலே முனிதல் இயல்பாதலின் முலைகளும் தம்மிடம் பெயராமலே நிலைபெற்று நின்று, நோக்கும் வீரரை முனிந்தன என்பதாம். முனிதலாவது அவர்களுக்குக் கடமையிற் கண்ணில்லாது கலங்கச்செய்தல். உழத்தியர் என்றமைக்கேற்ப, ஆட்கள் எனவருதல் இயையும்; ஆயினும் சாதியொருமைபற்றி ஆள் என்றார். (24)

எருமைப்பாலால் நெற்பயிர் வளர்தல்

56. ஈர நீர்படிந் திந்நிலத் தேசில
கார்க ளென்ன வருங்கரு மேதிகள்
ஊரி னின்றகன் றுள்ளிட மென்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே.

ஈரநீர் படிந்து இந்நிலத்தே சில
கார்கள் என்ன வரும் கருமேதிகள்
ஊரில் நின்ற கன்று உள்ளிட மென்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே.

பொ :—குளிர்ந்த நீரிலே தோய்ந்து இப்பூமியிலே மேகங்களைப் போலவருகின்ற சில கரிய எருமைகள், மருதநிலத்தூரிலே இருக்கின்ற தம் கன்றுகளை நினைக்க, (அவற்றின்) மெல்லிய முலைகள் பாலைத் தாரையாகப்பொழிய அதனால் நெற்பயிர்கள் தழைத்து வளர்கின்றன.

கு:—நீருக்கு ஈரம்இயல்பாயினும் 'ஈரநீர்' என்றது எருமைகள் குளிர்ச்சியை விரும்பியே நீரில் மூழ்குகின்றன என அவற்றியல்பை விளக்கக் கூறியது. படிதல் என்னும் வினை மேகத்திற்கும், அதனையொத்த எருமைக்கும் பொதுவாக வந்தது. சில என்பதைக் கருமேதிகளுக்கு அடையாக்குக. மேகங்கள் போல வருவன எல்லா எருமைகளும் ஆயினும், பால்பொழிவன சிலவே என்பது விளக்கியவாறு. நீர்படிதலானும், தாரை கொள்ளுதலாலும் எருமைகள் மேகத்திற்கு ஒப்பாயின. நிலத்தே வருகார் என்றது இல்பொருள் உவமை. எருமை கன்று உள்ளிப் பால் சொரிதலுக்கு 'கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த பாலுண்டு' என முன்கூறியதையும் இணைத்து நோக்குக. (25)

### கழுநீர்பாய நாற்று வளர்தல்

**57.** முட்டி லட்டின் முழங்குற வாக்கிய
நெட்டு லைக்கழு நீர்நெடு நீத்தந்தான்
பட்ட மென்கமு கோங்கு படப்பைபோய்
நட்ட செங்நெலி ஞறு வளர்க்குமே.

**முட்டில் அட்டில் முழங்குற வாக்கிய**
**நெட்டுலைக் கழுநீர் நெடு நீத்தம் தான்,**
**பட்டம் மென் கமுகு ஓங்கு படப்பை போய்,**
**நட்ட செந்நெலின் நாறு வளர்க்குமே.**

பொ:—எவ்வகைக் குறைபாடும் இல்லாத சமையற்கட்டில், பெரிய உலைகளிலிருந்து ஒலியோடு வார்க்கப்பெற்ற கழுநீர்ப் பெருவெள்ளமானது நாற்றங்கால்களிலும் மெல்லிய கமுகுகள் ஓங்கி வளர்ந்த சோலைகளிலும் சென்று வயல்களில் நடப்பெற்ற செந்நெற்பயிரின் நாற்றை வளர்க்கும் என்பதாம்.

கு:—எந்தப்பொருளுக்கும் முட்டுப்பாடு இல்லாத அட்டில் என்பார் 'முட்டில் அட்டில்' என்றார். அடு + இல் = அட்டில்; சமையலறை. கழுநீர், குளநிறைந்து, சோலை நிறைந்து வயல்களிற் பாய்வதற்குத் தக 'நெட்டுலை' நெடுநீத்தம் என்னப்பட்டன. நட்ட

நாறு என்பதால் நாற்றங்காலிலிருந்து பிடுங்கி வயல்களில் நடப் பெற்ற நாற்று என்பது பெற்றும். வாக்கிய கழுநீர்நீத்தம், பட்டம் போய் படப்பைபோய் நாறு வளர்க்கும் எனக் கூட்டுக. (26)

குருவி, கூட்டில் மாணிக்கத்தைக் கொண்டுபோய் வைத்தல்

58. சூட்டு டைத்தலைத் தூநிற வாரணம்
தாட்டு ணைக்குடை யுந்தகை சான்மணி
மேட்டி மைப்பன மின்மினி யாமெனக்
கூட்டி னுய்க்குங் குருவிக் குழாமரோ.

சூட்டுடைத் தலைத் தூநிற வாரணம்
தாள் துணைக் குடையும் தகைசால் மணி
மேட்டு இமைப்பன, மின்மினியாம் எனக்
கூட்டின் உய்க்கும் குருவிக் குழாம் அரோ.

பொ :—உச்சிக் கொண்டையோடு கூடிய தலையினையுடைய வெண்ணிறமான கோழிகள் இருகால்களாலும் சித்தமையால் (வெளிப்பட்ட) குப்பை மேடுகளில் ஒளிவிடுகின்ற தகுதி நிறைந்த மாணிக்கங்களை மின்மினிப்பூச்சி என்று எண்ணி, குருவிக் கூட்டங்கள் (தத்தம்) கூடுகளிற் கொண்டுபோய் வைத்துக்கொள்ளும் என்பதாம்.

கு :—வாரணம் குடையும் மணி, மேட்டிமைப்பனவாகிய மணி எனவும் அவைகளை மின்மினியாம் எனக் கருதிக் குருவிக்குழாம் கூட்டின் உய்க்கும் எனவும் கூட்டுக. தூக்கணங்குருவிகள் மின்மினியைத் தம்மனைக்கு விளக்காகக் கொண்டுவைப்பது, " எரியுமின்மினி மணிவிளக்கினின்றுணைக் குரீஇயினம் பெடையொடுந்துயில்வ கூட்டினுள் " எனக் கிட்கிந்தாகாண்டத்தும் (கார்காலப் – 87) கூறப்பெறுதல் காண்க. (27)

பின்வரும் பாடல்கள் 4–ஆம் ஏட்டில் காணப்படுகின்றன :—

58 (a) மையரி நெடுங்கண் மாதர் வண்புன லாட மைந்தர்
துய்வழி யணியுஞ் சாந்தும் சுண்ணமும் ஒழுகி யோடிச்
செய்களி னடுவே நின்று தொழில் செயுங் கடைசி மார்கள்
கைகளும் சாந்த நாறுங் கால்களு மதுவே நாறும்.

58 (b) காளையர் சேறுதன்னைக் கலந்துடன் மிதித்து நட்ட
தாள்களும் கழுநீர் நாறுந் தடக்கையு மதுவே நாறும்
ஆளையுஞ் சிறிப் பிறி யணிவளை கழுகிற் பாய்ந்த
வாளையும் பாளை நாறும் வயல்களு மதுவே நாறும்

58 (c) விளையுஞ் செறுவில் வளையுகுத்த
வெண்முத் துறைப்பக் கருஞ்சேற்றி
லுளையு மலரு மரவிந்த
முழைக்கு மலரு மரவிந்தம்
வளையுங் கலையு மிடையணங்க
வணங்கு குழலும் தான்பிணங்கக்
களையுங் களையுங் கருநீலங்
கடையர் கண்ணுங் கருநீலம்.

## இடைச்சியர் தயிர்கடைதல்

**59.** தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளல்போய்
மாய வெள்வளை வாய்விட் டரற்றவும்
தேயு நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆய மங்கைய ரங்கை வருந்துவார்.

**தோயும் வெண் தயிர் மத்தொலி துள்ளல் போய்**
**மாய, வெள்வளை வாய்விட்டு அரற்றவும்,**
**தேயும் நுண்ணிடை சென்று வணங்கவும்,**
**ஆய மங்கையர் அங்கை வருந்துவார்.**

பொ :—தோய்ந்த வெண்மையாகிய தயிரைக் கடைதலாலுண்டாகிய மத்தொலியின் மிகுதி சென்று மறையும்படியாக, வெண்மையான சங்கு வளையல்கள் வாய்விட்டு மிகுதியாக ஒலிக்கவும், மிகச்சிறுகிய நுணுகிய இடுப்பானது இருமருங்கும் சென்று சென்று துவளவும், இடைச்சியர் அழகிய கை வருந்தத் தயிர் கடைவார் என்பதாம்

கு :—மத்தொலி வளையல் ஓசையில் அடங்கும் வண்ணம் வளைகள் ஒலித்தன என்பதாம். நிலைமத்திட்டுக்கைமாறியிழுத்துக் கடையும் போது, (புலி குமிறுவது போல) மத்தோசை கேட்கப்பெறுவதும், கைவளை யொலிப்பதும் இடுப்பு இருமருங்கும் சென்று சென்று துவளுவதும் ஆகிய இவைகள் இயற்கையாக நிகழுவன. இவைகளைத் தொகுத்துச் சொல்கின்றமையின் இது தன்மை

நவிற்சியணி. 'துள்ளவும் மாயவெள்வளை' என்ற பாடத்திற்கு மாயவெள்வளை – பூத்தொழிலமைந்த சங்குவளை எனப் பொருள் காண்பர் சிலர். இவ்வண்ணம் வளையலும், தயிரும் ஒலித்தலை, நாச்சியார் ''காசும் பிறப்பும் கலகலப்பக் கை பேர்த்து வாச நறுங்குழலாய்ச்சியர் மத்தினால் ஓசைப்படுத்த தயிரரவம்'' எனத் திருப்பாவையில் அருளியிருப்பது காண்க. (28)

உழத்தியர் பாக்கினின்று முத்தினைக் கொழித்தல்

**60.** குற்ற பாகு கொழிப்பன கோணெறி
கற்றி லாத கருங்க ணுளைச்சியர்
முற்றிலார முகந்துதம் முன்றிலில்
சிற்றில் கோலிச் சிதறிய முத்தமே.

குற்ற பாகு கொழிப்பன; கோண் நெறி
கற்றிலாத கருங்கண் நுளைச்சியர்
முற்றில் ஆர முகந்து தம் முன்றிலில்
சிற்றில் கோலிச் சிதறிய முத்தமே.

பொ :—கோணல் நெறிகள் ஒன்றையும் கற்காத கரிய கண்ணை யுடைய வலைச்சிறுமிகள் தம் சிறுசுளகால் நிறைய முகந்து தம் முடைய வீட்டு முகப்பில் சிறு வீடுகட்டி விளையாடிச் சிதறிய முத்தங்களே குற்றிய பாக்கினின்றும் கொழிக்கப்பெறுவன.

கு :—முத்தமே குற்றபாகு கொழிப்பன என முடிக்க. இனிக் கொழிப்பவர் கோள் எனப் பாடங்கொண்டு கொழிப்பவர் கொள்வன என்று பொருள் கூறுவாரும் உளர். கோணல் நெறி கற்றிலாமையாவது நோய் நோக்கும், அந்நோய்க்கு மருந்தாம் நோக்கும் கல்லாமை. (29)

செம்மறிப்போர்

**61.** துருவை மென்பிணை யீன்ற துளக்கிலா
வரிம ருப்பிணை வன்றலை யேற்றைவான்
உருமி டித்தெனத் தாக்குறு மொல்லொலி
வெருவி மால்வரைச் சூன்மழை மின்னுமே.

துருவை மென்பிணை ஈன்ற துளக்கிலா
வரிமருப்பு இணை வன்தலை ஏற்றை வான்
உரும் இடித்தெனத் தாக்குறும் ஒல்லொலி
வெருவி மால்வரைச் சூல் மழை மின்னுமே.

பொ :—மென்மையான, பெண் செம்மறியாடு பெற்ற நடுக்கம் இல்லாத வரிகள் அமைந்த இரண்டு கொம்புகளையும், வலிய தலையையும் உடைய கடா வானத்திலுள்ள இடி இடித்தாற் போலத் தாக்குதலால் உண்டான ஒல்லென்னும் ஒலியினாலே அஞ்சிக் கரிய மலைகளிற் படிந்த சூல்கொண்ட மேகங்கள் (வாய்திறக்க அதனால்) மின்னல் உண்டாகும்.

கு:—ஏற்றை தாக்குறும் ஒல்லொலிக்குச் சூன்முகில் வெருவி மின்னும் எனக் கூட்டிப் பொருள் காண்க. துருவை-செம்மறி. ஏறு ஐகாரச்சாரியை புணர்ந்து ஏற்றை என ஆயிற்று. மேகங்களின் ஒலியை மற்றொன்று உண்டாக்குதல் மேகங்கள் வெருவுதற்கு ஏதுவாயிற்று. அங்ஙனம், அஞ்சிச் சூன்மழையும் மின்னின என்றல் மின்னுதலோடு இடித்து ஆர்ப்பரித்தன என்பதாம். மால்-கருமை ; பெருமையுமாம்.
(30)

## தினைமுதலியவற்றிலிருந்து ஒலிப்பன இவையெனல்

62. தினைச்சி லம்புவ தீஞ்சொலி ளங்கிளி
நனைச்சி லம்புவ நாகிள வண்டுபூம்
புனைச்சி லம்புவ புள்ளினம் வள்ளியோர்
மனைச்சி லம்புவ மங்கல வள்ளையே.

தினைச் சிலம்புவ தீஞ்சொல் இளங்கிளி;
நனைச் சிலம்புவ நாகு இள வண்டு; பூம்—
புனைச் சிலம்புவ புள்ளினம்; வள்ளியோர்
மனைச் சிலம்புவ மங்கல வள்ளையே.

பொ:—தினைப்புனங்களில் ஒலிப்பன இனிய சொற்களைப் பேசுந் தன்மைவாய்ந்த இளங்கிளிகள்; அரும்புகளின் பக்கங்களில் ஒலிப்பன மிக இளமை வாய்ந்த வண்டுகள் ; பூக்களோடு கூடிய தண்ணீரில் ஒலிப்பன பறவைக் கூட்டங்கள் ; கொடைத்தன்மையுடையவர்கள் மனைகளில் ஒலிப்பன மங்கலமான வள்ளைப் பாட்டுக்கள்.

கு :—கிளிகள் பயிற்சி வயத்தாற் பேசுவன ஆதலின் தீஞ்சொல் இளங்கிளி எனலாயிற்று. நாகிளமை என்றது ஒரு பொருட் பன்மொழி. மங்கல வள்ளை மகளிர் நெற்குத்தும்போது தலைவனைப் புகழ்ந்து பாடும் பாட்டு. புனை—தண்ணீர். இச்சொல் இப்பொருட்டாதலை ' புனை கொல் கரையில் நினைவினள் விம்மி ' என வரும் பெருங்கதைச் செய்யுட் பகுதியானும் "அமுதளாவிய புனைவர உயிர் வரும் உலவை" என இந்நூலுட் பின்வரும் பகுதியானும் அறியலாம். வள்ளியோர் மனைகளில் மேலும் மேலும் விருந்திட ஓயாமல் அரிசி குற்றப்படுதலின் மங்கல வள்ளை ஓயாது ஒலிப்பதாயிற்று. (31)

## திணை மயக்கம் 63-66

**63.** கன்று டைப்பிடி நீக்கிக் களிற்றினம்
வன்றொ டர்ப்படுக் கும்வன வாரிசூழ்
குன்று டைக்குல மள்ளர் குழூஉக்குரல்
இன்று ணைக்களி யன்னமி ரிக்குமே.

கன்றுடைப் பிடி நீக்கிக் களிற்று இனம்,
வன் தொடர்ப் படுக்கும் வனவாரி சூழ்,
குன்றுடைக் குல மள்ளர் குழூஉக் குரல்,
இன்துணைக் களியன்னம் இரிக்குமே.

பொ :—கன்றோடுகூடிய பெண்யானைகளிடமிருந்து ஆண்யானைகளைப் பிரித்து வலிய சங்கிலிகளாற் கட்டுகின்ற, யானை படுக்குங் குழியினையுடைய மலைகளில் உள்ள வேடர் கூட்டத்தின் ஒலி, தமக்கு இனிமையைத்தருகின்ற பெண்ணன்னங்களோடு கூடிக் களித்திருக்கின்ற ஆணன்னங்களைப் பிரித்துவிடும் என்பதாம்.

கு :—வேடர்கள் படுகுழியிலகப்பட்ட யானைகளைச் சங்கிலியிட்டுக் கட்டும்போது பேராரவாரஞ்செய்வர்; அதனால் மருத நிலத்திலுள்ள அன்னங்கள் பிரிந்து போகின்றன; எனத் திணைமயக்கம் கூறியவாறு. பிடி நீக்கிக் களிறு கொள்ளுஞ் செய்தி ' கறையடி மடப்பிடி கானத்தலறக் களிற்றுக் கன்றொழித்த உவகையர் ' என்னும் அகநானூற்றுப்பகுதியானும் அறியலாம். மலைநாட்டு மள்ளரொலி மருத அன்னத்தைப் பிரித்தது என்றமையால் குறிஞ்சியும் மருதமும் மயங்கியமை கூறிற்று. யானையைப் பிரித்த வேடரொலி அன்னங்களையும் பிரித்தது என்றமையான் யாண்டும்

உடலையும் உயிரையும் அன்னவற்றையும் பிரித்தலே அவர்கள் இயல்பு என்ற ஒரு குறிப்பும் தோன்ற நிற்றல் காண்க. (32)

64. வள்ளி கொள்பவர் கொள்வன மாமணி
துள்ளி கொள்வன தூங்கிய மாங்கனி
புள்ளி கொள்வன பொன்விரி புன்னையிற்
பள்ளி கொள்வன பங்கயத் தன்னமே.

**வள்ளி கொள்பவர் கொள்வன மாமணி;**
**துள்ளி கொள்வன தூங்கிய மாங்கனி;**
**புள்ளி கொள்வன பொன்விரி புன்னையில்**
**பள்ளி கொள்வன பங்கயத்து அன்னமே.**

பொ:—வள்ளிக்கிழங்கைத்தோண்டியெடுப்பவர்களாற் கொள்ளப்படுவன பெரிய இரத்தினங்கள்; ஆமைகளாற் கொள்ளப்படுவன தொங்குகின்ற மாம்பழங்கள்; புள்ளிபட்ட நிழலை யுடையவாகிய பொன்னிறமான மகரந்தங்களோடு மலர் விரிந்த புன்னையில் தாமரையிலுள்ள அன்னங்கள் உறங்குகின்றன என்பதாம். (33)

65. கொன்றை வேய்ங்குழற் கோவலர் முன்றிலிற்
கன்று றக்குங் குரவை கடைசியர்
புன்ற லைப்புனங் காப்புடை போதரச்
சென்றி சைக்கு நுளைச்சியர் செவ்வழி.

**கொன்றை வேய்ங்குழல் கோவலர் முன்றிலில்**
**கன்று உறக்கும் குரவை; கடைசியர்**
**புன்தலைப் புனம் காப்பு உடைபோதரச்**
**சென்று இசைக்கும் நுளைச்சியர் செவ்வழி.**

பொ:—(மருத நிலத்து) உழத்தியருடைய குரவைப் பாட்டு, கொன்றைக்குழலையும் புல்லாங்குழலையும் ஊதுகின்ற இடையர்களுடைய முன் வாசலிலுள்ள இளங்கன்றுகளைத் தூங்கப்பண்ணும். (நெய்தல் நிலத்துச்) செம்படவப் பெண்களின் செவ்வழிப் பண்ணோடு கூடிய பாட்டு புன்செய்யாகிய தினைப்புனத்தின் காவல்கெடச் சென்று ஒலிக்கும்.

கு :—கொன்றைக் குழல்-கொன்றைப்பழத்தைச் சுரத்தானங்களுக்கு ஏற்ப அளந்து துளைத்து ஆக்கப்பெற்ற குழல். "கொன்றையந்தீங்குழல் கேளாமோ தோழீஇ" என்ற சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவைப்பகுதியும் அதன் உரையும் சிந்திக்கத்தக்கன. வேய்ங்குழல்-மூங்கிலைத்துளைத்து ஆக்கப் பெற்ற புல்லாங்குழல். குரவை-மகளிர் விழாக்காலங்களில் நாவாற்குழறி இடும் ஒருவகை மகிழ்ச்சியொலி. குலவையென இக்காலத்து வழங்கும். உழத்தியர் நடவு நடும்போதும் களையெடுக்கும் போதும் குலவையிடுவதை இன்றும் காணலாம். புன் தலை-புல்லிய இடம்; புன்செய். செவ்வழிப்பண்-முல்லை நிலத்திற்கு உரிய பெரும்பண்; மாலைக்காலத்திற்கு உரியது. அதனை நெய்தல் நிலத்து நுளைச்சியர் பாட, தந்நிலத்து மகளிர் பாடும் பழகிய இசையென்று எண்ணிக் கிளிகள் மேலும் வந்து தினைப்புனத்தில் வீழ்கின்றன; அதனால் தினைப்புனங்காவல் உடைந்து போயிற்று என்றார். 'ஆயோ வெனுங்குரல் ஐயோபுனத்தை அழிக்கின்றதே' என்பதும் ஈண்டு இணைத்து நோக்குதற்குரியது. (34)

**66.** சேம்பு கால்பொரச் செங்கழு நீர்க்குளத்
தூம்பு காலச் சுரிவளை மேய்வன
காம்பு கால்பொரக் கண்ணகன் மால்வரைப்
பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே.

**சேம்பு கால்பொரச் செங்கழுநீர்க் குளத்**
**தூம்பு காலச் சுரிவளை மேய்வன,**
**காம்பு கால்பொரக் கண் அகன் மால்வரைப்**
**பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே.**

பொ :—இடம் அகன்ற கரிய மலையிலே, மூங்கில்களைக் காற்று மோத அதனாற் கிழிந்த தேனடைகளில் இருந்து பாம்பு தொங்குவதைப் போல ஒழுகுகின்ற பசிய தேனை செங்கழுநீர்ப்பூக்கள் பூத்துள்ள குளத்தினது மதகுவாயானது வெளிவிட, சுரிந்த மூக்கையுடைய சங்குகள் சேப்பந்தண்டுகள் காற்றடித்தலால் (தம்மேல்) மோதவும், அத்தேனை உண்கின்றன என்பதாம்.

கு :—மால்வரை காம்பு கால் பொர, நான்றெனப் பாய் பசுந்தேறலை, தூம்புகால, சுரிவளை, சேம்புகால்பொர(வும்) மேய்வன எனக் கூட்டுக. இங்ஙனம் அன்றிக் குளத்தூம்பு சேம்பு கால் பொரத் தேறலைக் கால, வளை மேய்வன எனக் கூட்டி, குளத்துமதகின் வாய்த்தலையில் முளைத்துள்ள சேப்பந்தண்டை மோதும்படி

தேனைவிட, சங்கு உண்பன என்று உரைப்பாரும் உளர். குறிஞ்சித்தேன் மருதநிலத்துப்பாயச் சங்குகள் மேய்கின்றன எனத் திணை மயக்கங் கூறியவாறு. தேன்ஒழுக்கு பாம்புக்கும், அடை அதன் படம் விரிந்த தலைக்கும் உவமை. ஏகாரம் ஈற்றசை. (35)

மகளிர் தொழில் ஈதலும் விருந்தோம்புதலுமே எனல்

67. பெருந்த டங்கட் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விழைவன யாவையே.

**பெருந்தடங்கண் பிறை நுதலார்க்கு எலாம்,**
**பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்,**
**வருந்தி வந்தவர்க்கு ஈதலும், வைகலும்**
**விருந்தும் அன்றி, விழைவன யாவையே.**

பொ :—பெருமையும் அகலமும் உடைய கண்களையும், பிறைமதிபோன்ற நெற்றியையும் உடைய அந்நாட்டுப் பெண்களுக்கு எல்லாம் பொருந்துகின்ற செல்வமும் கல்வியும் வளர்வதால் பிற நாடுகளிலிருந்து துன்பத்தால் வருந்தி வந்த வறியவர்களுக்குக் கொடுத்தலும், நாடோறும் விருந்தோம்புதலும் அன்றி அவர்கள் விரும்புவன வேறு எவை? பிறிதில்லை.

கு :—வருந்தி வந்தவர்க்கு ஈதல் என்பது, 'வருந்தி வந்தோர் அரும்பசிகளைந்து' என்னும் மணிமேகலையடியை நினைவூட்டுகிறது. பூத்தல் – உண்டாகிப் பொலிவுறுதல்.

ஈதல் – வறியராய் ஏற்றோர்க்கு மாற்றாதே கொடுத்தல் என்ற பரிமேலழகர் உரை சிந்தித்தற்குரியது. விருந்தினர், பண்டு அறிவுண்மையிற் குறித்துவந்தாரும் அஃதின்மையிற் குறியாது வந்தாரும் என இருவகையர். விருந்தென்றது ஈண்டு விருந்திடுதலாகிய தொழில்மேல் நின்றது. பணமும் படிப்பும் படைத்த பாவையர் விழைவன போகமும் பொருளும் அன்று; ஈகையும் விருந்துமாகிய புண்ணியமும் ஒப்புரவுமே என்பதாம். (36)

### அன்னசத்திரங்களின் இயல்பு

**68.** பிறைமு கத்தலைப் பெட்பினி ரும்புபோழ்
குறைக றித்திரள் குப்பைப ருப்பொடு
நிறைவெண் முத்தினி றத்தரி சிக்குவை
உறைவ கோட்டமி லூட்டிடந் தோறெலாம்.

பிறைமுகத் தலைப் பெட்பின் இரும்பு போழ்
குறை கறித் திரள் குப்பை, பருப்பொடு
நிறை வெண் முத்தின் நிறத்து அரிசிக் குவை.
உறைவ, கோட்டமில் ஊட்டிடம் தோறெலாம்.

பொ :—நேர்மைதவறாத அன்னசத்திரங்கள் அனைத்திலும், பிறைபோன்ற வாயை உடைய விரும்பத்தக்க (அரிவாள்மணை யாகிய) இரும்பால் பிளந்து நறுக்கப்பெற்ற கறிக்குவியல்களும், பருப்புக்குவியல்களும், நிறைந்த வெண்முத்துப்போன்ற நிறத்தினையுடைய அரிசிக்குவியல்களுமே தேங்கிக்கிடப்பன.

கு :—ஊட்டிடந்தோறெலாம் கறித்திரள் பருப்பொடு அரிசிக் குவை உறைவ எனக் கூட்டுக. ஊட்டு இடம் – உண்பிக்கும்இடம்; என்றது அன்னசத்திரத்தை. இது இன்றும் மலையாள நாட்டில் ஊட்டுப்புரை என வழங்குதலைக் காணலாம். பிறைமுகத்தலை யிரும்பு – அரிவாள் மணை. அரிவாள் மணையின் வாய் பிறைபோல இருத்தலின் இவ்வாறு கூறப்பெற்றது. கொலைக்கருவியன்றாகலின் பெட்பின் இரும்பு என்றார். பெட்பு – விருப்பம். (37)

### சுரப்பன இவை எனல்

**69.** கலஞ்சு ரக்கு நிதியங்க ணக்கிலா
நிலஞ்சு ரக்கு நிறைவள நன்மணி
பிலஞ்சு ரக்கும் பெறுதற் கரியதம்
குலஞ்சு ரக்கு மொழுக்கங் குடிக்கெலாம்.

கலம் சுரக்கும் நிதியம்; கணக்கிலா
நிலம் சுரக்கும் நிறைவளம்; நல்மணி
பிலம் சுரக்கும்; பெறுதற்கு அரிய தம்
குலம் சுரக்கும் ஒழுக்கம்; குடிக்கு எலாம்.

பொ ;—மரக்கலங்கள் அளவற்ற செல்வத்தை (க் கொண்டு வந்து) பெருக்குகின்றன; நிலம் நிறைந்த வளப்பத்தைத் தருகின்றன; சுரங்கங்கள் நல்ல நவமணிகளைத் தருகின்றன; பெறுதற்கு அரிய தம் குலங்கள் குடிகளுக்கு எல்லாம் நல்லொழுக்கத்தை நல்குகின்றன.

கு :— மாடு பால் சுரந்தது என்பது போலக் கொள்ளக்கொள்ளக் குறைபடாது ஊறுதல் சுரத்தல் என்பது. விளைபொருள்களை அயல்நாட்டிற்கு ஏற்றிச் சென்று நிறைபொருளொடு திரும்பிய கலங்கள் செல்வத்தைச் சுரக்கின்றன என்பதாம். பெறுதற்கு அரிய நன்மணியென மணிக்கு அடையாக்குவாரும் உளர். அதனுற் பொருட்சிறப்பின்மை அறிக. குடியென்றது 'படைகுடி கூழ் அமைச்சு' என்புழிப்போல, குடிமக்களை உணர்த்தியது. குடிப்பிறப்புமாம். குலம் என்பது கூட்டம்; மன்னர் குலம் என்பது போல குடியென்பது அதன் உட்பிரிவாக அமைந்தது; சேரசோழ பாண்டியர்குடி யென்ருற்போல்வது. ஒழுக்கம் குலத்தைத் தரும் எனினும் ஆம். (38)

## நாட்டவர் நல்லொழுக்கம் 70—71

**70.** கூற்ற மில்லையோர் குற்றமி லாமையாற்
சீற்ற மில்லைதஞ் சிந்தையிற் செவ்வியால்
ஆற்ற னல்லற மல்லதி லாமையால்
ஏற்ற மல்லதி ழிதக வில்லையே.

கூற்றம் இல்லை, ஓர் குற்றம் இலாமையால்;
சீற்றம் இல்லை, தம் சிந்தையில் செவ்வியால்;
ஆற்றல் நல்லறம் அல்லது இலாமையால்,
ஏற்றம் அல்லது இழிதகவு இல்லையே.

பொ:—(அந்நாட்டு மக்களிடத்தில்) சிறிதும் குற்றம் இலாமையால்எமனைப்பற்றியஅச்சம்இல்லை; தத்தம்மனத்தின்செம்மையால் சினமே யில்லை; செய்வன யாவும் நல்ல தருமங்களே; பாவங்களே இல்லையாதலால் உயர்வன்றி இழிவே இல்லை.

கு:—குற்றம்-மெய் வாய் மனம் என்ற மூன்றுனும் வரும் களவு பொய் காமம்முதலிய குற்றங்கள். அவையின்மையால் யாருக்கும் யமனிடம் பயம் இல்லை. ஆன்றவிந்தடங்கிய கொள்கையினராய்ச் செம்மனச்செல்வராக இருப்பதால் சினம் உண்டாதற்கே

இடமில்லை. அல்லது-பாவம்; அஃதில்லாமையால் அந்நாட்டவர் செய்வன யாவும் அறமே; ஆதலால் ஏற்றமல்லது இழிவு இல்லை என்றவாறு. ஆற்றல் என்னும் தொழிற்பெயர் நல்லறம் என்னும் பெயர்ப்பயனிலை கொண்டு முடிந்தது. இதற்கு இவ்வா றன்றி அவர்கள் செய்வது நல்லறமல்லது வேறின்மையால் உயர் வன்றி இழிதகவு இல்லையெனப் பின்னிரண்டடியை ஒரு தொட ராக்கி முடிப்பாரும் உளர். இங்ஙனம் கூறின், முன்னர்க்கூறிய குற்றமிலாமையும் சீற்றமில்லாமையும் ஏற்றத்திற்குரிய காரணமா காது ஒழியுமாதலின் இம்மூன்றினாலும் ஏற்றமுண்டாயிற்று என இயைத்துக்கூறப்பட்டது. 'ஆற்ற நல்லறம் எனப் பாடங்கொண்டு செய்வதற்கு நல்லறமே யன்றி வேறின்மையால் எனப் பொருள் உரைத்தலும் ஆம். (39)

**71.** நெறிக டந்துப ரந்தன நீத்தமே
குறிய ழிந்தன குங்குமத் தோள்களே
சிறிய மங்கையர் தேயும ருங்குலே
வெறிய வும்மவர் மென்மலர்க் கூந்தலே.

**நெறிகடந்து பரந்தன நீத்தமே;**
**குறி அழிந்தன குங்குமத் தோள்களே;**
**சிறிய மங்கையர் தேயும் மருங்குலே;**
**வெறியவும் அவர் மென்மலர்க் கூந்தலே.**

பொ :—தமக்குரிய வழியைத்தவறிப் பாய்வன வெள்ளமே; தமக்குரிய அடையாளங்கள் அழிந்துபட்டன குங்குமம் அப்பப் பெற்ற தோள்களே; சிறியன பெண்களின் தேய்ந்து நுணுகிய இடைகளே; வெறியுடையன அவர்களுடைய மெல்லிய மலர்களை அணிந்த கூந்தலே; பிற அல்ல.

கு :—ஏகாரம் நான்கும் தேற்றம். நெறி-ஆறுசெல்லவேண்டிய வழி; நல்லொழுக்கநெறி. குறி-அடையாளம் (அதாவது தொய் யிற்குறி); லட்சியம். சிறிய-சிறுமைத்தன்மையுடையன, சிறியன. வெறிய - மணம் உடையன; வெறிபிடித்தவை என இருபொருள் தோன்றநின்றன. இச்செய்யுளால் மக்கள் ஒழுக்கநெறி கடவார், குறிக்கோள் பிழையார், சிறுமை எய்தார், பித்தேறார் என ஒழித் துக் காட்டினமையின் இது ஒழிப்பணியாயிற்று. (40)

புகைகள் பல திரண்டு முகில்போல முழங்கின எனல்

72. அகிலி டும்புகை யட்டிலி டும்புகை
நகலி ஞாலை நறும்புகை நான்மறை
புகலும் வேள்வியிற் பூம்புகை யோடளாய்
முகிலின் விம்மி முழங்கின வெங்கணும்.

அகில் இடும் புகை, அட்டில் இடும் புகை,
நகல் இன் ஆலை நறும் புகை, நான்மறை
புகலும் வேள்வியில் பூம்புகையோடு அளாய்,
முகிலின் விம்மி முழங்கின எங்கணும்.

பொ :—அகிலை இடுதலால் உண்டான புகையும், சமைக்கின்ற இல்லின் இடப்படுகின்ற புகையும், விளக்கம் பொருந்திய கரும் பாலையில் உண்டான நல்ல மணமுள்ள புகையும், நான்கு வேதங் களையும் சொல்லுகின்ற யாகத்தில் உண்டான பொலிவான புகை யும், தம்முட்கலந்து மேகம்போல மிகுந்து எங்கும் முழங்கின.

கு :—தெய்வம் வணங்கவும், மகளிர் கூந்தலை உலர்த்தவும் அகிற்புகை இடுதல் மரபு. நகல் - விளங்குதல். ஆலைநறும்புகை - ஆலையில் வெல்லங்காய்ச்சும்போது உண்டாகின்ற மணமுள்ள புகை. வேள்வியில் விளையும் ஓமப்புகை புண்ணியப் புகையாதலின் பூம்புகையென விசேடித்தார். புகையும், நீரும், நெருப்பும், காற்றும் கலந்து மேகமாகின்றன எனக் காளிதாசன் கூறியதும் ஈண்டு ஒருவாறு இணைதற்கு உரியது. (41)

மகளிர் சாயல்முதலியனபோல மயில்முதலியன
இயங்குகின்றன எனல்

73. இயல்புடை பெயர்வன மயின்மணி யிழையின்
வெயில்புடை பெயர்வன வெறியலர் குழலின்
புயல்புடை பெயர்வன பொழிலவர் விழியின்
கயல்புடை பெயர்வன கடிகமழ் கழனி.

இயல்புடை பெயர்வன மயில்; மணி இழையின்
வெயில்புடை பெயர்வன; வெறியலர் குழலின்
புயல்புடை பெயர்வன பொழில்; அவர் விழியின்
கயல்புடை பெயர்வன கடிகமழ் கழனி.

பொ :—(மகளிருடைய) சாயற்கு (த் தோற்று) மயில்கள் ஒதுங்குகின்றன. வெய்யில் இரத்தினங்கள் இழைக்கப்பெற்ற அணிகளுக்குத் தோற்று ஒதுங்குகின்றன. சோலைகளில் மேகங்கள் மணம் பொருந்திய மலர்களையுடைய கூந்தலுக்குத் தோற்று ஒதுங்குகின்றன. மணம் வீசுகின்ற வயல்களில், கயல்மீன்கள் அவர்களுடைய விழிகளுக்குத் தோற்று ஒதுங்குகின்றன.

கு :—வென்றார்முன் தோற்றார் செல்ல நாணுவராதலின் ஒதுங்கின என்றார். மயில் ஒதுங்க மகளிர்சாயலும், வெயிலொதுங்க மணியொளியும், மேகம் ஒதுங்க, கூந்தன்மணமும், கயல் ஒதுங்க விழியின் புரட்சியும் காரணமாயின என்க. (42)

### அந்நாட்டு அலர்வன இவை எனல்.

**74.** இடையிற மகளிர்க ளெறிபுனன் மறுகக்
குடைபவர் துவரித ழலர்வன குமுதம்
மடைபெய ரனமென மடநடை யளகக்
கடைசியர் முகமென மலர்வன கமலம்.

**இடை இற, மகளிர்கள் எறிபுனல் மறுகக்**
**குடைபவர் துவரிதழ் அலர்வன குமுதம் ;**
**மடைபெயர் அனம் என மடநடை, அளகக்**
**கடைசியர் முகம் என மலர்வன கமலம்.**

பொ :—இடுப்பு ஒடியவும், அலை வீசுகின்ற நீர் கலங்கவும், நீராடுகின்றவர்களாகிய மகளிர்களின் சிவந்த உதட்டைப் போலச் செவ்வல்லிகள் மலர்கின்றன; நீர்மடைகளில் பெயர்ந்து செல்கின்ற அன்னத்தைப் போல இளமை வாய்ந்த நடையினையும், கூந்தலையும் உடைய உழத்தியரது முகம் போலத் தாமரைகள் மலர்கின்றன.

கு :—இடையிற என்றதற்கு மகளிர் குனிந்து நீராடுதலால் இற்றது போல வருந்த என்பது கருத்து. மகளிரின் உதடுபோலக் குமுதம் அலர்வன, முகம் போலக் கமலம் மலர்வன என உவமானத்தை உவமேயமாக மாற்றி எதிர்நிலையணி கொள்ள வைத்தார். அதனால் மகளிர் நீராடுதற்கு முன்பு குமுதங்கள் அவர்கள் உதட்டிற்கு ஒவ்வாதிருந்தன. நீராடிய பின் உதடு சிறிது வெளுத்துப் போனமையின் உதடுகளைப் போலச் செங்குமுதம் மலர்வவாயின. தாமரையும் அங்ஙனமே, என நயந்தோன்ற நிற்றல்

காண்க. அளகக் கடைசியர் முகம் என விசேடித்தமையின் கமலமும் பாசடை, பாசி இவற்ருேடு கிடப்பது உய்த்துணர வைக்கப் பெற்றது. (43)

### நகுவன இவை எனல்

75. விதியினை நகுவன வயில்விழி பிடியின்
கதியினை நகுவன வவர்நடை கமலப்
பொதியினை நகுவன புணர்முலை கலைவாழ்
மதியினை நகுவன வனிதையர் வதனம்.

**விதியினை நகுவன அயில் விழி; பிடியின்**
**கதியினை நகுவன அவர்நடை; கமலப்**
**பொதியினை நகுவன புணர்முலை; கலைவாழ்**
**மதியினை நகுவன வனிதையர் வதனம்.**

பொ:—பெண்களின் வேல்போலும் விழிகள் பிரமனைப் பழிப்பன. அப்பெண்களின் தருக்கிய நடை பெண்யானைகளின் நடையைப் பழிப்பன. அவர்களுடைய இரண்டான முலைகள் தாமரை மொட்டைப் பழிப்பன. அவர்கள் முகம் கலை நிரம்பி வாழ்கின்ற நிறைமதியைப் பழிப்பன என்பதாம்.

கு:—வனிதையர் விழி விதியினை நகுவன என வனிதையர் என்பதை ஒவ்வொன்ருேடும் கூட்டுக. விதி, எல்லாப் பொருளையும், கண்களாகிய தம்மையும் படைத்து விதிப்பவனுயினும், அவனையும் தம் வழி நிறுத்தி விதிக்கும் ஆற்றல் தமக்கு உண்டென்பது தோன்ற விதியைப் பழிப்பவாயின. திலோத்தமையைப் படைத்த பிரமன் அவள் விழிக்குத் தானே கலங்கி நின்ற நிலையை உன்னுக. இங்ஙனம் அன்றி விதி என்பதற்கு நியதியெனப் பொருள் கொண்டு, முனிவர்களுடைய விரத நியமங்களை அழிப்பன என்று மேனகையின் கண்ணுல் விசுவாமித்திரனும், மாயையின் கண்ணுல் காசியபனும் விதியழிந்ததை உட்கொண்டு கூறுவாரும், ஆயுள் நியமமாகிய விதியைப் பழிப்பன எனப் பொருள் கொண்டு நூருண்டு வாழ்வாரும் எம் அயில் விழியால் அடிபட்டு அற்பாயுளர் ஆகின்றனர் எனக் கருத்துரைப்பாரும், சாத்திர விதிகளை நகுகின்றன எனப் பொருள் கூறுவாரும் பலராவர்.

புணர் முலைகள், கமலமுகை அலர்தலும் குவிதலும் உடையதாகி ஏழுநாள் இருந்து பின் நிலையழிதலின் என்றும் நிலையில் தளராத எமக்கு ஈடாகா என்று நகைக்கின்றன என்பதாம்.

கலைவாழ் மதியாயிருந்தும் தேய்தலும் வளர்தலும் பொருந்த லின் எமக்கு ஒப்பாகாது என்று முகம் நகைப்பவாயின. கலைவாழ் மதியினை நகுவன முகம் என்பதில் அறுபத்து நான்கென்ற கலை கள் முழுதும் நிரம்பிய அறிவாயினும் அதனை நிலை குலையச்செய்யும் வன்மை தமக்கு உண்டென்பதை விளக்கி நகுவவாயின என்றும் வேறொரு நயம் தோன்ற நிற்றல் காண்க. (44)

### 'இகலுவ' இவை எனல்

**76.** பகலினொ டிகலுவ படர்மணி மடவார்
நகிலினொ டிகலுவ நனிவள ரிளநீர்
துகிலினொ டிகலுவ சுதைபுரை நுரைகார்
முகிலினொ டிகலுவ கடிமண முரசம்.

பகலினொடு இகலுவ படர்மணி; மடவார்
நகிலினொடு இகலுவ நனிவளர் இளநீர்;
துகிலினொடு இகலுவ சுதைபுரை நுரை; கார்
முகிலினொடு இகலுவ கடிமணமுரசம்.

**பொ :**—எங்கும் பரவிக்கிடக்கின்ற மணிகள் (ஒளியால்) சூரிய னோடு மாறுபடுகின்றன. மிக வளர்ந்த செவ்விளநீர்கள் மாதர் முலைகளோடு மாறுபடுகின்றன. அமுதத்தையொத்த நுரை வெள்ளிய ஆடையோடு மாறுபடுகின்றன. விளக்கம் பொருந் திய மணமுரசங்கள் கரிய மேகத்தோடு மாறுபடுவன.

**கு :**—இகலுவ என்றது ஒன்றினொன்று மிக்கு விளங்குகின் றன என்னும் பொருளில் வந்தது. மணிகள் ஒளியாலும், இளநீர் உருவத்தாலும், வெப்பந்தணிக்குந் தொழிலாலும், நுரை மென் மையாலும் நிறத்தாலும், முரசம் ஒலியாலும் வெயில் முதலியவற் றொடு மாறுபட்டன என்க. "நுரை முகந்தன்ன மென் பூஞ் சேக்கை" என வருதலும் நுரையை ஆடையின் மென்மைக்கும், வெண்மைக்கும் ஒப்பிடுதலையுணர்த்தும். (45)

### 'நிகர்வன' இவை எனல்

**77.** காரொடு நிகர்வன கடிபொழில் கழனிப்
போரொடு நிகர்வன பொலன்வரை பணைசூழ்
நீரொடு நிகர்வன நிறைகட னிதிசால்
ஊரொடு நிகர்வன விமையவ ருலகம்.

காரொடு நிகர்வன கடிபொழில்; கழனிப்
போரொடு நிகர்வன பொலன்வரை; பணைசூழ்
நீரொடு நிகர்வன நிறை கடல்; நிதி சால்
ஊரொடு நிகர்வன இமையவர் உலகம்.

பொ:—மேகம் மணம் பொருந்திய சோலைகளோடு ஒப்பன; மேருமலை வயலிலுள்ள வைக்கோற் போரை ஒப்பன; நீர் நிறைந்த கடல் வயல்களிற் சூழ்ந்துள்ள நீரொடு ஒப்பன; தேவர்கள் உலகம் செல்வங்கள் எல்லாம் செறிந்த மருத நிலத்து ஊர்களொடு ஒப்பன.

கு:—ஏனைய மூன்றடிகளிலும் உவமையும் பொருளும் மாற்றிக் கூறப் பெற்றிருப்பது போல,முதலடியிலும் கடிபொழிலொடு நிகர்வன கார் என உருபு பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்ளுக. (46)

### நெய்தல் வளம்

**78.** நென்மலை யல்லன நிரைவரு தரளம்
சொன்மலை யல்லன தொடுகட லமிர்தம்
நன்மலை யல்லன நதிதரு நிதியம்
பொன்மலை யல்லன மணிபடு புளினம்.

நெல் மலை அல்லன நிரைவரு தரளம்,
சொல் மலை அல்லன தொடு கடல் அமிர்தம்,
நல் மலை அல்லன நதி தரு நிதியம்
பொன் மலை அல்லன மணிபடு புளினம்.

பொ:—(இங்கே காணப்படுவன,) நெற்குவியல் அல்ல, வரிசையான முத்துக்குவியல்கள்; (கடைசியர்களின்) சொற்றொகுதியல்ல, பாற்கடலிலுண்டான அமுதம்; நல்ல மலைகள் அல்ல, ஆறுகள் கொணர்ந்து குவித்த செல்வம்; அழகிய மலையல்ல, மணிகள் நிறைந்த மணற்குன்று.

கு:—மலை என்பது, குவியல், கூட்டம், மலை என்ற பொருள்களில் வந்துள்ளது. தொடுகடல்-தோண்டப்பெற்ற கடல். அது உவர்க்கடலினும் கீழ்கடல் ஒன்றற்கே பொருந்துவதாம். ஆயினும் கடல் என்னும் பொதுமைபற்றிப் பாற்கடலுக்கும் வந்தது. அன்றிக் கரையைத் தொடுகின்ற கடல் என வினைத்தொகையாக்கி உரைப்பாரும் உளர். கரையைத் தொடுதல் எல்லாக்கடற்கும்

இயல்பாய்ப் பாற்கடல் ஒன்றை மட்டும் குறியாமையானும் தொடு கடல் எனச் சாதியடை கொடுத்து வழங்கப் பெறுதல் ஆன்றோர் மரபாதலானும் கடல் என்ற பொதுமை பற்றி வந்த அடையெனப் பட்டது. நிறத்தால் நென்மலை முத்துமலையாகவும். இனிமையால் சொற் கூட்டம் அமுதமாகவும், மிகுதியால் ஆறுதந்த செல்வம் மலையாகவும், உயர்ச்சியால் மணற்குன்று மலையாகவும், கூறப்பெற்றது. இப்பாடலுக்கு, நெல்மலையில்லாத இடங்களில் எல்லாம் முத்து மலைகள்; அவையில்லாத இடங்களில் கடலமுதாகிய உப்பு மலை; அவையில்லாத இடங்களில் ஆறுகொணர்ந்த செல்வக்குவியல்; அவையில்லாத இடங்களில் இரத்தினங்களோடு கூடிய மணல் மேடுகள் என்பாரும், முத்துக்குவைகள் அல்லன நெற்குவைகள்; கடலமுதமல்லன சொற்றிருகுதிகள்; நிதிக்குவையல்லன நல்ல மலைகள்; மணற்குன்றல்லன பொன்மலைகள் என்பாருமாகப் பல உரை பகருவர். இவ்வுரைகளில் அல்லன என்னும் அன்மைச் சொற்கு இன்மைப் பொருள் கூறியும், உவமையையும் பொருளையும் மாற்றிக் கூறியும், கருத்தமைதி வருவித்துரைத்திருத்தல் காண்க. (47)

### பந்தாடுமிடமும் - கலைபயிலிடமும்

**79.** பந்தினை யிளையவர் பயிலிட மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகம்
சந்தன வனமல சண்பக வனமாம்
நந்தன வனமல நறைவிரி புறவம்.

**பந்தினை இளையவர் பயிலிடம், மயிலூர்**
**கந்தனை அனையவர் கலைதெரி கழகம்**
**சந்தனவனம் அல, சண்பகவனமாம்;**
**நந்தனவனம் அல, நறைவிரி புறவம்.**

பொ:—பருவ மங்கையர் பந்தாடும் இடங்கள் சந்தனக் காடுகள் அல்ல; சண்பகவனங்கள். மயிலை வாகனமாகக் கொண்டு செலுத்துகின்ற முருகனை யொத்த காளையர் (விற்கலை, வாட்கலை முதலியன) பயிலும் இடங்கள் நந்தனவனங்கள் அல்ல; மணம் விரியப்பெற்ற காடுகள்.

கு:—இளையவர் பயிலிடம் சந்தன வனம் அல, சண்பக வனம் எனவும், கழகம் நந்தனவனம் அல, புறவம் எனவும், நிரனிறையாகக் கொள்க. மகளிர் மேனி சண்பகப்பூ மணம் நாறுதலும்,

காளையர் மேனி முல்லைப்பூ மணத்தலும் இயல்பாதலின் இங்ஙனம் கூறப்பெற்றது. ஆடவர் மேனி முல்லை மணம் கமழ்தலை,

"தொல்லைத் திங்கள் நெடுவெண் ணிலவின்
மணந்தனன் மன்னெஞ்தோளே
இன்றும் முல்லை முகை நாறும்மே" (193)

என்ற குறுந்தொகைச் செய்யுட்பகுதியானும் அறியலாம். (48)

மகளிரின் சொல் நடை பல் இவற்றின் உயர்வு

80. கோகில நவில்வன விளையவர் குதலைப்
பாகியல் கிளவிக ளவர்பயி னடமே
கேகய நவில்வன கிளரிள வளையின்
நாகுக ளுமிழ்வன நகைபுரை தரளம்.

கோகிலம் நவில்வன இளையவர் குதலைப்
பாகியல் கிளவிகள்; அவர் பயில் நடமே
கேகயம் நவில்வன; கிளர் இள வளையின்
நாகுகள் உமிழ்வன நகை புரை தரளம்.

பொ:—இளமாதர்களுடைய மழலைச் சொல்லாகிய சர்க்கரைப் பாகின் தன்மையையுடைய சொற்களைக் குயில்கள் பழகுகின்றன. அம்மாதர்கள் பழகுகின்ற நடனத்தை மயில்கள் பழகிக் கொள்கின்றன. விளங்குகின்ற இளமை பொருந்திய பெண் சங்குகள் (அம்மகளிரது) பல்லையொத்த முத்துக்களைச் சொரிகின்றன.

கு:—குயில் இனிமையாகக் கூவக்கற்றுக் கொண்டது மகளிர் சொற்களிலிருந்தே; மயில்கள் நடம் கற்றது இவர்கள் நடனத்தைப் பார்த்தே; சங்குகள் முத்தைப் பெற்றாலும் அவை இவர்கள் பல்லையொத்தனவே என எல்லாம் கோசல நாட்டுக் கோதையர் உடைமையென்று உயர்வு கூறியவாறு. குதலை-எழுத்தும், பொருளும் நிரம்பாத இளஞ்சொல். இது மழலையின் வேறுபட்டது. மழலை-பொருள் நிரம்பி, எழுத்து நிரம்பாச்சொல், "செவ்வாய்க்குதலை மெய்பெறா மழலை" என்ற மணிமேகலை பார்க்க. (49)

## பழையர் உழவர் முதலியோர் மனையில் நிகழ்வன

81. பழையர்த மனையன பழநறை நுகரும்
உழவர்த மனையன வுழுதொழில் புரியும்
மழவர்த மனையன மணவொலி யிசையின்
கிழவர்த மனையன கிளைபயில் வளையாழ்.

பழையர்தம் மனையன பழநறை நுகரும்
உழவர்தம் மனையன உழுதொழில் புரியும்
மழவர்தம் மனையன மணஒலி இசையின்
கிழவர்தம் மனையன கிளைபயில் வளையாழ்.

பொ :—பழகிய கள், கள்விற்பாரது மனையின் கண் உள்ளன. (அப்பழநறை) உண்கின்றவர்களாகிய உழுதொழில் செய்யும் உழவர்கள் வீட்டிலும் உள்ளன. மங்கல ஓசை இளங் காளையர்கள் வீட்டில் உள்ளன. கிளையென்னும் நரம்போடு கூடிய வளைந்த யாழ் இசைக்குரிமைபூண்டவர்களாகிய யாழ்ப்பாணர் களது வீட்டிலுள்ளன.

கு :—'பழநறை' என்பதை இடைநிலைத்தீபகமாகக்கொண்டு விற்பனையின் பொருட்டுப் பழையர் மனையில்உள்ளன; நுகர்ச்சியின் பொருட்டு உழவர் மனையிலுள்ளன என உரைக்க. 'நுகரும், புரியும் உழவர் எனக் கூட்டுக. இளங்காளையர் இல்லங்களில் மணம் நடைபெறுமாதலின் அவர்கள் மனையில் மணவொலி நிகழ்வ தாயிற்று.

இங்ஙனமன்றி, பழங்கள் பழையர் மனையன, அக்கள்ளை நுக ரும் உழவர் மனையன உழுதொழில், தமக்கிஷ்டமான மகளிரை விரும்புகின்ற காளையர் மனையன மணவொலி, கிளையென்னும் இசைபொருந்திய வளைந்த யாழ், பாணர்கள் மனையன என்றும், மனையன என்பவற்றிற்கு அவ்வவர் வீட்டுக்குழைந்தைகள் எனப்பொருள்கண்டு, பழையர் வீட்டுக்குழந்தை, பழங்கள்ளைக் குடிக்கும் என்றும், உழுவர் வீட்டுக்குழந்தை உழுதொழில் செய் யும், இளைஞர் வீட்டுக்குழந்தைகள் மணவோசைசெய்யும்; பாணர் வீட்டுக் குழந்தை யாழ்வாசிக்கும் என்றும், கிளைபயில், வளை யாழ் என்பவற்றை நிரல்நிறையாகக்கொண்டுபழையர்தம்மனையன கிளை பழநறை நுகரும், உழவர் தம்மனையனபயில் உழுதொழில் புரியும், மழவர் தம்மனையன வளை மணவொலி (புரியும்),இசையின்கிழவர் தம்மனையன யாழ் (வாசிக்கப்படும்) எனக் கூட்டி, பழையர் வீட் டுக்கிளிகள் பழங்கள்ளைக் குடிக்கும்; உழவர் வீட்டு நந்துகள் உழும்; மழவர் வீட்டு மணச்சங்குகள் மணவொலி செய்யும்,

பாணர் வீட்டு யாழ் வாசிக்கப்படும் என்றும் உரைகூறுவர். ‘பழ கியகள் கள்விற்போர் விடுகளில் உள்ளன, உழவுத்தொழிலுக் கான கருவிகள் கள் பருகும் உழவர் தம் மனையன, மணவாச்சியங் களின் ஒலி மணத்திற்காக வரிக்கப்பெற்ற இளைஞர் வீடுகளில்உள் ளன. கிளையென்னும் நரம்பு பொருந்திய வளைந்த யாழ்கள் இசை பாடவல்ல பாணர் மனையில் உள்ளன எனவும் உரை காண்பர்.

புரிதல்-விரும்புதல், ‘புகழ்புரிந்து’ என்புழிப்போலக்கொள்க. ‘மழவுங் குழவும் இளமைப்பொருள’ ஆதலின் மழவர் என்பது இளங்காளையர் என்னும் பொருளது. (50)

## சொரிவன இவை எனல்

82. கோதைகள் சொரிவன குளிரிள நறவம்
பாதைகள் சொரிவன பருமணி கனகம்
ஊதைகள் சொரிவன வுறையுறு மமுதம்
காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்.

**கோதைகள் சொரிவன குளிர் இள நறவம்;**
**பாதைகள் சொரிவன பருமணி கனகம்;**
**ஊதைகள் சொரிவன உறையுறும் அமுதம்;**
**காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்.**

பொ :—மக்கள் அணிந்துள்ள மாலைகள் குளிர்ந்த இளமை யான தேனைச் சொரிவனவாம், வழிநடைகள் பருமையான மாணிக்கங்களையும் பொன்னையும் சொரிவனவாம். காற்றுக்கள் துளித்துளியாகவுள்ள அமுதத்தைச் சொரிவனவாம். பழைய வர லாறுகள் செவியால் நுகரத்தக்க கவிதைகளாகிய கனிகளைச் சொரிவனவாம்.

கு :—கோதைகள் நறவம் சொரிவன, பாதைகள் பருமணி கனகம் சொரிவன, ஊதைகள் அமுதம் சொரிவன, காதைகள் கனிகள் சொரிவன எனக் கூட்டுக. பாதைகள் மணியையும் கனகத்தையும் சொரிவன என்றது பாதைகளில் கொள்வாரில் லாமையால் மணிகளும் பொன்னும் போட்டது போட்டபடி கிடக்கின்றன என்பதாம். காதை – நிகழ்ந்தவரலாறு; செவிநுகர் கனி என்றது சீரும் தாளமும் பிழையாத செவிக்கு இனிமைதரும் தீங்கவிகளாகிய கனிகள் என்பதாம். ‘செவிநுகர்கவிகள்’ எனப் பாடம் கொள்வாரும் உளர்.

வண்டுகள் தேனடையிற் சேமித்து முதிரவைத்த தேன் போலாது, மாலைகளிலிருந்து சொரிவன நீர்த்தன்மைமிக்கதா யிருத்தலின் 'இளநறவம்' என்றார். உறை – துளி. (51)

மங்கையரை மயில்கள் பின்தொடர்தல்

**83.** இடங்கொள் சாயல்கண் டிளைஞர் சிந்தைபோல்
தடங்கொள் சோலைவாய் மலர்பெய் தாழ்குழல்
வடங்கொள் பூண்முலை மடந்தை மாரொடும்
தொடர்ந்து போவன தோகை மஞ்ஞைகள்.

**இடங்கொள் சாயல்கண்டு இளைஞர் சிந்தைபோல்,**
**தடங்கொள் சோலைவாய் மலர்பெய் தாழ்குழல்,**
**வடங்கொள் பூண்முலை மடந்தைமாரொடும்,**
**தொடர்ந்து போவன; தோகை மஞ்ஞைகள்.**

பொ :—மகளிரது பரிந்த சாயலைக்கண்டு காளையர்மனம் தொடர்ந்து போவதைப்போல், தோகையோடுகூடிய ஆண்மயில் கள் விசாலமான சோலையிடத்து, பூக்கள் சூட்டப்பெற்ற தாழ்ந்த குழலினையும் ஆபரணங்களையும் முத்துவடங்களையும் கொண்ட பெண்களோடு பின் தொடர்ந்து செல்கின்றன.

கு :—சிந்தைபோல் மஞ்ஞைகள் சோலைவாய் மடந்தைமா ரொடுந் தொடர்ந்து போவன எனக் கூட்டுக.

இடங்கொள் சாயல் கண்டு என்றது தங்கண்மாட்டுப் பரிவு கூர்ந்த சாயலைக்கண்டு என்பதாம்: விருப்பங்கண்டுவேண்டியதைக் கேட்கின்றான் என்னும் பொருளில் '' இடங்கண்டு மடத்தைப் பிடிக்கின்றான் '' என்ற பழமொழியும் வழங்குதல் காண்க. மக ளிர்சாயல் தம்மீது கருணை செய்யுந்தன்மையதன்றாயின் இளையர் சிந்தை பின் தொடராது ஆதலின் 'இடங்கொள் சாயல்' என்றார். இளைஞர் சிந்தைபோல் தொடர்ந்தன மயில் என்றது. காமுற்றார் மனம் தாமதகுணத்தாற் கருமையுறுதலின் இங்ஙனம் கூறப்பெற் றது. மகளிரிடமுள்ள மென்மையைக் கற்கவேண்டிப் பின் தொடர்ந்தது எனலுமாம். தடங்கொள் சோலையென்பதற்குத் தடாகங்களைக்கொண்ட சோலையெனலுமாம். (52)

வண்மை முதலியன அந்நாட்டில் இல்லாமைக்கு ஏது

84. வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லை பொய் யுரையி லாமையால்
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்.

வண்மை இல்லை, ஓர் வறுமை இன்மையால்;
திண்மை இல்லை, நேர் செறுநர் இன்மையால்;
உண்மை இல்லை, பொய் உரை இலாமையால்;
வெண்மை இல்லை, பல் கேள்வி மேவலால்,

பொ :—ஒன்றிலும் வறுமையில்லாமையால் வழங்குகின்ற வள்ளன்மையும் அந்நாட்டில் இல்லை; எதிர்த்து நின்றுபொருவார் இல்லாமையால் வலிமையும் இல்லை; பொய்பேசுதலே இல்லாமையால் உண்மையும் இல்லை; பலவகை நூற்கேள்விகளும் நிரம்பியிருத்தலால் (உள்ளீடு இல்லாத) வெள்ளையறிவும் இல்லை.

கு :—வெண்மையறிவு, வெளிற்றுரை என்பன பொருள் நிரம்பாத அறிவும் சொல்லும், ஆதலால் எல்லோரும் எல்லாக்கலையும் கற்றவர்கள் ஆதலின் அங்குள்ளார் பொருள்பொதிந்த கருத்தினர்களே என்பதாம். ஒண்மையில்லை பல்கேள்வி யோங்கலால் என்றும் பாடம். (53)

பண்டங்கள் பெய்த பண்டிகள்

85. எள்ளு மேனலும் மிறுங்குஞ் சாமையும்
கொள்ளும் கொள்ளையிற் கொணரும் பண்டியும்
அள்ள லோங்களத் தமுதின் பண்டியும்
தள்ளு நீர்மையிற் றலைம யங்குமே.

எள்ளும், ஏனலும், இறுங்கும், சாமையும்,
கொள்ளும் கொள்ளையில் கொணரும் பண்டியும்,
அள்ளல் ஓங்கு அளத்து அமுதின் பண்டியும்,
தள்ளும் நீர்மையில் தலை மயங்குமே.

பொ :—எள்ளையும், செந்தினையையும், சோளத்தையும், சாமையையும், கொள்ளையும் மிகுதியாகக்கொண்டுவரும் வண்டிகளும், அள்ளுதல்தொழில் மிகுந்திருக்கின்ற உப்பளத்தில் விளைந்த உப்

பாகிய அமுதம் ஏற்றிய வண்டிகளும் கைகளால்தள்ளுகின்ற அள வுக்குத் தம்மிற் கலந்திருக்கும் என்பதாம்.

கு :—அள்ளல் ஓங்கு அளம் – குழைசேறுமிகுந்த உப்பளம் என்பாரும் உளர். குழைசேற்றினை மிதித்து இறுகப் பண்ணிய இடமே அளமாதலானும், அத்தகைய இடத்திலே உப்பு வாரிக் கொள்ளக்கூடிய அளவிற்கு விளையுமாதலாலும், அள்ளல் ஓங்கு அளம் என்பதற்கு உப்பு அள்ளுதல்தொழில் மிக்க உப்பளம் எனப் பொருள் காணப்பெற்றது. அமுது – உப்பு. வண்டிகள் குறுக்கும் நெடுக்குமாகப் பின்னிக்கிடந்தால் காளைகளைக்கொண்டு இழுக்கமுடியாது; கையாற்றள்ளவே வேண்டுமாதலின் நெருக்கத் தின் மிகுதியைக் குறிப்பிடுபவர் தள்ளுநீர்மையின் என்றார். தலை மயங்கும் - ஒருநிலத்துப்பொருள் மற்றோர் நிலத்திற்குக் கொண்டு போகப்படும் எனவும் கருத்துக்கொள்ளலாம். (54)

### பண்டங்கள் கலத்தல்

**86.** உயருஞ் சார்விலா வுயிர்கள் செய்வினைப்
பெயரும் பல்கதிப் பிறக்கு மாறுபோல்
அயிருந் தேனுமின் பாகு மாயவூர்த்
தயிரும் வேரியுந் தலைம யங்குமே.

**உயரும் சார்வு இலா உயிர்கள் செய்வினைப்**
**பெயரும் பல்கதிப் பிறக்குமாறு போல்,**
**அயிரும், தேனும், இன் பாகும், ஆயர் ஊர்த்**
**தயிரும், வேரியும், தலை மயங்குமே.**

**பொ :**—தாம் உயர்கதியை அடைவதற்குரிய பற்றுக்கோட் டினைப் பற்றாத ஆன்மாக்கள் தத்தம் வினைவயத்தால் மாறிமாறி வருகின்ற பலவாகிய கதிகளிற் பிறப்பதுபோல, சருக்கரையும், தேனும், வெல்லப்பாகும், இடையர்ஊராகிய முல்லை நிலத்தூர் களிலுள்ள தயிரும் கள்ளும் இடம் பெயர்ந்து செல்கின்றன.

கு:—உயருஞ்சார்வு – உயர்வதற்கு ஏதுவாகிய பற்றுக்கோடு. 'பற்றுக பற்றற்றான்பற்றினை' என்றதனை உட்கொண்டு கூறிய வாறு. பல்கதி - மக்கட்கதி, தேவகதி. நரககதி, விலங்குகதி என்ற நால்வகைக் கதிகள். ஏதேனும் ஓர் உபாயத்தான் உயர்கதியை அடைய வேண்டிப் பிறந்த உயிர்கள் அதனைச்செய்யாது நால் வகைக் கதியுள்ளும் மாறிமாறிப் பிறத்தல்போல. மருதநிலத்து

இன்பாகும் அயிரும் குறிஞ்சி நிலத்துத்தேனும், முல்லைநிலத்துத் தயிரும், நெய்தனிலத்துக்கள்ளும் தம்முள் இடமாறிச் செல்கின் றன என்பதாம். அயிர் – கண்டசருக்கரை. இன்பாகு – கருப்பஞ் சாற்றை என்றைக்கும் பாகுபதத்திலேயே இருக்கக் காய்ச்சப்பெற் றது ஒன்று. வேரி – கள் ; நெய்தற்கருப்பொருளாகிய பனை, தென்னை முதலியவற்றினின்று எடுக்கப்பெறுவது. (55)

### விழாவும் – வேள்வியும்

87 கூறு பாடலுங் குழலின் பாடலும்
வேறு வேறுநின் றிசைக்கும் வீதிவாய்
ஆறு மாறும்வந் தெதிர்ந்த வாமெனச்
சாறும் வேள்வியும் தலைம யங்குமே.

**கூறு பாடலும், குழலின் பாடலும்,**
**வேறு வேறு நின்று இசைக்கும் வீதிவாய்,**
**ஆறும் ஆறும் வந்து எதிர்ந்தவாம் எனச்**
**சாறும் வேள்வியும் தலைமயங்குமே.**

பொ :—வாய்ப்பாட்டும், புல்லாங்குழல் முதலிய குழல்களின் பாடலும், தனித்தனியாக நின்று ஒலிக்கின்ற வீதியில், இரண்டு ஆறுகள் தம்முள் எதிர்ப்பட்டாற்போல, விழாவின்பொருட்டு வந்த கூட்டமும், யாகத்தின்பொருட்டு வந்த கூட்டமும் தம்முட் கலந்தன.

கு :—கூறுபாடல் – வாயாற் கூறுகின்றபாடல்; என்றது மிடற் றுப்பாடலை. குழலின் பாடல் - புல்லாங்குழல், நாதசுரம் முதலிய ஊதுகுழலால் உண்டாக்கப்பெறும் பாடல்கள். சாறு - கோயில் களிலும், அரண்மனைகளிலும்எடுக்கப்பெறும் விழாக்கள். வேள்வி– யாகம். (56)

### எல்லா ஒலியும் உழவர் வாயொலியில் அடங்குதல்

88; மூக்கிற் றூக்குறு மூரி நந்துநேர்
தாக்கிற் றூக்குறும் பறையுந் தண்ணுமை
வீக்கித் தாக்குறும் விளியு மள்ளர்தம்
வாக்கிற் றூக்குறு மொலியின் மாயுமே.

மூக்கில் தாக்குறும் மூரி நந்தும் நேர்
தாக்கில் தாக்குறும் பறையும், தண்ணுமை
வீக்கித் தாக்குறும் விளியும், மள்ளர்தம்
வாக்கில் தாக்குறும் ஒலியின் மாயுமே.

பொ :—மூக்குப்போன்ற இடத்திலே வாய்வைத்து ஊதுவதால் ஒலிக்கின்ற வலிமை பொருந்திய சங்கவாத்தியத்தின் ஓசையும், நேரிதான குறுந்தடியின் அடித்தலால் ஒலிக்கின்ற பறையோசையும், இழுத்துக் கட்டித் தாக்குதலால் எழும் மத்தளவோசையும், உழவர்கள் (காளைகளை உரப்புகின்ற) வாயினுல் உண்டாக்கப்பெறும் ஒலியால் அடங்கிவிடும்.

கு :—'உழவர் கைம்மடங்கின் என்னும்' என்பவாதலின் மணச் சங்கு மணப்பறை இவற்றின் முழக்கமும், இசைக்கலை நுகர்ச்சிக்காக இயம்பப்படும் மத்தளவொலியும் எல்லாம் உழவர் வாயோசையில் அடங்கின என்பதாம். அடங்கின என்பதற்கு அந்தச் சிற்றெலிகள் இப்பேரொலியில் அடங்கின என்பது கருத்தன்று. உழவர் வாயொலியே அவற்றிற்கு ஏதுவாய்த் தன்னுள் அடக்கித் தான் அவற்றிற்கெல்லாம் ஆதாரமாக நிற்கின்றது என்பதாம். நேர்தாக்கு-நேரிதான குறுந்தடி. தாக்குஎன்ற முதனிலைத்தொழிற் பெயர் ஆகுபெயராகித் தாக்குதலுடைய குறுந்தடியை யுணர்த்திற்று. (57)

### மகளிர் மக்களுக்கு மாலையிற் பாலூட்டுதல்

89. தாலி யைம்படை தழுவு மார்பிடை
மாலை வாயமு தொழுகு மக்களைப்
பாலி னூட்டுவார் செங்கை பங்கயம்
வானி லாவுறக் குவிவ மானுமே.

தாலி ஐம்படை தழுவும் மார்பிடை
மாலைவாய் அமுது ஒழுகும் மக்களைப்
பாலின் ஊட்டுவார் செங்கை, பங்கயம்
வால் நிலாவுறக் குவிவ மானுமே.

பொ ;—ஐம்படைத்தாலியை யணிந்த மார்பில் அணிந்த மாலையின்கண் மாலைமாலையாக அமுதத்தை ஒழுகவிடுகின்ற குழந்தைகளுக்குப் பாலூட்டுகின்ற தாய்மார்களின் சிவந்த கைகள் (சங்கமாகிய) வெண்மையான நிலவுதோன்றலால் தாமரைகள் குவிவனவற்றைப் போன்றன.

கு :—தாலிஐம்படை என்பதை ஐம்படைத்தாலி என மாறுக. ஐம்படைத்தாலி - காத்தற்கடவுளான திருமாலின், சங்கு சக்கரம் தண்டு வில் வாள் என்னும் ஐந்தாயுதவடிவாகச் செய்து குழந்தையின் கழுத்தில் தொங்கவிடும் ஒருவகை ஆபரணம், அமுது – குழந்தைவாயூறலை அமுதென்றல் மரபு. பாலின் - இன் தவிர்வழிவந்த சாரியை. (58)

### மாதர்மாட்சி

90. பொற்பி னின்றன பொலிவு பொய்யிலா
நிற்பி னின்றன நீதி மாதரார்
அற்பி னின்றன வறங்க ளன்னவர்
கற்பி னின்றன கால மாரியே.

பொற்பில் நின்றன பொலிவு; பொய்யிலா
நிற்பின் நின்றன நீதி; மாதரார்
அற்பின் நின்றன அறங்கள்; அன்னவர்
கற்பின் நின்றன காலமாரியே.

பொ :—அந்நாட்டு மக்களுடைய அகத்தழகின்கண் அமைந்தன புறத்தழகுகள். நீதிகள்பொய்மையற்றநிலையால்நின்றன. அறங்கள் அவர்கள் அன்பினுல் நிலைபெற்றிருந்தன. பருவமழைகள் அவர்கள் கற்பினுல் நிலைபெற்றன.

கு :—மாதரார் என்பது இடைநிலைத்தீவகமாக முன்னும் பின்னும்சென்றியைந்து பொருள் தந்தது; பின்னிரண்டடியையும் மாதரார் இயல்பிற்கு ஆக்கி, முன்னிரண்டடிகளையும் ஆடவர் செயலுக்கு ஆக்கிப் பொருள் கூறுவாரும் உளர். பொலிவு - அழகு. நற்குணமே அவர்களுக்கு அழகாதலை 'மங்கலம் என்பமனைமாட்சி' என்ற குறளாலும் அதன் பரிமேலழகர் உரையாலும் அறிக நிற்பு – நிலை. தொழிற்பெயர். பொய்யிலா நிற்பு - உண்மையான நிலை. நீதியின் நிலைக்களன் உண்மையென்றவாறு. அன்பே அறத்தின் ஆதாரம் என்றலை 'அறத்திற்கே அன்பு சார்பு' என்ற குறளானும், மாதர்கற்பே மழைக்குக் காரணமாதலை, 'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் மழை'யென்னும் குறளானும் "வான்றருங்கற்பினுள்" "மழை வேண்டிற் றருகிற்கும் தன்மையளே" என்பன போன்ற சங்கச் செய்யுட்களானும் அறியலாம். முன்னிரண்டடிகளையும் ஆடவர்க்கு ஆக்குங்கால், அழகு ஆடவர்களின் நல்ல குணங்களில்

நிலைபெற்றன. உண்மையான ஒழுக்கத்தில் நிலைபெற்றன நீதி எனப் பொருள் காண்பர். 'எங்கே குணமோ அங்கே அழகு' என்ற ஆரியப்பழமொழியும் ஈண்டுச் சிந்தித்தற்குரியது. அற்பு எதுகை நோக்கி வன்தொடர்க்குற்றியலுகரமாயிற்று. (59)

## அத்தேசம் எல்லை காண்பரியது எனல்

91. சோலை மாநிலந் துருவி யாவரே
வேலை கண்டுதா மீள வல்லவர்
சாலும் வார்புனற் சரயு வும்பல
காலி னோடியுங் கண்ட தில்லையே.

**சோலை மாநிலம் துருவி, யாவரே**
**வேலை கண்டு தாம் மீள வல்லவர்;**
**சாலும் வார்புனல் சரயுவும் பல—**
**காலின் ஓடியும் கண்டது இல்லையே.**

பொ :—சோலைகள் சூழ்ந்த பெரிய கோசல நாட்டைத் தேடிச் சென்று எல்லைகண்டு மீளவல்லவர் யார்? நிறைந்த ஒழுகுகின்ற நீரோடுகூடிய சரயுநதியும் பல கால்வாய்களாக ஓடிச்சென்று (பரவியும்) நாட்டின் எல்லை முழுதையும் கண்டதில்லை.

கு :—வேலை - எல்லை. சரயுநதி பலகால்களைக் கொண்டும் ஓடிக்காணமுடியாதபோது இருகாலையுடைய மக்கள் எங்ஙனம் காண்பர் என்ற சொன்னயந் தோன்ற நிற்றல் காண்க. சரயுவும் உம்மை உயர்வுசிறப்பு. வல்லவர் யாவரே எனக் கூட்டுக. தாம் - அசை. (60)

## கோசலநாடு ஊழிபேரினும் பேராச்சிறப்பினதெனல்

92. வீடு சேரநீர் வேலை கான்மடுத்
தூடு பேரினும் மூலைவி லாநலம்
கூடு கோசல மென்னுங் கோதிலா
நாடு கூறினும் நகரங் கூறுவாம்,

**வீடு சேர நீர் வேலை கால் மடுத்து**
**ஊடு பேரினும் உலைவு இலா நலம்**
**கூடு கோசலம் என்னும் கோது இலா**
**நாடு கூறினும். நகரம் கூறுவாம்.**

பொ :—நீர் நிறைந்த கடல் காற்றால் தாக்குண்டு எல்லாம் அழிந்துபட நிலத்தோடு புரண்டு வந்தாலும் அழிவேயில்லாத நன்மை சேர்ந்த கோசலம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற குற்றமற்ற நாட்டியல்பைப் பேசினோம். இனி நகரத்தின் சிறப்பினைக் கூறுவோம்.

கு :—வீடு – முதனிலை திரிந்த தொழிற்பெயர். அழிதல் என்னும் பொருளது. கால் - புயற்காற்று. ஊழிபெயரினும் தான் பெயரா நாடென்றவாறு. (61)

நாட்டுப்படலம் முற்றும்

# 3. நகரப் படலம்

[இது நகரத்தின் சிறப்புக் கூறும் படலம் எனப் பொருள் படும். இங்கு நகரம் என்றது திருமால் இராமனாக அவதரித்த இடமான அயோத்தியை உணர்த்திற்று. அயோத்தி எனின், பகைவர் உட்புகுந்து பொருதற்கரிய வலியெல்லாம் வாய்ந்தது என்பது பொருள். இப்படலம் எழுபத்தைந்து கவிகளால் ஆனது. அவற்றுள் முதல் ஏழுகவிகளால், அயோத்தி இருமொழிப் புலவர்களாலும் ஏத்தப் பெற்றது; நிலமகள் முகமாகவும் கண்ணாகவும் திலகமாகவும் அணியாகவும் மங்கல நாணாகவும் விளங்குவது; திருமகளுறையும் தாமரைமலரும், வைகுண்டமும், கௌத்துபமணி வைக்கும் பெட்டியும், திருமாலுதரமும் போல்வது; அமராவதியையும் அளகாபுரியையும் படைத்துப் பழகிய பிரமன் இந்நகரைப் படைத்தான் எனின், இதன் அழகு எத்துணையுயர்வானது. இந்த நகரத்தைப் பார்த்தபிறகு மயனும் வெட்கத்தால் தன் தொழிலை மறந்துவிட்டான். இந்நகரமே புண்ணிய பூமியும் போக பூமியுமாம். இந்நகரில் இல்லாத உயர்ந்த பொருள் எங்கும் இல்லை என்று பொதுவகையாற் பாராட்டி, பின்னர், கோபுரம், அகநகர், அகநகர்மாளிகைகள், தெருக்கள், மன்றங்கள், கடைத்தெருக்கள், அங்கு வாழும் மக்களியல்பு, அவர்களுடைய செல்வம், கல்வி, பொழுதுபோக்கு, இல்லற வாழ்வு முதலிய எல்லாவற்றையும் சிறப்பாகத் தெரிவித்து நகரப் படலம் முற்றுகிறது.

ஆறு, நாடு, நகரங்களின் பெருமையை விரித்துக் கூறப் புகுந்த ஆசிரியர் உள்ளத்தே அவர் வாழ்ந்த சோழவள நாடும் அதனைப் பல்லாற்றானும் வளம்படுத்தும் காவிரியாறும், தமிழ் நாட்டரசர்களின் தலைநகரங்களும், சிலப்பதிகார முதலிய முந்து நூல்களில்அவர் கண்ட நாட்டியல்பும், ஆற்றியல்பும் நகரமைதியும், திருவள்ளுவர் கூறிய நாடு நகரங்களின் இலக்கணமும் ஒருங்கே தோன்றுகின்றன. அவற்றோடு வான்மீகர் கூறிய இராமாவதாரகாலத்துக் கோசல நாட்டு இயல்பும், அயோத்தி நகரமைதியும் கொண்டு, தம்புலமைத்திறத்தாலும் கவித்திறத்தாலும் என்றும் எங்கும் காணமுடியாத உயர்ந்த நாடு நகரங்களை ஆசிரியர் இங்கே படைத்துக் காட்டியுள்ளார். பிற நூல்களிற் கூறியவாறு மக்கள் ஒழுக்கத்திற்கும். மகளிர் கற்புக்கும் அச்சத்தைக் காரணமாகக் கூறாமல், கோசல நாட்டு மக்கள் தத்தம் பரம்பரைப் பழக்கத்தாலும், குல நலத்தாலும், கல்வி கேள்விகளாலும் ஒழுக்கமுடையவர்களாக விளங்குகின்றார்கள் என்னும் அழகு ஆராய்ந்து இன்புறுவதற்குரியது.]

---

## 3. நகரப் படலம்

### அயோத்தியின் பெருமை 93—99

**93.** செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற்
★ சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞ ரனைவரும் வடநூன்
முனிவரும் புகழ்ந்தது வரம்பில்
எவ்வுல கத்தோ ரியாவருந் தவஞ்செய்
தேறுவா ஞுதரிக் கின்ற
அவ்வுல கத்தோ ரிழிவதற் கருத்தி
புரிகின்ற தயோத்திமா நகரம்.

செவ்விய, மதுரம் சேர்ந்த நல் பொருளில்
சீரிய, கூரிய, தீஞ்சொல்
வவ்விய கவிஞர் அனைவரும், வடநூல்
முனிவரும் புகழ்ந்தது; வரம்பில்
எவ்வுலகத்தோர் யாவரும் தவம் செய்து
ஏறுவான் ஆதரிக்கின்ற
அவ் உலகத்தோர் இழிவதற்கு அருத்தி
புரிகின்றது அயோத்தி மாநகரம்,

பொ :—அயோத்திமாநகரமானது செம்மையையுடைய, இனிமைவாய்ந்த, நல்ல பொருள்களாற் சிறந்த, நுணுக்கமான இனிய சொற்களாலாகிய கவிகளைச் செய்த எல்லாப் புலவர்களாலும், வடமொழி நூல்களை அருளிய முனிபுங்கவர்களாலும் புகழப் பெற்றது. எல்லையற்ற எல்லா உலகங்களிலும் உள்ள எல்லாரும் தவங்கள் பல செய்து உயர்வற உயர விரும்புகின்ற அந்தப் பரம பதத்தில் உள்ளவர்களும் அவதாரஞ் செய்ய ஆசைப்படுந்தன்மையை உடையது.

கு :—செவ்விய, சேர்ந்த, சீரிய, கூரிய, வவ்விய எனப் பெயரெச்சங்களை அடுக்கி, கவிஞர் என்பதன் பகுதியாகிய கவி என்னும் பகுதியோடும் வட நூல் என்பதனோடும் தனித்தனி கூட்டி முடிக்க.

செவ்விய-செம்மையை யுடைய. செம்மையாவது செஞ்சொற்களாலியன்றமை. செஞ்சொல் ஆக்கச்சொல் குறிப்புச்சொல் என்ற

மூன்றனுள் தனக்குரிய பொருளை நேரேயுணர்த்துவதாகிய செஞ் சொல்லாலான கவி என்பார் செவ்விய கவி என்றார். செவ்வி– அழகு. செவ்விய–அணிகளோடு கூடிய என்பாரும் உளர், மடக்கு முதலிய சொல்லணிகளும் உவமை முதலிய பொருளணிகளும் உடைய கவி செவ்விய கவி. மதுரம்-இனிமை; அதாவது சுவை. சுவையாவன நகையே அழுகை இளிவரல் மருட்கை அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்ற எண்வகைச்சுவைகளும், சமநிலையுளப் பட ஒன்பதுமாம். நற்பொருளிற் சீரிய-கூறப்படுகின்ற பொருள் களின் உயர்வாற் சிறந்த. பொருளணிகளாற் சிறந்த என்பது மாம். நற்பொருள், மோட்சமும் ஆம். நூற்குள்ள சிறப்பு, கூறப்படும் பொருளின் உயர்வாலேயே உண்டாவது; ஆதலின் சீரிய என்றார். சூரிய-நுணுக்கமான. அதாவது தொனிப் பொருள் உள்ளுறைப் பொருள் முதலிய பயக்கு நிலையில் சொற்றொடர் அமைதல். தீஞ்சொல் வவ்விய—இனிய சொல்லோடு கூடிய; கதைப்போக்கிற்கும், சந்தத்திற்கும் இயைய மெல்லோசையும், வல்லோசையும் மிடுக்கும் பொருந்திச் செவிக்கு இனிமைபயக்கும் சொல். இத்தனையும் பொருந்திய கவி, இத்தனையும் பொருந்திய வடநூல் எனக் கூட்டுக. கவிஞர்–இராமகாதையைச் சிறிது சிறி தாகக் கூறிய சங்கப் புலவரும், முழுதுங் கூறிய பதினெட்டு மொழியிலுமுள்ளபுலவர்களும்ஆவர். வடநூன் முனிவர்-வான்மீகி, வசிட்டர் போதாயனர் முதலிய முனிவர்கள். வரம்பில் எவ்வுலகத் தோர்-பரப்பால் எல்லையற்ற பூலோக முதலிய மேலேழுல கங்களிலும், அதலம், விதலம் முதலிய கீழேழுலகங்களிலும் உள் ளவர்கள். அவ்வுலகம் என்றது பரமபதத்தை. அது அனைவரும் பல்லூழிகாலம் தவம்பயின்று எய்தக் கூடிய இடம். அங்ஙனம் இருந்தும் அவர்கள் அயோத்திக்கு வர விரும்புவது உபய விபூதி நாயகனாகிய இராமபிரான் பூரண கலையோடும் இங்குப் போந்து விளங்குதலின் என்க. புகழ்ந்தது என இறந்தகால வினையாற் கூறிய ஆசிரியர் அருத்தி புரிகின்றது என நிகழ்கால வினைமுற்றாகக் கூறியது அயோத்தி நகரம் அத்தகையமேன்மையுடன் என்றும் இருப்பது என்பதைக் குறிக்க என்க. (1)

### அயோத்தியை வியத்தல்

**94.** நிலமகண் முகமோ திலகமோ கண்ணோ
நிறைநெடு மங்கல நாணோ
இலகுபூண் முலைமே லாரமோ வுயிரி
னிருக்கையோ திருமகட் கினிய

மலர்கொலோ மாயோன் மார்பினன் மணிகள்
வைத்தபொற் பெட்டியோ வானோர்
உலகின்மே லுலகோ வூழியி னிறுதி
யுறையுளோ யாதென வுரைப்பாம்.

நிலமகள் முகமோ! திலகமோ!! கண்ணோ!!!
நிறை நெடு மங்கலநாணோ!!!
இலகுபூண் முலைமேல் ஆரமோ!!! உயிரின்
இருக்கையோ!!! திருமகட்கு இனிய
மலர்கொலோ!!! மாயோன் மார்பின் நல் மணிகள்
வைத்த பொற்பெட்டியோ!!! வானோர்
உலகின்மேல் உலகோ!!! ஊழியின் இறுதி
உறையுளோ!!! யாது என உரைப்பாம்.

பொ :—அயோத்தி நகரம், பூமி தேவியின் முகமோ! (அம்முகத்தில் இடப்பெற்ற) மங்கலப் பொட்டோ! அம்முகத்திற் சிறந்த உறுப்பாகிய கண்ணோ! நிறைந்த நெடிய திருமங்கலக் கயிறோ! விளங்குகின்ற ஆபரணங்களை யணிந்த முலைகள் மேல் விளங்குகின்ற முத்துவடமோ! உயிர்களின் இருப்பிடமோ! இலக்குமி தேவிக்கு இனிமைபயப்பதான செந்தாமரை மலரோ! திருமால் திருமார்பிலணியப்பெற்ற கௌத்துபம் போன்ற (உயர்ந்த) மணிகள் வைக்கப் பெற்ற அழகிய பெட்டியோ! தேவர்கள் உறையும் உலகமாகிய சுவர்க்கத்திற்கும் மேலானதாக விளங்கும் வைகுந்தமோ! ஊழிக்காலத்திறுதியிலே எல்லா உயிர்களும் தங்குமிடமாகிய திருமாலின் திருவயிறோ! இவற்றுள் எது என்று துணிவோம்.

கு :—மக்களை முகமின்றி அறியப்படாவாறுபோல அயோத்தியின்றிப் பூமியின் சிறப்பியல்பைத் தெரியக் கூடாமையின் முகமோ என்றும், அம்முகத்திற்கும் அழகு செய்வது திலகமாதலின் 'திலகமோ' என்றும், திலகமும் அழகுசெய்வதன்றி அறிதல்செய்யாது ஆதலின் அழகும் அறிதலும் செய்கின்ற அயோத்திக்கு ஒவ்வாதென்ற உணர்வு தோன்ற அகவுணர்வை வெளிப்படுத்திப் புறவுணர்வை யுட்கொடுக்கின்ற, கண்ணிற் சிறந்த உறுப்பில்லாமையை யுளத்திற் கொண்டு 'கண்ணோ' என்றும் மகளிர்க்குச் சிறந்ததாய், அணிகளைப் பாதுகாக்கும் அணியாய் மன் கலம் எனப் பாராட்டப்பெறுதலின் 'மங்கல நாணோ' என்றும் மங்கல நாண்போல ஆடவர் கண்ணிற்படாமல் மறைந்து கிடவாது காட்சியைக் கவர்ந்து எடுப்பாயிருக்கும் சிறப்பு நோக்கி

முலைமேல் ஆரமோ என்றும், அப்பூமிதேவிக்கு உயிர்போல்வார் திருமால், ஆதலின் அவர் இராமபிரானுகத் தோன்றி எழுந்தருளிய இடம் இதுவாதலின் உயிரின் இருக்கையோ என்றும், திருமகள் வீட்டுலகின் நீங்கி மிதிலையில் தோன்றினும் இந்நகரையே என்றும் வாழிடமாகக் கொண்டு விளங்குதலின் திருமகட்கினிய மலர்கொலோ என்றும், கௌத்துபமணி வைத்த பெட்டி பாற்கடல். அதுபோல இந்நகரமும் பல சிறந்த பொருளுக்கு உறைவிடமாய் இராமன் என்றும் எழுந்தருளியிருக்குமிடமாக இருத்தலின் பொற்பெட்டியோ என்றும், மிக உயர்ந்த இன்பத்தைத் தருதலானும், எல்லாவுலகினும் சிறந்திருத்தலானும் வானோர் உலகின்மேலுலகோ என்றும், ஊழியிறுதியில் எல்லாவுயிர்களும் திருமால்வயிற்றடங்கி அழிவின்றியிருத்தல்போல அனைவரும் இந்நகரத்துக் கேடின்றியிருத்தலின் 'ஊழியினிறுதி யுறையுளோ' என்றும், துணிந்து சொல்லக் கூடாமையின் யாதென உரைப்பாம் என்றும் கூறினர். எல்லாச்சிறப்பும் ஒருங்கியைந்துள்ள நகருக்கு, சிறப்பு ஒன்றுென்றேயுடைய முகமுதலியவற்றில் ஒன்றைமட்டும் ஒப்பிடுவது கூடாது ஆதலின் அனைத்தும் அந்நகருக்கு ஒப்பாம் என்றவாறு. மங்கல அணியைத் தனியே அணிதல் வழக்கன்று; கயிற்றிற்கோத்தே அணிதல் வழக்கு. ஆதலின் மங்கல நாண் என்றார். பிறஅணிகள் எத்துணையிருப்பினும் அணிகட்கு எல்லாம் அரச அணியாயும் நிறைந்தும், பெருமையிற் சிறந்தும் இருப்பது இதுவென்பார் 'நிறை நெடு மங்கல நாண்' என்று விதந்து கூறினர். (2)

### பருதியும் மதியும் உலாவரற் காரணம்

95. உமைக்கொரு பாகத் தொருவனு மிருவர்க்
கொருதனிக் கொழுநனு மலர்மேல்
கமைப்பெருஞ் செல்வக் கடவுளு முவமை
கண்டிலா நகரது காண்பான்
அமைப்பருங் காதன் முன்பிடித் துந்த
வந்தரஞ் சந்தி ராதித்தர்
இமைப்பிலர் திரிவ ரிதுவலா லதனுக்
கியம்பலா மேதுவே றுளதோ.

உமைக்கு ஒருபாகத்து ஒருவனும், இருவர்க்கு
ஒருதனிக் கொழுநனும், மலர்மேல்
கமைப்பெருஞ் செல்வக் கடவுளும், உவமை,
கண்டிலா நகர் அது காண்பான்,

அமைப்பரும் காதல் முன் பிடித்து உந்த,
அந்தரம் சந்திராதித்தர்,
இமைப்பிலர் திரிவர்; இது அலால் அதனுக்கு
இயம்பலாம் ஏது வேறு உளதோ

பொ :—உமாதேவியை ஒருபாகத்திலே கொண்டு எழுந்தருளியிருக்கின்ற ஒப்பற்றவனான சிவபிரானும், பூமிதேவியும் சிதேவியுமாகிய இருபெருந்தேவியர்க்கும் ஒப்பற்ற சிறப்புவாய்ந்த நாயகனாகிய திருமாலும், உந்தியந்தாமரையில் உதித்த பொறுமையையே பெருஞ்செல்வமாகப் படைத்த பிரமனும் உவமையாக வேறொரு நகரைக்காணாத அவ்வயோத்தியின் (அழகைக்) காண்பதற்காக, தடுத்தற்கரிய ஆசை முன்னே பிடித்துத்தள்ளுதலால், சந்திரனும், சூரியனும், வான வீதியில் கண்ணிமைக்காதவர்களாகத் திரிந்து கொண்டேயிருப்பர்; இதுவன்றி அவர்கள் திரிவதற்குச் சொல்லக் கூடிய காரணம் வேறு ஏதாயினும் உண்டோ? இல்லை.

கு:—திரிமூர்த்திகளும் உவமை காணமுடியாத பெருமையையுடையது அயோத்தி நகரம். அங்ஙனமாக, அதற்கு உவமையான நகரத்தைக் காணச் சூரிய சந்திரர் இருவருமே விழித்தகண் இமைக்காமற் சுற்றித்திரிகின்றனர்; ஆசை வெட்கமறியாமையால் என்பது கருத்து. உமைக்கு ஒருபாகத்தொருவன் என்பதில் உமைக்கு என்பது வேற்றுமை மயக்கம். க்ஷமை என்பதன் திரிபு கமை. இமைப்பிலர் என்றது அவர்கள் காண்பதில் காட்டுகின்ற கவனத்தை விளக்கிநின்றது. திரிவர் என்றது அவர்கள் பயனற்ற செயலை நெடுங்காலமாக உணர்ந்து கொள்ளாமலே செய்கின்றனர் என இழிவு விளக்கிநின்றது.

இருவர்க்கொருதனிக் கொழுநன் என்றது வள்ளி தெய்வயானையாகிய இருவர்க்கு நாயகனாகிய முருகன் எனவும், திருமாலைக்கூறல் பொருந்தாது; நாயக வாசியின்மையாகிய குற்றந்தங்குமாகலின் எனவும் உரைப்பர் இராமசாமி நாயுடு அவர்கள். பிரமன் சிவன் இவர்களோடு முருகனை ஒருங்குவைத்தெண்ணும் மரபின்மையானும், கண்களின் மிகுதி பற்றிக் கூறினர் எனக் கூறின் ஆயிரங்கண்ணனைக் கூறியே இவர்களைக் கூற வேண்டுதலின் அங்ஙனம் இந்திரனைக் கூறாமையானும் இருவர்க்குஒருதனிக்கொழுநன் என்றது திருமாலையே யுணர்த்தும் என்பது கோபாலகிருஷ்ணமாசாரியர் அவர்கள் உரை. (3)

### அயோத்தி அமராவதியினும் அளகையினும் விஞ்சியது

**96.** அயின்முகக் குலிசத் தமரர்கோ னகரு
மளகையு மென்றிவை யயனூர்
பயிலுற வுற்ற படிபெரும் பான்மை
யிப்பெருந் திருநகர் படைப்பான்
மயன்முதற் றெய்வத் தச்சருந் தத்த
மனத்தொழி ஞணினர் மறந்தார்
புயறொடு குடுமி நெடுநிலை மாடத்
திந்நகர் புகலுமா றெவனே.

அயில்முகக் குலிசத்து அமரர்கோன் நகரும்
அளகையும் என்றிவை அயனூர்
பயிலுறவு உற்றபடி பெரும்பான்மை
இப்பெருந் திருநகர் படைப்பான்
மயன்முதல் தெய்வத் தச்சரும் தத்தம்
மனத்தொழில் நாணினர் மறந்தார்;
புயல்தொடு குடுமி நெடுநிலை மாடத்து
இந்நகர் புகலுமாறு எவனோ?

பொ:—கூரிய நுனிகளையுடைய வச்சிராயுதத்தை ஏந்திய இந்திரன் நகராகிய அமராவதியும், (குபேரன் நகராகிய) அளகாபுரியும் என்ற இவைகள் பிரமன் பேரழகோடு கூடிய இந்தப் பெரிய திருவயோத்தியைப் படைப்பதற்காகப் பழகிய படியாகும். (ஆகலால்) மயன்முதலான தெய்வத்தச்சர்களும் வெட்கப் பட்டவர்களாகித் தங்கள் தங்களது மனத்தாற் படைக்குந் தொழிலையே மறந்து விட்டார்கள். (அங்ஙன மிருக்க) மேகம் வந்து படிகின்ற உச்சியினையுடைய உயர்ந்த நிலைகளோடு கூடிய மாடங்களையுடைய இந்நகரை (யான்) புகழ்ந்து கூறுவது எப்படி?

கு:—அமரர் கோன் நகரும், அளகையும் அயனூர் திரு நகரது படைப்பான் பயிலுறவு உற்றபடி. (ஆதலின்) தச்சரும் தொழில் நாணினர் மறந்தார் (அங்ஙன மிருக்க) இந்நகர் (யான்) புகலுமாறு எவன் என முடிக்க. அயனூர் தொழிற்றிறங்கண்டு மனத்தாற் படைக்கும் மயன் முதலோர் நாணி தம் தொழிலையே மறந்து விட்டார்கள் என அயோத்தியின் அழகு அறிவிக்கப்படுகின்றது.

(4)

அயோத்தியே புண்ணியபூமியும் போகபூமியுமெனல்

97. புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க
மென்னுமீ தருமறைப் பொருளே
மண்ணிடை யாவ ரிராகவ னன்றி
மாதவ மறத்தொடும் வளர்த்தார்
எண்ணருங் குணத்தி னவனினி திருந்திவ்
வேழுல காளிட மென்றால்
ஒண்ணுமோ விதனின் வேறொரு போக
முறைவிட முண்டென வுரைத்தல்.

'புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்,'
என்னும் ஈது அருமறைப் பொருளே,
மண்ணிடை யாவர் இராகவன் அன்றி
மாதவம் அறத்தொடும் வளர்த்தார்?
எண்ணரும் குணத்தின் அவன் இனிது இருந்து
இவ்ஏழுலகு ஆளிடம் என்றால்,
ஒண்ணுமோ இதனின் வேறொரு போகம்
உறைவிடம் உண்டு என உரைத்தல்?

பொ :—புண்ணியம் செய்தவர்கள் சென்று சேருமிடம் சுவர்க்கம் என்கிற இது அருமையான வேதங்களின் முடிந்த பொருளே யாகும். இம்மண்ணுலகத்தில் ஸ்ரீராமபிரானையன்றி (வேறுயார்) செய்தற்கரிய பெரிய தவத்தைத் தருமத்தோடு (ஒருசேர) வளர்த்தவர்கள். எண்ணுதற்கரிய குணநலங்களோடு கூடிய அந்த இராமபிரானே எழுந்தருளியிருந்து ஏழுலகங்களையும் அரசாண்ட இடம் (அயோத்தி) என்றால் இந்நகரத்தைக்காட்டிலும் இன்பம் நிறைந்த வேறொரு இடம் இருக்கின்றது என்று சொல்லுதல் பொருத்தம் உடையது ஆகுமோ?

கு :—புண்ணியம் செய்தவர்கள் அப்பயனை நுகரச் சுவர்க்கஞ் செல்வர் என்கிறது வேதம். அங்கும் புண்ணியப்பயனை அந்தந்த ஆன்மாக்களுக்கு ஊட்டுபவன் ஸ்ரீராமபிரான். அவனே அயோத்தியிலிருந்து தருமத்தையும் தவத்தையும் வளர்க்கின்றான் ஆதலின் உழைப்பும் உணவும் ஓரிடமானாற்போலப் புண்ணியத்தைச் செய்யுங் கருமபூமியும், அதன் பயனை நுகரும் போகபூமியும் அயோத்தியேயாயிற்று என்பதாம். (5)

**அயோத்தியை ஒக்கும்நகரம் அமரர்நாட்டிலும் இல்லையெனல்**

**98.** தங்குபே ரருளுந் தருமமுந் துணையாத்
தம்பகைப் புலன்களைந் தவிக்கும்
பொங்குமா தவமு ஞானமும் புணர்ந்தோ
ரியாவர்க்கும் புகலிட மான
செங்கண்மால் பிறந்தாண் டளப்பருங் காலந்
திருவின்வீற் றிருந்தன னென்றால்
அங்கண்மா ஞாலத் தந்நக ரொக்கும்
பொன்னக ரமரர்நாட் டியாதோ.

தங்குபேரருளும் தருமமும் துணையாத்
தம்பகைப் புலன் களைந்து அவிக்கும்
பொங்கு மா தவமும் ஞானமும் புணர்ந்தோர்
யாவர்க்கும் புகலிடம் ஆன
செங்கண்மால், பிறந்து ஆண்டு அளப்பரும் காலம்
திருவின் வீற்றிருந்தனன் என்றால்,
அங்கண்மா ஞாலத்து, அந்நகர் ஒக்கும்
பொன்னகர் அமரர்நாட்டு யாதோ?

பொ :—தம்மிடத்துத் தங்கியுள்ள பேரருளையும் அறத்தையும் துணையாகக்கொண்டு தமக்குப் பகையாயுள்ள விஷய சுகங்களில் (இந்திரியங்கள் சென்று) ஈடுபடாதவண்ணம் தடுக்கின்ற, மேன் மேலும் வளர்கின்ற தவத்தையும் ஞானத்தையும் பொருந்தியவர்கள் அனைவருக்கும் அடைக்கலத்தானமாகவுள்ள திருமாலே இராமபிரானாக அவதரித்து அவ்வயோத்திமாநகரத்தில் பல ஆண்டுகள் திருமகளின் அவதாரமாகியசீதாபிராட்டியாரோடு வீற்றிருந்தார் என்றால், அகன்ற இடத்தையுடைய இந்தப் பெரிய பூமியில் அந்த அயோத்தியை யொக்கும் அழகிய நகரம் தேவர் உலகத்து எதுவோ? ஒன்றும் இல்லை.

கு :—யாவர்க்கும் - இல்லறம் துறவறம் பூண்டார் அனைவருக்கும். பிறநலம்பேணும் பூததயை அருளெனப்படும். அவ்வருளாலேயே தரும சிந்தனையுண்டாகும். கருணையோடு தரும சிந்தனையுடையார்க்குப் புலனடக்கம் தானே சித்திக்கும். மனம் பொறிவழிபோகாது அடங்குதலே தவமாதலின் புலனடங்கிய வழி தவமுண்டாம்; தவத்தின் பயன் ஞானமும் ஞானத்தின் பயன் கடவுளருளும் ஆதலின், அருளும் தருமமும் துணையாகக் கொண்டு புலனடங்கித் தவமும் ஞானமும் புணர்ந்தோர்க்குப் புக

விடமான செங்கண்மால் என்ருர். 'வீற்றிருந்தனன் என்ருல்' இதில் என்ருல் என்பது ஒருவகை வார்த்தைப்பாடு. அனையதே பட்டதென்ருல் என்புழிப்போல' (சீவக. 1053 நச். உரை) இனி, தங்குமாபொருளும் எனப் பாடம் கொண்டு மனத்தில் தங்கிய பொருளாகிய வேதார்த்தமும் என்று உரைப்பாரும் உளர். (6)

இந்நகரில் எல்லாப் பொருளும் உள்ளன எனல்

99. அரசெலா மவண வணியெலா மவண
வரும்பெறன் மணியெலா மவண
புரசைமால் களிறும் புரவியுந் தேரும்
பூதலத் தியாவையு மவண
விரசுவார் முனிவர் விண்ணவ ரியக்கர்
விஞ்சையர் முதலினே ரெவரும்
உரைசெய்வா ராஞ ரானபோ ததனுக்
குவமைதா னரிதரோ வுளதோ.

அரசு எலாம் அவண; அணி எலாம் அவண;
அரும் பெறல் மணி எலாம் அவண;
புரசை மால் களிறும், புரவியும், தேரும்,
பூதலத்து யாவையும் அவண;
விரசுவரர் முனிவர் விண்ணவர் இயக்கர்
விஞ்சையர் முதலினேர் எவரும்
உரை செய்வார் ஆனர்; ஆனபோது அதனுக்கு
உவமைதான் அரிது அரோ உளதோ.

பொ :—எல்லாத் தேசத்து அரசர்களும் அவ்விடத்திலுள்ளனர் ஆபரணங்கள் எல்லாம் அந்நகரிலுள்ளன. பெறுதற்கரிய இரத்தினங்களெல்லாம் அவ்விடத்துள்ளன. கழுத்தில் இடப்பெற்ற கயிற்றினையுடைய பெரிய யானையும் குதிரையும் தேர்களும் மற்றும் பூவுலகத்துள்ள பொருள்கள் யாவும் அந்நகரில் உள்ளன. அந்நகரில் தம்முள் கலந்து வாழ்பவர்களாகிய முனிவர்கள் தேவர்கள் இயக்கர்கள் வித்தியாதரர்கள் முதலான அனைவரும் அதனைப் புகழ்ந்து பேசுவார்களாயினர். அங்ஙனமானபோது அந்நகரத்திற்கு ஒப்பாகச் சொல்லக்கூடிய பிறிதொரு நகரம் உண்டோ இல்லை என்பதாம்.

கு :—அந்நகரில் கலந்து வாழ்கின்ற முனிவர் தேவர் இயக்கர் முதலிய அனைவரும் அந்நகரைப் புகழ்வாராளுல் அந்நகருக்கு

உவமை உண்டோ ? இல்லை என்பதாம். எவ்லா உலகங்களையும் சுற்றிப்பார்க்கும் இவர்களே இந்நகரைப் புகழ்வராயின் இந் நகர்க்கு ஒப்பேது? என்பது கருத்து. அரசு - சொல்லால் அஃறிணையாக இருப்பதற்கேற்ப அவண என்னும் பலவின் பாற்படர்க்கைக் குறிப்பு வினைமுற்றுக்கொண்டு முடிந்தது. எல்லாத்தேயத் தரசர்களும் தசரதனால் தமதரசுரிமைபெற்று அங்கு வசிக்கின்றார் களாதலின் அரசெலாம் அவண என்றார். சிறுபொழுது பெரும் பொழுதுக்கேற்ப, பன்னிற ஆடைகளையும் அதற்கேற்ற அணிகளை யும் அங்குள்ளார் அணிதலின் அணியெலாம் அவண ஆயின. அத் தகைய அணிகளைச் செய்தற்குரிய மணிகளும் அவ்விடத்தன என் றார். பெறுதற்கரிய மணிபோன்றன சமந்தகம், கௌத்துபம் போன்ற அரும்பெறன் மணிகள். விரசுவார் என்ற வினையாலணை யும்பெயர் முனிவர் முதலினோருக்கு அடையாக நின்றது. உரை செய்வார் - புகழ்வார். '' உரைப்பாருரைப்பவையெல்லாம் '' என்ற திருக்குறளிலும் உரைத்தல் இப்பொருளதாதலை நோக்குக,

(7)

### மதிலின் உயர்ச்சி

100. நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி
நனிதவ வுயர்ந்தன பனிதோய்
மால்வரைக் குலத்தி லியாவையு மில்லை
யாதலா லுவமை மற்றில்லை
நூல்வரைத் தொடர்ந்து பயத்தொடும் பழகி
நுணங்கிய நுவலரு முணர்வே
போல்வகைத் தல்லா லுயர்வினோ டுயர்ந்த
தென்னலாம் பொன்மதி னிலையே

நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி,
நனிதவ உயர்ந்தன பனிதோய்
மால்வரைக் குலத்தில் யாவையும் இல்லை;
ஆதலால் உவமை மற்று இல்லை,
நூல்வரைத் தொடர்ந்து. பயத்தொடும் பழகி,
நுணங்கிய நுவலரும் உணர்வே
போல்வகைத்து; அல்லால், உயர்வினோடு உயர்ந்தது
என்னலாம் பொன்மதில் நிலையே.

பொ :—பனி படிந்துள்ள, பெரிய மலைக்கூட்டத்தில், சிற்பசாத்திரத்திற்கூறப்பெற்ற விதிமுறையின்வண்ணம். நாற்சதுரமாக நிலைபெறுத்திக் கட்டப்பெற்ற மிகமிக உயர்ந்த மலைகள் ஒன்றும் இல்லை; ஆதலால், இந்நகரமதிலுக்கு உவமையும் வேறு இல்லை. சிற்பசாத்திர அளவாகத் தொடர்ந்து, (அகழியிலும், அடிநிலையிலும்) உள்ள தண்ணீரோடு கூடி, நுணுக்கமான (பெருமையும் திண்மையும்) சொல்லுதற்கு அரிய பொன்னாலாகிய மதிலின் நிலையானது, படித்த நூல்களின் அளவாகப் பரந்து சென்று, நால்வகை நூற்பயனோடும் கூடி, நுட்பமான சொல்லுதற்கரிய அறிவைப் போன்ற தன்மையையுடையது. அல்லாமலும் உயர்ந்த பொருள்கள் எல்லாவற்றையும் விட உயர்ந்தது என்று கூறலுமாம்.

கு:—மலைகள் உயர்ச்சியாலும் கடத்தற்கருமையாலும் பெருமையாலும் திண்மையாலும் மதில்களுக்கு ஒப்பு. அம்மலைகள் மதில்களைப்போல நாற்சதுரமாக, சிற்பநூல் விதிப்படி மிக உயரமாகக் கட்டப்பெறவில்லை ஆதலின் இதற்கு ஒப்பாகாது என்பது கருத்து. ஆனால் நூலுணர்வோடு ஒத்தது எனலாம். நூலுணர்வு படித்த நூலின் பரப்பிற்கும் பயிற்சிக்கும் ஏற்பத் தொடர்ந்து அறம் பொருள் இன்பம் வீடாகிய நாற்பொருட்பயனையுடையதாக நுணுக்கமும் சொல்லமுடியாத அளவிற்குப் பெருக்கமும் உடையதாக இருக்கும். அதுபோலவே மதிலும் சிற்ப சாத்திரத்தின் எல்லைகடவாமல் அதனைத்தொடர்ந்தே அகழி நீரோடும் அடி நிலை நீரோடும் பழகி நுட்பமாய், சொல்லுதற்கரிய பெருமையும் திண்மையும் உடையதாகஇருக்கும். ஆதலின் அத்தகையஉணர்ச்சியை இம்மதில் ஒத்தது எனலாம். அல்லாமலும் உயர்ந்தனவாக உள்ள எல்லாவற்றையும்விட உயர்ந்தது என்றும் கூறலாம் என்பது கருத்து. உணர்வு கருவிகரணங்களுக்கும் எட்டாத கடவுட் பொருளையும் எட்டிப்பிடிக்கும் இயல்பிற்று ஆதலான் உயர்ச்சிக்கு ஒப்புக்கூறப்பெற்றது.

நனிதவ - ஒருபொருட்பன்மொழி. மற்று - பிறிதென்னும் பொருளில் வந்த இடைச்சொல். உயர்வு என்ற பண்புப்பெயர் ஆகுபெயராகப் பண்பியை யுணர்த்தி உயர்ந்த பொருள்கள் எனப் பொருள் தந்தது.

வரைக்குலத்தில், சதுரம்நாட்டி உயர்ந்தன யாவையுமில்லை, ஆதலால் உவமையில்லை எனவும், தொடர்ந்து பழகி நுணங்கிய பொன்மதில் நிலை, தொடர்ந்து பழகி நுணங்கிய உணர்வேபோல் வகைத்து; அல்லால், உயர்வினோடு உயர்ந்தது என்னலாம் எனவும் வினைமுடிவு செய்து பொருள் காண்க. (8)

மதிலுக்குப் பெருமையால் ஒப்பன இவை எனல்

**101.** மேவரு முணர்வு முடிவிலா மையினுல்
வேதமு மொக்கும் விண்புகலால்
தேவரு மொக்கு முனிவரு மொக்குந்
திண்பொறி யடக்கிய செயலால்
காவலிற் கலையூர் கன்னியை யொக்குஞ்
சூலத்தாற் காளியை யொக்கும்
யாவையு மொக்கும் பெருமையா லெய்தற்
கருமையா லீசனை யொக்கும்.

மேவரும் உணர்வு முடிவு இலாமையினுல்
வேதமும் ஒக்கும், விண் புகலால்
தேவரும் ஒக்கும, முனிவரும் ஒக்கும்
திண் பொறி அடக்கிய செயலால்,
காவலில் கலை ஊர் கன்னியை ஒக்கும்,
சூலத்தால் காளியை ஒக்கும்,
யாவையும் ஒக்கும் பெருமையால், எய்தற்கு
அருமையால் ஈசனை ஒக்கும்.

பொ :—அம்மதிலானது, பொருந்திய அறிவினுலும் முடிவுகாண ஒண்ணுமையின் வேதத்தை ஒத்திருக்கும். விண்ணுலகிற் புகுவதால் தேவர்களையொத்திருக்கும். வலியுள்ள (யந்திரங்கள்)பொறிகள் பலவற்றை அடக்கிக்கொண்டிருக்கும் செய்கையால் முனிவர்களை ஒத்திருக்கும். நகரத்தைக் காப்பதால் மானை ஊர்தியாகக் கொண்ட கன்னியாகிய துர்க்கையை ஒத்திருக்கும். சூலங்களைப் பெற்றிருப்பதால் காளியை ஒத்திருக்கும். பெருமையால் உலகிலுள்ள பெருமையையுடைய பொருள்கள் எல்லாவற்றையும் ஒத்திருக்கும். பிறர் அடைய முடியாமையால் இறைவனை ஒத்திருக்கும்.

கு :—மே வரும் - மேவுதல் பொருந்திய. மே - முதனிலைத் தொழிற்பெயர். வேதம் பல சாகைகளாக விரிந்து நுட்பமான அறிவாலும் முடிவுகாண முடியாததாக இருப்பதுபோல மதிலும் விரிந்த பரப்பினையுடையதாக அறிவால் முடிவுகாண முடியாததாக இருக்கிறது. தேவர்கள் புண்ணியத்தால் விண்ணுலகத்திற் புகுவதுபோல இதுவும் உயர்ச்சியால் விண் புகுகின்றது. முனிவர்கள் பிறர் யாராலும் அடக்குதற்கு அரிய பொறிகளை அடக்கியிருப்பதுபோல மதில் 'சென்றெறிசிரலும் நின்றெறி கவணும்.

நூற்றுவரைக் கொல்லியும், கல்லிடுகூடையுமுதலான பொறிகளை மறைத்துவைத்திருக்கிறது. துர்க்கை நகரைக் காப்பதுபோல இதுவும் காக்கின்றது. காளி சூலம் ஏந்தியிருப்பதுபோல மதிலும் சூலங்களைத்தாங்கியிருக்கின்றது. பெரிய பொருள்களைப்போல இதுவும் பெருமையுடையதாக இருக்கின்றது. இறைவன் பத்துடைய பழவடியார்க்கு அணுக எளியவனாக இருத்தல் போல மதில் பழகிய உட்பகை இல்லாத நண்புடைய பிறருக்கு அணுக எளியதென உவமையும் பொருளும் இயைத்துப் பொருள் காண்க. (9)

### மதிலின் உயர்ச்சி

102. பஞ்சிவான் மதியை யூட்டிய வனைய
படருகிர்ப் பங்கயச் செங்கால்
வஞ்சிபோன்மருங்குல் குரும்பைபோற் கொங்கை
வாங்குவேய் வைத்தமென் பணைத்தோள்
அஞ்சொலார் பயிலும் அயோத்திமா நகரின்
அழகுடைத் தன்றென அறிவான்
இஞ்சிவா னோங்கி இமையவ ருலகங்
காணிய எழுந்த தொத்துளதே.

பஞ்சி வான் மதியை ஊட்டிய அனைய
படர் உகிர்ப் பங்கயச் செங்கால்
வஞ்சிபோல் மருங்குல் குரும்பைபோல் கொங்கை
வாங்கு வேய் வைத்த மென் பணைத்தோள்
அஞ்சொலார் பயிலும் அயோத்தி மா நகரின்
அழகுடைத்து அன்று என அறிவான்
இஞ்சி, வான் ஓங்கி இமையவர் உலகம்
காணிய, எழுந்தது ஒத்துளதே.

பொ :—மதில், வெண்மையான சந்திரனைச் செம்பஞ்சுக்குழம்பு ஊட்டினாற்போலச் செவ்வொளி வீசுகின்ற நகங்களையும், செந்தாமரை மலர் போலச் சிவந்த பாதங்களையும், கொடிபோன்ற இடையினையும், செவ்விளநீர்போன்ற கொங்கையினையும், வளைந்த மூங்கிலை வைத்தாற்போன்ற மெல்லிய பணைத்த தோள்களையும் (இனிமையால்) அழகிய சொற்களையும் உடைய பெண்கள் நிரம்பியுள்ள அயோத்திமாநகரைக் காட்டிலும் அழகுடையதோ?

அன்றோ? என அறிந்துகொள்வதற்காக ஆகாயத்தில் உயர்ந்து தேவலோகத்தைக் காண்பதற்காக எழும்பியதை ஒத்துள்ளது.

கு :—மதியைப் பஞ்சி ஊட்டிய அனைய உகிர் எனவும், உகிர் செங்கால் மருங்குல் கொங்கை தோள் (இவற்றினையுடைய) அஞ் சொல்லார் எனவும், இஞ்சி, அஞ்சொலார் பயிலும் நகரின் அழகுடைத்தென அன்றென அறிவான் காணிய எழுந்தது ஒத்துளது எனவும் முடிக்க. குரும்பை செவ்விளநீருக்கே பெயராதலை மலையாள நாட்டு ஈழநாட்டுவழக்குகளில் இன்றும்காணலாம். தோளின் அமைப்பிற்கேற்ப மூங்கிலை வளைந்ததாகச் சொல்லுதல் காண்க. வேய் - முள்ளில்லா மூங்கில். இதனை 'அமையொடு வேய்சுலாம் வெற்ப' என்னும் பழமொழி நானூற்றின் பழைய உரையான் அறிக. முள்ளிலாமையும் தண்மையும், மென்மையும் பற்றியே மகளிர் தோளிற்கு வேய் ஒப்பிடப்பெறுகின்றது. காணிய-செய்யிய என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம். (10)

### மதில் சூரியகுலத்தரசர்களை ஒத்துள்ளது எனல்

**103.** கோலிடை யுலக மளத்தலிற் பகைஞர்
முடித்தலை கோடலின் மனுவின்
நூல்நெறி நடக்குஞ் செவ்வையின் யார்க்கு
நோக்கருங் காவலின் வலியின்
வேலொடு வாள்விற் பயிற்றலின் வெய்ய
சூழ்ச்சியின் வெலற்கரு வலத்திற்
சால்புடை யுயர்விற் சக்கர நடத்துந்
தன்மையிற் றலைவரொத் துளதே.

கோலிடை உலகம் அளத்தலின், பகைஞர்
முடித்தலை கோடலின், மனுவின்
நூல் நெறி நடக்கும் செவ்வையின், யார்க்கும்
நோக்கு அரும் காவலின், வலியின்,
வேலொடு வாள் வில் பயிற்றலின், வெய்ய
சூழ்ச்சியின், வெலற்கு அரு வலத்தில்,
சால்பு உடை உயர்வில், சக்கரம் நடத்தும்
தன்மையில், தலைவர் ஒத்துளதே.

பொ :—உலகத்தவரால் அளவு கோலைக்கொண்டு அளக்கப்படுதலும், பகைவர்களுடைய முடியணிந்த தலைகளை (ப்பொறிகளால்)

கொள்ளுதலும், மனிதனுடைய (சிற்பியினுடைய) எற்றுநூலின் வழியிலே கோணமல் அமைந்த செம்மையும் எவர்க்கும் பார்க்க முடியாத காவலும், தாக்குதற்கரிய வலியும், வேல் வில் வாள் முதலிய படைக்கலங்களைப் பழக்குதலும், கொடிய சூழ்ச்சிகளையுடைமையும், யாராலும் வெல்லுதற்கரிய வலிமையும், நிறைந்த உயர்ச்சியும் சக்கரப் பொறிகளை இடைவிடாது நடத்தும் தன்மையும் உடைய மதிலானது, செங்கோலால் உலகத்தவரோடு கலத்தலும், பகைவர்களின் முடித்தலைகளைப் போரிற்கொள்ளுதலும், மனுதர்ம சாத்திரத்தின் வழியே ஒழுகும் செம்மையும். யாராலும் அளவிட்டுக் காணமுடியாத ஆட்சித்திறமும், வன்மையும், வேல் வாள் வில் இவற்றைப் பழக்குதலும், பகைவனும் விரும்பத்தக்க அரசியற்றந்திரங்களும், யாராலும் எப்படியும் வெல்ல முடியாத ஆற்றலும், சால்பினல் விளைந்த உயர்வும், தமது ஆணையாகிய சக்கரத்தை நடத்துகின்ற தன்மையும் உடைய சூரிய குலத்து மன்னர்களை ஒத்திருந்தது.

கு :—இச்செய்யுளில் மதில், சூரிய குலத்து மன்னர்களை ஒத்திருந்தது எனச் சிலேடை மூலமாக உவமிக்கப் பெறுதலின் சிலேடையுவமையணி. பிற நகரங்களில் மதில் இயற்றுவார் இம் மதிலின் அளவு, ஆழம் பருமை உயரம் இவற்றைக் கோல் கொண்டு அளக்கின்றூர்கள் ; ஆதலின் 'உலகம் கோலிடை அளத்தலின்' என்றூர். சால்பு அரசர்க்காங்கால் அன்பு நாண் ஒப்புரவு கண்ணேட்டம் வாய்மை என்ற ஐந்தாலும் நிறைவுடைமை. மதிலுக்கு ஆங்கால் மதிலுறுப்புக்களும், பொறிகளும் சுருங்கை நாழை முதலிய அரண் செய்வழிகளும் நிறைதல். வெய்ய சூழ்ச்சி மதிலுக்கு ஆங்கால் வழிபோலத் தோற்றிப் புகுவாரைச் சிறைப் படுத்தும் தன்மை போல்வன. (11)

### மதிற்பொறிகளும்—அவற்றின் ஆற்றலும்

**104.** சினத்தயில் கொலைவாள் சிலைமழுத் தண்டு
சக்கரந் தோமர முலக்கை
கனத்திடை யுருமின் வெருவருங் கவண்கல்
லென்றிவை கணிப்பில கொதுகின்
இனத்தையு முவணத் திறையையு மியங்குங்
காலையு மிதமல நினைவார்
மனத்தையு மெறியும் பொறியுள வென்றுன்
மற்றினி யுணர்த்துவ தெவனே.

சினத்து அயில் கொலை வாள் சிலை மழுத் தண்டு
சக்கரம் தோமரம் உலக்கை
கனத்திடை உருமின் வெருவரும் கவண்கல்
என்று இவை கணிப்பில; கொதுகின்
இனத்தையும் உவணத்து இறையையும் இயங்கும்
காலையும் இதம் அல நினைவார்
மனத்தையும் எறியும் பொறி உள; என்றால்,
மற்று இனி உணர்த்துவது எவனோ ?

பொ:—கோபத்தை யுடைய வேலும், கொலைத்தன்மை பொருந்திய வாளும் வில்லும், மழுவும் தண்டமும், சக்கரமும், இரும்புலக்கையும், உலக்கையும் மேகத்தில் தோன்றுகின்ற இடி போன்ற அஞ்சத்தக்க கவண்கல்லும், ஆகிய இவை முதலாகிய கொசுக் கூட்டத்தையும், பறவையரசனாகிய கருடனையும், இடைவிடாது இயங்கிக்கொண்டே இருக்கின்ற காற்றையும், கெடுதியை எண்ணுகின்றவர்களுடைய மனத்தையும் தாக்குகின்ற அளவற்ற இயந்திரங்கள் இம்மதிலில் உள்ளன என்றால் வேறு யாது உணர்த்த வேண்டுவது ?

கு:—சினத்து அயில் கொலைவாள் என உடையானது தன்மை உடைமைப் பொருள்மேல் ஏற்றப் பெற்றது. தோமரம்–இருப்புலக்கை; எறியீட்டியும் ஆம். கவண்கல்–கவண் கயிற்றில் வைத்து எறியப்படும் கல். கனம்–மேகம். உருமின்–இடியைப்போல. என்று இவை கணிப்பில பொறியுள என்றால் என இயைக்க. கொதுகின் இனமாகிய சிறிய பறவைக் கூட்டமும், பெரும் பறவைகளும், காற்றும் மனமுங்கூட நுழையாத வண்ணந் தடுக்கும் பொறிகள் என்க. கொதுகு கீழே பறப்பது; உவணம் மிக உயரத்துப் பறப்பது; கால் என்றும் எங்கும் இயங்குவது. மனம் உருவின்றியே மிக விரைவில் இடையீடு இருந்தாலும் அவற்றைக் கடந்தியங்குவது. இவற்றை யெல்லாம் எறியும் பொறி யெனப் பொறிகளின் வன்மை கூறப்பட்டது. (12)

## நகருக்கு அணியாக மதில் அமைந்தமை

**105.** பூணினும் புகழே யமையுமென் றினைய
பொற்பினின் றுயிர்நனி புரக்கும்
யாணரெண் டிசைக்கு மிருளற விமைக்கு
மிரவிதன் குலமுத னிருபர்

சேணையுங் கடந்து திசையையுங் கடந்து
திகிரியுஞ் செந்தனிக் கோலும்
ஆணையுங் காக்கு மாகிலு நகருக்
கணியென வியற்றிய தன்றே.

'பூணினும் புகழே அமையும்,' என்று, இனைய
பொற்பில் நின்று, உயிர் நனி புரக்கும்,
யாணர் எண் திசைக்கும் இருள் அற இமைக்கும்
இரவிதன் குலமுதல் நிருபர்,
சேணையும் கடந்து, திசையையும் கடந்து,
திகிரியும் செந்தனிக் கோலும்
ஆணையும் காக்கும் ஆகிலும், நகருக்கு
அணி என, இயற்றியது அன்றே!

பொ:—அணிகளைக் காட்டிலும் எமக்குப் புகழே போதுமானது என்று எண்ணி இத்தகைய ஒழுக்கத்திலே நின்று குடிகளை மிக நன்ருகப் பாதுகாக்கின்ற, புதிய வருவாயினை உடைய எட்டுத் திசைகளிலும் இருள் அடியோடு அற்றுப் போம் படி ஒளி செய்கின்ற சூரியனைத் தமது குலமுதல்வனுகக் கொண்ட அரசர்களுடைய ஆஞ்ஞாசக்கரமும், செங்கோலும், ஆணையும், ஆகாயத்தையும் எட்டுத்திசைகளையும் கடந்து அப்பாற் சென்று காப்பாற்றுமாயினும், அம்மதில்கள் அயோத்திக்கு அழகென்று எண்ணியே கட்டப்பெற்றன. (காவலுக்காக அன்றென்பதாம்.)

கு:—பூண்கள் அணுகி நின்று காண்பார்க்கு மட்டும், கண்ட அப்பொழுது மகிழ்ச்சி யூட்டி, மெய்யை அழகுசெய்து நிற்பன. புகழ் எஞ்ஞான்றும் என்றும் நிலைபெற்று, குலத்திற்கே அழகு செய்வதாகலின் சூரிய குலத்தரசர் பூணினும் புகழே அமையும் என்ற நேர்மையில் நின்று குடிகளைப் பாதுகாக்கின்றனர் என்பதாம். உயிர் நனி புரக்கும் நிருபர், குல முதல் நிருபர் எனவும் அந்நிருபர்களது திகிரியும் கோலும், ஆணையும் காக்குமாகிலும், மதில் நகருக்கு அணியென இயற்றியது எனவும் இயைத்துப் பொருள் காண்க. அணியென இயற்றியது அன்றே—அணியாக ஆக்கப்பெற்றதல்லவா எனஉரைப்பாரும் உளர். சேண்—ஆகாயம்: இடவாகுபெயராக வானிலுள்ள தேவருலகைக் காட்டிற்று. (13)

**அகழியைப் பற்றி அறிவிப்போம் எனல்**

**106.** அன்னமா மதிலுக் காழிமால் வரையை
யலைகடல் சூழ்ந்தன வகழி
பொன்விலை மகளிர் மனமெனக் கீழ்போய்ப்
புன்கவி யெனத்தெளி வின்றிக்
கன்னிய ரல்குற் றடமென யார்க்கும்
படிவருங் காப்பின தாகி
நன்னெறி விலக்கும் பொறியென வெறியுங்
கராத்தது நவிலலுற் றதுநாம்.

அன்ன மா மதிலுக்கு ஆழி மால் வரையை
அலை கடல் சூழ்ந்து அன அகழி,
பொன் விலை மகளிர் மனம் எனக் கீழ்போய்,
புன்கவி எனத் தெளிவு இன்றி,
கன்னியர் அல்குல் தடம் என யார்க்கும்
படிவு அரும் காப்பினது ஆகி,
நல் நெறி விலக்கும் பொறி என எறியும்
கராத்தது; நவிலலுற்றது நாம்.

பொ:—பெரிய சக்கரவாளகிரியை, அலையோடு கூடிய புறவாழிக்கடல் சூழ்ந்தாற்போல அத்தகைய பெரிய மதிலுக்குப் (புறமாகச் சுற்றியுள்ள) அகழியானது, தம் உடலுக்குப் பொன்னை விலையாகப்பெறும் பொதுமகளிரின் மனம்போல ஆழ்ந்து, கல்லாதான் செய்த இழிந்த கவியைப்போலத் தெளிவில்லாமல், ஓர் ஆடவனுக்கு உரிமையாக்கப்படாத கன்னிப் பெண்ணின் அல்குல் தடம் போல யார்க்கும் தோய முடியாத காவலையுடையதாகி, நன்னெறி செல்லும் ஒருவனை அந்நெறியி லிருந்து விலக்கிப் புன்னெறி செலுத்தும் இந்திரியங்களைப் போலப் பாய்கின்ற முதலைகளையுடையது. இதுவே இனி நாம் சொல்லத் தொடங்கியதாம்.

கு:—இது கவிகூற்று. சூழ்ந்தன அகழி என்பதனைச் சூழ்ந்து+ அன்ன+அகழி எனப் பிரித்துப் பொருள் கொள்க. ஆசை மிகுதியால் அவல்பட்ட விலை மாதர் மனம் எவ்வளவு பொன்பெறினும் தூராமல் மேலும் ஆழமாதல் போல அகழியும் அளவு காண முடியாத ஆழமுடையது என்பதாம். புன்கவி கருதிய பொருளை விளக்கும் சொல்லில்லாமையானும் தொடற்புற்ற நடையின்மையானும், தெளிவின்றியிருத்தல் போல, அகழியும் கலங்கி யுள்ளது

எனவும், நன்னெறி விலக்கிக் கண்டதைப் பற்றச் செய்யும் பொறிகள் போல அகழியும் கண்டவற்றைக் கவ்வித்திரியும் முதலைகளை யுடையது எனவும் கருத்துக் கொள்க. அல்குல் தடம்—அல்குலாகிய குளம், இதனைக் குளமென்றதற் கேற்ப, படிவருங் காப்பெனக் கூறுதல் காண்க. படிதல்—மூழ்குதல்; தோய்தல். (14)

**மேகம், அகழைக் கடலாக மயங்கிற்று எனல்**

**107.** ஏகுகின்ற தங்கணங்க
★ ளோடுமெல்லை காண்கிலா
நாகமொன்ற கன்கிடங்கை
நாமவேலை யாமென
மேகமொண்டு கொண்டெழுந்து
விண்டொடர்ந்த குன்றமென்
றாகநொந்து நின்றுதாரை
யம்மதிற்கண் வீசுமே.

ஏகுகின்ற தம் கணங்களோடும்
எல்லை காண்கிலா
நாகம் ஒன்று அகன் கிடங்கை,
'நாம வேலையாம்' என
மேகம், மொண்டுகொண்டு, எழுந்து,
'விண் தொடர்ந்த குன்றம்,' என்று
ஆகம் நொந்து நின்று,
தாரை அம்மதிற்கண் வீசுமே.

பொ :—தமது கூட்டங்களோடும் (வானிற்) போகின்ற மேகம் நாகருலகைப்பொருந்திய அளவுகாணமுடியாத அகன்ற அகழியை, அச்சத்தை விளைவிக்கின்ற கடலாம் என்று எண்ணி, நீரை முகந்து கொண்டு வானில் எழுந்து (சுமைதாளாமல்) உடல் வருந்தி, மதிலை ஆகாயத்தையளாவியுள்ள மலையாம் என்றெண்ணி அம்மதிலில் தங்கி நின்று, மழை பொழியும்.

கு:—தங்கணங்களோடும் ஏகுகின்ற மேகம், அகன் கிடங்கை வேலையாமென, மொண்டு கொண்டு எழுந்து, நொந்து குன்றமென்று, நின்று, தாரை வீசும் என முடிக்க. நாம்—அச்சம்; நாம—அச்சத்தை யுடைய. அகழை ஆழியாகவும், மதிலை மலையாகவும் மேகம் மயங்கிற்று என்றலின் இது மயக்கவணியாம். (15)

### அகழிலுள்ள தாமரைக் காட்டின் தோற்றம்

**108.** அந்தமா மதிற்புறத்
தகத்தெழுந் தலர்ந்தநீள்
கந்தநாறு பங்கயத்த
கானமான மாதரார்
முந்துவாண் முகங்களுக்
குடைந்துபோன மொய்த்தெலாம்
வந்துபோர் மலைக்கமா
மதில்வளைத்த மானுமே.

**அந்த மா மதில் புறத்து அகத்து எழுந்து அலர்ந்த நீள்**
**கந்தம் நாறு பங்கயத்த கானமான, மாதரார்**
**முந்து வாள் முகங்களுக்கு உடைந்துபோன, மொய்த்து எலாம்**
**வந்து, போர் மலைக்க மா மதில் வளைத்த மானுமே.**

பொ:—அந்த மதிலின் புறத்தில் (உள்ள) அகழியின் அகத்தில் முளைத்து வளர்ந்து மலர்ந்திருக்கின்ற, மணம் வீசுகின்ற நீண்ட தாமரைகளின் காடுகள், முன்பு, பெருமையோடு கூடிய அந்நகரப் பெண்களின் ஒளி பொருந்திய முகங்களுக்குத் தோற்றுப் போன அவை எல்லாம் ஒருங்கு திரண்டு வந்து போர் செய்யப் பெரிய மதிலை வளைத்துக் கொண்டதை யொக்கும்.

கு:—கானம், உடைந்து போன எல்லாம் மொய்த்து வந்து மலைக்க வளைத்த மானும் எனக் கூட்டுக. இது தற்குறிப்பேற்ற வணி. முன்பு தனியே யிருந்து மகளிர் முகத்திற்குத் தோற்றோம்; இப்போது ஒருங்கு கூடிப் பொருவோம் என வந்தன என்பார் 'எலாம் மொய்த்து மலைக்க வளைத்ததை மானும்' என்றார். நீர்ப் பூக்கள் நீரளவாக வளர்தலின் நீள் பங்கயம் என்றார். இதனால் அகழியின் ஆழம் தொனிக்கின்றது. (16)

### அகழியில் முதலைகள் முழுகி எழும்புதல்

**109.** சூழ்ந்தநாஞ்சில் சூழ்ந்தவாரை
சுற்றுமுற்று பாரெலாம்
போழ்ந்தமா கிடங்கிடைக்
கிடந்துபொங் கிடங்கர்மா

தாழ்ந்தவங்க வாரியிற்
றடுப்பொணு மதத்திஞல்
ஆழ்ந்தயானை மீதெழுந்
தழுந்துகின்ற போலுமே.

சூழ்ந்த நாஞ்சில் சூழ்ந்த ஆரை, சுற்று முற்று பார் எலாம்
போழ்ந்த மா கிடங்கிடைக் கிடந்து பொங்கு இடங்கர்மா,
தாழ்ந்த வங்க வாரியில் தடுப்பொணு மதத்திஞல்
ஆழ்ந்த யானை மீது எழுந்து அழுந்துகின்ற போலுமே.

பொ ;—மிகவும் ஆலோசித்து அமைக்கப் பெற்ற, நாஞ்சில் என்னும் மதிலுறுப்புக்களையுடைய நகரைச் சுற்றியுள்ள, மதிலைச் சூழ்ந்த பூமி முழுதையும் பிளந்து செய்யப்பெற்ற பெரிய அகழியிற் கிடந்து மேலெழும்புகின்ற முதலைகள், மிக ஆழமானதும், கப்பல்களையுடையதுமான கடலிலே தடுக்கமுடியாத மதத்தால் அழுந்திய யானைகள் மேலெழும்பி மீட்டும் அமிழ்கின்றனவற்றை ஒத்திருந்தன.

கு :—இடங்கர்மா, யானை போலும் எனக் கூட்டுக. முதலை, நீர்யானை நீர்நாய் முதலியன போல நீரில் வாழும் விலங்கினத்தைச் சார்ந்தது ஆதலின் இடங்கர் மா என்ருர். வாலும் காலும் உண்மையும் விலங்கென்பதை விளக்கும். வங்க வாரியில் தடுப்பொணு மதத்திஞல் ஆழ்ந்த யானை என்ற சொன்னடையின் போக்கு, கடலிலுள்ள மரக்கலங்களைப் பகைக் களிறு என எண்ணித் தடுக்க முடியாத மதத்தால் கடலில் வீழ்ந்து ஆழ்ந்த யானை என்ற நயத்தை நினைவூட்டுகிறது. யானைக்கு வங்கம் ஒப்பாகக் கூறப்படுதலை, 'மாக்கடற் பெருங்கலம் காலின் மாறு பட்டு, ஆக்கிய கயிறரிந்து ஓடி யெங்கணும், போக்கறப் பொருவன போன்று தீப்படத், தாக்கின அரசுவாத் தம்முள் என்பவே' என்னும் சிந்தாமணிச் செய்யுளாலும் அறியலாம். (17)

### முதலைகள் ஒன்ருேடொன்று பொருதல்

**110.** ஈரும்வாளின் வால்விதிர்த்
தெயிற்றிளம் பிறைக்குலம்
பேரமின்னி வாய்விரித்
தெரிந்தகட் பிறங்குதீச்

சோரவொன்றை யொன்றுமுன்
றொடர்ந்துசீ றிடங்கர்மா
போரில்வந்து சீறுகின்ற
போரரக்கர் போலுமே.

ஈரும் வாளின் வால் விதிர்த்து, எயிற்று இளம் பிறைக் குலம்
பேர மின்னி, வாய் விரித்து, எரிந்த கண் பிறங்கு தீச்
சோர, ஒன்றை ஒன்று முன் தொடர்ந்து சீறு இடங்கர்மா,
போரில் வந்து சீறுகின்ற போர் அரக்கர் போலுமே.

பொ:—அறுக்கின்ற வாளைப்போன்ற வாலை யசைத்து, வளைந்த பற்களாகிய இளம்பிறைக்கூட்டமானது பேர்தலால் மின்னி, வாயைத் திறந்துகொண்டு, எரிவது போன்ற கண்களிலிருந்து விளங்குகின்ற தீச்சொரிய, ஒன்றை ஒன்று பின் தொடர்ந்து சென்று கோபிக்கின்ற முதலைகள் சண்டையில் எதிர்த்து வந்து கோபிக்கின்ற அரக்கர்களை ஒத்திருக்கும்.

கு:—அரிவாளின் வேறு பிரிக்க ஈரும் வாள் என்றார். ஈர் வாள்—ரம்பம். முதலையின் வால் மரம் அறுக்கும் வாள்போன்றது. பேர-அசைதலால். எயிறு என்றது வளைபல்லாகிய கோரப் பல்லை.

(18)

அகழி அரசர் சேனையை ஒக்கும் எனல்

111. ஆளுமன்னம் வெண்குடைக்
குலங்களா வருங்கராக்
கோளெலா முலாவுகின்ற
குன்றமன்ன யானையாத்
தாளுலாவு வெங்கதத்
துரங்கமுந் தரங்கமா
வாளும்வேலு மீனமாக
மன்னர்சேனை மானுமே.

ஆளும் அன்னம் வெண் குடைக் குலங்களா, அருங் கராக்
கோள் எலாம் உலாவுகின்ற குன்றம் அன்ன யானையாத்
தாள் உலாவு வெம் கதத் துரங்கமும் தரங்கமா
வாளும் வேலும் மீனம் ஆக மன்னர்சேனை மானுமே.

பொ :—அகழியிற் பழகுகின்ற அன்னங்கள் வெண் கொற்றக் குடையின் கூட்டங்களாகவும், கொள்ளுதற்கரிய முதலைகள், ஒன்பது கோள்களும் சுற்றிவருகின்ற மேருமலையை ஒத்தயானைகளாகவும், அலைகள் காலால் உலாவி வருகின்ற கொடிய கோபத்தோடு கூடிய குதிரைகளாகவும், மீன்கள் வாளாயுதமும் வேலாயுதமுமாகவும் விளங்குதலின் அகழியானது மன்னர்களது படையை ஒக்கும்.

கு :—ஆளுதல். பழகுதல். வருங்கரா எனப் பிரித்து சஞ்சரிக்கின்ற முதலை எனப் பொருள்கொள்வாரும் உளர். 'துரங்கமே தரங்கமா' என்பதை முன்னடிகளுக்கு ஏற்பத் தரங்கமே துரங்கமா எனவும், வாளும் வேலும் மீனமாக என்பதை மீனம் வாளும் வேலுமாக எனவும் மாற்றுக. ''மொய்களிறு உடைதிரை மாக்கலம் ஒளிறு வாட் படை, அடுதிற லெறிசுறு வாகக் காய்ந்தன' என்னும் மண்மகள் இலம்பகச் செய்யுளின் கருத்தை ஒருவாறு இச்செய்யுள் ஒத்திருத்தல் காண்க. (19)

### அகழியின் கரையமைப்பு

**112.** விளிம்புதெற்றி முற்றுவித்து
வெள்ளிகட்டி யுள்ளுறப்
பளிங்குபொற் றலத்தகட்
டடுத்துறப் படுத்தலின்
தளிந்தகற் றலத்தொடச்
சலத்தினைத் தனித்துறத்
தெளிந்துணர்த்து கிற்றுமென்ற
றேவராலு மாவதே.

விளிம்பு தெற்றி முற்றுவித்து வெள்ளி கட்டி உள் உறப்
பளிங்கு பொன் தலத்து அகட்டு அடுத்துறப் படுத்தலின்
தளிந்த கல் தலத்தொடு அச் சலத்தினைத் தனித்து உறத்
தெளிந்து உணர்த்துகிற்றும் என்றல் தேவராலும் ஆவதே.

பொ :—அகழியின் விளிம்பிலே, திண்ணைகளை வெள்ளியாலே கட்டிமுடித்து, அத்திண்ணையின் உள்ளிடம் எல்லாம் பொருந்தப் பொன்னாலாகிய இடங்களின் நடுவில் பளிங்குக்கற்களை அடுத்தடுத்து ஒன்றோடொன்று பொருந்தும்படி பதித்திருத்தலால், தளவரிசையிடப்பெற்ற பளிக்குக்கல் பூமியோடு அகழியின் தண்

ணீரைத் தனியாகத் தெளிவாக உணர்த்துவோம் என்றல் தேவ ராலும் முடியாத காரியம்.

கு :—விளிம்பு தெற்றி வெள்ளிகட்டி முற்றுவித்து, உள்ளூறப் பொற்றலத்து அகட்டு, பளிங்கு அடுத்துறப் படுத்தலின், கல் தலத்தொடு சலத்தினை, தனித்து உணர்த்துகிற்றும் என்றல் தேவ ராலும் ஆவதே! என முடிக்க. அகழியின் கரையிலுள்ள திண்ணை ஓரமெல்லாம் வெள்ளியாலே கட்டிப் பளிங்குத் தளவரிசையிட்டு பொன்னால் சந்து பதிந்திருத்தலால், பளிங்குத்தரைக்கும் தண்ணீ ருக்கும் வேறுபாடு காணத் தேவராலும் முடியாது என்பது கருத்து. தேவராலும் என்ற உம்மை உயர்வுசிறப்பு. தேவரா லும் முடியாது எனவே ஏனையோரால் எங்ஙனம் இயலும்? என் பதாம். (20)

### அகழியும் காவற்காடும்

**113.** அன்னநீ ளகன்கிடங்கு
சூழ்கிடந்த வாழியைத்
துன்னிவேறு சூழ்கிடந்த
தூங்குவீங் கிருட்பிழம்
பென்னலா மிறும்புசூழ்
கிடந்தசோலை யெண்ணிலப்
பொன்னின்மா மதிட்குடுத்த
நீலவாடை போலுமே.

**அன்ன நீள் அகன் கிடங்கு, சூழ் கிடந்த ஆழியைத் துன்னி வேறு சூழ் கிடந்த தூங்கு வீங்கு இருள் பிழம்பு என்னலாம், இறும்பு சூழ் கிடந்த சோலை, எண்ணில் அப் பொன்னின் மா மதிட்கு உடுத்த நீல ஆடை போலுமே.**

பொ :—(இதுவரை சொல்லப்பெற்ற) அத்தகைய பெருமை வாய்ந்த நீண்டதும் அகன்றதுமான அகழியை உலகம் எல்லாவற் றையும் சுற்றிக்கிடந்த சக்கரவாளகிரியைச் சார்ந்து வேருக அப் பால் சுற்றிக்கிடந்த மிகுந்த இருளின் திரட்சியென்று சொல்ல லாம். குறுங்காடாகச் சுற்றிக்கிடக்கின்ற சோலையைப்பற்றி எண் ணின், அந்த நகரைச் சுற்றியுள்ள பொன்னாலாகிய பெரிய மதி லுக்கு உடுத்தப்பெற்ற நீலநிற ஆடையை ஒத்திருக்கும்.

கு :—கிடங்கு இருட்பிழம்பு என்னலாம்; சோலை மதிட்கு உடுத்த நீல ஆடை போலும் எனக் கூட்டிப் பொருள் காண்க.

சக்கரவாளகிரிக்கு அப்புறம் இருள்தான் உண்டு என்பதைக் கந்த புராணம் அண்டகோசப் படலச்செய்யுளான் அறியலாம். சோலை உபவனம்; போகத்துக்குரிய இடம். அயோத்தியைச் சுற்றியுள்ள இது உபவனமாகவும், காட்டரணாகவும் உள்ளதென்பார் குறுங்காடாகச் சுற்றியுள்ள சோலை என்றார். இப்பாடலுக்கு அகழியின் புறத்துச் சூழ்ந்துகிடக்கும் மலையரண், பெரும்புறக் கடலுக்குப் புறத்திருக்கும் இருட்பிழம்பு போலும் எனவும். அம் மலையரணைச் சூழ்ந்த காட்டரண், மதிலுக்கு உடுத்த நீல ஆடை போலும் எனவும், அகழியைச் சுற்றியுள்ள குறுங்காட்டை, கடல்களைச்சூழ்ந்து கிடந்தபெரும்புறக்கடலைப்பொருந்தி வேறாகக்கிடந்த இருட்பிழம்பு என்னலாம் எனவும், எண்ணில், பொன்மதிலுக்கு உடுத்த நீலஆடையை ஒக்கும், எனவும், அகன்கிடங்கு சூழ்கிடந்ததும், ஆழியைத்துன்னி வேறு சூழ்கிடந்த தூங்கு விங்கிருட்பிழம்பென லாம் இறும்பு சூழ்கிடந்ததும்ஆகியசோலை,மதிட்கு உடுத்த நீல ஆடைபோலும் எனவும், மதில்சூழ்ந்த அயோத்திமாநகரே பூமண்டலத்தைப் போற் பரந்திருக்க, அதனைச் சுற்றியிருக்கின்ற அகழி பூமண்டலத்தைச் சுற்றியுள்ள பெரும்புறக்கடலையும், அதனைச் சூழ்ந்த சோலை பெரும் புறக்கடலைச் சுற்றியுள்ள பேரிருளையும் ஒக்கும் எனவும், அகழியைச் சூழ்ந்து கிடப்பதும். புறவாழிக்கடலைப் பொருந்தி வேறாகப்புறம்பே சுற்றிக்கிடக்கின்ற இருட்பிழம்பு என்னலாம்படி அதிசயிக்கத்தக்கதும் ஆன சோலையை எண்ணின் மதிலுக்கு உடுத்த நீலஆடைபோலும் எனவும் உரைப்பாரும் உளர். (21)

### கோபுர வாயிலின் சிறப்பு

114. எல்லைநின்ற வென்றியானை
யென்னநின்ற முன்னமால்
ஒல்லையும்பர் நாடளந்த
தாளின்மீ துயர்ந்தவால்
மல்லன்ஞாலம் யாவுநீதி
மாறுரு வழக்கினல்
நல்லவாறு சொல்லும்வேத
நான்குமன்ன வாயிலே.

எல்லை நின்ற வென்றி யானை என்ன நின்ற முன்னம் மால்
ஒல்லை உம்பர் நாடு அளந்த தாளின்மீது உயர்ந்த; ஆல்
மல்லல் ஞாலம் யாவும் நீதி மாறு உரு வழக்கினல்
நல்ல ஆறு சொல்லும் வேதம் நான்கும் அன்ன; வாயிலே.

பொ :—அந்நகரத்துக் கோபுரவாயில்கள், பெருந்திசையின் எல்லைக்கண் நின்ற வெற்றியோடு கூடிய திக்குயானைகள் (நான்கு) என்று சொல்லும்வண்ணம் நின்றன. மற்றும், முன்னொருகாலத்து, திருமால் விரைந்து தேவருலகையும் (ஓரடியாக) அளந்த திருவடிக்கும் மேலாக ஓங்கி உயர்ந்தன. வளம்பொருந்திய உலகு அனைத்தும் நெறிமாறாது நடக்கும்வழக்கினை நல்லமுறையில் சொல்லுகின்ற நான்கு வேதங்களைப் போலவும் ஆயின.

கு :—திக்குயானைகள் தம் தம் எல்லையில் இடம்பெயராதே நிற்றல்போல இக்கோபுரங்களும் நிற்கின்றன என்க. கோபுரங்கள், உலகம் யாவும் நீதியிற் பிறழாமல் போக்குவரவுபுரிய இடமாகின்றன. வேதங்களும் உலகத்தை நீதிவழுவாநெறியிற் செலுத்துகின்றன. ஆதலால் வேதங்களுக்குக் கோபுரம் ஒப்பாயிற்று. வேதங்கள் என்றும் உள்ளன; கோபுரங்களும் அழியாதன. ஆதலாலும் ஒப்பாயின எனலும் ஆம். (22)

### கோபுர அமைப்பும் சிற்பச் சிறப்பும் 115—118

**115.** தாவில்பொற் றலத்தினற்
றவத்தினோர்க டங்குதாட்
பூவுயிர்த்த கற்பகப்
பொதும்பர்புக் கொதுங்குமால்
ஆவியொத்த வன்புசேவல்
கூவவந் தணைந்திடா
ஓவியப்பு ருவின்மா
டிருக்கவூடு பேடையே.

தாவு இல் பொன் தலத்தின் நல் தவத்தினோர்கள் தங்கு தாள்
பூ உயிர்த்த கற்பகப் பொதும்பர் புக்கு ஒதுங்குமால்;
ஆவி ஒத்த அன்பு சேவல் கூவ வந்து அணைந்திடா
ஓவியப் புருவின் மாடு இருக்க ஊடு பேடையே.

பொ :—உயிரொத்த அன்பினாலே தனது சேவலை அழைக்க, அது வந்து தழுவாமல், சித்திரத்தில் செய்யப்பெற்ற பெண் புறாவின் பக்கத்தில் இருக்க, அதனைக்கண்டு ஊடல் கொண்ட பெண் புறா, குற்றமற்ற பொன்பூமியாகிய சுவர்க்கத்து, நல்ல தவஞ்செய்தவர்கள் தங்குதற்குரிய அடியினையுடைய பூத்த கற்பகச்சோலையிலே புகுந்து மறையும்.

கு :—பெண்புறு காமக்குறிப்போடு அழைக்கவும், ஆண்புறு வராமல் சித்திரப்புறுவின் பக்கத்திருக்கக்கண்டு பெண்புறு, என் சேவல் வேறொரு பெண்ணை விரும்புகின்றது என்று எண்ணி ஊடல்கொண்டு கற்பகச்சோலையிற் சென்று ஒளிக்கின்றது என்பதாம். ஊடிய புறு தேவலோகத்துக் கற்பக தருவில் மறைகிறது என்றதனால் அந்நகரத்துப் புண்ணிய மிகுதியும், கோபுரத்தின் உயர்ச்சியும் உணர்த்தப்பெறுகின்றன. தாள் - காம்பு எனப் பொருள்கொண்டு காம்பைப் பூவிற்கு அடைமொழியாக்குவாரும் உளர்: அங்ஙனமாயின் தவத்தினேர்கள் தங்கு கற்பகப் பொதும்பர், தாள் பூவுயிர்த்த கற்பகப் பொதும்பர் எனக் கூட்டவேண்டி வரும். (23)

116. கல்லடித் தடுக்கிவாய்
பளிங்கரிந்து கட்டிமீ
தெல்லிடப் பசும்பொன்வைத்
திலங்குபன் மணிக்குலம்
வில்லிடக் குயிற்றிவாள்
விரிக்கும்வெள்ளி மாமரம்
புல்லிடக் கிடத்திவச்
சிரத்தகால் பொருத்தியே.

**கல் அடித்து அடுக்கி, வாய் பளிங்கு அரிந்து கட்டி, மீது**
**எல் இடப் பசும்பொன் வைத்து, இலங்கு பல் மணிக் குலம்**
**வில் இடக் குயிற்றி, வாள் விரிக்கும் வெள்ளி மா மரம்**
**புல்லிடக் கிடத்தி, வச்சிரத்த கால் பொருத்தியே.**

பொ :—கற்களை மட்டமாக அடித்து ஒன்றன்மேலொன்ருக அடுக்கி, (சுவர் எழுப்பி) பளிங்குக்கற்களை வெட்டி அவற்ருல் வாயிலைக்கட்டி, அதற்குமேலே ஒளிவிடும்படி பசும்பொன்னைப் பதித்து, விளங்குகின்ற பல இரத்தினங்களை ஒளிவிடும்படி இழைத்து, ஒளியைப்பரப்புகின்ற வெள்ளியாலாகிய பெரிய கைம் மரங்களை (அதன்மேல்) பொருந்தப் பரப்பி, வயிரத்தாலான தூண்களை நாட்டி.

கு :—கற்சுவர் எழுப்பி, பளிங்கு வாயில் கட்டி, பொன்பதித்து இரத்தினங்களை இழைத்து, வெள்ளிக்கைம்மரம் பரப்பி, வச்சிரத் தூண் நாட்டி (அமைக்கப்பெற்றது) என்பதாம். வாய் பளிங்கு அரிந்து கட்டி என்பதற்கு, சுவரின் முற்புறத்திலே பளிங்குக்

கற்களையறுத்து அவற்றூற்கட்டிஎனப்பொருளுரைப்பாரும் உளர். எல் – நேரொளி. வில் - வளைந்து செல்லும் ஒளி. எல் - எப்போதும் பிரகாசிப்பது. வில் - தோன்றிமறையும் ஒளி எனலுமாம். (24)

**117.** மரகதத் திலங்குபோதி
கைத்தலத்து வச்சிரம்
புரைதபுத் தடுக்கிமீது
பொன்குயிற்றி மின்குலா
நிரைமணிக் குலத்திஞளி
நீள்வகுத்த வோளிமேல்
விரவுகைத் தலத்திலுய்த்த
மேதகத்தின் மீதரோ.

மரகதத்து இலங்கு போதிகைத்தலத்து வச்சிரம்
புரை தபுத்து அடுக்கி, மீது பொன் குயிற்றி, மின் குலாம்
நிரை மணிக் குலத்தின் ஆளி நீள்வகுத்த ஒளிமேல்
விரவு கைத் தலத்தில் உய்த்த மேதகத்தின்மீது அரோ!

பொ :—பச்சைமணியால் இயற்றப்பெற்று விளங்குகின்ற போதிகைக் கட்டைகளில், வயிரக்கற்களைக் குற்றம்போக்கி அடுக்கி, அதன்மேல் பொன்னைப் பதித்து, ஒளிவீசுகின்ற ஒழுங்கான பலநிற இரத்தினங்களால் செய்யப்பட்ட சிங்கவடிவங்களின் நீண்ட வரிசையின்மேல் வைக்கப்பெற்ற கோமேதகத்திஞகிய கொடுங்கைகள் மீது.

கு :—மரகதமணியாலான போதிகையின்மேல், வயிரக்கற்களை அடுக்கி, பொன்ஞல் சந்து பதிந்து, பலநிறமணிகளாலான சிங்கங்களை வரிசையாக வைத்து அதன்மேல் கோமேதகக் கொடுங்கை அமைத்து என்க. போதிகை - தூணின்மேல் வைக்கப்பெறும் உறுப்பு. அடுக்கி-சரமாக அடுக்கி. சரம் என்பது போதிகைக்கு மேல் இடப்படுவது; பல்கை போன்றது. கொடுங்கை-தூணின் மேலுள்ள ஒரு உறுப்பு. (25)

**118.** ஏழ்பொழிற்கு மேழ்நிலைத்
தலஞ்சமைத்த தென்னநூல்
ஊழுறக் குவித்தமைத்த
வும்பர்செம்பொன் வேய்ந்துமீச்

சூழ்சுடர்ச் சிரத்துநன்
மணித்தசும்பு தோன்றலால்
வாழ்நிலக் குலக்கொழுந்தை
மௌலிசூட்டி யன்னவே.

ஏழ் பொழிற்கும் ஏழ்நிலைத் தலம் சமைத்தது என்ன நூல்
ஊழ் உறக் குவித்து அமைத்த உம்பர் செம்பொன் வேய்ந்து, மீச்
சூழ் சுடர்ச் சிரத்து நல் மணித் தசும்பு தோன்றலால்
வாழ் நிலக் குலக்கொழுந்தை மௌலி சூட்டி அன்னவே.

பொ :—ஏழுலகங்களுக்கும் ஏழுநிலைகளையுடைய தளங்களை அமைத்தாற்போலச் சிற்பநூலின் விதிப்படி குவித்துக்கட்டப் பெற்ற, அதன்மேல் செம்பொன்னாலாகிய தகட்டால் முகடு வேய்ந்து, மேலே சூரிய சந்திரர்கள் சுற்றிவருகின்ற சிகரத்தில் நல்ல மாணிக்கங்கள் இழைக்கப்பெற்ற கலசங்கள் காணப்படுவதால், அவை வளங்குறையாமல் வாழுகின்ற நிலமகளின் குலக் கொழுந்துபோன்ற அயோத்திமாநகருக்கு முடிசூட்டினாற் போன்றன.

கு :—அமைத்த சிரத்து, தசும்பு தோன்றலால் கொழுந்தை மௌலி சூட்டியன்ன என முடிக்க. பொழில் - உலகம். கோபுரங்களில் அமைக்கப்பெற்ற ஏழுதளங்களும் ஒவ்வோருலகிற்கும் ஒவ்வொன்றாக அமைக்கப்பட்டனபோன்றன. ஊழ்-முறை, சூழ்சுடர்ச்சிரம் என்பதை சுடர்சூழ்சிரம் என மாறுக. 'வாழ்நகர்க் குலக்கொழுந்தை' என்பது பாடமாயின் வாழுகின்ற அயோத்திமா நகராகிய நற்குலத்துதித்த கொழுந்து போல்பவளை என்க. (26)

## மாளிகைகளின் அமைதி 119—123

119. திங்களுங் கரிதெனை வெண்மை தீற்றிய
★ சங்கவெண் சுதையுடைத் தவள மாளிகை
வெங்கருங் கால்பொர மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடற் றரங்கம் போலுமே.

திங்களும் கரிது என வெண்மை தீற்றிய
சங்க வெண் சுதை உடைத் தவள மாளிகை,
வெம் கருங்கால் பொர மேக்கு நோக்கிய
பொங்கு இரும் பாற்கடல் தரங்கம் போலுமே.

பொ :—வெண்மதியும் கரியது என்று சொல்லும்படியாக, வெள்ளை பூசப்பட்ட சங்கு சுட்டு விளைந்த வெண்மையான சுண்ணும்பையுடைய வெண்மாளிகையானது, கொடிய, கரிய, காற்று மோத, (அதனால்) மேற்றிசையைப் பார்த்துக் கரைபுரண்டுவந்த பொங்குகின்ற பெரிய பாற்கடலிலுள்ள அலைகளைப் போன்றன.

கு :—காற்றின் நிறம் கருமை என்பதை 'வன்கால் கருமை' என்னும் உண்மை விளக்கத்தானும் உணர்க. மாளிகையின் மிகுந்த வெண்மை வெண்திங்களையும் கரிது என்று சொல்லும் படி இருந்தது என்பதாம். மேக்கு - மேற்றிசை, உயரமுமாம். பாற்கடல் தரங்கம் வெண்மை ஆதலின் தவளமாளிகை தரங்கம் போலுமே என்றார். (27)

120. புள்ளியம் புறவிறை பொருந்து மாளிகை
தள்ளருந் தமனியத் தகடு வேய்ந்தன
எள்ளருங் கதிரவ னிளவெயிற் குழாம்
வெள்ளியங் கிரிமிசை விரிந்த போலுமே.

புள்ளி அம் புறவு, இறை பொருந்தும் மாளிகை
தள்ளரும் தமனியத் தகடு வேய்ந்தன,
எள்ளரும் கதிரவன் இளவெயில் குழாம்
வெள்ளி அம் கிரிமிசை விரிந்த போலுமே.

பொ :—புள்ளிகளையுடைய மணிப்புறுக்கள் இறப்புக்களில் பொருந்தியுள்ள மாளிகைகளில் வேயப்பட்டனவாகிய நீக்குதற்கரிய பொற்றகடுகள் இகழ்தற்கு அரிய சூரியனுடைய இளங்கதிர்கள் வெள்ளிமலையில் விரிந்துள்ளனபோலும்.

கு :—புறவிறை இப்போது கபோதம் எனச் சிற்பநூலில் வழங்கும். புறு இறவிற்றங்குதலை 'மனையுறை புறுவின் செங்காற் சேவல்' 'மாடத்திறையுறை புறவின் செங்காற் சேவல்' என்னும் செய்யுட்பகுதிகளான் அறியலாம். வெள்ளை மாளிகை வெள்ளி மலைக்கும், பொற்றகடுகள் இளவெயிலுக்கும் நிறம்பற்றி ஒப்பாக்கி உரைக்கப்பெற்றன.

வேய்ந்தன போலும் எனக் கூட்டுக. புள்ளியம்புறவிறை பொருந்துமாளிகை என்பதனை புள் இயம்புற இறைபொருந்து மாளிகை எனப் பிரித்து, பறவைகள் ஒலிக்க அரசனாகிய தசரதன் தங்கிய மாளிகையாகிய பொன்வேயப்பட்டன, வெள்ளியங்கிரி மிசைவிரிந்த வெயிற்குழாம் போலும் எனவும் கொண்டு கூட்டிப் பொருள் உரைப்பார். (28)

**121.** வயிரநற் கான்மிசை மரக தத்துலாம்
செயிரறப் போதிகை கிடத்திச் சித்திரம்
உயிர்பெறக் குயிற்றிய வும்பர் நாட்டவர்
அயிருற விமைப்பன அளவில் கோடியே.

வயிர நல் கால் மிசை மரகதத் துலாம்
செயிர் அறப் போதிகை கிடத்திச் சித்திரம்,
உயிர்பெறக் குயிற்றிய உம்பர் நாட்டவர்
அயிர் உற இமைப்பன அளவில் கோடியே.

பொ :—வயிரமணியாலியன்ற தூணின்மேல், பச்சைமணியாலான துலாத்தைக் குற்றமறச் செய்யப்பட்ட போதிகையின் கீழே கிடத்தி, உயிர்பொருந்தியன என்று சொல்லும்படியாகச் செய்யப்பட்டனவும், தேவர்கள் வியப்பால் ஐயப்பட விளங்குவனவுமாகிய மாளிகை பலகோடி என்பதாம்.

கு :—துலாம் - தூண்மேலுள்ள போதிகையின் கீழ் வாழைப்பூ வடிவிலமைந்த அணிசெய்யுறுப்பு. போதிகை - தூணின்மேல் வைக்கப்படும் கட்டை. இச்செய்யுளை, "வயிர நற்கால்மிசை போதிகை மரகதத்துலாம் செயிரறக்கிடத்தி உயிர்பெறக் குயிற்றிய அளவில் கோடி சித்திரம் உம்பர் நாட்டவர் அயிருற இமைப்பன" என்று பிரித்துக்கூட்டி. வயிரத்தூண்களின்மேல் போதிகையையும், அதன்மேலே பச்சைமணியால் ஆன உத்திரத்தையும் சந்தில்லாமல் நன்முய்ப் பதியக் கிடத்தி,உயிரமைய எழுதப்பெற்ற பலகோடி சித்திரங்கள் தேவர்களும் வியப்புற விளங்குவன எனவும் பொருள் உரைப்பர். (29)

**122.** சந்திர காந்தத்தின் தலத்த சந்தனப்
பந்திசெய் தூணின்மேற் பவளப் போதிகைச்
செந்தனி மணித்துலாஞ் செறிந்த திண்சுவர்
இந்திர நீலத்த எண்ணில் கோடியே.

சந்திர காந்தத்தின் தலத்த, சந்தனப்
பந்தி செய் தூணின்மேல் பவளப் போதிகைச்
செந்தனி மணித் துலாம் செறிந்த, திண் சுவர்
இந்திர நீலத்த, எண் இல் கோடியே.

பொ :அங்குள்ள மாளிகைகளில், சந்திரகாந்தக்கல்லால்ஆன தளவரிசையில் விளங்குவனவும் சந்தனமரத்தாலான வரிசை

யாகிய தூண்களின்மேல் பவளத்தாலியன்ற போதிகையில் சிவந்த ஒப்பற்ற மாணிக்கத்தாலான உத்தரங்கள் செறிக்கப்பட்டனவும், இந்திரநீலக்கற்களால் ஆன வலிய சுவர்களில் இருப்பனவும் ஆகிய சித்திரங்கள் பலகோடிக் கணக்கானவை.

கு :—இங்ஙனம் அன்றி, இந்திரநீலக்கற்களாலான சித்திரங்கள் தலத்தவும், தூணின் மேலவும், போதிகையின் மேலவும். துலாங்களின் மேலவும் சுவரின் மேலவுமாகப் பல உள்ளன என்றும் உரைப்பர் சிலர். (30)

**123.** பாடகக் காலடி பதுமத் தொப்பன
சேடரைத் தழீஇயன செய்ய வாயின
நாடகத் தொழிலன நடுவு துய்யன
ஆடகத் தோற்றத்த; அளவி லாதன.

பாடகக் காலடி பதுமத்து ஒப்பன ;
சேடரைத் தழீஇயன ; செய்ய வாயின ;
நாடகத் தொழிலன, நடுவு துய்யன
ஆடகத் தோற்றத்த அளவு இலாதன.

பொ :—எண்ணிறந்த ஓவியங்கள், பாடகம் அணிந்த கால்களின் அடிப்பக்கங்கள் செந்தாமரைமலரை ஒப்பனவும், கணவர்களைத் தழுவிக்கொண்டிருப்பனவும், சிவந்த வாயை யுடையனவும், பரதத் தொழில் உள்ளனவும், பஞ்சின் நுனி போன்ற இடையினை யுடையனவும், பொன்னிறமான காட்சியையுடையனவும், ஆக உள்ளன.

கு :—அளவிலாதன ஒப்பன, தழீஇயன, வாயின, தொழிலன, துய்யன, தோற்றத்த எனத் தனித்தனியே முடிக்க. அன்றி, இணைத்து, உள்ளன என ஒரு சொல் வருவித்து முடித்தலுமாம்.

இங்ஙனமன்றி மாளிகையின் அழகு உரைத்ததாக எண்ணி, வேலைப்பாடு அமைந்த தூண்களின் அடிகள் தாமரை வடிவாக அமைந்தனவும், அஸ்திவாரத்தின் ஆழத்தால் ஆதிசேடரைத் தொடுவனவும், செப்பமான வேலைப்பாடுள்ளனவும், எல்லாரும் விரும்பிப் பார்ப்பதற்கேற்ற வேலைப்பாடமைந்தனவும், நடுவிடம் எல்லாம் வெளியாக அமைந்தனவும், பொன்னாலான வெளியமைப்பையுடையனவும் ஆக உள்ளன மாளிகைகள் என உரைப்பாரும், இறுதியடியின் இறுதியில் அளவிலாதன என்பதற்குப் பிரதியாக " மகளிர் போன்றன " எனப் பாடங்கொண்டு

மகளிர்க்கும் மாளிகைக்கும் சிலேடையாகக் கூறியதாகக்கருதி முன் எழுதிய இரு உரையையும் கொள்வாரும் ஆக உரைகூறுவார் பல திறப்பட்டனர்.

பாடகம் - ஒருவகைக் காலணி. சேடர் - இளையரான தம் கணவர்; " ஊடல் தீர்க்கும் சேடரிற் சென்றுபுல்லி " என்னும் சிந்தாமணிச் செய்யுளின் உரை காண்க. துய்-பஞ்சின் நுனி. (31)

### மாளிகைகள் தேவவிமானம்போலத் திகழ்தல்

**124.** புக்கவர் கண்ணிணை பொருந்து ருதொளி
தொக்குடன் றயங்கிவிண் ணவரிற் றோன்றலால்
திக்குற நினைப்பினிற் செல்லுந் தெய்வவீ
டொக்கநின் றிமைப்பன வும்பர் நாட்டினும்.

புக்கவர் கண் இணை பொருந்துருது ஒளி
தொக்கு உடன் தயங்கி விண்ணவரில் தோன்றலால்,
திக்கு உற நினைப்பினில் செல்லும் தெய்வ வீடு
ஒக்க நின்று இமைப்பன உம்பர் நாட்டினும்.

பொ :—மாளிகைகளைப் பார்க்க வந்தவர்கள் தங்கள் இரண்டு கண்களையும் மூடாமல் மாளிகையின் ஒளியோடு ஒன்றுகூடி விளங்கித் தேவர்களைப்போலத் தோன்றுவதால், மாளிகைகள், நினைத்தமாத்திரத்தில் எல்லாத் திக்குகளிலும் செல்லும் தேவ விமானத்தை ஒப்ப நிலைபெற்றுத் தேவருலகமாகிய அமராவதியைக் காட்டிலும் விளங்குவவாயின.

கு :—புக்கவர், கண் பொருந்துருது, ஒளி தொக்கு தயங்கி விண்ணவரில் தோன்றலால், தெய்வவீடு ஒக்க நின்று உம்பர் நாட்டினும் இமைப்பன மாளிகைகள் எனக் கூட்டுக. தொக்கு உடன் தயங்கி என்பதற்கு உடலோடு விளங்கி எனப் பொருள் கூறுவாரும் உளர். தொக்கு - தோல். ஆகுபெயராக உடலை யுணர்த்திற்று என்பது அவர்கள் எழுதும் குறிப்பு.

சித்திரங்கள் விண்ணவரில் தோன்றலால் மாளிகைகள் தெய்வ வீடு ஒக்க உம்பர் நாட்டினும் சென்று இமைப்பனஎன்பது சிலர் கருத்து. (32)

### மாளிகையில் வாழ்வார் இயல்பும் அணிகளும்

**125.** அணியிழை மகளிரு மலங்கல் வீரரும்
தணிவன அறநெறி தணிவி லாதன
மணியினும் பொன்னினும் வனைந்த வல்லது
பணிபிறி தியன்றன பாங்கு மில்லையே.

அணி இழை மகளிரும் அலங்கல் வீரரும்
தணிவன அறம்; நெறி தணிவு இலாதன;
மணியினும் பொன்னினும் வனைந்த அல்லது
பணி பிறிது இயன்றன பாங்கும் இல்லையே.

பொ :—மாளிகையிலுள்ள, ஆபரணங்களையணிந்த பெண்களும் மாலையையணிந்த வீரர்களும் (எப்போதும்) தோய்வன அறம், (அவர்களிடம்) குறைவிலாதன ஒழுக்கங்கள். உயர்ந்த இரத்தினங்களாலும், பொன்னாலும் செய்யப்பட்டனவேயன்றி வேறு உலோகங்களால் இயன்ற பொருள்கள் அம்மாளிகையின் பக்கத்தும் இல்லை.

கு :—தணிவன - தோய்வன. அறம் - தானமும் தருமமும். தோய்தலாவது இடைவிடாது இயற்றப்படுதல். தணிவிலாதன - குன்றாதன. வளர்ந்துகொண்டே யிருப்பன ஒழுக்கங்கள். பணி - தொழிலாகுபெயராகப் பொருள்கள்மேல் நின்றது. பாங்கும் இல்லை எனவே மாளிகைகளில் இன்மை சொல்ல வேண்டாவாயிற்று.

முதல் இரண்டடிக்கும் மகளிரும் வீரரும், உடன்போக்கு நாடுகாவல் முதலியவற்றால் வீட்டைவிட்டுச் செல்வாராயினும், அவர்கள் இருந்த மாளிகையில் அறநெறி தவறாது நடக்கும் எனவும், மகளிரும் வீரரும் தணிவன விரகதாபம் எனவும், மகளிரும் வீரரும் தங்குதற்கு உரியனவும், அறநெறி தணிவிலாதனவும் ஆகிய மாளிகைகள் மணியானும் பொன்னானும் தொழில் செய்யப்பட்டனவாம் எனவும் பொருள் கூறுவர் பலர். ஏற்பன கொள்க. இறுதியிலுள்ள 'பாங்குமில்லையே' என்பதற்குப் 'பகலை வென்றன' எனப் பாடம் கொண்டு ஒளிப்பொருளாகிய சூரியனையும் சந்திரனையும் வென்றன மாளிகைகள் என்பதும் உண்டு. (33)

### மாளிகைச் சிறப்பு

126. வானுற நிமிர்ந்தன வரம்பில் செல்வத்த
தானுயர் புகழன தயங்கு சோதிய
ஊனமி லறநெறி யுற்ற வெண்ணிலாக்
கோனிகர் குடிகடங் கொள்கை சான்றன.

வான் உற நிமிர்ந்தன ; வரம்பில் செல்வத்த ;
தான் உயர் புகழன ; தயங்கு சோதிய ;
ஊனம் இல் அறநெறி உற்ற ; எண் இலாக்
கோன் நிகர் குடிகள்தம் கொள்கை சான்றன.

பொ ;—மாளிகைகள் ஆகாயம் அளாவ உயர்ந்தனவும், எல்லையற்ற செல்வத்தை உடையனவும், உயர்ந்த புகழுடையனவும், விளங்குகின்ற ஒளியுடையனவும், குறைபாடு இல்லாத அறவழிகளிற் பொருந்தியனவும் அரசனையொத்த கணக்கற்ற குடிகளின் கொள்ளுதலையுடையனவும் ஆக உள்ளன.

கு :—இதனால் மாளிகையின் உயரமும், செல்வமும், புகழும்' ஒளியும், அறங்களும், குடிகளுமாகிய இவற்றின் மிகுதியறிவிக்கப் பெற்றமை காண்க. தயங்குதல் - விட்டுவிட்டுப் பிரகாசித்தல். ஊனம் இல் அறம் - தன்பொருட்டுச் செய்யப்படுதலாகிய குற்றமற்ற அறம். எவ்வகைப்பட்ட அறங்களும் தன்பொருட்டுச் செய்யப்படின் காமியமாய்க் குற்றமுறுதலின், ஊனமில் அறம் எனப்பட்டது. எண்ணிலாக் குடிகள், கோனிகர் குடிகள் எனக் கூட்டுக. கோன் நிகர் குடிகள் என்பதனோடு "பெருநில முழுதாளும் பெருமகன் தலைவைத்த ஒரு தனிக் குடிகள்" என்னும் சிலப்பதிகார அடிகளும் (மங்கல 31-32) நோக்கத்தகும். (34)

### மாளிகைகள் மலைகளை ஒத்திருத்தல்

127. அருவியிற் றாழ்ந்துமுத் தலங்கு தாமத்த
விரிமுகிற் குலமெனக் கொடிவி ராயின
பருமணிக் குவையன பசும்பொற் கோடிய
பொருமயிற் கணத்தன மலையும் போன்றன.

அருவியில் தாழ்ந்து முத்து அலங்கு தாமத்த ;
விரி முகில் குலம் எனக் கொடி விராயின ;
பரு மணிக் குவையன ; பசும்பொன் கோடிய ;
பொரு மயில் கணத்தன மலையும் போன்றன.

பொ :—அருவிகளைப்போல நிலம்வரையில் தாழ்ந்து விளங்கு கின்ற முத்துமாலைகளையுடையனவும், வான்முழுதும் பரந்த வெண் முகிலின் கூட்டம்போலக் கொடிகளோடு கூடியனவும், பருத்த இரத்தினம் முதலிய மணிகளின் கூட்டங்களையுடையனவும், கோடிக்கணக்கான பசுமையான பொன்னையுடையனவும் ஒத்த மயிற்கூட்டங்களை யுடையனவும் ஆகிய மாளிகைகள் மலையையும் ஒத்திருந்தன.

கு :—பொருமயிற் கணம் ; மாளிகைக்கு, மயில் பொருகணம் என மாற்றி மயிலை ஒத்த சாயலையுடைய மகளிர் கூட்டம் எனக் கொள்க. மலையும் என்ற உம்மை இறந்ததுதழீஇய எச்சம் (35)

மாளிகைகளிற் சூலங்கள் மின்வரிசைபோலுதல்

**128.** அகிலிடு கொழும்புகை யளாய்ம யங்கின
முகிலொடு வேற்றுமை தெரிக லாமுழுத்
துகிலொடு நெடுங்கொடிச் சூல மின்னுவ
பகலிடு மின்னணிப் பரப்புப் போன்றவே.

அகில் இடு கொழும் புகை அளாய் மயங்கின ;
முகிலொடு வேற்றுமை தெரிகலா; முழுத்
துகிலொடு நெடுங்கொடிச் சூலம் மின்னுவ;
பகல் இடு மின் அணிப் பரப்புப் போன்றவே.

பொ :—அகிற்புகையோடு கலந்தனவும் மேகத்தோடு வேற் றுமை காணமுடியாத முழு ஆடையோடு கூடிய நீண்ட கொடிகளின் நுனியில் மின்னுவனவுமாகிய சூலங்கள் ஒளியைச் செய்கின்ற மின்னல் வரிசையின் பரப்பை ஒத்தன.

கு :—அகில் இடு கொழும்புகை - அகிற் கட்டையை யிடுவதால் விளைந்த கொழுமையான புகை; என்றது மாடங்கள் தோறும் மகளிர் கூந்தலுக்கு இடப்பெறும் புகையை யுணர்த்திற்று. அளாய் - கலந்து. மயங்கின துகிலொடு என இயைக்க. அகிற் புகையோடு கலந்து மயங்கிய கொடியாடை மேகம்போல இருப்ப தால் கொடியின் முனையிலுள்ள சூலங்கள் ஒளிசெய்கின்ற மின் வரிசையையொத்தன என்பது கருத்து. பகலிடு மின்னணிப் பரப்பு என்பதற்குப் பகற்காலத்திலுண்டான மின்வரிசையை ஒத்தன என உரை கூறின் பகலில் மின், ஒளிகுன்றுதலின் உவம இழுக்காம்.
(36)

### கொடிச்சரங்கள் கற்பகமாலையை ஒத்தல்

**129.** துடியிடைப் பணைமுலைத் தோகை யன்னவர்
அடியிணைச் சிலம்புபூண் டரற்று மாளிகை
கொடியிடைத் தரளவெண் கோவை சூழ்வன
கடியுடைக் கற்பகங் கான்ற மாலையே.

துடி இடைப் பணைமுலைத் தோகை அன்னவர்
அடி இணைச் சிலம்பு பூண்டு அரற்றும் மாளிகை
கொடி இடைத் தரள வெண் கோவை சூழ்வன
கடி உடைக் கற்பகம் கான்ற மாலையே.

பொ :—உடுக்கையின் நடுப்போன்ற இடையினையும், பணைத்த முலையினையும், உடைய மயிலையொத்த சாயலையுடைய மகளிர்கள் இரண்டு அடிகளிலும் சிலம்பென்னும் அணியை அணிந்திருப்பதால் ஒலிக்கின்ற மாளிகைகளில், கட்டப்பெற்ற கொடிகளின் இடையிடையே தொங்கவிடப்பட்டுள்ளனவாகிய வெண்முத்து வடங்கள் தெய்வத்தன்மையையுடைய கற்பகமரங்கள் மலர்ந்து வெளிப்படுத்திய மலர்களின் மாலைபோல்வனவாம்.

கு :—கொடியிடைச் சூழ்வன தரளவெண்கோவை என மாறுக. கடி - தெய்வத்தன்மை. சிலம்பு பூண்டு அரற்றும் மாளிகை - சிலம்பு பூணுதலால் ஒலிக்கின்ற மாளிகை என இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்துமேனின்றது. கற்பகம் தேவருலகத்து இருக்கும்போது மாலையாகவே பூக்கும் என்பதும், பூமிக்குக் கொண்டுவந்தபோது மலராகவே பூக்கும் என்பதும் "கற்பக மாலை வேய்ந்து கருங்குழற் கைசெய்வானை" (1710) என்ற சிந்தாமணிச் செய்யுட் பகுதிக்கு நச்சினார்க்கினியர் எழுதும் உரையான் உணர்க. (37)

### மாளிகையின் கொடிகள் தேய்ப்பதால் மதி தேய்தல்

**130.** காண்வரு நெடுவரைக் கதலிக் கானம்போற்
கோணிமிர் பதாகையின் குழாந்த ழைத்தன
வாணிலா மழுங்கிட மடங்கி வைகலும்
சேண்மதி தேய்வதக் கொடிக டேய்க்கவே.

காண்வரு நெடுவரைக் கதலிக் கானம்போல்
கோள் நிமிர் பதாகையின் குழாம் தழைத்தன;
வாள்நிலா மழுங்கிட மடங்கி வைகலும்
சேண்மதி தேய்வது அக்கொடிகள் தேய்க்கவே.

பொ:—நெடுந்தூரத்திருப்பவர்களாலும் காணப்படுகின்ற பெரிய மலையின்கண் உள்ள வாழைக்காடுகளைப்போல, வலிமையோடு நிமிர்ந்து விளங்குகின்ற கொடியின் கூட்டங்கள் மிக்குள்ளன; அக்கொடிகள் தேய்க்க, அதனால் ஆகாயத்திலுள்ள மதி, ஒளிபொருந்திய நிலா மழுங்கி, உடல் வளைந்து நாடோறும் தேய்வதாம்.

கு:—அக்கொடிகள் தேய்க்க, சேண்மதி நிலாமழுங்கிட மடங்கி வைகலும் தேய்வது ஆம் என முடிக்க. அண்மையிலும், சேய்மையிலும் காணப்படும் பெரியமலை என்பதாம், தேய்பிறையில் மதி தேய்வதற்கு ஒரு காரணம் கற்பித்துக் கூறுவதால் இது ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம். (38)

### அயோத்தி நகரெங்கும் மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் அமைந்தமை

131. பொன்றிணி மண்டப மல்ல பூத்தொடர்
மன்றுக ளல்லன மாட மாளிகை
குன்றுக ளல்லன மணிசெய் குட்டிமம்
முன்றில்க ளல்லன முத்தின் பந்தரே.

பொன் திணி மண்டபம் அல்ல பூத்தொடர்
மன்றுகள் அல்லன மாட மாளிகை
குன்றுகள் அல்லன மணி செய் குட்டிமம்
முன்றில்கள் அல்லன முத்தின் பந்தரே.

பொ:—செம்பொன்னைத் திணித்துச் சந்து பதிக்கப்பட்ட மண்டபம் அல்லாத எல்லாம் பூக்கள் தொடர்ந்தனவாகிய மலர் மண்டபங்கள்; சபைகளல்லாத இடங்கள் யாவும் மாடமாளிகைகள்; மலைகளல்லாதன யாவும் மணிகள் இழைத்துச் செய்யப்பெற்ற செய்குன்றுகள்; முற்றங்கள் அல்லாத இடங்களில் விளங்குவன முத்துப்பந்தர்.

கு:—இக்கவி, அயோத்திமாநகரம் எங்கும் மண்டபங்களும், மலர்மண்டபங்களும், மாடமாளிகைகளும், செய்குன்றுகளும்,

முத்துப்பந்தலுமாகவே, சிறிதும் வெற்றிடமின்றி விளங்கு கின்றன என்பதை விளக்குகின்றது.

பொன்றிணி மண்டபம் அல்ல பூத்தொடர் மன்றுகள், அல்லன மாடமாளிகை குன்றுகள், அல்லன மணிசெய் குட்டிமம் முன்றில்கள், அல்லன முத்தின்பந்தரே எனப்பிரித்துப் பொருள்கூறுவாரும், பொன்றிணிமண்டபம்அல்லனவும், பூத்தொடர் மன்றுகள் அல்லனவும், மாடமாளிகை குன்றுகள் அல்லனவும், குட்டிமம் முன்றில்கள் அல்லனவும் முத்தின் பந்தரே என இயைத்து நகரெங்கும் காணப்படுவன மண்டபம் முன்றில் முதலியன; அவையல்லாத இடங்கள் முத்துப்பந்தரே எனப் பொருள் உரைப்பாரும் ஆகப் பலவகையாற் கூறுவார் பலர்.

பொன் திணி மண்டபம்— பொன்னைத் திணித்து ஆக்கப்பட்ட மண்டபம். என்றமையால், பொன்னாகிய சாந்தால் கட்டப்பட்டது என்பது விளக்கியவாறும். பூத்தொடர் மன்றுகள்-மலர் மண்டபம்; பல நிறப்பூக்களையுடைய பலகொடிகள் படரவிட்டுள்ள மண்டபம். மன்று - பலர்கூடியிருக்கும் ஊர்ப் பொதுவிடமாகிய அம்பலம். குட்டிமம்-செய்குன்றுகள். (39)

**அயோத்தியின் ஒளிபெற்று, தேவருலகு பொன்னுலகாயிற்று எனல்**

**132.** மின்னென விளக்கென வெயிற்பி ழம்பெனத்
துன்னிய தமனியத் தொழிற மைத்தவக்
கன்னிநன் னகர்நிழற் கதுவ லாலரோ
பொன்னுல காயதப் புலவர் வானமே.

**மின் என, விளக்கு என, வெயில் பிழம்பு எனத்**
**துன்னிய தமனியத் தொழில் தழைத்த அக்**
**கன்னி நல் நகர் நிழல் கதுவலால் அரோ**
**பொன்னுலகு ஆயது அப் புலவர் வானமே.**

பொ :—மின்னலைப்போலவும், விளக்கைப்போலவும், வெயிலின் கற்றை போலவும், ஒளிபொருந்திய பொன்னால் வேலைப்பாடுகள் மிகச் செய்யப்பெற்ற அந்த அழியாத நல்ல நகரத்தின் ஒளி சென்று பற்றுதலால் அவ்வானவர் வாழுகின்ற சுவர்க்கம் பொன்மயமான உலகம் ஆயிற்று.

கு :—அரோ—அசை. தோன்றி மறைதலும், சுடர்விட்டெரிதலும் சோதியாயிருத்தலும் ஆகிய ஒளியின் மூன்று நிலை குறித்து

மின் என, விளக்கு என, வெயிற்பிழம்பென என மூன்றுவமைகள் அடுக்கிக் கூறப்பட்டன. துன்னிய நகர், தழைத்த நகர், கன்னி நன்னகர் எனத் தனித்தனி கூட்டிமுடிக்க. கன்னி நன்னகர் - மதிலின் வளம் மாற்றாரால் கொள்ளற்கரியது என்பதுபட நின்றது. சுவர்க்கம் இயற்கையே பொன்னுலகாயிருப்பவும், வேறொரு காரணம்கற்பித்துக் கூறினமையால் இச்செய்யுள் ஏதுத்தற்குறிப்பேற்ற உவமையாம். புலவர்—தேவர். (40)

## சூரியன் ஒளி அயோத்தியின் ஒளியே எனல்

**133.** எழுமிடத் தகன்றிடை யொன்றி யெற்படு
பொழுதிடைப் போதலிற் புரிசைப் பொன்னகர்
அழன்மணி திருத்திய வயோத்தி யாளுடை
நிழலெனப் பொலியுமா னேமி வான்சுடர்.

எழும் இடத்து அகன்று இடை ஒன்றி எற்படு
பொழுதிடைப் போதலின் புரிசைப் பொன்னகர்
அழல்மணி திருத்திய அயோத்தியாளுடை
நிழல் எனப் பொலியுமால், நேமி வான்சுடர்.

பொ:—சூரியன் உதிக்குமிடத்துப் பெரிய ஒளி நீங்கியும், உச்சிக்கு வரும்போது பேரொளி பொருந்தியும், மறையுங்காலத்துப் பேரொளி நீங்கியும் போதலால் மதில் சூழ்ந்த ஒளிவிடுகின்ற இரத்தினமுதலியமணிகளால் திருத்தப்பெற்ற பொன்னால்இயன்ற நகரமாகிய அயோத்தியென்னும் பெண்ணின் ஒளியே என்று சொல்ல விளங்கித் தோன்றும்.

கு:—நேமி, எழுமிடத்து வான்சுடர் அகன்று, இடை ஒன்றி, எற்படு பொழுதிடைப் போதலின், புரிசை அழன் மணி திருத்திய பொன்னகர் அயோத்தியாளுடை நிழல் எனப் பொலியும் என வினைமுடிவு காண்க.

சூரியன், தோன்றுங்காலத்தும், மறையுங்காலத்தும் ஒளி குறைந்தும், உச்சிக்காலத்து ஒளிமிக்கும் இருக்கும் காரணம் ஒளி விடுகின்ற செம்மணிகளைக் கொண்டு செப்பனிடப் பெற்ற அயோத்தியென்னும் பெண்ணின் ஒளியே தாக்காததாலும், உச்சியில் வரும்போது தாக்குவதாலுமே என்றவாறு. அகன்று, ஒன்றி, போதலின் என்ற வினையெச்சங்களுக்கு வினைமுதல் வான் சுடர் என்பது. அயோத்தியை அழன்மணிதிருத்திய அயோத்தி

என விசேடித்தது உச்சியில் வருங்கால் சூரியன் ஒளிமிக்குத் தோன்றற்கு என்க. ஆல் அசை.

இவ்வாறன்றி, 'உதயமாகும்போது ஒளியை நீங்கி, நடுப் பகலில் நிரம்பி, பகற்காலம் நீங்க நீங்கிப்போதலால், மாணிக்கம் பதித்த பொன்னாலாகிய மதில் சூழ்ந்த அயோத்தியென்னும் பெண்ணின் ஒளியையுடையதென்று சொல்ல விளங்குகின்றது வட்டமாகிய சூரியன்' எனவும் வட்டவடிவமான சூரியன், உதய மாகின்ற காலத்து மிக நீளமாகக் காணப்பட்டு, நடுப்பகலிலே உருவத்தினளவாகப் பொருந்தி, சூரியாஸ்தமன காலத்தில் மீளவும் நீண்டுபோதலால் அச்சூரிய மண்டலம் வட்டவடிவமான பொன்மயமான மதிள்கள் மாணிக்கங்களைக் கொண்டு ஒழுங் காகப் பதிக்கப்பெற்றுள்ள அயோத்திநகராகிய பெண்ணினது சாயை போலப் பொலியும் எனவும், உரைப்பாரும் உளர். (41)

### அகிற்புகையுண்ட மேகங்கள் தோய்தலால் கடல் நறுமணம் கமழுகின்றதெனல்

**134.** ஆய்ந்தமே கலையவ ரம்பொன் மாளிகை
வேய்ந்தகா ரகிற்புகை யுண்ட மேகம்போய்த்
தோய்ந்தமா கடனறுந் தூப நாறுமேல்
பாய்ந்ததா ரையினிலை பகரல் வேண்டுமோ?

ஆய்ந்த மேகலையவர் அம் பொன் மாளிகை
வேய்ந்த கார் அகில் புகை உண்ட மேகம் போய்த்
தோய்ந்த மா கடல் நறுந்தூபம் நாறுமேல்,
பாய்ந்த தாரையின் நிலை பகரல் வேண்டுமோ?

பொ :—ஆராய்ந்து செய்யப்பெற்ற மேகலையை யணிந்த பெண்கள், அழகிய பொன்னாலாகிய மாளிகைகளில் எழுப்பிய கரிய அகிற் கட்டையின் புகையை உண்ட மேகமானது சென்று நீருண்ணற் பொருட்டுத் தோய்ந்த பெரிய கடலும் நறும்புகை மணக்கு மானால், அம்மேகங்களின்றும் பெருகிய மழைத்துளிகளின் நிலையைப்பற்றிக் கூறுதல் வேண்டுமோ? வேண்டா.

கு :—பெண்கள் எழுப்பிய அகிற்புகை படிந்த மேகம் போய்ப் படிதலால் புலானாற்றங்கமழும் கடலும் நறுமணங்கமழும் என்றால், அம்மேகங்கள் பெய்த மழையைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ என்பதாம். மேகலை—எண்கோவை மணி; மகளிர்

இடுப்பில் ஆடைக்கு மேல் அணியப்படுவது. மகளிர் கூந்தலின் சுரம்புலர்த்த, ஆடையணிகட்கு மணம் ஊட்ட, மாளிகையில் மங்கலம் நிலவ அகிற்புகையிடுதல் மரபு. (42)

**அயோத்தியில் உள்ள மகளிர் குதலைமுதலியவற்றின் இயல்பு**

**135.** குழலிசை மடந்தையர் குதலைக் கோதையர்
மழலையங் குரலிசை மகர யாழிசை
எழிலிசை மடந்தைய ரின்சொ லின்னிசை
பழையர்தஞ் சேரியிற் பொருநர் பாட்டிசை.

குழல் இசை மடந்தையர் குதலைக் கோதையர்
மழலை அம் குரல் இசை மகர யாழ் இசை
எழில் இசை மடந்தையர் இன் சொல் இன் இசை
பழையர்தம் சேரியில் பொருநர் பாட்டிசை.

பொ :—பெண்களின், குதலைச்சொற்கள் புல்லாங்குழலின் இசையைப்போலும். மாலைபோன்ற மகளிரின் மழலைச் சொற்களாகிய அழகிய மிடற்றுப்பாடல் மகரயாழிலிருந்து எழும் இசை போலும். அழகோடு கூடிய பரத்தையர்களின் இன்சொற்களால் இயன்ற இனிய ஓசை, கள்விற்பார்சேரியில் உள்ள கூத்தர் பாட்டொலிபோலும்.

கு :—மழலை-எழுத்துருப்பெற்றும் சொல் நிரம்பாதது. குதலை-எழுத்தும், சொல்லும் நிரம்பாதது. மகரயாழ்-மீனின் வடிவாகச் செய்யப் பெற்று, பத்தொன்பது நரம்பையுடையது. இசை மடந்தையர் எழிலும் இன்னிசையும், கண்ணுக்கும் செவிக்கும் களிப்பூட்டுதலேயன்றி அறிவையும் திரித்தலின் கள் விற்பாருடைய சேரியிற் கூத்தரிசைக்கு ஒப்பாக உரைக்கப் பட்டன. பழையர்-கள்விற்பார். பொருநர் – கூத்தர். (43)

**யானைகள்செய்த குழிகளைச் சுண்ணம் தூர்க்கின்றது எனல்**

**136.** கண்ணிடைக் கனல்சொரி களிறு கால்கொடு
மண்ணிடை வெட்டுவ வேட்கு மைந்தர்கள்
பண்ணைகள் பயிலிடங் குழிப டைப்பன
சுண்ணமக் குழிகளைத் தொடர்ந்து தூர்ப்பன.

கண்ணிடைக் கனல்சொரி களிறு கால்கொடு
மண்ணிடை வெட்டுவ ; வேட்கும் மைந்தர்கள்
பண்ணைகள் பயில் இடம் குழி படைப்பன ;
சுண்ணம் அக் குழிகளைத் தொடர்ந்து தூர்ப்பன.

பொ :—மதத்தால், கண்ணில் நெருப்பைச் சொரிகின்ற ஆண் யானைகள் தம் கால்களைக் கொண்டு, மண்ணில் வெட்டுவ வாயின. அதனுல் விரும்பத்தக்க காளையர்கள் விளையாடும் இடங்கள் குழிகளையுடையவாயின. அந்தக் குழிகளை அவர்கள் மேனியில் அப்பியுள்ள சுண்ணங்கள் தொடர்ந்து தூர்ப்பனவாயின.

கு :—ஆண்யானைகள் மதத்தாலும், கோபத்தாலும் கண்களில் தீப்பொறி பறக்க இருத்தலும், காலால் பூமியிற் பள்ளந்தோண்டுதலும் இயல்பு. வேட்கும்-விரும்பப்படுகின்ற. மைந்தர்கள்-வலிமை பொருந்திய காளையர்கள். பண்ணைகள்-விளையாட்டு. '' தடவரல் பண்ணை யாயிரண்டும் விளையாட்டு '' என்பது தொல்காப்பியம். (44)

மகளிர் பந்தாடல்

137. பந்துகண் மடந்தையர் பயிற்று வாரிடைச்
சிந்துவ முத்தின மவைதி ரட்டுவார்
அந்தமில் சிலதிய ராற்ற குப்பைகள்
சந்திர னொளிகெடத் தழைப்ப தண்ணிலா.

பந்துகள் மடந்தையர் பயிற்றுவார் ; இடைச்
சிந்துவ முத்தினம் ; அவை திரட்டுவார்
அந்தம் இல் சிலதியர் ; ஆற்ற குப்பைகள்
சந்திரன் ஒளி கெடத் தழைப்ப தண் நிலா.

பொ :—பந்துகளைப் பழகுபவர்களாகிய பெண்களின் இடையிலே முத்துக்கூட்டங்கள் சிந்துவன. அவைகளை ஒன்று சேர்ப்பவர்களாகிய எண்ணற்ற ஏவற்பெண்டிர்கள் இயற்றிய குவியல்கள் சந்திரனுடைய வெண்மையான ஒளி கெடும்படி குளிர்ந்த நிலாவை மிகச் செய்வன.

கு :—பந்துகள் பயிற்றுவார் மடந்தையரிடை முத்தினம் சிந்துவ; அவை திரட்டுவாராகிய அந்தமில் சிலதியர் ஆற்றகுப்பைகள் ஒளிகெடத் தண்ணிலாத் தழைப்ப எனக் கூட்டுக.

பயிற்றுவார் - அடிக்கடி அடிப்பவர்கள். குப்பைகள் - மிகுதியான முத்துக்கள். முத்துக்குப்பைகள் தண்மதியின் ஒளியும் கெடத் தண்ணிலா மிகுவன. (45)

### நடனமாதர் கண்பட்டுக் காண்பார்க்கு உயிர் மெலிதலும் காதல் வளர்தலும்

**138.** அரங்கிடை மடந்தைய ராடு வாரவர்
கருங்கடைக் கண்ணயில் காமர் நெஞ்சினை
உருங்குவ மற்றவ ருயிர்க ளன்னவர்
மருங்குல்போற் றேய்வன வளர்வ தாசையே.

அரங்கிடை மடந்தையர் ஆடுவார், அவர்
கருங்கடைக்கண் அயில், காமர் நெஞ்சினை
உருங்குவ; மற்று அவர் உயிர்கள், அன்னவர்
மருங்குல்போல் தேய்வன ; வளர்வது ஆசையே.

பொ:—நாடக அரங்குகளில் மகளிர்கள் ஆடுவார்கள். அவர்களுடைய கரிய கடைக்கண்ணாகிய கூரிய வேல் (நடனம் பார்ப்பவர்களின்) அழகிய மனத்தை உருகச்செய்வன. பார்க்கின்ற ஆடவர்களாகிய அவர்களுடைய உயிர்கள் ஆடுகின்ற மகளிரின் இடையைப் போலத் தேய்வவாயின. அம்மாதர்கள்மேல் வைத்த ஆசையானது வளர்வதாயிற்று.

கு :—கண் அயில் - கண்ணாகிய வேல். உருங்குவ - உருகச் செய்வன. (46)

### சோலை தேன்பொழிய, மகளிர் வருந்துதல்

**139.** பொழிவன சோலைகள் புதிய தேன்சில
விழைவன தென்றலு மிஞிறு மெல்லென
நுழைவன வன்னவை நுழைய நோவொடு
குழைவன பிரிந்தவர் கொதிக்குங் கொங்கையே.

பொழிவன சோலைகள் புதிய தேன் சில
விழைவன தென்றலும் மிஞிறும் மெல்லென
நுழைவன ; அன்னவை நுழைய நோவொடு
குழைவன பிரிந்தவர் கொதிக்கும் கொங்கையே.

பொ :—அந்நகரத்துச் சோலைகள் அன்றலர்ந்த பூக்களிலிருந்து புதிய தேன்கள் சிலவற்றைப் பொழிவனவாயின. அவற்றை விரும்பித் தென்றற்காற்றும் வண்டுகளும் மெதுவாக அங்கு நுழைவன. அவைகள் அவ்வண்ணம் நுழைய, தலைவனைப் பிரிந்த மகளிர்களின் காமவெப்பேறிக் கொதிக்கின்ற கொங்கைகள் துன்பத்தோடு மெலிவன.

கு :—சிலதேன் என்றது 'சின்னீர்' என்றாற்போல்வதொரு வழக்கு. குறைந்த அளவினதாகிய தேன் என்பது பொருள். தென்றல் தேன் விழைதல் மணத்தைக் கவர எண்ணுதல். மிஞிறு விழைதல் – தேனையுண்ணவிரும்புதல். மிஞிறு – நல்லநாற்றத்தில் மட்டும் செல்லும் வண்டு. தென்றற் காற்று மந்தகதியாக நுழைய மகளிர்க்குப் பிரிவுத்துன்பம் மிகுகின்றது; அங்ஙனமே வண்டு நுழைய அதன் இசை, காமத்தை மிகுவிக்கின்றது; ஆதலால் பிரிந்தவர் கொதிக்கும் கொங்கை குழைவன என்றார். (47)

### பாடலால் பறவைகளும் பரவசமாதல்

**140.** இறங்குவ மகரயா ழெடுத்த வின்னிசை
நிறங்கிளர் பாடலா னிமிர்வ வவ்வழி
கறங்குவ வள்விசி கருவி கண்முகிழ்த்து
உறங்குவ மகளிரோ டோதுங் கிள்ளையே.

**இறங்குவ மகர யாழ் எடுத்த இன்னிசை**
**நிறம் கிளர் பாடலான் நிமிர்வ ; அவ்வழி**
**கறங்குவ வள் விசி கருவி ; கண் முகிழ்த்து**
**உறங்குவ மகளிரோடு ஓதும் கிள்ளையே.**

பொ :—வளைந்தனவாகிய மகரயாழிலிருந்து எழுப்பப்பெற்ற இனிய இசையானது, ஒத்து இசைக்கும் (மிடற்றுப்)பாடலான் எடுப்பாக ஒலிப்பன. அவ்விடத்து வாரால் இழுத்துக்கட்டப் பெற்ற தோற்கருவியாகிய மத்தளம் ஒலிப்பன. இவ்விசையைப் பெண்களோடு இருந்து பழகும் கிளிகள் கண்மூடித் தூங்குகின்றன.

கு :—மகரயாழ் வளைந்திருத்தலின் இறங்குவ யாழ் என்றார். நிறம் கிளர் - இசையோடு ஒத்து இசைக்கும் (சுடு 2-6-11) யாழ் இசை மிடற்றுப் பாடலால் நிமிர்ந்தொலிக்கும் என்பது கருத்து. இசைநயத்தை மகளிரோடு இருந்து நுகரும் கிளி இன்ப மீதூர்தலால் தூங்குகின்றன என்பதாம்.

இனி மகரயாழ் எடுத்த இன்னிசை நிறங்கிளர் பாடலான் இறங்குவ நிமிர்வ எனக் கூட்டி, யாழிசையானது மிடற்றுப் பாடலோடு ஏறியும் இறங்கியும் (ஆரோகண அவரோகணங்களைப் பெற்று) ஒலிக்கின்றன எனப் பொருள்கொள்வாரும் உளர். (48)

### ஆடவர்தோள்கள் அரிவையர்தாளால் உதைபட்டுச் சிவத்தல்

**141.** குதைவரிச் சிலைநுதற் கொவ்வை வாய்ச்சியர்
பதயுகத் தொழில்கொடு பழிப்பி லாதன
ததைமலர்த் தாமரை யன்ன தாளினால்
உதைபடச் சிவப்பன வுரவுத் தோள்களே.

குதை வரிச் சிலை நுதல் கொவ்வை வாய்ச்சியர்
பதயுகத் தொழில்கொடு பழிப்பு இலாதன
ததை மலர்த் தாமரை அன்ன தாளினால்
உதைபடச் சிவப்பன, உரவுத் தோள்களே.

பொ :—குதையோடு கூடிய கட்டமைந்த வில்லையொத்த புருவத்தையுடைய நெற்றியையும், கொவ்வைக்கனிபோன்ற வாயினையும் உடைய பெண்களின் இரண்டடிகளுக்கும் ஏற்ற அணிதலும் புனைதலுமாகிய தொழில்களைக்கொண்டு, இகழ்ச்சியற்றனவாகிய இதழ் நெருங்கிய தாமரை மலரையொத்த கால்களால் உதைபட வலிமைமிக்க தோள்கள் சிவப்பன.

கு :—சிலைநுதல் – விற்போன்ற புருவத்தையுடைய நெற்றி. சிலை உருவகமாகப் புருவத்தையுணர்த்திற்று. இப்பாடலின் இரண்டாமடி முதற்கண் பதவு கைத்தொழில் கொடு எனப் பாடங்கொண்டு மிருதுவான கைத்தொழிலைப் பெற்று என்று உரைப்பாரும் உளர். மிருதுவான கைத்தொழில் - செம்பஞ்சூட்டுதல். (49)

### சித்திரங்கள் இமையாத காரணம்

**142.** பொழுதுணர் வரியவப் பொருவின் மாநகர்த்
தொழுதகை மடந்தையர் சுடர்வி ளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கு மாசைகொல்
எழுதுசித் திரங்களு மிமைப்பி லாதவே.

பொழுது உணர்வு அரிய அப் பொருவில் மாநகர்
தொழு தகை மடந்தையர் சுடர் விளக்கு என்ப்
பழுது அறு மேனியைப் பார்க்கும் ஆசைகொல்
எழுது சித்திரங்களும் இமைப்பு இலாதவே.

பொ :—பகல் இரவு அறிந்துகொள்ளமுடியாத ஒப்பற்றபெரிய அயோத்திநகரிலுள்ள யாவராலும் தொழப்படும் தகுதிவாய்ந்த மகளிர்களின், ஒளிவிடுகின்ற விளக்கு என்று சொல்லத்தக்க குற்றமற்ற மேனியழகை இடைவிடாது பார்க்க வேண்டும் என்ற ஆசையோ எழுதப்பெற்ற சித்திரங்களும் கண்கொட்டாமலிருப் பன.

கு :—அந்நகரத்துப் பொன்னாலும் மணியாலும் செய்யப் பெற்ற மாளிகைகள் எப்போதும் ஒளிசெய்தலின், இது பகல் இது இரவு என்று அறிய ஒண்ணாமை முதலடியால் மொழியப் பெற்றது. காலமாரி நிற்கும் கற்பினையுடைய மகளிராதலின் தொழுதகை மடந்தையர் என்றார். சுடர்விளக்கு – வினைத்தொகை. ஒருகாலைக் கொருகால் ஒளி விஞ்சுகின்ற விளக்கு, அது அத்தகைய மேனிக்கு ஒப்பாயிற்று. சித்திரங்களும் என்ற உம்மை மக்களைப் பற்றிப் பேசுவானேன் என்னும் பொருள் விளக்கி நின்றது, சித்தி ரங்கள், கண் இமையாமலிருக்கும் இயற்கையை இங்ஙனம் ஆசை போலும் எனக் கூறலின் இது ஏதுத்தற்குறிப்பேற்ற அணி. (50)

### மாளிகைகளில் மகளிர்மேனியே இருளகற்றுதல்

**143.** தணிமலர்த் திருமக டயங்கு மாளிகை
இணரொளி பரப்பிநின் றிருடு ரப்பன
திணிசுடர் நெய்யுடைத் தீவி ளக்கமோ ?
மணிவிளக் கல்லன மகளிர் மேனியே.

தணி மலர்த் திருமகள் தயங்கும் மாளிகை
இணர் ஒளி பரப்பிநின்று இருள் துரப்பன,
திணி சுடர் நெய் உடைத் தீ விளக்கமோ ?
மணி விளக்கு ; அல்லன மகளிர் மேனியே.

பொ :—குளிர்ந்த செந்தாமரை மலரில் எழுந்தருளியுள்ள இலக்குமிதேவி எப்போதும் விளங்கிக்கொண்டிருக்கின்ற மாளி கைகளில், ஒளிக்கற்றையைப் பரப்பி இருளை ஓட்டுவன, செறிந்த ஒளியோடு கூடிய நெய்விளக்கோ, இரத்தின தீபங்களோ அல்ல. அம்மாளிகைகளில் வாழுகின்ற மகளிர் மேனியின் ஒளியே.

கு :—தணி - குளிர்ச்சியையுடைய. திருமகள் தயங்கும் மாளிகை - திருமகள் (நித்யவாசம் செய்கின்ற) பிரியாதே விளங்குகின்ற மாளிகை. இணர் - கொத்து, தொகுதி. ஒளியிணர் என மாற்றி ஒளியின் தொகுதி எனப் பொருள்கொள்க. எப்போதும் மாளிகையில் ஒளி நிலவுதலின் நெய்யும் திரியும் பெற்றுத் தீக்கொளுவ விளங்கும் விளக்கம் இரவில் மட்டும் விளங்குதலானும், மணிவிளக்குப் பகலில் பாடவேளைகளில் ஒளி செய்தலானும் மிகுதலும் குறைதலும் இன்றி ஒரே தன்மைத்தான ஒளியையுடைய மகளிர்மேனியால் மாளிகைகள் விளக்கம் பெறுகின்றன என்று கூறப்பட்டது' 'மனைக்கு விளக்கம் மடவார்' என்பதும் சிந்தித்தற்குரியது. (51)

ஆடற்சதியைஅளந்துகாட்டுவன குதிரைகளின் கிண்கிணிமாலை

**144.** பதங்களிற் றண்ணுமை பாணி பண்ணுற
விதங்களின் விதிமுறை சதிமி திப்பவர்
மதங்கிய ரச்சதி வகுத்துக் காட்டுவ
சதங்கை எல்லன புரவித் தார்களே;

பதங்களில் தண்ணுமை பாணி பண்ணுற
விதங்களின் விதி முறை சதி மிதிப்பவர்
மதங்கியர் ; அச்சதி வகுத்துக் காட்டுவ
சதங்கைகள், அல்லன புரவித்தார்களே.

பொ:— மத்தளமும், தாளமும், பாட்டும் (ஆகிய இவைகள் தம்முள்) ஒத்துப் பொருந்த பரதசாத்திரத்திற் கூறப்பெற்ற முறைப்படி, பலவகையாக, சதிகளைப் பதங்களுக்கு ஏற்ப, மிதித்து நடிப்பவர்கள் நாடகமகளிர். அந்தச் சதிகளைப் பாகுபடுத்திக்காட்டுவன அவர்கள் காலிலணிந்துள்ள சதங்கைகளும், அல்லாதவை ஆடுங் குதிரைகளின் கழுத்திலிடப்பட்ட கிண்கிணிமாலைகளும் ஆம்.

கு :—தண்ணுமை பாணி பண் உற விதிமுறை விதங்களின் சதி பதங்களின் மிதிப்பவர் மதங்கியர். அச்சதி வகுத்துக்காட்டுவ சதங்கைகள் அல்லன புரவித்தார்களே எனக்கூட்டுக.

பாணி - தாளஉறுப்பினுள் ஒன்று. 'முலையணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ' என்ற கலித்தொகைப்பகுதியும், அதற்கு 'தாளத்தின் முதல் எடுக்குங்காலத்தினையுடைய பாணியைத் தரு

வாள்' என்னும் அதன் உரையும் ஈண்டு நோக்குதற்குரியன. சதி - தாளத்திற்கு இயைய வைக்கப்பெறும் அடிவைப்பு, பதங்கள் - நடனத்துக்குப் பயன்படும் ஒருவகை இசைப்பாட்டு. மதங்கியர் - நடனமகளிர். (52)

### மதங்கியர் அழகின் மாட்சி

**145.** முளைப்பிறை நெற்றியர் முறுவல் வெந்துயர்
விளைப்பன வன்றியு மெலிந்து நாடொறும்
இளைப்பன நுண்ணிடை யிளைப்ப மென்முலை
திளைப்பன முத்தொடு செம்பொ னாரமே.

முளைப் பிறை நெற்றியர் முறுவல் வெம் துயர்
விளைப்பன ; அன்றியும், மெலிந்து நாடொறும்
இளைப்பன நுண் இடை ; இளைப்ப, மென் முலை
திளைப்பன முத்தொடு செம் பொன் ஆரமே.

பொ :—இளம்பிறை போலும் நெற்றியையுடைய மதங்கியர்களின் புன்சிரிப்பேயன்றி நாள்தோறும் மெலிந்து இளைப்பனவாகிய நுணுகிய இடையும், இடைஇளைக்க முத்துமாலைகளோடும் பொன்னரிமாலைகளோடும் இடையறாது குலாவிக் களிக்கின்றனவாகிய மென்முலைகளும் காமுகர்க்கு வெந்துயரை விளைப்பன.

கு :—முறுவல் அன்றியும் நுண்ணிடை மென்முலை (இவைகளும்) வெந்துயர்விளைப்பன எனக் கூட்டுக. முறுவலை முற்கூறி இடையையும் ஏனைய உறுப்பையும் பிற்கூறியது கண்டாரைக் கருத்தறிவித்து வசிப்பது புன்முறுவலாதலானும், வசித்தபின் இடையழகும், நகில் எடுப்பும் விழைவை மிகுவிப்பதாலும் என்க.

இப்பாடலின் முதலடிக்கு, 'முளைப்பன முறுவல் அம் முறுவல்' எனப் பாடம் கொண்டு மாதர்கள் சிரிப்பைக்கண்டு காமுகர்கள் காமவேதனை யடைகின்றனர்; இடைமெலிவதைக்கண்டு கொங்கைகள் பருத்துப் பூணணிந்து மகிழ்கின்றன என்னும் கருத்துப்பட உரை கூறுவாரும் உளர். (53)

### களிப்புடையன இவை எனல்

**146.** இடையிடை யெங்கணுங் களிய ரூதன
நடையிள வன்னங்க ணளின நீர்க்கயல்
பெடையிள வண்டுகள் பிரச மாந்திடுங்
கடகரி யல்லன மகளிர் கண்களே.

இடை இடை எங்கணும் களி அருதன ;
நடை இள அன்னங்கள், நளின நீர்க் கயல்,
பெடை இள வண்டுகள், பிரசம் மாந்திடும்
கடகரி, அல்லன மகளிர் கண்களே.

பொ :—இடங்கடோறும், எப்போதும் களிப்பு நீங்காதன, நடையால் அழகிய இளைய அன்னங்களும், தாமரைகளோடு கூடிய நீரிலுள்ள கயல் மீன்களும், பெண்வண்டோடு கூடிய ஆண் வண்டுகளும், தேனுண்கின்ற மதநீரொழுகுகின்ற யானைகளும், இவைகள் அல்லாதன பெண்களின் கண்களுமே.

கு :—களியருதன அன்னங்கள், கயல், வண்டுகள், கடகரி, கண்களே என முடிக்க. தாமரைத் தடாகத்து நீர் மிகக்குளிர்ந் திருத்தலின் நளின நீர்க்கயல் என விசேடிக்கப்பட்டது. பிரச மாந்திடும் கடகரி—தேனைக் குடிக்கின்ற யானை. யானை தேனுண் டலை 'பிரசவாரி தன் இளம் பிடிக்கு அருள்செய்யும் பிரிதிசென் றடை நெஞ்சே' என்னும் பெரியதிருமொழியானும் அறிய லாம். (54)

யானையின் மதநீரால் பூமி குழைதல்

**147.** தழல்விழி யாளியுந் துணையுந் தாழ்வரை
முழைவிழை கிரிநிகர் களிற்றின் மும்மத
மழைவிழும் விழுந்தொறு மண்ணுங் கீழுறக்
குழைவிழு மதில்விழுங் கொடித்திண் டேர்களே.

தழல் விழி யாளியும் துணையும் தாழ்வரை
முழை விழை கிரி நிகர் களிற்றின் மும்மத—
மழை விழும் ; விழுந்தொறும் மண்ணும் கீழுறக்
குழைவிழும் ; அதில் விழும் கொடித் திண் தேர்களே.

பொ :—தீப்போல விழிக்கின்ற அத்தியாளிகளும், அவற்றின் பேடைகளும் தாழ்வரையிலுள்ள குகைகளை விரும்புகின்ற மலையை யொத்த ஆண் யானையினது மூன்று மதங்களாகிற மழை விழுந்தோறும், பூமி ஆழமாகக் குழைந்துபோகும். அங்ஙனம் குழைந்த குழிகளில் கொடிகள் கட்டப்பெற்ற உறுதியான தேர் கள் விழும்.

கு :—அத்தியாளியின் கண்கள் எப்போதும் சினத்தாற் சிவந் திருத்தலின் தழல்விழி யாளி எனப்பெற்றது. யாளி முழையினை

விழைதல் தானும் பேடையும் தனித்துச்சுகித்தற்குரிய இட மென்று கருதி. மும்மதம்—கன்னம், கை, குறியென்ற மூன்று லும் வடிகின்ற மதம். குழை விழும்—குழைந்து சேருகும். அதில் விழும் என்பதை 'அவில் விழும்' எனப் பாடங் கொண்டு, அந்தச் சேற்றில் விழும் என உரைப்பாரும் உளர். (55)

### மாலை கலவைச்சாந்து இவற்றின் மிகுதி

**148.** ஆடுவார் புரவியின் குரத்தை யார்ப்பன
சூடுவா ரிகழ்ந்தவத் தொங்கல் மாலைகள்
ஓடுவா ரிழுக்குவ வூட லூடுறக்
கூடுவார் வனமுலை கொழித்த சாந்தமே.

ஆடுவார் புரவியின் குரத்தை ஆர்ப்பன,
சூடுவார் இகழ்ந்த அத் தொங்கல் மாலைகள்;
ஓடுவார் இழுக்குவ, ஊடலூடு உறக்
கூடுவார் வன முலை கொழித்த சாந்தமே.

பொ:—சூடிக்கொண்டவர்கள் கழித்து எறிந்த தொடைமாலை களும், தார்மாலைகளும், ஆடுகின்ற நீண்ட குதிரைகளின் குளம்பு களைக் கட்டுவன. ஊடியிருந்து, மிக நெருங்கிப் புணர்கின்ற மகளி ரின் அழகிய முலைகளிலிருந்து நீக்கிய சந்தனக்கலவை (வீதியில்) ஓடுகின்றவர்களை வழுக்கி வீழச்செய்வன.

கு:—தொங்கல்–இருமருங்கும் தொங்கவிடப்படுகின்றதொடை மாலை. மாலை–கழுத்திடு மாலை. ஆடுவார் புரவி—நாட்டியக் குதிரை; வெற்றியை யுடைய பெரிய குதிரை யெனலுமாம். குரம்-குளம்பு. ஊடலூடு உறக்கூடுவார்-ஊடல் புணர்ச்சி விதுப்பை மிகுத்தலின், ஊடியிருந்து பின் தெளிந்து பொருந்தக் கூடுவார் என்பதாம். (56)

### மாலை மணிகளைக் கழுவுதல்

**149.** இளைப்பருங் குரங்களா லிவுளி பாரினைக்
கிளைப்பன வவ்வழி கிளர்ந்த தூளியின்
ஒளிப்பன மணியவை யொளிர மீதுதேன்
துளிப்பன குமரர்தந் தோளின் மாலையே.

இளைப்பு அரும் குரங்களால் இவுளி பாரினைக்
கிளைப்பன ; அவ்வழி கிளர்ந்த தூளியின்,
ஒளிப்பன மணி; அவை ஒளிர மீது தேன்
துளிப்பன குமரர்தம் தோளின் மாலையே.

பொ :—குதிரைகள், ஓடுவதிற் சளைக்காத குளம்புகளால் பூமியைத்தோண்டுவன;அவ்விடத்து உண்டான புழுதியால் (வீரர்கள் அணிந்துள்ள அணியிலுள்ள) இரத்தினங்கள் மறைவனவாம். அம்மணிகள் ஒளிவிடும்படி காளையரது தோளின்மேலுள்ள புது மலர் மாலைகள் அம்மணிகள் மீது தேனைத் துளிப்பனவாம்.

கு :—இவுளி-குதிரை. குதிரை முன்காற் குளம்புகளால் பூமியைத் தோண்டுதல் இயல்பு. தேன்துளிப்பன என்ற வினையால் மாலை புதுமலர்மாலை எனக் கொள்ளப்பட்டது. (57)

### நாறுவ இவை எனல்

**150.** விலக்கருங் கரிமதம் வேங்கை நாறுவ;
குலக்கொடி மாதர்வாய் குமுத நாறுவ;
கலக்கடை கணிப்பருங் கதிர்க ணாறுவ;
மலர்க்கடி நாறுவ; மகளிர் கூந்தலே.

விலக்கு அரும் கரி மதம் வேங்கை நாறுவ;
குலக் கொடி மாதர் வாய் குமுதம் நாறுவ;
கலக்கடை கணிப்பு அரும் கதிர்கள் நாறுவ;
மலர்க் கடி நாறுவ; மகளிர் கூந்தலே;

பொ :—வேங்கை மரங்கள் தடுத்தற்கரிய யானையின் மதமணங் கமழ்வன; உயர் குலத்திற் பிறந்த கொடிபோல்வாராகிய பெண்களின் வாய் செவ்வல்லி போலத் தோன்றுவன; அணிகலக் கடைகள் எல்லையற்ற கதிர்களைத் தோன்றச் செய்வன; பெண்களின் கூந்தல் பல பூக்களின் நன்மணம் வீசப்பெறுவன.

கு :—வேங்கையில் யானைமதம் நாறுவதன் காரணம், மதம் பிடித்த யானைகள் வேங்கைமரத்தைச் சென்று மோதுதலான் என்க. பூத்த வேங்கை புலிபோலுதலின் பொருதன என்பாரும். வேங்கைப்பூ யானைமதம் போன்ற மணமுடையது என்பாரும் ஆகப் பலவாறுரைப்பர். கணிப்பருங்கதிர்கள்—எல்லையற்ற கிரணங்கள். (58)

அயோத்திநகரின் ஆவணவீதிக்கு அளகாபுரி தோற்றது எனல்

151. கோவையிந் நகரொடெண் குறிக்க லாதவத்
தேவர்தந் நகரியைச் செப்பு கின்றதென்
யாவையும் வழங்கிடத் திகலி யிந்நகர்
ஆவணங் கண்டபி னளகை தோற்றதே.

கோவை இந் நகரொடு எண் குறிக்கலாத அத்
தேவர்தம் நகரியைச் செப்புகின்றது என் ?
யாவையும் வழங்கு இடத்து இகலி இந் நகர்
ஆவணம் கண்டபின் அளகை தோற்றதே.

பொ :—அளகாபுரியானது எல்லாப் பொருளையும் வழங்குகின்ற வகையில் மாறுபட்டு, இந்த அயோத்திமாநகரின் கடைத் தெருவைக் கண்டபின் தோற்றுவிட்டது ஆயின், இந்நகரத்தோடு வரிசையில் வைத்து எண்ணத்தகாத அமராவதியை ஒப்பாக உரைப்பது ஏன்?

கு :—அளகை, யாவையும் வழங்கிடத்து இகலி, இந்நகர் ஆவணம் கண்ட பின் தோற்றது (ஆயின்) இந்நகரொடு கோவை குறிக்கலாத தேவர் நகரியைச் செப்புகின்றது என் என முடிக்க.

கோவை—வரிசை. எண் குறிக்கலாத—எண்ணத்தகாத. ஆவணம்-கடைவீதி, (59)

மைந்தர்கூட்டத்தின் நிகழ்ச்சிகள் இவை எனல்

152. அதிர்கழ லொலிப்பன வயிலி மைப்பன
கதிர்மணி யணிவெயில் கால்வ மான்மதம்
முதிர்வுறக் கமழ்வன முத்த மின்னுவ
மதுகர மிசைப்பன மைந்த ரீட்டமே.

அதிர் கழல் ஒலிப்பன, அயில் இமைப்பன,
கதிர் மணி அணி வெயில் கால்வ, மான்மதம்
முதிர்வுறக் கமழ்வன, முத்தம் மின்னுவ,
மதுகரம் இசைப்பன, மைந்தர் ஈட்டமே.

பொ :—அந்நகரில், ஆடவர்கூட்டத்தில் அசைகின்ற வீரக் கழல்கள் ஒலிப்பன; வேல்கள் ஒளிவிடுவன; பிரகாசிக்கின்ற இரத்தினங்கள் இழைக்கப் பெற்ற ஆபரணங்கள் ஒளியைக் கக்கு

வன; கத்தூரி மிகுதியாக மணம் வீசுவன; முத்துக்கள் விட்டு விட்டுப் பிரகாசிப்பன; வண்டுகள் ஒலிப்பன.

கு: —மக்கட் கூட்டத்தில் ஆடவர்கள் அடிபெயர்த்து நடப்ப தால் வீரக்கழல் ஒலிப்பன. வலமாகச் சுழற்றுதலால் வேல்கள் விளங்குவன. ஓகையில் துள்ளுதலால் மணியணிகள் ஒளி செய் வன. மாலைகளில் உள்ள வண்டுகள் அவர்கள் அசைதலால் எழுந்து எழுந்து ஒலி செய்வன என்பதாம். (60)

### வாச்சிய ஒலிகள் கடலொலியை வென்றமை

**153.** வளையொலி, வயிரொலி மகர வீணையின்
கிளையொலி முழவொலி கின்ன ரத்தொலி
துளையொலி பல்லியங் துவைக்குஞ் சும்மையின்
விளையொலி கடலொலி மெலிய விம்முமே.

வளை ஒலி, வயிர் ஒலி, மகர வீணையின்
கிளை ஒலி, முழவு ஒலி, கின்னரத்து ஒலி,
துளை ஒலி, பல் இயம் துவைக்கும் சும்மையின்
விளை ஒலி, கடல் ஒலி மெலிய விம்முமே.

பொ :—சங்குகளின் முழக்கமும் ஊதுகொம்புகளின் ஓசையும் மகர வீணை முதலிய வீணையினங்களின் ஒலியும் மத்தள ஓசையும், கின்னர ஓசையும், புல்லாங்குழல் முதலிய துளைக்கருவிகளின் ஓசையும், பல வகையான வாத்தியங்களை யடிப்பதாலுண்டான ஓசையும் கடல் ஒலியும் மெலிவடையும்படி மிக்கொலிக்கும் என்றவாறு.

கு :—கின்னரம் - யாழ்வகையுள் ஒன்று. பல்லியம் துவைக் கும் சும்மையின் விளை ஒலி - பலவகை வாத்தியங்களை அடிப்பதால் விளைந்த கலப்போசை. (61)

### மண்டப வகைகள்

**154.** மன்னவர் தருதிறை யளக்கு மண்டபம்
அன்னமென் னடையவ ராடு மண்டபம்
உன்னரு மருமறை யோது மண்டபம்
பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்

மன்னவர் தரு திறை அளக்கும் மண்டபம்;
அன்னம் மென் நடையவர் ஆடும் மண்டபம்;
உன்னரும் அரு மறை ஓதும் மண்டபம்;
பன்னரும் கலை தெரி பட்டிமண்டபம்.

பொ :—அரசர்கள் கொண்டுவந்து கொடுக்கின்ற கப்பங்களை அளக்கின்ற மண்டபமும், அன்னத்தையொத்த மெல்லிய நடையினையுடைய பெண்கள் ஆடுகின்ற மண்டபமும், நினைத்தற்கரிய வேதங்களை ஓதுகின்ற மண்டபமும், சொல்லுதற்கரிய கலைகளை ஆராய்கின்ற வாத மண்டபமும் ஆகிய பல மண்டபங்கள் விளங்கின.

கு :—பட்டிமண்டபம் - சாத்திர அறிஞர்கூடும் மண்டபங்கள். " ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள், பட்டி மண்டபம் பாங்கறிந் தேறுமின் " என்ற மணிமேகலை அடிகளும் இங்கே இணைத்து எண்ணுதற்குரியன. (62)

### தோரணம் தெரு புரவிப்பந்தி இவற்றின் சிறப்பு

**155.** இரவியிற் சுடர்மணி யிமைக்குந் தோரணம்
தெருவினிற் சிறியன திசைகள் சேண்விளங்
கருவியிற் பெரியன வானைத் தானங்கள்
பரவையிற் பெரியன புரவிப் பந்தியே.

இரவியில் சுடர் மணி இமைக்கும் தோரணம்
தெருவினில் சிறியன திசைகள்; சேண் விளங்கு
அருவியில் பெரியன ஆனைத் தானங்கள்;
பரவையில் பெரியன புரவிப் பந்தியே.

பொ :—தோரணங்கள் சூரியனைக் காட்டிலும் ஒளிவிடுகின்ற மணிகளால் பிரகாசிக்கும்; தெருக்களைக் காட்டிலும் திசைகள் சிறியன; மலையுச்சியில் விளங்குகின்ற அருவிகளைக் காட்டிலும் மிகப் பெரியன யானையின் மதங்கள்; கடலைக் காட்டிலும் பெரியன குதிரைகளின் வரிசைகள்.

கு :—தெருவினில் சிறியன திசைகள் என்றாரேனும், அடுத்து வரும் அடிகளின் அமைதிநோக்கி, திசைகளிற் பெரியன தெரு என்பது கருத்தாகக் கொள்க. தானம் - மதநீர். பரவை – கடல்.

கடலிற் பெரியன குதிரை என்றாராயினும் கடலின் அலைகளைக் காட்டிலும் என ஆகுபெயரால் பொருள் கொள்க. (63)

### மாளிகையில் மாதர்கள் முகமும் விழிகளும் மலர்தல்

**156.** சூளிகை மழைமுகில் தொடக்குந் தோரண
மாளிகை மலர்வன மகளிர் வாண்முகம்
வாளிக ளன்னவை மலர்வ மற்றவை
ஆளிக ளன்னவர் நிறத்தி னாழ்பவே.

சூளிகை மழை முகில் தொடக்கும் தோரண
மாளிகை மலர்வன மகளிர் வாள் முகம்;
வாளிகள் அன்னவை மலர்வ, மற்றவை
ஆளிகள் அன்னவர் நிறத்தின் ஆழ்பவே.

பொ :—மழைபொழியத்தக்க சூலுற்ற மேகங்களைப் பிணிக்கின்ற சிகரங்களோடு கூடிய தோரணங்கள் கட்டப்பெற்ற மாளிகைகளில் பெண்களின் ஒளி பொருந்திய முகங்களாகிற தாமரைகள் மலர்வன; அத்தாமரைகளில் அம்புகளாகிய கண்கள் தோன்றுவன ; அக்கண்கள் அத்தியாளியையொத்த வீரம் பொருந்திய ஆடவர்களின் மார்பில் சென்று தைப்பன.

கு :—மழைமுகில் தொடக்கும் சூளிகை, தோரணமாளிகை மகளிர் முகம் மலர்வன; அன்னவை வாளிகள் மலர்வ ; மற்றவை நிறத்தின் ஆழ்ப எனக் கூட்டுக. சூளிகை - சிகரம். மலர்வன என்ற வினைக்கு ஏற்ப முகம் மலராகக் கருதப் பெற்றது. வாளிகள் மலர்வ என்றஇடத்து மலர்தல் - தோன்றுதல். நிறம் – மார்பு. ஆளிகள் ஆடவர்களின் வலிமைக்கு ஒப்பு. மார்பின் ஆழ்வன என்பதால், ஆடவர் மார்பு காரிகையரின் கண்ணின் கூர்மைக்கு ஆற்றாத மென்மையுடையன என்பதும், கண்களின் கூர்மை மிகுதியும் குறிக்கப் பெற்றன. (64)

### மன்னவர்கழலொலியோடும் மகளிர்சிலம்பொலியோடும் மாறுகொள்வன இவை எனல்

**157.** மன்னவர் கழலொடு மாறு கொள்வன
பொன்னணித் தேரொலி புரவித் தாரொலி
இன்னகை யவர்சிலம் பேங்க வேங்குவ
கன்னியர் குடைதுறைக் கமல வன்னமே.

மன்னவர் கழலொடு மாறு கொள்வன,
பொன் அணித் தேர் ஒலி, புரவித் தார் ஒலி;
இன் நகையவர் சிலம்பு ஏங்க ஏங்குவ,
கன்னியர் குடை துறைக் கமல அன்னமே.

பொ :—அரசர்கள் அணிந்துள்ள வீரக்கழலின் ஒலியோடு மாறுபட்டு ஒலிப்பன, பொன்னால் அழகு செய்யப் பெற்ற தேர்களின் ஓசையும் குதிரைகளின் கழுத்திற் கட்டப்பெற்ற கிண்கிணி மாலைகளின் ஓசையுமாம். இனிய புன்முறுவலையுடைய பெண்களின் காலிலணியப் பெற்றுள்ள சிலம்பு என்னும் அணி ஒலிக்க, கன்னிப் பெண்கள் நீராடுகின்ற நீர்த்துறையில் தாமரைப் பூக்களிலுள்ள அன்னங்கள் (இவ்வொலியழகு எமக்கு இல்லையே என்று) ஏக்கமடைந்து ஒலிப்பன.

கு :—கழல் ஆகுபெயராகக் கழல் ஒலியையுணர்த்திற்று. நகை - பல். தொழிலாகுபெயர். ஏங்க – ஒலிக்க. ஏங்குவ - ஏக்கமடைவன.

(65)

### மகளிர்சிலர் பொழுதுபோக்குந்திறன்

158. ஊடவுங் கூடவு முயிரி னின்னிசை
பாடவும் விறலியர் பாடல் கேட்கவும்
ஆடவும் அகன்புன லாடி யம்மலர்
சூடவும் பொழுதுபோஞ் சிலர்க்கத் தொன்னகர்.

ஊடவும் கூடவும் உயிரின் இன் இசை
பாடவும் விறலியர் பாடல் கேட்கவும்
ஆடவும் அகன் புனல் ஆடி, அம் மலர்
சூடவும் பொழுது போம் சிலர்க்கு அத் தொல் நகர்.

பொ :—அந்தப் பழமையான நகரில் வசிக்கின்ற சிலமகளிர்க்கு, தம் உயிரொத்த கணவரோடு ஊடல்கொள்ளவும், அவர்கள் ஊடலுணர்த்தத் தெளிந்து இறுகப் புல்லவும், தம் உயிரைப் போலும் இனிய இசையைப் பாடவும், விறலியர் பாட அப் பாடலைக் கேட்கவும், நடனம் ஆடவும், அகன்ற நீரிலே முழுகி அந் நீரிலுள்ள பூக்களைச் சூடிக்கொள்ளவும் (ஆகப்) பொழுது கழியும்.

கு :—அகன் புனல் ஆடவும் என இயைப்பாரும் உளர். ஊடுதல் காமத்திற்கு இன்பம், அதற்கு இன்பம் கூடி முயங்குதலாதலின் ஊடலை முற்கூறிக் கூடலைப் பிற்கூறினர். தம்முயிரைக்

காட்டிலும் இனிமை பயப்பதொன்று இருக்குமாயின் அது இன்னிசை என்பது விளக்க உயிரின் இன்னிசை என்ருர். விறலியர் - விறல்படப் பாடும் மகளிர். விறல் – மெய்ப்பாடு. இதனுல் அந்நகரத்து மகளிரிற் சிலர் கவலையின்றிப் போகத்துள் அழுந்திக் காலம் கழிக்கின்றனர் என்பது விளக்கப் பெறுகிறது. (66)

### ஆடவரிற் சிலர் பொழுதுபோக்கும் முறை

**159.** முழங்குதிண் கடகரி முன்பி னூரவும்
எழுங்குரத் திவுளியோ டிரத மேறவும்
பழங்கணோ டிரந்தவர் பரிவு தீர்தர
வழங்கவும் பொழுதுபோஞ் சிலர்க்கம் மாநகர்,

முழங்கு திண் கட கரி முன்பின் ஊரவும்
எழும் குரத்து இவுளியோடு இரதம் ஏறவும்
பழங்கணோடு இரந்தவர் பரிவு தீர்தர
வழங்கவும் பொழுது போம் சிலர்க்கு அம் மா நகர்.

பொ :—அந்த அயோத்திநகரில் ஆடவர்களிற் சிலருக்கு மதக்களிப்பால் முழங்குகின்ற வலிய களிற்றியானையை வலிமையோடு ஏறிநடத்தவும், மேலெழும்பிய குளம்பினையுடைய குதிரைகளையும் தேர்களையும் ஊர்ந்து செலுத்தவும், துன்பத்தோடு வந்து இரந்த இரவலர்களின் வறுமைத் துன்பம் நீங்கும்படி பொருள்களை வழங்கவும் பொழுது கழியும்.

கு :—கடகரி – மதயானை. முன்பு - வலிமை. பழங்கண் - துன்பம். பரிவு - வருத்தம். (67)

### சிலர் போர்க்கலையாராய்ச்சியால் பொழுதுகழித்தல்

**160.** கரியொடு கரியெதிர் பொருத்திக் கைப்படை
வரிசிலை முதலிய வழங்கி வாலுளைப்
புரவியிற் பொருவில்செண் டாடிப் போர்க்கலை
தெரிதலிற் பொழுதுபோஞ் சிலர்க்கச் சேணகர்.

கரியொடு கரி எதிர் பொருத்தி, கைப் படை
வரி சிலை முதலிய வழங்கி, வால் உளைப்
புரவியில் பொரு இல் செண்டு ஆடிப் போர்க் கலை
தெரிதலின் பொழுது போம் சிலர்க்கு அச் சேண் நகர்.

பொ :—பெருமை பொருந்திய அந்நகரில் ஆடவரிற் சிலருக்கு, யானைகளோடு யானைகளை மோதவிட்டும், ஒருவர்க்கொருவர் மாருக, வாள் வேல் முதலிய கைப்படைகளையும், வரிந்துகட்டப் பெற்ற வில் முதலான எறிபடைகளையும் வழங்கிப் பொருதும், வெண்மையான தலையாட்டத்தையணிந்த குதிரையில் இருந்து வையாளி வந்தும், போர்த்தொழிலின் நுட்பங்களை யாராய்வதால் பொழுது கழியும்.

கு :—கைப்படை - கையில் பிடித்தபடியே பயன்படுத்தப் படும் சிறு படைக்கலம். அவை வாள் ஈட்டி கைவேல் முதலி யன. 'வரிசிலை முதலிய வழங்கி'—வில்லில் வைத்து எய்யப் பெறும் அம்பு, வேல், முதலிய எறிபடைகளை வீசி என்றவாறு. சிலை இட ஆகுபெயராக அம்பினை உணர்த்திற்று. உளை – தலையாட் டம். குதிரையின் முன்தலையில் அழகிற்காக வைக்கப்பெறும் பறவையிறகு கவரிமான்மயிர் முதலியவற்ருல் ஆகிய தலையணி; செண்டாடுதல் - குதிரையோட்டத்திற்கு என்று தனித்தமைக்கப் பெற்ற வீதியில் ஐந்து கதியும், பதினெட்டுச் சாரியும் அமைய நடத்திப் பழகுதல். இதனை வையாளிபோதல் என வழங்குவர். இந்த வீதிக்கு வையாளி வீதியென்று பெயர். (68)

### சிலர் பொழுதுகழிக்கும் முறை

161. நந்தன வனத்தலர் கொய்து நவ்விபோல்
வந்திளை யவரொடு வாவி யாடிவாய்ச்
செந்துவ ரழிதரத் தேறல் மாந்திச்சூ
துந்தலிற்பொழுதுபோஞ்சிலர்க்கவ்வொண்ணகர்

நந்தனவனத்து அலர்கொய்து, நவ்விபோல்
வந்து இளையவரொடு வாவி ஆடி, வாய்ச்
செந்துவர் அழிதரத் தேறல் மாந்திச் சூது
உந்தலின் பொழுது போம் சிலர்க்கு அவ் ஒண் நகர்.

பொ :—ஒளிபொருந்திய அயோத்திமாநகரிற் சிலருக்கு, நந்தன வனத்தில் மலர்கள் கொய்தும், பெண்மான்களைப் போல ஓடி வந்து, காளைப்பருவத்துக் காதலர்களோடு புனல்விளையாடியும், வாயின் செம்மைநிறம் மாறும்வண்ணம் கள்ளைக் குடித்தும், சூதாடியும் பொழுது கழியும்.

கு :—நந்தனவனம்-மகிழ்ச்சியூட்டும் பூங்கா. நவ்வி-பெண்மான்; மருண்ட பார்வையானும், விரைந்தோடிவருதலானும் மகளிர்க்கு

உவமிக்கப்பெற்றது. கட்குடித்தால் வாய் வெளுக்கும் என்பது குறிப்பிக்கப்பெறுகின்றது. சூது உந்தலின் - சூதாட்டக் கருவியை வீசி உருளவிடுதலின் ; சூதாடலின். (69)

### கொடிகளின் உயர்வு

**162.** நானு விதமா நளிமா
திரவீ தியோடி
மீனாறு வேலைப் புனல்வெண்முகி
லுண்ணு மாபோல்
ஆனாத மாடத் திடையாடு
கொடிகண் மீப்போய்
வானாறு நண்ணிப் புனல்வற்றிட
நக்கு மன்னோ !

நானா விதமா நளி மாதிர வீதி ஓடி,
மீன் நாறு வேலைப் புனல் வெண் முகில் உண்ணுமா போல்,
ஆனாத மாடத்திடை ஆடு கொடிகள் மீப் போய்,
வான் ஆறு நண்ணிப் புனல் வற்றிட நக்கும் மன்னோ!

பொ :—வெண்மையான மேகமானது பலவிதமாக மிகப்பெரிய ஆகாயமாகிய வீதியின்வழியாகச் சென்று, மீன்கள் தோன்று கின்ற கடலின் நீரை உண்பதுபோல, ஒன்றிலும் குறைபாடில்லாத மாடங்களில் பறக்கின்ற கொடிகள் வானில் சென்று தேவ கங்கையை யடைந்து அதன் நீர் வற்றும்படி குடித்துவிடும்.

கு :—மன் ஓ அசை. வெண்முகில் விதமா, ஓடி, புனல் உண்ணுமாபோல், கொடிகள் மீப்போய், நண்ணி, வற்றிட நக்கும் என முடிக்க. நளி - பெருமை. மீன் நாறு வேலை - புலால் நாற்றம் வீசுகின்ற கடல் எனினும்ஆம் ; வெண்முகில் வெண்கொடிக்கு உவமை. (70)

### கோபுர மதில்களின் உயர்வு

**163.** வன்றோ ரணங்கள் புணர்வாயிலும்
வானி னும்பர்
சென்றோங்கி மேலோ ரிடமில்லெனச்
செம்பொ னிஞ்சி

குன்றோங்கு தோளார் குணங்கூட்டிசைக் குப்பை யென்ன
ஒன்றோ டிரண்டு முயர்ந்தோங்கின வும்பர் நாண.

வன் தோரணங்கள் புணர் வாயிலும் வானின் உம்பர்
சென்று ஓங்கி மேல் ஓர் இடம் இல் எனச் செம்பொன் இஞ்சி
குன்று ஓங்கு தோளார் குணம் கூட்டு இசைக் குப்பை என்ன
ஒன்றோடு இரண்டும் உயர்ந்து ஓங்கின உம்பர் நாண.

பொ :—வலிய தோரணங்களோடு கூடிய அழகிய வாயில்களும் வானமண்டலத்தின்மேற் சென்று உயர்ந்து மேலே ஓரிடம் இல்லை யென்று சொல்லும்படி உயர்ந்திருக்கின்ற செம்பொன்னாற் செய்த மதில் மூன்றும், மலைபோலுயர்ந்த தோள்களையுடைய அயோத்தி மன்னர்களின் நற்குணத்தோடியைந்த சீர்த்தியின் குவியலைப் போலத் தேவர்களும் வெட்கப்பட உயர்ந்து விளங்கின.

கு :—வாயிலும் இஞ்சி ஒன்றோடிரண்டும், குப்பை என்ன உம்பர் நாண உயர்ந்தோங்கின என முடிக்க. தோரணவாயில் என்பதை, 'நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்' என்னும் சிலப்பதிகார அடியானும் (5.104) உணர்க. இஞ்சி ஒன்றோடு இரண்டும் – அகநகர், புறநகர் இடைநகர் ஆகிய மூன்று நகருக்கும் தனித்தனி அமைக்கப்பெற்ற மதில்கள் மூன்றும் என்றவாறு. இங்ஙனம் நகரை மூன்றாக அமைத்து மதிலையும் மூன்றாக வைத்தலை, 'இப்படி மதிலொரு மூன்றுள்' எனவரும் இலங்கைக் கேள்விப் படலத்து இலங்கையைக் குறித்துவரும் பகுதியானும் அறியலாம். குணம் கூட்டு இசைக் குப்பை - குணங்களால் ஒருசேரக் கூட்டப் பெற்ற புகழின் மிகுதி. உயர்ந்த நகரமாகிய தங்கள் நகரையும் தாண்டி அயோத்தி நகரின் மதிலும், தோரணவாயிலும் சென்றமையால் உம்பர் நாணினர் என்பதாம்.

இங்ஙனமன்றி, 'குணம், கூட்டு, இசைக்குப்பையும் என்ன' எனப் பிரித்து, குணங்களும், நட்பும், புகழ்க்குவியலும் ஆகிய இம் மூன்றையும் போன்ற மதில் என உரைப்பாரும், 'நற்குணங்களாற் சம்பாதித்த புகழின் திரள்போல' என உரைப்பாரும், சாத்துவிகம் ராசதம் தாமதம் என்ற முக்குணங்களாற் சேர்கின்ற கீர்த்திகளின் குவியலைப்போல என உரைகூறி, சத்துவ குணத்தின் இசைபோலக் கோபுரமும், ராசத தாமத குணங்களின் குவியலைப் போல மதில்களும் என இயைபு கூறுவாரும் ஆகப் பலராவர்.

(71)

### எங்கும் மலர்ப்பல்லவப் பள்ளி

**164.** காடும் புனமுங் கடலன்ன கிடங்கு மாதர்
ஆடுங் குளனு மருவிச்சுனைக் குன்று மும்பர்
வீடும் விரவு மணிப்பந்தரும் வீணை வண்டு
பாடும் பொழிலு மலநல்லறப் பள்ளி மன்னோ

காடும், புனமும், கடல் அன்ன கிடங்கும், மாதர்
ஆடும் குளனும், அருவிச் சுனைக் குன்றும், உம்பர்
வீடும், விரவும் மணிப்பந்தரும், வீணை வண்டு
பாடும் பொழிலும், அல நல் அறப் பள்ளி மன்னோ.

பொ :—காடுகளும், புனங்களும், கடலை ஒத்த அகழிகளும், பெண்கள் நீராடுகின்ற குளங்களும், அருவிகளும் சுனைகளும் உடைய மலைகளும், மேன்மாடங்களும், முத்து முதலிய மணிகள் கலந்து கட்டப்பெற்ற பந்தர்களும், வீணையொலியைப் போல வண்டுகள் பாடுகின்ற பொழில்களும் அல்லாதன நல்ல அறச் சாலைகளாம்.

கு :—இச்செய்யுட்கு, காடும் புனமும் கிடங்கும் குளமும் மலரும் தளிரும் நிறைந்துள்ள இடங்கள், குன்றும், வீடும் பந்தரும் பொழிலும் மலரானும் பல்லவத்தானும் இயன்ற படுக்கைகள் எனவும், காடு முதலான இடங்களில் மலர்ப்பல்லவப் பள்ளி இருத்தலால், அவ்விடங்களில் வீணைபோல வண்டுகள் பாடும் எனவும், பிறவாறும் உரைகூறுவாரும் உளர். (72)

### அயோத்தியில் கள்வாருமில்லை கொள்வாருமில்லை

**165.** தெள்வார் மழையுந் திரையாழியு
முட்க நாளும்
வள்வார் முரசம் மதிர்மாநகர்
வாழு மாக்கள்
கள்வா ரிலாமைப் பொருள்காவலு
மில்லை யாதுங்
கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களு
மில்லை மாதோ.

தெள் வார் மழையும் திரை ஆழியும் உட்க நாளும்
வள் வார் முரசம் அதிர் மாநகர் வாழும் மாக்கள்
கள்வார் இலாமைப் பொருள் காவலும் இல்லை யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ.

பொ :—தெளிவான நீரைப் பொழிகின்ற மேகமும், அலைகளோடுகூடிய கடலும் வெட்கும்படி, தோலால் இழுத்துக் கட்டப்பெற்ற முரசமானது நாடோறும் ஒலிக்கின்ற அயோத்திநகரில் வாழ்கின்ற மக்களில், திருடுபவர்கள் யாரும் இல்லாமையால் பொருளைக் காப்பார்களும் இல்லை; ஒரு பொருளையும் வாங்கிக் கொள்பவர்கள் இல்லாமையால் கொடுப்பவர்களும் இல்லை.

கு :—மாதோ அசை. உட்க, வள் வார் முரசம் நாளும் அதிர் நகரம் என இயைக்க. கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை என்றது "ஈவாரும் ஏற்பாரும் இல்லாத வானம்" என்ற பழம்பாடலை நினைவூட்டுவது. வார்–நீர். மழை ஆகுபெயராக மேகத்தை உணர்த்திற்று. மழை, ஆழி இவைகள் தம் ஒலியை விட விஞ்சிய நாண்முரசொலியைக் கேட்டு நாணின என்பது கருத்து. காவல் தொழிலாகுபெயராகக் காப்பாரை உணர்த்திற்று. பின்னர் கொடையுமில்லை யென்னாது கொடுப்பார்களுமில்லை என்று கூறியமைக்கேற்பத் தொழிலாகுபெயராகக் கொண்டு காவல் என்பதற்கு, காப்பவர் எனப் பொருள் கொள்ளலாயிற்று. (73)

### அயோத்திநகரில் கல்வியும் செல்வமும் சிறந்தவாறு

**166.** கல்லாது நிற்பார் பிறரின்மையிற்
கல்வி முற்ற
வல்லாரு மில்லை யவைவல்லரல்
லாரு மில்லை
எல்லாரு மெல்லாப் பெருஞ்செல்வமு
மெய்த லாலே
இல்லாரு மில்லை யுடையார்களு
மில்லை மாதோ.

கல்லாது நிற்பார் பிறர் இன்மையின் கல்வி முற்ற
வல்லாரும் இல்லை; அவை வல்லர் அல்லாரும் இல்லை;
எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே,
இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை மாதோ.

பொ :—அந்நகரத்தில் கல்லாமல் இருப்பவர்கள் பிறர் ஒருவரும் இல்லாமையால் கல்வியில் முழுவதும் வன்மையுடையவர்களும் இல்லை. கல்வியில் வன்மையற்றவர்களும் இல்லை. எல்லாரும் எல்லா வகையான பெரிய செல்வங்களையும் அடைந்திருப்பதால் வறியரும் இல்லை, செல்வரும் இல்லை.

கு :—அந்நகர மக்கள் கல்வியிலும் செல்வத்திலும் ஒரே தன்மையராக இருத்தலின் ஏற்றத்தாழ்வு கொண்டு அறியப்பெறும் முற்றக்கற்றவர்களும் முற்றக் கல்லாதவர்களும், வறியரும் செல்வரும் இலர்; எல்லாருமே எல்லாம் கற்றவர்கள்; செல்வர்கள் என்பதாம். (74)

### அயோத்திமாநகரம் தருவை நிகர்க்கும் எனல்

**167.** ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந்
தெண்ணில் கேள்வி
யாகம் முதற்றிண் பணைபோக்கி
யருந்த வத்தின்
சாகந் தழைத்தன் பரும்பித்தரு
மம்ம லர்ந்து
போகங் கனியொன்று பழுத்தது
போலு மன்றே.

ஏகம் முதல் கல்வி முளைத்து எழுந்து எண் இல் கேள்வி
ஆகு அம் முதல் திண் பணை போக்கி, அருந்தவத்தின்
சாகம் தழைத்து, அன்புஅரும்பித் தருமம் மலர்ந்து,
போகம் கனி ஒன்று பழுத்தது போலும்; அன்றே!

பொ :—அயோத்திமாநகரம், கல்வியென்னும் ஒருவித்திலிருந்து முளைத்து வளர்ந்து, கணக்கற்ற கேள்விஞானமாகிற அந்த அடிமரத்தினின்று உறுதியான கிளைகளை வளரவிட்டு, (பிறர் யாரும் புரிதற்கு அரிய தவமாகிய இலைகள் தழையச் செய்து, அன்பு என்னும் அரும்பைத்தோற்றுவித்து, அறம் என்னும் மலரை மலர்ந்து, இன்பம் என்னும் கனியொன்றைப் பழுத்தது போலும்.

கு :—அன்று. ஏ – அசை நிலை. அயோத்தியை, கல்வியாகிய விதையிலிருந்து முளைத்து வளர்ந்து, கேள்விஞானமாகிய கிளைகளை உடையதாகி, தவமாகிய இலைகளைப் பெற்று அன்பாகிய அரும்பினைத் தோற்றி, அறமலர் மலர்ந்து இன்பக்கனி பழுத்த

மரமாக உருவகித்தார். இச்செய்யுளுக்கு, இவ்வாறன்றிக் கல்வியானது முளைத்து, போக்கி, தழைத்து, அரும்பி மலர்ந்து ஒரு கனி பழுத்தது போலும், அயோத்தி எனவும்; கல்வி யென்னும் ஒரு விதையை முளைப்பித்து வளர்த்து, கிளைகளை ஓங்கச் செய்து, தழைகளைத் தழையச் செய்து' தரும மலர் மலர்த்தி, போகக் கனியாகிய தசரதசக்ரவத்தியை உடையது அயோத்தி என வருகின்ற படலத்திற்குத் தோற்றுவாய் செய்தார் எனவும் உரைப்பார் சிலர்.

இப்படலத்து முதற்கண் அயோத்திமாநகரை அறிவிக்க வந்த போது ஆசிரியர், 'எவ்வுலகத்தோர் யாவரும் தவஞ்செய்தேறுவானுதரிக்கின்ற, அவ்வுலகத்தோர் இழிவதற் கருத்தி புரிகின்றது அயோத்தி மாநகரம்,' என்றமைக் கேற்பவும், ''பொங்கு மாதவமும் ஞானமும் புணர்ந்தோர் யாவர்க்கும் புகலிடம்'' என்றமைக் கேற்பவும், 'அருந்தவத்தின் சாகந்தழைத்து' எனக் கூறியது நகரப் படலத்து முதற்கண் அறிவித்த இயல்பை முடிவின் கண்ணும் அறிவித்து முடித்துக் காட்டியவாறு. (75)

நகரப்படலம் முற்றிற்று.

# 4. அரசியற் படலம்

[அயோத்தி நகரத்து மன்னவனுகிய தசரத சக்கரவர்த்தியின் அரசாட்சி முறைமையைக் கூறும்பகுதி இதுவாதலின், இது அரசியற்படலம் எனப்பட்டது. இது சில ஏடுகளில் அரசியற்கைப் படலம் என்றும் வழங்கப்படும். மற்றும் சில ஏடுகளில் அரசியற்படலம் எனத்தனித்து ஒருபடலம் இல்லாமல், இதனையடுத்து வரும் திருவவதாரப்படலத்தோடு இதன்பாடல்களையும் இணைத்து நான்காவது திருவவதாரப்படலம் என்றேஅமைக்கப்பட்டுள்ளது. இன்னும் சில ஏடுகளில் 'தாயொக்கும்' என்ற 171-ஆம்பாடலோடு நகரப்படலம் முடிய, அடுத்து 'ஈய்ந்தேகடந்தான்' என்ற 172-ஆம் பாடல் தொடக்கம் திருவவதாரப்படலமாக அமைக்கப்பட்டுள்ளது. கிட்கிந்தா காண்டத்திலும் ஓர் அரசியற் படலம் வருதல் ஈண்டு நினைக்கத்தக்கதாகும். கதை நிகழ்ச்சி எதுவும் இப்படலத்திற் காணப்படாவிடினும், பல சுவடிகளில் இப் படலம் காணப்படுவதால் ஈண்டும் கொள்ளப்பட்டது.

இச்சிறந்த கதைக்கு நாயகனை இராமனுக்குத் தந்தையாம் பேறுபெற்றவன் தசரதன் என்றும், அவன் அறிவும், அருளும், ஆற்றலும், வண்மையும், நீதியும் நிரம்பப்பெற்றவன் என்றும், தான வேள்விகளிற் சிறந்தவன் என்றும், குடிமக்களுக்குத் தாயும் சேயும்போல உதவி இன்பமும் அறிவும் எங்கும் பரப்பினன் என்றும், உலகவாழ்க்கையை நன்கு நுகர்ந்தான் என்றும், உலகம் முழுதையும் ஒருநகர்போலவே எளிதில் ஆண்டான் என்றும், அவன் வேலின் கொற்றமும், குடையின் அளியும், திகிரியின் உயர்வும் கூறி, எல்லா உயிர்க்கும் உடல்போல இருந்து வறியன் ஓம்பும் ஒரு வயலைப்போல நாட்டைக் கண்ணும்கருத்துமாய்க் காத்துவந்தான் என்று ஆசிரியர் இப்படலத்தில் முடிக்கின்றார்.]

# 4. அரசியற் படலம்

அயோத்தியரசனுடைய சிறப்பியல்புகள் 168—172

**168.** அம்மா ணகருக் கரசன்
★ னரசர்க் கரசன்
செம்மாண் டனிக்கோ லுலகேழினுஞ்
செல்ல நின்முன்
இம்மாண் கதைக்கோ ரிறையாய
விராம னென்னும்
மொய்ம்மாண் கழலோற் றருநல்லற
மூர்த்தி யன்னான்.

அம் மாண் நகருக்கு அரசன்,—அரசர்க்கு அரசன்:
செம் மாண் தனிக் கோல் உலகு ஏழினும் செல்ல நின்முன்:
இம் மாண் கதைக்கு ஓர் இறை ஆய இராமன் என்னும்
மொய் மாண் கழலோன் தரும் நல் அறமூர்த்தி அன்னான்.

பொ:—பெருமை பொருந்திய அந்த அயோத்திநகருக்கு அரசனானவன், (எப்படிப்பட்டவன் என்றால் உலகத்திலுள்ள மற்றை) அரசர்களுக்கெல்லாம் பேரரசன் (சக்கரவர்த்தி): மாட்சிமை கொண்ட ஒப்பில்லாத செம்மையான (தன்) அரசாட்சி ஏழு உலகும் செல்லும்படி ஆண்டுவருபவன்; புகழ்பொருந்திய இந்தக் கதைக்கு ஒப்பற்ற தலைவனாகிய இராமன் என்று சொல்லப்படுகின்ற வலிய அழகிய வீரக்கழலை அணிந்தவனை மகனாகப் பெற்ற நல்ல தருமத்தின் வடிவத்தை ஒத்தவன். (1)

**169.** ஆதிம் மதியும் மருளும்மற
னும்ம மைவும்
ஏதின் மிடல்வீ ரமுமீகையு
மெண்ணில் யாவும்
நீதிந் நிலையும் மிவைநேமியி
னோர்க்கு நின்ற
பாதிம் முழுதும் மிவற்கேபணி
கேட்ப மன்னோ.

ஆதி மதியும், அருளும், அறனும், அமைவும்,
ஏது இல் மிடல் வீரமும், ஈகையும், எண்ணில், யாவும்,
நீதிநிலேயும், இவை நேமியிஞேர்க்கு நின்ற
பாதி; முழுதும் இவற்கே பணி கேட்ப மன்னே!

பொ :—பழமையான (இயல்பாகவுள்ள) உண்மையறிவும், இரக்கமும், தருமமும், சால்புடைமையும், குற்றமற்ற வலிமையுடன் கூடிய அஞ்சாத்தன்மையும், கொடையும், நீதியிற் கோடாமையும், (மற்றும் அரசர்க்கு வேண்டிய) எல்லாநற்குணங் களும்; ஆராய்ந்து சொல்லுமிடத்து, மற்றஅரசர்களுக்கு அரை குறையாகவே அமைந்திருந்தன: இந்தத் தசரதசக்கரவர்த்திக்கோ வெனின், (எல்லாக்குணங்களும்) முழுமையாக நிறைந்து ஏவல் கேட்பனவாயிருந்தன.

கு :—பாதி - அரைகுறையுணர்த்தி நின்றது, (2)

170. மொய்யார் கலிசூழ் முதுபாரின்
முகந்து தானக்
கையார் புனலா னனேயாதன
கையு மில்லே
மெய்யாய வேதத் துறைவேந்தருக்
கேய்ந்த யாரும்
செய்யாத யாக மிவன்செய்து
மறந்த மாதோ.

மொய் ஆர்கலி சூழ் முது பாரில் முகந்து தானக்
கை ஆர் புனலால் நனேயாதன கையும் இல்லே;
மெய் ஆய வேதத் துறை வேந்தருக்கு ஏய்ந்த, யாரும்
செய்யாத யாகம் இவன் செய்து மறந்த, மாதோ!

பொ :—வலிதாகிய கடல்சூழ்ந்த பழமையாகிய நிலவுலகில் (தசரதன்) மொண்டு கையால் (தாரைவார்த்துக் கொடுத்த) தானநீரிஞல் ஈரமாகாதனவாகிய கைகளும்இல்லே; உண்மையான வேதநெறியிலே ஒழுகுகின்ற அரசர்கட்கு(ச் செய்தற்குரியன வாக)ப் பொருந்தியனவும், எவரும்செய்து முடிக்காதனவுமாகிய எல்லா யாகங்களும் இவன் செய்து மறந்தனவாகும்.

கு :—'இவன் செய்து மகிழ்ந்த மாதோ' என்ற பாடமும் கொள்ளலாம். (3)

**171.** தாயொக்கு மன்பிற் றவமொக்கு
நலம்ப யப்பிற்
சேயொக்கு முன்னின் றொருசெல்கதி
யுய்க்கு நீரால்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கு
நுணங்கு கேள்வி
ஆயப்பு குங்கா லறிவொக்கு
மெவர்க்கு மன்னன்.

**தாய் ஒக்கும், அன்பில்; தவம் ஒக்கும், நலம் பயப்பில்;**
**சேய் ஒக்கும், முன் நின்று ஒரு செல்கதி உய்க்கும் நீரால்;**
**நோய் ஒக்கும் என்னின், மருந்து ஒக்கும்; நுணங்கு கேள்வி**
**ஆயப் புகுங்கால் அறிவு ஒக்கும் எவர்க்கும், அன்னன்.**

பொ :—அந்தத் தசரத சக்கரவர்த்தி, யாவர்மாட்டும் மிக்க அன்புடைமையால் பெற்றதாயை ஒத்திருப்பான்; (வேண்டிய) நன்மைகளையெல்லாம் தருதலால், தவத்தை ஒத்திருப்பான்: முற்பட்டு நின்று உயர்ந்த செல்லுதற்குரிய நல்வழியிற் செலுத்துதலால், மகனை ஒத்திருப்பான்; (துன்பம் நேர்ந்தால் அதனைத் தவிர்த்து இன்பம் விளைவிப்பதில்) நோய் வந்த இடத்து அது தணிக்கும் மருந்தை ஒத்திருப்பான்: (ஐயந்திரிபுகளைப் போக்கித் தெளிவு படுத்துவதில்) நுண்ணிய நூற்பொருளை ஆராயப்புகுமிடத்து அறிவை ஒப்பான். (4)

**172.** ஈய்ந்தே கடந்தா னிரப்போர்கட
லெண்ணி னுண்ணூல்
ஆய்ந்தே கடந்தா னறிவென்னு
மளக்கர் வாளாற்
காய்ந்தே கடந்தான் பகைவேலை
கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் றிருவிற்றொடர்
போக பௌவம்.

**ஈய்ந்தே கடந்தான் இரப்போர் கடல்; எண் இல் நுண் நூல்**
**ஆய்ந்தே கடந்தான் அறிவு என்னும் அளக்கர்; வாளால்**
**காய்ந்தே கடந்தான் பகை வேலை; கருத்து முற்றத்**
**தோய்ந்தே கடந்தான் திருவின் தொடர் போக பௌவம்.**

பொ :—(அவ்வரசர்க்கரசன்) இரப்போராகிய கடலை (அவர்கள் மீண்டும் இரவாதபடி நிரம்ப)க் கொடுத்தே தாண்டினன்: அறிவாகிய கடலை அளவற்ற நுண்பொருள் நூல்களை ஆராய்ந்தே தாண்டினன்: பகைவராகிய கடலை வாளால் ஒறுத்தே தாண்டினன்: செல்வத்தினேடு தொடர்ந்துள்ள இவ்வுலகவின்பமாகிய கடலை மனம் போதுமென்னும்படி (ஆசைதீர) அனுபவித்தே தாண்டினன்.

கு :—அவன் இரவலராகிய கடலைக் கொடையென்னும் புணையாற்கடந்து ஏற்பாரின்மைக் கரையையும், அறிவுக்கடலை ஆராய்தல் என்னும் புணையாற்கடந்து அறியத்தக்கதின்மைக்கரையையும், பகைக்கடலை வாளால் ஒறுத்தல் என்னும் புணையாற்கடந்து பகையின்மைக்கரையையும், போகக்கடலை நுகர்தல் என்னும் புணையாற்கடந்து ஆசையின்மைக்கரையையும் அடைந்தான் என்க. ஈந்தே என்பது எதுகை நோக்கி ஈய்ந்தே என வந்தது. கடல், அளக்கர், வேலை, பௌவம் என்பன ஒரு பொருள் குறித்த பலசொல்: இது பொருட்பின்வரு நிலை; கடந்தான் என்பது சொற்பொருட்பின்வருநிலை. (5)

இதன்பின், ஒரு பிரதியிற் காணப்படும் அதிகப்பாடல் ஒன்று வருமாறு:—

172. (a) விரிகதிர் பரப்பிமெய்ப் புவன மீதிருள்
பருகுறும் பரிதியங் குலத்திற் பார்த்திபன்
இரகுமற் றவன்மக னயனென் பானவன்
பெருகுமா தவத்தினிற் பிறந்த தோன்றலே.

### அயோத்தியரசன் பெயர் தசரதன்

**173.** வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசியர்
உள்ளமு மொருவழி யோட நின்றவன்
தள்ளரும் பெரும்புகழ்த் தயர தப்பெயர்
வள்ளல்வள் ளுறையயின் மன்னர் மன்னனே.

வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசியர்
உள்ளமும் ஒரு வழி ஓட நின்றவன்
தள் அரும் பெரும் புகழ்த் தயரதப் பெயர்
வள்ளல் வள் உறை அயில் மன்னர் மன்னனே.

பொ :—தோலினலமைந்த உறையிற்பொருந்திய கூரிய கத்தியையுடைய அந்தச் சக்கரவர்த்தி, நீக்குதற்கரிய பெரும்புக

மோடுங்கூடிய தசரதன் என்னும் பெயருடன், வரையாது வழங்குபவனாய், ஆற்றுநீர்ப் பெருக்கும், பறவையும், விலங்கும், பரத்தையர் மனமும் ஒருவழியிலேயே (என்றும் ஒருபடித்தாய்ச்) செல்லும்படி ஆண்டுவந்தான்.

கு :—அயில்: வேற்படையுமாம். பலவழியாயும் கவர்பட்டு ஓட வல்ல வெள்ளத்தையும், பறவையையும், விலங்கையும். வேசியருள்ளத்தையும் ஒரு நெறியுய்த்தற்கு அவன் செங்கோல் ஏதுவாயிற்றென்க. பறவை விலங்குகளும்கூட வெந்நெறியிற் செல்லாது செந்நெறியிற் செல்லவைத்தான் என்றவாறு. (6)

### உலகம் முழுவதையும் தசரதன் எளிதில் ஆளுதல்

**174.** நேமிமால் வரைமதி லாக நீள்புறப்
பாமமா கடல்கிடங் காகப் பன்மணி
வாமமா ளிகைமலை யாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம் போன்றதே.

நேமி மால் வரை மதிலாக, நீள் புறப்
பாமம் மா கடல் கிடங்கு ஆகப், பல் மணி
வாமம் மாளிகை மலை ஆக, மன்னற்குப்
பூமியும் அயோத்தி மா நகரம் போன்றதே.

பொ :—நீண்ட பரவிய பெரும்புறக்கடலானது அகழியாகவும் பெரிய சக்கரவாள கிரியானது மதிலாகவும், (பூமியிலுள்ள ஏனைய குல) மலைகள் பலவகை இரத்தினங்களையும் கொண்ட அழகிய மாளிகைகளாகவும், அந்தத் தசரதசக்கரவர்த்திக்குப் பூமி முழுவதும் அயோத்திநகரமே போலத் தோன்றியது.

கு :—நீள் பாம மா புறக்கடல் கிடங்காக, மால் நேமி வரை மதிலாக, மலை பல் மணி வாமமாளிகையாக, மன்னற்குப் பூமியும் அயோத்திமா நகரம் போன்றதே, எனக் கூட்டுக. மால் நேமி வரை - பெரிய சக்கரவாள மலை; பெரும் புறக் கடல் என்பது, அகக்கடல் போலன்றிச் சக்கரவாளகிரிக்கும் அப்பால் உள்ளது, பாமம் - பரப்பு; கிடங்கு - அகழி; வாமம் – அழகு.

உலக முழுவதையும் ஒரு நகரை ஆள்வதுபோல் எளிதாக ஆண்டான் என்றவாறு. (7)

### தசரதன் வேலின் சிறப்பு

175. ஆவரும் வன்மைநே ரறிந்து தீட்டலான்
மேவருங் கையடை வேலுந் தேயுமாற்
கோவுடை நெடுமணி மகுட கோடியாற்
சேவடி யணிந்தபொற் கழலுந் தேயுமால்.

ஆ வரும் வல் மை நேர் அறிந்து தீட்டலால்
மேவரும் கை அடை வேலும் தேயும் ஆல்;
கோ உடை நெடு மணி மகுட கோடியால்
சே அடி அணிந்த பொன் கழலும் தேயும் ஆல்.

பொ :—உண்டாகின்ற வலிய அழுக்கை (துருவை) நன்கு அறிந்து (அது நீங்கும் படி) தீட்டுதலால் (தசரதனுடைய) கையிலுள்ள விரும்பத்தக்க வேற்படையும் தேயா நிற்கும்; (விழுந்து வணங்குகின்ற) அரசர்களுடைய நீண்ட இரத்தினங் கள் இழைத்த கிரீடங்களின் நுனி படுதலால், (தசரதனுடைய) சிவந்த பாதத்திற் பூண்ட பொன்னாலாகிய வீரக்கழலும் தேயா நிற்கும்.

கு :—மேவரும் - விரும்பத் தக்க; மேவு அரும் எனப் பிரித்து, (பிறரால்) அடைதற்கு அரிய என்றும் பொருள் கூறலாம்.

தசரதன் துருவைப் போக்க வேற்படையைத் திட்டினாலும், அது கண்டு அஞ்சிய மன்னர்கள் அவன் அடியில் விழுந்து பணிந் தனர் என்ற நயம் காண்க. (8)

### தசரதனின் வெண்கொற்றக்குடை

176. மண்ணிடை யுயிர்தொறும்
வளர்ந்து தேய்வின்றித்
தண்ணிழல் பரப்பவு
மிருளைத் தள்ளவும்
அண்ணறன் குடைமதி
யமையு மாதலான்
விண்ணிடை மதியினை
மிகையி தென்பவே.

மண் இடை உயிர்தொறும், வளர்ந்து தேய்வு இன்றித்,
தண் நிழல் பரப்பவும், இருளைத் தள்ளவும்,
அண்ணல் தன் குடைமதி அமையும்; ஆதலான்,
விண் இடை மதியினை, 'மிகை இது' என்பவே.

பொ :—தசரதனின் (வெண் கொற்றக்) குடையாகிய சந்திரன் (நாள் தோறும்) குறைவதென்பது இல்லாமல் (மேன் மேலும்) வளராநின்று, பூமியின்கண் எல்லா உயிர்களிடத்தும் (அச்சம் துன்பம் முதலிய) இருளைப் போக்கவும், குளிர்ந்த (இன்பமாகிய) அருளொளியைப் பரப்பவும் போதுமாயிருந்தது; ஆதலால், வானிடத்துள்ள சந்திரனை (அறிஞர்) 'இது அதிகப்படியானது' என்று சொல்லுவார்.

கு :—அண்ணல்தன் குடைமதி, தேய்வு இன்றி, வளர்ந்து, மண் இடை உயிர் தொறும் இருளைத் தள்ளவும், தண் நிழல் பரப்பவும் அமையும்; ஆதலான், விண் இடை மதியினை (அறிஞர்) ''இது மிகை'' என்ப; எனக் கூட்டுக. ஏ: அசை.

நிழல்-ஒளி: அருள் என்றும் பொருள் படும்: ''தண்ணிழல் வாழ்க்கை'' (பட்டினப் பாலை-204). குடை ஆட்சியைக் குறிப்ப தாதலின், தேய்வின்றி வளர்ந்து என்றார். (9)

## உலகின் உயிர்களுக்குத் தசரதன் ஓர் உடம்பு

**177.** வயிரவான் பூணணி மடங்கல் மொய்ம்பினன்
உயிரெலாந் தன்னுயி ரொப்ப வோம்பலாற்
செயிரிலா வுலகினிற் சென்று நின்றுவாழ்
உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினன்.

வயிர வான் பூண் அணி மடங்கல் மொய்ம்பினன்
உயிர் எலாம் தன் உயிர் ஒப்ப ஓம்பலால்,
செயிர் இலா உலகினில் சென்று நின்று வாழ்
உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினன்.

பொ :—வயிரம் இழைத்த சிறந்த நகைகளை அணிந்த சிங்கம் போன்ற வலிமையுடையவனான தசரதன், மன்னுயிரெல்லாம் தன்னுயிர்போலப் பாதுகாத்தலால், குற்ற மற்ற உலகத்தி லுள்ள அசைந்து நடமாடியும் அசையாது நிலைத்தும் வாழா நின்ற எல்லா உயிர்களும் தங்குவதாகிய ஒப்பற்ற உடலை ஒத்திருந்தான்.

கு :—உடல் உயிரைத்தாங்குவது போலத் தசரதன் உலகத்து வாழ்வாரையெல்லாம் தாங்கினான் என்க. உடலினும் உயிர் அருமையானது போலத் தன்னினும் பிற உயிர்களை அருமையாகக் கருதினான் என்பதும் பெறப்படும்.

சென்று வாழ் உயிர்களை இயங்குதிணை (சரம்) என்றும் நின்று வாழ் உயிர்களை நிலைத்திணை (அசரம்) என்றும் சொல்லுவர். ''நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே. மன்னனுயிர்த்தே மலர்தலை யுலகம், அதனால், யானுயி ரென்ப தறிகை, வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே'' என்று கூறியது புறநானூறு (186). அவ்வாறு வேந்தனாகிய உயிரையுடைத்து உலகம் என்ற கருத்தை மாற்றிக் கம்பர் இங்கு, உலகத்து உயிர்களுக்கெல்லாம் மன்னன் உடம்பாயினான் என்று பாடினார். இக்கருத்தையே மீண்டும் அயோத்தியா காண்டம், மந்தரை சூழ்ச்சிப் படலத்தில். ''வைய மன்னுயிராக வம் மன்னுயிர், உய்யத் தாங்கு முடலன்ன மன்னனுக்கு'' என்று வற்புறுத்துதலும் ஈண்டுக் கருதத்தகும். (10)

## தசரதன் திகிரியின் சிறப்பு

178. குன்றென வுயரிய குவவுத் தோளினான்
வென்றியந் திகிரிவெம் பரிதி யாமென
ஒன்றென வுலகிடை யுலாவி மீமிசை
நின்றுநின் றுயிர்தொறு நெடிது காக்குமே.

குன்று என உயரிய குவவுத் தோளினான்
வென்றி அம் திகிரி, வெம் பரிதி ஆம் என,
ஒன்று என, உலகு இடை உலாவி, மீமிசை
நின்றுநின்று, உயிர்தொறும் நெடிது காக்குமே.

பொ :—மலை போல உயர்ந்த திரட்சியுடைய தோள்களை யுடையவனாகிய தசரனது வெற்றி பொருந்திய அழகிய சக்கரம் வெப்பமுள்ள சூரியன் என்று சொல்லும்படியாக, மிகவும் மேம்பட்டு நின்று இணையற்றதென்னும்படி உலக முழுதும் சென்று, எல்லா உயிர்களிடத்தும் காத்தற்றொழிலை மிகுதியாகச் செய்யும்.

கு ;—வெம் பரிதி-வெவ்விய கதிர்களையுடைய சூரியன். ஒளியுடைத்தாதல், மேல் நிற்றல், உயிர்கள் முழுவதும் சஞ்சரித்தல், (உயிர்தொறும் நிற்றல்) உயிர்களைப் பாதுகாத்தல் என்ற தன்மைகளில் சூரியன் திகிரிக்கு உவமை. (11)

## தசரதன் உலகைக் கருத்துடன் பாதுகாத்தல்

179. எய்யென வெழுபகை யெங்கு மின்மையான்
மொய்பொரு தினவுறு முழவுத் தோளினன்
வையக முழுவதும் வறிய னோம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான்.

எய் என எழு பகை எங்கும் இன்மையால்,
மொய் பொரு தினவு உறு முழவுத் தோளினன்,
வையகம் முழுவதும், வறியன் ஓம்பும் ஓர்
செய் எனக் காத்து இனிது அரசு செய்கின்றான்.

பொ:—முள்ளம்பன்றியைப் போற் கிளர்ந்துவருகின்ற பகைவர்கள் எவ்விடத்திலும் கிடையாமையினால், போர்புரிவதற்குத் தினவு மிகுந்த, மத்தளம்போலத் திரண்டுருண்ட தோள்களையுடையவனான தசரதன் உலகம் முழுவதையும் ஓர் ஏழை காக்கின்ற ஒரே வயலைப் போலப் பாதுகாத்து, நன்றாக அரசாண்டு வந்தான்.

கு:—எய்-முள்ளம்பன்றி; மொய்-போர்; முழவு—மத்தளம்; செய்-வயல்.

'எய்யென வெழுபகை' என்பதற்கு, அம்பு முதலியவற்றால் தாக்கு என்று கட்டளையிடுதற்கு எதிர்ந்து வரும் பகை என்றும், என்னைத் தாக்கு என்று எழும்பகை என்றும் பொருள் கூறுவாரும் உளர்.

(12)

அரசியற் படலம் முற்றிற்று.

# 5. திருவவதாரப் படலம்

மகவு வேண்டிப் புத்திரகாமேஷ்டி யாகம்செய்த தசரதனுக்கு இராமன் முதலிய நான்கு புதல்வர்களாகத் திருமாலும் அவன் சக்கரமும், ஆதிசேடனும், சங்கும் வந்து பிறந்த செய்தியைக் கூறும் பகுதி திருவவதாரப் படலம் என்னப்பட்டது. அவதாரம் என்னும் வடமொழி மேல்நிலை நின்று இறங்குதல் என்று பொருள் படும். வினைவசத்தால் தம் நிலையினும் தாழ்ந்துபிறக்கும் மாந்த ரும் பிறரும் போலாது, உயர்வறவுயர்ந்த இறைவன், தன் இச்சை யால் தேவர் முதலியோர் துயரினைத் தீர்க்குமபொருட்டு விட்டுலகு விட்டிறங்கி மண்ணுலகில் தோன்றுதலின், அத் தோற்றம் அவ தாரம் எனலாயிற்று. இப்படலம் 138 பாடல்களைக் கொண்டது. ஒரே ஒரு பிரதியில் மட்டும் முதல் 31 செய்யுள் வரையில் திருவாக் குரைத்த படலம் என்றும், அடுத்து 50 செய்யுளும் கலைக்கோட்டு முனிப் படலம் என்றும், எஞ்சியுள்ள செய்யுள்கள் திருவவதாரப் படலம் என்றும் இப்படலம் மூன்ருகப் பிரிக்கப்பட்டுள்ளது.

இப்படலத்திற் கூறப்பட்டுள்ள செய்திகள் வான்மீகத்தில் 8-ஆவது சர்க்கம் முதல் 18-ஆவது சர்க்கம் முடியப் பதினெரு சர்க்கங்களாற் கூறப்பட்டுள்ளன. கம்பர் இப்படலத்தை அமைத் திருக்கும் முறையின் சிறப்பை நன்கு தெரிவதற்கு, வான்மீகர் கூறியவற்றை முதலில் உணர்ந்துகொள்வது நலமாகும். வான் மீகத்திற் கூறப்படுவதாவது :—

புத்திரனில்லாக் குறையைப் போக்கவேண்டி அசுவமேதயாகம் செய்யவேண்டுமென்று தசரதன் சுமந்திரன் மூலமாய் சுயக்ஞரை யும், வாமதேவரையும், ஜாபாலியையும், காசியபரையும், வசிட்டரையும், மற்றும் அந்தணர் குருக்கள் எல்லோரையும் அழைத்துக் கேட்கிருன். அவர்கள் யாகசாலையைச் சரயூநதியின் வடகரையில் அமைத்துச் செய்தால் புத்திரர் பிறப்பர் எனக் கூறிச் செல்கின்றனர். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும் படி அரசன் மந்திரிகளுக்குக் கட்டளையிடுகிருன்.

பின்னர், தனிமையில் இருந்த தசரதனையடைந்த சுமந்திரன், அவ்வரசனுக்குப் புத்திரனுண்டாவதைக் குறித்துப் பூர்வத்தில் (முன்காலத்தில் - கிருதயுகத்தில்) சனற் குமாரர், முனிவர்கள் முன்னிலையிற் கூறிய ஒரு கதையைத் தான் கேள்விப்பட்ட வண்மண கூறலானுன். அக்கதை கலைக்கோட்டுமுனியைப்

பற்றியது. காச்யபரின் மகன் விபண்டகருக்குக் கலைக்கோட்டுமுனி பிறப்பார். உரோமபதன் ஆளும் அங்கநாட்டில் மழையில்லாமற் போகவும், அவன் விலைமாதர்களைக் கொண்டு கலைக்கோட்டு முனியை அழைத்து வரவும் மழைபெய்யும். உரோமபதன் மகள் சாந்தையை மணம் செய்துகொண்டு கலைக்கோட்டுமுனி அங்கேயே தங்குவார். தசரதன் தன் நண்பனுன உரோமபத னிடம் சென்று, கலைக்கோட்டுமுனியை அனுப்பித் தன் யாகத்தை நடத்தித் தரும்படி வேண்டுவான். அம்முனிவரும் இசைந்துவந்து அவ்வாறு யாகத்தை நடத்தவும் நான்கு புத்திரர்கள் பிறப்பார்கள்: என்று இவ்வாறு கதையைச் சனற்குமாரர் கூறியுள்ளதாகச் சொல்லிக் கலைக்கோட்டுமுனிவரை அழைத்துவரும்படி சுமந்தி ரன் வேண்டுகிருன்.

இதற்கு வசிட்டரையும் சம்மதிக்கச் செய்து, தசரதன் உடனே தன் மனைவிமார்களுடன் உரோமபதன் நாட்டிற்குச் செல்கிருன். உரோமபதன் கலைக்கோட்டுமுனிவருக்குத் தசர தனை அறிமுகம் செய்துவைக்கிருன், ஏழெட்டு நாட்கள் தசரதன் அங்குத் தங்குகிருன். உரோமபதன் தசரதன் விருப்பப்படி முனிவரைச் சாந்தையுடன் கூட அனுப்பிவைக்கிருன். பின்னர் வசந்தகாலம் வரவும் அசுவமேதயாகம் தொடங்கப்படுகிறது. ஓராண்டு கழித்து மறு வசந்தம் வரும்பொழுது தசரதன் வசிட் டரை முன்னிட்டு யாகசாலையுட் பிரவேசிக்கிருன். எல்லா நாட்டு அரசர்களையும், பெரியோர்களையும். முனிவர்களையும் அழைத்து வரும்படி வசிட்டர் சுமந்திரனுக்குச் சொல்லுகிருர். முக்கியமாய் மிதிலைநாட்டு ஜனகர் முதல்சம்பந்தியாகப் போவதால், வர வழைக்கப்படவேண்டும் என்றும் குறிப்பிடுகிருர். இதன்பின் அசுவமேதச் சடங்குகள் விரிவாகக் கூறப்படுகின்றன. கோசலை, யாகக் குதிரையை மூன்று வாட்களால் மகிழ்ச்சி பொங்கக்கொல் கிருள். பிறகு குதிரையோடுகூட ஓர் இரவு வசிக்கிருள். தானங் கள் வழங்கப்படுகின்றன.

அசுவமேதம் முடிந்ததும், புத்திரகாமேஷ்டி யாகம் நடத்தும் படி தசரதன் கலைக்கோட்டுமுனியை வேண்டுகிருன். "அப்படியே ஆகட்டும். உமக்கு நான்கு புத்திரர்கள் பிறப்பார்கள்" என்று கூறிக் கலைக்கோட்டுமுனியும் யாகத்தைத் தொடங்குகிருர். அவிர்ப்பாகங்களைப் பெற்றுக்கொள்ளும்பொருட்டுக் கந்தர்வர்கள் தேவர்கள், சித்தர்கள், இருடிகள் எல்லோரும் கூடினர். பிரமனும் வந்தான். தேவர்கள் அவனிடம் இராவணன் கொடுமையைக் கூறி அவனைக் கொல்லும் உபாயத்தை அருளும்படி வேண்டுகின்ற னர். "இயக்கர், கந்தருவர், தேவர், அசுரர், அரக்கர் முதலி யோரால் இராவணனைக் கொல்ல முடியாது. மனிதனுலேதான்

கொல்ல முடியும் '' என்று பிரமன் கூறுகிறான். அப்போது அங்கு விஷ்ணுபகவானும் வந்து சேர்கிறார். தேவர்கள் அவரை வணங்கி, '' தசரதருடைய நாணம், செல்வம், புகழ் என்பவைகளே உருக்கொண்ட மூன்று மனைவிகளிடத்தும் நீரே உம்மை நான்கு பாகமாகப் பண்ணிக்கொண்டு புத்திரத் தன்மையை அடையும். அவ்வாறு மனித ரூபமாக ஆகி இராவணனைப் போரிற் கொல்லும்'' என்று வேண்டினர். விஷ்ணுவானவர் அவ்வாறே வரம் கொடுத்துத் தம்மை நான்கு பாகமாகச் செய்து கொண்டு தசரதனைப் பிதாவாக இச்சித்துப் பின் மறைந்தார்.

அதன்பின் ஓமகுண்டத்திலிருந்து ஒரு பூதம் தங்கமயமான வெள்ளிமூடியையுடைய பாத்திரம் நிறையப் பாயசத்தைக் கொண்டுவந்து, '' நான் பிரமனைச் சேர்ந்த புருஷன். உம்முடைய மனைவிகளுக்கு இதனைக் கொடும். புத்திரர்களை அடைவீர்'' என்று கூறி மறைந்தது. தசரதன் பாயசத்தில் பாதியைக் கோசலைக்கும், மீதிப் பாதியில் பாதியைச் சுமத்திரைக்கும், மேலும் மிகுந்துநின்றதிற் பாதியைக் கைகேயிக்கும், எஞ்சியதைச் சுமத்திரைக்கும் கொடுத்தான். தேவிமார் கருவுற்றனர்.

பின்னர், பிரமன் தேவர்களை நோக்கி, விஷ்ணுவுக்குப் பக்கபலமாக அப்சர, கந்தர்வ, யக்ஷ பன்னக, ரிக்ஷ, வித்யாதர, கின்னர வானரஸ்திரீகளிடத்து வானரவுருவத்தில் புத்திரர்களை உண்டாக்கும்படி ஏவினான். தான் முன்னரே கொட்டாவி விட்டுக் கரடி வேந்தனான ஜாம்பவானை உண்டுபண்ணிவிட்டதையும் கூறினான். உடனே தேவர்களும் வானரவுருவம் கொண்ட புத்திரர்களை உண்டாக்கினார்கள். இந்திரன் வாலியையும், சூரியன் சுக்கிரீவனையும் உண்டாக்கினர். பிருகற்பதி தாரனையும் குபேரன் கந்தமாதனனையும் உண்டுபண்ணினர். விச்சுவகர்மா நளனையும், அக்னி நீலனையும், அச்வினிதேவர்கள் மைந்தனையும் த்விவிதனையும், வருணன் சுஷேணனையும், மழைக்கடவுள் சரபனையும், வாயுதேவர் அநுமானையும், ருத்திரர் சூர்யானனனையும் உண்டுபண்ணினர். இவ்வாறு பல்லாயிரக்கணக்கானவர்கள் வேண்டிய உருவம் கொள்பவர்களாய் வாலியின் ஆட்சியின்கீழ் மலைகளும் காடுகளும் இடமாகக் குடிபுகுந்தார்கள். திருமால், இராமன் பரதன் இலக்குவன் சத்துருக்கன் என்னும் நான்கு குழந்தைகளாகவந்து பிறந்தான். இவ்வாறு கூறுகிறது வான்மீகம்,

இச் செய்திகளைக் கம்பர் எடுத்துக் கையாளும் முறையிலே சிற்சில மாறுதல்களைச் செய்துள்ளார். அம்மாறுதல்கள் காவியத்தின் சுவையை மிகுத்துக் காட்டுவதோடு கம்பருடைய நுனித்தறியும் நுண்மாண் புலமையையும், உலகியலின் நுண்ணுணர்வை

யும், சுவையுணர்ச்சியையும், கவிதாசக்தியையும், தனிப்படைப்பின் தலைமையையும் கற்பனைத் திறனையும் நன்கு எடுத்து விளக்குவனவாகும்.

வான்மீகர் சுமந்திரனுக்கு அமைச்சன், சாரதி, நண்பன் என்ற முறையில் முக்கியத்துவம் கொடுத்துள்ளாரேனும், கம்பர் சுமந்திரனைப் பெயரளவிற்கூட இப்படலத்திற் கூறவில்லை. அவனுக்குப் பதிலாகத் தசரதனின் குருவான வசிட்டருக்கு எல்லா முதன்மையையும் மரியாதையையும் செலுத்துகிறார். திரேதா யுகத்தில் நடக்கப்போகும் செய்திகளைக் கிருதயுகத்திலேயே தெரிந்து சனற்குமாரர் முனிவர்களுக்குக் கூறினமையைத் தசரதன் அறியாதிருக்கவும், சுமந்திரன் அறிந்து கூறியதாகச் சொல்வது பொருத்தமில்லை என்பதைக் கம்பர் கண்டு விலக்கியிருக்கிறார் என்றே கொள்ளவேண்டும். தெய்வ நிகழ்ச்சிகளை உலகியலில் உழன்று நிற்கும் அமைச்சன் சுமந்திரனைவிட, முக்காலமும் உணரவல்ல வசிட்டர் உணர்ந்திருந்தார் என்று கூறுவது பொருத்தமுடையது என்பதைக் கம்பர் தெளிவாகத் தெரிந்திருக்கிறார். திருமால் இராமனாகப் பிறக்கப்போவது முன்னரே முடிவான ஒரு செய்தி. அம்முடிவை யொட்டியே தசரதன் புத்திர காமேஷ்டியாகம் நடத்துவதற்கான ஏதுக்களும் நிகழ்ச்சிகளும் ஒன்றன்பின் ஒன்றாக அடுத்து வந்திருக்கின்றன. அவ்வாறிருக்கவும், புத்திரகாமேஷ்டியாகத்தின் போது அவிர்ப்பாகம் பெறுவதற்காக வந்த தேவர்கள் அவ்விடத்திலேயே பிரமனிடத்தும் திருமாலிடத்தும் இராவணன் கொடுமையைக் கூறி முறையிடுவதும், திருமாலை மனிதனாகப் பிறக்கும்படி வேண்டுவதும், உடனே திருமால் வரங்கொடுத்து அவ்வாறே பிறப்பதும் காரணகாரியத் தொடர்புக்கு ஒவ்வாதிருப்பனவாகக் கொண்டு, கம்பர் அந்நிகழ்ச்சிகள் முன்னரே வைகுந்தத்தில் நடந்துவிட்டனவாகவும், பின்னர் வசிட்டர் அவற்றை மனத்தால் நினைந்து, தசரதனுக்குக் கூறாது தம் மனத்தில் அடக்கிக் கொண்டு, அவற்றை நடைமுறையில் செயற்படுத்துவதற்கு வேண்டிய வழிவகைகளை ஆராய்ந்து, தசரதனுக்கு யாகம் நடத்துதற்கு உரிய ஆலோசனைகளைக் கூறினர் என்றும் கதையை அமைத்திருப்பது, படிப்பவர்கள் மனத்தை மகிழ்வூட்டுவதாகவும் அறிவுக்குப் பொருத்தமாகவும் விளங்குகிறது.

கம்பர் இப்படலத்திற் காட்டும் கதையமைப்பு வியக்கத்தக்க முறையில் இன்பம் ததும்பி இலங்குகிறது. தசரதன் தனக்குப் புத்திரனில்லாக் குறையை வசிட்டரிடம் கூறி வருந்துகிறான். அப்பொழுது வைகுந்தத்தில் முன் நிகழ்ந்த நிகழ்ச்சியொன்றை வசிட்டர் தம் கருத்திற்குக் கொண்டுவந்து மனத்தால் காண்கிறார்.

அது யாதெனில், இராவணனுல் துன்புறுத்தப்பட்ட தேவர்கள், சிவனிடத்திற் சென்று முறையிட்டனர். அதற்குச் சிவன் அவர் களைத் திருமாலிடம் திருப்பிவிடுகிருர். தேவர்கள் பிரமனிடம் சென்று அதனைத் தெரிவிக்கவும், பிரமன் அவர்களை அழைத்துக் கொண்டு வைகுந்தம் செல்கிருன். வைகுந்த வாசலையடைந்து அவர்கள் திருமாலைத் தியானிக்கவும், திருமால் கருடனில் வந்து காட்சியளிக்கிருர். தேவர்களுடைய துன்பத்தைப் போக்கத் தாமும் தம் சங்கமும் சக்கரமும் அமளியாகிய ஆதிசேடனும் தசரதபுத்திரர் நால்வராகப் பூமியில் வந்து பிறப்பதாக வரம் கொடுத்துப் போகிருர். பின்னர், பிரமன் கட்டளைப்படி மற்றைத் தேவர்களும் தத்தம் அமிசங்கள் வெவ்வேறு வானர வீரர்களாய்ப் பிறக்கும் இயல்பினைக் கூறித் தங்கள் இடங்களுக்குச் செல்கின் றனர். இது வைகுந்தத்தில் நடந்த நிகழ்ச்சி.

இதை முன்னரே உணர்ந்திருந்த வசிட்டர் மனத்தால் நினைந்து கொண்டு, கலைக்கோட்டுமுனியைக் கொண்டு யாகம் நடத்தி ஞல் புத்திரப்பேறு உண்டாகும் என்று கூறவும், தசரதன் மீண்டும் வினவ, வசிட்டர் கலைக்கோட்டுமுனியின் வரலாற்றைக் கூறு கிருர். உடனே தசரதன் அங்கநாட்டிற்குச் செல்கிருன். அங்க நாட்டரசன் உரோமபதன் அவனை எதிர்கொண்டழைத்து வருகி ருன். தசரதன் குறையைக் கேட்ட உரோமபதன் தானே கலைக் கோட்டுமுனியை அயோத்திக்கு அழைத்துவருவதாகச் சொல்கி ருன். தசரதன் முன்னுல் அயோத்திக்கு மீள்கிருன். பிறகு உரோமபதன் கலைக்கோட்டு முனியின் இசைவைப் பெற்றுச் சாந்தையுடன் அவனை அயோத்திக்கு அழைத்துச் செல்கிருன்; தசரதன் அவர்களை எதிரேற்றுக் கொள்கிருன். கலைக்கோட்டு முனி ஓராண்டு அசுவமேதம் நடத்திப் பின் மகவருளாகுதி வழங்கி ஞர். ஓமத்தீயில் ஒரு பூதம் எழுந்து அமுதமொத்த ஒரு பிண்டத் தைப் பொன்தட்டில் ஏந்திவந்து தரையில் வைத்து மறைகிறது. கலைக்கோட்டுமுனியின் ஏவலால், தசரதன் அப் பிண்டத்தில் கோசலைக்கு ஒரு பங்கும், கைகேயிக்கு ஒரு பங்கும், சுமித்திரைக்கு ஒருபங்குமாகக் கொடுத்துவிட்டுப் பின்னரும் பிதிர்ந்து எஞ்சிய தைத் திரட்டி நான்காவது பங்காகச் சுமித்திரைக்கே கொடுத் தான். பின்னர் எல்லார்க்கும் தட்சிணை கொடுத்து அரசவையை அடைந்த தசரதன் வசிட்டரை முறைப்படி வணங்கிக் கலைக் கோட்டுமுனிக்கும் முகமன் கூறினுன். கலைக்கோட்டுமுனியும் மற்றையோரும் விடைபெற்றுச் சென்றனர். பின்னர், தேவிமார் கருவுற்று, உரிய காலத்தில் நான்கு புதல்வரையும் ஈன்றனர். வசிட்டன் அவர்களுக்கு இராமன், பரதன், இலக்குவன், சத்துருக்கன் என்ற பெயர்களைச் சூட்டினுன். அந்நான்கு

குழந்தைகளும் நன்கு வளர்ந்து பல வித்தைகளையும் கற்று, நகர மக்களிடத்துப் பேரன்புடையவர்களாய் வாழ்ந்து வந்தார்கள் என்று கம்பர் இப்படலத்திற் கதையை அமைத்துப் பாடியுள்ளார்.

திருமால் தனக்கு நான்குபுதல்வர்களாக வந்து அவதரிக்கப் போகிறுர் என்ற உண்மையைத் தசரதன் சுமந்திரன்வாயிலாக உணர்ந்திருந்தான் என்று வான்மீகம் கூறுகிறது. அவ்வாறு உணர்ந்திருப்பது உலகியலில் மகன்-தந்தைக்குள்ள இயல்பான தொடர்பின் போக்கைத் தடைப் படுத்தக்கூடும் என்று நன்கு உணர்ந்து கம்பர் அவ்வாறு கூருது விடுத்திருக்கிறுர். மேலும், வான்மீகத்தில் திருமால் தம்மை நான்கு பாகங்களாகச் செய்துகொண்டு தசரதனுக்கு நான்கு குமாரர்களாய் வந்து பிறந்தார் என்று காணப்படுகிறது. அதற்கு மாருக, கம்பர், திருமால் இராமனுகவும், அவருடைய சக்கரம் பரதனுகவும், சங்கம் சத்துருக்கனுகவும், ஆதிசேடன் இலக்குவனுகவும் வந்து பிறந்தனர், என்று தெளிவுபடக் கூறியுள்ளார்.

சிவன், தன்னிடம் வந்து முறையிட்ட தேவர்களிடம் தாம் இராவணனை அடுவதில்லை என்றும், திருமாலிடம் சென்று தெரிவிக்கும்படியும் கூறியதாக 12, 27-என்னும் குறியீடுள்ள சுவடிகளில் காணப்படுகின்றது. இச்சுவடிகள் இரண்டும் பழமை வாய்ந்தனவாய் நல்ல பாடங்களைக் கொண்டனவாய் விளங்குகின்றன. மற்றச்சுவடிகளில் அங்ஙனமில்லாது சிவனும் தேவர்களுடன் சென்று முதலில் பிரமனிடம் குறையிரந்ததாகவும், பின் பிரமன் கட்டளைப்படி திருமாலிடம் சென்று முறையிட்டதாகவும் பாடங்கள் இடைச்செருகலாகச் சேர்த்தும், புகுத்தியும். திருத்தியும் வேண்டுமென்றே மாற்றியமைக்கப்பட்டுள்ளன. இப்பாடங்கள் சிவனைத் திருமாலின்முன் விழுந்து பணிந்து எழுந்து நின்று குறைபடும்படியாகச்செய்து அம்முறையால் திருமாலுக்கு ஓர் ஏற்றம் கற்பிப்பதற்காகப் புகுத்தப்பட்டவையாகவும், சைவ மக்களின் மனங்களைப் புண்படுத்துபவையாகவும் தெரிகின்றன. இது கம்பருடைய கொள்கைக்கு ஒவ்வாத தொன்று. திருமாலுக்கு இயல்பாகவே உள்ள சிறப்பு என்றும் அழியாதது. அதற்காக இத்தகைய வேண்டாத வழிகளை ஒரு சிலர் கையாண்டிருப்பது வருந்தத்தக்கது. திருமாலுக்கு இயல்பாகவே உள்ள இறைமைக்குணம் ஒருநாளும் குறையாது, மறையாது. சிவபெருமானைக் குறைபடுத்தித்தான் திருமாலுக்கு ஏற்றம் ஊட்ட வேண்டும் என்பதில்லை. கம்பருடைய கருத்தையும் போக்கையும் நாம் காவியம் முழுதிலும் தொடர்ந்து சென்று காணும்போது, எந்தச் சமயத்தையும் எந்தக் கடவுளையும் எவ்விதத்திலும் இழிவுபடுத்த

வேண்டும் என்பது அவர் எண்ணமாகத் தோன்றவில்லை. பல சமயங்களினுடைய ஒருமையையும் பொதுமையையும் அவர் ஆங்காங்கு எடுத்துக் கூறத் தயங்கியதில்லை. 'அரனதிகனுல களந்த வரியதிக னென்றுரைக்கு மறிவிலார்க்குப், பரகதி சென்றடை வரிய பரிசேபோல்' என்று கிட்கிந்தாகாண்டம் நாட விட்ட படலத்தில் சிறப்பாகப்பாடிய கவிஞர்பெருமான் இவ்வாறு சிவனைக் குறைவுறப் புகுத்திப் பாடியிருக்கமாட்டார் என்பது திண்ணம். மேலும், கம்பர் சிவபிரானிடத்தில் அதிகப்பற்றும் மதிப்பும் கொண்டவர் என்பதற்கும் சிவனுடைய இயல்புகளை நன்கு விரிவாக உணர்ந்திருந்தார் என்பதற்கும் சான்ருக நூற்றுக்கணக்கான குறிப்புக்களை இந்நூலினிடையே காணலாம், கம்பரே இராவணனுடைய சிவபத்தித்திறமையை,–

"கூடி நான்குயர் வேலையுங் கோக்கநின்
ரூடி னன்புக ழங்கை நரம்பினல்
நாடி நாற்பெரும் பண்ணு நயப்புறப்
பாடி னன்புகழ் பாடுகின் றூர்சிலர்."

(ஊர்தேடுபடலம்)

என்று அழகாகப் பாடியுள்ளார். இக்காரணம் பற்றியே, சிவனும், தான் இராவணனை அடுவதில்லை என்று கூறித் தேவர்களைத் திருமாலிடம் அனுப்பியுள்ளதாக வந்துள்ள பாடமே மிகவும் பொருத்த முடையது.

எல்லாச் சமயத்தவரும் விரும்பிக் கற்கக்கூடிய காவியம் கம்பருடைய இராமாவதாரம். கவிச்சக்கரவர்த்தி யென்றும், கல்வியிற்பெரியன் என்றும் எல்லாராலும் போற்றப்படும் கம்பர் நூலின் தொடக்கத்திலேயே, சைவமக்களைப் புண்படுத்தும் விதத்தில் சிவனுக்கு ஓர் இழிவினைக்கற்பித்துக் கவிபாடியிருக்க மாட்டார் என்பது உறுதி. வான்மீகத்திலும் அதற்கு எந்த விதமான ஆதாரமும் கிடையாது. அங்கு ஏகாதசருத்திரர்களைக் குறித்துள்ளாரே தவிர, சிவபெருமான் திருமாலிடம் சென்றதாகவாவது, குறையிரந்ததாகவாவது யாதொரு குறிப்பும் கிடையாது. நல்ல வேளையாக மேலே குறித்த இரண்டு சுவடிகளின் நல்ல பாடங்கள் நமக்குக் கிடைத்தன. அவை கம்பருடைய உண்மைக் கருத்தையும் பாடங்களையும் உணர்ந்து கொள்வதற்கு உறுதுணையாகவும் அமைந்தன. அவற்றிற் கண்ட திருந்திய பாடங்களே இங்கு மூல பாடங்களாக வேண்டும் இடங்களில் தரப்பட்டுள்ளன. ஏனைப் பாட வேறுபாடுகளைப் பிற்சேர்க்கையிற் காணலாம். உண்மையை அறிஞர்கள் உணர்ந்து போற்றுவார்களாக.

# 5. திருவவதாரப் படலம்

புதல்வரில்லாக்குறையைத் தசரதன் வசிட்டனுக்குக்கூறுதல்
180—183

**180.** ஆயவ னொருபக லயனை யேநிகர்
தூயமா முனிவனைத் தொழுது தொல்குலத்
தாயருந் தந்தையுந் தவமு மன்பினால்
மேயவான் கடவுளும் பிறவும் வேறுநீ.

ஆயவன், ஒரு பகல், அயனையே நிகர்
தூய மா முனிவனைத் தொழுது, 'தொல் குலத்
தாயரும், தந்தையும், தவமும், அன்பினால்
மேய வான் கடவுளும், பிறவும், வேறும் நீ.'

பொ :—அத்தன்மைகளையுடையவனாகிய தசரதன் ஒருநாள், நான்முகனையே யொத்த தூய்மையையுடைய சிறந்த இருடியாகிய வசிட்டமுனிவனைத் தொழுது, பழமையான குடியிற் பிறந்த தாய்மார்களும், தந்தையும், தவமும், பக்தியினால் அடையப் படுகின்ற சிறந்த கடவுளும், (மற்றும் இம்மைக்கு உறுதி தருகின்ற) பிறபொருள்களும் (மறுமைக்கு உறுதிதரும்) வேறான பொருள் களும் (எனக்கு) நீயே ஆவாய்.

கு:—ஆயவன்-(முன் அரசியற் படலத்திற் கூறப் பட்ட தசரதனாகிய) அத்தன்மைகளையுடையவன். ஈன்றவளாகிய நற்றாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித் தாய் எனத் தாய்மார் ஐவராதல்கொண்டு, தாயரும் என்றான். தாயால் தந்தையை அறிந்தும், தந்தையால் குருவைப் பெற்றுத் தவம் அடைந்தால், தவத்தால் கடவுளையடைதலும்பற்றி அம்முறையே கூறினான் என்க. பிறவும், வேறும் என இரண்டாகக் கூறியது இம்மை மறுமைகளை நோக்கி என்க். வசிட்டன் பிரமாவின் மகனாதலால், அயனையே நிகர்ப்பவன் என்றார். மக்கட்செல்வம் அளிக்க வல்ல வழிவகுப்பவன் வசிட்டன் ஆதலின், படைப்புக் கடவுளை உவமை கூறுதல் மிகவும் ஏற்புடையதாகும். வசிட்டன் சூரிய குலத்தரசர்க்குக் குருவும் அமைச்சனு மாவன். தசரதனுடைய தந்தையின் பெயர் அஜன் என்பதும் இங்கே நினைத்தல்

தகும். 'தாயரும் தந்தையும் தவமும் கடவுளும் பிறவும் மற்றவர்க்கு வேறு வேருகும்; எனக்கு இவை எல்லாம் நீயே என்ருன் என்பது கருத்து. (1)

**181.** எங்குலத் தலைவர்க ளிரவி தன்னினும்
தங்குலம் விளங்குறத் தரணி தாங்கினுர்
மங்குந ரில்லென வரம்பில் வையகம்
இங்குநின் னருளினு லினிதி னேம்பினேன்.

'எம் குலத் தலைவர்கள் இரவி தன்னினும்
தம் குலம் விளங்குறத் தரணி தாங்கினுர்,
மங்குநர் இல் என; வரம்பு இல் வையகம்,
இங்கு, நின் அருளினுல், இனிதின் ஓம்பினேன்.'

பொ:—எங்கள் குலத்தரசர்கள். (ஒளி) மழுங்கினவர்கள் (எவரும்) இல்லை என்னும் படி, சூரியனை விட (மிகுதியாகத்) தங்கள் குலம் (புகழால்) பிரகாசிக்கும்படியாக இவ்வுலகை ஆண்டனர்; இப்பொழுதும் (நான்) உனது அருளினுல் எல்லையில்லாத இந்நில வுலகை இனிதாகவே ஆண்டுவந்திருக்கின்றேன்.

கு:—எம் குலத்தலைவர்கள், மங்குநர் இல் என, இரவி தன்னிலும் தம் குலம் விளங்குறத் தரணி தாங்கினுர்; இங்கும் நின் அருளினுல் வரம்பு இல் வையகம் இனிதின் ஓம்பினேன், எனக் கூட்டுக. (2)

**182.** அறுபதி னுயிர மாண்டு மாண்டுற
உறுபகை யொடுக்கியிவ் வுலகை யோம்பினேன்
பிறிதொரு குறையிலை யெற்பின் வையகம்
மறுகுறு மென்பதோர் மறுக்க முண்டரோ.

'அறுபதினுயிரம் ஆண்டு மாண்டுற,
உறு பகை ஒடுக்கி, இவ் உலகை ஓம்பினேன்;
பிறிது ஒரு குறை இலை; என் பின் வையகம்
மறுகுறும் என்பது ஓர் மறுக்கம் உண்டு, அரோ.'

பொ:—''அறுபதினுயிரம் ஆண்டுகள் கழியும்படி, மிக்க பகைவர்களை அடக்கி இவ்வுலகை ஆண்டுவந்தேன்: (எனக்கு) வேருெரு

குறையும் இல்லை; எனக்குப்பிறகு இவ்வுலகம் (காப்பவரில்லாமையால்) கலங்குமே என்ற கவலைதான் (எனக்கு) உள்ளது.''

கு:—இவ்வாறு தசரதன் வசிட்டனிடம் தொடர்ந்து கூறினன் என்க. மறுகுறும் - கலங்கும். மறுக்கம்-கவலை. அரோ: அசை. (3)

**183.** அருந்தவ முனிவரு மந்த ணாளரும்
வருந்துத லின்றியே வாழ்வின் வைகினர்
இருந்துய ருழக்குவ ரெற்பி னென்பதோர்
அருந்துயர் வருத்துமென் னகத்தையென் றனன்.

'அரும் தவ முனிவரும், அந்தணாளரும்
வருந்துதல் இன்றியே வாழ்வின் வைகினர்,
இரும் துயர் உழக்குவர் என் பின், என்பது ஓர்
அரும் துயர் வருத்தும் என் அகத்தை' என்றனன்.

பொ :—''(இப்போது) துன்புறுதலில்லாமல் (நல்) வாழ்வில் தங்கியிருப்பவர்களாகிய அரிய தவங்களையுடைய இருடிகளும் அந்தணர்களும் எனக்குப்பிறகு மிக்க துன்பத்தையடைவார்களே என்பதாகிய (மாற்றற்கு) அரிய துன்பம் (ஒன்றுதான்) என் மனத்தை உளையச் செய்கிறது'' என்று கூறினன்.

கு: —தங்களைத் தாங்களே காத்துக்கொள்ள இயலாத முனிவர் முதலியோரைக் காத்தலே அரசாட்சியின் முதன்மையான நோக்கமாகக் கொண்டவன் தசரதன் என்பது இதனால் புலனாகிறது. மகனில்லாக் குறையைச் சொல்லமாட்டாது சொல்கிறான் தசரதன் என்க, (4)

இதன்பின் ஒரு சுவடியிற்கண்ட அதிகப்பாடல் வருமாறு:—

183 (௧) பொறையிலா வறிவும் போகப்
புணர்ப்பிலா விளமை மேவத்
துறையிலா வனசவாவி
தூசிலாக் கோலந் தூய்மை
நறையிலா மலருங் கல்வி
நலமிலாப் புலமை நன்னீர்ச்
சிறையிலா நகரும் போலும்
சேயிலாச் செல்வ மென்றான்.

திருமால்கொடுத்த வரத்தினை வசிட்டன் நினைத்தல் 184—185

**184.** முரசறை செழுங்கடை முத்த மாமுடி
அரசர்தங் கோமக னனைய கூறலும்
விரைசெறி கமலமென் பொகுட்டு மேவிய
வரசரோ ருகன்மகன் மனத்தி னெண்ணினான்.

முரசு அறை செழும் கடை முத்தம் மா முடி
அரசர்தம் கோமகன் அனைய கூறலும்,
விரை செறி கமலம் மென் பொகுட்டு மேவிய
வர சரோருகன் மகன் மனத்தின் எண்ணினான்.

பொ :—முரசு ஒலிக்கின்ற பெரிய அரண்மனைவாயிலையுடைய, முத்துப்பதித்த பெரிய கிரீடத்தை யணிந்த அரசர்க்கரசனாகிய தசரதன் அவ்வார்த்தைகளைச் சொன்ன அளவில், மணம் நிறைந்த மெல்லிய தாமரை மலரின் கொட்டையிலே தங்கிய சிறந்த நான் முகனின் மகனான வசிட்டன் மனத்திற்குள் நினைக்கலானான்.

கு :—வசிட்டன் மனத்தின் எண்ணியது, அடுத்துவரும் செய் யுளிற்கண்ட 'உரைத்த வாய்மையை' என்க. உரைத்த வாய் மையை மனத்தின் எண்ணினான் எனக்கூட்டுக.

பொகுட்டு – தாமரைமலரிலுள்ள கொட்டை; சரோருகம் – தாமரை, சரோருகன் – (திருமாலின் உந்திக்)கமலத்தில் வாழ்பவ னாகிய பிரமன்; வசிட்டன் பிரமனின் மகன். (5)

**185.** அலைகட னடுவணோ
ரனந்தன் மீமிசை
மலையென விழிதுயில்
வளரு மாமுகில்
கொலைதொழி லரக்கர்தங்
கொடுமை தீர்ப்பெனென்
றுலைவுறு மமரருக்
குரைத்த வாய்மையை.

அலைகடல் நடுவண் ஓர் அனந்தன் மீமிசை
மலை என விழி துயில் வளரும் மா முகில்,
'கொலை தொழில் அரக்கர் தம் கொடுமை தீர்ப்பென்' என்று,
உலைவு உறும் அமரருக்கு உரைத்த வாய்மையை.

பொ :—அலைகின்ற திருப்பாற்கடலினது நடுவிலே ஒப்பற்ற அனந்தன் (என்னும் பாம்பின்) மேல் (நீல)மலைபோல அறிதுயிலமர்கின்ற கரிய மேகம் போன்ற திருமால் 'கொல்லுந் தொழிலையுடைய (இராவணன் முதலிய) அரக்கர்கள் புரிகின்ற தீங்கினை ஒழிப்பேன்' என்று வருந்துகின்ற தேவர்களுக்குச் சொன்ன (அபய)மொழியை (மனத்தின் எண்ணினான் என மேலைச் செய்யுளோடு இயைத்துக் கூட்டுக).

கு:—விழிதுயில்வளரும் - அறிதுயில்கொள்ளுகின்ற: விழித்துக்கொண்டே தூங்குதலை 'விழிதுயில் வளரும்' என்றார், (6)

## வசிட்டன் மனத்திற்கருதிய தேவலோக நிகழ்ச்சிகள் 186-208

**186**; சுடுதொழி லரக்கராற்
றுலைந்து வானுளோர்
கடுவமர் களனடி
கலந்து கூறலும்
படுபொரு ளுணர்ந்தவப்
பரமன் யாமினி
அடுகில மாயனோ
டறைதி ரென்னவே.

சுடு தொழில் அரக்கரால் தொலைந்து, வான் உளோர்,
கடு அமர் களன் அடி கலந்து கூறலும்,
படு பொருள் உணர்ந்த அப் பரமன், 'யாம் இனி
அடுகிலம், மாயனோடு அறைதிர்' என்னவே.

பொ :—விண்ணுலகத்திலுள்ள (இந்திரன்முதலிய) தேவர்கள், (பிறரை) வருத்தும் தொழிலையுடைய அரக்கர்களால் தோல்வியுற்று (வருந்தி), நஞ்சு பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமானது திருவடிகளை யடைந்து விண்ணப்பிக்கவும், (இறப்பும் நிகழ்வும் எதிர்வுமாகிய முக்காலத்தும்) நிகழும் செய்திகளை உணர்ந்தவனாகிய மேலான அவ்விறைவன், 'இப்பொழுது நானே சென்று (அவ்வரக்கர்களைக்) கொல்வதாக (எண்ணம்) இல்லை: திருமாலினிடத்திலே சென்று கூறுங்கள்' என்று ஏவினானாக.

கு: —ஏவினானாக அதன்மேல் தேவர்கள் செய்த செயல் அடுத்த பாடலில் தொடர்ந்து கூறப்படும்.

கடு - விடம்; களம் - கண்டம்; களன் - கண்டத்தையுடையவன்; கலந்து - பணிந்து; பொருந்தி என்றவாறு; படுபொருள் - (முக்காலத்தும்) நிகழக்கூடிய நிகழ்ச்சிகள்: இங்கே படுபொருள் உணர்தலாவது, திருமால் இராமாவதாரம் எடுக்கவேண்டிய எதிர்கால அமைப்பினை உணர்தல் என்க; நடந்த செய்திகளைத் தேவர்களே கூறி முறையிட்டார்களாக, அவற்றைப் பரமன் உணர்ந்தான் எனக்கூறுதல் சிறப்பாகாமை அறிதற்பாலது. தேவர்களிடத்தும் பிறவுயிர்களிடத்தும் பேரருள் சுரந்து ஆலகால விடத்தினை யயின்று கண்டத்தடக்கினமை பற்றிக் 'கடுவமர்களன்' என்றார்.

இராவணன் கடுமையான தவங்களைச்செய்து சிவனிடத்தில் மிகப்பெரிய வரங்களையெல்லாம் பெற்றிருந்தநிலையில், தானே நேரில் சென்று அவனை அழிப்பது பொருத்தமாகாது எனக்கருதியும், திருமாலின் இராமாவதாரத்தைக்கருதியும், நான் அரக்கரைக் கொல்லமாட்டேன்' என்று கூறினன்.

இனி - இப்பொழுது: 'கேளினி' மலைபடுகடாம். (7)

187 கறைமிடற் றிறைசொலக்
கடவு ளோர்களும்
மறைதெரி முனிவரும்
வச்சி ராயுதத்
திறைவனும் வணங்கிநின்
றெழுந்து போந்துயர்
நறைமல ரவனிட
நண்ணன் மேயினர்.

**கறை மிடற்று இறை சொலக், கடவுளோர்களும்,**
**மறை தெரி முனிவரும், வச்சிராயுதத்து**
**இறைவனும், வணங்கி நின்று, எழுந்து போந்து, உயர்**
**நறைமலரவன் இடம் நண்ணல் மேயினர்.**

போ :—(ஆலகால நஞ்சினால்) கறைபெற்றுள்ள கண்டத்தையுடைய இறைவனாகிய சிவபெருமான் (அவ்வாறு) அருளவும், தேவர்களும், வேதங்களைக் கற்ற முனிவர்களும், வச்சிரப்படையைக்கொண்டவனாகிய இந்திரனும் (சிவனை விழுந்து) வணங்கி எழுந்து, அவ்விடத்தினின்றும் புறப்பட்டு, வாசனையுள்ள தாமரை

மலரில் விற்றிருப்பவனுகிய பிரமனின் இடமாகிய மனோவதியைச் சென்றடைந்தனர்.

கு:—மகாமேருமலையின் நடுவுச்சியில் மனோவதியிருப்பதாக அடுத்தபாடலிற் கூறப்படும்.

சிவபெருமான் கூறியவாறு திருமாலினிடம் சென்று தெரிவிப்பதற்கு நான்முகனுடைய உதவியை நாடி மனோவதிக்குத் தேவர்கள் சென்றனர் என்றவாறு. (8)

188. வடவரைக் குடுமியி னடுவண் மாசறு
சுடர்மணி மண்டபந் துன்னி நான்முகக்
கடவுளை யடிதொழு தமரர் கண்ணுதல்
உடையவ னருளிய துரைத்திட் டாரரோ.

வடவரைக் குடுமியின் நடுவண் மாசு அறு
சுடர் மணி மண்டபம் துன்னி, நான்முகக்
கடவுளை அடிதொழுது, அமரர், கண் நுதல்
உடையவன் அருளியது உரைத்திட்டார், அரோ.

பொ :—தேவர்கள் வடதிசையிலிருக்கும் மேருமலையின் உச்சியின் நடுவில் (மனோவதியென்னும் நகரின்கண்ணுள்ள) குற்றமில்லாத ஒளியையுடைய இரத்தினங்கள் அழுத்திய மண்டபத்தை அடைந்து, நான்கு முகங்களையுடைய பிரமனின் அடிகளை வணங்கி நெற்றிக்கண்ணையுடையவனுகிய சிவபெருமான் அருளிச் செய்ததைத் தெரிவித்தார்கள். (9)

189. பாகசா தனன்றனைப் பாசத் தார்த்தடல்
மேகநா தன்புகுந் திலங்கை மேயநாள்
சேகற மீட்டவோ திமனும் தேவரும்
ஏகியே வைகுந்த வாயி லெய்தினர்.

‘பாகசாதனன் தனைப் பாசத்து ஆர்த்து, அடல்
மேகநாதன், புகுந்து, இலங்கை மேய நாள்
சேகு அற மீட்ட ஓதிமனும், தேவரும்,
ஏகியே, வைகுந்த வாயில் எய்தினர்.

பொ:—வலிமையுள்ள மேகநாதன் (என்னும் இராவணன் மகன் தேவலோகத்துட்) புகுந்து இந்திரனைக் கயிற்ருற் கட்டி

இலங்கைக்குக் கொண்டுசென்ற (அந்)நாளில், தீங்கு நேராதவண்ணம் (அவ்விந்திரனை) மீட்டுக் கொடுத்தவனான அன்னவாகனத்தையுடைய பிரமனும் (மற்றும்) தேவர்களும் (அங்கிருந்து) சென்று (திருமால்வதிகின்ற) வைகுந்தத்தின் வாசலை அடைந்தார்கள்.

கு :—பாகசாதனன்—தேவேந்திரன். மேகநாதன் - இந்திரசித்து. இராவணன் நடத்திய திக்குவிசயத்தின்போது அவனுடைய மூத்தமகனான மேகநாதன் அமராவதியினுள்ளே புகுந்து இந்திரனைப் பாசத்தாற் பிணித்துச் சிறைசெய்து இலங்கைக்குக் கொண்டுசென்றான். அதனையுணர்ந்த நான்முகக்கடவுள் மேகநாதனிடம் இந்திரனுக்காகப் பரிந்துபேசி, ''நீ இந்திரனை வென்றதால் இந்திரசித்து என்னும் பெயரோடு விளங்குவாயாக'' என்று வரமளித்து அவ்விந்திரனைச் சிறைவிடுவித்தான் என்று உத்தர ராமாயணத்திற் கூறப்படும். (10)

இதன்பின் சில சுவடிகளில் ஓர் அதிகப்பாடல் பின்வருமாறு காணப்படுகிறது:—

189 (a) என்றினைய பலபல வியம்பி யெங்கணும்
கன்றிய வரக்கரை யழித்துக் காத்தியேல்
ஒன்றிய வுயிர்களு முலகம் யாவையும்
இன்றுநீ படைத்தவென் றிசைத்துப் பின்னரும்.

**190.** இருபது கரந்தலை
யீரைந் தென்னுமத்
திருவிலி வலிக்கொரு
செயலின் றெங்களால்
கருமுகி லெனவளர்
கருணை யங்கடல்
பொருதிடர் தணிக்கினுண்
டெனும்பு ணர்ப்பினால்,

'இருபது கரம், தலை ஈர் ஐந்து என்னும் அத்
திரு இலி வலிக்கு ஒரு செயல் இன்று எங்களால்,
கரு முகில் என வளர் கருணை அம் கடல்
பொருது இடர் தணிக்கின் உண்டு' எனும் புணர்ப்பினால்.

பொ :—(அவ்வாறு வைகுந்தவாயிலை எய்திய ஓதிமனும் தேவர்களும்) 'கைகள் இருபதும் தலைகள் பத்தும் என்று சொல்லப் படுகிற நல்வினையே யில்லாதவனான அந்த இராவணனது வன்மைக்கு (எதிராக) எங்களால் ஒரு செயலும் செய்வதற்கில்லை.' கரிய மேகம்போலத் திருக்கண்வளர்ந்தருளுகிற அழகிய அருட் கடலாகிய திருமால் (அவனுடன்) போர்செய்து (ஒழித்து) துன்பத்தைப் போக்கினால் (எமக்கு வாழ்வு) உண்டு' என்னும் சூழ்ச்சியோடு.

கு:—இது முதல் மூன்று பாடல் குளகம், அடுத்து வரும் செய்யுளோடு தொடர்பு படுத்திக் கூட்டுக.

திரு–நல்வினை. 'சேர்ந்தெழு நங்கை மாரே திருநங்கை மார்கள்' சீவக சிந்தாமணி–2552. புணர்ப்பு-சூழ்ச்சி. (11)

இதன்பின் சில சுவடிகளில் மூன்று அதிகப்பாடல்கள் காணப் படுகின்றன.

[45-ஆம் சுவடியில்]

190 (a) ஆயவ ரயன்முத லமர ரீறிலா
நாயக னிருபத நயந்து சிந்தைமீ
தோய்விலா தவனரு மறைக ளோதியே
நேயமோ டிருந்திவை நிகழ்த்தன் மேயினர்.

[12–15, 19–21, 23, 25, 27, 28, 29, 45 – ஆம் சுவடிகளில்]

190 (b) காத்தி நீயெமைக் காக்கிலர் தம்மையாம்
ஏத்தி யேயிளைத் தோமிறை வாவிடர்ப்
பார்த்தி யோதிருப் பாற்கடற் பள்ளியின்,
மூர்த்தி யேமுதல் வாமுகின் மேனியாய்.

[45-ஆம் சுவடியில்]

190 (c) அந்த காரத் தரக்கர்செய் தீமையால்
நொந்து ளோமிறை வாநொடிப் போதினில்
வந்து மாற்றிடும் வண்ண மெமக்கருள்
எந்தை யேகரு ணாகர னேயென.

191. திரைகெழு பயோததித்
துயிலுந் தெய்வவான்
மரகத மலையினை
வழுத்தி நெஞ்சினாற்

கரகம லங்குவித்
திருந்த காலேயிற்
பரகதி யுணர்ந்தவர்க்
குதவும் பண்ணவன்,

திரைகெழு பயோததித் துயிலும் தெய்வ வான்
மரகத மலேயினே வழுத்தி நெஞ்சினுல்,
கர கமலம் குவித்து இருந்த காலேயில்,
பரகதி உணர்ந்தவர்க்கு உதவும் பண்ணவன்

பொ :—செந்தாமரைமலர் போலும் (தமது) கைகளேக் கூப்பிக்கொண்டு, அலேகள் மிக்க திருப்பாற்கடலிலே அறிதுயில்கொள்கின்ற தெய்வத்தன்மையுள்ள பெரிய மரகதரத்தின மயமான மலேயைப் போன்ற திருமாலே மனத்தினுல் துதித்தபடியே (அவ்வோதிமனும் தேவர்களும்) இருந்தபொழுது, (தன்னே உள்ளபடி) அறிந்தவரான ஞானிகளுக்குப் பரமபதத்தைக் கொடுக்கும் கடவுளான அத் திருமால்.

கு :—பண்ணவன் 'வந்து தோன்றினுன்' என அடுத்த செய்யுளோடு இயைத்து முடிவுகொள்க.

பயோததி-பாற்கடல்; உணர்ந்தவர்-ஞானிகள்; பரகதி-பரமபதம். பண்ணவன்-கடவுள். (12)

இதன் பின் ஒரு சுவடியிற் கீழ்வரும் பாடல் காணப்படுகிறது:—

191 (a) 'அறிதுயி லெழுந்தன னமரர் கூப்பிடு
மறைமொழித் துதியொலி வந்தி சைக்கவே
நிறைகுணத் தமரர்க ணினேத் தழைப்பதை
இறைவனுந் திருவுளத் தறிந்தங் கெய்தவே.'

**192.** கருமுகி ருமரைக்
காடு பூத்துநீ
டிருசுட ரிருபுறத்
தேந்தி யேடவிழ்
திருவொடும் பொலியவோர்
செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல்
வந்து தோன்றினுன்.

கருமுகில் தாமரைக் காடு பூத்து, நீடு
இரு சுடர் இரு புறத்து ஏந்தி, ஏடு அவிழ்
திருவொடும் பொலிய, ஓர் செம்பொன் குன்றின் மேல்
வருவ போல், கலுழன் மேல் வந்து, தோன்றினன்.

பொ :—(பண்ணவன்) நீல மேகமானது (தன்னிடத்தே) செந்தாமரை மலர்த்தொகுதி மலரப்பெற்று, (சூரிய சந்திரர் என்னும்) இரண்டு பெரிய சோதிகளையும் (தன்) இரண்டு பக்கங்களிலே பிடித்துக்கொண்டு, ஒரு செம்பொன்மலைமீது ஏறி வருவது போல, விரிந்த இதழ்களையுடைய தாமரைமலரில் வாழ்கின்ற இலக்குமிதேவியுடனே, கருடன்மேல் (ஏறி) வந்து (ஓதிமனுக்கும் தேவர்களுக்கும்) காட்சிகொடுத்தருளினன்.

கு :—காடு – திரள்; 'ஆம்ப லாய்மலர்க் காடு,' சீவகசிந்தாமணி, நச்சினார்க்கினியர் உரை; 'செந்தாமரைக்காடனையமேனி' எனத் திருவாசகத்தும் வருதல் காண்க. நீடு – பெரிய; இருசுடர் – சூரியசந்திரர். ஏடு – இதழ்: சினையாகுபெயர் ; இங்கே தாமரை மலரைக் குறித்தது. (13)

**193.** எழுந்தனர் விண்ணவர்க்
கிறையுந் தாமரைச்
செழுந்தவி சுகந்தவத்
தேவுஞ் சென்றெதிர்
விழுந்தன ரடிமிசை
விண்ணு ளோரொடும்
தொழுந்தொறுந் தொழுந்தொறுங்
களிது ளங்குவார்.

எழுந்தனர் விண்ணவர்க்கு இறையும், தாமரைச்
செழும் தவிசு உகந்த அத் தேவும், சென்று எதிர்
விழுந்தனர் அடிமிசை விண்ணுளோரொடும்,
தொழும் தொறும் தொழும் தொறும் களி துளங்குவார்.

பொ:—(உடனே) வளப்பமான தாமரைமலரை அணையாக விரும்பிக்கொண்ட கடவுளாகிய அந்தப் பிரமனும், தேவர்களின் தலைவனாகிய இந்திரனும் (மற்றுமுள்ள) தேவர்களோடு எழுந்து (திருமாலின்) முன்சென்று அவன் திருவடிகளில் விழுந்து பல முறையாக வணங்கி வணங்கிப் பெருமகிழ்வால் அசைதலுறுவாராயினர்.

கு :—செழுந் தாமரைத் தவிசு உகந்த அத்தேவும், விண்ணவர்க்கு இறையும், விண்ணுளோரொடும் எழுந்தனர் (ஆய்). எதிர்சென்று, அடிமிசை விழுந்தனர் (ஆய்), தொழும்தொறும் தொழும்தொறும் களிதுளங்குவார் (ஆயினர்), எனக் கூட்டுக.

துளங்குதல் - அசைதல், தொழுந்தொறுந்தொழுந்தொறும் என்றதால், பன்முறை வணங்கினர் என்று கொள்க. (14)

**194.** ஆடினர் பாடின ரங்கு மிங்குமாய்
ஓடின ருவகைமா நறவுண் டோர்கிலார்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலால்
சூடினர் முறைமுறை துளவத் தாண்மலர்.

ஆடினர், பாடினர், அங்கும் இங்கும் ஆய்
ஓடினர், உவகை மா நறவு உண்டு, ஓர்கிலார்,
'வீடினர் அரக்கர்' என்று உவக்கும் விம்மலால்,
சூடினர், முறை முறை, துளவத் தாள் மலர்.

பொ :—(தேவர்கள் எல்லாரும் அவ்வாறு) துளசியை யணிந்த (திருமாலின்) திருவடித்தாமரைமலர்களை (ஒருவர்மாற்றியொருவராக) முறைப்படியே (தங்கள்) தலையில் அணிந்துகொண்டு, அரக்கர்கள் (அப்பொழுதே) அழிந்தார்கள் என்று நினைத்து மகிழ்வதனாலாகிய பூரிப்பினால், மிக்க களிப்பாகிய கள்ளையுண்டு (இன்னது செய்வதென்று) உணராதவர்களாய் ஆடுவார்களும், பாடுவார்களும், அங்கும் இங்குமாய் ஓடுவார்களுமாயினர்.

கு :—மாஉவகை நறவு - மிக்க களிப்பாகிய கள். விம்மல் - பூரிப்பு; ஓர்கிலார் - உணராதவர்களாய், துளவத் தாள் மலர் - துளசியணிந்த திருவடித்தாமரை மலர்; திருமாலின் திருவடிகளை அடியார்கள் துளசிகொண்டு அர்ச்சித்து வழிபடுவதால் அவ்வாறு கூறினர். (15)

**195.** பொன்வரை யிழிவதோர்
புயலின் பொற்புற
என்னையா ளுடையவன்
றேணின் றெம்பிரான்

சென்னிவான் றடவுமண்
டபத்துச் சேர்ந்தரி
துன்னுபொற் பீடமேற்
பொலிந்து தோன்றினன்.

பொன்வரை இழிவது ஓர் புயலின் பொற்பு உற,
என்னை ஆள் உடையவன் தோள் நின்று, எம்பிரான்,
சென்னி வான் தடவு மண்டபத்துச் சேர்ந்து, அரி
துன்னு பொன் பீடம் மேல் பொலிந்து தோன்றினன்.

பொ :--பொன்னுலான மலையினின்றும் கீழ் இறங்குவதாகிய ஒரு கார்மேகத்தினது அழகு பொருந்த, எமது சுவாமியாகிய திருமால், என்னை ஆட்கொண்டவனாகிய கருடனுடைய தோள்களிலிருந்து (இறங்கி), வானளாவ ஓங்கிய உச்சியையுடைய மண்டபத்தை அடைந்து, சிங்கம் பொருந்திய பொன்னுலான ஆசனத்தின்மேல் விளங்கி வீற்றிருந்தருளினன்.

கு :—என்னை ஆளுடையவன் - என்னை அடிமை கொண்டவனாகிய கருடாழ்வான்; இறைவனுடைய அடியார்களுக்கு அடிமை செய்வதே பக்தனுடைய கடமையாதலாலும், கருடன் திருமாலின் அடியார்களுள் சிறந்த அடியவன் ஆதலாலும், எம்பெருமானை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்த பேருதவியைத் தமக்கும் உலகுக்கும் செய்தருளிய பெருந்தகையாதலாலும் அவ்வாறு கூறினர்: இதனல் ஆசிரியருக்குக் கருடனிடத்திலுள்ள மிகுதியான பற்று நன்கு புலனாகிறது.

இங்குப் 'பொன்வரை' கருடனுக்கு உவமையாகக் கூறப்பெற்றது. முன்னரும் 'கருமுகில் தாமரை' என்று தொடங்கும் பாடலிற் கருடனுக்குச் செம்பொற் குன்றை உவமித்தார். அரி துன்னு பொற்பீடம் :பொன் துன்னு அரி பீடம்– பொன்னுலாகிய அரியணை (சிம்மாசனம்). (16)

**196.** விதியொடு முனிவரும் விண்ணு ளோர்களும்
மதிதெரி குலிசியும் மற்று ளோர்களும்
அதிசய முடனுவந் தயலி ருந்துழிக்
கொதிகொள்வே லரக்கர்தங் கொடுமை கூறினர்.

விதியொடு, முனிவரும், விண்ணுளோர்களும்,
மதிதெரி குலிசியும், மற்றுளோர்களும்,
அதிசயமுடன் உவந்து அயல் இருந்துழி,
கொதி கொள் வேல் அரக்கர்தம் கொடுமை கூறினர்.

பொ :—பிரமனுடனே, தேவ இருடியரும், வானுலகத்திலுள்ள தேவர்களும், மதிப்பைத் தெரிவிக்கும் வச்சிராயுதப் படையையுடைய தேவேந்திரனும், மற்றும் அங்குள்ள வைகுந்தவாசிகளும் ஆச்சரியத்தோடு மகிழ்ச்சிகொண்டு அருகிலிருந்தபோது, கொதிக்கின்ற வேற்படையையுடைய அரக்கரின் கொடிய செயலை(ப் பின் வருமாறு) சொல்லலுற்றார்கள்.

கு :—பிரமன் முதலிய எல்லோரும் அதிசயமும் மகிழ்ச்சியும் அடைந்து, திருமாலின் அருகிருந்து அரக்கர்களின் கொடுஞ்செயல்களை எடுத்துக் கூறுவாராயினர் என்க. அவர்கள் கூறியன பின் வரும் பாடல்களிற் காணலாம்.

மதி – மதிப்பு: 'நீண்மதிக்குலிசம்', (இரகுவம்சம். யாகப்.92) 'மற்றுளோர்களும்' என்றது, பிரமன் முதலியோருடன் வாராமல், அங்கு வைகுந்தத்திலேயே இருந்தோரை. அவர்களும் திருமாலின் அருகே இருந்தார்கள் என்க. (17)

**197.** ஐயிரு தலையினோ னனுச ளுதியாம்
மெய்வலி யரக்கரால் விண்ணு மண்ணுமே
செய்தவ மிழந்தன திருவி ணுயக
உய்திற மில்லையென் றுயிர்ப்பு வீங்கினர்.

'ஐயிரு தலையினோன் அனுசன் ஆதியாம்
மெய் வலி அரக்கரால் விண்ணும் மண்ணுமே
செய் தவம் இழந்தன, திருவின் நாயக!
உய்திறம் இல்லை' என்று உயிர்ப்பு வீங்கினர்.

பொ:—"இலக்குமியின் கணவா! பத்துத்தலைகளையுடைய இராவணனும் (அவன்) தம்பியும் முதலான உடல் வலிமைகொண்ட அரக்கர்களால் வானிலுள்ளவர்களும் பூமியிலுள்ளவர்களும் (தாம்) செய்தற்குரிய தவங்களைச் செய்யமுடியாமல் இழந்து விட்டனர். (இனிப்) பிழைக்கும் வழியில்லை" என்று (அரக்கர் கொடுமையைச் சொல்லிப்) பெருமூச்சு விட்டனர்.

கு :—பிராட்டியினுடைய பெருங்கருணைத் திறத்தாலே தேவர் உய்வு பெற வேண்டியிருத்தலாலும், தேவியைப் பிரித்த பாவம்

வந்து அரக்கர் தொலைய வேண்டியிருத்தலாலும், என்றும் பிரியாத பிராட்டி அன்றும் பிரியாது திருமாலினுடன் வந்து இருத்தலாலும், பிராட்டியின் கடைக்கண் நோக்குத் தங்களுக்குக் கிடைக்கவேண்டியும், 'திருவின் நாயக' என்று விளித்தனர் என்க.

ஐயிருதலையினோன் - பத்துத்தலைகளைக்கொண்டவனான இராவணன்; அனுசன் - தம்பி (இராவணனது பின்பிறந்தோருள் வீடணனொழிந்த) கும்பகர்ணன். ஆதியாம் அரக்கர் என்றது, இந்திரசித்தும் மற்றும் உள்ளவர்களும். (18)

இதன்பின் ஒரு பிரதியிற் கீழ்க்கண்ட செய்யுள் வந்துள்ளது;-

197 (a) "வானவ ரவ்வுரை வழங்க மாமதி
தேனுறு மிதழியந் தெரியல் வேணியான்
ஆனவர் தமைக்கர மமைத்தங் கையனைத்
தான்முக நோக்கியே சாற்றன் மேயினான்."

**198.** எங்குநீள் வரங்களா
லரக்க ரென்றுளார்
பொங்குமூ வுலகையும்
புடைத்த ழித்தனர்
செங்கணு யகவினித்
தீர்த்த லில்லையேல்
நுங்குவ ருலகையோர்
நொடியி னென்றனர்.

**'எங்கும், நீள் வரங்களால், அரக்கர் என்று உளார்,**
**பொங்கும் மூவுலகையும் புடைத்து அழித்தனர்;**
**செங்கண் நாயக! இனித் தீர்த்தல் இல்லையேல்,**
**நுங்குவர் உலகை, ஓர் நொடியின்' என்றனர்.**

பொ :—'சிவந்த கண்களையுடைய தலைவனே! அரக்கர் என்று சொல்லப்பட்ட எவ்விடத்திலுள்ளவர்களும் (தங்களுடைய) பெரிய வரங்களின் ஆற்றலால் செழிக்கின்ற மூன்றுலகங்களையும் அடித்துக் கெடுக்கின்றார்கள்: இனியாவது (நீ அவர்களை) ஒழிக்காவிட்டால் (அவர்கள்) ஒரு நொடிப்பொழுதில் (மூன்று) உலகையும் விழுங்கிவிடுவார்கள்' என்று (தொடர்ந்து) கூறினர்.

கு :—'செங்கண் நாயக! அரக்கர் என்று எங்கும் உளார், நீள் வரங்களால், பொங்கும் மூவுலகையும் புடைத்து அழித்தனர்:

இனித் தீர்த்தல் இல்லையேல், ஓர் நொடியின் உலகை நுங்குவர்' என்றனர், எனக்கூட்டுக.

பிரமன் முதலியோர் கூறினர் என்க. இலங்கையிலுள்ள அரக்கர்களேயல்லாமல், மற்றுமுள்ள தாடகை, விராதன், கபந்தன் முதலியோரையும் உளப்படுத்தி, 'அரக்கர் என்று எங்கும் உளார்' என்றனர்.

நுங்குவர் – விழுங்குவர்; உலகை நுங்குவர் என்றது, உலகத் துயிர்களை உண்டுவிடுவர் என்றவாறு. (19)

199. என்றன ரிடருழந் திறைஞ்சி யேத்தலும்
மன்றலந் துளவினுன் வருந்தல் வஞ்சகர்
தந்தலை யறுத்திடர் தணிப்பன் றாரணிக்
கொன்றுநீர் கேண்மென வுரைத்தல் மேயினன்.

என்றனர், இடர் உழந்து இறைஞ்சி ஏத்தலும்,
மன்றல் அம் துளவினுன், 'வருந்தல்! வஞ்சகர்-
தம் தலை அறுத்து இடர் தணிப்பன் தாரணிக்கு:
ஒன்று நீர் கேண்ம்!' என உரைத்தல் மேயினன்.

பொ :—(தேவர்கள் அவ்வாறு)கூறினவர்களாய், துன்பத்தால் வருந்தி வணங்கித் துதித்தவளவில், மணம் வீசுகின்ற அழகிய துளசிமாலையையணிந்தவனாகிய திருமால், "(நீங்கள்) வருந்த வேண்டாம். வஞ்சனை செய்வோராகிய அரக்கர்களின் தலைகளைத் துண்டித்துப் பூமிக்குத் துயரத்தைக் களைவேன். (நான் சொல்லுவது) ஒன்றை நீங்கள் கேட்பீர்களாக!" என்று (மேலும்) சொல்லலானான்.

கு :—தாரணி – பூமி. தாரணிக்கு இடர் தணித்தலாவது, பூபாரம் களைதல். வஞ்சகர் தம் தலை தாரணிக்கு அறுத்து வஞ்சகர்களுடைய தலைகள் தரையில் விழும்படியாகத் துண்டித்து என்றும் பொருள் கொள்ளலாம். (20)

200. வானுளோ ரனைவரும் வான ரங்களாய்க்
கானினும் வரையினும் கடித டத்தினும்
சேனையோ டவதரித் திடுமின் சென்றென
ஆனன மலர்ந்தன னருளி னாழியான்,

'வான் உளோர் அனைவரும் வானரங்கள் ஆய்க்,
கானினும், வரையினும், கடி தடத்தினும்,
சேனையோடு அவதரித்திடுமின் சென்று!' என,
ஆனனம் மலர்ந்தனன், அருளின் ஆழியான்.

பொ :—''வானுலகிலேயுள்ள தேவர்கள் எல்லாரும் கூட்டமாய்க் காடுகளிலும் மலைகளிலும் நறுமணமுள்ள இடங்களிலும் (சோலைகளிலும்) போய்க் குரங்குகளாகப் பிறக்கக்கடவீர்கள்,'' என்று (கூறிக்) கருணையங் கடலாகிய திருமால் (மேலும்) முகம்மலர்ந்து கூறலானான்.

கு :—கடி - வாசனை ; தடம் - இடம் ; நறுமணமுள்ள சோலைகளைக் குறித்தது ; சேனையோடு - கூட்டமாக, அல்லது கூட்டங்களுடனே ; ஆனனம் - முகம். ஆழியான் என்பதற்குச் சக்கரப் படையையுடையவன் என்றும், திருப்பாற்கடலிற் பள்ளிகொள்பவன் என்றும், கடல் போன்று கருநிறமுடையவன் என்றும் பல வாறாகப் பொருள் கொள்ளலாம். (21)

201. மசரத மனையவர் வரமும் வாழ்வுமோர்
நிசரத கணைகளா னீறு செய்யயாம்
கசரத துரகமாட் கடல்கொள் காவலன்
தசரதன் மதலையாய் வருதுந் தாரணி.

'மசரதம் அனையவர் வரமும், வாழ்வும், ஓர்
நிச ரத கணைகளால் நீறு செய்ய யாம்
கச ரத துரகம் ஆள் கடல் கொள் காவலன்
தசரதன் மதலை ஆய் வருதும் தாரணி.'

பொ :—'கானல்நீரைப் போன்றவர்களான அரக்கர்களின் வரத்தையும் வாழ்நாளையும் ஒப்பற்ற குறிதவறாத இரத்தம்படிந்த அம்புகளினால் பொடிபடுத்தும்படி, யானை, தேர், குதிரை, காலாள் என்னும் நால்வகையான கடல்போன்ற சேனைகளையுடைய சக்கரவர்த்தியான தசரதனுக்குக் குழந்தையாகப் பூமியில் வந்து நாம் பிறப்போம்'.

கு :—இதுவும் திருமால்கூற்று. மசரதம் - கானல்நீர் (பேய்த்தேர்); நிச ரத கணைகள் - உண்மையான (குறிதவறாத) இரத்தக் கணைகள் : அதாவது. பகைவர் உடலில் தைத்துத் தைத்து இரத்தக்கறைபடிந்த அம்புகள் என்றவாறு. (22)

**202.** வளையொடு திகிரியும் வடவை தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்
இளையவ ரெனவடி பரவ வேகிநாம்
வளைமதி லயோத்தியில் வருது மென்றனன்.

'வளையொடு, திகிரியும், வடவை தீதர
விளைதரு கடு உடை விரிகொள் பாயலும்,
இளையவர் என அடி பரவ, ஏகி, நாம்
வளை மதில் அயோத்தியில் வருதும்' என்றனன்.

பொ :—"(எமது) சங்கமும், சக்கரமும், வடவைத்தீயும் கரிந்துபோகும்படி பொங்குகின்ற நஞ்சையுடைய விரிக்கப்படும் பாயாகியுள்ள ஆதிசேடனும் (எமது) தம்பிமார்களாக (வந்து எம்) அடிகளை வணங்க யாம் போய் வளைந்த மதிலையுடைய அயோத்திநகரில் அவதரிப்போம்" என்று (தேவர்களை நோக்கித் திருமால்) கூறினன்.

கு :—இதுவும் திருமால் கூற்று. வடவை, மழை முதலியவற்றாற் கடலில் நீர் வெள்ளம் மிகாதபடி வடதிசையிலிருந்து கடல் நீரைப் பருகும் தீயை முகத்திலேயுடையதொரு பெண் குதிரை. இதனை வடவாமுகாக்கினி என்பர்.

சக்கரம் பரதனாகவும், ஆதிசேடன் இலக்குவனாகவும், சங்கம் சத்துருக்கனாகவும்,இளையவர் என அடிபரவிவரத் திருமால் இராமனாக அவதரித்தமை உணரப்படும். (23)

**203.** என்றவ னுரைத்தபோ
தெழுந்து துள்ளினர்
நன்றிகொண் மங்கல
நாதம் பாடினர்
மன்றலர் செழுந்துள
வணியு மாயனர்
இன்றெமை யளித்தன
ரென்னு மேம்பலால்.

என்று அவன் உரைத்த போது, எழுந்து துள்ளினர்,
நன்றிகொள் மங்கல நாதம் பாடினர்,
'மன்று அலர் செழும் துளவு அணியும் மாயனர்
இன்று எமை அளித்தனர்' என்னும் ஏம்பலால்.

பொ :—என்று (மேலைச் செய்யுள்களான 200-203-ல் உள்ள வாறு) அவன் (திருமால்) கூறிமுடித்தபொழுது, (தேவர்கள்) 'தோட்டத்தின் நடுவில் விளங்குகின்ற செழுமைமிக்க துளசியை அணிகின்ற திருமால் இப்பொழுது எம்மைக் காத்தருளினர்' என்பதனுலாகிய மகிழ்ச்சியினுல் துள்ளி எழுந்து ஆடியவர்களாய், நன்மை கொண்ட மங்களம் பொருந்திய பாடல்களைப் பாடினர்கள்.

கு :—எழுந்து துள்ளினர் - துள்ளியெழுந்து ஆடினர் ; நன்றி கொள் – நன்மைமிக்க அல்லது தமது நன்றியறிதலைத் தெரிவிக் கின்ற ; மன்று – தோட்டத்தின் நடு. 'மன்றிற்பையுடீரும்' (ஐங்குறுநூறு. 246): தோட்டத்தின் நடுவில் துளசிச் செடியை வளர்த்து வணங்குதல் மரபு ; அலர்தல் – விளங்குதல் ; ஏம்பல் - மகிழ்ச்சி. (24)

204. போயதெம் பொருமலென்ன
★ விந்திர னுவகை பூத்தான்
தூயமா மலரின் மேவுந்
தொன்மறை முகத்தி னனும்
சேயிரு விசும்பு ளோருந்
தீர்ந்ததெஞ் சிறுமை யென்றார்
மாயிரு ஞால முண்டோன்
கலுழன்மேற் சரணம் வைத்தான்.

'போயது எம் பொருமல்' என்ன
இந்திரன் உவகை பூத்தான்;
தூய மா மலரின் மேவும்
தொல் மறை முகத்தினனும்,
சேய் இரு விசும்பு உளோரும்,
'தீர்ந்தது எம் சிறுமை' என்றார்:
மாயிரு ஞாலம் உண்டோன்
கலுழன்மேல் சரணம் வைத்தான்.

பொ :—(அப்பொழுது) இந்திரன் 'எமது துன்பம் போய் விட்டது' என்று மகிழ்ச்சி கொண்டான் : தூய்மையையுடைய பெரிய தாமரைமலரில் வீற்றிருக்கும் பழமையான வேதங்களை முகத்திலே கொண்டவனுன பிரமனும், தொலையிலுள்ள பெரிய வானுலகில் உள்ளவர்களும் 'எங்கள் இளப்பம் (இன்றோடு) ஒழிந்தது' என்றுர். மிகவும் பெரிய உலகத்தை உட்கொண்டவ னுகிய திருமால் (அவ்விடம் விட்டுச் செல்வதற்காகக்) கருடன் மேல் கால்வைத்தேறினுன்.

கு :—பிரமன் நான்கு வேதங்களையும் நான்கு முகங்களாகக் கொண்டவன் ஆதலால், 'தொன்மறை முகத்தினுன்' என்னப் பட்டான் ; சிறுமை - இளப்பம், குறைபாடு அல்லது துன்பம் (25)

**205.** என்னையா ளுடைய வையன்
 கலுழன்மீ தெழுந்து போய
பின்னர்வா னவரை நோக்கிப்
 பிதாமகன் பேசு கின்றுன்
முன்னரே யெண்கின் வேந்தன்
 யானென மொழிகின் றுன்மற்
றன்னவா றெவரு நீர்போ
 யவதரித் திடுமி னென்றுன்.

**என்னை ஆள் உடைய ஐயன்**
 **கலுழன் மீது எழுந்து போய**
**பின்னர், வானவரை நோக்கிப்**
 **பிதாமகன் பேசுகின்றுன்.**
**'முன்னர் ஏய் எண்கின் வேந்தன்**
 **யான்' என மொழிகின்றுன், மற்று,**
**'அன்னஆறு எவரும் நீர் போய்**
 **அவதரித்திடுமின் !' என்றுன்.**

பொ :—என்னை அடிமையாகவுடைய தலைவனுகிய திருமால் கருடன்மீது எழுந்தருளிப் போனபின்பு, பிரமன் (மற்றத்) தேவர் களைப் பார்த்துச் சொல்பவனுய், 'முன்னரே (பூமியிற்)பிறந்துள்ள கரடிகளிற் சிறந்த ஜாம்பவான் என்னுடைய அமிசமே' என்று கூறி, மற்றும் மொழிகின்றவனுய், 'அதுபோலவே நீங்கள் எல்லீ ரும் (பூமியிற்) போய் அவதரியுங்கள்' என்று சொன்னுன்.

கு :—பிதாமகன்–தந்தையாவார் யாவர்க்குந் தந்தையாகுபவன்; படைத்தற்கடவுளாகிய பிரமன் என்றபடி. எண்கின் வேந்தன் - கரடிகளின் தலைவன்: இங்கே ஜாம்பவான் என்னும் கரடியைக் குறித்து நின்றது. ஒருகால் பிரமன் தன்வாயை அங்காந்து கொட்டாவி விட்டபோது அதினின்று ஜாம்பவான் தோன்றினன் என்பது சரித்திரம். (26)

**206.** தருவுடைக் கடவுள் வேந்தன்
சாற்றுவா னெனது கூறு
மருவலர்க் கசனி யன்ன
வாலியு மகனு மென்ன
இரவிமற் றெனது கூறங்
கவற்கிளை யவனென் றோத
அரியுமற் றெனது கூறு
நீலனென் றறைந்திட் டானால்.

தரு உடைக் கடவுள் வேந்தன்
சாற்றுவான் 'எனது கூறு
மருவலர்க்கு அசனி அன்ன
வாலியும் மகனும்' என்ன,
இரவி, மற்று, 'எனது கூறு அங்கு
அவற்கு இளையவன்' என்று ஓத
அரியும் மற்று, 'எனது கூறு
நீலன்' என்று அறைந்திட்டானால்.

பொ :—கற்பக மரங்களையுடைய தேவர் தலைவனாகிய இந்திரன் சொல்லத் தொடங்குவானாய், 'எனது அமிசம் பகைவர்க்கு இடி போன்ற வாலியும் (அவன்) மகனான அங்கதனும்' என்று கூற, சூரியன் 'அவ்விடத்து அவ்வாலிக்குத் தம்பியாகிய சுக்ரீவன் எனது அமிசம்' என்று கூற, நெருப்புக் கடவுளும் 'எனது அமிசம் நீலன்' என்று சொன்னான்.

கு :—மருவலர் - பகைவர்; அசனி - இடி; அங்கு - அவ்விடத்து மற்று, ஆல் : அசைகள். அங்கதன் இந்திரனுடைய அமிசம் என்பது வான்மீகத்திற் குறிக்கப்படவில்லை. (27)

**207.** வாயுமற் றெனது கூறு
மாருதி யெனலு மற்றோர்
காயுமற் கடங்க ளாகிக்
காசினி யதனின் மீது
போயிடத் துணிந்தோ மென்றார்
புயல்வண்ண னாதி வானோர்
மேயின ரென்னி லிந்த
மேதினிக் கவதி யுண்டோ.

வாயு மற்று, 'எனது கூறு
மாருதி' எனலும், மற்றோர்
'காயும் மற்கடங்கள் ஆகிக்
காசினி அதனின் மீது
போயிடத் துணிந்தோம்' என்றார்;
புயல் வண்ணன் ஆதி வானோர்
மேயினர் என்னில், இந்த
மேதினிக்கு அவதி உண்டோ ?

பொ :—காற்றுக் கடவுள் 'எனது அமிசம் அநுமன்' என்று கூற, மற்றைத் தேவர்கள் 'வெஞ்சினங் கொள்ளும் குரங்குகளாகிப் பூமியின்மேல் போவதற்கு உறுதி கொண்டோம்' என்று கூறினர்; மேகத்தின் நிறத்தவனை திருமால் முதலிய தேவர்கள் (இங்கே) வந்து பிறந்தனர் என்றால், இந்தப் பூமிக்கு (இனியும்) துன்பம் உண்டாகுமோ? (இல்லை என்றவாறு).

கு:—மாருதனாகிய காற்றுக் கடவுளின் மகனாதல் பற்றி அநுமனுக்கு மாருதி என்றும் ஒரு பெயர் உண்டு. காயும் – (பகைவர்களைக்) கோபிக்கின்ற; மற்கடங்கள் – குரங்குகள். காசினி – பூமி: இருபத்தொருமுறை அரசரைக்கொன்று பூமியை வென்ற பரசுராமன் தனது பாவம் தொலைய அந்தப் பூமியைக் காசியபன் என்ற முனிவனுக்குத் தானம் செய்ததனால், பூமிக்கு இப்பெயர் வந்தது என்பர். ஆதி – முதலிய ; மேதினி–பூமி; அவதி- துன்பம்.

'புயல் வண்ணன்... உண்டோ' என்பது கவிக்கூற்று. அநுமன் சிவனுடைய அமிசம் என்பதற்கு வான்மீகத்தில் யாதொரு ஆதாரமும் கிடையாது. (28)

208\. அருடரு கமலக் கண்ண
னருண்முறை யலரு ளோனும்
இருடவிர் குலிசத் தானு
மமரரு மினைய ராகி
மருடரு வனத்தின் மண்ணின்
வானர ராகி வந்தார்
பொருடரு மெவருந் தத்த
முறையிடஞ் சென்று புக்கார்.

அருள் தரு கமலக் கண்ணன்
அருள் முறை, அலர் உளோனும்
இருள் தவிர் குலிசத்தானும்,
அமரரும், இனையர் ஆகி
மருள் தரு வனத்தின், மண்ணின்
வானரர் ஆகி வந்தார்;
பொருள் தரும் எவரும் தத்தம்
உறை இடம் சென்று புக்கார்.

பொ:—(தம்முடைய அமிசங்களால் வானரவடிவான) பிள்ளைகளைத் தருமாறு ஏற்றுக்கொண்ட எல்லாத் தேவர்களும் (வானிலுள்ள) தங்கள் தங்களுடைய இருப்பிடங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள்; கருணை பொழிகின்ற தாமரை மலர்போலும் கண்களையுடையவனான திருமால் நியமித்தருளியபடியே தாமரை மலரில் இருப்பவனான பிரமனும், இருளை நீக்கும்படியான (பிரகாசிக்கின்ற) வச்சிரப்படையையுடையவனான இந்திரனும், தேவர்களும் (மேலே கூறியபடி) இத்தன்மையராகிப் பூமியில் (காண்போர்க்கு அச்சத்தால்) மயக்கத்தைத் தரும்படியான காடுகளில் குரங்குகளாக வந்து பிறந்தார்கள்.

கு :—பொருள் தரும் எவரும் தத்தம் உறை இடம் சென்று புக்கார்; அருள் தரு கமலக்கண்ணன் அருள் முறை, அலருளோனும் இருள் தவிர் குலிசத்தானும் அமரரும் இனையராகி, மண்ணின், மருள்தரு வனத்தின், வானரர் ஆகி வந்தார் எனக் கூட்டுக.

இருள் தவிர் குலிசம் – ஒளியுடைய வச்சிரப்படை; மருள்தரு வனம் – (மலைகளில் மரங்கள் அடர்ந்து இருண்டு இருப்பதால் கண்டோர்க்கு அச்சத்தால்) மயக்கத்தைத் தரும்படியான காடு; மண்ணின் – பூமியின்மேல். பொருள் – புத்திரன். (29)

### வசிட்டன் யாகம் செய்யின் குறைதீருமெனல்

**209.** ஈதுமுன் னிகழ்ந்த வண்ண
மெனமுனி யிதயத் தெண்ணி
மாதிரம் பொருத திண்டோண்
மன்னநீ வருந்த லேழேழ்
பூதல முழுதுங் காக்கும்
புதல்வரை யளிக்கும் வேள்வி
தீதற முயலி னைய
சிந்தைநோய் தீரு மென்றான்.

**'ஈது முன் நிகழ்ந்த வண்ணம்' என முனி இதயத்து எண்ணி, 'மாதிரம் பொருத திண் தோள் மன்ன, நீ வருந்தல் ஏழ் ஏழ் பூதலம் முழுதும் காக்கும் புதல்வரை அளிக்கும் வேள்வி, தீது அற முயலின், ஐய! சிந்தை நோய் தீரும்' என்றான்.**

**பொ** :—'இந்நிகழ்ச்சி முன்னமே(வானுலகில் இவ்வாறு)நடந்த வகை' என்பதை வசிட்ட முனிவன் மனதிலே கருதியவனாய், 'மலையையொத்த வலிய தோள்களை யுடைய மன்னனே! பெரியோனே! நீவருந்தவேண்டாம்; ஈரேழான பதினான்கு உலகத்தைக் கொண்ட இவ்வண்டம் முழுவதையும் காக்கவல்ல ஆண் மக்களைக் கொடுக்கவல்ல யாகத்தைக் குற்றமில்லாமற் செய்து முடித்தால் (உன்) மனத்துயரம் நீங்கும்' என்றான்.

கு :—வண்ணம் – வகை; முனி-வசிட்டமுனிவன்; மாதிரம் – மலை; பொருத - ஒத்த; ஏழ் ஏழ் பூதலம் - மேல் ஏழ் கீழ் ஏழ் என்னும் படியான பதினான்கு உலகங்கள், தீது - (திரவிய லோபம், கிரியாலோபம், நியமலோபம் முதலான) குற்றங்கள்; ஐய - பெரியோனே. (30)

### தசரதன் தான்செய்யவேண்டியதை வினவுதல்

**210.** என்னமா முனிவன் கூற
வெழுந்துபே ருவகை பொங்க
மன்னவர் மன்ன னந்த
மாமுனி சரணஞ் சூடி

உன்னையே புகல்புக் கேனுக்
குறுகண்வந் தடைவ துண்டோ
அன்னதற் கடியேன் செய்யும்
பணியினி தளித்தி யென்றான்.

என்ன மா முனிவன் கூற, எழுந்து,
பேர் உவகை பொங்க,
மன்னவர் மன்னன், அந்த
மாமுனி சரணம் சூடி,
'உன்னையே புகல் புக்கேனுக்கு
உறுகண் வந்து அடைவது உண்டோ?
அன்னதற்கு அடியேன் செய்யும்
பணி இனிது அளித்தி என்றான்.

பொ:—என்று (அப்) பெரிய முனிவனாகிய வசிட்டன் சொல்ல அரசர்க் கரசனாகிய தசரதன் மிகுகின்ற மகிழ்ச்சி உண்டாக, எழுந்து அச் சிறந்த வசிட்டமுனிவனின் திருவடிகளில் தன் தலையை வைத்து வணங்கி, 'உன்னையே சரணமாக அடைந்த எனக்குத் துன்பமும் வந்து சேருவது உள்ளதோ? (இல்லை யென்றபடி) அவ்வேள்வியின்பொருட்டு அடியவனாகிய யான் செய்ய வேண்டுந் தொழிலை நன்றாகக் கூறுவாயாக' என்று வேண்டினான்.

கு:—சரணம் சூடி - அடிகளை (முடிமேல்) அணிந்து; புகல் - அடைக்கலம்; உறுகண் - துன்பம். (31)

### கலைக்கோட்டுமுனி யாகம் நடத்தினால் மகப்பேறு உண்டு எனல்
### 211—213

**211.** மாசறு சுரர்க ளோடு
மற்றுளோர் தமையு மீன்ற
காசிப னருளு மைந்தன்
விபண்டகன் கங்கை சூடும்
ஈசனும் புகழ்தற் கொத்தோ
னிருங்கலை பிறவு மெண்ணில்
தேசுடைத் தந்தை யொப்பான்
றிருவருள் புனைந்த மைந்தன்.

'மாசு அறு சுரர்களோடு மற்றுளோர் தமையும் ஈன்ற
காசிபன் அருளும் மைந்தன், விபண்டகன், கங்கை சூடும்
ஈசனும் புகழ்தற்கு ஒத்தோன், இரும் கலை பிறவும் எண்ணில்,
தேசு உடைத் தந்தை ஒப்பான்; திரு அருள் புனைந்த மைந்தன்.

பொ :—(அப்போது வசிட்டன் தசரதனை நோக்கி) 'குற்ற மற்ற தேவர்களுடனே மற்று முள்ள அசுரர் முதலியோரையும் பெற்ற காசிப முனிவன் பெற்றருளின மகன் விபண்டகன் என்று பேருள்ளவன்; (அவன்) கங்கையை முடியில் தரித்த சிவபிரானும் புகழ்தற்கு உரியவனும், 'பெரிய வேதம்' முதலிய நூல்களிலும், மற்றும் அறிவு ஒழுக்கம் அடக்கம் முதலியவற்றிலும் எண்ணிப்பார்க்குமிடத்துப் புகழ்வாய்ந்த தன் தந்தையை ஒத்தவனும் ஆவான்; (அவ் விபண்டகனுடைய) மேலான அருளுக்குப் பாத்திரமான மகனும்—

கு :—இது முதல் மூன்று கவிகள், குளகம். வசிட்டமுனிவனின் கூற்று.

அடுத்த கவியில் தொடர்ச்சியைக் காண்க. (32)

**212.** வருகலை பிறவு நீதி
மனுநெறி வரம்பில் வாய்மை
தருகலை மறையு மெண்ணிற்
சதுமுகற் குவமை சான்றோன்
திருகலை யுடைய விந்தச்
செகத்துளோர் தன்மை தேரா
ஒருகலை முகச்சி ருங்க
வுயர்தவன் வருதல் வேண்டும்.

'வருகலை பிறவும், நீதி
மனுநெறி, வரம்பு இல் வாய்மை
தருகலை, மறையும், எண்ணில்,
சதுமுகற்கு உவமை சான்றோன்,
திருகலை உடைய இந்தச்
செகத்துளோர் தன்மை தேரா
ஒரு கலை முகச் சிருங்க
உயர்தவன் வருதல் வேண்டும்.

பொ :—நீதியைத் தெரிவிக்கும் மனுதருமநூல்களிலும், உண்மைப்பொருளை உபதேசிக்கின்ற சாத்திர நூல்களிலும் வேதங்களிலும், மற்றும் வழங்கிவருவனவாயுள்ள பிற நூல்களிலும், எண்ணிப் பார்க்குமிடத்து, நான்முகனுக்கு உவமை கூறத் தக்கவனும், (ஆண் பெண் என்று) மாறுபடுதலையுடைய இந்த உலகத்து மக்களின் (பாகுபாட்டுத்) தன்மையை அறியாதவனுமாகிய மான்கொம்பை முகத்திலே உடையவனான சிறந்த தவத்தையுடையவன் (ருசிய சிருங்க முனிவன் இங்கு) வருதல்வேண்டும்.

கு :—தொடர்ச்சி அடுத்த கவியிற் காண்க. இதுவும் வசிட்டனின் கூற்று. திருகல் - மாறுபடுகை. சிருங்கம் - விலங்கின் கொம்பு. விபண்டகனுடைய மைந்தன் ருசியசிருங்க (கலைக்கோட்டு) முனிவன். கலைமானினிடமாகப் பிறந்ததனால், இம்முனிவன் முகத்தில் ஒற்றைக் கலைமான்கொம்பை உடையவனானான். *(33)*

**213.** பாந்தளின் மகுட கோடி
 பரித்தபா ரதனின் வைகும்
மாந்தர்கள் விலங்கென் றுன்னு
 மனத்தன்மா தவத்த னெண்ணில்
பூந்தவி சுகந்து ளோனும்
 புராரியும் புகழ்தற் கொத்த
சாந்தனல் வேள்வி முற்றிற்
 றனயர்க ளுளரா மென்றான்.

'பாந்தளின் மகுட கோடி
 பரித்த பார் அதனின் வைகும்
மாந்தர்கள் விலங்கு, என்று உன்னும்
 மனத்தன், மாதவத்தன், எண்ணில்,
பூந்தவிசு உகந்துளோனும்,
 புராரியும் புகழ்தற்கு ஒத்த
சாந்தனல் வேள்வி முற்றில் தனயர்கள்
 உளர் ஆம்' என்றான்.

பொ :—'(ஆதிசேடன் என்னும்) பாம்பினுடைய (பலவான) முடிகளின் நுனிகளினால் சுமக்கப்பட்ட பூமியில் தங்குகின்ற மானிடர்களை விலங்குகள் என்று நினைக்கிற மனத்தையுடையவனும், பெருந்தவத்தையுடையவனும், எண்ணிப்பார்க்குமிடத்துத்

தாமரைமலரை ஆசனமாக விரும்பிக்கொண்டுள்ளவனை பிரமனும், திரிபுரங்களை எரித்தவனை சிவபிரானும் புகழ்தற்கு ஏற்ற சாந்த குணத்தையுடையவனுமான அந்தக் கலைக்கோட்டு முனிவனால் (இப்பொழுது நீ செய்யவேண்டியுள்ள) யாகத்தைச் செய்து முடித்தால் குமாரர்கள் உண்டாவார்கள்' என்று மறு மொழி கூறினான்.

கு:—பாந்தள் – பாம்பு; மகுடம் - முடி; கோடி - நுனி; பரித்த – தாங்கிய. (34)

## கலைக்கோட்டுமுனியைப்பற்றித் தசரதன் வினாதல்

**214.** ஆங்குரை யினைய கூறு
மருந்தவர்க் கரசன் செய்ய
பூங்கழ றொழுது வாழ்த்திப்
பூதல மன்னர் மன்னன்
தீங்கறு குணத்தான் மிக்க
செழுந்தவன் யாண்டை யுள்ளான்
ஈங்குநான் கொணருந் தன்மை
யியம்புதி யிறைவ வென்றான்.

ஆங்கு உரை இனைய கூறும்
அரும் தவர்க்கு அரசன் செய்ய
பூங்கழல் தொழுது வாழ்த்திப்
பூதலம் மன்னர் மன்னன்,
'தீங்கு அறு குணத்தால் மிக்க
செழும் தவன் யாண்டை உள்ளான்?
ஈங்கு நான் கொணரும் தன்மை
இயம்புதி, இறைவ!' என்றான்.

பொ:—அப்பொழுது இத்தன்மையனவான வார்த்தைகளைச் சொல்லுகின்ற அருமையான தவத்தைக் கொண்ட முனிவர்களுட் சிறந்தவனான வசிட்டனுடைய அழகிய தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கித் துதித்து, பூமியிலுள்ள அரசர்க்கு அரசனான தசரதன் (வசிட்டனை நோக்கி) 'தலைவனே! குற்றமற்ற (நற்) குணங்களாற் சிறந்த மிக்க தவத்தையுடைய அக்கலைக் கோட்டு முனி எங்கே இருக்கிறான்? (அவனை) நான் இவ்விடத்திற்குக் கொண்டுவரும் முறையைக் கூறுவாயாக' என்று வேண்டினான். (35)

## கலைக்கோட்டுமுனியின் வரலாற்றை வசிட்டன் கூறுதல் 215—235

**215.** புத்தான கொடுவினையோ டருந்துயரம்
★ போயொளிப்பப் புவனந் தாங்கும்
சத்தான குணமுடையோன் றயாவோடு
தண்ணளியின் சாலை போல்வான்
எத்தானும் வெலற்கரியான் மனுகுலத்தே
வந்துதித்தோ னிலங்கு மெளலி
உத்தான் பாதனரு ளுரோமபத
னென்றுளனிவ் வுலகை யாள்வோன்.

'புத்து ஆன கொடுவினையோடு அரும் துயரம்
போய் ஒளிப்பப், புவனம் தாங்கும்
சத்து ஆன குணம் உடையோன், தயாவோடு
தண் அளியின் சாலை போல்வான்,
எத்தானும் வெலற்கு அரியான், மனுகுலத்தே
வந்து உதித்தோன், இலங்கு மௌலி
உத்தானபாதன் அருள் உரோமபதன்
என்று உளன் இவ் உலகை ஆள்வோன்.'

பொ :—(வசிட்டன் தசரதனை நோக்கிக் கூறுவான்:—) 'உலகத்தைக் காக்கின்ற நல்லனவான குணங்களையுடைய வனும், அன்புக்கும் குளிர்ந்த அருளுக்கும் உறைவிடம் போல்பவனும் (பகைவர் செய்கின்ற) எந்த உபாயத்தினாலும் வெல்ல முடியாதவனும், மனுவின் குலத்திலே வந்து பிறந்தவனும், விளங்குகின்ற கிரீடத்தை அணிந்தவனுமான உத்தானபாதன் என்னும் அரசன், புத்தென்று சொல்லப்படுகிற கொடிய நரகமும், (நீக்குதற்கு) அரிய (மற்றைத்) துன்பங்களும் சென்று மறையும்படி பெற்ற உரோமபதன் என்று சொல்லப்பட்டு இவ் வுலகை யாள்வானொரு மன்னன் உளன்.'

கு :—புத் என்னும் நரகம் செல்லுதற்குக் காரணமான கொடிய தீவினையைப் புத்தான கொடுவினை என்றார்; காரியத்தைக் காரணமாகக் கூறிய உபசார வழக்கு. சத்து-நன்மை. தயா—அன்பு. அளியின் சாலை-அருளின் இருப்பிடம்.

உரோமபதன் என்பதற்குக் காலில் மயிருள்ளவன் என்று பொருள். இவன் அங்கநாட்டு அரசனாக இருந்தான்.

இது முதல் இருபத்தொரு கவிகளால் வசிட்டன் கலைக்கோட்டு முனிவனின் வரலாற்றைக் கூறுவானுனுன். (36)

**216.** அன்னவன்ருன் புரந்தளிக்குந் திருநாட்டி
 னெடுங்கால மளவ தாக
மின்னியெழு முகிலின்றி வெந்துயரம்
 பெருகுதலும் வேந்த னன்னூல்
மன்னுமுனி வரையழைத்து மாதானங்
 கொடுக்கினும்வான் வழங்கா தாகப்
பின்னுமுனி வரர்க்கேட்பக் கலைக்கோட்டு
 முனிவரின்வான் பிலிற்று மென்ருர்.

அன்னவன் தான் புரந்து அளிக்கும் திருநாட்டில்
 நெடுங்காலம் அளவு அது ஆக
மின்னி எழும் முகில் இன்றி வெம் துயரம்
 பெருகுதலும், வேந்தன், நல் நூல்
மன்னும் முனிவரை அழைத்து, மாதானம்
 கொடுக்கினும் வான் வழங்காது ஆகப்,
பின்னும் முனிவரர்க் கேட்பக், 'கலைக்கோட்டு
 முனிவரின் வான் பிலிற்றும்' என்ருர்.

பொ:—அவ்வுரோமபதன் காத்தருள்கின்ற அழகிய (அங்க) நாட்டில் வெகுகாலமளவாக மின்னல் மின்னிக்கொண்டு மேலெழுகின்ற மேகங்கள் (வந்து மழை பெய்தல்) இல்லாமல் வெப்பமும் (பஞ்சத்) துன்பமும் மிக்க அளவில், அவ்வரசன் (வேதங்கள் முதலிய) சிறந்த நூல்களை அறிதல் பொருந்திய (பல) முனிவர்களை வரவழைத்துப் பெரிய தானங்களைக் கொடுத்த பின்னும் மேகம் மழை பொழியாதாக, அதன் பின்பும் (அவ்வரசன்) முனிவர்களிடம் ('என் செய்வது?' என்று) வினவ, (அவர்கள்) 'கலைக்கோட்டு முனிவன் இந் நாட்டில் வந்தால் மழை பெய்யும்' என்று சொன்னுர்கள்.

கு:—வான் பிலிற்றும்–மழை பெய்யும். (37)

**217.** ஓதநெடுங் கடலாடை யுலகினில்வாழ்
 மனிதர்விலங் கெனவே யுன்னும்
கோதில்குணத் தருந்தவனைக் கொணரும்வகை
 யாவதெனக் குணிக்கும் வேலைச்

சோதிநுதற் கருநெடுங்கட் டுவரிதழ்வாய்த்
தரளநகைத் துணைமென் கொங்கை
மாதரெழுந் தியாமேகி யருந்தவனைக்
கொணர்துமென வணக்கஞ் செய்தார்.

'ஓதம் நெடும் கடல் ஆடை உலகினில் வாழ்
மனிதர் விலங்கு எனவே உன்னும்
கோது இல் குணத்து அரும் தவனைக் கொணரும் வகை
யாவது?' எனக் குணிக்கும் வேலைச்,
சோதி நுதல், கருநெடும் கண், துவர் இதழ் வாய்த்,
தரள நகைத், துணை மென் கொங்கை
மாதர் எழுந்து, 'யாம் ஏகி அரும் தவனைக்
கொணர்தும்' என வணக்கம் செய்தார்.'

பொ :—(முனிவர்கள் கூறியதைக் கேட்ட உரோமபதன்) 'அலைகளைக்கொண்ட பெரிய கடலை ஆடையாகவுடைய உலகத்திலே வாழ்கின்ற மனிதர்களை விலங்குகள் என்றே எண்ணுகின்ற, குற்றமில்லாத குணத்தையுடைய (செய்தற்கு) அரிய தவத்தையுடையவனான அக் கலைக்கோட்டுமுனியைக் கொண்டுவருவதற்குரிய வழி எது?' என்று யோசித்த போது, ஒளி பொருந்திய நெற்றியையும், கருத்து நீண்ட கண்களையும், சிவந்த அதரத்தோடு கூடிய வாயையும், முத்துப் போன்ற வெள்ளிய பற்களையும், இரண்டு மெல்லிய தனங்களையுமுடைய விலைமகளிர் (சிலர்) எழுந்து, 'நாங்கள் போய் அரிய தவமுடையவனான முனிவனை (இங்கு) அழைத்துக்கொண்டு வருவோம்' என்று சொல்லி வணங்கினர்கள்.

கு :—ஓதம் - அலை. (38)

**218.** ஆங்கவரம் மொழியுரைப்ப வரசன்மகிழ்ந்
தவர்க்கணிதூ சாதி யாய
பாங்குளமற் றவையருளிப் பனிப்பிறையைப்
பழித்தநுதற் பணைத்த வேய்த்தோள்
ஏங்குமிடை தடிக்குமுலை யிருண்டகுழன்
மருண்டவிழி யிலவச் செவ்வாய்ப்
பூங்கொடியீ ரேகுமெனத் தொழுதிறைஞ்சி
யிரதமிசைப் போயி னரே.

“ ஆங்கு அவர் அம்மொழி உரைப்ப, அரசன் மகிழ்ந்து,
அவர்க்கு அணி தூசு ஆதி ஆய
பாங்கு உள மற்றவை அருளிப், ‘பனிப் பிறையைப்
பழித்தநுதல், பணைத்த வேய்த் தோள்
ஏங்கும் இடை, தடிக்கும் முலை, இருண்ட குழல்,
மருண்ட விழி, இலவச் செவ்வாய்ப்,
பூங்கொடியீர்! ஏகும்’ எனத், தொழுது இறைஞ்சி
இரதம் மிசைப் போயினரே.”

பொ :—அவ்விடத்தில் அம்மாதர் அந்த வார்த்தையைச் சொல்ல, மன்னன் (உரோமபதன்) மகிழ்ந்து, அம மாதருக்கு நகைகள் சேலைகள் முதலியவற்றையும், மற்றும் பொருத்தமான வேறு பொருள்களையும் வழங்கிக் குளிர்ந்த பிறைச்சந்திரனைப் பழிக்கும்படியான நெற்றியையும், பருத்த மூங்கில் போன்ற தோள்களையும் கறுத்த கூந்தலையும், மருண்ட பார்வையையுடைய கண்களையும், இலவம்பூப் போலச் சிவந்த வாயையுமுடைய பூங்கொடி போன்றவர்களே! (உடனே) செல்லுங்கள் என்று சொல்லி விடைகொடுக்க, (அரசனை) மிக வணங்கித் தேரின் மேலேறிச் சென்றார்கள்.

கு :—பாங்கு - தகுதி, பொருத்தம். (39)

**219.** ஓசனை பலகடந் தினியொ ரோசனை
★ ஏசறு தவனுறை யிடமி தென்றுழிப்
பாசிழை மடந்தையர் பன்ன சாலைசெய்
தாசறு மருந்தவத் தவரின் வைகினர்.

ஓசனை பல கடந்து, இனி ஓர் ஓசனை
ஏசு அறு தவன் உறை இடம் இது, என்றுழிப்,
பாசு இழை மடந்தையர், பன்னசாலை செய்து,
ஆசு அறும் அரும் தவத்தவரின், வைகினர்.

பொ :—பசுமையான (பைம் பொன்னாலாகிய) அணிகளை யணிந்த அவ் விலைமகளிர், பல யோசனைதூர வழியைக் கடந்து சென்று, குற்றமில்லாத தவத்தையுடைய கலைக்கோட்டுமுனிவன் வாழ்கின்ற இடமாகிய இது, இன்னும் ஒரு யோசனை தூரத்தி லுள்ளது என்று சொல்லும்படியான இடத்தில் பன்னசாலை

யொன்றை அமைத்துக்கொண்டு (அதில்) குற்றமில்லாத அருந் தவம் செய்பவரைப் போல இருந்துவந்தார்கள்.

கு :—ஓசனை—நான்கு கூப்பீடுகொண்ட தூரம். பத்து நாழிகை வழி என்பர். பன்ன சாலை—இலையால் வேயப்பட்ட குடிசை. (40)

**220.** அருந்தவன் றந்தையை
யற்ற நோக்கியே
கருந்தடங் கண்ணியர்
கலைவ லாளனிற்
பொருந்தினர் பொருந்துபு
விலங்கெ னுப்புரிந்
திருந்தவ ரிவரென
வினைய செய்தனன்.

"அரும் தவன் தந்தையை அற்றம் நோக்கியே
கரும் தடம் கண்ணியர் கலை வலாளனில்
பொருந்தினர்; பொருந்துபு, விலங்கு எனுப் புரிந்து
இருந்தவர் இவர் என, இனைய செய்தனன்."

பொ :—கரிய பெரிய கண்களையுடைய அம்மாதர்கள், அரிய தவத்தையுடையவனான அக் கலைக்கோட்டுமுனிவனுடைய தந்தையாகிய விபண்டகமுனிவன் இல்லாத சமயம் பார்த்து, நூல்களில் வல்லவனாகிய அக் கலைக்கோட்டுமுனிவனிடத்திற் சென்றனர்; (அங்ஙனம்) சென்று சேர (அக் கலைக்கோட்டுமுனிவன்) அவர்களையும் ஒருவகை விலங்குகளாகவே உணர்ந்து, '(ஆயினும்) இவர்கள் பெரிய தவத்தையுடையவர்கள்' என நினைந்து இத்தன்மையனவான உபசாரங்களைச் செய்தான். (உபசாரம் செய்த வகையை மேற்கவியிற் காண்க.)

கு :—அற்றம்—இல்லாதசமயம். அவ் விலைமாதரை ஒருவகை விலங்கென்று அவன் கருதினமையைக் குலமுறைகிளத்துபடலத்தில் "ஒிலைக்கோட்டு" என்று தொடங்கும் பாடலிலும் காண்க. அவ் விலைமாதர் தாங்கள் 'மார்பினிற் கோடு பூத்த செறிதவ முனிவரென்ன' முனிவனை மயக்கம் செய்ததாகக் கூர்மபுராணம் கூறும்.

தந்தையாகிய விபண்டகன் சபித்துவிடுவான் என அஞ்சி, அவன் இல்லாத சமயம் பார்த்துச் சென்றனர் மாதர் என்க. (41)

**221.** அருக்கிய முதலினோ
டாச னங்கொடுத்
திருக்கென விருந்தபி
னினிய கூறலும்
முருக்கிதழ் மடந்தையர்
முனிவ னைத்தொழாப்
பொருக்கென வெழுந்துபோய்ப்
புரையுட் புக்கனர்.

"அருக்கியம் முதலினோடு ஆசனம் கொடுத்து,
'இருக்க' என, இருந்தபின், இனிய கூறலும்,
முருக்கு இதழ் மடந்தையர் முனிவனைத் தொழாப்,
பொருக்கென எழுந்து போய்ப் புரையுள் புக்கனர்."

பொ :—(கலைக்கோட்டுமுனி அம்மாதர்களுக்கு) பூசித்தற்குரிய வழிபாட்டுநீர் அளித்தல் முதலியவற்றோடு இருக்கையும் கொடுத்து, 'அமருங்கள்' என்று வேண்டவும், (அவர்கள்) வீற்றிருந்தபின்பு, நல்ல உபசாரமொழிகளைச்சொன்னவளவிலே, பலாசம் என்னும் முள்முருங்கைப்பூப்போற் சிவந்த வாயிதழ்களையுடைய அவ் விலைமகளிர் அம்முனிவனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு விரைவாக எழுந்துசென்று தம்முடைய பன்னசாலையினுள்ளே புகுந்தனர்.

கு :—அருக்கியம் - வழிபாடுதோன்ற அதிதிகளுக்கு வழங்கும் பூசைக்குரிய நீர்; 'முதலினோடு' என்றதால், சந்தனம், மலர் போன்றனவும் முனிவன் வழங்கினன் என்க. பொருக்கெனல் - விரைவைக்குறிக்கும் குறிப்புமொழி: முனிவனின் தந்தையான விபண்டகன் வந்துவிடக்கூடும் என்று விரைந்து மீண்டனர் என்க. புரை – குடிசை அல்லது ஆச்சிரமம். (42)

**222.** திருந்திழை யவர்சில தினங்க டீர்ந்துழி
மருந்தினு மினியன வருக்கை வாழைமாத்
தருந்தருங் கனியொடு தாழை யின்பலம்
அருந்தவ வருந்தென வருளி னாரரோ.

"திருந்து இழையவர் சில தினங்கள் தீர்ந்துழி
மருந்தினும் இனியன வருக்கை வாழை மாத்
தரும் தரும் கனியொடு தாழை இன் பலம்
'அருந்தவ! அருந்து' என அருளினர், அரோ."

போ :—சிலநாட்கள் கழிந்தபின், செவ்விய அணிகளையணிந்தவர்களாகிய அம்மாதர் தேவாமிருதத்தைவிட மிக்க இன்சுவையுடையனவான பலா, வாழை, மாமரங்கள் அளிக்கும்படியான பழங்களோடு இனிய தேங்காய்களையும் (கொண்டு சென்று) 'அரிய தவங்களையுடைய முனிவனே! நீ அமுது செய்தருள்வாயாக' என்று சொல்லி வழங்கினார்கள்.

கு :—வருக்கை - பலாமரம். மாத்தரும் - மாமரமும் கொடுக்கின்ற. தாழை-தென்னைமரம். இன் பலம்-இனிய பழம். அரோ - அசை. (43)

**223.** இன்னன பல்பக
லிறந்த பின்றிரு
நன்னுதன் மடந்தையர்
நவையில் மாதவன்
தன்னையெம் மிடத்தினுஞ்
சார்தல் வேண்டுமென்
றன்னவற் றொழுதலு
மவரோ டேகினான்.

"இன்னன பல் பகல் இறந்த பின், திரு
நல் நுதல் மடந்தையர், நவை இல் மாதவன்
தன்னை எம் இடத்தினும் சார்தல்வேண்டும் என்று,
அன்னவன் தொழுதலும், அவரொடு ஏகினான்."

போ :—இத்தன்மையனவாகிய பல நாட்கள் கழிந்த பிறகு, அழகிய நல்ல நெற்றியையுடைய (அந்த) விலைமகளிர் குற்றமற்ற சிறந்த தவத்தையுடையவனாகிய அக் கலைக்கோட்டுமுனிவனை நோக்கி, 'எங்கள் பன்னசாலைக்கும் எழுந்தருளவேண்டும்' என்று அவனை வணங்கவும், (அம்முனிவனும்) அம்மடந்தையரோடு சென்றான்.

கு :—'எம்மிடத்தினும்' என்றதால், 'நாங்கள் உமது இடத்திற்கு வந்ததுபோலவே, நீரும் எமது இடத்திற்கு வருதல் வேண்டும்' என்று பொருள்படக் கூறினர் என்க. (44)

**224.** விம்முறு முவகையர்
வியந்த நெஞ்சினர்
அம்மவி திதுவென
வகலு நீணெறி
செம்மையின் முனிவரன்
ருெடரச் சென்றனர்
தம்மன மெனமருட்
டைய லார்களே.

"விம்முறும் உவகையர், வியந்த நெஞ்சினர்.
அம்ம! 'இது! இது!' என அகலும் நீள் நெறி,
செம்மையின் முனிவரன் தொடரச், சென்றனர்,
தம் மனம் என மருள் தையலார்களே!"

பொ:—அம்ம! நற்குணமுடைய அச் சிறந்த முனிவன் (தம்மைத்) தொடர்ந்துவர, தங்கள் மனம்போல(ப் பிறரை) மயக்கவல்ல (அவ்)விலைமாதர் (அவன்தொடர்வதால்) மிகுகின்ற மகிழ்ச்சியையுடையராகவும், (தாம் கருதிய அரிய காரியம் எளிதில் முடிந்ததே என்று) ஆச்சரியமடைந்த மனத்தையுடையராகவும், '(எங்கள் ஆச்சிரமம்) இதோ! (இங்கிருக்கிறது) இதோ!' என்று (தமது ஆச்சிரமம் அருகிலுள்ளதுபோலக் காட்டிக்கொண்டே) பரந்த நீண்ட (அங்கநாட்டுக்குச் செல்லும்) வழியாகப் போனுர்கள்.

கு:—அம்ம – ஆச்சரியம்: இது வசிட்டன் தசரதனுக்குக்கூறி வரும் கூற்ருகையால், விலைமாதரின் மயக்கும் செயல் நினைந்து வியந்தான் என்க. யாதொரு ஐயமும் களங்கமும் கொள்ளாத தூயவுள்ளத்தன் கலைக்கோட்டுமுனியாதலால், செம்மையின் முனிவரன் என்னப்பட்டான். (45)

**225.** வளநகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கருகி வான்முகில்
சளசள வெனமழைத் தாரை கான்றன
குளனெடு நதிகடங் குறைக டீரவே.

"வளம் நகர் முனிவரன் வரும் முன், வானவன்
களன் அமர் கடு எனக் கருகி, வான் முகில்
சளசள என மழைத் தாரை கான்றன,
குளனெடும் நதிகள் தம் குறைகள் தீரவே."

போ:—அச் சிறந்த கலைக்கோட்டுமுனிவன் (உரோமபதமன்னனின்) வளமைபொருந்திய நகரத்தினுள் நுழைவதற்கு முன்னரேயே வானத்து மேகங்கள், சிறந்த கடவுளாகிய சிவபெருமானுடைய மிடற்றிலே பொருந்திய நஞ்சுபோலக் கருநிறம் கொண்டு குளங்களும் ஆறுகளும் (நீரில்லாதிருந்த) தங்கள் குறைவுகள் நீங்கும்படி சளசளவென்று ஓசையுண்டாக மழைநீர்ப் பெருக்கைச் சொரிந்தன.

கு:—முனிவன் அந்த (அங்க) நாட்டின் எல்லையிலே கால் எடுத்துவைத்தவுடனேயே மழைபெய்யத் தொடங்கிவிட்டது என்பார், 'வளநகர் முனிவரன் வருமுன்' என்றார். (46)

**226.** பெரும்புன னதிகளுங்
குளனும் பெட்புறக்
கரும்பொடு செந்நெலுங்
கவின்கொண் டோங்கிட
இரும்புயல் ககனமீ
திடைவி டாதெழுந்
தரும்புனல் சொரிந்தபோ
தரசு ணர்ந்தனன்.

பெரும் புனல் நதிகளும், குளனும், பெட்பு உறக்,
கரும்பொடு செந்நெலும் கவின் கொண்டு ஓங்கிட,
இரும் புயல் ககனம் மீது இடைவிடாது எழுந்து
அரும் புனல் சொரிந்த போது, அரசு உணர்ந்தனன்.

போ:—ஆறுகளும் குளங்களும் மிக்க நீரினால் பெருமையடையும்படியாகவும், கரும்புகளும் செந்நெற்பயிர்களும் அழகு பெற்றுச் செழித்து வளரவும், கரிய மேகங்கள் வானத்தின்மேலே ஓயாமற் பரவிநின்று அருமையான மழைநீரைக் கொட்டியபோது உரோமபதனாகிய அரசன் (உண்மையை) ஆலோசித்தறிவானானான்.

கு:—பெட்பு - பெருமை; இரும்புயல் – கரிய மேகங்கள்: அரசன் உணர்ந்தவாற்றினை அடுத்த கவியிற் காணலாம்.

நதிகளும் குளங்களும் நீர்வற்றி வறண்டு முன் சிறுமையுற்றிருந்தவை, இப்பொழுது மழை பெய்து நீர் நிறைதலாற் பெருமையுற்றன என்க. (47)

**227.** காமமும் வெகுளியுங்
களிப்புங் கைத்தெழு
கோமுனி யிவணடைந்
தனன்கொல் கொவ்வைவாய்த்
தாமரை மலர்முகத்
தரள வாணகைத்
தூமமென் குழலியர்
புணர்த்த சூழ்ச்சியால்.

'காமமும் வெகுளியும் களிப்பும் கைத்து எழு
கோ முனி இவண் அடைந்தனன் கொல்? கொவ்வை வாய்த்
தாமரை மலர் முகத் தரள வாள் நகைத்
தூம மென் குழலியர் புணர்த்த சூழ்ச்சியால்.'

பொ :—' கொவ்வைப்பழம்போற் சிவந்த வாயையும், செந்தாமரைமலர் போன்ற முகத்தையும், முத்துப்போன்ற வெள்ளொளியையுடைய பற்களையும், அகிற்புகையூட்டப்பெற்ற மெல்லிய கூந்தலையும் உடைய அவ் விலைமகளிர் கோத்த தந்திரத்தினால், காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களையும் வெறுத்து உயர்ந்த சிறந்த கலைக்கோட்டுமுனிவன் இவ்விடத்திற்கு வந்து சேர்ந்தானோ?'

கு :—என்று இவ்வாறு எண்ணியவனாய் அரசன் உரோமபதன் செய்தவற்றை அடுத்த பாடலில் தொடரக் காணலாம். (48)

**228.** என்றெழுந் தருமறை முனிவர் யாரொடும்
சென்றிரண் டியோசனை சேனை சூழ்தர
மன்றலங் குழலியர் நடுவண் மாதவக்
குன்றினை யெதிர்ந்தனன் குவவுத் தோளினன்.

என்று எழுந்து அருமறை முனிவர் யாரொடும்
சென்று இரண்டு யோசனை சேனை சூழ்தர
மன்றல் அம் குழலியர் நடுவண் மாதவக்
குன்றினை எதிர்ந்தனன் குவவுத் தோளினன்.

பொ :— என்று எண்ணித் திரட்சிகொண்ட தோளையுடையவனான உரோமபதன் தனது சேனைகள் புடைசூழ, (உணர்தற்கு)

அருமையான வேதங்களில் வல்ல முனிவர்கள் எல்லாருடனும் புறப்பட்டு, இரண்டுயோசனை தூரம் போய், மணமுள்ள அழகிய கூந்தலையுடையவரான அவ்விலைமகளிரின் நடுவில் பெரிய தவமய மானதொரு மலைபோன்ற கலைக்கோட்டுமுனிவனை எதிர்கொண் டான்.

கு :—யாரொடும் – எல்லாரோடும் ; மன்றல் – நறுமணம்; மலை போன்ற பெரிய தவத்தையுடையவனான கலைக்கோட்டுமுனியை 'மாதவக் குன்று' என்று உருவகித்தார். பெரிய புராணத்தில் 'மேருவரையின் மேம்பட்ட தவத்தான்' (3393) என வருதல் ஒப்பு நோக்கத்தகும். (49)

**229.** வீழ்ந்தன னடிமிசை
விழிக ணீர்தர
வாழ்ந்தன னினியென
மகிழுஞ் சிந்தையான்
தாழ்ந்தெழு மாதரார்
தம்மை நோக்கிநீர்
போழ்ந்தனி ரெனதிடர்
புணர்ப்பி னலென்றான்.

வீழ்ந்தனன் அடிமிசை, விழிகள் நீர்தர,
'வாழ்ந்தனன் இனி!' என மகிழும் சிந்தையான் ;
தாழ்ந்து எழு மாதரார் தம்மை நோக்கி, 'நீர்
போழ்ந்தனிர் எனது இடர் புணர்ப்பினால்!' என்றான்.

பொ :—'இனி (எல்லா நல்) வாழ்வுகளையும் பெற்றேன்' என்று களிக்கின்ற மனத்தனாய்க் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக (அம்முனிவனின்) திருவடிகளில் விழுந்து வணங்கினான் ; (தன்னை) வணங்கியெழுந்த விலைமகளிரைப் பார்த்து, 'நீங்கள் என்னுடைய துன்பத்தை உங்களுடைய சூழ்ச்சியால் அழித்து (த்தீர்த்து) விட்டீர்கள்' என்று கூறினான்.

கு :—முனியின் நல்வரவால் தான் எல்லாவிதமான நல்வாழ்வு களையும் தடையின்றிப் பெற்றுவிட்டதாக நினைத்து மனத்துள்ளே மகிழ்ந்தான் உரோமபதன் என்க. போழ்தல் - அழித்தல் (நீக்கு தல்); 'நீடிருள் போழு நிலைமைத்து' (சீவகசிந்தாமணி—2118) (50)

**230.** அரசனு முனிவரு மடைந்த வாயிடை
வரமுனி வஞ்சமென் றுணர்ந்த மாலைவாய்
வெருவினர் விண்ணவர் வேந்தன் வேண்டலால்
கரையெறி யாதலை கடலும் போன்றனன்.

அரசனும் முனிவரும் அடைந்த ஆயிடை,
வரம் முனி வஞ்சம் என்று உணர்ந்த மாலைவாய்,
வெருவினர் விண்ணவர்; வேந்தன் வேண்டலால்
கரை எறியாது அலை கடலும் போன்றனன்.

போ :—உரோமபதமன்னனும் முனிவர்களும் (தன்னை) வந்து சேர்ந்த அப்பொழுது, சாப வரங்கள் அளிக்கவல்ல கலைக்கோட்டுமுனிவன் (தன்னை அம்மாதர்கள் அழைத்துவந்தது) சூது என்று தெளிந்த சமயத்தில், தேவர்களும் (அம்முனிவனின் சினத்தால் யாது விளையுமோ என்று) அஞ்சினார்கள் : ஆனால் உரோமபத மன்னனது வேண்டுகோளினால் (கலைக்கோட்டுமுனி) கரையைக்கடந்து மேல் வராமல் அலையெறியும் இயல்புள்ள கடலை யொத்தவனானான்.

கு :—கடலிற் பொங்கியெழுகின்ற அலைகள் கடலிலேயே அடங்குதல் போல, முனிவன் மனத்திற் பொங்கியெழுந்த சினமும் மன்னன் வேண்டுகோளால், அவன் மனத்துள்ளேயே அடங்கிற்று என்றவாறு. ஆறு சிறுபொழுதுகளில் ஒன்றாகிய மாலைப் பொழுதையுணர்த்தும் 'மாலை' என்னும் சிறப்புப் பெயர் இங்கு வாளா பொழுது என்னும் பொதுப்பொருளுணர்த்திற்று, 'காலை' போல. (51)

**231.** வள்ளுறு வயிரவாண் மன்னன் பன்முறை
எள்ளரு முனிவனை யிறைஞ்சி யாரினும்
தள்ளருந் துயரமுஞ் சமைவுஞ் சாற்றலும்
உள்ளுறு வெகுளிபோ யொளித்த தாமரோ.

வள் உறு வயிர வாள் மன்னன் பல் முறை
எள் அரு முனிவனை இறைஞ்சி, யாரினும்
தள் அரும் துயரமும், சமைவும், சாற்றலும்,
உள் உறு வெகுளி போய் ஒளித்தது, ஆம், அரோ.

போ :—கூர்மையான திண்ணிய வாட்படையையுடைய அரசனான உரோமபதன் பழிப்பில்லாத கலைக்கோட்டுமுனிவனைப் பல

முறைவணங்கி, எவராலும் தவிர்க்கமுடியாதிருந்த (மழைபெய்யாமையால் தன்னுட்டுக்குண்டான) துன்பத்தையும் (அம்முனிவன் வந்ததால் இப்பொழுது மழைபெய்து அத்துன்பம்) தீர்ந்ததையும் சொல்லி (கோபம் தணியுமாறு வேண்டி)க் கொண்டவளவில், (அம்முனிவனது) மனத்தில் மிகுதியாய்த் தோன்றிய சினம் போய் மறைந்தது.

கு :—முன்பாடலில் முனிவன் மனத்துள்ளே அடங்கியதாகக் கூறப்பட்ட சினம், மன்னன் பலமுறையும் வணங்கி நிலைமையை விளக்கிக் கூறியபின்னர், இல்லையாம்படி நீங்கிற்று என்றவாறு. ஆம், அரோ ; அசைகள்.

வள் - கூர்மை ; வயிரம் - திண்மை ; சமைவு - அழிவு. (52)

**232.** அருள்சுரந் தரசனுக் காசி யுங்கொடுத்
துருடரு தேரின்மீ தொல்லை யேறிநற்
பொருடரு முனிவருந் தொடரப் போயினன்
மருளொழி யுணர்வுடை வரத மாதவன்.

அருள் சுரந்து, அரசனுக்கு ஆசியும் கொடுத்து,
உருள் தரு தேரின் மீது ஒல்லை ஏறி, நல்
பொருள் தரு முனிவரும் தொடரப் போயினன்,
மருள் ஒழி உணர்வு உடை வரத மாதவன்.

பொ :—மயக்கம் நீங்கிய அறிவையுடையவனும், வரங்களைக் கொடுக்க வல்லவனும், மிக்க தவத்தையுடையவனுமாகிய அக்கலைக்கோட்டுமுனிவன் கருணை மிகுந்து உரோமபத மன்னனுக்கு ஆசிர்வாதத்தையும் செய்து, நல்ல பொருள்களை உபதேசிக்க வல்ல முனிவர்களும் (தன்னைப்) பின்பற்றிவரச் சக்கரங்களையுடைய தேரின்மேல் ஏறிக்கொண்டு விரைவாக (அம்மன்னவனது நகரத்துக்குச்) சென்ருன்.

கு :—முனிவன் மருளொழி யுணர்வுடையவனுய் இருந்ததால் வெகுளியைக் கணமேனும் கைக்கொள்ளாது விடுத்தான் என்று குறிப்பாக வுணர்த்தப்பட்டது காண்க. (53)

**233.** அடைந்தனன் வளநக
ரலங்க ரித்தெதிர்
மிடைந்திட முனியொடும்
வேந்தன் கோயில்புக்

கொடுங்கலில்பொற்குழாத்
துறையு ளெய்தியோர்
மடங்கலா தனத்திடை
முனியை வைத்தனன்.

அடைந்தனன் வளம் நகர், அலங்கரித்து எதிர்
மிடைந்திட, முனியொடும் வேந்தன் கோயில்புக்கு,
ஒடுங்கல் இல் பொன் குழாத்து உறையுள் எய்தி, ஓர்
மடங்கல் ஆதனத்திடை முனியை வைத்தனன்.

பொ ;—(அந்நகரத்து மக்கள்) செழுமையான அந்த நகரை (தோரண முதலியவற்ருல்) அலங்காரம் செய்து எதிர்கொண்டு நெருங்க, உரோமபத மன்னன் கலைக்கோட்டு முனிவனுடனே (நகரத்தை) அடைந்து, அரண்மனையைச் சேர்ந்து, ஒடுங்குதலில்லாத (அகலமான) பொன்ஞற் செய்யப்பட்ட திரட்சியையுடைய மண்டபத்தை யடைந்து, ஒப்பற்ற அரியணைமீது முனிவனை வீற்றிருக்கச்செய்தான்.

கு :—குழாம் - திரட்சி; மடங்கலாதனம் - சிங்காசனம்; (54)

இதன் பின், சில பிரதிகளில் ஒருபாடல் காணப்படுகிறது:—

233 (a) வைத்தபின் மாமறை மகிழ மாதவன்
சித்தம தோங்கிடத் தேவர் செய்தன
புத்தியின் சாந்தையைப் புகன்று நல்கினுன்
வித்தக முனிவனும் விருப்ப மெய்தவே

**234.** அருக்கிய முதலிய கடன்க ளாற்றிவே
றுரைக்குவ திலதென வுவந்து தானருள்
முருக்கித ழிளமுலை முகந லாடனை
இருக்கொடு விதிமுறை யினிதி னீந்தனன்.

அருக்கியம் முதலிய கடன்கள் ஆற்றி வேறு
உரைக்குவது இலது என உவந்து தான் அருள்
முருக்கு இதழ் இளமுலை முகம் நலாள்தனை
இருக்கொடு விதிமுறை இனிதின் ஈந்தனன்.

பொ :(அவ்விதம் அரியணையில் வீற்றிருந்த கலைக்கோட்டு முனிவனுக்கு உரோமபதன் குறைவென்று) சொல்லத்தக்கது வேறென்றும் இல்லையென்னும்படி (ஆற்றவேண்டிய) அருக்கியம்

முதலிய எல்லாவுபசாரங்களையும் செய்து மகிழ்ந்து, தான் பெற்ற பலாச மலர் போன்ற அதரத்தையும் இளமையான முலைகளையும் அழகிய முகத்தையும் உடையவளான சாந்தை யென்னும் மகளை வேதமந்திரத்துடனே (கன்னிகாதானம் செய்ய வேண்டிய) முறைப்படியே நல்லதாகத் திருமணம் செய்து கொடுத்தான்.

கு :—அருக்கியம் - உபசாரமாக வழங்கும் புனிதமான பூசை நீர். சாந்தை யென்பது உரோமபதன் மகளின் பெயர். மழைபெய்வதைக் கண்டு உரோமபதன் இரண்டு யோசனை தூரம் தன் நகரைவிட்டுச் சென்று முனிவனை எதிரேற்ருன் என்று வான்மீகத்திற் கூறப்படவில்லை. பெண்களைப் பின் தொடர்ந்து வந்த முனிவன் மழைபெய்துகொண்டிருக்க அந்நக ருள் நுழைந்ததும், அரசன் அவனை அரண்மனையில் வரவேற்று வெகுளிகொள்ளலாகாது என வேண்டிக்கொண்டு அருக்கியம் முதலியன அளித்து விசாரமற்றவனுய்க் கன்னிகையான சாந்தை யையும் உள்ளத்துடன் சாத்திரப் பிரகாரம் மணம் செய்து கொடுத்து மகிழ்வெய்தினுன் என்று வான்மீகத்திற் கூறப் படுகிறது. (55)

**235.** வறுமைநோய் தணிதர வான்வ ழங்கவே
உறுதுயர் தணிந்ததவ் வுலகம் வேந்தருள்
செறிகுழல் போற்றிடத் திருந்து மாதவத்
தறிஞனுண் டிருக்குந னரச வென்றனன்.

'வறுமை நோய் தணிதர வான் வழங்கவே
உறு துயர் தணிந்தது அவ் உலகம்; வேந்து அருள்
செறி குழல் போற்றிடத், திருந்து மாதவத்து
அறிஞன் ஆண்டு இருக்குநன், அரச!' என்றனன்.

பொ :—'பஞ்சமாகிய நோய் தீரும்படி மேகம் மழையைப் பொழியவே, அந்த அங்கநாடு மிக்க துன்பம் நீங்கப்பெற்றது; நல்ல மிக்க தவத்தை யுடைய ஞானியான அக் கலைக்கோட்டுமுனி வன் உரோமபத மன்னன் அளித்த நெருங்கிய கூந்தலை யுடையவ ளான சாந்தை யென்பவள் பேணிவர, அவ்விடத்திலேயே (அங்கநாட்டிலேயே) இருக்கிருன், சக்ரவர்த்தியே!' என்று (வசிட்ட முனிவன்) கூறினன்.

கு :—அவ்வுலகம் - அந்த அங்கநாடு: உலகின் கூறுகளையும் உலகம் என்றல் மரபு. செறிகுழல்; அன்மொழித்தொகை,

இங்குச் சாந்தையைக் குறித்து நின்றது. அரச; இது தசரதனை நோக்கிய அண்மை விளி.

215-ஆம் பாடல் முதல் இது முடிய வசிட்டன் தசரதனை நோக்கிக் கூறியன வாகும். (56)

## கலைக்கோட்டுமுனியை அழைத்துவரத் தசரதன் புறப்பாடு

236. என்றலுமே முனிவரன்ற னடியிறைஞ்சி
★ யீண்டேகிக் கொணர்வெ னென்னுத்
துன்றுகழன் முடிவேந்த ரடிபோற்றச்
சுமந்திரனே முதல்வ ராய
வன்றிறல்சே ரமைச்சரொடு மாமணித்தே
ரேறுதலும் வானோர் வாழ்த்தி
இன்றெமது வினைமுடிந்த தெனச் சொரிந்தார்
மலர்மாரி யிடை விடாமல்.

என்றலுமே, முனிவரன்தன் அடி இறைஞ்சி,
'ஈண்டு ஏகிக் கொணர்வென்' என்னுத்,
துன்று கழல் முடி வேந்தர் அடி போற்றச்,
சுமந்திரனே முதல்வர் ஆய
வன் திறல் சேர் அமைச்சரொடும், மா மணித் தேர்
ஏறுதலும், வானோர் வாழ்த்தி,
"இன்று எமது வினை முடிந்தது" எனச், சொரிந்தார்
மலர் மாரி இடைவிடாமல்.

பொ :—என்று (வசிட்டன்) உரைத்த அளவிலே (தசரதன்) அம்முனிவனுடைய திருவடிகளை வணங்கி இப்பொழுதே போய் அம்முனிவனை அழைத்துவருவேனென்று நெருங்கிய வீரக்கழலை யும் முடியையுமுடைய அரசர் (தன்) அடிகளைப் பணிய, சுமந் திரனை முதல்வனுகக் கொண்ட மிக்க திறலுடைய மந்திரிகளோ டும் பெரிய மணி பதித்த தேரின்மேல் அமர்தலும் தேவரெல் லாம் ஆசி கூறித் தமது துன்பம் இன்றே ஒழிந்ததென்று மலரை மழையாக இடைவிடாமல் பொழிந்தனர்.

கு :—என்றலுமே......வினை முடிந்தது என மலர் மாரி இடை விடாமல் சொரிந்தார் எனக் கூட்டுக.

தசரதனுடைய அடிபோற்றிய அரசர்க்குத் துன்று கழலும் முடியும் எப்படி வந்தன? அவனுக்குத் தோற்குமுன் அவ்வா

றிருந்தனர். அன்றித் தசரதனுடைய வெற்றியைக் கேட்டவுடனேயே அவனுக்குப் பணிந்தடங்கினராதலாலே அவர்தம் முன்னைய வெற்றி, உரிமை ஆபவைகளை ஒப்புக் கொண்டான் என்பதாம்.

சுமந்திரனே முதல்வராய என்பதில் அமைச்சருள் ஒப்பற்ற உயர்வினன் சுமந்திரன் என்பதனைக் குறிக்கிறான் கம்பன்; 'மாங்குடி மருதன் தலைவனாக' என்ற புறநானூற்றுக் குறிப்பு, புலவர் தலைமையைப் பாராட்டு மிடத்தை ஒப்பிடுக. வன்திறல் அமைச்சர்—பின்பு மந்திரப்படலத்தில் 'மற்றது வினையின் வந்ததாயினு மாற்றலாற்றும் பெற்றியர்' என்கிறான். குறளில் திறப்பாடிலாதவர், வல்ல தமைச்சு, மாண்ட தமைச்சு எனக் கூறும் இடங்களிலெல்லாம் அமைச்சர்தம் 'வன்திறல்' குறிக்கப்படுகின்றது. கலைக்கோட்டுமுனி வருகையால் அரக்கரை அழிக்க இராமன் பிறக்கிறானாகையால், வானோர் இன்றெமது வினை முடிந்ததெனு மலர்மாரி பொழிகின்றனர். (57)

### தசரதன் உரோமபதனை அடைதல்

**237.** காகளமும் பல்லியமுங் கனைகடலின்
மேன்முழங்கக் கானம் பாட
மாகதர்க ளருமறைநூல் வேதியர்கள்
வாழ்த்தெடுப்ப மதுரச் செவ்வாய்த்
தோகையர்பல் லாண்டிசைப்பக் கடற்றானை
புடைசூழச் சுடரோ னென்ன
ஏகியரு நெறிநீங்கி யுரோமபதன்
திருநாட்டை யெதிர்ந்தா னன்றே.

காகளமும் பல் இயமும் கனை கடலின்
மேல் முழங்கக், கானம் பாட
மாகதர்கள், அரு மறை நூல் வேதியர்கள்
வாழ்த்து எடுப்ப, மதுரச் செவ்வாய்த்
தோகையர் பல்லாண்டு இசைப்பக், கடல் தானை
புடைசூழச், சுடரோன் என்ன,
ஏகி, அரு நெறி நீங்கி, உரோமபதன்
திரு நாட்டை எதிர்ந்தான் அன்றே.

பொ:—எக்காளமும் (இன்னும்) பல வாத்தியங்களும் ஒலிக்கும் கடலின் (இரைச்சலினும்) மேலாக முழங்கவும், மாகதர்

மங்கலப் பாடல்களை இசைக்கவும் அரிய வேத முணர்ந்த அந்தணர் வாழ்த்தவும் இனிய சிவந்த வாயிதழ்களையுடைய மயில் போலும் (சாயலுடைய) பெண்கள் பல்லாண்டு கூறவும், கடல் போன்ற படைகள் தன்னைச் சுற்றி வரவும், சூரியன் போன்று சென்று (கடத்தற்கு) அரிய வழிகளை யெல்லாம் கடந்து உரோமபத னுடைய நல்ல நாட்டை (தசரதன்) அடைந்தான்.

கு:—காகளம் என்பது எக்காளமெனப்படும் ஊது கொம்பாம். மாகதர் – அரசன் புகழை அருகிலேயே இருந்துகொண்டு பாடு வோர். இவர் நின்றேத்துவார் இருந்தேத்துவார் என இருவகை யர்; இவருள் முன்னவரே சூதர்; பின்னவர் மாகதர். மகதி என்ற யாழைக் கொண்டு பாடியதால் இவர்க்கு மாகதர் என்றபெயர் வந்திருக்கலாம். மகததேசத்தவர்க்கும் மாகதர்என்று பெயர். மதுரச் செவ்வாய்த் தோகையர் பல்லாண்டிசைக்கின் றனர்; செவ்வாய் அவரது இளமையையும் மதுரம் அவர் மொழி யினிமையையும் குறிப்பன. கடலை நால்வகைப்படைகட்கும் உவ மிப்பது தமிழிலக்கியப் பெருவழக்கு. அலைகளைக் குதிரைப்படை யாகவும் திமிங்கிலங்களை யானைப்படையாகவும் நாவாய்களைத் தே ராகவுமெல்லாம் கூறுவர். 'ஏகியருந்தவரொடும் போய்' என்ப தும் பாடம். 'அரு நெறி' என்ற பாடமே சிறக்கிறது; வான்மீக மும் அருநெறி கடத்தலைப்பற்றி இவ்விடத்திற் கூறுகிறது. (58)

### தசரதனை வரவேற்க உரோமபதன் வருதல்

**238.** கொழுந்தோடிப் படர்கீர்த்திக் கோவேந்த
னடைந்தமைசென் றொற்றர் கூறக்
கழுந்தோடும் வரிசிலைக்கைக் கடற்றானை
புடைசூழக் கழற்கால் வேந்தன்
செழுந்தோடும் பல்கலனும் வில்வீச
மாகதர்கள் திரண்டு பாட
எழுந்தோடு முவகையுடன் யோசனைசென்
றுனரசை யெதிர்கோ ளெண்ணி.

கொழுந்து ஓடிப் படர் கீர்த்திக் கோவேந்தன்
அடைந்தமை சென்று ஒற்றர் கூறக்,
கழுந்து ஓடும் வரி சிலைக் கைக் கடல் தானை
புடை சூழக், கழல் கால் வேந்தன்,

செழும் தோடும் பல் கலனும் வில் வீச,
மாகதர்கள் திரண்டு பாட,
எழுந்து ஓடும் உவகையுடன், யோசனை சென்ருன்,
அரசை எதிர்கோள் எண்ணி.

பொ:—கொழுந்து விட்டுப் பரவும் புகழையுடைய அரசர்க்கரசனுன தசரதன் அருகே வந்துள்ளமையைப் போய் ஒற்றர்கள் சொல்ல, வீரக்கழலணிந்த காலையுடைய உரோமபதன், திரண்ட நுனியையுடைய வில்லைக் கையிலுடைய கடல் போன்ற சேனை பக்கங்களிற் சூழ்ந்து வரவும் அழகிய தோடும் (காதணி) பல ஆபரணங்களும் ஒளிவிசவும், மாகதர்கள்கூடித் தன்னைப் புகழ்ந்து பாடவும், மேலெழுகின்ற மகிழ்ச்சியொடும் அரசர்க்கரசனை எதிர் கொள்ள நினைத்து ஒரு யோசனைவழி புறப்பட்டுப் போனுன்.

கு:—கழுந்து-வில் உலக்கை முதலிய வற்றின் திரண்ட நுனி. (59)

உரோமபதன் வணங்கத் தசரதன் தழுவுதல்

239. எதிர்கொள்வான் வருகின்ற வயவேந்தன்
றனைக்கண்ணுற் றெழிலி நாண
அதிர்கின்ற பொலங்தேர்நின் றரசர்பிரா
னிழிந்துழிச்சென் றடியின் வீழ
முதிர்கின்ற பெருங்காத றழைத்தோங்க
வெடுத்திறுக முயங்க லோடும்
கதிர்கொண்ட சுடர்வேலான் றனைநோக்கி
யிவையுரைத்தான் களிப்பின் மிக்கான்.

எதிர்கொள்வான் வருகின்ற வய வேந்தன்
தனைக் கண்ணுற்று, எழிலி நாண
அதிர்கின்ற பொலம் தேர் நின்று அரசர்பிரான்
இழிந்துழிச் சென்று அடியின் வீழ,
முதிர்கின்ற பெரும் காதல் தழைத்து ஓங்க,
எடுத்து இறுக முயங்கலோடும்,
கதிர்கொண்ட சுடர்வேலான் தனை நோக்கி,
இவை உரைத்தான் களிப்பின் மிக்கான்.

பொ:—எதிர்கொண்டழைக்க வருகின்ற வலிமையுடைய (உரோமபதனுகிய) அரசனைப்பார்த்து அரசர்க்கரசனுன தசரதன்

மேகமும் நாணும்படி அதிரும் தேரிலிருந்து இழிந்தபோது (உரோமபதன்) சென்று அவன் கழலடிகளில் வணங்க (தசரதன் அவனை) மிக்க பேரன்பு தழைத்தோங்க எடுத்து இறுகத் தழுவவும்' களிப்புமிக்க உரோமபதன் கூரிய விளங்கும் வேலை யுடைய தசரதனை நோக்கி இவற்றைக் கூறினான். (60)

### தசரதனை உரோமபதன் நகருக்கு அழைத்து வருதல்

**240.** யான்செய்த மாதவமோ விவ்வுலகஞ்
செய்தவமோ யாதோ விங்கண்
வான்செய்த சுடர்வேலோ யடைந்ததென
மனமகிழா மணித்தே ரேற்றித்
தேன்செய்த தார்மௌலித் தேர்வேந்தைச்
செழுநகரிற் கொணர்ந்தான் றெவ்வர்
ஊன்செய்த சுடர்வடிவே லுரோமபத
னென்றுரைக்கு முரவுத் தோளான்.

**"யான் செய்த மா தவமோ? இவ் உலகம்**
**செய் தவமோ? யாதோ? இங்கண்**
**வான் செய்த சுடர் வேலோய்! அடைந்தது?" என,**
**மனம் மகிழா, மணித் தேர் ஏற்றித்,**
**தேன் செய்த தார் மௌலித் தேர் வேந்தைச்**
**செழு நகரில் கொணர்ந்தான், தெவ்வர்**
**ஊன் செய்த சுடர் வடி வேல் உரோமபதன்**
**என்று உரைக்கும் உரவுத் தோளான்.**

பொ:—பகைவரை (உயிர்நீங்கிய) ஊன்மாத்திரமாகச்செய்த ஒளிரும் வடித்த வேலையுடைய உரோமபதன் என்று புகழப்படும் வலிய தோளையுடையவன் "வானுலகையும் (வாழச்) செய்த விளங்கும் வேலையுடைய தசரதனே! (நீ) இங்கு வந்தது யான் செய்த பெரிய தவத்தாலோ? (அன்றி) இந்நாடு செய்த தவத் தாலோ? எதனால்?" என்று மனமகிழ்ந்து, தேனூற்றும் மாலை யணிந்த முடியுடைய தசரதனை இரத்தினம் பதித்த தேரில் ஏற்றிச் செழிப்புமிக்க நகரத்திற்கு அழைத்துக்கொண்டுவந்தான்.

கு:—தெவ்வர் ஊன்செய்த...தோளான், வான்செய்த சுடர் வேலோய் இங்கண் அடைந்தது யான் செய்தமாதவமோ........ யாதோ என வேந்தை மணித்தேர் ஏற்றிச் செழுநகரில் கொணர்ந் தான் என முடிக்க. (61)

### உரோமபதன் தசரதனுக்கு விருந்தளித்தல்

**241.** ஆடகப்பொற் சுடரிமைக்கு மணிமாடத்
திடையோர்மண் டபத்தை யண்ணிப்
பாடகச்செம் பதுமமலர்ப் பாவையர்பல்
லாண்டிசைப்பப் பைம்பொற் பீடத்
தேடுதுற்ற வடிவேலோன் றனையிருத்திக்
கடன்முறைகள் யாவு மீந்து
தோடுதுற்ற மலர்த்தாரான் விருந்தளிப்ப
வினிதுவந்தான் சுரர்நா டீந்தான்.

ஆடகப் பொன் சுடர் இமைக்கும் மணி மாடத்து
இடை ஓர் மண்டபத்தை அண்ணிப்,
பாடகச் செம் பதும மலர்ப் பாவையர்
பல்லாண்டு இசைப்பப், பைம் பொன் பீடத்து
ஏடு துற்ற வடி வேலோன் தனை இருத்திக்,
கடன் முறைகள் யாவும் ஈந்து,
தோடு துற்ற மலர்த் தாரான் விருந்து அளிப்ப,
இனிது உவந்தான் சுரர் நாடு ஈந்தான்.

பொ :—இதழ்நிறைந்த மலர்மாலையணிந்த உரோமபதன் ஆடகமென்னும் பொன்னாலாய ஒளிவிடும் அழகிய தன்அரண்மனையிலே ஒரு மண்டபத்தை அடைந்து பாடகமணிந்த செந்தாமரை போன்ற பாதங்களையுடைய பாவைபோல் அழகிய மகளிர் பல்லாண்டுபாடப் பசும்பொன் ஆதனத்தில் மாலையணிந்த கூரியவேலையுடைய தசரதனை வீற்றிருக்கச்செய்து செய்தற்காம் கடமைகளை (உபசாரங்களை) எல்லாம் செய்து விருந்திட, தேவலோகத்தை (இந்திரற்கு) அளித்த தசரதன் இனிமையாக உண்டு மகிழ்ந்தான்.

கு :—தோடு துற்ற மலர்த்தாரான், இருத்தி, ஈந்து, அளிப்ப சுரர் நாடு ஈந்தான் இனிது உவந்தான் என முடிக்க. (62)

### தசரதன் அயோத்தி மீளுதல்

**242.** செவ்விநறுஞ் சாந்தளித்துத் தேர்வேந்தன்
றனைநோக்கி யிவணீ சேர்ந்த
கவ்வையுரைத் தருளுகென நிகழ்ந்தபரி
சரசர்பிரான் கழற லோடும்

அவ்வியநீத் துயர்ந்தமனத் தருந்தவனைக்
கொணர்ந்தாங்கண் விடுப்பெ னான்ற
செவ்விமுடி யோயெனலுந் தேரேறிச்
சேனையொடு மயோத்தி சேர்ந்தான்.

செவ்வி நறும் சாந்து அளித்துத் தேர் வேந்தன்
தனை நோக்கி, 'இவண் நீ சேர்ந்த
கவ்வை உரைத்தருளுக' என, நிகழ்ந்த பரிசு
அரசர் பிரான் கழறலோடும்,
'அவ்வியம் நீத்து உயர்ந்த மனத்து அரும் தவனைக்
கொணர்ந்து ஆங்கண் விடுப்பென், ஆன்ற
செவ்வி முடியோய்!' எனலும், தேர் ஏறிச்
சேனையொடும் அயோத்தி சேர்ந்தான்.

பொ :—அழகிய மணமுள்ள சந்தனத்தைக் கொடுத்து, தேர்ப்போரில்வல்ல தசரதனைப் பார்த்து 'இங்கு நீ வந்த காரியம் இன்னதெனக் கூறுவாயாக' என, நடந்தவிதத்தை அரசர்க்கரசனாகிய (தசரதன்) கூறவும், 'உயர்ந்த அழகிய முடியணிந்தவனே! பொறுமையழித்துயர்ந்த மனத்தையடைய அரிய தவச் சிருங்க முனிவனை அவ்விடத்தே (உன்நாட்டில்) கொண்டுவந்து சேர்ப்பேன்' என்று உரோமபதன் சொல்லியதும், (தசரதன்) தேரிலேறிச் சேனையுடன் அயோத்தியடைந்தான். (63)

### உரோமபதன் கலைக்கோட்டுமுனியிடம் வரம் இரத்தல்

**243.** மன்னர்பிரா னகன்றதற்பின் வயவேந்த
னருமறைநூல் வடிவு கொண்ட
தன்னமுனி வரனுறையு டனையணுகி
யடியிணைத்தா மரைக ளம்பொன்
மன்னுமணி முடியணிந்து வரன்முறைசெய்
திடவிவணீ வருதற் கொத்த
தென்னையென வடியேற்கோர் வரமருளு
மடிகளென யாவ தென்றான்.

மன்னர் பிரான் அகன்றதன் பின் வய வேந்தன்
அரு மறைநூல் வடிவு கொண்டது
அன்ன முனிவரன் உறையுள் தனை அணுகி,
அடி இணைத் தாமரைகள் அம்பொன்

மன்னும் மணி! முடி அணிந்து, வரன்முறை செய்திட,
"இவண் நீ வருதற்கு ஒத்தது
என்னே?" என, "அடியேற்கு ஓர் வரம் அருளும்
அடிகள்!" என, 'யாவது?' என்றான்.

பொ :—தசரதன் சென்றபின், வலிய உரோமபதன் அரிய வேதங்களே உருக்கொண்டு வந்தாற்போன்ற முனிவன் இருக்குமிடத்தைச் சேர்ந்து, இரண்டு திருவடிமலர்களையும் அழகிய பொன்னாலேயே செய்து மணி பதித்த (தன்) முடியில் சூடிக்கொண்டு, முறையான உபசாரங்களைச்செய்ய (முனிவன் அரசனை) 'இங்கு நீ வரக்காரணம் யாது?' என, (அரசன்) 'அடியேனுக்கு ஒரு வரம் தரவேண்டும்' என்ன, அடிகளாகிய முனிவன் 'அவ்வரம் யாது?' என்றான்.

கு:—அருமறைநூல் வடிவுகொண்டதன்ன முனிவரன் என்பதனொடு 'ஞானத்தின் திருவுரு' எனச் சம்பந்தரையும், 'அன்பு பிழம்பாயினார்' எனக் கண்ணப்பரையும் சேக்கிழார் கூறுவதும் நோக்கத்தகும். அன்றி உறையுளுக்கே அவ்வுவமையைக் கொள்ளலாம். 'சொன்ன நால்வகைச் சுருதியோ.........என்னமாதவம் செய்தது! இச் சிறு குடில்' என விதுரன் கண்ணபிரானை வரவேற்றபோது கூறியதும் இங்கு நோக்கத்தகும். (64)

### உரோமபதன் கலைக்கோட்டுமுனியை அயோத்திக்குப் போய்வர வேண்டுதல்

**244.** புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க
பெருந்தகைதன் புகழிற் பூத்த
அறனொன்றுந் திருமனத்தா னமரர்களுக்
கிடரிழைக்கு மவுண ராயோர்
திறலுண்ட வடிவேலான் றசரதனென்
றுயர்கீர்த்திச் செங்கோல் வேந்தன்
விறல்கொண்ட மணிமாட வயோத்திநக
ரடைந்திவணீ மீட லென்றான்.

'புறவு ஒன்றின் பொருட்டு ஆகத் துலை புக்க
பெருந்தகை தன் புகழில் பூத்த
அறன் ஒன்றும் திருமனத்தான், அமரர்களுக்கு
இடர் இழைக்கும் அவுணர் ஆயோர்

திறல் உண்ட வடி வேலான், தசரதன், என்று
உயர் கீர்த்திச் செங்கோல் வேந்தன்,
விறல் கொண்ட மணி மாட அயோத்தி நகர்
அடைந்து, இவண் நீ மீடல்' என்ருன்.

பொ :—'புரு ஒன்றைக் காப்பதன் பொருட்டாகத் துலேக்கோல் ஏறிய பெருந்தகுதியுடையோனுகிய சிபியின் புகழில் தோன்றிய அறம் நிலேக்கும் அழகிய மனத்தையுடையவனும் தேவர்க்கு இடைஞ்சல் செய்யும் அவுணரின் வலியழித்த கூரிய வேலேயுடைய வனும் ஆகிய தசரதன் என்று ஓங்கிய புகழும் நீதியுமுடைய மன்னனது வெற்றியையும் மணிமாடங்களேயும் உடைய அயோத்திநகர்க்கு நீ சென்று இங்கு மீளுதலே (யான் வேண்டும் வரம்) என்ருன்' (உரோமபதன்.)

கு :—'குறுநடைப் புறவின் தபுதி கண்டஞ்சிச் சீரை புக்க உரவோன் மருக' எனச் சிபி என்ற தமிழரசனின் உயர் பண்பைப் புறநானூறு பாராட்டுகின்றது.

புகழிற்பூத்த அறனென்றுந் திருமனத்தான் என்ற தொடரில் ஓசைநயமும் பொருள்நயமும் ஒன்றி நிற்கின்றன. அறனிழுக்காது அல்லவை நீக்கலே வள்ளுவர் கூறும் அரசனின் தலேக்கடன். அறனென்று மனம் எனில் அறம் அவனேப்போய் அடைக்கல மாகப் பற்றுகிறதென்பதாம். (65)

## கலேக்கோட்டுமுனி அயோத்திக்குப் புறப்படுதல்

**245.** அவ்வரந்தந் தனமினித்தேர் கொணர்தியென
வருந்தவத்தோ னறைத லோடும்
வெவ்வரந்தின் றயில்படைக்குஞ் சுடர்வேலோ
னடியிறைஞ்சி வேந்தர் வேந்தன்
கவ்வையொழிந் துயர்ந்தனனென் றதிர்குரற்றேர்
கொணர்ந்திதனிற் கலேவ லாள
செவ்விநுதற் றிருவினெடும் போந்தேறு
கெனவேறிச் சிறந்தான் மன்னே.

'அவ்வரம் தந்தனம், இனித் தேர் கொணர்தி' என
அரும் தவத்தோன் அறைதலோடும்,
வெவ் அரம் தின்று அயில் படைக்கும் சுடர் வேலோன்,
அடி இறைஞ்சி, "வேந்தர் வேந்தன்
கவ்வை ஒழிந்து உயர்ந்தனன்'' என்று, அதிர் குரல் தேர்
கொணர்ந்து, "இதனில் கலை வலாள!
செவ்வி நுதல் திருவினொடும் போந்து ஏறுக''
என, ஏறிச் சிறந்தான் மன்னே.

போ :—அரிய தவமுனிவன், 'அவ்வரத்தைத் தந்தேன், இனித் தேரைக்கொண்டு வருக' எனக் கூறவும், கொடிய அரம் அறுத்துக் கூராகிய விளங்கும் வேலையுடைய உரோமபதன் (அம்முனிவன்) அடிகளைப் பணிந்து 'அரசர்க்கரசனாகிய தசரதன் துன்பம் நீங்கினன்' என்று கூறி, அதிரும் ஒலியுடைய தேரைக்கொண்டு வந்து 'கலைவல்ல முனிவனே! இதனில் அழகிய நெற்றியுடைய திருமகள்போலும் உன் மனைவியுடன் வந்து ஏறுக' எனவும் (முனிவனும்) அதனில் ஏறி விளங்கினான்.

கு :—வெவ்வரம் தின்று அயில் படைக்கும் சுடர் வேலோன் - என்றது வெவ்விய அரம் தின்னத்தின்ன இன்னும் சுடர்கிறதெனில் அத்தனை முறையும் வென்று திரும்பியது என்றவாறு. வெவ்வரம் தின்று என்றமையால் போர்செய்து மீண்டபோது கொலைத்தொழில் மிகுதியால் மிக மழுங்கியிருந்ததென்பதாம். (66)

## கலைக்கோட்டுமுனி தேரிற் செல்லுதல்

**246.** குனிசிலை வயவனுங் கரங்கள் கூப்பிடத்
★ துனியறு முனிவரர் தொடர்ந்து சூழ்வர
வனிதையு மருமறை வடிவு போன்றொளிர்
முனிவனும் பொறிமிசை நெறியை முன்னினார்.

குனி சிலை வயவனும் கரங்கள் கூப்பிடத்,
துனி அறு முனிவரர் தொடர்ந்து சூழ்வர,
வனிதையும், அருமறை வடிவு போன்று ஒளிர்
முனிவனும் பொறி மிசை நெறியை முன்னினார்.

போ :—வளைத்த வில்லையுடைய வீரனாகிய உரோமபதன் கைகளைக் குவித்து வணங்கிடவும், கோபமற்ற சிறந்த முனிவர்கள்

விடாது புடைசூழவும், அருமையான வேதத்தின் உருவத்தை ஒத்துவிளங்குகின்ற கலைக்கோட்டுமுனிவனும் (அவனது) மனைவியாகிய சாந்தையும் தேரின்மீது (ஏறி அயோத்திக்குச் செல்லும்) வழியை நோக்கிச் சென்றார்கள்.

கு :—வயவன் - வீரன், இங்கே உரோமபதனைக் குறித்தது. துனி - கோபம். வேதஞானம் நிறைந்த கலைவல்லாளன் கலைக் கோட்டுமுனியாதலால், அவன் அருமறை வடிவுபோன்று விளங்கினான் என்றார். வனிதையென்றால் பெண்; இங்கே பெண்ணாகிய சாந்தையைக் குறித்தது. பொறியென்றால் யந்திரம்: இங்கே யந்திரத்தையுடைய தேருக்காயிற்று. (67)

## தேவர்களின் மகிழ்ச்சி

**247.** அந்தர துந்துமி முழக்கி யாய்மலர்
சிந்தினர் களித்தன ரறமுந் தேவரும்
வெந்தெழு கொடுவினை வீழ்க்கு மெய்ம்முதல்
வந்தெழ வருடரு வானென் றெண்ணியே.

அந்தர துந்துமி முழக்கி, ஆய் மலர்
சிந்தினர், களித்தனர், அறமும், தேவரும்,
'வெந்து எழு கொடுவினை வீழ்க்கும் மெய்ம் முதல்
வந்து எழ அருள் தருவான் !' என்று எண்ணியே.

பொ :—அறக்கடவுளும் தேவர்களும் (நெருப்புப்போல) எரிந்தெழுகிற தீவினைகளை அழிக்கவல்ல உண்மைப்பொருளாகிய முதற் கடவுள் (திருமால் இவ்வுலகில்) வந்து பிறக்கும்படி (இம் முனிவன்) கருணைசெய்வான் என்று நினைத்துப் பெருமகிழ்ச்சி யடைந்தவர்களாகி, தேவதுந்துமியை முழக்கி ஆராய்ந்தெடுத்த (சிறந்த) பூக்களை (அம்முனிவன்மேற்) சொரிந்தனர்.

கு :—துந்துமி - பேரிகை. (68)

## கலைக்கோட்டு முனிவரவைத் தசரதன் அறிதல்

**248.** தூதுவ ரவ்வழி யயோத்தி துன்னினார்
மாதிரம் பொருததோண் மன்னர் மன்னன்முன்
ஓதினர் முனிவர வோத வேந்தனும்
காதலென் றளவறு கடலு ளாழ்ந்தனன்.

தூதுவர், அவ்வழி அயோத்தி துன்னினர்,
மாதிரம் பொருத தோள் மன்னர் மன்னன்முன்
ஓதினர் முனிவரவு: ஓத, வேந்தனும்,
காதல் என்று அளவு அறு கடல் உள் ஆழ்ந்தனன்.

பொ :—அப்பொழுது, தூதர்கள் அயோத்திநகரையடைந்து மலைகளையொத்த தோள்களையுடைய தசரதசக்கரவர்த்தியின் முன்னிலையில் கலைக்கோட்டுமுனிவன் வந்துகொண்டிருப்பதைச் சொன்னார்கள் : சொல்லலும், தசரதமன்னனும் அன்பு என்கிற அளவில்லாத கடலினுள்ளே முழுகினான்.

கு ;—அவ்வழி - அப்பொழுது. மாதிரம் - மலை; திசைகளும் ஆம். முனியின் வரவைக் கேட்டதும், தசரதனுக்கு அவன் மீதுள்ள அன்பு கடலினும் பெரிதாயிற்று என்க. (69)

### முனியை எதிர்கொளத் தசரதன் எழுதல்

**249.** எழுந்தனன் பொருக்கென விரத மேறினன்
பொழிந்தன மலர்மழை யாசி பூத்தன
மொழிந்தன பல்லிய முரச மார்த்தன
விழுந்தன தீவினை வேரி னோடுமே.

எழுந்தனன் பொருக்கென, இரதம் ஏறினன் ;
பொழிந்தன மலர் மழை; ஆசி பூத்தன ;
மொழிந்தன பல் இயம்; முரசம் ஆர்த்தன ;
விழுந்தன தீவினை வேரினோடுமே.

பொ :—(கேட்ட தசரதன் அன்புகொண்டவனாய் முனிவனை எதிர்கொள்ளும் பொருட்டு) விரைவாக எழுந்து தேரின்மேலேறினான் ; அப்பொழுது பூக்கள் மழையாகச் சொரியப்பட்டன ; (முனிவர்களுடைய) ஆசிர்வாதங்கள் உண்டாயின ; முரசங்கள் ஆரவாரித்தன ; பலவகை வாத்தியங்கள் ஒலித்தன ; தீவினைகள் வேரோடும் கீழே சாய்ந்தன.

கு :—சுற்றிலுமுள்ளவர்கள் மழைபோல் மலர்களைத் தூவினர் என்க. இராமன் பிறப்பதற்குரிய வேள்வியைத் தொடங்கவரும் முனிவனைத் தசரதன் வரவேற்கப் புறப்படுவதால் தீவினை அழிவது திண்ணமாகையால் தீவினை வேரோடும் அழிந்த தென்றார். (70)

## தசரதன் முனிவனைக் காணுதல் 250—252

**250.** பிதிர்ந்ததெம் மனத்துயர்ப்
பிறங்க லென்றுகொண்
டதிர்ந்தெழு முரசுடை
யரசர் கோமகன்
முதிர்ந்தமா தவமுடை
முனியைக் கண்களால்
எதிர்ந்தனன் யோசனை
யிரண்டொ டொன்றினே.

'பிதிர்ந்தது எம் மனத் துயர்ப் பிறங்கல்' என்றுகொண்டு,
அதிர்ந்து எழு முரசு உடை அரசர் கோமகன்,
முதிர்ந்த மாதவம் உடை முனியைக் கண்களால்
எதிர்ந்தனன், யோசனை இரண்டொடு ஒன்றினே.

பொ :—அதிர்ச்சிபெற்று ஒலியெழுகின்ற பேரிகையையுடைய தசரத சக்கரவர்த்தி, 'எனது மனத்திலுள்ள துன்பமாகிய மலை பொடியாய்விட்டது' என்று எண்ணி, முற்றின பெருந்தவத்தை யுடைய கலைக்கோட்டுமுனிவனை மூன்று யோசனைதூரம் (எதிர் சென்று) கண்களாற் கண்டனன்.

கு :—இது முதல் மூன்று கவிகள் ஒரு தொடர். பிதிர்ந்தது - பொடியாகியது. பிறங்கல் - மலை : நெடுந்தூரத்திலுள்ளவர் களுக்கும் விளங்குவதால் இப்பெயர் பெற்றது. எதிர்சென்று கண்களாற் கண்டனன் என்று கூறவேண்டியதைக் 'கண்களால் எதிர்ந்தனன்' என அமைத்துக் கூறிய நயம் ஈண்டு நோக்கற் பாலது. மூன்று யோசனை தூரமும் கண்களைப் பரப்பி எப்பொழுது முனிவனைக் காண்போம் என்னும் ஆர்வத்தால் பார்வையைச் செலுத்திக்கொண்டே சென்று கண்டனன் என்ற வாறு. (71)

**251.** நற்றவ மனைத்துமோர் நவையி லாவுருப்
பெற்றிவ ணடைந்தெனப் பிறங்கு வான்றனைச்
சுற்றிய சீரையு முழையின் றோற்றமும்
முற்றுறப் பொலிதரு மூர்த்தி யான்றனை.

நல் தவம் அனைத்தும் ஓர் நவை இலா உருப்
பெற்று இவண் அடைந்து எனப் பிறங்குவான் தனைச்,
சுற்றிய சீரையும், உழையின் தோற்றமும்,
முற்றுறப் பொலிதரு மூர்த்தியான் தனை.

பொ:—நல்ல தவமெல்லாம் (திரண்டு) ஒரு குற்றமுமில்லாத வடிவத்தையடைந்து இங்கே வந்துள்ளது என்று (கண்டோர்) எண்ணும்படி விளங்குபவனும், (அரையில்) உடுத்த மரவுரியும் (மேலே) மானையொத்த காட்சி நிரம்ப விளங்குகின்ற தலையும் உடையவனாகிய (அக்) கலைக்கோட்டுமுனிவனை (எதிர்ந்தனன்.)

கு :—(தசரதன்) எதிர்ந்தனன் என முன் செய்யுளிலிருந்து வருவித்துரைக்க.

பிறங்குவான்றனை - விளங்குபவனை. சீரை - மரவுரி. கலைக்கோட்டுமுனி நெற்றியில் மானின் கொம்பையுடையவனாதலால், 'உழையின் தோற்றமும் என்னப்பட்டது. 'முற்றுறப்பொலிதரு' என்றதனால், மார்பில் மான்தோல் (கிருஷ்ணாஜினம்) அணிந்திருந்ததும் குறிக்கப்பெற்றது. மூர்த்தம் – தலை : மூர்த்தியான் – தலையையுடையவன் : நெற்றியில் மான்கொம்பு வளர்ந்திருந்தலால், 'மூர்த்தியான்' என்னலாயிற்று. (72)

**252.** அண்டர்க டுயரமு மரக்க ராற்றலும்
விண்டிடப் பொலிதரும் வினைவ லாளனைக்
குண்டிகை குடையொடு குலவு நூன்முறைத்
தண்டொடு பொலிதரு தடக்கை யான்றனை.

அண்டர்கள் துயரமும் அரக்கர் ஆற்றலும்
விண்டிடப் பொலிதரும் வினை வலாளனைக்,
குண்டிகை குடையொடு குலவு நூல் முறைத்
தண்டொடு பொலிதரு தடக்கையான் தனை.

பொ :—தேவர்களின் துன்பமும் இராக்கதர்களின் வலிமையும் நீங்கும்படி, விளங்குகின்ற (வேள்வித்) தொழில் வல்லவனும், சாத்திரமுறைப்படியே விளங்குகின்ற முக்கோலும் கமண்டலமும் குடையும் கொண்ட பெரிய கைகளையுடையவனுமான அக்கலைக்கோட்டு முனிவனை (எதிர்ந்தனன் 250).

கு :—(தசரதன்) எதிர்ந்தனன் என வருவித்துரைக்க. இங்கே 'வினை' என்றது வேள்வித் தொழிலை. நூல்முறைக் குலவு

தண்டு - சாத்திர முறைப்படியே விளங்குகின்ற முக்கோல்: அதாவது, அரி அயன் அரனென்னும் மூவரும் ஒருவரென்று சொல்லுதல் தன்னிடத்தே அமைந்த முக்கோல். தண்டு, குடை, கமண்டலம் முதலியன தாங்கிச் செல்லுதல் அந்தணர்க்குரிய ஒழுக்கம். 'நூலே கரக முக்கோல் மணையே, ஆயுங்காலை அந்த ணர்க் குரிய' என்பது தொல்காப்பியச் சூத்திரம். 'எரித்தரு கதிர்தாங்கி யேந்திய குடை நீழல், உரித்தாழ்ந்த கரகமு முரை சான்ற முக்கோலும், நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத் துக், குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணிர்'' என்ற கலித்தொகைப் பாடலின் (9) அடிகள் இங்கு ஒப்பு நோக்கத்தகும். (73)

### கலைக்கோட்டுமுனியைத் தசரதன் வணங்குதல்

**253.** இழிந்துபோ யிரதமாண்
டிணைகொ டாண்மலர்
விழுந்தனன் வேந்தர்தம்
வேந்தன் மெய்ம்மையால்
மொழிந்தன ளுசிகண்
முதிய நான்மறைக்
கொழுந்துமேற் படர்தரக்
கொளுகொம் பாயினன்.

**இழிந்து போய் இரதம் ஆண்டு இணைகொள் தாள் மலர்**
**விழுந்தனன் வேந்தர்தம் வேந்தன்; மெய்ம்மையால்**
**மொழிந்தனன் ஆசிகள், முதிய நால் மறைக்**
**கொழுந்து மேல் படர்தரக் கொளுகொம்பு ஆயினன்.**

பொ:—தசரதசக்கரவர்த்தி (முனிவனை எதிர்கண்ட) அவ்விடத் தில் (தனது) தேரினின்று இறங்கி (அருகில்) சென்று, (அம் முனிவனுடைய) மலர்போன்ற இரண்டு பாதங்களிலும் வீழ்ந்து வணங்கினன். பழமையான நான்கு வேதங்களாகிய கொடிகள் மேலேறிப் படர்வதற்குக் கொள்கொம்பாயுள்ள அம்முனிவன் உண்மையான (பொருள் நிரம்பிய) ஆசீர்வாத மொழிகளைக் கூறினன்.

கு:—வேந்தர்தம் வேந்தன் ஆண்டு இரதம் இழிந்துபோய் இணைகொள் தாள்மலர் விழுந்தனன்: முதிய நால் மறைக் கொழுந்து மேல் படர்தரக் கொளுகொம்பு ஆயினன், மெய்ம்மை யால் ஆசிகள் மொழிந்தனன் எனக் கூட்டுக.

முனிவனுடைய மொழிகள் பலித்தேவிடும் நிறைமொழிகளாகையால் 'மெய்ம்மையால்' என்றார். வேதங்களும் அவற்றிற் கூறிய நல்லொழுக்கங்களும் உலகங்களில் எங்கும் செழித்து வளர்தற்குக் காரணமானவன் கலைக்கோட்டுமுனிவன் ஆதலால், 'கொளுகொம்பாயினன்' என்றார். (74)

### கலைக்கோட்டுமுனியை அழைத்துப் போதல்

**254.** அயல்வரு முனிவரு
மாசி கூறிடப்
புயல்பொழி தடக்கையாற்
றொழுது பொங்குநீர்க்
கயல்பொரு விழியொடுங்
கலைவ லாளனை
இயல்பொடு கொணர்ந்தன
னிரத மேற்றியே.

அயல் வரும் முனிவரும் ஆசி கூறிடப்
புயல் பொழி தடக்கையால் தொழுது, பொங்கு நீர்க்
கயல் பொரு விழியொடும், கலைவலாளனை,
இயல்பொடு கொணர்ந்தனன் இரதம் ஏற்றியே.

பொ :—(அக்கலைக்கோட்டு முனிவனது) அருகில் வருகின்ற (மற்ற) முனிவர்களும் (தன்னை) ஆசிர்வதிக்கும்படி (தசரதன்) மழைபோன்று வழங்கவல்ல (தன்னுடைய) பெரிய கைகளால் வணங்கி, மிக்க நீரில் வாழ்கின்ற கயல்மீனைப் போன்ற கண்களையுடையவளான சாந்தையுடனே நூல்களில் வல்லவனான கலைக்கோட்டுமுனிவனைத் தேரின்மேலேறி வீற்றிருக்கச் செய்து முறைமைப்படியே (அயோத்திக்கு) அழைத்துக்கொண்டு வந்தான்.

கு :—கயல் பொரு விழி : அன்மொழித்தொகை; சாந்தையைக் குறித்துநின்றது. (75)

### தசரதனும் முனியும் அயோத்தி அடைதல்

**255.** அடிகுரன் முரசதி ரயோத்தி மாநகர்
முடியுடை வேந்தனம் முனிவ னேடுமோர்
கடிகையி னடைந்தனன் கமல வாண்முக
வடிவுடை மடந்தையர் வாழ்த்தெ டுப்பவே.

அடி குரல் முரசு அதிர் அயோத்தி மா நகர்,
முடி உடை வேந்தன், அம் முனிவனோடும், ஓர்
கடிகையின் அடைந்தனன், கமல வாள் முக
வடிவு உடை மடந்தையர் வாழ்த்து எடுப்பவே.

பொ :—கிரீடத்தையுடைய மன்னனாகிய தசரதன் தாமரை மலர் போன்ற ஒளியையுடைய முகத்தையும் அழகையுமுடைய மகளிர் வாழ்த்துப்பாடலைப் பாட, அந்தக் கலைக்கோட்டு முனிவனுடனே ஒரு நாழிகைப் பொழுதினுள்ளே, அடிக்கப்படுகின்ற ஒலியையுடைய பேரிகைகள் முழங்குகின்ற அயோத்தி என்னும் பெரிய நகரை அடைந்தனன்.

கு :—கடிகை என்பது இருபத்துநான்கு நிமிடநேரம், ஒரு நாழிகை. வாழ்த்து எடுப்ப – பல்லாண்டு பாட. பல்லாண்டு பாடுவதற்கென்று அழகிய இள மகளிர் அரச சபைகளில் அமர்த்தப்பட்டிருப்பர். (76)

வசிட்டனும் கலைக்கோட்டுமுனியும் அவையை அடைதல்

**256.** கசட்டுறு வினைத்தொழிற் கள்வ ராயுழல்
அசட்டர்க ளைவரை யறுவ ராக்கிய
வசிட்டனு மருமறை வழக்கு நீங்கலா
விசிட்டனும் வேத்தவை விதியின் மேவினர்.

கசடு உறு வினைத் தொழில் கள்வர் ஆய் உழல்
அசட்டர்கள் ஐவரை அறுவர் ஆக்கிய
வசிட்டனும், அரு மறை வழக்கு நீங்கலா
விசிட்டனும், வேத்தவை விதியின் மேவினர்.

பொ :—குற்றம் மிக்க தீவினைச் செயல்களையுடைய கள்வர்களாகத் திரிகின்ற நல்லறிவில்லாத ஐவர்களை (ஐம்பொறிகளை) அறுவர்களாகச் செய்த (அழிந்து போகுபவர்களாகச் செய்த) வசிட்ட முனியும், அரிய வேத நெறிப்படி ஒழுகுதலைத் தவிராத பெரியோனான கலைக்கோட்டு முனியும் அரச சபையை முறைப்படி அடைந்தார்கள்.

கு :—எதுகை நயம் கருதிக் கசடு என்பது கசட்டு என விகாரமாயிற்று. பொறிவாயிலைந்தினையும் அவித்தவர் வசிட்டர் என்பது முதலிரண்டடியாற் போந்த பொருள். (77)

### கலைக்கோட்டுமுனியை உபசரித்தல்

**257.** மாமணி மண்டப மன்னி மாசறு
தூமணித் தவிசிடைச் சுருதி யேநிகர்
கோமுனிக் கரசனை யிருத்திக் கொள்கடன்
ஏமுறத் திருத்திவே றினைய செப்பினான்.

மா மணி மண்டபம் மன்னி மாசு அறு
தூ மணித் தவிசு இடைச் சுருதியே நிகர்
கோ முனிக்கு அரசனை இருத்திக் கொள் கடன்
ஏம் உறத் திருத்தி வேறு இனைய செப்பினான்.

பொ :—(தசரதன்) சிறந்த அழகிய மண்டபத்தைப் பொருந்தி வேதத்தையே ஒத்தவனான சிறந்த முனிவர்கள் தலைவனான அக் கலைக்கோட்டுமுனியைக் குற்றமற்ற சுத்தமான இரத்தினங்கள் இழைத்துச் செய்யப்பட்ட ஆசனத்தில் அமர்த்தி (அம்முனிவன்) பெறுதற்குரிய உபசாரங்களை (அவன்) மகிழும்படி திருத்தமாகச் செய்து மற்றும் இவ்வார்த்தைகளைச் சொல்வானானான்.

கு :—அவன் செப்பியன அடுத்த செய்யுளிற் காண்க. எழுதாக் கிளவியாய்க் குரு சிடனுக்குச் சொல்லி அவ்வாறே தொன்று தொட்டுக் கேள்வி மூலமாகச் செவிவழியாய் வருதல்பற்றி வேதம் சுருதி யென்னப்பட்டது. ஏம்: ஏமம்-மகிழ்ச்சி. (78)

### தசரதன் கலைக்கோட்டுமுனியைத் துதித்தல்

**258.** சான்றவர் சான்றவ தரும மாதவம்
போன்றொளிர் புனிதநின் னருளிற் பூத்தவென்
ஆன்றதொல் குலமினி யரசின் வைகுமால்
யான்றவ முடைமையு மிழப்பின் றுமரோ.

‘சான்றவர் சான்றவ! தரும மாதவம்
போன்று ஒளிர் புனித! நின் அருளில் பூத்த என்
ஆன்ற தொல் குலம் இனி அரசின் வைகுமால்:
யான் தவம் உடைமையும் இழப்பின்றும், அரோ !

பொ :—‘நற்குணங்களால் நிறைந்த பெரியோர்க்கும் பெரியோனே ! அறத்தையும் சிறந்த தவத்தையும் போல விளங்குகின்ற தூயவனே ! உனது கருணையைப் பெற்றதனாற் பொலிவடைந்த

எனது பெரிய பழமையான வமிசமானது இனிமேல் (தொடர் வருமல்) அரசாட்சியில் நிலை பெறும்; யான் (முற்பிறப்பிற்) செய்த நற்றவத்தையுடையவனுன தன்மையும் பயனுடையதாகும்.

கு :—'உனது பேரருளால் என் மரபு அற்றுப் போகாமல் வாழையடி வாழையாக வளர்ச்சியுற்று நிலைபெறுவதாயிற்று' எனக் கூறினுன் என்பது கருத்து. (79)

**கலைக்கோட்டுமுனி தன்னை அழைத்த காரணம் வினுதல் 259-260**

**259.** என்னலு முனிவர னினிதி னேக்குரு
மன்னவர் மன்னகேள் வசிட்ட னென்னுமோர்
நன்னெடுந் தவன்றுணை நவையில் செய்கையால்
நின்னையிவ் வுலகினி னிருபர் நேர்வரோ.

**என்னலும், முனி வரன் இனிதின் நோக்குரு,**
**'மன்னவர் மன்ன ! கேள்! வசிட்டன் என்னும் ஓர்**
**நல் நெடும் தவன் துணை நவை இல் செய்கையால்**
**நின்னை இவ் உலகினில் நிருபர் நேர்வரோ ?'**

பொ :—என்று (தசரதன்) சொன்னவளவில், கலைக்கோட்டு முனிவன் (தசரதனை) மகிழ்ச்சியுடன் பார்த்து, 'அரசர்க்கரசனே! கேட்பாயாக. வசிட்டன் என்று சிறப்பித்துச் சொல்லுகின்ற நல்ல பெருந்தவமுடைய ஒரு முனிவன் உனக்கு உதவியாக இருந்து செய்து வரும் குற்றமில்லாத நற்செயல்களினுல் உன்னை இவ்வுலகத்திலுள்ள அரசர்கள் ஒப்பாவாரோ? (ஒப்பாகார்).

கு :—வசிட்டனைக் குருவாகக் கொண்டு அவன் உதவியால் நல்ல பல வேள்விகளைச் செய்துவருவதால் தசரதன் அரசர்களுக்குள்ளே இணையற்றவனுனன் என்றவாறு. (80)

**260.** என்றன பற்பல வினிமை கூறிநற்
குன்றுறழ் வரிசிலைக் குவவுத் தோளினுய்
நன்றிகொ ளரிமக நடத்த வெண்ணியோ
இன்றெனை யழைத்ததிங் கியம்புவா யென்ருன்.

என்றன பற்பல இனிமை கூறி, ‘நல்
குன்று உறழ் வரி சிலைக் குவவுத் தோளினாய்!
நன்றி கொள் அரி மகம் நடத்த எண்ணியோ
இன்று எனை அழைத்தது இங்கு? இயம்புவாய்!’ என்றான்.

பொ :—என்பவை போன்ற பலவகைப் பட்ட இனிய சொற்களைச் சொல்லி, ‘நல்ல மலையை யொத்தனவும், கட்டமைந்த வில்லை யேந்தினவுமான திரட்சி கொண்ட தோள்களையுடையவனே! இப்பொழுது என்னை இவ்விடத்திற்கு (நீ) வரவழைத்தது, பல நன்மைகளைக் கொண்ட அசுவமேத யாகத்தை (என்னைக் கொண்டு) நடப்பித்தற்குக் கருதியோ? சொல்வாய்!’ என்று (தசரதனை) வினவினான்.

கு :—அரி - குதிரை : மகம்-யாகம்; அசுவமேதயாகம். (81)

### தசரதன் புதல்வனில்லாக்குறையைப் போக்கவேண்டுதல் 261—262

**261.** எனக்கலை மாமுகச் சிருங்க னிவ்வுரை
தனைச்சொலத் தரணிபர்க் கரசன் றான்மகிழ்ந்
தனைத்துல குயிரொடு மறங்க ளுய்யத்தன்
மனத்துய ரகன்றிட வணங்கிக் கூறுவான்.

எனக் கலை மா முகச் சிருங்கன் இவ் உரை
தனைச் சொலத், தரணிபர்க்கு அரசன் தான் மகிழ்ந்து,
அனைத்து உலகு உயிரொடும் அறங்கள் உய்யத், தன்
மனத் துயர் அகன்றிட, வணங்கிக் கூறுவான்.

பொ :—என்று கலைமான் கொம்பை நெற்றியிலேயுடைய கலைக்கோட்டு முனிவன் இந்த மொழியைச் சொல்லிக் கேட்கவும், உலகில் வாழ்வோர்க்கு அரசனான தசரதன் களிப்படைந்து எல்லா உலகத்து உயிர்களும் தருமங்களும் வாழும்படியாகவும், தனது உள்ளத்திலேயுள்ள கவலை நீங்கும் படியாகவும் (முனிவனைத்) தொழுது சொல்லுவானானான்.

கு :—தசரதன் கூறியது அடுத்த செய்யுளிற் காணப்படும். நெற்றியிலே மான்கொம்பையுடைய முனிவனானதால், கலைமா முகச் சிருங்கன் என்றார்.

திருமால் இராமனாக வந்து அவதரிப்பதற்குப் பொருத்தமாகத் தசரதன் மக்கட் பேற்றினையளிக்கும் யாகத்தை நடத்தும்படி

வேண்டப் போவதால், எல்லா உலகங்களும் அவற்றில் வாழுயிர்களும் தருமங்களும் வாழும்படியாகவும், தன் மனக்கவலை மாறும்படியாகவும் கூறலுற்முன் என்றார். (82)

**262.** உலப்பில்பல் லாண்டெலா முறுக ணின்றியே
தலப்பொறை யாற்றினென் றனயர் வந்திலர்
அலப்புநீ ருடுத்தபா ரளிக்கு மைந்தரை
நலப்புகழ் பெறவினி நல்க வேண்டுமால்.

'உலப்பு இல் பல் ஆண்டு எலாம் உறுகண் இன்றியே
தலப்பொறை ஆற்றினென், தனயர் வந்திலர்;
அலப்பு நீர் உடுத்த பார் அளிக்கும் மைந்தரை,
நலப் புகழ் பெற, இனி, நல்க வேண்டும், ஆல்.'

பொ :—'குறைவில்லாதபடி பல ஆண்டுகளாக எந்நாளும் யாதொரு துன்பமும் உண்டாகாமல் பூமிபாரத்தைத் தாங்கி வந்தேன்; புத்திரர் பிறந்தாரில்லை; ஒலிக்கின்ற நீரையுடைய கடலாலே சூழப்பட்ட (இந்த) நிலவுலகைக் காக்குந் தன்மையுள்ள புதல்வரை (நான்) நல்ல புகழ் அடையும்படி (எனக்குப் பிறக்குமாறு) அருள் புரிதல் வேண்டும்.

கு :—இவ்வாறு தசரதன் கலைக்கோட்டுமுனிவனை வேண்டினான் என்க. உலப்பு – குறைவு. தலம் – பூமி. அலப்பு: அலம்பு - ஒலிக்கும் : வலித்தல் விகாரம். 'மகன் தந்தைக் காற்று முதவி இவன் தந்தை என்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்' என்ற குறளுக்கேற்பத் தனக்கு நல்ல புகழைக் கொடுக்கவல்ல புதல்வரைத் தசரதன் வேண்டினான். அவர்கள் உலகையாளும் வல்லமை யுள்ளவர்களாகவும் இருக்க வேண்டும் என்று குறிப்பிட்டான், தன் முதன்மையான நோக்கம் அதுவேயாகலின். (83)

கலைக்கோட்டுமுனி மாமகம் தொடங்கச் செல்லுதல்

**263.** என்றலு மரசநீ யிரங்க லிவ்வுல
கொன்றுமோ வுலகமீ ரேழு மோம்பிடும்
வன்றிறன் மைந்தரை யளிக்கு மாமகம்
இன்றுநீ யியற்றுதற் கெழுக வீண்டென்றான்.

என்றலும், ‘ அரச ! நீ இரங்கல் ! இவ் உலகு
ஒன்றுமோ ? உலகம் ஈர் ஏழும் ஓம்பிடும்
வன் திறல் மைந்தரை அளிக்கும் மா மகம்,
இன்று நீ இயற்றுதற்கு எழுக ஈண்டு’ என்றான்.

பொ :—என்று (தசரதன்) கூறியதும், (கலைக்கோட்டு முனிவன்) ‘மன்னவா ! நீ வருந்த வேண்டாம், இந்த உலகம் ஒன்று மட்டுமா? பதினான்கு உலகங்களையும் காக்க வல்ல மிக்க வல்லமையையுடைய புதல்வர்களைக் கொடுக்க வல்ல பெரிய யாகத்தை இப்பொழுது இவ்விடத்தில் செய்வதற்கு நீ புறப்படு’ என்று சொன்னான்.

கு :—திருமால் பதினான்கு உலகங்களுக்கும் காக்குங் கடவுள் ஆதலால், ‘உலக மீரேழு மோம்பிடும் வன்றிறன் மைந்தரை’ என்றான்.

மைந்தரை அளிக்கும் மாமகம் - புத்திரகாமயாகம்: மா - குதிரை, என்று கொண்டு, அசுவமேதயாகம் என்றும் பொருள் கொள்ளலாம். முதலில், அசுவமேதயாகம் செய்து அதன்பின் புத்திரகாமயாகம் செய்ததாகப் பின்னால் கூறப்பட்டுள்ளது: ‘ அரிமகம் நடத்த எண்ணியோ என்னை அழைத்தனை ?’ என்று முன்னரும் கலைக்கோட்டுமுனி கூறினமை காண்க. (84)

### தசரதன் வேள்விச்சாலையிற் புகுதல்

**264.** ஆயதற் குரியன கலப்பை யாவையும்
ஏயெனக் கொணர்ந்தனர் நிருபர்க் கேந்தலும்
தூயநற் புனல்படீஇச் சுருதி நூன்முறை
சாய்வறத் திருத்திய சாலை புக்கனன்.

ஆயதற்கு உரியன கலப்பை யாவையும்
ஏயெனக் கொணர்ந்தனர்; நிருபர்க்கு ஏந்தலும்
தூய நல் புனல் படீஇச், சுருதி நூல் முறை
சாய்வு அறத் திருத்திய சாலை புக்கனன்.

பொ :—அந்த யாகத்திற்கு வேண்டியனவான கருவிகள் எல்லாவற்றையும் (அரசன் கட்டளையால் ஏவலாளர்கள்) விரைவாகக் கொண்டுவந்தார்கள் ; அரசர்களுக்குத் தலைவனாகிய தசரதசக்கரவர்த்தியும் சுத்தமான நல்ல நீரிலே குளித்து, வேதசாத்திரங்களின் விதி முறைப்படியே குற்றமில்லாதபடி திருத்தமாக அமைக்கப்பட்டுள்ள யாகசாலையில் போய்ச் சேர்ந்தான்.

கு :—கலப்பை - வேள்விக்கமைந்த உறுப்புக்கள்; உழுபடையு மாம். (85)

## ஓர் ஆண்டு அசுவமேதயாகம் செய்தல்

**265.** முழுங்கழன் மும்மையு முடுகி யாகுதி
வழங்கியே யீரறு திங்கள் வாய்த்தபின்
தழங்கின துந்துமி தாவில் வானகம்
விழுங்கினர் விண்ணவர் வெளியின் றென்னவே.

முழங்கு அழல் மும்மையும் முடுகி, ஆகுதி
வழங்கியே, ஈர் அறு திங்கள் வாய்த்தபின்,
தழங்கின துந்துமி; தா இல் வானகம்
விழுங்கினர் விண்ணவர் வெளி இன்று என்னவே.

பொ :—இரைந்து எழுகின்ற மூன்று வகை நெருப்பையும் விரைவாக வளர்த்து ஆகுதிகளை ஓமஞ் செய்ய (இங்ஙனம்) பன்னிரண்டு மாதம் சென்ற பின்பு, பேரிகைகள் ஒலித்தன; தேவர்கள் வெற்றிடம் சிறிதும் இல்லை யென்னும்படி கெடுதலில்லாத வானிடத்தை முற்றிலும் அடைத்துக்கொண்டு நெருங்கினர்.

கு :—அழல் மும்மை-மூன்று தீ. ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி என்பன, 'நாற்சதுரமும் முச்சதுரமும் வில்வடிவு மாகிய மூன்று வகையைக் கருதின. (திருமுருகாற்றுப்படை, 181, நச்சினார்க்கினியர் உரை) 'ஒன்று வேதத்தை வழங்கவும், ஒன்று தேவர்கட்குத் தட்சிணை கொடுக்கவும், ஒன்று பூலோகத்தை ரட்சை பண்ணவும்' அமைந்தவை (ஷை வேறுரை). அசுவமேத யாகம் ஓராண்டளவிற் செய்யப்படுவதால், 'ஈரறு திங்கள்' என்றார். (86)

## புத்திரகாமயாகம் செய்தல்

**266.** முகமல ரொளிர்தர மொய்த்து வானுளோர்
அகவிரை நறுமலர் தூவி யார்த்தெழத்
தகவுடை முனியுமத் தழலி னுப்பணே
மகவரு ளாகுதி வழங்கி னனரோ.

முகம் மலர் ஒளிர் தர மொய்த்து, வான் உளோர்
அகம் விரை நறு மலர் தூவி ஆர்த்து எழத்,
தகவு உடை முனியும், அத் தழலின் நாப்பணே
மகவு அருள் ஆகுதி வழங்கினன், அரோ.

பொ :—வானுலகத்துள்ளோராகிய தேவர்கள் தாமரை மலர் போன்ற முகங்கள் விளக்கம் பெற நெருங்கி, வாசனையை உள்ளே யுடைய நல்ல கற்பகமலர்களைப் பொழிந்து ஆரவாரத்துடன் கிளம்பிவர, மேன்மையையுடைய கலைக்கோட்டு முனிவனும் புத்திரரைக் கொடுத்தற்குரிய ஆகுதிகளை (யாகத்தின்) அந்த நெருப்பின் நடுவிலே ஓமஞ் செய்தான்.

கு:—மகவு அருள் ஆகுதி என்றதால், இது புத்திரகாமயாகத்தைக் குறித்தது. (87)

பூதம் சுதைப்பிண்டத்துடன் எழுதல்

267. ஆயிடைக் கனலினின் றம்பொற் றட்டமீத்
தூயநற் சுதைநிகர் பிண்ட மொன்றுசூழ்
தீயெரிப் பங்கியுஞ் சிவந்த கண்ணுமாய்
ஏயெனப் பூதமொன் றெழுந்த தேந்தியே.

ஆயிடைக் கனலில் நின்று, அம் பொன் தட்டம் மீத்
தூய நல் சுதை நிகர் பிண்டம் ஒன்று, சூழ்
தீ எரிப் பங்கியும் சிவந்த கண்ணுமாய்,
ஏயெனப், பூதம் ஒன்று, எழுந்தது, ஏந்தியே.

பொ :—அப்பொழுது, சூழ்ந்தெரிகிற நெருப்புப் போலச் சிவந்து விளங்கும் தலைமயிரையும் செந்நிற முடைய கண்களையு முடையதாக ஒரு பூதமானது, அழகிய பொன்மயமான தட்டின் மேலே சுத்தமான இனிய அமிர்தத்தை யொத்த ஒரு பிண்டத்தைத் தாங்கிக் கொண்டு ஓமத்தீயிலிருந்து விரைவில் எழுந்தது.

கு:—மீ-மேலே. சுதை – அமிர்தம். பிண்டம் - சோற்று உருண்டை. பங்கி - தலைமயிர், ஏயென – விரைந்து

வேள்வித்தீயிலிருந்து அமிர்தம் போன்ற சுவையுடைய பிண்டம் ஒன்றை அழகான பொன் தட்டில் ஏந்திக்கொண்டு ஒரு பூதம் வெளிப்பட்டது என்றவாறு, இந்தப் பூதத்தை ப்ராஜாபத்ய புருஷன் என்று கூறுப. வெள்ளிமூடியிட்ட ஒரு பொற்பாத்திரம் நிறைய நல்ல பாயசம் கொண்டுவந்து ஒரு பூதம் கொடுத்ததாக வான்மீகம் கூறுகிறது. (88)

### கலைக்கோட்டுமுனி பிண்டத்தை மனைவியர்க்குப் பகிரச்சொல்லுதல்

**268.** வைத்தது தரைமிசை மறித்து மவ்வழித்
தைத்தது பூதமத் தவனும் வேந்தனை
உய்த்தநல் லமிர்தினை யுரிய மாதர்கட்
கத்தகு மரபினு லளித்தி யாலென்றான்.

வைத்தது தரை மிசை, மறித்தும் அவ்வழித்
தைத்தது பூதம்; அத் தவனும் வேந்தனை,
'உய்த்த நல் அமிர்தினை உரிய மாதர்கட்கு
அத்தகு மரபினுல், அளித்தியால்!' என்றான்.

பொ :—அந்தப் பூதமானது (தான் கொண்டு வந்த பிண்டத் தட்டினைப்) பூமியிலே வைத்துவிட்டு மீண்டும் அவ்வேள்வித் தீயின் வழியாகப் பாய்ந்து சென்றுவிட்டது; தவத்தையுடையவனு கிய அக் கலைக்கோட்டுமுனிவனும் மன்னன் தசரதனை நோக்கி, '(பூதம்) கொடுத்த நல்ல அமிர்தம் போன்ற உணவினை (உனக்கு) உரிய மனைவிமார்க்கு, தகுதியான அம்முறைப்படியே கொடுப்பாயாக' என்று கூறினுன்.

கு :—தைத்தது – புகுந்தது. முதலில் மூத்தவளுக்கும், பிறகு அடுத்தவளுக்கும், பிறகு இளையவளுக்கும் என அத்தகுமரபின்படி அளித்தி என்றான் என்க. பூதம் பாயசத்தைத் தசரதன் கையிற் கொடுத்துச் சிலசொற்களைச் சொன்னதாக வான்மீகம் கூறும்.

(89)

### தசரதன் கௌசலைக்கு ஒருபங்கு கொடுத்தல்

**269.** மாமுனி யருள்வழி மன்னர் மன்னவன்
தூமமென் சுரிகுழற் றொண்டைத் தூயவாய்க்
காமரொண் கௌசலை கரத்தி னோர்பகிர்
தாமுற வளித்தனன் சங்க மார்த்தெழ.

மாமுனி அருள் வழி மன்னர் மன்னவன்
தூம மென் சுரி குழல் தொண்டைத் தூய வாய்க்
காமர் ஒண் கௌசலை கரத்தின் ஓர் பகிர்
தாம் உற அளித்தனன் சங்கம் ஆர்த்து எழ.

போ :—சிறந்த அக் கலைக்கோட்டுமுனிவன் கட்டளையின் படியே அரசர்க்கரசனான தசரதன், அகிற்புகையூட்டிய மெல்லிய கடைகுழன்ற கூந்தலையும் கொவ்வைப்பழம்போற்சிவந்த தூய்மையுள்ளவாயையுமுடைய அழகிய ஒளியைக்கொண்ட கோசலையின் கையில், சங்குகள் தாம் மிகுதியாக ஒலிக்க, ஒருபாகத்தைக் கொடுத்தான்.

கு :—ஓர்பகிர் என்பதற்குப் பாதிப்பங்கு என்றும், மூன்றில் ஒரு பங்கு என்றும் கூறுவர். (90)

## தசரதன் கைகேயிக்கு ஒருபங்கு கொடுத்தல்

**270.** கைகயன் றனயைதன் கரத்து மம்முறைச்
செய்கையி னளித்தனன் றேவ ரார்த்தெழப்
பொய்கையு நதிகளும் பொழிலு மோதிமம்
வைகுறு கோசல மன்னர் மன்னனே.

**கைகயன் தனயைதன் கரத்தும், அம்முறைச்**
**செய்கையின், அளித்தனன், தேவர் ஆர்த்து எழப்,**
**பொய்கையும் நதிகளும் பொழிலும் ஓதிமம்**
**வைகுறு கோசல மன்னர் மன்னனே.**

போ :—(அடுத்து) குளங்களிலும் ஆறுகளிலும் சோலைகளிலும் அன்னப்பறவைகள் தங்கப்பெற்ற கோசலநாட்டையாளுகின்ற தசரதசக்கரவர்த்தி, கேகய நாட்டரசனின் மகளாகிய கைகேயியின் கையிலும், அந்த முறைமையாகிய செய்கையின் படியே (கையிலுள்ளதை இரண்டாகப் பகிர்ந்து ஒரு பாதியைத்) தேவர்கள் (மகிழ்ச்சியால்) ஆரவாரித்தெழும்படி கொடுத்தனன்.

கு :—அம்முறைச்செய்கையின் என்றது, முன்பு கோசலைக்குக் கொடுத்ததுபோலவே, கையிலுள்ளதை இரண்டாகப் பகிர்ந்து அதில் ஒரு பங்கை யெடுத்து என்றவாறு. (91)

## தசரதன் சுமித்திரைக்கு ஒருபங்கு கொடுத்தல்

**271.** நமித்திரர் நடுக்குறு நலங்கொண் மொய்ம்புடை
நிமித்திரு மரபுளான் முன்னர் நீர்மையின்
சுமித்திரைக் களித்தனன் சுரர்க்கு வேந்தினிச்
சமித்ததென் பகையெனத் தமரோ டார்ப்பவே.

நமித்திரர் நடுக்கு உறு நலம் கொள் மொய்ம்பு உடை
நிமித் திரு மரபு உளான், முன்னர் நீர்மையின்
சுமித்திரைக்கு அளித்தனன், சுரர்க்கு வேந்து, 'இனிச்
சமித்தது என் பகை' எனத் தமரொடு ஆர்ப்பவே.

பொ :—பகைவர் (அஞ்சி) நடுக்கமடைதற்குக் காரணமான நன்மையைக்கொண்ட வலிமையையுடைய நிமியென்னும் மன்னனின் சிறந்த மரபிலே பிறந்துள்ளவனான தசரதன், தேவர்களுக்கு அரசனான இந்திரன் 'இனிமேல் எனது பகை ஒழிந்தது, என்று (மகிழ்ச்சியால்) தன் இனத்தவருடனே ஆரவாரிக்கும்படி, முன் (இரு மனைவியர்க்கும் கொடுத்த) முறைப்படியே சுமித்திரை (என்னும் மூன்றாவது மனைவி)க்கும் (பிண்டத்தின்பங்கைக்) கொடுத்தான்.

கு :—நமித்திரர் – பகைவர். தசரதனுடைய மூதாதையருள் நிமிச்சக்கரவர்த்தி சிறந்தவனாதலால், 'நிமித்திருமரபுளான்' என்று தசரதனைக் கூறினர்.

பின்னர் இந்திரனின் பகைவனான இந்திரசித்தை வெல்லும்படியான இலக்குவன் இந்தப் பிண்டத்தின் பயனாகச் சுமித்திரை வயிற்றிற் பிறக்கப்போவதால், எல்லோருடைய மகிழ்ச்சியைக் காட்டிலும் இந்திரனின் மகிழ்ச்சியைச் சிறப்பாக எடுத்துக் கூறினர். (92)

உதிர்ந்தவற்றையும் சுமித்திரைக்கு அளித்தல்

**272.** பின்னுமப் பெருந்தகை பிதிர்ந்து வீழ்ந்தது
தன்னையுஞ் சுமித்திரை தனக்கு நல்கினன்
ஒன்னலர்க் கிடமும்வே றுலகி னோங்கிய
மன்னுயிர் தமக்குநீள் வலமுந் துள்ளவே.

பின்னும் அப் பெருந்தகை, பிதிர்ந்து வீழ்ந்தது
தன்னையும், சுமித்திரை தனக்கு நல்கினன்,
ஒன்னலர்க்கு இடமும், வேறு உலகின் ஓங்கிய
மன் உயிர்தமக்கு நீள் வலமும் துள்ளவே.

பொ :—(அவ்வாறு சுமித்திரைக்குரிய பங்கை அளித்த) பின்னரும், பெருமைக்குணமுடைய அத்தசரதன், பகைவர்க்கு இடப்புறமும், அவற்றின் வேறான உலகத்துச் சிறந்துள்ள நிலைபெற்ற உயிர்களுக்குச் சிறந்த வலப்புறமும் துடிக்கும்படி, (பகுத்துக்

கொடுக்கும்போது தட்டிலே) சிந்தி வீழ்ந்தவற்றையும் சுமித்திரைக்குக் கொடுத்தான்.

கு :—ஆடவர்க்கு இடம் துடிப்பது தீநிமித்தமும் வலம்துடிப்பது நன்னிமித்தமுமாகும்; இடம் வலம் என்பன அப்பக்கங்களின் கண், தோள் முதலியவற்றைக் குறித்தன. இலவணன் முதலிய சத்துருக்களை அழிக்கவல்ல சத்துருக்கனன் இப் பிதிர்வைத்திரட்டிய பிண்டத்தால் பிறக்கப்போவதால், ஒன்னலர்க்குத் தீயகுறிகளும் நண்பர்களுக்கு நற்குறிகளும் தோன்றின என்றார். (93)

### தசரதன் யாகசாலையினின்று எழுதல்

**273.** வாம்பரி வேள்வியு மகாரை நல்குவ
தாம்புரை யாவுதி பிறவு மந்தணன்
ஓம்பிட முடிந்தபி னுலகு காவலன்
ஏம்பலொ டெழுந்தன னியாரு மேத்தவே.

**வாம் பரி வேள்வியும், மகாரை நல்குவது**
**ஆம் புரை ஆவுதி பிறவும், அந்தணன்**
**ஓம்பிட, முடிந்தபின், உலகு காவலன்**
**ஏம்பலொடு எழுந்தனன் யாரும் ஏத்தவே.**

பொ :—தாவுகின்ற குதிரையைக் கொண்டு செய்கின்ற அசுவமேதத்தையும், புத்திரரைத் தருவதற்கு இடமாகிய ஓமங்கள் பிறவற்றையும் கலைக்கோட்டு முனிவன் கவனித்துச் செய்ய அந்த யாகங்கள் முடிந்தபின்பு, உலகத்திற்கு அரசனான தசரத சக்கரவர்த்தி யாவரும் துதிக்க மகிழ்ச்சியுடனே (யாகசாலையை விட்டுப்) புறப்பட்டனன்.

கு :—அசுவமேத யாகத்தையும் புத்திரகாமயாகத்தையும் கலைக்கோட்டு முனிவன் முறைப்படி வெற்றிகரமாகச் செய்து முடிக்கவும் தசரதன் மனநிறைவோடு யாகசாலையை விட்டுப் போந்தான் என்றவாறு. (94)

### தசரதன் அவையை அடைதல்

**274.** முருடரு பல்லிய முழங்கி யார்த்தன
இருடரு முலகமு மிடரி னீங்கின
தெருடரு வேள்வியின் கடன்க டீர்ந்துழி
அருடரு மவையின்வந் தரச னெய்தினான்.

முருடு அரு பல் இயம் முழங்கி ஆர்த்தன;
இருள் தரும் உலகமும் இடரின் நீங்கின ;
தெருள் தரு வேள்வியின் கடன்கள் தீர்ந்துழி,
அருள் தரும் அவையின் வந்து அரசன் எய்தினன்.

பொ :—(வேதங்களால்) விளக்கம் தரப்பட்ட யாகத்திற்குரிய சடங்குகள் முற்றுப்பெற்றபொழுது, மத்தளமும் அருமையான வேறு பல வாத்தியங்களும் மிகவும் பேரொலி செய்தன; (அரக்கர் கொடுமையால்) துன்ப இருளிலே மூழ்கிக்கிடந்த உலகத்தாரும் (தமது) துன்பத்தினின்றும் நீங்கினர்; தசரதமன்னனும் (யாவர்க்கும்) கருணைசெய்தற்கு இடமான அத்தாணி மண்டபத்திற்கு வந்து (தன் ஆசனத்தை) அடைந்தான்.

கு :—யாவரையும் விரும்பியேற்றுக் குறை களையவல்ல திருவோலக்கமண்டபத்தை 'அருள் தரும் அவை' என்றார். இவ்வேள்விகள் முடிந்ததன் பயனாக இராமாவதாரம் நிகழப்போகின்றமையால், உலகமும் இடரின் நீங்கின என்றார்; உலகத்துயிர்கள் இடரின் நீங்கின என்றவாறு; பலவேறு உலகங்களும் இடரின் நீங்கின என்றும் கொள்ளலாம். (95)

### தசரதன் அந்தணர்க்குத் தட்சிணைகொடுத்தல்

**275.** செய்ம்முறை கடன்முறை
திறம்ப லின்றியே
மெய்ம்முறை கடவுளுக்
கீந்து விண்ணுளோர்க்
கம்முறை யளித்துநீ
டந்த ணாளர்க்கும்
கைம்முறை யளித்தனன்
கனக மாரியே.

செய்ம் முறை கடன் முறை திறம்பல் இன்றியே,
மெய்ம் முறை கடவுளுக்கு ஈந்து, விண்ணுளோர்க்கு
அம்முறை அளித்து, நீடு அந்தணாளர்க்கும்
கைம்முறை அளித்தனன், கனக மாரியே.

பொ :—(தசரதன்) செய்யவேண்டிய கடமைகளை, அக்கடமைகளைக்கூறும் நூலுக்கு மாறுபாடில்லாமல், உண்மையான முறைப்படி கடவுளுக்கு (வழங்கவேண்டியவற்றை) வழங்கி, (மற்றை)

வானுலகத்தோரான தேவர்களுக்கும் கொடுக்கவேண்டியவற்றைக் கொடுத்து(ப்பின்னர்), பெருமைபொருந்திய அந்தணர்களுக்கும் கைகளால் முறைப்படி பொன்மழையைப் பொழிந்தான்.

கு :—தசரதன் அந்தணர்க்குப் பொன்னுகத் தட்சிணை அளித்தான் என்றவாறு. நீடு - பெருமைபொருந்திய. (96)

### தசரதன் நீராடல்

**276**. வேந்தர்கட் கரசொடு
வெறுக்கை தேர்பரி
வாய்ந்தநற் றுகிலொடு
வரிசைக் கேற்பன
ஈந்தனன் பல்லியந்
துவைப்ப வேகிநீர்
தோய்ந்தனன் சரயுநற்
றுறைக்க ணெய்தியே.

வேந்தர்கட்கு அரசொடு, வெறுக்கை, தேர், பரி,
வாய்ந்த நல் துகிலொடு, வரிசைக்கு ஏற்பன,
ஈந்தனன், பல் இயம் துவைப்ப ஏகி நீர்
தோய்ந்தனன், சரயு நல் துறைக்கண் எய்தியே.

பொ :—(தசரதன்) அரசர்களுக்கு அரசாட்சியுடனே, செல்வமும், தேர்களும், குதிரைகளும், அழகியனவாக அமைந்துள்ள சிறந்த ஆடைகளும் (என்னும் இவற்றுள் அவரவர்) தகுதிக்குத் தக்கனவற்றைக் கொடுத்துப் பலவகை வாத்தியங்களும் ஒலிப்பச் சென்று, சரயு என்னும் ஆற்றின் நல்ல துறையையடைந்து நீராடினன்.

கு :—இவ்வாறு நீர்படிதல், அவபிரதஸ்நானம் எனப்படும். துறை-ஆற்றில் இறங்கி நீராடுதற்கு உரிய இடம். (97)

### தசரதன் அவையில்வந்து வசிட்டனை வணங்குதல்

**277**. முரசினங் கறங்கிட
முத்த வெண்குடை
விரசிமே னிழற்றிட
வேந்தர் சூழ்தர

அரசவை யடைந்துழி
யயனு நாணுற
உரைசெறி முனிவன்தாள்
வணங்கி யோங்கினுன்.

முரசு இனம் கறங்கிட முத்த வெண் குடை
விரசி மேல் நிழற்றிட, வேந்தர் சூழ்தர,
அரசு அவை அடைந்துழி, அயனும் நாண் உற,
உரைசெறி முனிவன் தாள் வணங்கி ஓங்கினுன்.

பொ :—(தசரதன்) பேரிகைகள் பலவாக ஒலிக்கவும், முத்துக் களினுலாகிய வெண்கொற்றக்குடை மேலே நெருங்கி நிழலைச் செய்யவும், அரசர்கள் பலரும் சூழ்ந்து வரவும் அத்தாணி மண்டபத்தைச் சேர்ந்த இடத்து பிரமதேவனும் வெட்கமடையும்படி, நிறைமொழியை யுடையவனுன வசிட்ட முனிவனுடைய திருவடிகளை வணங்கி (அவனது) ஆசிபெற்றெழுந்தான்.

கு :—விரசி-நெருங்கி; வசிட்டன் நிறை மொழி மாந்தர் வரிசையனுதலால், உரை செறி முனிவன் எனப்பட்டான்; சாபானுக்கிரகங்களை யுடையவன்; புகழ் நிறைந்த முனிவன் என்றும் பொருள் கொள்ளலாம்; பிரமனும் தனக்கு அவ்வளவு புகழ் இல்லையே என்று வெட்கப் படும்படி மிஞ்சிய புகழையுடையான் வசிட்டன் என்க. (98)

## 278. தசரதன் கலைக்கோட்டுமுனியை வணங்குதல்

அரியநற் றவமுடை வசிட்ட ஞணையால்
இரலைநற் சிருங்கமா விறைவன் ருடொழா
உரியபற் பலவுரை பயிற்றி யுய்ந்தனன்
பெரியநற் றவவினிப் பெறுவ தியாதென்ருன்.

அரிய நல் தவம் உடை வசிட்டன் ஆணையால்,
இரலை நல் சிருங்கமா இறைவன் தாள் தொழா,
உரிய பல்பல உரை பயிற்றி, 'உய்ந்தனன்,
பெரிய நல் தவ ! இனிப் பெறுவது யாது?' என்ருன்.

பொ :—(பின்பு தசரதன்) அருமையான சிறந்த தவத்தை யுடைய வசிட்டனது கட்டளையினுல், கலைமானின் அழகிய கொம்பைத் தலையிலேயுடைய சிறந்த முனிவனுன கலைக்கோட்டு

முனியின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி (ச்சொல்லுதற்கு) உரிய மிகப்பலவான இன்சொற்களைச் சொல்லி, 'சிறந்த நல்ல தவத்தை யுடையவனே! (அடியேன் உனது திருவருளால்) ஈடேறினேன். (இதைக் காட்டிலும் யான்) இனிமேல் பெறத்தக்க பேறு யாது உளது?' என்று கூறினன்.

கு :—இரலை-கலைமான். சிருங்கம்-கொம்பு. இறைவன்-குருவின் நிலையில் உள்ள பெரியோன்; இங்கே கலைக்கோட்டுமுனியை உணர்த்தியது. பயிற்றி-கூறி. தசரதன் தானடைந்த புத்திரப் பேற்றினல் 'உய்ந்தேன்' என்றும், அதை விடச் சிறந்த பேறு தனக்கு வேறு இல்லை என்றும் கூறினன் என்க. (99)

## கலைக்கோட்டுமுனி வழிக்கொண்டேகுதல்

279. எந்தைநின் னருளினு
லிடரி னீங்கியே
உய்ந்தன னடியனே
னென்ன வொண்டவன்
சிந்தையுண் மகிழ்ச்சியால்
வாழ்த்தித் தேர்மிசை
வந்தமா தவரொடும்
வழிக்கொண் டேகினன்.

'எந்தை! நின் அருளினல் இடரின் நீங்கியே
உய்ந்தனன் அடியனேன்' என்ன, ஒள் தவன்,
சிந்தையுள் மகிழ்ச்சியால் வாழ்த்தித், தேர்மிசை
வந்த மா தவரொடும் வழிக்கொண்டு ஏகினன்.

பொ :—'எமது தலைவனே! அடியனை நான் உன் அருளினல் ஈடேறினேன்' என்று (தசரதன்) சொல்லவும், சிறந்த தவத்தை யுடைய கலைக்கோட்டுமுனிவன் மனத்திலுள்ள களிப்புடனே (தசரதனை) ஆசிர்வதித்து, (தன்னுடன்) வந்த மிக்க தவத்தை யுடைய முனிவர்களுடனே தேரின் மீது (ஏறி உரோமபதன் நகருக்குப்) புறப்பட்டுச் சென்றான்.

கு :—உரோமபதன் நகரிலிருந்து தன் மனைவியான சாந்தை யுடன் கலைக்கோட்டுமுனி அயோத்திக்கு எழுந்தருளினன் என்று கூறிய ஆசிரியர், மீண்டும் அயோத்தியை விட்டுச் செல்லும்

பொழுதும் சாந்தையைக் குறிப்பிடவில்லையே என்பார்க்கு, 'வந்த மாது அவரொடும் என இரட்டுற மொழிதலாகக் கொண்டும் பொருள் கண்டுகொள்ளலாம். (100)

### மற்றை முனிவரும் ஆசிகூறி ஏகுதல்

**280.** வாங்கிய துயருடை
மன்னன் பின்னரும்
பாங்குடை முனிவர்தாள்
பழிச்சி யேத்தல்கொண்
டோங்கிய வுவகைய
ராசி யோடெழா
நீங்கின ரிருந்தன
னேமி வேந்தனே.

வாங்கிய துயர் உடை மன்னன், பின்னரும்,
பாங்கு உடை முனிவர் தாள் பழிச்சி ஏத்தல்கொண்டு,
ஓங்கிய உவகையர் ஆசியோடு எழா,
நீங்கினர், இருந்தனன் நேமி வேந்தனே.

பொ :—நீங்கிய துயரையுடைய (துயரம் நீங்கப் பெற்ற) தசரதன், பின்னரும், தகுதியுள்ள முனிவர்களின் பாதங்களை வணங்கிப் புகழ்ந்ததை ஏற்றுக் கொண்டு, மிக்க மகிழ்ச்சியடைந்த அம் முனிவர்கள் (அவனை) ஆசீர்வதித்தவர்களாய் எழுந்து போயினராக, (அந்தத்) தசரத சக்கரவர்த்தி சுகமாக இருந்தான்.

கு :—பாங்கு–தகுதி; ஒழுக்கமுமாம். (101)

### மனைவிமார் வயாக்கொள்ளுதல்

**281.** தெரிவையர் மூவருஞ் சிறிது நாட்செலீஇ
மருவிய வயாவொடு வருத்தந் துய்த்தவர்
பொருவரு திருமுக மன்றிப் பொற்புநீ
டுருவமு மதியமோ டொப்பத் தோன்றினர்.

தெரிவையர் மூவரும், சிறிது நாள் செலீஇ,
மருவிய வயாவொடு வருத்தம் துய்த்து, அவர்
பொருவு அரு திருமுகம் அன்றிப், பொற்பு நீடு
உருவமும், மதியமோடு ஒப்பத் தோன்றினர்.

பொ :—(தசரதனுடைய) மனைவியர் மூவரும் சில நாட்கள் கழித்துப் பொருந்திய (கருவுற்றதனாலாய) மசக்கை நோயினால் உண்டாகிய வருத்தத்தையடைந்து, தங்கள் ஒப்பற்ற அழகிய முக மாத்திரமன்றி அழகு மிக்க உடல் முழுவதும் திங்களோடு ஒக்கு மாறு (வெளுத்துக்குக்) காணப்பட்டனர்.

கு :—உடல் வெளுத்தல், வயிறு பருத்தல், முலைக்கண் கருத்தல், கண் குழிதல் முதலியன வயவுக் குறிகள்.

முகமன்றி மற்ற உறுப்புக்களும் பசலையால் திங்கள் போன் றுயின; பசலை பாய்ந்தனவாம்.

வயா-கருப்பவதிகளுக்குச் சில பொருள்கள் மேல் தோன்றும் விருப்பம். *(102)*

### கோசலை இராமனைப்பெறுதல் 282—284

**282.** ஆயிடைப் பருவம்வந் தடைந்த வெல்லையின்
மாயிரும் புவிமகள் மகிழ்வி னோங்கிட
வேய்புனர் பூசமும் விண்ணு ளோர்புகழ்
தூயகர்க் கடகமு மெழுந்து துள்ளவே.

ஆயிடைப் பருவம் வந்து அடைந்த எல்லையின்,
மா இரும் புவி மகள் மகிழ்வின் ஓங்கிட,
வேய் புனர்பூசமும், விண் உளோர் புகழ்
தூய கர்க்கடகமும், எழுந்து துள்ளவே.

பொ :—அவ்விடத்தே (அத்தேவிமார்க்கு) மகவு பிறக்குங் காலம் வந்தடைந்தபொழுது, மிகப்பெரிய மண்மகள் மகிழ்வாற் பூரிக்கவும், மூங்கில் என்றொரு பெயருடைய புனர்பூச நட்சத்திர மும் தேவர்கள் புகழும் தூய்மையான கர்க்கடக லக்கினமும் கிளம்பியாடவும் கோசலை பயந்தனள் என 284-ஆம் செய்யுளோடு முடியும்.

கு :—இது முதல் மூன்று கவிகள் ஒரு தொடர். தேவியர் பன்னிரண்டுமாதம் கருவுற்றிருந்ததாக வான்மீகம் கூறும்.

பூமியிலுள்ளோர் பெருமகிழ்வெய்தும்படி, இராமபிரான் கர்க்கடக லக்கினம் புனர்பூச நட்சத்திரத்தில் திருவவதாரம் செய்தான் என்றவாறு. (103)

**283.** சித்தரு மியக்கருந் தெரிவை மார்களும்
வித்தக முனிவரும் விண்ணு ளோர்களும்
நித்தரு முறைமுறை நெருங்கி யார்ப்புறத்
தத்துற லொழிந்துநீ டரும மோங்கவே.

சித்தரும், இயக்கரும், தெரிவைமார்களும்,
வித்தக முனிவரும், விண் உளோர்களும்,
நித்தரும், முறை முறை நெருங்கி ஆர்ப்பு உறத்,
தத்துறல் ஒழிந்து நீள் தருமம் ஓங்கவே.

பொ :—சித்தர்களும் இயக்கர்களும் (அவருடைய) மனைவி மாரும், தத்துவம் கண்ட ஞானமுனிவரும், தேவரும், நித்திய சூரிகளும் வரிசைவரிசையாக நெருங்கி ஆரவாரிக்கவும், சிறந்த அறக்கடவுள் மனத்தடுமாற்றம் நீங்கி (மகிழ்ச்சி) மிகவும்.

கு :—கோசலை பயந்தனள் என அடுத்த செய்யுளோடு முடியும். வித்தகம் – ஞானம்: வித்தக முனிவர் – பேரறிவு படைத்த இருடிகள். சித்தரும் இயக்கரும் பதினெண்கணத்தவர். சித்தர் முழு அருளையும் பெற்று நிறைவு பெற்றோர்; அட்டமாசித்தி வல்லவர். இயக்கர்க்குத் தலைவன் குபேரன். தத்துவங்கண்ட ஞானமுனிவர் மெய்யுணர்ந்தோராவர். நித்திய சூரிகள் என்போர் திருமாலின் பரமபதத்தில் என்றும் இருப்பவர். இராமன்பிறப்பினால் மண்ணுலகு தேவருலகு ஆய ஈருலகும் பயனடைகின்றனவாதலால், ஞான முனிவரையும் உடன் கூறினர். பரம்பரையாக உலகில் நீண்டுவரும் அறநெறி அடிக்கடி அரக்கர்களால் அலைக்கப்படுமோ என்ற தடுமாற்றம் அறக்கடவுளுக்கு அகன்றதாம். (104)

**284.** ஒருபக லுலகெலா முதரத் துட்பொதிந்
தருமறைக் குணர்வரு மவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தன டிறங்கொள் கோசலை.

ஒரு பகல் உலகு எலாம் உதரத்து உள் பொதிந்து
அரு மறைக்கு உணர்வு அரும் அவனை, அஞ்சனக்
கரு முகில் கொழுந்து எழில் காட்டும் சோதியைத்,
திரு உறப், பயந்தனள் திறம் கொள் கோசலை.

பொ :—மேன்மையையுடைய கோசலையானவள், ஒரு காலத்தே (பிரளயத்தில்) எல்லாவுலகங்களையும் தன் வயிற்றினுள் காத்து வைத்து அருமையான வேதங்கட்கும் அறிதற்கருமையானவனும், மையும் புதிய கரிய மேகமும் என்னும் இவற்றின் அழகை (த்தன்னிடத்தே) காட்டுகின்ற ஒளிமயமான திருமாலை (யாவர்க்கும் இம்மை மறுமைச்) செல்வங்கள் மிகும்படி பெற்றாள்.

கு :—புவிமகள் மகிழ்வின் ஓங்கிடவும், புனர்பூசமும் கர்க்கடகமும் எழுந்து துள்ளவும், சித்தரும்...நித்தரும் ஆர்ப்புறவும், தருமம் ஓங்கவும், உணர்வருமவனைச் சோதியைத் திருவுறப் பயந்தனள் கோசலை எனக் கூட்டுக.

எல்லாவுலகங்களையும் தன்னுட்கொண்ட கடவுளை இவ்வுலகத்தின் ஏகதேசத்தில் ஓரிடத்திலிருப்பவளாகிய கோசலை தன் வயிற்றுள் அடக்கிக் கருவுயிர்த்த திறம்வியந்து ஆசிரியர் திறங் கொள் கோசலை என்றார். (105)

## கைகேயி பரதனைப்பெறுதல்

285. ஆசையும் விசும்புநின் றமர ரார்த்தெழ
வாசவன் முதலினோர் வணங்கி வாழ்த்துறப்
பூசமு மீனமும் பொலிய நல்கினாள்
மாசறு கேகயன் மாது மைந்தனை.

ஆசையும் விசும்பும் நின்று அமரர் ஆர்த்து எழ,
வாசவன் முதலினோர் வணங்கி வாழ்த்து உறப்,
பூசமும் மீனமும் பொலிய நல்கினாள்
மாசு அறு கேகயன் மாது மைந்தனை.

பொ :—குற்றமற்ற கேகயன் பெற்ற பெண்ணாகிய கைகேயி (எல்லாத்) திக்குகளிலும் வானிடத்திலும் நின்றுகொண்டு தேவர்கள் ஆரவாரித்து மகிழவும், தேவேந்திரன் முதலோர் வணங்கி வாழ்த்தவும், பூசநட்சத்திரமும் மீனலக்கினமும் (இணைந்து) விளங்கவும் (ஒரு) மகனைப் பெற்றாள்.

கு:—தேவர்கள் மொய்த்து ஆரவாரிக்கப் பூசநட்சத்திரம் மீன லக்கினத்தில் கைகேயி (பரதன் என்னும்) மகனை உலகுக்கு ஈந்தாள் என்றவாறு.

கைகேயி கொடுமை மிக்கவளாய் இராமனைக் காட்டிற் கனுப்பி அதனாலுண்டான பழியை ஏற்றுக்கொண்டாளாயினும், அவள் உண்மையிலே குற்றமற்றவள் என்ற தமது கருத்தை ஆசிரியர் 'மாசறு கேகயன்' என்று குறித்தமை ஈண்டு அறியத் தகும்.

'ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா' எனப் பின்னர்க் கூறும் ஆசிரியர், இராமனைப் பயந்தனள் என்றும் பரதனை நல்கினள் என்றும் கூறுவது பரதனுடைய பிறப்புக்கு ஓர் ஏற்றம் காட்டுவதுபோன்றிருத்தலும் நோக்கற்பாலது. (106)

## சுமித்திரை இலக்குமணனைப்பெறுதல்

286\. தளையவிழ் தருவுடைச் சயில கோபனும்
கிளையுமந் தரமிசைக் கெழுமி யார்த்தெழ
அளைபுகு மரவினோ டலவன் வாழ்வுற
இளையவள் பயந்தன ளிளைய வீரனை.

**தளை அவிழ் தரு உடைச் சயிலகோபனும்**
**கிளையும் அந்தரம் மிசைக் கெழுமி ஆர்த்து எழ,**
**அளை புகும் அரவினோடு அலவன் வாழ்வு உற**
**இளையவள் பயந்தனள் இளைய வீரனை.**

பொ —(மொட்டுகள்) முறுக்கு விரிந்து மலர்கின்ற (கற்பக) மரங்களையுடைய மலைகளைக் கோபித்துச் சிறகறுத்தவனான இந்திரனும் அவனுடைய சுற்றமான (மற்றத்) தேவர்களும் வானத்தின் மீது நெருங்கி ஆரவாரித்துக் குதிக்கவும், புற்றிலே நுழையுந் தன்மையுள்ள பாம்புடனே (ஆயிலிய நட்சத்திரத்துடனே) நண்டும் (கர்க்கடக லக்கினமும்) உயர்நிலையையடையவும் இளையவளான சுமித்திரை இளைய வீரனை (இலக்குவனைப்) பெற்றாள்.

கு :—இலக்குவன் ஆதிசேடனின் அமிசமானதால், ஆதிசேடனை அதிதேவதையாகக் கொண்டுள்ள ஆயிலியம் அவன் பிறப்பதற்குரிய நட்சத்திரமாயிற்று. பாம்பின் வடிவமுள்ளதால் ஆயிலியம் அரவு எனப்பட்டது.

முற்காலத்தில் மலைகள் சிறகுகொண்டு பறந்து உலகைப் பாழாக்கி வரவும், பல்லுயிர்களின் அல்லலுக்கு இரங்கிய இந்திரன் மலைகளின்மீது சினங்கொண்டு அவற்றின் சிறகுகளை வெட்டி வீழ்த்தினன். ஆதலால் சயிலகோபன் எனப்பட்டான். சயிலம்—மலை. அளை – புற்று : அளைபுகும் என்னும் அடை அரவுக்கும் அலவனுக்கும் ஒக்கும். அலவன் - நண்டு : இங்கே கர்க்கடக லக்கினத்தைக் குறித்தது.

இராமனுக்கு அடுத்தபடியாக வீரத்தில் இலக்குவன் சிறந்து விளங்குபவனுதல்பற்றி இளையவீரன் எனப்பட்டான் (107)

சுமித்திரை சத்துருக்கனைப் பெறுதல்

**287.** படங்கிளர் பஃறலைப் பாந்த ளேந்துபார்
நடங்கிளர் தரமறை நவில நாடகம்
மடங்கலு மகமுமே வாழ்வி னோங்கிட
விடங்கிளர் விழியினுண் மீட்டு மீன்றனள்.

படம் கிளர் பல் தலைப் பாந்தள் ஏந்து பார்
நடம் கிளர்தர, மறை நவில நாடகம்,
மடங்கலும் மகமுமே வாழ்வின் ஓங்கிட,
விடம் கிளர் விழியினுள் மீட்டும் ஈன்றனள்.

பொ :—படம் விரியும் பல தலைகளையுடைய பாம்பாகிய ஆதிசேடன் தாங்கும் உலகம் (இன்பக்) கூத்தாடவும், வேதங்கள் நடமாடவும், சிங்கராசியும் மகமும் வாழ்வு மேம்படவும், நஞ்சு போலும் கரிய விழிகளையுடைய சுமித்திரை மீண்டும் (ஒரு மகவைப்) பெற்ருள்.

கு :—சுதைப்பிண்டத்தின் உதிர்ந்த பிதிர்வுகளைச் சேர்த்து இரண்டாவதும் ஒரு பங்கு சுமித்திரைக்கு அளிக்கப்பட்டதால், இளைய வீரனை முதலில் ஈன்ற பிறகு மீட்டும் ஒரு குழந்தையைப் பெற்ருள் என்பதாம்.

இந்த மகன் சத்துருக்கனன் எனப்படுவான். இவன் மக நட்சத்திரத்தில் சிங்க லக்கினத்திற் பிறந்தவன் என்றவாறு. (108)

## வானத்தவர்கொண்ட மகிழ்ச்சி

**288.** ஆடின ரரம்பைய ரமுத வேழிசை
பாடினர் கின்னரர் துவைத்த பல்லியம்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலால்
ஓடின ருலவின ரும்பர் முற்றுமே.

ஆடினர் அரம்பையர்; அமுத ஏழ் இசை
பாடினர் கின்னரர்; துவைத்த பல் இயம்!
வீடினர் அரக்கர் என்று உவக்கும் விம்மலால்,
ஓடினர் உலவினர் உம்பர் முற்றுமே.

பொ :—(அப்போது) அரக்கர் அழிந்தனர் என்ற மகிழ்ச்சியின் மிகுதியால் அரம்பையர் ஆடினர்: கின்னரர் அமுதம் போன்று இனிய ஏழிசையைப் பாடினர்; பல வாத்தியங்களும் ஒலித்தன; தேவர்கள் எல்லாரும் ஓடியுலாவினர்கள்.

கு :— ஏழிசை: குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. (109)

## சோதிடர் நாட்கணித்தல்

**289.** ஓடின ரரசன்மாட் டுவகை கூறிநின்
றாடினர் சிலதிய ரந்த ணாளர்கள்
கூடினர் நாளொடு கோளு நின்றமை
நாடின ருலகினி நவையின் றென்றனர்.

ஓடினர் அரசன் மாட்டு, உவகை கூறி நின்று,
ஆடினர் சிலதியர்; அந்தணாளர்கள்
கூடினர், நாளொடு கோளும் நின்றமை
நாடினர், உலகு இனி நவை இன்று என்றனர்.

பொ :—(அரசமாதேவியரின்) பணிப்பெண்கள் தசரதனிடம் விரைந்துசென்று (புதல்வர் பிறந்த) மகிழ்ச்சியான செய்தியைச் சொல்லிக் (களிப்பால்) ஆடினர்; (சோதிடமறிந்த) அந்தணர் கூடி நட்சத்திரமும் கிரகங்களும் நின்றநிலைகளை ஆய்ந்து 'உலகம் இனித் துன்பம் இல்லாததாயிற்று' என்று சொன்னார்கள்.

கு :— சிலதியர் – பணிப்பெண்கள். (110)

இதன்பின் சில சுவடிகளில் காணப்படும் அதிகப் பாடல்கள் வருமாறு :—

289 (a) மேடமா மதிதிதி நவமி மீன் கழை
நீடுநாண் மாலைகர்க் கடகம் நீதிசேர்
ஓடைமா களிறனுன் உதய ராசிகோள்
நாடின் ஏகாதசர் நால்வர் உச்சரே.

289 (b) என்றனர் சாதகம் இறைவற் கேனையர்
தந்தமக் குந்தகு முறையிற் றூந்தெரிந்
தொன்றிய தமனியத் தெழுதி யோதினுர்
வன்றிறற் சுரர்குரு வாழ்த் தெடுப்பவே.

### தசரதன் குழந்தைகள்முகம் பார்த்தல்

**290.** மாமுனி தன்னெடு மன்னர் மன்னவன்
ஏமுறு புனல்படிந் திசைந்த வொண்பொருள்
ஆமுறை வழங்கிவெண் சங்க மார்ப்புறக்
கோமகர் திருமுகங் குறுகி நோக்கினுன்.

மா முனி தன்னெடு, மன்னர் மன்னவன்,
ஏம் உறு புனல் படிந்து, இசைந்த ஒண் பொருள்
ஆம் முறை வழங்கி, வெண் சங்கம் ஆர்ப்பு உறக்,
கோமகர் திருமுகம் குறுகி நோக்கினுன்.

பொ :—வேந்தர் வேந்தனுன தசரதன் பெருமையுடைய முனிவனுகிய வசிட்டனுடன் (சென்று) இன்பமுண்டாகச் சரயுஎன்னும் ஆற்றில் நீராடிப் பொருத்தமான உயர்ந்த பொருளையெல்லாம் உரிய முறையில் கொடையாகத் தந்து, வெண்சங்கங்கள் முழங்க அரசகுமாரரின் அழகிய முகங்களை நெருங்கிச்சென்று பார்த்(து மகிழ்ந்)தான்.

கு :—இசைந்த ஒண்பொருள் – தானியம், பொன், முதலவாகப் பொருத்தமான பொருள்களை. ஆம் முறை வழங்கி – கொடுக்க வேண்டிய முறைப்படி கொடுத்து.

'சிறப்பாவன பிறந்த புதல்வன் முகங்காண்டலும்' என்று நச்சினுர்க்கினியர் தொல்காப்பியம், கற்பு, 5-ஆம் சூத்திரவுரையிற் குறித்தது காண்க. புதல்வன் பிறந்தவுடன் அவன் முகத்தைத் தந்தை பார்த்துமகிழவேண்டும் என்பது தருமநூல் விதி. 'செறுவர் நோக்கியகண் தன், சிறுவனை நோக்கியுஞ் சிவப்பானுவே' (புறநானூறு-100) எனவும் வந்துள்ளது. (111)

சில பிரதிகளில் கீழ்க்காணும் பாடல் மிகுதியாகக்காணப் படுகிறது:—

290 (a) நோக்கினன் களிப்பெழ நுணங்கு கேள்விநூல்
ஆக்கிய முனிவனை வணங்கி யையவென்
பாக்கியம் பலித்ததிப் பாலரென்றுபார்
காக்குறு மரசனுங் கழறன் மேயினன்.

## முரசறையுமாறு தசரதன் கட்டளையிடுதல், 291-293

**291.** இறைதவிர்ந் திடுகபா
ரியாண்டொ ரேழொடேழ்
நிறைநிதிச் சாலைதாழ்
நீக்கி யாவையும்
முறைகெட வறியவர்
முகந்து கொள்கென
அறைபறை யென்றன
னரசர் கோமகன்.

'இறை தவிர்ந்திடுக பார் யாண்டு ஓர் ஏழ் ஒடு ஏழ்,
நிறை நிதிச் சாலை தாழ் நீக்கி யாவையும்
முறை கெட வறியவர் முகந்து கொள்க; என
அறை பறை!' என்றனன், அரசர் கோமகன்.

பொ :—அரசர்தலைவனாகிய தசரதன் 'நாடுமுழுவதும் பதினான்கு ஆண்டுகள் வரை வரியில்லாமலாகுக; பொருள் நிறைந்த கருவூலங்களின் கதவுத் தாழ்களைத் திறந்து எல்லாப்பொருள்களையும் ஏழைகள் முறைமையில்லாமல் (அவர்கள் விருப்பப்படி) வாரிக்கொள்க என்று (வள்ளுவர்) பறையறைந்திடுக!' என்று கட்டளையிட்டான்.

கு :—இதுமுதல் மூன்று கவிகள் ஒரு தொடர். இறை – வரி. நிதிச்சாலை – கருவூலம் அல்லது பண்டாரம். முறைகெட–இன்னார் இவ்வளவு என்ற முறையில்லாதபடி. பறையறைதல் வள்ளுவர் தொழில். (112)

292. படையொழிந் திடுகதம் பதிக ளேயினி
விடைபெறு குகமுடி வேந்தர் வேதியர்
நடையுறு நியமமு நவையின் றாகுக
புடைகெழு விழாவொடு பொலிக வெங்கணும்.

'படை ஒழிந்திடுக; தம் பதிகளே இனி
விடைபெறுகுக முடி வேந்தர்; வேதியர்
நடை உறு நியமமும் நவை இன்று ஆகுக;
புடை கெழு விழாவொடு பொலிக எங்கணும்.'

பொ :—எவ்விடத்தும் போர்த்தொழில் ஒழிவதாக; (சிறையிலுள்ள) கிரீடமணிந்த அரசர்கள் தங்களுடைய நகரங்களுக்கு (விடுதலை பெற்றவர்களாய்) விடைபெற்றுச் செல்வார்களாக; வேதங்களை ஓதும் அந்தணர்களுடைய ஒழுக்கங்களுக்குரிய செய்கடன்களும் குறைவில்லாதபடி நடப்பனவாக; பக்கங்களில் கூட்டமாகத் திரண்டு திருவிழாக்கள் விளங்க நடக்கட்டும்.'

கு :—என்றனன் (அரசர்கோமகன்) என அடுத்தசெய்யுளோடு முடியும். இவ்வாறு பறையறையச் சொன்னான் அரசர் கோமகன் என்க. தன்னாலே வெல்லப்பட்டுச் சிறைகிடந்த முடிவேந்தர்களுக்கும் மன்னிப்பும் விடுதலையும் அளித்துத் தங்கள் ஊர்களுக்கு அனுப்பிவைத்தான் தசரதன் என்றவாறு.

படையென்பது இங்கே அதன் தொழிலாகிய போரைக் குறித்து நின்றது. அறுதொழிலுடையவேதியர் முத்தீவளர்த்து வேள்வியாகுதிகளுடன் பூசனைகளைச் சரிவர நடத்தும்படியும் ஏவினான். எங்கும் நாடு விழாக்கோலம் கொள்ளும்படியும் ஏவினான் என்றவாறு. (113)

293. ஆலயம் புதுக்குக வந்த ணாளர்தம்
சாலையுஞ் சதுக்கமுஞ் சமைக்க சந்தியுங்
காலையு மாலையுங் கடவு ளர்க்கணி
மாலையுந் தூபமும் வழங்கு கென்றனன்.

'ஆலயம் புதுக்குக; அந்தணாளர்தம்
சாலையும் சதுக்கமும் சமைக்க சந்தியும்;
காலையும் மாலையும் கடவுளர்க்கு அணி
மாலையும் தூபமும் வழங்குக!' என்றனன்.

பொ :—'கோயில்களைப் புதுப்பிக்க; அந்தணர்களுடைய வேள்விச்சாலைகளையும் நான்கு தெருக்கள் கூடுமிடங்களையும் மூன்று தெருக்கள் கூடுமிடங்களையும் ஏற்படுத்துக; விடியற்காலையிலும் மாலைப்பொழுதிலும் தெய்வங்களுக்கு அழகிய மாலைகளையும் திருவிளக்குகளையும் இடுக!' என்று கட்டளையிட்டான் (அரசர் கோமகன்-291)

கு :—சாலை – வேள்விச்சாலை; வீடும் ஆம். சதுக்கம் - நான்கு தெருக்கள் கூடுமிடமாகிய நாற்சந்தி. சந்தி - மூன்று தெருக்கள் கூடுமிடமாகிய முச்சந்தி. (114)

## நகரமாந்தர் மகிழ்தல், 294-298

**294.** என்புழி வள்ளுவ ரியானை மீமிசை
நன்பறை யறைந்தனர் நகர மாந்தரும்
மின்பிறழ் நுசுப்பினர் தாமும் விம்மலால்
இன்பமென் றளக்கரு மளக்க ரெய்தினர்.

**என்புழி, வள்ளுவர் யானை மீ மிசை**
**நன் பறை அறைந்தனர்; நகர மாந்தரும்,**
**மின் பிறழ் நுசுப்பினர் தாமும், விம்மலால்**
**இன்பம் என்று அளக்க அரும் அளக்கர் எய்தினர்.**

பொ :—என்று (தசரதன்) கட்டளையிட்டபொழுது, வள்ளுவர் யானைமேலிருந்து நல்லபறையைச் சாற்றினர்; (அயோத்தி) நகரத்திலுள்ள ஆண்களும், மின்னற்கொடிபோன்ற இடையையுடைய பெண்களும் பூரிப்பினால் மகிழ்ச்சியென்று சொல்லப்பட்ட அளவிடுதற்கு அருமையான கடலில் மூழ்கினர்கள்.

கு:—வள்ளுவர் – யானைமேலிருந்து முரசறைந்து அரசன் கட்டளைகளை வெளிப்படுத்தும் குலத்தார். நன்பறை – மங்கல முரசம். அளக்கர் – கடல். (115)

**295.** ஆர்த்தனர் முறைமுறை யன்பினு லுடல்
போர்த்தனர் புளகம்வேர் பொடித்த நீணிதி
தூர்த்தன ரெதிரெதிர் சொல்லி னுர்க்கெலாம்
தீர்த்தனென் றறிந்ததோ வவர்தஞ் சிந்தையே.

ஆர்த்தனர் முறை முறை, அன்பினுல் உடல்
போர்த்தனர் புளகம், வேர் பொடித்த, நீள் நிதி
தூர்த்தனர் எதிர் எதிர் சொல்லினுர்க்கு எலாம்;
தீர்த்தன் என்று அறிந்ததோ அவர் தம் சிந்தையே!

பொ:—(தசரதனுக்குப் புதல்வர் பிறந்த செய்தியறிந்த நகரத்து ஆண்களும் பெண்களும்) அன்பின் மிகுதியால் வரிசை வரிசையாக ஆரவாரித்தார்கள்; உடம்பு முழுதும் மயிர் சிலிர்த்தார்கள்; (அவர் உடலில்) வேர்வைத் துளிகள் அரும்பின; நேர் எதிர்ப்பட்டு வந்து (இந்நற்செய்தியைச்) சொன்னவர்க்கெல்லாம் மிகுந்த பொருளைச் சொரிந்தார்கள். அவர்களுடைய மனமும் புனிதனை திருமாலே (இங்ஙனம் பிறந்தான்) என்று அறிந்து கொண்டமைபோலும்!

கு:—இது கவி வியந்து கூறியவாறு. பிறந்தது திருமால்என்று தெரிந்துகொண்டால் மக்கள் எப்படி மகிழ்ந்து கொண்டாடியிருப்பார்களோ அவ்விதமே கொண்டாடி மகிழ்ந்தனர் என்றவாறு. ஆர்த்தலால் வாயாலும், அன்பினுல் மனத்தாலும், போர்த்தலால் மெய்யாலும் என வாக்கு மனம் காயம் எனும் முக்கரணங்களாலும் தங்கள் மகிழ்ச்சியை நகரத்து மக்கள் தெரிவித்தனர் என்க. திர்த்தன் – தூய்மையானவன் எனத் திருமாலைக் குறித்து நின்றது. (116)

**296.** பண்ணையு மாயமுந் திரளும் பாங்கரும்
கண்ணகன் றிருநகர் களிப்புக் கைம்மிகுந்
தெண்ணெயுங் களபமு மிழுது நானமுஞ்
சுண்ணமுந் தூவினுர் வீதி தோறுமே.

பண்ணையும், ஆயமும், திரளும், பாங்கரும்,
கண் அகன் திரு நகர் களிப்புக் கைம்மிகுந்து
எண்ணெயும் களபமும் இழுதும் நானமும்
சுண்ணமும் தூவினுர் வீதி தோறுமே.

பொ:—இடம் அகன்ற அழகிய நகரமாகிய அயோத்தியிலே மகளிர் கூட்டமும், தோழிமார் கூட்டமும், ஆடவர் கூட்டமும், தோழர் கூட்டமும், மகிழ்ச்சி எல்லை கடக்கப்பெற்று எண்ணெயையும், கலவைச் சந்தனக்குழம்பையும், நெய்யையும், கத்தூரிப் புழுகையும், வாசனைப்பொடிகளையும் தெருக்களிலெல்லாம் வீசிச் சிந்தினர்.

கு :—பண்ணை – மகளிர்கூட்டம். ஆயம் – தோழியர்கூட்டம். திரள் – ஆடவர் கூட்டம். பாங்கர் – தோழர்கள் கூட்டம். கண் – இடம். கைம்மிகுந்து – அளவுகடந்து. களபம் – சந்தனக்குழம்பு இழுது – நெய். நானம் – கத்தூரி. (117)

**297.** சுந்தரப் பொடிகளுஞ் செம்பொற் சுண்ணமும்
சந்தன நீரொடுங் கலந்து தையலார்
பந்தியிற் சிவிறியாற் சிதறப் பார்மிசை
இந்திர வில்லெனக் கிடந்த தெங்குமே.

**சுந்தரப் பொடிகளும் செம் பொற் சுண்ணமும்**
**சந்தனம் நீரொடும் கலந்து தையலார்**
**பந்தியில் சிவிறியால் சிதறப் பார்மிசை**
**இந்திரவில் எனக் கிடந்தது எங்குமே.**

பொ :—பெண்கள் வரிசையாகக்கூடி வண்ணப் பொடிகளையும் செம்பொற்பொடியையும் சந்தன நீரொடுங் கலந்து நீர் விசிறுங் குழல்களாற் சிதற நிலமெங்கும் வானவில் போன்று (பன்னிற வண்ணம் தோன்றக்) கிடந்தது.

கு :— இப்பாடல் பலபிரதிகளிற் கிடைக்கவில்லை. இந்திரவில்–வானவில்; அது பலவகை நிறங்களையும் தன்னகத்தே காட்டா நிற்கும். இது மகிழ்ச்சியால் பெண்கள் பல நிறங்கொண்ட தண்ணீர்களையும் பீச்சாங்குழல் கொண்டு தெறித்து விளையாடியதாகக் கூறுகிறது. (118)

**298.** இத்தகை மாநக ரீரறு நாளுஞ்
★ சித்த முறுங்களி யோடு சிறந்தே
தத்தமை யொன்று முணர்ந்தில தாவா
மெய்த்தவ ணுமம் விதிப்ப மதித்தான்.

**இத்தகை மா நகர், ஈர் அறு நாளும்,**
**சித்தம் உறும் களியோடு சிறந்தே,**
**தத்தமை ஒன்றும் உணர்ந்தில; தாவா**
**மெய்த்தவன் நாமம் விதிப்ப மதித்தான்.**

பொ :—இவ்வாறு பெரிய நகரமாகிய அயோத்தியிலுள்ள மக்கள் பன்னிரண்டு நாட்களாக மனத்தில் மிக்க மகிழ்ச்சியுடனே

தங்களைத் தாங்களே ஒன்றும் அறியாதவர்களாயினர்; கெடாத உண்மையான தவத்தையுடையவனான வசிட்டன் (அப்புதல்வர்களுக்குப்) பேரிடுவதைப் பற்றி நினைக்கலானான்.

கு :—இராமன் பிறந்த மகிழ்ச்சியை அயோத்தி மக்கள் பன்னிரண்டு நாட்கள் வரை கொண்டாடினர். (119)

## இராமன் எனப் பெயரிடுதல்

**299.** கராமலை யத்தளர் கைக்கரி யெய்த்தே
அராவணை யிற்றுயில் வோயென வந்நாள்
விராவி யளித்தருண் மெய்ப்பொரு ளுக்கே
இராம னெனப்பெய ரீந்தன னன்றே.

கரா மலையத் தளர் கைக்கரி, எய்த்தே,
'அரா அணையில் துயில்வோய்!' என அந்நாள்,
விராவி அளித்தருள் மெய்ப் பொருளுக்கே
'இராமன்' எனப் பெயர் ஈந்தனன், அன்று, ஏ.

பொ :—முதலை போர் செய்தலால் தளர்ச்சியடைந்த துதிக்கையையுடைய யானையானது (கடவுளின் இயல்பை) அறிந்து, 'பாம்புப் படுக்கையிற் பள்ளிகொண்டவனே! என்று அழைக்கவும் அப்போதே அங்குச் சென்று (அதனைக்) காத்தருளின உண்மைப்பொருளாகிய திருமாலுக்கு இராமன் என்று திருநாமம் கொடுத்தான் (வசிட்டன்).

கு :—'ஆதி மூலமே!' என்று யானை அழைத்ததாகவே கஜேந்திர மோட்ச மூல கதையிற் கூறப்படும். 'அராவணையிற்றுயில்வோய்' என்று அழைத்ததாகக் கூறப்படவில்லை. எய்த்தே-அறிந்தே; எய்த்தென்றது எய்யாதென்னும் எதிர்மறை வினைக்கு விதி வினை; அஃது அறிந்தென்னும் பொருட்டாம். (சிந்தாமணி, 2683. உரை). 'எய்யாமையே யறியாமையே' என்பது தொல்காப்பியச் சூத்திரம். விராவி-நெருங்கிவந்து; அளித்து-காத்து; அன்று, ஏ: அசைகள். (120)

## பரதன் எனப் பெயரிடுதல்

**300.** கரதல முற்றௌளிர் நெல்லி கடுப்ப
விரத மறைப்பொருண் மெய்ந்நெறி கண்ட
வரத னுதித்திடு மற்றைய வொளியைப்
பரத னெனப்பெயர் பன்னின னன்றே.

கரதலம் உற்று ஒளிர் நெல்லி கடுப்ப,
விரதம் மறைப் பொருள் மெய்ந் நெறி கண்ட
வரதன், உதித்திடும் மற்றைய ஒளியைப்
'பரதன்' எனப் பெயர் பன்னினன், அன்று, ஏ,

பொ :—கையினிடத்துப் பொருந்தி விளங்குகின்ற நெல்லிப் பழத்தை யொக்க, விரதங்களைக் கூறுகின்ற வேதங்களின் உட்பொருளான உண்மை நெறியை அறிந்துள்ள, வரங்களைக் கொடுக்க வல்லவனாகிய வசிட்டன், (இராமனுக்கு) அடுத்துப் பிறந்துள்ள சோதி மயமான குழந்தையைப் பரதன் என்று பெயரிட்டழைத்தான்.

கு :—ஒளி வீசும் எழிலுடைக் குழந்தையை ஒளி என்றார். இது போலவே ஏனை இரண்டு குழந்தைகளையும் ஒளி என்றல் காண்க.

உள்ளங்கை நெல்லிக்கனி போல் வேதங்களின் உட்பொருளைத் தெளிவாக உணர்ந்தவன் வசிட்டன் என்றவாறு. கையிலுள்ள நெல்லிக்கனியின் வெளிவரை போல ஊகத்தால் உள்வரைகளும் எளிதில் உணரப் படுதல் போல், வேதத்தின் உட்பொருளை வெளிப்படைப் பொருளால் அறிதல். (121)

## இலக்குவன் எனப் பெயரிடுதல்

**301.** உலக்குநர் வஞ்சக ரும்பரு முய்ந்தார்
நிலக்கொடி யுந்துயர் நீத்தன ளிந்த
விலக்கரு மொய்ம்பின் விளங்கொளி நாமம்
இலக்குவ னென்ன விசைத்தன னன்றே.

'உலக்குநர் வஞ்சகர்; உம்பரும் உய்ந்தார்;
நிலக்கொடியும் துயர் நீத்தனள்! இந்த
விலக்கு அரு மொய்ம்பின் விளங்கு ஒளி நாமம்,
இலக்குவன்' என்ன இசைத்தனன், அன்று, ஏ,

பொ :—'(இக் குழந்தை பிறந்த பொழுதே) வஞ்சனையை யுடையவர்களாகிய அரக்கர்கள் அழியுந்தன்மையராவர்; தேவர்களும் பிழைத்தார்கள்; நிலமாதும் துன்பமொழிந்தாள்; (எவராலும்) விலக்குதற்கு முடியாத வலிமையையுடைய விளங்குகின்ற சோதிமயமான மகவுக்குப் பெயர் இலக்குவன் என்பதாம்' என்று (வசிட்டன்) கூறினன்.

கு :—இலக்குவன் என்பதற்கு, உத்தம ஆடவனுக்குரிய இலக்கணங்களெல்லாம் அமையப் பெற்றவன் என்றும், இறைபணியாகிய திருவுடன் கூடியவனென்றும் பொருள் கூறலாம். (122)

### சத்துருக்கன் எனப் பெயரிடுதல்

**302.** முத்துருக் கொண்டுசெம் முளரி யலர்ந்தால்
ஒத்திருக் கும்மெழி லுடையவிவ் வொளியால்
எத்திருக் குங்கெடு மென்பதை யெண்ணுச்
சத்துருக் கன்னெனச் சாற்றின னுமம்.

**முத்து உருக் கொண்டு செம் முளரி அலர்ந்தால்**
**ஒத்து இருக்கும் எழில் உடைய இவ் ஒளியால்,**
**எத்திருக்கும் கெடும், என்பதை எண்ணுச்,**
**'சத்துருக்கன்' எனச் சாற்றினன் நாமம்.**

பொ :—முத்தானது (ஒரு குழந்தை) வடிவத்தையெடுத்துச் செந்தாமரைமலர்கள் தன்னிடம் மலரப் பெற்ருல் (அதனை) ஒத்திருக்கின்ற அழகையுடைய இந்தச் சோதியால் எல்லாப் பகைகளும் ஒழியும் என்பதை நினைத்துக்கொண்டே, சத்துருக்கன் என்ற பெயரை வழங்கினுன் (வசிட்டன்).

கு ;—திருக்கு - அகத்தும் புறத்தும் உள்ள பகைகள். சத்துருக்கன் என்பதற்குப் பகைவரைக் கொல்பவன் என்பது பொருள். லவணுசுரன் முதலியோரை இவன் பின்னுல் ஒழித்தமையும் உணர்தற்பாற்று. முத்துருக்கொண்டு என்றதால், சத்துருக்கன் வெள்ளை நிறம் என்பது பெறப்படும். (123)

### பெயரிட்டபோது தசரதன் தானச்சிறப்பு

**303.** பொய்வழி யின்முனி புகறரு முறையால்
இவ்வழி பெயர்க ளிசைத்துழி யிறைவன்
கைவழி நிதியெனு நதிகலை மறையோர்
மெய்வழி யுவரி நிறைத்தன மேன்மேல்.

**பொய் வழி இல் முனி புகல் தரு முறையால்,**
**இவ்வழி பெயர்கள் இசைத்துழி, இறைவன்**
**கை வழி நிதி எனும் நதி கலை மறையோர்**
**மெய்வழி உவரி நிறைத்தன மேன் மேல்.**

பொ —பொய்யாகிய நெறியிற் செல்லாத முனியாகிய வசிட்டன் சிறப்பித்துச் சொல்லப்படுகிற விதிப்படி இவ்வாறு பெயர்களைக் கூறிமுடித்தபோது, சக்கரவர்த்தியாகிய தசரதனது கைகளினின்றும் வழிந்தோடிய செல்வங்களாகிய ஆறுகள், சாத்திரங்களிலும் வேதங்களிலும் வல்ல அந்தணர்களின் உடம்பினிடமாகிய கடலை மிகுதியாக நிரப்பின.

கு :—மறையோர் மெய்வழியுவரி என்றது அந்தணர்களுடைய ஆசைக்கடலை; ஆசைக்கோரளவில்லையாதலால் அது கடல் என்னப்பட்டது; அந்தக் கடல் நிறையும்படி தசரதன் செல்வம் ஈந்தான் என்பதால், அந்தணர்களுடைய அளவற்ற ஆசை தீரும்படி நிதியம் அளித்தான் என்றாயிற்று. தானம் கொடுக்குங்காலை கையால் நீரும் வார்த்துக் கொடுத்தல் மரபாதலின், கைவழி நிதி எனும் நதி எனச் சுவைபடக் கூறினர். (124)

## தசரதனுக்கு இராமனிடத்து அன்பு

**304.** காவியு மொளிர்தரு கமலமு மெனவே
ஓவிய வெழிலுடை யொருவனை யலதோர்
ஆவியு முடலமு மிலதென வருளின்
மேவின னுலகுடை வேந்தர்தம் வேந்தன்.

காவியும் ஒளிர்தரு கமலமும் எனவே
ஓவிய எழில் உடை ஒருவனை அலது, ஓர்
ஆவியும் உடலமும் இலது என. அருளின்
மேவினன் உலகு உடை வேந்தர் தம் வேந்தன்.

பொ :—உலக முழுவதையும் ஆளும் சக்கரவர்த்தியாகிய தசரதன், குவளைமலர்களும் (அவற்றினிடையிடையே) விளங்குகின்ற செந்தாமரைமலர்களுமென்று சொல்லும்படியாகச் சித்திரித்தது போன்ற அழகையுடைய ஒப்பற்ற இராமனையல்லாமல் (தனக்கு) ஓருயிரும் உடம்பும் வேறில்லை யென்னும்படி, (மூத்தமகனிடத்துப்) பேரன்போடு பொருந்தியிருந்தான்.

கு :—காவி நீலநிறமுடையது. கமலம் சிவப்பு நிறமுடையது. காவி இராமனுடைய மேனிநிறத்துக்கும், கமலம் அவனுடைய கண், வாய், கை, கால்களுக்கும் உவமை. ஓவியஎழில் – சித்திரம் போன்ற அழகு. அதாவது, இலட்சிய அழகு. (125)

### குமாரர் வளர்கை

**305.** அமிர்துகு குதலையொ டணிநடை பயிலாத்
திமிரம தறவரு தினகர னெனவும்
தமரம துடன்வளர் சதுமறை யெனவும்
குமரர்க ணிலமகள் குறைவற வளர்நாள்.

அமிர்து உகு குதலையொடு அணி நடை பயிலாத்,
திமிரம் அது அற வரு தினகரன் எனவும்,
தமரம் அது உடன் வளர் சதுமறை எனவும்,
குமரர்கள், நிலமகள் குறைவு அற, வளர் நாள்,

பொ :—(தசரதனுடைய) புதல்வர்கள் நால்வரும் அமிர்தம் சிந்துகின்ற மழலைச் சொற்களுடனே அழகிய தளர்நடையையும் பழகி, இருள்நீங்கும்படி உதித்துவருகிற சூரியன் போலவும், ஒலியுடனே வளர்ந்துவருகிற நான்கு வேதங்கள் போலவும், பூமாதேவியின் குறைகளெல்லாம் நீங்கும்படி வளர்ந்துவரும் நாளில்.

கு :—அடுத்த கவியோடு தொடரும்: இதுமுதல் நான்கு கவிகள் ஒரு தொடர். திமிரம் - இருள். தினகரன் – சூரியன். தமரம் – ஒலி. சதுமறை – நான்குவேதங்கள். **(126)**

### வசிட்டன் கல்வி கற்பித்தல்

**306.** சவுளமொ டுபநய னமுமுறை தருகுற்
றிவளவ தெனவொரு கரைபிறி திலவாய்
உவளரு மறையினொ டொழிவறு கலையும்
தவண்மதி புனையர னிகர்முனி தரவே.

சவுளமொடு உபநயனமும் முறை தருகுற்று,
இ அளவது என ஒரு கரை பிறிது இலவாய்,
உவள் அரு மறையினொடு ஒழிவு அறு கலையும்,
தவள் மதி புனை அரன் நிகர் முனி தரவே.

பொ :—(அக்குமாரர்கள் வளர்நாள்) வெண்ணிறமான பிறையைத் தரித்த சிவபிரானையொத்த வசிட்டமுனிவன், சவுளத்தையும் உபநயனத்தையும் விதித்தபடி செய்வித்து, இவ்வளவினையுடையதென்று ஓர் எல்லை தனியே இல்லாதனவாய், நடுங்குதலில்லாத வேதங்களுடனே அழிவில்லாத (ஏனை) சாத்திர நூல்களையும் சொல்லிக்கொடுக்க (அவைகளைப் பயின்று).

கு :—அடுத்த கவியோடு தொடரும். சவுளம்-குழந்தைகளுக்கு முதலாவதாகத் தலைமுடி களையும் சடங்கு. இது மூன்றும் ஆண்டிலே செய்யப்படும். உபநயனம் – பூணூல் அணிவிக்கும் சடங்கு. இது க்ஷத்திரியர்களுக்குப் பத்தாமாண்டிற் செய்யப்படுவது. கல்வி கரையிலவாகலான், கரை பிறிது இலவாய் என்றார். உவள்–நடுக்கம்; தவள் – வெண்மை. தர – கற்றுத்தர. (127)

## குமாரர்கள் படைபயிலுதல்

**307.** யானையு மிரதமு மிவுளியு முதலா
ஏனைய பிறவுமவ் வியல்பினி னடையுற்
றூனுறு படைபல சிலையொடு பயிலா
வானவர் தனிமுதல் கிளையொடும் வளர.

யானையும் இரதமும் இவுளியும் முதலா
ஏனைய பிறவும் அவ் இயல்பினின் அடையுற்று
ஊன் உறு படைபல சிலையொடு பயிலா
வானவர் தனி முதல் கிளையொடும் வளர.

பொ :—யானையேற்றமும், தேரேற்றமும், குதிரையேற்றமும் முதலாக (அரசர்க்கு வகுத்த) மற்றையெல்லாப் பயிற்சிகளையும் அதததற்கு உரிய முறைப்படியே அறியப்பெற்று, (மாற்றாரின்) தசைபொருந்துதற்கு உரிய பலவான படைக்கலங்களையும் விற்பயிற்சியுடனே பயின்று, தேவர்களின் ஒப்பற்ற முதல்வனாகிய திருமாலின் அமிசமான இராமன் தம்பியருடனே வளர்வானானன்.

கு :—யானை இரதம் இவுளி என்றது, அவற்றையேறி நடத்தும் தொழிற்கல்வியை. (128)

## எல்லாரும் குமாரர்களைவிரும்பி அணுகுதல்

**308.** அருமறை முனிவரு மமரரு மவனித்
திருவும நகருறை செனமுந மிடரோ
டிருவினை துணிதரு மிவர்களி னிவணின்
றொருபொழு தகல்கில முறையென வுறுவார்.

அரு மறை முனிவரும், அமரரும், அவனித்
திருவும், அ நகர் உறை செனமும், 'நம் இடரோடு
இருவினை துணிதரும் இவர்களின் இவண் நின்று
ஒரு பொழுது அகல்கிலம், முறை' என உறுவார்.

பொ :—(உணர்தற்கு) அரிய வேதம் வல்ல இருடிகளும், தேவர்களும், பூமிதேவியும், அந்த அயோத்திநகரத்தில் வாழ்கின்ற மக்களும் 'நம்முடைய துன்பங்களுடனே நல்வினை தீவினையாகிய இருவினைகளையும் அறுக்கவல்ல இவ்வரசிளங் குமரர்களின் (அருகில்) இவ்விடத்தை விட்டு ஒரு காலத்தும் நீங்கமாட்டோம்; (இதுவே நமக்கு) முறையாம்', என்று (அங்குவந்து) சேர்வார்கள்.

கு :—அவர்கள் அக்குழந்தைகளிடத்து அன்புகொண்டு அணுகலாயினர் என்றவாறு. 'அகல்கிலம் உறை' என்று பிரித்து, அகலாது உறைவோம் என்றும் பொருள் கூறலாம். (129)

### இராமனும் இலக்குவனும்

**309.** ஐயனு மிளவலு மணிநில மகடன்
செய்தவ முடைமைக டெரிதர நதியு
மைதவழ் பொழில்களும் வாவியு மருவி
நெய்குழ லுறுமிழை யெனநிலை திரிவார்.

ஐயனும் இளவலும் அணி நிலமகள் தன்
செய் தவம் உடைமைகள் தெரிதர நதியும்,
மைதவழ் பொழில்களும் வாவியும் மருவி,
நெய் குழல் உறும் இழை என நிலை திரிவார்.

பொ :—தலைவனாகிய இராமனும் தம்பி இலக்குவனும் அழகிய பூமாதேவியின் செய்த தவமுடைமைகள் யாவரும் உணரும்படி ஆறுகளிலும், மேகங்கள் தவழப்பெற்ற சோலைகளிலும், குளங்களிலும் சேர்ந்து, நெய்கின்ற குழலுடனே விடாது பொருந்திய நூலிழைபோல (ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாமற் பூமியிலே) சுற்றி வருவார்கள்.

கு :—ஐயன்-தலைமையையுடையவன்: இராமன். மாற்ற மனங் கழிய நின்ற இறைவன் இவ்வாறு மானுடனாக வந்தவதரித்துத் தன் திருவடியால் தீண்டும் பாக்கியம் நிலமகளுக்குக் கிடைத்தமை யாவர்க்கும் புலனாதலால், 'நிலமகடன் செய்தவமுடைமைகள் தெரிதர' என்றார். துணிநெய்கின்ற குழலுடனே நூலானது பிரியாது சேர்ந்து இருப்பதுபோல் இராமனுடனே இலக்குவன் இணைபிரியாது, உடன் திரிவானாயினான். (130)

## பரதனும் சத்துருக்கனும்

**310.** பரதனு மிளவலு மொருநொடி பகிரா
திரதமு மிவுளியு மிவரினு மறைநூல்
உரைதரு பொழுதினு மொழிகில ரெனையாள்
வரதனு மிளவலு மெனமரு வினரே.

பரதனும் இளவலும் ஒரு நொடி பகிராது
இரதமும் இவுளியும் இவரினும், மறை நூல்
உரைதரு பொழுதினும் ஒழிகிலர், எனை ஆள்
வரதனும் இளவலும் என மருவினரே.

பொ :—பரதனும் தம்பியாகிய சத்துருக்கனும் ஒரு நொடிப் போதும் ஒருவரை யொருவர் விட்டுப்பிரியாமல், தேரின் மீதும் குதிரைகளின்மீதும் ஏறி விளையாடும் பொழுதும், வேதநூல்களைக் கற்கும்பொழுதும் (எப்பொழுதும்) நீங்காதவர்களாய், என்னை யடிமையாகவுடைய இராமனும் இலக்குவனும் போலவே கூடி யிருந்தார்கள்.

கு:—பகிராது- பிரியாமல்; இராமனும் இலக்குவனும் இணை பிரியாது வாழ்ந்தது போல், பரத சத்துருக்கனரும் பிரியாது கூடி வாழ்ந்தனர் என்றவாறு. (131)

## குமாரர்கள் முனிவர்களிடம்சென்று மாலை நகர் மீளுதல்

**311.** வீரரு மிளைஞரும் வெறிபொழில் களின்வாய்
ஈரமொ டுறைதரு முனிவர ரிடைபோய்ச்
சோர்பொழு தணிநகர் துறுகுவ ரெதிர்வார்
கார்வர வலர்பயிர் பொருவுவர் களியால்.

வீரரும் இளைஞரும் வெறி பொழில்களின் வாய்
ஈரமொடு உறைதரு முனிவரர் இடை போய்ச்
சோர் பொழுது அணி நகர் துறுகுவர் எதிர்வார்
கார் வர அலர் பயிர் பொருவுவர் களியால்.

பொ :—(நாள் தோறும்) வீரம் மிகுந்தவர்களான இராமனும் பரதனும் (அவர்கள்) தம்பிமாரான இலக்குவனும் சத்துருக்கனும் (நகரின் புறத்தே) மணம் மிக்க சோலைகளினிடத்து அருள் நிறைந்து வாழ்கின்ற சிறந்த முனிவர்களிடத்து (க் காலையிற்)

சென்று (படித்துவிட்டுப்) பொழுது சாயும் மாலைக் காலத்தில் அழகிய அயோத்திநகரத்துக்குத் திரும்பி வந்து சேர்வார்கள். (அப்பொழுது) அவர்களை எதிர்கொள்கின்ற நகரத்து மாந்தர் களிப்பினால், மழை வரவும் செழிக்கின்ற பயிரை யொப்பார்கள்.

கு :—வெறி-மணம். ஈரம்-அருள். சோர்பொழுது-கதிரவன் சோர்கின்ற மாலைக் காலம். துறுகுவர்-அடைவார். கார்-மழை. பொருவுவர் - ஒப்பார். நகர்ப் புறத்துள்ள சோலைகளில் வாழும் முனிவர்களிடம் கல்விகற்றற்குச் செல்வர் என்றவாறு. (132)

## குமாரர்களுக்காக எல்லாரும் கடவுளரை வேண்டுதல்

**312.** ஏழைய ரனைவரு மிவர்தட முலைதோய்
கேழ்கிளர் மதுகையர் கிளைகளு மினையார்
வாழிய வெனவவர் மனனுறு கடவுட்
டாழ்குவர் கவுசலை தயரத னெனவே.

ஏழையர் அனைவரும் இவர் தட முலை தோய்
கேழ்கிளர் மதுகையர் கிளைகளும் இனையார்
வாழிய என அவர் மனன் உறு கடவுள்
தாழ்குவர் கவுசலை தயரதன் எனவே.

பொ :—(அந்நகரத்து) மாதர்களெல்லோரும், இம் மாதர் களுடைய பெரிய தனங்களைப் பொருந்துகின்ற மிக்கு விளங்கும் வலிமையையுடைய ஆடவர்களாகிய இனத்தாரும், கவுசலையையும் தசரதனையும் போல, அவரவர்கள் மனத்திற் பொருந்திய கடவுளை 'இக்குமாரர்கள் (நெடுங்காலம்) வாழ்வார்களாக' என்று தொழுது வேண்டுவர்.

கு :—அயோத்தி நகரத்துப் பெண்டிர் கவுசலையைப் போலவும், ஆடவர் தசரதனைப் போலவும் இராமன் முதலிய நான்கு பிள்ளை களிடத்தும் பேரன்பு மிக்கவர்களாய், அவர்கள் நீடுழிவாழத் தம் மனத்துறை கடவுளை வணங்குவார்கள்.

மதுகையர் கிளைகளும் என்றது, ஆணினத்தார் அனைவரும் என்று பொருள்பட நின்றது.

அக்குழந்தைகளைக் காணும் ஆணும் பெண்ணும் தம் கடவுளைத் தொழுது அவர்களை வாழ்த்தினார்கள் என்க. அக்குழந் தைகள் நீடுழி வாழக் கடவுளைத் தொழுதனராம். அந்நகரத்து மக்கள் தங்கள் குழந்தைகளைப்போலவே அவ்வரசிளங்குமாரர் களைக் கருதி அன்பு செலுத்தினர் என்க. (133)

### இராமலக்குவர்க்கு உவமைகூறுதல்

**313.** கடறரு முகிலொளிர் கமலம தலரா
வடவரை யுடன்வரு செயலென மறையும்
தடவுத லறிவரு தனிமுத லவனும்
புடைவரு மிளவலு மெனநிகர் புகல்வார்.

"கடல் தரு முகில் ஒளிர் கமலம் அது அலரா
வட வரையுடன் வரு செயல் என, மறையும்
தடவுதல் அறிவு அரு தனி முதலவனும்
புடைவரும் இளவலும் என நிகர் புகல்வார்.

பொ ;—வேதங்களாலும் ஆராய்ந்து அறியவொண்ணாத ஒப்பற்ற தலைவனான இராமனும், (அவன்) அருகிலே வருகின்ற தம்பியாகிய இலக்குவனும் (வருகின்ற வருகை) 'கடல்நீரை மொண்டு கொண்டு வருகிற காளமேகம், விளங்குகின்ற செந்தாமரைமலர்களையும் விரித்துக்கொண்டு வடக்கிலுள்ள மேருமலையுடன் வருகின்ற செய்கை போலாம் என்று (கண்டோர்கள்) ஒப்புக்கூறுவார்கள்.

கு :—காளமேகம் இராமனுக்கும் மேருமலை இலக்குவனுக்கும் நிறம் பற்றிய உவமை. கடல்நீரை மொண்டுவரும் காளமேகம் கருநிறமுடையது. கமலம் இராமனுடைய கண், கை, கால், வாய்களுக்கு உவமை. மேருமலை பொன்னிறம் வாய்ந்தது. *(134)*

### இராமன் நகரத்தாரை நலம்வினவுதல்

**314.** எதிர்வரு மவர்களை யெமையுடை யிறைவன்
முதிர்தரு கருணையின் முகமல ரொளிரா
எதுவினை யிடரிலை யினிதுநு மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொ லெனவே.

எதிர் வரும் அவர்களை எமை உடை இறைவன்,
முதிர் தரு கருணையின் முகமலர் ஒளிரா,
'எதுவினை? இடர் இலை? இனிது நும் மனையும்?
மதிதரு குமரரும் வலியர் கொல்?' எனவே.

பொ :—எம்மை அடிமையாகவுடைய தலைவனான இராமன், (தனது) எதிரில் வருகின்ற அந்நகரமக்கள் பலரையும் மிக்க அரு

ளுடனே, தாமரைமலர்போன்ற (தன்) திருமுகம் விளங்கும்படியாக நோக்கி, '(உம்முடைய) தொழில் யாது? துன்பம் இல்லாதிருக்கின்றதா? நும்மனைவி நலம்தானா? அறிவு நிரம்பிய புதல்வர்களும் வலிமையுடையராயிருக்கின்றனரா?' என்று (அவரவர் குடும்ப நலன்களை) வினவ.

கு :—இது முதல் இரண்டு கவிகள் ஒரு தொடர். எதுவினை—உம் தொழில் யாது? (என்னால் உமக்கு ஆகவேண்டிய) வினை யாது? என்றும் பொருள் கொள்ளலாம். இடர் இலை (கொல்)? என்க.

இதனால் இராமன் அந்நகரத்து மக்களுடன் கலந்து உறவாடியது விளங்கும். (135)

## இராமனுக்கு மக்கள் விடையளித்தல்

**315.** அஃதைய நினையெம தரசென வுடையேம்
இஃதொரு பொருளல வெமதுயி ருடனேழ்
மகிதல முழுதையு முறுகவி மலரோன்
உகுபக லளவென வுரைநனி புரிவார்.

அஃது, 'ஐய! நினை எமது அரசு என உடையேம்;
இஃது ஒரு பொருள் அல; எமது உயிருடன் ஏழ்
மகிதலம் முழுதையும் உறுக, இ மலரோன்
உகு பகல் அளவு?' என உரை நனி புரிவார்.

பொ :—அவ்வினவுக்கு (அம்மாந்தர்) 'தலைவனே! (நாங்கள்) உன்னை எங்களது அரசனாகவுடையோம்; (ஆதலால் எங்களுக்கு) இங்ஙனம் ஒரு குறையின்றி வாழ்வது ஒரு பெருங்காரியமன்று. இந்தப்பிரமன் அழியுங்காலமட்டும் எங்கள் உயிரையும், ஏழ்தீவுகளாகவுள்ள இந்த உலகமனைத்தையும் நீ ஆட்சி செய்வாயாக' என்று நன்றாக (வாழ்த்தி) விடை கூறுவார்கள்.

கு :—பின்னால் அரசுதுறந்து காடுசெல்லும் இராமனுக்கு அந்நகரத்து மக்கள் தாங்களாக வலிய மனமுவந்து அவனுக்கு அரசாட்சி யளித்துவிட்டதாகச் சுட்டுகிறார் ஆசிரியர். இது பின்னால் இராமன் பிரிவினால் வரும் பெருந்துயரத்தைக் கடும் பெருந்துயராக மாற்றுகிறது. மலரோன் உகுபகல் அளவு என்றது ஒரு

பிரமகற்பம் அளவும், அதாவது ஊழிக்காலமட்டும், என்ற வாறு. (136)

### உலகம்புகழ, தம்பியர் ஏத்த இராமன் இனிதுவாழ்தல்

**316.** இப்பரி சணிநக ருறையும் யாவரும்
★ மெய்ப்புகழ் புனைதர விளைய வீரர்கள்
தப்பற வடிநிழ றழுவி யேத்துற
முப்பரம் பொருளுக்கு முதல்வன் வைகுறும்.

இப் பரிசு அணி நகர் உறையும் யாவரும்
மெய்ப் புகழ் புனைதர இளைய வீரர்கள்
தப்பு அற அடி நிழல் தழுவி ஏத்துற
முப்பரம் பொருளுக்கு முதல்வன் வைகுறும்.

பொ :—இந்தவிதமாக (அந்த) அழகிய நகரமாகிய அயோத்தியில் வாழ்கின்றவர்களெல்லோரும் (தனது) உண்மையான புகழை எடுத்துக்கூறவும், வீரம் மிக்க இளந்தம்பிமார்கள் தவறுதலில்லாமல் (தனது) அடிநிழலைப் பொருந்தித்துதிக்கவும், தலைமைத் தேவதைகளாகிய மும்மூர்த்திகளுள்ளுந் தலைவனான (திருமாலின் அமிசமான) இராமன் வாழ்ந்துவந்தான்.

கு :—இராமனின் புகழ் பொருள்சேர்புகழாதலின் அதனை 'மெய்ப்புகழ்' என்றார். இராமனுடைய தம்பியர் மூவரும் அவனிடம் தவறாத அன்பு பூண்டொழுகினர் என்பதாம். (137)

### தசரதனுடைய பெருமகிழ்ச்சி

**317.** அரசர்தம் பெருமக னகிலம் யாவையும்
விரசுறு தனிக்குடை விளங்க வென்றிசேர்
முரசொலி கறங்கிட முனிவ ரேத்துறக்
கரைசெய லரியதோர் களிப்பின் வைகுநாள்.

அரசர் தம் பெருமகன், அகிலம் யாவையும்
விரசு உறு தனிக்குடை விளங்க, வென்றி சேர்
முரசு ஒலி கறங்கிட, முனிவர் ஏத்துறக்,
கரை செயல் அரியது ஓர் களிப்பின் வைகும் நாள்.

பொ :—அரசர்களின் தலைவனான தசரதன் உலகம் முழுவதும் பொருந்திய (தனது) ஒப்பற்ற வெண்கொற்றக்குடை நிழலில் மேன்மையுற, வெற்றிபொருந்திய பேரிகைகள் முழங்கியொலிக்கவும், இருடிகள் வாழ்த்தவும், சொல்லுதற்கு அருமையான ஒப்பற்ற மகிழ்ச்சியிலே திளைத்து வாழுங்காலத்தில்.

கு :—'மண்டபம் பொலிய எய்தினன்' என அடுத்த கவியோடு முடியும்.

கரைசெயல் - சொல்லுதல் ; கரை செயலரியது - எல்லையிடுவதற்கு அருமையான, கரைகோலுவதற்கரிய என்றும் பொருள் கூறலாம். (138)

திருவவதாரப் படலம் முற்றிற்று.

# 6. கையடைப் படலம்

கையடை என்பது ஒருவர் தம் பொருளை அல்லது தம் தொடர்புடையார் ஒருவரைக் காத்தளிக்குமாறு தக்கார் கைப்படுத்தல் அல்லது தக்காரிடம் சேர்ப்பித்தல் என்று பொருள்படும். இது, 'நும்மகன் கையடை நோக்கும் ஊங்கென்றான்' (அயோத்தியா காண்டம், மந்திரப்படலம். 87) என்று பின் ஆசிரியர் எடுத்தாளுதலால் விளங்கும். கையடை என்பதற்கு அடைக்கலம் என்று பொருள் கூறுவாரும் உண்டு. 'தந்தை நீ தனித் தாயும் நீ இவர்க்கு எந்தை தந்தனன் இயைந்த செய்க' என்று இராமலக்குமணரைத் தசரதன் விசுவாமித்திரமுனிவரன்பாற் சேர்ப்பித்த செய்தி பேசுதலின் இப்படலம் இப்பெயருடையதாயிற்று.

ஒரு மகப்பேறு கிட்டாது வருந்தியிருந்த தசரதன், அழகும் அறிவும் ஆண்மையும் கலையும் நடையும் வாய்ந்த மக்கள் நால்வரைப் பெற்று மகிழ்ந்து வாழும் நாளில் ஒருநாள் அவன் அவையில் விசுவாமித்திரமுனிவன் தோன்றினான். அவன், அரசனாகி உலகாண்டு, பின் அப்பதவியை வெறுத்துதறித் தவமேற்கொண்டு பிரம இருடியானவன்; விரும்பினால் உயிர்கள் எல்லாவற்றோடும் பிரமனுள்ளிட்ட தேவருடனும் வேறு உலகினையும் படைக்கும் ஆற்றல் மிக்கவன். தயரதன், வந்த முனிவனை வணங்கி வாழ்த்திப் பூசித்துப் பாராட்டி, வந்த காரியம் என்னை? என வினவினான். முனிவன் தான் இயற்றும் வேள்வியை அரக்கர் அழிக்காத வண்ணம் காத்து முற்றுவிக்குமாறு இராமனைத் தருக என்றனன். அதுகேட்ட அரசன், நெடுநாள் வருந்திப்பெற்ற மகனைப் பிரியலாற்றாது, 'இராமன் சிறியன்; போர்க்கலைப் பயிற்சி முழுதும் பெறாதவன்; ஆதலால் யானே வந்து அரக்கரைவென்று உன் வேள்வியை முற்றுவிப்பேன்' என்று பணிந்து கூறினன். கேட்ட முனிவர்க்கு வெகுளி மிக்கது. என்ன தீங்கு நேருமோ என்று யாவரும் நடுங்கினர். அவ்வமயம் வசிட்டமுனிவன், தயரதனைத் தேற்றி, 'இராமனுக்கு அரிய பேறுகள் எய்துங்காலம் கிட்டியது; மறாது இராமனைக் கொடுக்க' என்று கூறினன். அதற்கு இசைந்த தசரதன், தன் கட்டளையால்வந்த இராமலக்குமணர்களை விசுவாமித்திரமுனிவனிடம் ஒப்புவித்தான். பெற்ற முனிவனும், மகிழ்ந்து தன் உறையுள் நோக்கி நடந்தான். குமரரும், அரசனுயிர் வழிக்கொண்டு நடந்தது போலவும், முனிவனைத் தொடர்ந்து அவன்நிழல் சென்றாற்போலவும் சென்றனர். முனிவனும் குமரரும்

சரயு நதிக்கரையை அடைந்து ஒரு சோலையை எய்தினர்கள். இராமன் எதிர்ப்பட்டதொரு சோலையின் வரலாற்றை வினவுவானுயினன் : என்பது இப்படலத்தின் சுருக்கமாகும். இப்படலம், இருபத்து நான்கு செய்யுட்களை யுடையது.

வான்மீகத்துள், இக்கதைப்பகுதி, 19-ஆம் சருக்கத்தின் 36-ஆம் சுலோகம் முதல் 23-ஆம் சருக்கத்தின் 8-ஆம் சுலோகம் வரை 124 சுலோகங்களால் விரித்துப் பேசப்பட்டது.

வான்மீகம், தசரதசக்கரவர்த்தி தன் மைந்தர்க்கு மணவினை நிகழ்த்த எண்ணி, அமைச்சர், புரோகிதர், சுற்றத்தார் முதலியவர்களுடன் ஆலோசித்துக்கொண்டிருக்கும்பொழுது விசுவாமித்திர முனிவன் அரசன் சபையில் வந்து சேர்ந்தார் என்று தொடங்குகிறது.

விசுவாமித்திர முனிவன் சக்கரவர்த்தியிடம் தன் வேள்வியை அழிப்பவர் இராவணன் கட்டளையால் படையோடுகூடிய சுபாகு, மாரீசன் என்னும் அரக்கர் என்று, அவர் ஆற்றல் முதலிய வெல்லாம் விளங்க விரித்துக் கூறியதாக வான்மீகத்திற் காணப்படுகிறது. கம்பர், வேள்வியழிப்பவர் நிருதர் என்று சுருங்கக் கூறுகிறூர்.

வான்மீகி முனிவர் கூறுவது, அரக்கரோடுபொருது வென்று வேள்வி காக்கும்படி மகனை அனுப்பவேண்டிய சக்கரவர்த்தியின் மனத்தே தயக்கத்தை எழுப்புவதாயிருக்கிறது ; 'என் மகனைக் கொடுக்கவேமாட்டேன் '* என்று சொல்லும்படியும் செய்கிறது' கம்பர் கூறுவதோ, தயக்கமின்றி, 'நிருதரோடு இந்திரன் முதலிய தேவர் வரினும் வென்று நின் வேள்வியை யான் காப்பேன். என்று தசரதன் சொல்லும்படி செய்கிறது.

இராமபிரானுடைய ஆற்றல் முதலியவற்றை விசுவாமித்திர முனிவன் விரித்துக் கூறுவதாய் அமைந்த வான்மீகப் பகுதி, தன் வேள்வி காத்தற்குரிய தகுதிவாய்ந்த தலைவனைத் தன்வாலறிவினல் அறிந்து துணிந்து நாடிவந்த மெய்ப்பொருளுணர்ந்தோன் பேச்சாகவும் தக்கோர் துணையால் தம் கருமம் முடிக்கும் விழைவுடையார் பேச்சாகவும் விளங்குகிறது.

இவ்வாறு பெறும் விழைவுடைய விசுவாமித்திரமுனிவன் பேச்சால் இராமபிரான் பெருமை பேசாமல், சக்கரவர்த்தியின் நலம் கருதுபவனும், இராமன் தோற்றத்துக்குக் காரணமான வேள்வியை முன்னின்று முற்றுவித்தோருள் ஒருவனும் இராமனுக்கு அருமறை ஓதுவித்து வளர்த்து, அவன் அறிவும் ஆற்ற

*20-ஆம் ஸர்க்கம் 25, 26-ஆம் சுலோகம்.

லும் குணநலங்களும் முதலியவற்றையெல்லாம் நன்குணர்ந்தவனும், 'தேவரும் முனிவரும் உணரும் தேவர்கள் மூவரும் நால்வராம் முனி' என்று பாராட்டத்தக்கவனும்ஆன வசிட்டன், வெகுண்ட முனிவன் கருத்தினை நன்கு அறிந்து நடுநிலைபிறழாது கூறுங் கூற்றுக்குகிறார் கம்பர். இது இராமனை உடனே வசுவாமித்திரமுனிவனுடன் அனுப்பத் தசரத சக்கரவர்த்தியை இசைவிப்பதாய்ச் சுருக்கத்தொடு தெளிவும் வாய்ந்ததாய் உளது.

இனி இப்படலக் கதைகொண்டு அறிந்துகொள்ளத்தக்கவை சில உள. தசரதன் மக்கள், பெருந்துறவியான கலைக்கோட்டு முனிவனருளால் தோன்றியவர்கள்: தெய்வப் பிறப்பாய் இயல்பிலே அமைந்த அறிவும் திருவும் ஆற்றலும் பிற நலங்களும் உடையவர்; முனிவர் பெருமானாகிய வசிட்டனால் ஊட்டிவளர்க்கப்பட்ட ஒழுக்கமும் கல்வியும் ஆற்றலும் நிரம்பியவர். நூற்கல்வியே அன்றிப் போர்க்கலைப் பயிற்சியும் கேள்வியும் வாய்ந்து சிறந்தவர். எனினும் விசுவாமித்திர முனிவனுடன் செல்லுங்கால் அவர்கள் கேள்வியால் அறிவன பல. அத்திரமும் மந்திரமும் முதலியவாக அடையும் பயனும் அளவில்லன. அன்றியும் அவர் வசிட்ட முனிவன்பாற் பெற்ற போர்க்கலைப் பயிற்சி, போராற்றல்மிக்க அரசனாயிருந்து பின் அதை வெறுத்துத் துறவிகளுள் முன் எண்ணத் தக்கவனான விசுவாமித்திரமுனிவன்முன் செயற்பட்டுப் பயன்விளைத்தது. இதுகொண்டு நோக்குங்கால், கற்போர் தாம் கல்விச்சாலையிற் படித்து முடித்த அளவில் அமையாது, புத்தகத்திற் படித்தவற்றை ஆங்காங்குச் சென்று நேரில் கண்டறியவும் வேண்டும் என்பது புலப்படும். புத்தகத்திற் படித்தவற்றுள் அறிவுநூல் மருத்துவம் முதலிய துறைகள்பற்றிய அறிவு, தாம் அறிந்தவற்றைச் செய்ம்முறையால் நன்கியற்றித் தேர்ந்தபின்பே நிறைவுறும். படித்தவற்றை நேரிற்சென்று கண்கூடாகக் காண்பதற்கும், செய்ம்முறையால் தவறாது நன்கியற்றித் தேர்தற்கும் தக்க ஆசிரியர் துணையும் வேண்டும் என்பது பெறப்படும். இவை உலகியற் செய்திகள்.

மேலும், உயர்வறயுயர்ந்த பரம்பொருளின் தோற்றமாய்த் தன்னை அடைந்தாரையெல்லாம் காக்கும் ஆற்றலுடைய இராமன் தன்னை ஒருவன், தாய்தந்தையரைப்போல நின்று காத்துக் கொள்ளும்படி ஒருவனிடம் கொடுக்கவும், மற்றொருவன் ஏற்றுக் கொள்ளவும் எளியனாய் நின்ற இறையியற் பெருமையும் இங்கே புலனாவதாம்.

---

# 6. கையடைப் படலம்

### தசரதன் அரசவை யடைதல்

**318.** நனைவரு கற்பக நாட்டு நன்னகர்
வனைதொழின் மதிமிகு மயற்குஞ் சிந்தையால்
நினையவு மரியது விசும்பி னீண்டதோர்
புனைமணி மண்டபம் பொலிய வெய்தினான்.

**நனை வரு கற்பக நாட்டு நல் நகர்**
**வனை தொழில் மதிமிகு மயற்கும் சிந்தையால்**
**நினையவும் அரியது, விசும்பின் நீண்டது, ஓர்**
**புனை மணி மண்டபம், பொலிய எய்தினான்.**

பொ :—மொட்டுகள் அரும்புகின்ற கற்பக மரங்களையுடைய தேவலோகத்து நல்ல (அமராவதி) நகரை அழகுற அமைக்கும் தொழிலிலே அறிவு சிறந்த மயன் என்னும் சிற்பிக்கும் மனத்தால் நினைக்கவும் முடியாத அருமைப்பாடுள்ளதும், வானளாவ உயர்ந்ததுமான ஓர் இரத்தினம் இழைத்த (அவைக்கள) மண்டபம் பொலிவுறும்படி (ஒருநாள் தசரதன்) அடைந்தான்.

கு :—முன் படலத்து இறுதிச் செய்யுளில் ‘ அரசர் தம் பெருமகன் ’ என்பதை ஈண்டும் எழுவாயாகக்கொண்டு, ‘எய்தினான்’ என வினைமுடிவு செய்க. அமராவதிப் பட்டணத்தைக் கூறியபடியால், அதன்கண் உள்ள சுதர்மை என்னும் சபாமண்டபத்தையும் கொள்க. இந்திர புரியையே இயற்றித் தரவல்ல அறிவாற்றல் மிக்க மயனுங்கூட மனத்தால் எண்ணியும் பார்க்க முடியாதபடி அவ்வளவு அருமையான முறையில் தசரதனுடைய சபாமண்டபம் அயோத்தி நகரில் அமைக்கப்பட்டிருந்ததாம். சிந்தையால் நினையவும் அரியதாயும் விசும்பின் நீண்டதாயும் உள்ள ஓர் மணி புனை மண்டபம் என்க. (1)

45 என்னும் குறியீடுள்ள புத்தகத்தில், ‘ ஓர் ஏட்டில் இப் படலத்தின் தொடக்கத்தில்,

318 (a) ‘ அப்பெருந் திருவொடு மகில நாதனென்
றெப்பெரும் புவனமு மிறைஞ்சி யேத்தவே
தப்பருந் தருமமுந் தயாவுந் தாங்கியே
ஒப்புர வுடனவ னுவந்து வாழுநாள் ’.

என்ற செய்யுள் காணப் படுகிறது" என்று ஒரு குறிப்பு உளது இப்பாட்டின் பொருள், திருவவதாரப் படலத்தின் இறுதியில் 'அரசர்தம் பெருமகன்' என்று தொடங்கும் செய்யுளில் விளக்கமாகக் கூறப்பட்டிருத்தலால் இது மிகைப் பாட்டென்று, மூலத்திற் சேர்க்காது தனியே காட்டலாயிற்று.

### தசரதன் அரியணையில் அமர்ந்த தோற்றம்

**319.** தூயமெல் லரியணைப் பொலிந்து தோன்றினன்
சேயிரு விசும்பிடைத் திரியுஞ் சாரணர்
நாயக னிவன்கொலென் றயிர்த்து நாட்டமோர்
ஆயிர மில்லையென் றைய நீங்கினர்.

தூய மெல் அரியணைப் பொலிந்து தோன்றினன்;
சேய் இரு விசும்பு இடைத் திரியும் சாரணர்,
'நாயகன் இவன்கொல்?' என்று அயிர்த்து, 'நாட்டம் ஓர்
ஆயிரம் இல்லை' என்று ஐயம் நீங்கினர்.

பொ :—(அம்மண்டபத்தில் தசரதன்) தூய்தான மெல்லிய சிங்காதனத்திலே அழகுறக் காட்சியளித்தான் (ஆக), உயர்ந்த பெரிய ஆகாய வழியாகச் சென்ற சாரணரென்னும் தேவ சாதியார் (தங்கள்) தலைவனான தேவேந்திரன்தானோ இவன் என முதலில் ஐயுற்று, ஆயிரம் கண் இல்லை என்று (பின்) ஐயம் நீங்கினார்கள்.

கு :—சாரணர்-பதினெட்டுத் தேவ கணங்களுள் ஒரு சாரார். வான்வழிச் செல்ல வல்லவர்களான சாரணர் என்னும் தேவர்களால் இந்திரனோ என ஐயுறும்படி தசரதன் வீற்றிருந்தான் என்பதால், வானளாவ ஓங்கி நின்ற அவன் சபாமண்டபம் இந்திரனுடைய சுதர்மை என்னும் சபாமண்டபத்தைப் போல அழகுற்றிருந்தது என்பதை உணரலாம். ஆயிரம் கண் இல்லாத ஒரு குறையைத்தவிர அவன் இந்திரனாகவே விளங்கினான் என்றவாறு. (2)

### விசுவாமித்திரன் வருதல்

**320.** மடங்கல்போன் மொய்ம்பினான்
முன்னர் மன்னுயிர்
அடங்கலு முலகும்வே
றமைத்துத் தேவரோ

டிடங்கொணுன் முகனையும்
படைப்பெ னீண்டெனுத்
தொடங்கிய கோசிக
முனிவன் ருேன்றினுன்.

மடங்கல் போல் மொய்ம்பினுன் முன்னர், " மன் உயிர்
அடங்கலும் உலகும் வேறு அமைத்துத் தேவரோடு
இடம் கொள் நான்முகனையும் படைப்பென் ஈண்டு" எனுத்
தொடங்கிய கோசிக முனிவன் தோன்றினுன்.

பொ :—சிங்கம் போன்ற வலிமையையுடையவனுகிய அத் தசர தனின் எதிரில், (புதியவாக) நிலைபெற்ற உயிர்த் தொகுதிகளையும் (அவை தங்குதற்கிடமான) உலகங்களையும் வேறே படைத்து, (மற்றும்) தேவர்களுடனே (சத்தியலோகமென்னும்) இடத்தைக் கொண்ட நான்கு முகங்களையுடையவனுன பிரமதேவனையும் இப் பொழுதே உண்டாக்குவேன் என்று (முன்னெரு காலத்தில்) ஆரம்பித்த விசுவாமித்திர முனிவன் தோன்றினுன்.

கு :—மடங்கல் போல் மொய்ம்பினுன் என்றதனுல் தசரத னுடைய உடல் வலிமையையும், உயிர்களோடு உலகங்களை வேறு படைக்கத்தொடங்கிய முனிவன் என்றதனுல் விசுவாமித்திர னுடைய தவ வலிமையையும் அவன் பெருங் கோபம்கொள்ள வல்லவன் என்பதையும் விளக்கினுர். விசுவாமித்திரன் வர லாற்றை மிதிலைக் காட்சிப் படலத்தில் விரிவாகக் காணலாம். (3)

**தசரதன் விசுவாமித்திர முனிவனை வரவேற்றல் 321—322**

**321.** வந்துமுனி யெய்துதலு மார்பினணி யாரம்
★ அந்தரத லத்திரவி யஞ்சவொளி விஞ்சக்
கந்தமல ரிற்கடவு டன்வரவு காணும்
இந்திர னெனக்கடி தெழுந்தடி பணிந்தான்.

வந்து முனி எய்துதலும், மார்பின் அணி ஆரம்
அந்தரதலத்து இரவி அஞ்ச ஒளி விஞ்சக்
கந்த மலரில் கடவுள்தன் வரவு காணும்
இந்திரன் எனக் கடிது எழுந்து, அடி பணிந்தான்.

பொ :—(தசரதன்) முனிவன் தன்னிடம் வந்து சேர்தலும், தன் மார்பிலணிந்த இரத்தின மாலையானது, வானத்திலுள்ள

(ஒளி வீசும்) சூரியனும் அஞ்சும்படி ஒளி மிக மணமுள்ள தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனுடைய வருகையைக் கண்ட இந்திரன் போல விரைந்தெழுந்து, அம்முனிவன் திருவடிகளை வணங்கினான்.

கு :—முன் பாட்டில் உள்ள மடங்கல் போல் மொய்ம்பினான் (தசரதன்) என்பதனை வருவித்து எழுவாயாக்குக. தசரதன் மார்புக்கு வானப்பரப்பும் அம்மார்பில் விளங்கும் ஆரத்துக்கு வானப் பரப்பில் விளங்கும் சூரியனும் உவமை. (4)

## தசரதன் முனிவற்கு இருக்கையீந்து வழிபட்டு இன்மொழி கூறல் 322—323

**322.** பணிந்துமணி செற்றுபு
குயிற்றியவிர் பைம்பொன்
அணிந்ததவி சிட்டதி
னருத்தியொ டிருத்தி
இணைந்தகம லச்சரணை
ருச்சனைசெய் தின்றே
துணிந்ததென் வினைத்தொடர்
பெனத்தொழுது சொல்லும்.

**பணிந்து, மணிசெற்றுபு குயிற்றி அவிர் பைம் பொன்**
**அணிந்த தவிசு இட்டு, அதின் அருத்தியொடு இருத்தி**
**இணைந்த கமலச் சரண் அருச்சனைசெய்து 'இன்றே**
**துணிந்தது என் வினைத்தொடர்பு' எனத் தொழுது சொல்லும்.**

பொ :—(தசரதன்) முனிவனை வணங்கி, இரத்தினங்களைச் செதுக்கிப் பதித்து, விளங்கும் பசும் பொன்னால் அழகாகச் செய்யப்பட்ட இருக்கையிட்டு, அதனில் அன்புடன் வீற்றிருக்கச் செய்து, ஒன்றோடொன்று சேர்ந்துள்ள தாமரைமலர்போலும் திருவடிகளை அருச்சித்து, 'என் ஊழ் வினையின்றொடர்பு இப்பொழுதே அற்று விட்டது' என்று கைகூப்பிக்கொண்டு கூறுவானாயினன்.

கு :—செற்றுதல் – செதுக்குதல்; குயிற்றுதல் – பதித்தல். பணிந்து இட்டு இருத்தி அருச்சனை செய்து, சொல்லும் என முற்றுவிக்க. தசரதன் என்னும் எழுவாய் அதிகாரத்தால் வருவித்துரைக்கப்பட்டது. (5)

323\. நிலஞ்செய்தவ மென்றுணரி
னன்றுநெடி யோயென்
நலஞ்செய்வினை யுண்டெனினு
மன்றுநகர் நீயான்
வலஞ்செய்துவ ணங்கவெளி
வந்தவிது முந்தென்
குலஞ்செய்தவ மென்றினிது
கூறமுனி கூறும்.

**நிலம் செய் தவம் என்று உணரின் அன்று, நெடியோய்! என்**
**நலம் செய் வினை உண்டு எனினும் அன்று, நகர் நீ யான்**
**வலம் செய்து வணங்க எளிவந்த இது, முந்து என்**
**குலம் செய் தவம் என்று இனிது கூற, முனி கூறும்.**

பொ:—'பெரியோய்! யான் வலம் செய்து வணங்கும்படி நீ இந்நகரத்தில் எளிதே வந்த இச்செயற்குக் காரணம், இந் நிலம் செய்த தவமோ என்று ஆராய்ந்தால் அதுவன்று; யான் செய்த நல்வினை உண்டு எனின் அதுவுமன்று; (வேறு யாது? எனின்) என்குலம் முன்பு செய்த தவமே' என்று இனிதாகச் சொல்ல, முனிவன் சொல்லுவான்.

கு:—இந்நகரில் என இகரச் சுட்டும் ஏழன் உருபும் விரிக்க. நிலம் என்பது ஆகுபெயராய் நிலத்தில் உள்ளாரை உணர்த்தி நின்றது. குலம் என்பது குடி (வம்மிசம்), மகன் முதலிய பல பொருள் குறிக்கும் ஒரு சொல் ஆகும். முந்து என் குலம் செய் தவம் என்பதற்கு முன் என் குலத்தவர் செய்த தவம் என்று பொருள் கூறுவர். குலம் என்பதற்கு மகன் என்று பொருள் கொண்டு, என் மகன் முன்பு செய்த தவமே என்று கூறுதல் அமைவுடையதாகலாம். விசுவாமித்திரனை வழிபட்டுச் சென்று பயனடைபவன் மகனேயன்றோ. இது, ஒருவர் பேச்சில் பின் நிகழ்ச்சி அவர் அறியாமலே மறைந்து தோன்றும் கூற்றாகும். நீ வருதற்குக் காரணம் 'இந்நிலம் செய்தவம்' என்று கூறலாம் என்றால், இந்நிலம் பண்டுதொட்டே உளதாயினும், இதுவரை உன்வரவு நிகழாமையின்' இந்நிலம் செய்தவம் ஆகாது; உன்னை வரவேற்று வணங்கிப் போற்றும் பேற்றினை யான் பெற்றமை யால், நின்வரவுக்குக் காரணம் என் தவம் என்று ஒருவாறு கூற லாம்; ஆயினும், அறுபதினாயிரம் ஆண்டு நிகழ்ந்த என் ஆட்சிக் காலத்தில் இதுவரை உன்வரவு நிகழாமையால் அதுவும் (என் தவ மும்) காரணமாகாது. பின்னை யாது காரணம்? எனின் என் மகன்

முன் செய்த தவம் என்று உண்மைக் காரணத்தை அரசன் ஆய்ந்துணர்ந்து கூறியதாகக் கோடல் சிறப்புடையதாகலாம். குலம் என்னும் சொல் மகன் என்னும் பொருளில் வருதல், 'குலத் தொடுங் கோறலெண்ணிக் கொடியவன் கடிய சூழ்ந்தான்' (261) என்னும் சீவகசிந்தாமணிப் பாடலானும் அறியலாம். முந்தென் குலம் என்பதற்கு என் மூத்தமகன் என்று பொருள் கொள்ளலும் ஆம். என்று கூற எனவே அமையுமாயினும், 'இனிதுகூற' என்றது, முனிவன் தான் நினைந்துவந்ததற்கு இசையும் குறிப்பு அரசன் கூற்றால் அறிந்து மகிழுமாறு இனிதாகக் கூற என்றவாறு. 'எம்குலம்' என்று பன்மைவாய்பாடமைந்த பாடத்தினும் 'என் நலம்' செய்வினை' 'யான் வலஞ்செய்து வணங்க' என்று மேல் அமைந்த ஒருமைவாய்பாடுடைய பாடங்களோடு இயைபுடைய 'என் குலம் செய்தவம்' என்ற பாடம் சிறப்புடையதாகும் (6)

### விசுவாமித்திரமுனிவன் தசரதனைப் புகழ்தல் 324—325

**324.** என்னனைய முனிவரரு மிமையவரு
☆ மிடையூறொன் றுடையராஞல்
பன்னகமு நகுவெள்ளிப் பனிவரையும்
பாற்கடலும் பதும பீடத்
தன்னகருங் கற்பகநாட் டணிநகரு
மணிமாட வயோத்தி யென்னும்
பொன்னகரு மல்லாது புகலுண்டோ
விகல்கடந்த புலவு வேலோய்.

என் அனைய முனிவரரும் இமையவரும்
இடையூறு ஒன்று உடையர் ஆனல்
பல் நகமும் நகு வெள்ளிப் பனிவரையும்
பாற்கடலும் பதுமபீடத்
தன் நகரும் கற்பகநாட்டு அணிநகரும்
மணி மாட அயோத்தி என்னும்
பொன் நகரும் அல்லாது புகல் உண்டோ?
இகல் கடந்த புலவு வேலோய்!

பொ:—பகைவரை வென்ற புலால் நாறும் வேற்படையுடையவனே! என்னையொத்த இருடிகளும் தேவர்களும் ஒரு துன்பம் அடைவராஞல், அவர்களுக்குப் பல மலைகளையும் எள்ளி நகையாடும் குளிர்ந்த வெள்ளிமலையாகிய கயிலாயமும், திருப்பாற்கட

லும், தாமரையாதனத்துறைவோனுகிய பிரமனுடைய நகரமாகிய மனேவதியும், கற்பகநாட்டின்கண் உள்ள அழகிய நகரமாகிய அமராவதியும் மணிபதித்த மாளிகைகளையுடைய அயோத்தி என்னும் அழகிய நகரமும் (அவ்விடர் நீங்கச் சென்று அடையும் புகலிடமாம். அவை) அல்லாமல் வேறு புகலிடமும் உண்டோ? (இல்லை).

கு:—என்னனைய முனிவரரும் என்பது, வான்மீகத்து 19-ஆம் சருக்கத்தில் 'யான் அறிவேன்' என்று தொடங்கும் 14-ஆம் சுலோகம் போலத் தன் பெருமை புலப்படுத்தும் விசுவாமித்திரன் கூற்றாகும். அவதார ரகசியம் அறிந்த முனிவன் கூற்றாதலின், திருவவதாரப் படலத்துக்கூறியபடி தேவரும் முனிவரும் சரணடைந்த அமராவதி, கயிலாயம், பிரம நகரமாகிய மனேவதி; திருப்பாற்கடல் என்னும் இடங்களைக் கூறித் தேவர்களுக்குத் திருமால் அருளியபடி அவதரித்துள்ள அயோத்தியைப் பயனளிக்கும் முடிவான புகலிடமாக்கி இறுதியில் கூறினர் எனலாம். 'இடையூறு ஒன்று உடையர் ஆனல்' என்றது அவர்க்கு இடையூறு உளதாகாது, எக்காரணத்தாலேனும் உளதாகுமேல் என்றபடி. (7)

325. இன்றளிர்க்கற் பகநறுந்தே னிடைதுளிக்கு
நிழலிருக்கை யிழந்து போந்து
நின்றளிக்குந் தனிக்குடையி னிழலொதுங்கிக்
குறையிரந்து நிற்ப நோக்கிக்
குன்றளிக்குங் குலமணித்தோட் சம்பரனைக்
குலத்தோடுந் தொலைத்து நீகொண்
டன்றளித்த வரசன்றே புரந்தரனின்
ருள்கின்ற தரச வென்ருன்.

இன் தளிர்க் கற்பகம் நறும் தேன் இடை துளிக்கும்
நிழல் இருக்கை இழந்து போந்து
நின் தளிக்கும் தனிக் குடையின் நிழல் ஒதுங்கிக்,
குறை இரந்து நிற்ப, நோக்கிக்
குன்று அளிக்கும் குலம் மணித் தோள் சம்பரனைக்
குலத்தோடும் தொலைத்து, நீ கொண்டு,
அன்று அளித்த, அரசு அன்றே புரந்தரன் இன்று
ஆள்கின்றது; அரச! என்ருன்.

பொ :—அரசே ! இந்திரன், இனிய தளிர்களையுடைய கற்பகச் சோலையின் மணமுள்ள தேன் இடையிடையே சிந்தும் நிழலிலே அரசிருத்தலை இழந்து வந்து உனது செழித்த ஒற்றை வெண் குடை நிழலில் ஒதுங்கிநின்று தன் குறைகூறி இரந்து நிற்க, நீ அதனைக் கண்டு (இரங்கி) மலை என்று சொல்லத்தக்க சிறந்த அழகிய தோள்களையுடைய சம்பரனென்னும் அசுரனை அவன் குலத்தோடும் அழித்து வான் ஆட்சியை உன் வயப்படுத்தி அப் பொழுது கொடுத்தருளியதல்லவா இப்பொழுது அவ் இந்திரன் அரசாண்டு வருவது !

கு :—கற்பக நறுந்தேன் இடை துளிக்கும் நிழல் இருக்கை என்பதற்குக் கற்பகச்சோலையின் மணமுள்ள தேன் இடையே துளிக்கும் ஒளியுடைய (அமராவதி) நகரம் என்று பொருள் கூறலும் ஆம். (8)

### தசரதன் முனிவன்பால் யான்செய்வது அருளுக என்றல்

**326.** உரைசெய்த வளவிலவன் முகநோக்கி
யுள்ளத்தி னொருவ ராலும்
கரைசெய்த லரியதொரு பேருவகைக்
கடல்பெருகக் கரங்கள் கூப்பி
அரைசெய்தி யிருந்தபய னெய்தினன்மற்
றினிச்செய்வ தருளு கென்று
முரைசெய்து கடைத்தலையான் முன்மொழியப்
பின்மொழியு முனிவ னாங்கே.

உரைசெய்த அளவில் அவன் முகம் நோக்கி,
உள்ளத்தின் ஒருவராலும்
கரை செய்தல் அரியது ஒரு பேர் உவகைக்
கடல் பெருகக் கரங்கள் கூப்பி,
‘அரைசு எய்தியிருந்த பயன் எய்தினன் ; மற்று
இனிச் செய்வது அருளுக’ என்று
முரைசு எய்து கடைத்தலையான் முன் மொழியப்
பின் மொழியும் முனிவன் ஆங்கே.

பொ :—(முனிவன்) சொன்ன அளவில், பேரிகை முழங்கும் தலைவாயிலையுடையவனான தசரதன், மனத்தில் ஒருவராலும் அள விடமுடியாத பெரிய மகிழ்ச்சியாகிய கடல் பொங்கக் கைகளைக்

குவித்து (வணங்கி, முனிவனை முகம்நோக்கி 'நின் வரவால்) அரசாட்சி மேற்கொண்டிருந்தமையால் எய்தும் பயனை அடைந்தேன். இனி யான் செய்யத்தக்க பணியினைக் கட்டளையிட்டருளுக' என்று முன்னே சொல்ல, அப்பொழுதே விசுவாமித்திரமுனிவன் பின் மொழிவானாயினன்.

கு :—அரசு அரைசு எனவும் முரசு முரைசு எனவும் போலியாய்நின்றன. (9)

**முனிவன், வேள்விகாக்க இராமனைத் தருதி எனல்**

**327.** தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக்
கிடையூறுத் தவஞ்செய் வோர்கள்
வெருவரச்சென் றடைகாம வெகுளியென
நிருதரிடை விலக்கா வண்ணம்
செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர்
நால்வரினுங் கரிய செம்மல்
ஒருவனைத்தந் திடுதியென வுயிரிரக்குங்
கொடுங்கூற்றி னுளையச் சொன்னான்.

"தரு வனத்துள் யான் இயற்றும் தவ வேள்விக்கு
இடையூறுத் தவம் செய்வோர்கள்
வெருவரச் சென்று அடை காம வெகுளி என
நிருதர் இடை விலக்காவண்ணம்
செருமுகத்துக் காத்தி என நின்சிறுவர்
நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத் தந்திடுதி" என உயிர் இரக்கும்
கொடுங் கூற்றின் உளையச் சொன்னான்.

பொ :—' விரும்பியதைத் தரும் வனத்தில் (சித்தாச்சிரமத்தில்) யான் செய்யும் தவமும் வேள்வியும் ஆகியவற்றுக்கு இடையூறாகத் தவம் செய்வோர் அஞ்சும்படி போய்ச் சேருகின்ற ஆசையும் வெகுளியும்போல அரக்கர் இடையே (வந்து) விலக்காதபடி, 'போர் முகத்தில் காப்பாயாக' என(க் கட்டளையிட்டு) உன் மக்கள் நால்வருள்ளும் கருநிறமுடைய பெருமையிற் சிறந்தோனாகிய இராமனை மட்டும் தருவாயாக '' என்று உயிரை இரந்துவேண்டும் கொடிய யமன்போல (விசுவாமித்திரன்) தசரதன் மனம் வருந்தும்படி சொன்னான்.

கு:—சித்தாச்சிரமம் என்பது விரும்பியதை அடைவிக்கும் இடம் என்று பொருள்படும். இங்கு அதனையே ஆசிரியர் 'தரு வனம்' என்று கூறுவாராயினர். தவம் செய்வோர் வெருவரச் சென்று அடைதலும் விலக்கலும் காமவெகுளிகட்கும் நிருதர்க்கும் பொதுவான தன்மைகள். நிருதர் இருவர் பெயரை வான்மீகம், சுவாகு, மாரீசன் என்று கூறுகிறது. கம்பர் அந்நிருதர் பெயரைக் காமம் வெகுளி என உவமவாய்பாட்டாற் கூறினர். இச் செய்யுளில் பயின்ற என என்னும் மூன்றனுள், முன்னது போல என உவமப்பொருளிலும், காத்தியென என்னும் இடையிலுள்ளது சக்கரவர்த்தி இராமனை நோக்கிக் கூறவேண்டிய கட்டளையின் அநுவாதமாகவும், "தந்திடுதி என" என்னும் ஈற்றிலுள்ளது விசுவாமித்திரமுனிவன் சக்கரவர்த்தியை நோக்கிக் கூறிய கூற்றின் அநுவாதமாகவும் பயின்றன. 'உயிர் ஈர்க்குங் கொடுங் கூற்றின் உளையச் சொன்னான்' என்று பாடங்கொண்டு, 'உயிரை உடலினின்று பிரித்திழுக்கும் கொடிய பேச்சால் தசரதன் வருந்தும்படி கூறினான்' என்று பொருள் கூறுதலும் ஆம். (10)

## தசரதன் துயர் உறுதல்

**328.** எண்ணிலா வருந்தவத்தோ னியம்பியசொன்
மருமத்தி னெறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையிற் கனனுழைந்தா
லெனச்செவியிற் புகுத லோடும்
உண்ணிலா வியதுயரம் பிடித்துந்த
வாருயிர்நின் றூச லாடக்
கண்ணிலான் பெற்றிழந்தா னெனவுழந்தான்
கடுந்துயரம் கால வேலான்.

எண் இலா அருந்தவத்தோன் இயம்பிய சொல்,
மருமத்தின் எறிவேல் பாய்ந்த
புண்ணில் ஆம் பெரும் புழையில் கனல்நுழைந்தால்
எனச் செவியில் புகுதலோடும்,
உள் நிலாவிய துயரம் பிடித்து உந்த
ஆர் உயிர் நின்று ஊசல் ஆடக்
கண் இலான் பெற்று இழந்தான் என உழந்தான்
கடுந்துயரம் கால வேலான்.

போ :—அளவில்லாத அருமையான தவத்தையுடைய விசுவாமித்திரமுனிவன் சொல்லிய சொல்லானது, நெஞ்சிலே பகைவன் எறிந்த வேல்பாய்ந்த புண்ணில் உண்டாகிய பெரிய தொளையில் தீப்புகுந்தாற்போலக் காதுகளிற் புக்க அளவில், இயமனையொத்த வேற்படையையுடைய தசரதன், மனத்தில் மிக்க துக்கமானது, பற்றி வெளியே தள்ளுதலால் அரிய உயிரானது போவதும் வருவதுமாயிருக்கப் பிறவிக்குருடன் கண்களைப் பெற்று (மீண்டும்) இழந்தாற்போலக் கொடிய துக்கத்தால் வருந்தினன். (11)

தசரதன் யானேகாப்பேன், வேள்விக்கு எழுக எனல்

329. தொடையூற்றிற் றேன்றுளிக்கு நறுந்தாரா
னொருவண்ணந் துயர நீங்கிப்
படையூற்ற மிலன்சிறிய னிவன்பெரியோய்
பணியிதுவேற் பனிநீர்க் கங்கை
புடையூற்றுஞ் சடையானு நான்முகனும்
புரந்தரனும் புகுந்து செய்யும்
இடையூற்றுக் கிடையூறு யான்காப்பென்
பெருவேள்விக் கெழுக வென்றான்.

தொடை ஊற்றில் தேன் துளிக்கும் நறுந்தாரான்
ஒருவண்ணம் துயரம் நீங்கிப்
'படையூற்றம் இலன் ; சிறியன் இவன் ; பெரியோய் !
பணி இதுவேல், பனி நீர்க் கங்கை
புடை ஊற்றும் சடையானும் நான்முகனும்
புரந்தரனும் புகுந்து செய்யும்
இடையூற்றுக்கு இடையூறு ஆ, யான் காப்பென்
பெரு வேள்விக்கு எழுக' என்றான்

போ :—ஊற்றைப்போலத் தொடையாக (-இடையறாது) தேன் துளிக்கும் நல்ல மாலையணிந்த தசரதன், ஒருவாறு துயரம் நீங்கி, (முனிவனை நோக்கி), 'பெரியோய் ! செய்யத்தக்க பணி இது வாயின், இராமன் படைப்பயிற்சியற்றவன், இளையன், (ஆதலால்) குளிர்ந்த கங்கைநீரை ஒரு பக்கத்தே ஒழுகவிடும் சடையை யுடைய சிவபிரானும் பிரமனும் இந்திரனும் வந்து (இடையூறு செய்யினும் அவர்) செய்யும் இடையூறுகளுக்கு இடையூறாக யானே (நின்று நின் வேள்வியைக்) காப்பேன் ; பெரிய வேள்வி செய்தற்குப் புறப்படுக' என்றான்.

கு :—நிருதரேயன்றி முன்னே சிலர் வேள்விக்கு இடையூறு விளைத்த சிவபிரானும், இந்திரனும், முன் மன்னுயிரடங்கலும் உலகும் வேறமைத்துத் தேவரோடு இடங்கொள் நான்முகனையும் நீ படைக்கத் தொடங்கினமையால் நின்னோடு மாறுபாடுடைய பிரமனும் வந்து தடைசெய்யினும் நீக்கி வேள்வியை முற்றுவிப் பேன் என்றவாறு. இவன் என்றது இராமனைச் சுட்டிநின்றது. படையூற்றமிலன், சிறியன் என்றது நிருதரொடுபொருதுவென்று வேள்வி காத்தற்கு இராமன்பால் தகுதியின்மை கூறியவாறு. இடையூறுக என்பது ஈறு கெட்டு நின்றது. யானே என ஏகாரம் விரிக்க. காப்பென் எனவே அமையுமாயினும், யான்காப்பென் என்றது சம்பரன் முதலியோரை வென்றமையால் வேள்வி காத்தற்குரிய தகுதி தன்பால் உள்ளமை குறித்து நின்றது. பயன் விளையாது செய்தலிற் 'பெருவேள்வி' என்றான். (12)

### விசுவாமித்திரமுனிவன் வெகுளுதல்

**330.** என்றனனென் றலுமுனிவோ டெழுந்தனன்மண்
படைத்தமுனி யிறுதிக் காலம்
அன்றெனவா மெனவிமையோ ரயிர்த்தனர்மேல்
வெயில்கரந்த தங்கு மிங்கும்
நின்றனவுந் திரிந்தனமீ நிவந்தகொழுங்
கடைப்புருவ நெற்றி முற்றச்
சென்றனவந் ததுநகையுஞ் சிவந்தனகண்
ணிருண்டனபோய்த் திசைக ளெல்லாம்.

**என்றனன்; என்றலும், முனிவோடு எழுந்தனன், மண்**
**படைத்த முனி; 'இறுதிக்காலம்**
**அன்று' என 'ஆம்' என இமையோர் அயிர்த்தனர்; மேல்**
**வெயில் கரந்தது; அங்கும் இங்கும்**
**நின்றனவும் திரிந்தன; மீ நிவந்த கொழுங்**
**கடைப் புருவம், நெற்றி முற்றச்**
**சென்றன; வந்தது நகையும்; சிவந்தன கண்;**
**இருண்டன போய்த் திசைகள் எல்லாம்.**

பொ :—(வேள்விக்கு எழுக) என்று (தசரதன்) சொன்னான்; சொன்ன அவ்வளவில் வேறு உலகத்தைப் படைத்தவனாகிய விசுவாமித்திரமுனிவன் சினந்து (தன் இருக்கைவிட்டு) எழுந்தான்;

(அவன் எழுந்ததை நோக்கி) தேவர்கள் உலக முடிவு காலம் ஆம் என்றும் அன்றென்றும் ஐயுறுவாராயினர் : வானத்திலுள்ள சூரியனும் மறைந்தான் ; அவ்வுலகிலும் இவ்வுலகிலும் உள்ள நிலைத்திணைப் பொருள்களும் இயங்குவவாயின. அழகிய நுனியை யுடைய (முனிவன்) புருவங்கள் மேல் எழுந்தனவாய் நெற்றி முழுதும் . பரவின ; (கோபச்) சிரிப்பும் வந்தது ; கண்கள் சிவந்தன ; திசைகளெல்லாம் இருண்டுபோயின.

கு :—என்றனன் என்றது முன்பாட்டில் கூறியதை அநுவதித்தது. விசுவாமித்திரன் உலகு படைத்தமை மிதிலைக்காட்சிப்படலத்து 117-ஆம் பாடலால் அறியத்தகும். முனிவன் வேண்டியபடி இராமனைத்தராது தான் வருவதாகத் தசரதன் கூறியதே சினம் எழக் காரணமாயிற்று. முனிவெகுளியால் நிகழ்வன கொண்டு இறுதிக்காலமோ எனவும் அது காலவரையறைப்படி யுகமுடிவுகாலம் அன்மையின் அன்றோ எனவும் ஐயுறுவாராயினர் என்க. வெயில் – சூரியன். (13)

### வசிட்டமுனிவன் தசரதனுக்கு உறுதிகூறுதல், 331—332

**331.** கறுத்த மாமுனி கருத்தை யுன்னிநீ
★ பொறுத்தி யென்றவற் புகன்று நின்மகற்
குறுத்த லாகலா வுறுதி யெய்துநாள்
மறுத்தி யோவெனு வசிட்டன் கூறினான்.

**கறுத்த மா முனி கருத்தை உன்னி, நீ**
**பொறுத்தி என்று அவற் புகன்று, ‘நின்மகற்கு**
**உறுத்தல் ஆகலா உறுதி எய்தும் நாள்,**
**மறுத்தியோ?’ எனு வசிட்டன் கூறினான்.**

பொ :—வசிட்டமுனிவன், வெகுண்ட விசுவாமித்திரனுடைய உள்ளக்கிடக்கையை நினைந்து, அவ் விசுவாமித்திரமுனிவனை நோக்கி ‘நீ ஆறியருள்க’ என்று கூறி, (தசரதனை நோக்கி) ‘உன் மகனுக்குப் பிறரால் அடைவித்தற்கரிய பெரும்பேறு தானே வந்தடையுங் காலத்து மறுக்கல் ஆகுமோ?’ (ஆகாது)என்று கூறினான்.

கு :—கறுத்தல் - வெகுளுதல். முனி கருத்தாவது சீதாபிராட்டியோடு இராமபிரானைச் சேர்ப்பித்தல், இது, ‘மிதிலையர் கோமான் புரியும் வேள்வியும் காண்டும் நாம்’ என்று வேள்விப் படலத்து இம் முனிவன் கூறுதலாலும் விளங்கும். (14)

**332.** பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்
ஐய நின்மகற் களவில் விஞ்சைவந்
தெய்து காலமின் றெதிர்ந்த தென்னவே.

**'பெய்யும் மாரியால் பெருகு வெள்ளம் போய்**
**மொய்கொள் வேலைவாய் முடுகும் ஆறு போல்,**
**ஐய! நின் மகற்கு, அளவில் விஞ்சை வந்து**
**எய்து காலம் இன்று எதிர்ந்தது' என்னவே.**

பொ :—வியக்கத்தக்க (குணமுடைய)வனே! பெய்கின்ற மழையால் பெருகிய வெள்ளமானது பெருமைமிக்க கடலில் விரைந்தடைதல்போல, உன்மகனை இராமனுக்கு அளவில்லாத வித்தைகள் (விரைந்து) வந்து சேரும் காலம் இப்பொழுது நேர்ந்துளது என்று (தசரதனை நோக்கி வசிட்டமுனிவன்) கூற.

கு :—இச்செய்யுளும் பின்வரும் 'குருவின் வாசகம்' என்று தொடங்கும் செய்யுளும் ஒரு தொடர். விசுவாமித்திரனுக்கு மேகமும் அவன் அருளுக்கு மேகம் பொழியும் மழையும், அவன் அருளால் வழங்கும் அளவில் விஞ்சைகளுக்கு, மேகம் பொழியும்மழையால் பெருகிய வெள்ளமும்' அவ்விஞ்சைகள் வந்துசேரும் இராமனுக்கு மழை வெள்ளம் சென்று புகும் கடலும் உவமையாம். அளவில் விஞ்சைவந்து எய்து காலம் என்றது, நெடுநாள் குருகுல வாசம் பண்ணி ஆசிரியன் மகிழ வழிபட்டு முயன்றாலும் அடைதற்கரிய விஞ்சைகள் இன்று தேடி வருங்கால் மறுத்தலாகாது என்றவாறு. உவமையணி பயின்ற கம்பர் பாடல்களில் முன் எண்ணத்தக்கவற்றுள் இதுவும் ஒன்று. (15)

### தசரதன் அழைக்க இராமன் வருதல்

**333.** குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்
திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
வருக வென்றன னென்ன லோடும்வந்
தருகு சார்ந்தன னறிவி னும்பரான்.

**குருவின் வாசகம் கொண்டு, கொற்றவன்,**
**'திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்று' என,**
**"வருக' என்றனன்" என்னலோடும், வந்து,**
**அருகு சார்ந்தனன், அறிவின் உம்பரான்.**

பொ :—அரசனுன தசரதன். குரவனுன வசிட்டன் மொழியை உட்கொண்டு, (ஏவலரை நோக்கி நீவிர்) சென்று சீமானுன இராமனை அழைத்து வருக என்று கட்டளையிட, (அவர்கள் இராமன்பாற் சென்று) 'அரசன் நின்னை வருக என்றனன்' என்று கூறின அளவில். யாவரறிவையும் கடந்துநின்ற (பரம் பொருளின் கூறுன) இராமன் அரசன் பக்கல் வந்து சேர்ந்தான்.

கு :—வருக என்றனன் என்பது அரசன் கட்டளையடங்கிய ஏவலர் கூற்று, அருகு சார்ந்தனன் அறிவின் உம்பரான் என்பது கவிக்கூற்று. (16)

## இராமலக்குமணரைத் தசரதன் விசுவாமித்திரனிடம் ஒப்படைத்தல்

334. வந்த நம்பியைத் தம்பி தன்னொடு
முந்தை நான்மறை முனிக்குக் காட்டிநற்
றந்தை நீதனித் தாயு நீயிவர்க்
கெந்தை தந்தன னியைந்த செய்கென்ருன்.

வந்த நம்பியைத் தம்பி தன்னோடு
முந்தை நால் மறை முனிக்குக் காட்டி, 'நல்
தந்தை நீ, தனித் தாயும்நீ, இவர்க்கு
எந்தை! தந்தனன்; இயைந்த செய்க' என்ருன்.

பொ:—(தசரதன், தன் கட்டளையால்) வந்த இராமனைத் தம்பி யாகிய இலக்குவனோடு, பழமையான நான்கு வேதங்களும் வல்ல விசுவாமித்திர முனிவனுக்குக் காட்டி, 'எந்தையே! (இவரை நீ விரும்பியவாறு) கொடுத்துவிட்டேன்; இவரைப் பெற்ற தந்தையும் நீயே; ஒப்பற்ற தாயும் நீயே! (இவர்க்கு) ஏற்ற வைகளைச் செய்தருளுக' என்று கூறினுன்.

கு :—நம்பி -பூரணன் – எல்லா நலங்களும் நிறைந்தவன் நம்பி என்றது இங்கே இராமனைச் சுட்டிநின்றது. இராமநம்பி எனப் பெரியாழ்வாரும் அருளிச் செய்வர் (பெரியாழ்வார் திருமொழி 5-4-6). நம்பியைத் தம்பியொடு காட்டி என்றது அவ்விருவரும் பிரிந்துதரியாத தொடர்புடையவர் என்பதைத் தெரிவித்து என்ற படி..உறுத்தலாகலா உறுதியூட்டுபவன் என்று உணர்ந்தமையால் நல்தந்தை என்ருன்; அழியாத புகழுடம்பு தருதலால் தனித்தாய் என்ருன். இயைந்த செய்க என்பதற்கு நின் தகுதிக்கு இசைந்த வற்றைச் செய்க என்று பொருள் கூறலும் ஆம். (17)

## இராமலக்குவருடன் விசுவாமித்திரமுனிவன் புறப்படுதல்

**335**. கொடுத்த மைந்தரைக் கொண்டு சிந்தைமுந்
தெடுத்த சீற்றம்விட் டினிது வாழ்த்திமேல்
அடுத்த வேள்விபோய் முடித்து நாமெனு
நடத்தன் மேயினு னவைக்க ணீங்கினுன்.

**கொடுத்த மைந்தரைக் கொண்டு, சிந்தை முந்து**
**எடுத்த சீற்றம் விட்டு, இனிது வாழ்த்தி, மேல்**
**'அடுத்த வேள்வி போய் முடித்தும் நாம்' என**
**நடத்தல் மேயினுன் நவைக்கண் நீங்கினுன்.**

பொ :—குற்றங்களினின்று நீங்கிய விசுவாமித்திர முனிவன், தசரத சக்கரவர்த்தி கொடுத்த மைந்தர்களை ஏற்றுக்கொண்டு, முன்னே மனத்தில் மிக்கு எழுவித்த சினத்தை ஒழித்து, (தசரதனை) நன்கு வாழ்த்திப் பின்பு, 'செய்யத்தக்க வேள்வியை நாம் சென்று முடிப்போம்' என்று கூறி, நடப்பானுயினன்.

கு :—சில பிரதிகளில் இப்பாடலுடன் கையடைப்படலம் முற்றுப்பெற்றுளது. (18)

## இராமன் படைக்கலம் தாங்குதல்

**336**. வென்றி வாள்புடை விசித்து மெய்ம்மைபோல்
என்றுந் தேய்வுருத் தூணி யாத்திரு
குன்றம் போன்றுயர் தோளிற் கொற்றவில்
ஒன்று தாங்கினு னுலகந் தாங்கினுன்.

**வென்றி வாள் புடை விசித்து, மெய்ம்மை போல்**
**என்றும் தேய்வு உருத் தூணி யாத்து இரு**
**குன்றம் போன்று உயர் தோளில், கொற்றவில்**
**ஒன்று தாங்கினுன்; உலகம் தாங்கினுன்.**

பொ :—எல்லா உலகங்களையும் தாங்கின (திருமாலின் அமிசமான) இராமன், வெற்றியைத்தரும் உடைவாளை இடப்பக்கத்தே கட்டி, மலைபோலுயர்ந்த இரு தோள்களிலும், என்றும் குறைவு படாத உண்மைபோன்ற அம்பறாத்தூணிகளைக் கட்டி, வெற்றி விளைக்கும் வில் ஒன்றினையும் தாங்கினவனுய்—

கு:—இச்செய்யுளும். பின், 'அன்னதம்பியும்' என்று தொடங்கும் பாடலும் ஒரு தொடர். உலகம் தாங்கினான், வாள்விசித்து, தூணி யாத்து, வில் ஒன்று தாங்கி, நீங்கினான் என இயையும், தாங்கினான் - தாங்கி; முற்றெச்சம். விசித்து யாத்து என்பவை கட்டி என்னும் ஒருபொருளிற் பயின்றன. இரண்டு தோளிலும் அம்பறாத்தூணி யாத்தமை வான்மீகத்தும் கூறப்பட்டது. (19)

### இராமன் இலக்குமணனுடன் முனிவன்பின் செல்லுதல்

**337.** அன்ன தம்பியுந் தானு மையனும்
மன்ன னின்னுயிர் வழிக்கொண் டாலெனச்
சொன்ன மாதவற் றொடர்ந்த சாயைபோல்
பொன்னின் மாநகர்ப் புரிசை நீங்கினான்.

**அன்ன தம்பியும் தானும், ஐயனும்**
**மன்னன் இன் உயிர் வழிக் கொண்டால் எனச்**
**சொன்ன மாதவற் றொடர்ந்த சாயைபோல்**
**பொன்னின் மாநகர்ப் புரிசை நீங்கினான்.**

பொ:—அத்தன்மை வாய்ந்த (தன்னைப் போலவே வாளும் தூணிகளும் வில்லும் தாங்கிய) இலக்குவனும் தானும், தந்தையாகிய சக்கரவர்த்தியின் உயிர் வழி நடத்தலை மேற்கொண்டு சென்றாற்போல, ('போய் வேள்வி முடித்தும்' எனச்) சொல்லி நடந்த பெரிய தவசியாகிய விசுவாமித்திரனைத் தொடர்ந்த அம் முனிவன் நிழல்போலப் பொன்னால் செய்யப்பட்ட பெரிய அயோத்திநகரத்தின் மதிலைக் கடந்து சென்றான்.

கு:—உலகம் தாங்கினான், தானும் தம்பியும், நீங்கினான் என இயையும். சாயைபோல் நீங்கினான் என்றது, அளவில் விஞ்சைகள் கற்பிக்கும் ஆசிரியனாதலின் நிழல்போல நீங்காது வழிபட்டுச் சென்றான் என்றவாறு, முன்னே விசுவாமித்திரனும் அடுத்து இராமனும், அவன்பின் இலக்குவனுமாகச் சென்றனர் என்பது வான்மீகத்தும் கூறப்பட்டது. தம்பியும் தானும் நீங்கினான் என்பது சிறப்பினால் ஒருமை முடிபேற்றது. (20)

### மூவரும் சரயு என்னும் ஆற்றை அடைதல்

**338.** வரங்கண் மாசறத் தவஞ்செய் தோர்கள்வாழ்
புரங்க ணேரிலா நகர நீங்கிப்போய்
அரங்கி னுடுவார் சிலம்பி னன்னநின்
றிரங்கு வார்புனற் சரயு வெய்தினர்.

வரங்கள் மாசு அறத் தவம் செய்தோர்கள் வாழ்
புரங்கள் நேர் இலா நகரம் நீங்கிப் போய்
அரங்கின் ஆடுவார் சிலம்பின் அன்னம் நின்று
இரங்கு வார் புனல் சரயு எய்தினர்.

பொ :—புறப்பட்ட மூவரும் வேண்டும் வரங்கள் குற்றமற்றன வாம்படி தவம் முயன்றவர்கள் வாழும் (அமராவதி முதலிய) நகரங்களும் ஒப்பாகாத அயோத்தி நகரத்தை நீங்கிச்சென்று, அரங்கின்கண் ஆடும் மகளிர் சிலம்பொலிபோல அன்னப்பறவை கள் நின்று ஒலிக்கின்ற பெருகும் நீரையுடைய சரயு என்னும் ஆற்றை அடைந்தார்கள்.

கு :—வரங்கள் மாசறுதலாவது இராவணன் கும்பகருணன் முதலியோர் பெற்ற வரங்கள் போல் பழுதுபடாமை. அயோத் திக்கு அமராவதி முதலிய நகரங்கள் ஒப்பாகாமை 98-ஆம் பாட லாலும் விளங்கும். (21)

### மூவரும் ஒருசோலையை அடைதல்

**339.** கரும்பு கால்பொரக் கழனி வார்ந்ததேன்
வரம்பு மீதிடு மருத வேலிவாய்
அரும்பு கொங்கையா ரம்மெ லோதிபோற்
சுரும்பு வாழ்வதோர் சோலை வைகினர்.

கரும்பு கால்பொரக் கழனி வார்ந்த தேன்,
வரம்பு மீதிடும் மருத வேலிவாய்
அரும்பு கொங்கையார் அம் மெல் ஓதி போல்
சுரும்பு வாழ்வது ஓர் சோலை வைகினர்.

பொ :—கரும்புகள் காற்றினல் தாக்கப்படுதலால் வயல்களில் ஒழுகிய தேனனது, வயல்வரப்புக்களைக் கடந்து பாயும் மருத

நிலத்தின்கண், முகிழ்த்த தனங்களையுடைய மகளிருடைய அழகிய மெல்லிய கூந்தலைப்போல் வண்டுகள் வாழ்கின்ற ஒரு சோலையின் கண் தங்கினார்கள்.

கு :—கரும்பில் தேன்கூடு இருத்தலால் அது காற்றால் அசையத் தேன் ஒழுகுவதாயிற்று, 'கரும்பின்மேற் றொடுத்ததேன்......... தெய்வப்பூம் பொழிற் பொருந்தினான்' என்றார் சிந்தாமணியினும் (1936). அரும்புதல் – முகிழ்த்தல். ஓதி – கூந்தல். மகளிர் கூந்தலில் சூடிய பூக்களிலுள்ள தேனும் நறுமணமும் நுகர்தற்கு வண்டுகள் நீங்காது தங்குதல் போலச் சோலையிலும் பூக்களிலுள்ள தேனும் நறுமணமும் துய்த்தற்கு வண்டுகள் நீங்காது தங்குவவாயின. இதனால் அச்சோலை எக்காலத்தும் பூவும் தேனும் நறுமணமும் உடையதாயிற்றென்று அதற்குக் காரணமான நிலவளமும் நீர்வளமும் உடன் தோன்றுதல் காணலாம். (22)

**சூரியாத்தமன காலத்தில் மூவரும் சரயுவைக் கடத்தல்**

**340.** தாழு மாமழை தழுவு நெற்றியாற்
சூழி யானைபோற் றோன்று மால்வரைப்
பாழி மாமுகட் டுச்சிப் பச்சைமா
ஏழு மேறப்போ யாறு மேறினார்.

தாழும் மா மழை தழுவும் நெற்றியால்
சூழி யானை போல் தோன்றும் மால் வரைப்
பாழி மா முகட்டு உச்சிப் பச்சை மா
ஏழும் ஏறப் போய் ஆறும் ஏறினார்.

பொ :—விரும்பத்தக்க சிறப்புடைய மேகத்தோடு கூடிய முன் பகுதியால் நெற்றிப் பட்டம் அணிந்த யானையைப் போலத் தோன்றுகின்ற பெரிய அத்த கிரியின் வலிய பெரிய சிகரத்தின் உச்சியின்கண் (சூரியனுடைய) பச்சைக் குதிரைகள் ஏழும் ஏற, (விசுவாமித்திரன் முதலிய மூவரும்) சென்று சரயு ஆற்றைக் கடந்தார்கள்.

கு :—தாழ்தல்-விரும்புதல்; சூழி-நெற்றிப் பட்டம். மால்வரையென்றது இங்கே அத்தகிரியை. பாழி-வலி; முகடு இங்கே சிகரத்தை உணர்த்தி நின்றது. பச்சைமா-பசுமை நிறமுடைய குதிரை. சூரியனுடைய குதிரைகள் ஏழு என்பதும் அவை பசுமை நிறமுடையவை என்பதும் புராண வழக்கு. 342, 343-ஆம் செய்யுட்கள் சில பிரதிகளில் முன் பின்னாக மாறியுள்ளன. (23)

## இராமன் எதிர்ப்பட்ட சோலையைப்பற்றி வினவுதல்

**341.** தேவு மாதவற் றெழுது தேவர்தம்
நாவு ளாவுதி நயக்கும் வேள்வியால்
தாவு மாபுகை தழுவுஞ் சோலைகண்
டியாவ தீதென்று னெவர்க்கு மேனின்றான்.

தேவு மாதவற் றெழுது, தேவர்தம்
நாவுள் ஆவுதி நயக்கும் வேள்வியால்
தாவும் மாபுகை தழுவும் சோலை கண்டு,
'யாவது? ஈது?' என்றான் எவர்க்கும் மேல் நின்றான்.

பொ :—எவரினும் மேம்பட்டு நின்றவனான இராமன், தேவர்கள் தங்கள் நாவினிடத்துப் பெற விரும்பும் ஆகுதிகளையுடைய வேள்வியால் பரவிய மிக்க புகையொடு கூடிய சோலையைக் கண்டு, தெய்வத்தன்மை வாய்ந்த சிறந்த தவம் மேற்கொண்டவனான விசுவாமித்திர முனிவனை வணங்கி, இச்சோலை எத்தன்மையுடையது? என்று வினவினான்.

கு :—தேவு-தெய்வத்தன்மை; ஆவுதி-ஆகுதி; தேவர்பொருட்டு ஓம அங்கியிற் பெய்யப்படும் நெய், அன்னம் முதலியவை. நயத்தல்-விரும்புதல்; யாவது-யாது?' =எத்தன்மையுடையது ? எவர்க்கும்; என்பதனுள், குவ்வுருபு, எவரினும் என ஐந்தனுருபின் பொருள் பட நின்றது, உருபு மயக்கம். (24)

[இச் செய்யுளின் பின் சில சுவடிகளில் பின்வரும் ஒன்பது செய்யுட்களும் வரையப் பட்டுள்ளன. அவை, 'சோலைகண்டு, யாவது ஈது' என்ற இராமன் வினவுக்கு முன்பொருகால், சம்பரனுக்குத் தோற்ற இந்திரன் தன் அரசிழந்து உன் தந்தையையடைந்து, தன் குறை கூறி வேண்ட, உன் தந்தை சம்பரனை வென்று இந்திரன் அரசு பெற உதவினான். அக்காலத்தில் இந்திரன் இங்கே தங்கித் தவஞ் செய்ய நினைந்து, அது நிகழ்த்தற்கு ஏற்ற சோலையாக ஐந்தருக்களும் இங்கு வரவேண்டுமென்று விழைந்த அளவில் ஐந்தருக்களும் இங்கு வந்து சோலையாய்த் தங்கின, அச் சோலையே இது; என்று விசுவாமித்திரன் கூறும் விடையாய் உள்ளன. இது, பின் தாடகை வதைப் படலத்து முதல் நான்கு செய்யுட்களாற் கூறப்படுவதும், முதனூலாகிய வான்மீகத்துட் கூறப்பட்டதும் ஆன காமனுச்சிரமவரலாறு அல்லது தாணுவாச்சிரம வரலாற்றொடு வேறுபட்டதாய்க்

காணப்படுதலாலும், இச்செய்யுட்கள் கம்பர் வாக்கின் வேறுபட்ட நடையமைதியுடையவாய் இருத்தலாலும், பழம்பதிப்புக்களிலும் பழைய திருந்திய சுவடிகளிலும் காணப்படாமையாலும் இவற்றை மிகைப்பாடல் என்று கொண்டு, மூலத்தொடு சேர்க்காது தனியே காட்டலாயிற்று.]

341 (a) இனைய சோலைமற் றியாவ தென்றுமா
முனிவ கூறென முதல்வன் கூறலும்
பனுவல் வேதநூல் பகரு மாதவன்
தனுவ லாயிதன் றகைமை கேளென.

(b) சம்ப ரப்பெயர்த் தான வன்னெடும்
உம்பர் கோமக னமரு டன்றநாள்
வெம்பி மற்றவன் வென்றி கொண்டபோ
தம்ப ரம்மிழுந் தவனி வந்தனன்.

(c) அவனி வந்துமன் னவரிடந் தொறும்
தவன னென்னவே தானு முன்றறிந்
திவனில் வேறுமற் றில்லை போர்க்கென
உவன் விரும்பிவந் துந்தை மாடுற.

(d) இந்த விவ்விடத் தெய்தி யிந்திரன்
சந்த வார்பொழில் தருவொ ரைந்தையும்
வந்து நிற்கென மனநி னைக்கவே
முந்த வந்துமா முரல நின்றவால்.

(e) நின்ற சோலைவாய் நியம நித்தமும்
குன்ற லின்றியே செய்து கொண்டவன்
நன்றி யாலிருந் தரசை நண்ணிய
துன்று சோலையின் றொழிலு ணர்த்தினன்

(f) உருவ மாறிவே றுருவ மாகியே
நிருப னின்குடை நிழலில் நிற்றலும்
பரிவி னோக்கிநீ பகர்தி யாரெனத்
தருவி னுயகன் றுன்வி ளம்பினன்.

(g) சதம கன்னெனைச் சம்ப ரன்னெனும்
மதம கன்றுரந் தரசை வவ்வினன்
கதம கன்றிடாக் கனக வெற்பவென்
விதம கன்றுவந் துன்னை மேவினேன்.

(h) என்ற போழ்துதன் இரத மேறியே
சென்று மற்றவன் சேனை யோடுகக்
கொன்று வாசவன் னரசு கொள்ளவே
அன்ற ளித்துமீண் டயோத்தி யெய்தினுன்.

(i) அன்ன காவலன் அவனி வந்தகா
வென்னு நாமமிச் சோலை யென்றலும்
மன்னர் மன்னவன் மதலை நன்றெனுப்
பின்னை நின்றுயிர்ப் பிரிய் மாயினுன்.

கையடைப் படலம் முற்றிற்று.

---

# 7. தாடகை வதைப் படலம்

இது, தாடகை என்னும் அரக்கியை விசுவாமித்திரமுனிவரின் விருப்பத்தின் வண்ணம் இராமபிரான் அழித்தருளிய வரலாற்றைக் கூறும் பகுதியாதலின் இப்பெயர் பெற்றது.

சில ஏடுகளில் தாடகைப் படலம் எனவும், பல ஏடுகளில் தாடகை வதைப்படலம் எனவும் பெயர் காணப்படுகின்றது. இவ்விரண்டு கூற்றுள், பெரும்பான்மையான ஏடுகளும் பதிப்புக்களும் தாடகை வதைப்படலம் என்றே குறித்திருத்தலானும், இந்நூல் இராமாவதாரச் சிறப்புக்கூறுதலே நுதலி யெழுந்ததாகலின், தாடகையை வதஞ் செய்ததே இராமபிரான் வீரச்சிறப்பை விளக்கி நிற்றலானும், தாடகைப் படலம் எனின் தாடகையின் வரலாற்றுக்குச் சிறப்புத் தோன்ற அவளையழித்த வீரம் இலைமறைகாய் போல இராமனைச் சார நிற்றலானும் தாடகை வதைப்படலம் என்றிருத்தலே இராமாவதார காப்பியத்திற்கு இயைபுடைத்தென்று துணியப்பெற்றது.

இப்படலத்துள், இராமபிரான் விசுவாமித்திர முனிவரை நோக்கி இந்த இடத்தின் பெயரும் வரலாறும் யாது? என்று கேட்க, விசுவாமித்திர முனிவர், 'இந்த நாட்டுக்கு அங்கநாடு என்று பெயர். இதோ தெரிவதுதான் காமாச்சிரமம். இவ்வாச்சிரமத்தில் சிவபெருமான் தவஞ்செய்து கொண்டிருந்தார். தேவர்கள் வேண்டுகோளின்படி மன்மதன் சிவபெருமான்மீது மலரம்புகளைத் தூவினான், அவர் அவனை விழித்து எரித்தார். எரிந்த அவனுடைய அங்கம் விழுந்த இடமாதலின் இந்நாடு அங்கநாடு எனப் பெயர் வழங்கலாயிற்று. இந்த இடம் காமனாச்சிரமம் எனப் பெயர் பெற்றது. இவ்விடத்தின் பெருமை யாராலும் சொல்ல இயலாதது' என்றுகூறி, இங்கே சென்று இன்று தங்கிச் செல்லலாமே என்று இராமலக்குமணர் இருவரையும் அழைத்துச் சென்று ஆசிரமத்தை யணுகினர். இவர்கள் வருகையை அறிந்த ஆச்சிரமவாசிகளாகிய முனிபுங்கவர்கள் எதிர்கொண்டு அழைத்தனர். அவ்வாச்சிரமத்தில் ஒருநாள் தங்கியிருந்து மறுநாள் தமது ஆச்சிரமத்தை நோக்கி வழிநடக்கத் தொடங்கிய விசுவாமித்திரர் இராமலக்ஷ்மணர்களோடும் நடுவழியிலுள்ள சுரம் ஒன்றையடைந்தனர்.

அச்சுரம் வேனில்வேந்தனாகிய வெயிலோன் ஆட்சிக்கு உட்பட்டது. அங்கு, வேனிலல்லது வேறு இருதுவே இல்லை.

தீக்கடவுளாகிய அக்கினிதேவன் அந்நிலத்தைப் பற்றி நினைப்பானாயின் நினைத்த அவன்நெஞ்சு வேம்; அந் நிலத்தைக் கண்ட கண்ணும் வேம்; அந்நிலத்தைப் பற்றிப் பேசிய வாயும் வேம்; அதனை மூடிய இருளும், அண்டமுகடும் வேம்; என்றால், அங்கே வேகாதன யாவை? அந்நிலம் மானம் அழிந்த வீரர் நெஞ்சம்போல எப்போதும் கனன்றுகொண்டே யிருக்கும். வெய்யிற் கொடுமை தாங்காமல் யானைகள் மலைக்குகை என்று எண்ணிக் கொண்டு, மலைப்பாம்பின் திறந்த வாயில் வலியப் புகுகின்றன. காகமும் கரிகளும் கரிந்து சாம்புகின்றன. பேய்த் தேர்கள், மேலோங்கி நிமிர்ந்து நின்றால் வானம் வேம், வானவர் மடிவர், என்று எண்ணி நீரைப்போலத் தோற்றின. அப் பேய்த்தேர்கள் வேனில்வேந்தன் அரசுவீற்றிருக்க அமைத்த பளிங்குப்பீடங்கள் போலும். அந்நிலம், முற்றும் துறந்த முனிவர் மனமும், பரத்தையர் மனமும் போலப் பசையற்றிருந்தது. ஆதலால் இவ்விளைஞர்கள் இவ்வனத்தில் இயங்குவது இயலாதது என்று எண்ணி, விசுவாமித்திர முனிவர் பலை அதிபலை என்ற இருமந்திரங்களையும் இவர்களுக்கு உபதேசித்தார். உபதேசம் பெற்ற இருவரும் விதிப்படி அதனை எண்ணினர். உருவேற்றினர். சுரத்தின் கொடுமை தணிந்தது. நீரிடைச் செல்வதே போன்ற உணர்ச்சி அவர்களுக்கு உண்டாயிற்று.

இதனைக்கண்ட இராமபிரான் முனிவரை நோக்கி இவ்விடம் இத்துணைக் கொடுமையாய் அழிந்து கிடப்பான் ஏன்? அறிவித்தருள வேண்டும் என்று வேண்டிக்கொண்டார்.

விசுவாமித்திரர், இராமா! இங்கே, கூற்றுவனை ஒத்த அரக்கியொருத்தி யிருக்கிறாள். அவள் எல்லாவுயிர்களையும் கொன்று தின்பவள். ஆயிரம் ஆனைபலம் படைத்தவள். அவள் வரலாற்றைக் கேட்பாயாக என்று கூறத்தொடங்கினர்.

முன்னொருகாலத்தில், இயக்கர் குலத்தில் சரன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் மகன் சுகேது. அவன் உலகெல்லாம் வியக்கும் வலிமை படைத்தவன். தீயைப்போன்ற கொடியவன். அவனுக்குப் புதல்வரில்லாமையால் பிரமனை நோக்கி தவம் செய்தான், பிரமன் வெளிப்பட்டு, உனக்கு ஆயிரம் யானை வன்மை படைத்த ஒரு மகள் உண்டாவாள் என்று வரமளித்தார். அவ்வண்ணமே சுகேதுவிற்குச் சிலமாதங்களில் ஒரு மகள் பிறந்தாள். திருமகள் போன்ற இவளுடைய அழகையும் ஆற்றலையும், பருவச் சிறப்பையுங்கண்ட சுகேது தங்கள் குலத்திலே பிறந்த சுந்தன் என்பவனுக்கு மணஞ்செய்து கொடுத்தான். இருவரும் காமனும் இரதியும் போலக் கலந்து வாழ்ந்தனர். பலநாட் கழித்து அவள்

வயிற்றில் மாரீசன் சுவாகு என்னும் இரு புதல்வர்கள் முறையே பிறந்தனர்.

அவ்விருவரும், தாயைக்காட்டிலும், மாயையிலும், வஞ்சனை யிலும் வரம்பிலாற்றலிலும் விஞ்சியவர்கள். அவர்களுடைய வளர்ச்சியைக் கண்ட தந்தையாகிய சுந்தன் செருக்குற்று, அகத்தியாச்சிரமத்திற் புகுந்து, அங்குள்ள மரங்களனைத்தையும் பறித்து நாற்புறமும் விசித் தவவனத்தை அழித்தான். இதனைக் கண்ட அகத்தியர் கண்களில் தீப்பொறி பறக்க விழித்தார். சுந்தன் சாம்பலாயினன். கணவன் அகத்தியரால் இறந்த செய்தியைக் கேட்டுத் தாடகை அவரைக் கொல்வேன் என்று தன் தனயர்களோடு அகத்தியாச்சிரமம் அடைந்தாள். அகத்தியர் அம்மூவரையும் 'அரக்கர்கள் ஆகுக' எனச் சபித்தார். சுவாகு மாரீசர்கள் அரக்கராகிச் சுமாலியைச் சார்ந்தனர். இராவண னுக்கு மாமன் முறையினராகிப் பலவுலகங்களையும் அழித்து ஆர்ப்பரித்துச் சுற்றி வந்தனர்.

தாடகை என்பவள் மட்டும் தனயரைப் பிரிந்து இவ்வனத்திற் புகுந்தனள். இவள் உலகில் உள்ள பாவங்கள் எல்லாம் ஒருங்கு திரண்டு ஒரு பெண்ணுருக் கொண்டாலனைய பெற்றியள். இரண்டு மலையும், நஞ்சும், இடியும், ஊழித்தீயும் இரு பிறைகளும் கூடிய கரிய கடல் ஒன்றுளதாயின் அதற்கு ஒப்பான தோற்றத்தை உடையவள். சூலம் பிடித்தவள். காடுறை வாழ்க்கையள். அவளே இவ் வங்கநாட்டை அடியோடழித்து உலாவி வருகின் றாள். இன்னும் சில நாட்களில் இங்குள்ள உயிர்களனைத்தையும் கொன்று தின்று விடுவாள், என்று விசுவரமித்திரர் கூறினர்.

இவற்றைக் கேட்டுக்கொண்டிருந்த இராமபிரான் தலை யசைத்து இத்தகைய கொடியவள் இருப்பது எங்கே என்று வினவினர். அப்போது தாடகையானவள் தீப்பிடித்த கரியமலை யொன்று ஓடிவருவதைப்போல, யமனும் நடுங்கி மலைக் குகையில் ஓடியொளிக்க வந்தாள். இவர்களைப் பார்த்து என் காவலிலுள்ள இக்காட்டைக் கருவோடழித்துவிட்டேன். 'இங்கே சுவையொடு கூடிய ஊன் கிடைப்பதரிது என்று கருதியோ விதி பிடித்துத் தள்ள இறத்தல் குறித்தோ நீங்கள் இவண் வந்தது' என்று ஏளனம் செய்துகொண்டே மேகம் எல்லாம் உதிர விழித்தாள். திக்கிலுள்ள மலைகள் யாவும் உதிர உதைத்தாள். இவர்கள் உடலைக் கிழித்து எறிகிறேன் பார் என்று எதிர்வந்தாள்.

இராமபிரான் இவளுடைய நிலையைக் கண்டும், இவளைக் கொல்வதே விசுவாமித்திரன் கருத்தாயினும், பெண்ணென்று எண்ணி அம்பு தொடுத்திலர். முகக்குறிப்பைக் குறிப்பாலுணர்ந்த

விசுவாமித்திர முனிவர் இக்கொடியாள் எங்களைச் சக்கையென்று எண்ணி உண்டிலள். இதுவே குறை. இவளைப் பெண் என்று எண்ணற்க. இவள் பேர் சொன்னால் போதும் ஆண்மை தோற்கும். இவள்முன் ஆண்மை எங்கு இருக்கப்போகிறது? இவளோடு எதிர்த்து இந்திரன் தோற்றான். தேவர்கள் புறங்காட்டி ஓடினார்கள். இவள் தோள்கள் மந்தர மலையை ஒத்தன எனின் இவளுக்கும் ஆடவர்களுக்கும் வேறுபாடியாது? மறங்கொண்டு இவ்வுலகத்து உயிர்கள் அனைத்தையும் வருத்துபவளுக்கு ஆண்வடிவும் வேண்டுமோ! யமன்கூட வாழ்நாள் உலந்தால் உயிர்களை அழிப்பானேயன்றி இவளைப்போல மனித நாற்றம் வீசினாலே கொல்ல மாட்டான். உயிர்களைக் கொல்வதைக் காட்டிலும் கொடிய தீமை யாது? அங்ஙனமாகவும் திரும்பவும் பெண் என்று எண்ணிச் சும்மா விடுவது மாட்டாமையின் விளைவன்றோ? இராமா! நான் அரசதருமம் பார்த்து அறிவித்தேனேயன்றி, அவள்மீது உண்டான கோபம் பற்றிக் கூறவில்லை. ஆதலால் உடனே இவளைக் கொல்லுக என்று உணர்த்தினர்.

இராமபிரான் விசுவாமித்திரர் கூறியவை அனைத்தையும் கேட்டு முனிவர்பெரும! அறமல்லதேயாயினும் தேவரீர் ஆணையிதுவாயின் இயற்றக் கடமைப்பட்டவனே. தேவரீர் ஆணையே வேதம். அதுவே அறநெறி என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே, தாடகை சூலம் ஒன்றை இராமபிரான்மீது ஏவினாள். அச்சூலம் மதியை மறைக்கவரும் இராகு என்னும் பாம்பைப் போல வந்தது.

இராமன் வில் வளைத்ததும் அம்பு தொடுத்ததும் விடுத்தது மாகிய தொழில்களை யாரும் கண்டிலர். சூலம் இற்று இரு துண்டாகப் பெருநிலத்து வீழ்ந்து கிடப்பதைக் கண்டனர். உடனே தாடகை பல கற்களை வாரி வீசினள். இராமன் அவைகளை அம்பு மழையால் துகளாக்கி அவள்மீதும் அம்புகளை ஏவினான். அம்புகள் யாவும் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளைப்போல உரத்துப் புக்கு ஊடுருவிச் சென்றன. தாடகை வீழ்ந்தாள். அப்போது, அவள், அறுந்து வீழ்ந்த இராவணனது வெற்றிக்கொடியை ஒத்தாள். அவள் மார்பிலிருந்து ஒழுகிய இரத்த வெள்ளம் காடு முழுவதும் பரவியது. அதனால் அக்காடு செக்கர்வானம்போலச் சிவந்த தோற்றமளித்தது.

இராமபிரானுடைய கன்னிப்போரால், அரக்கர்குலத்து உதிரச் சுவையை இதுவரை அறிந்திராதகூற்றமும் அச்சுவையைச் சிறிது அறிந்தது. இதனைக் கண்ட விண்ணோர்கள். யாங்கள் எம் இருக்கை பெற்றோம்; உமக்கும் இடையூறு தொலைந்தது; என்று

பாராட்டி, இவர்களுக்கு வேண்டிய தெய்வப் படைக்கலங்களை அளிப்பாயாக என்று முனிவரைப் பணித்தனர். மலர்மழை பொழிந்தனர் : என்று வரலாறு தொடர்கிறது.

இப்படலத்திற் குறிக்கப்பெற்ற வரலாறு வான்மீகம் பால காண்டம் இருபத்துநான்காவது சருக்கத்துப் பதினைந்தாவது சுலோகமுதல், இருபத்தாருவது சர்க்க முடிய உள்ள பகுதிகளால் உணர்த்தப் பெறுகின்றது. கம்பர் தரும் வரலாற்றிற்கும் வான் மீகத்திற்கும் சிறிது வேறுபாடு உண்டு.

கம்பர், இராமலக்குமணர்கள் வினவியதற்கு விடையாக அங்கநாடு, காமனுச்சிரமம் என்பவற்றின் வரலாறு கூறுவதாக வரலாற்றைத் தொடங்குகிருர்:

வான்மீகி 'இவ்விடம் விருத்திராசுரனைக் கொன்றதால் இந்தி ரனுக்கு விளைந்த பசியையும் பாவத்தையும் போக்கியதால், தன தானியங்களால் நிறைவுற்று' மலதம் கருசம் என்ற பெயருடன் விளங்குக என்று அவனுல் வரங்கொடுக்கப்பெற்றது. அவன் வரத் தால் நெடுங்காலம் விளக்கம் பெற்றிருந்தது. இத்தாடகையின் கொடுமையால் அழிந்தது ; மக்கள் வழக்காறற்ற வறள்வன மானது : என வருணிக்கின்ருர்.

கம்பர் தாடகை இங்கு வாழ்வதால் அவள் இடைவிடாது அழித்துக்கொண்டே யிருப்பதால் பாலைவனமாயிற்று என்கின் ருர்.

வான்மீகி பின்னர் 25வது சர்க்கத்தில். தாடகையின்வரலாறு கூறத்தொடங்கியபோது, தாடகை பெண்ணுனுலும் பிரமாவின் வரத்தால் வன்மைபெற்றவள். சுகேது என்னும் இயக்கர் குலத் தலைவனுக்குப் பிரமாவின் வரத்தால் பிறந்தவள். ஆயிரம் யானை வலுவுடையவள். இவளுக்கு உரிய வயது வந்ததும் இவள் தந்தை தனது குலத்திலேயே **சர்ஜன்** என்னும் இயக்கனின் மகனுகிய சுந்தன் என்பவனுக்கு இவளை மணஞ்செய்துகொடுத்தான். மாரிசன் இவர்களுக்கு மகனுகப்பிறந்தான். சுந்தன் அகத்தியரால் அழிந்தான். தாடகை தன்மகன் மாரிசனேடு அகத்தியரை வருத்த வந்தாள். அவர் அவர்களிருவரையும் அரக்கராகுக எனச் சபித் தனர். தாடகை, சாபம்பெற்ற கோபத்தால் அகஸ்தியராச்சிர மத்தை அழித்தாள். அவளால் அழிக்கப்பெற்ற இடமே இது என்கிருர் வால்மீகி.

கம்பர், தாடகையின் தந்தையாகிய சுகேது, சரன் என்னும் இயக்கன் மகன் என்று குறிப்பிடுகின்ருர். தாடகையின் கணவ ணுகிய சுந்தன் என்பவனுடைய தந்தை இன்னுர் என்று அறிவிக்க

வில்லை. தாடகைக்கு சுவாகு, மாரீசன் என இருமக்கள் இருந்தனர் என்கிறார். வால்மீகியோ மாரீசன் ஒருவனே மகன் என்கிறார். இது ஆய்தற்கு உரியது. அகத்தியரால் சாபம் எய்திய காலத்தும் தாடகையும், மாரீசனுமே அரக்கராயினர் என வால்மீகிகூற, மாரீசனும் சுவாகுவும், தாடகையுமாகிய மூவரும் அரக்கர் ஆயினர், என இவர் கூறுகிறார்.

வால்மீகி, 26-வது சர்க்கத்தில், தாடகையைப் பெண்ணென்று எண்ணற்க. அவளை அழித்துத்தான் ஆகவேண்டும் என விசுவாமித்திரமுனிவர் வற்புறுத்த, இராமன், 'விசுவாமித்திரர் எது சொன்னாலும் ஐயமின்றி உன்னாற் செய்யத்தக்கது' என்பது என் தந்தையின் கட்டளை. அவர்சொல் அவமதிக்கத்தகாதது, ஆதலால் தாடகையை உடனே கொல்கிறேன், என்று இராமன் கூறுவதாகத் தெரிவிக்கிறார்.

கம்பர், 'அறமன்றாயினும், தேவரீர் கூறின் அதுவே அறநெறி, அதுவே வேதம்' என்று இராமன் கூறுவதாகக் குறிப்பிடுகின்றார்.

வால்மீகி, 'முனிவன் ஆணையால் இராமன் வில்லை வளைத்து நாணொலி செய்தார். அவ்வொலியைக் கேட்டுத் தாடகை கோபத்தோடு ஓடிவந்தாள் இராம இலக்குவர்களைக்கண்டு, தனது உடற்றோற்றத்தையும், ஆற்றலையும் அறிவித்து எள்ளி உரையாடினாள். இராமபிரான். 'இவள் பெண்ணாயிற்றே' என எண்ணிக் கொல்ல விரும்பாமல், அவளுடைய காதுநுனி, மூக்கு இவைகளை அறுத்துக்கொண்டு' இவளைப் புறங்காட்டி ஓடச் செய்கிறேன் பார் என்கின்றார். தாடகை இரு கைகளையும் உயரத் தூக்கிக்கொண்டு ஆரவாரம் செய்தாள். விசுவாமித்திரரும் 'உம்' என்று அதட்டினார். தாடகை புழுதியை வாரியிறைத்தாள். மாயையில் மறைந்து நின்று கன்மழை பொழிந்தாள். அதனால் இராகவனுக்குக் கோபம் பிறந்தது. அம்பெய்து அவள் எறிந்த கற்களைத் துகளாக்கினார். கைகளையறுத்தார். மீட்டும் அவை முளைத்தன. இலக்குவன் அவள் காதுநுனிகளையும், மூக்கையும் அறுத்தார். தாடகை மாயையால் பலவடிவுகொண்டு மறைந்துநின்று கன்மழை பொழிந்தாள். முனிவர் இராமனை நோக்கி, இராமா! கருணை காட்டியது போதும், மாலை நேரம் வரப்போகிறது, பின் அரக்கர்களைக் கொல்ல இயலாது. அதற்கு முன்னர் அவளைக் கொல்ல வேண்டும் என்றார். இராமன் 'சப்தவேதனம் என்னும் பாணத்தைக் கொண்டு அவள் எங்கும் போகாதபடி தடுத்து மீட்டும் ஓரம்பால் அவளைக்கொன்றார்' என்பர்.

கம்பர், இராமனும் முனிவனும் உரையாடிக்கொண்டிருந்த போதே தாடகை ஓடிவந்தாள். சூலத்தை யேவினாள். இராமன்

ஓரம்பை ஏவினன். சூலம் இருதுண்டாக விழ்ந்தது. அவள் கற்களை வீசினாள். இராமன் அம்பொன்றால் அவைகளை விலக்கித் தாடகையின் நெஞ்சில் ஓரம்பைப் பதித்தான். அவள் கீழே விழுந்து மாண்டாள் என்கிறார்.

இங்ஙனம் வரலாற்றின் முடிவு ஒன்றாயினும் வரலாற்றின் நடைமுறையில் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன.

இப்படல வரலாற்றில், வேறு சுவர்க்கத்தையும் படைக்கும் ஆற்றல் வாய்ந்த விசுவாமித்திரன், தாடகையைத் தன் தவ வலியால் கொன்றிருக்கலாமே! அரசர் யாரும் பக்கத்தில் இல்லாமையால்அகத்தியர் தமதாச்சிரமத்தை யழிக்கவந்த சுந்தனை எரிக்கவில்லையா? தாடகையையும் மாரீச சுவாகுக்களையும் அரக்கர்களாகச் சபிக்கவில்லையா? அங்ஙனமே இவரும் செய்திருக்கலாமே! இராமபிரானைக்கொண்டு கொல்வித்தது ஏன்? என்ற ஆய்வு எண்ணம் உண்டாகலாம். இதனை விளக்க வால்மீகி 'ஒரு காரியம் நன்மையாயினும் தீமையாயினும், பழியாயினும் பாவமாயினும் குடிகளைப் பாதுகாப்பதன் பொருட்டுச்செய்யத்தக்கதாயின் அதனை அரசன் அவசியம் ஆற்றத்தக்கவன், ஆளப்பிறந்தவர்கள் எப்போதும் இயற்ற வேண்டிய அறம் இது, அறத்தை நிலைபெறுத்த மறத்தை விலக்குவதே முறை என்று காரணம் கூறுகின்றார்.

கம்பர், இவ்வளவையும் உள்ளடக்கி, 'கறங்கடற் றிகிரிப் படி காத்தவர் பிறங்கடைப்பெரியோய்!' என்று இராமனை விசுவாமித்திரன் விளிப்பதன் வாயிலாக அரசகுமாரனே! உன் கடமை இது என்பதை உணர்த்துகிறவர், பின்னும் ஈறில் நல்லறம் பார்த்திசைத்தேன் என, முனிவர் ஏவினார் என்கின்றார். அன்றியும் அரசன்கடமையை முனிவன் ஆற்றினால், முனிவனுடைய தவ ஆற்றல் குறையும் என்பதை விசுவாமித்திரன் பலகாலும் கண்டவராதலின் இராமனை ஏவிச் செயலாற்றினர் என்பது சிந்திக்கத் தக்கது. அரசகடமையை அரசகுமாரனாகிய இராமனே செய்யின் கீர்த்தியுண்டாமேயன்றிப் பழியாகாது என்பதனை 'ஓது கீர்த்தி யுண்டாயதலால் இடை ஏதம் என்பன எய்தியவோ சொலாய்'' என்று உணர்த்துகிறார்.

அங்ஙனமே கன்னிப்போரில் ஒரு காரிகையைக் கொல்லுதல் அறமாகுமோ என்ற ஐயம் இராமன்மனத்து ஊசலாட அதனைக் குறிப்பானுணர்ந்துகொண்ட விசுவாமித்திர முனிவர் கூற்றால் தாடகை உருவாற் பெண்ணாயினும் வலியாலும், செயலாலும் ஆணே என்றும், கொலையிற் கொடியரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களை கட்டதனோடு ஒக்குமாதலின் இது பெண்கொலையாகாது என்றும் நாமிருவரும் உரையாடிக்கொண்டிருக்கும்போதே எதிர்

வந்து சூலம் ஏவிய இவளை-மாயையில் மறைந்து நின்று கன்மழை பெய்யும் இவளைக் கொல்லாது ஆறிநிற்பது அருளன்று மாட்டாமையே யாம் என்றும் பல ஏதுக்கள் காட்டிக் கம்பர் நிறுவுதல் உணர்ந்து இன்புறுதற்கு உரியது.

இவ்வண்ணம் பலசுவையுள்ள நிகழ்ச்சிகளும், நீதிகளும் ஆழமான பொருள் நயங்களும் செறிந்துள்ள இப்படலப்பாடல்களைப் படித்தின்புறுதல் இன்றியமையாத கடமையாகும்.

---

# 7. தாடகை வதைப் படலம்

## அங்கநாட்டு வரலாறும் காமஞச்சிரம வரலாறும் 342–343

**342.** திங்கண்மே வுஞ்சடைத்
★ தேவன்மேன் மாரவேள்
இங்குநின் றெய்யவு
மெரிதரு நுதல்விழிப்
பொங்குகோ பஞ்சுடப்
பூளைவீ யன்னதன்
அங்கம்வெந் தன்றுதொட்
டனங்கனே யாயினுன்.

திங்கள் மேவும் சடைத் தேவன் மேல் மாரவேள்,
இங்கு நின்று எய்யவும், எரி தரும் நுதல் விழிப்
பொங்கு கோபம் சுடப், பூளைவீ அன்னதன்
அங்கம் வெந்து, அன்று தொட்டு, அனங்கனே ஆயினுன்.

பொ :—மன்மதன், பிறைச்சந்திரனைப் பொருந்திய சடையை யுடைய சிவபிரான் மேலே, இவ்விடத்தில் நின்று பூவம்பைத் தொடுத்தலும், தீயைச் சொரியும் நெற்றிக் கண்ணினின்றும் பொங்கி வழிந்த கோபமாகிற தீச்சுட, பூளைப்பஞ்சுபோன்ற தன் உடல் வெந்துபோன அன்று தொடங்கி, உருவமில்லாதவனுகவே ஆயினன்.

கு :—திங்கள் முழுமதியைக் குறிக்குமாயினும் ஈண்டுப் பிறையையுணர்த்திற்று, மாரவேள் மாரனுகிய விருப்பை விளை விக்கும் தெய்வம். நுதல்விழி - நெற்றிக்கண், பூளைவீ - பூளைப் பஞ்சு. நீப்பற்ற விரைந்து கெடும்தன்மை நோக்கி 'பூளைவியன்ன' என்ற உவமை கூறப் பெற்றது. அனங்கன் - உருவிலி.

சிவபெருமான் மேருமலையின் தெற்குப் பக்கத்தில் தவஞ் செய்துகொண்டிருக்கையில், தேவர்கள் வேண்டுகோளின் வண் ணம் மன்மதன் தவச்சாலையிற் புகுந்து விரைந்து பார்வதியை மணம் புரிந்துகொள்வதற்காகப் பூவம்பைப் பொழிந்தான். சிவ பெருமான் நெற்றிக்கண்ணைத்திறந்து எரித்தார். மாரன் உருவிலி ய்ாயினுன் என்பது வரலாறு. சிறுபிழை செய்து மன்னிப்புக்

கேட்டு அடைக்கலம் புகுவாரைக் காப்பதும், தம் குற்றமுணராது மேலும் இடுக்கண் புரிவாரை யொறுத்தலும் அவர்க்கியல்பு என்பன தோன்ற, 'திங்கள் மேவுஞ் சடைத் தேவன்' என விதந்து ஓதியவர், பின்; "கோபம் சுட, அங்கம் வெந்து" என்று கூறினர். (1)

**343.** வாரணத் துரிவையர்ன் மதனனைச் சினவுநாள்
ஈரமற் றங்கமிங் குகுதலா லிவணெலாம்
ஆரணத் துறையுளா யங்கநா டிதுவுமக்
காரணக் குறியுடைக் காமனுச் சிரமமே.

**வாரணத்து உரிவையான், மதனனைச் சினவும் நாள்**
**ஈரம் அற்று அங்கம் இங்கு உகுதலால், இவண் எலாம்**
**ஆரணத்து உறையுளாய்! அங்கநாடு; இதுவும் அக்**
**காரணக் குறி உடைக் காமன் ஆச்சிரமமே.**

பொ:—வேதங்களை உறைவிடமாகக்கொண்டவனே! யானைத் தோலைப் போர்த்த சிவபெருமான், மன்மதனைக் கோபித்த காலத்துப் பசையற்று அவனுடலம் (சாம்பராகி) இவ்விடத்துச் சிந்தியதால் இவ்விடமெல்லாம் அங்காநாடு என்னும் பெயருடையதாயிற்று. இதுவும் அந்தக் காரணப் பெயருடைய காமனுச்சிரமம்.

கு:—வாரணத்துரிவையான்: (தாருகவனத்தில் கடமையாற்றுதலே கடவுட் காட்சி பயக்கும் என்னும் முடிபையுடையவர்களாகிய முனிவர்கள் செய்த யாகத்தினின்றெழுந்த) யானையையுரித்துப்போர்த்திய சிவபெருமான். ஈரமற்று - உடம்பில் பசையற்றுப் பொடியாய் என்றவாறு. (2)

### காமனுச்சிரமத்தின் பெருமை

**344.** பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய்
முற்றவா லுணர்வுமேன் முடுகினு ரறிவுசென்
றுற்றவா னவனிருந் தியோகுசெய் தனனெனிற்
சொற்றவா மளவதோ மற்றிதன் றூய்மையே.

பற்று அவா வேரொடும் பகை அறப் பிறவி போய்
முற்ற வால் உணர்வு மேல் முடுகினர் அறிவு சென்று
உற்ற வானவன் இருந்து யோகு செய்தனன் எனில்
சொற்ற ஆம் அளவதோ மற்று இதன் தூய்மையே.

பொ :—பற்றும் அவாவும் வேரோடும் தொடர்பு நீங்கவும், பிறவி நீங்கிப் போகவும், தூய்மையான தத்துவ ஞானத்தை அடைய விரும்பியவர்களின் அறிவானது சென்று பொருந்துதற்கு இடமாகிய சிவபெருமானே இங்கு எழுந்தருளியிருந்து யோகம் செய்தார் எனின், இவ்விடத்தின் தூய்மையானது யாம் இதுவரை சொன்ன அளவில் அடங்கியது ஆகுமோ?

கு:—அற, முற்ற, முடுகினர் அறிவு சென்றுற்ற வானவன் யோகு செய்தனன் எனில், இதன் தூய்மை சொற்ற அளவது ஆமோ எனக் கூட்டுக, பற்று - யான் என்னும், அகப்பற்றும், எனது என்னும் புறப்பற்றும் ஆம். அவா - பொருள்களைப் பெற வேண்டும் என்னும் ஆசை. வால் உணர்வு - தத்துவ ஞானம் சொற்ற அளவது ஆமோ என மாற்றுக. மற்று - அசை. (3)

## விசுவாமித்திரன் இராமன் இலக்குவன் மூவரும் சுரஞ் சார்தல்

345. என்றவந் தணனியம்
பலும்வியந் தவ்வயிற்
சென்றுவந் தெதிரெழுஞ்
செந்நெறிச் செல்வரோ
டன்றுறைந் தலர்கதிர்ப்
பருதிமண் டிலமகன்
குன்றினின் றிவரவோர்
சுடுசுரங் குறுகினர்.

என்று அ அந்தணன் இயம்பலும் வியந்து அவ்வயின்
சென்று, உவந்து எதிர் எழும் செந்நெறிச் செல்வரோடு
அன்று உறைந்து, அலர் கதிர்ப் பருதி மண்டிலம் அகன்
குன்றில் நின்று இவர ஓர் சுடு சுரம் குறுகினர்.

பொ :—என்று, அவ்வந்தணனாகிய விசுவாமித்திரமுனிவர் சொல்லுதலும், இராமலக்குமணர்கள், வியப்புற்று, அவ்விடம்

சென்று, மகிழ்ந்து, தங்களை எதிர்கொண்டு அழைக்க வருகின்ற நன்னெறியையே செல்வமாகக் கொண்ட முனிவர்களோடு, அன்றைக்கு அவ்விடம் தங்கியிருந்துவிட்டு, விரிந்த கிரணங்களையுடைய சூரியமண்டிலம் அகன்ற உதயகிரியினின்றும் உயர எழும்புகையில் வெப்பத்தாற் சுடுகின்ற சுரம் ஒன்றையடைந்தனர்.

கு :—என்று+அ+அந்தணன் என்ற அந்தணன். காமனுச்சிரமத்திலே வசிக்கின்ற முனிவர்கள் எதிர்கொண்டழைக்க மூவரும் அன்று அங்கே தங்கியிருந்து மறுநாள் விடியற்காலையில் சூரியன் உதித்தபின் சுரம் சார்ந்தனர் என்பது, கருத்து. (4)

## பாலைநில வருணனை 346-357

**346.** பருதிவா னவனிலம்
பசையறப் பருகுவான்
விருதுமேற் கொண்டுலாம்
வேனிலே யல்லதோர்
இருதுவே றின்மையா
லெரிசுடர்க் கடவுளும்
கருதின்வே முள்ளமுங்
காணில்வே நயனமும்.

பருதி வானவன் நிலம் பசை அறப் பருகுவான்
விருது மேற்கொண்டு, உலாம் வேனிலே அல்லது ஓர்
இருது வேறு இன்மையால், எரி சுடர்க் கடவுளும்
கருதின் வேம் உள்ளமும்; காணில் வேம் நயனமும்.

பொ :—செங்கதிர்க் கடவுள் பூமி நீர்ப்பசையற்றுப்போம் படி குடிப்பதற்கு விருதுகட்டிக்கொண்டு உலாவுகின்ற வேனிற் காலம் அல்லாமல், வேறு ஓர் இருதுவும் இல்லாமையால், அங்கியங் கடவுளும் அந்நிலத்தை நினைப்பானாயின் அவன் உள்ளம் வெந்துவிடும் ; சுரத்தைப் பார்த்தால் கண்களும் வெந்துபோம்.

கு :—அச்சுரத்தில் வேனிலைத் தவிர வேறு இருது இல்லாமையால், எல்லாப் பொருளையும் சுட்டெரிக்கின்ற அக்கினிதேவனும் இச்சுரத்தை நினைப்பான் ஆயின் அவன் மனம் வெந்துபோம் ; பார்த்தால் கண் வெந்துபோம் என்பது கருத்து. (5)

**347.** படியின்மேல் வெம்மையைப்
பகரினும் பகருநா
முடியவே முடியமூ
டிருளும்வான் முகடும்வேம்
விடியுமேல் வெயிலும்வே
மழையும்வே மின்னினே
டிடியும்வே மென்னில்வே
றியாவைவே வாதவே.

**படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகரும் நா**
**முடிய வேம்; முடிய மூடு இருளும் வான் முகடும் வேம்**
**விடியுமேல் வெயிலும் வேம்; மழையும் வேம்; மின்னினேடு**
**இடியும் வேம் என்னில், வேறு யாவை வேவாதவே.**

பொ :—பாலைநிலத்தின்மீதுள்ள வெப்பத்தைச் சொன்னாலும் சொல்கின்ற நாக்கு முழுதும் வெந்துவிடும்; உலக முழுதும் மூடியிருக்கின்ற இருட்டும், ஆகாயத்தின் உச்சியும் வேகும். பொழுது புலருமாயின் சூரியனுடைய வெயிலும் வேகும். மேகமும் வேகும், மின்னும், இடியும் வேகும் என்றால், வேறு எப்பொருள்கள் வேவாதன.

கு :—வானிலுள்ள பொருள்கள் மண்ணிலுள்ள பொருள்கள் வெம்மையான பொருள்கள் தண்மையான பொருள்கள், காட்சிப் பொருள்கள் கருத்துப்பொருள்கள் அனைத்தும் வேம் என்பது கருத்து. இருள் வேதலாவது இருள் மிகுந்த இராக்காலத்தும் வெப்பமிக்குள்ளது என்றவாறும். முதலடிக்கு, படியின் மேலுலகும் வேம் எனப் பாடங்கொண்டு பூமியும், பூமிக்கு மேலுள்ள உலகங்களும் வேம் என உரை கூறுவாரும் உளர். (6)

**348.** விஞ்சுவான் மழையின்மே
லம்பும்வே லும்படச்
செஞ்சவே செருமுகத்
தமர்செயுந் திறனிலா
வஞ்சர்தீ வினையினுன்
மானமா மணியிழந்
தஞ்சினர் நெஞ்சுபோ
லென்றுமா றுதரோ.

விஞ்சுவான் மழையின்மேல் அம்பும் வேலும் படச்
செஞ்சவே செரு முகத்து அமர் செய்யும் திறன் இலா
வஞ்சர் தீவினையினால் மான மா மணி இழந்து
அஞ்சினார் நெஞ்சுபோல் என்றும் ஆறாது அரோ,

பொ :—போர்முனையிலே, அம்புகளும் வேல்களும் மிக்க மேகத்திலுண்டான மழையைப்போல உடலின்மேற்பட நேர் நின்று போர்செய்யும் வலியற்ற வஞ்சகர்களின் தீய செயலால் மானமாகிய பெரிய மாணிக்கத்தை யிழந்து அஞ்சிக்கொண்டே யிருக்கின்ற வீரர்களின் மனம் போலப் பாலை நிலம் என்றும் வெப்பம் மாறாது.

கு :—வஞ்சகர்களுடைய வஞ்சனைப் போரால் மானமழிந்த மன்னர் மனம் எப்போதும் அழன்றுகொண்டே யிருப்பதுபோலப் பாலையும் எப்போதும் கனன்றுகொண்டே யிருக்கும் என்பதாம்.

செருமுகத்து, அம்பும் வேலும் விஞ்சு வான் மழையின் மேல் பட, செஞ்சவே அமர்செயும் திறனிலா வஞ்சகர் தீவினையினான் மானம் இழந்து அஞ்சினார் நெஞ்சுபோல் மாறாது எனக் கூட்டுக. அரோ – அசை. மாறாது என்பதற்கு வெப்பம் மாறாது என எழுவாய் வருவித்து முடிக்க, (7)

349. பேய்பிளந் தொக்கநின்
றுலர்பெருங் கள்ளியின்
றாய்பிளந் துக்ககா
ரகில்களுந் தழையிலா
வேய்பிளந் துக்கவெண்
டரளமும் விடவரா
வாய்பிளந் துக்கசெம்
மணியுமே வனமெலாம்.

பேய் பிளந்து ஒக்க நின்று உலர் பெருங் கள்ளியின்
தாய் பிளந்து உக்க கார் அகில்களும் தழை இலா
வேய் பிளந்து உக்க வெண் தரளமும் விட அரா
வாய் பிளந்து உக்க செம் மணியுமே வனம் எலாம்.

பொ :— பேயாற் பிளக்கப்பட்ட தொப்பப் பாலையில் நின்று உலர்கின்ற பெரிய கள்ளியின் அடியானது பிளத்தலால்

சிந்திய கரிய அகிற் கட்டைகளும், இலையேயில்லாத உலர்ந்த மூங்கில்கள் பிளந்ததால் சிந்திய வெண்மையான முத்துக்களும், விடத்தையுடைய பாம்பு வெப்பந்தாங்காது வாயைப் பிளத்தலாற் சிதறிய சிவந்த மாணிக்கங்களுமே அப்பாலைவனத்தில் எங்கும் விளங்குகின்றன.

கு :—இனிப் பேய் பிளந்து ஒக்க என்பதற்கு, பேய் உடல் பிளந்துநின்றாற்போலக் கள்ளி பிளந்து என்று உரை கூறுவாரும் உளர். தாய் – மூலம்; என்பது அடிமரத்தையறிவித்தது. கள்ளிவயிற்றின் அகில் பிறக்கும் ஆதலின் 'கள்ளியின் தாய் பிளந்து உக்க காரகில்களும்' என்றார். தழையிலாவேய் ஆண்டுகள் பலவாகிப் பூத்த மூங்கில். வேய் – முத்துப் பிறக்கும் இடங்களில் ஒன்றாதலின் வேய்...உக்க வெண்டரளம் எனப்பெற்றது. "கழை கன்னலாவின்பல் கட்செவிகார் இந்து உடும்பு கரா முத்தமினும்" என்றது காண்க. (8)

350. பாருமோ டாதுநீ டாதெனும் பாலதே
சூருமோ டாதுகூ டாதரோ சூரியன்
தேருமோ டாதுமா மாகமீ தேறிநேர்
காருமோ டாதுநீள் காலுமோ டாதரோ.

பாரும் ஓடாது நீடாது எனும் பாலதே
சூரும் ஓடாது கூடாது அரோ சூரியன்
தேரும் ஓடாது மா மாகம் மீது ஏறி நேர்
காரும் ஓடாது நீள் காலும் ஓடாது அரோ.

பொ :—பூமியும், வெப்பந்தாங்காது இடம் விட்டுப் பெயர்ந்தோட எண்ணினும் நீளமாகாது என்னுந்தன்மையை இயல்பாகவேயுடையது ஆதலின் ஓடாது. பாலைத்தெய்வமாகிய கொற்றவை நடக்க எண்ணின் ஓடாமல் அசைந்தாடி நடத்தல் கூடாது. சூரியன் தேரும் பெரிய ஆகாயத்தின்மேலெழுந்து இப்பாலையின் நேராகச் செல்ல முடியாது. மேகமும் பெரிய விண்ணின்மீதெழுந்து இப்பாலையின் நேராக ஓடாது. எங்கும் இயங்கும் நீண்ட காற்றும் இயங்காது.

கு :—அரோ என்பன இரண்டும் அசை. பூமி பாலையையும் தனக்கு ஓரங்கமாகக் கொண்டு ஐம்பாலாக இருத்தலின் அதன் வெப்பிற்காற்றாது எங்கே ஓடுவது? தன்னின் வேறு ஆதாரமாகிய இடம் இன்மையின் என்றவாறு.

கொற்றவை அங்குமிங்கும் நடமாட எண்ணின் ஓடத்தான் வேண்டுமே யன்றி நடந்து போக இயலாது என்பது கருத்து. வெப்பந் தரும் சூரியனுடைய தேரும் அப்பாலையின் நேராக ஓடினாற் பொசுங்கி விடும் என்பதாம். காரும் வெந் தொழியும். காற்று தட்பம் மாறி வெப்புறும் ஆகையால் ஓடாது என்பது. இச்செய்யுளின் முதலடிக்கு இவ்வாறன்றி, பூமியும் அசையாதது என்னுந் தன்மையால் ஓடாது எனவும், பூதேவதையும் அந்நிலத்தை விட்டு ஓடிப்போக முயலுமேயாயினும், இடத்தை விட்டு அப்புறப்படாதது என்னும் தன்மையையுடையது ஆதலால் ஓடிப்போகமாட்டாது எனவும். 'நிலமானது அங்கியிலே வெந்து வரவரச் சுருங்கிப் போம். மேடாய் வளர மாட்டாது' எனவும், பூமியும் ஓடாமல் நெடுநேரம் நிற்க மாட்டாது எனவும் உரை கூறுவார்களும் உளர். (9)

**351.** கண்கிழித் துமிழ்விடக்
கனலரா வரசுகார்
விண்கிழித் தொளிருமின்
னனையபன் மணிவெயில்
மண்கிழித் திடவெழுஞ்
சுடர்கண்மண் மகளுடற்
புண்கிழித் திடவெழுங்
குருதியே போலுமே.

**கண்கிழித்து உமிழ் விடக் கனலரா அரசு கார்**
**விண்கிழித்து ஒளிரும் மின்னனைய பன்மணி வெயில்**
**மண் கிழித்திட எழும் சுடர்கள், மண் மகள் உடல்**
**புண் கிழித்திட எழும் குருதியே போலுமே.**

பொ :—கண்களைக் கிழித்துக் கொண்டு கக்குகின்ற விடம் போன்ற நெருப்பையுடைய பாம்பரசனாகிய ஆதிசேடனுடைய, ஆகாயத்திலுள்ள மேகத்தைப் பிளந்து கொண்டு ஒளிவிடும் மின்னலை ஒத்த பல மாணிக்கங்களின் இளவெயிலாகிய பூமி பிளக்க அதன் வழியே எழுகின்ற கிரணங்கள் பூமிதேவியின் உடல் புண்ணாகக் கிழிபட அதினின்றும் வெளிப்படுகின்ற இரத்தத்தை ஒத்திருக்கும்.

கு :—அரா அரசு பன்மணி வெயில் சுடர்கள் எழும் குருதி போலும் எனக் கூட்டுக. விடக்கனல் – விடம்போற் கொடிய

நெருப்பு; கண்களைக் கிழித்துக்கொண்டு வெளிப்படுகின்ற நெருப்பினையுடைய ஆதிசேடன் என்க, ஆகாயத்திலுள்ள மேகத்தைக் கிழித்துக் கொண்டு தோன்றுகின்ற மின்னலை யொத்த பல்மணிகள் என்றவாறு. பூமியின் வெடிப்பு வழியாக ஆதிசேடன் முடிமணியின் ஒளி வெளிப்படுதல் பூமிதேவியின் உடற் புண்ணிலிருந்து வெளிப்படும் இரத்தம்போல இருந்தது என்பது கருத்து. அரா அரசு கால் பன்மணி எனப் பாடங்கொண்டு ஆதிசேடன் கக்குகின்ற பன்மணிகளின் ஒளி என்றலும் ஆம். (10)

**352.** புழுங்குவெம் பசியொடு புரளும் பேரரா
விழுங்கவந் தெழுந்தெதிர் விரித்த வாயின்வாய்
முழங்குதிண் கரிபுகு முடுகி மீமிசை
வழங்குவெங் கதிர்சுட மறைவு தேடியே;

புழுங்கு வெம் பசியொடு புரளும் பேர் அரா
விழுங்க வந்து எழுந்து எதிர் விரித்த வாயின் வாய்
முழங்கு திண் கரி புகும்; முடுகி மீ மிசை
வழங்கு வெம் கதிர் சுட மறைவு தேடியே.

பொ :—பிளிறுகின்ற வலிய யானையானது வானில் விளங்குகின்ற சூரிய கிரணம் கொளுத்த அதற்கு அஞ்சி மறைவிடந்தேடி, மனம் புழுங்குதற்குக்காரணமான கொடிய பசியோடு பூமியிற் புரண்டு கொண்டிருக்கிற பெரும்பாம்பினது, தாமே வந்து நேர்ந்த வற்றை விழுங்கத் திறந்திருக்கின்ற வாயில் விரைந்து நுழையும்.

கு :—திண்கரி, மீமிசை வழங்கு வெங்கதிர் சுட மறைவு தேடி, பேரரா வந்து எதிர் எழுந்த விழுங்க விரித்த வாயின்வாய் முடுகிப் புகும் எனக்கூட்டுக. புழுங்கு வெம்பசி-பலநாள் உணவின்மையால் மனம் புழுங்குதற்குக் காரணமான கொடிய பசி, பேர் அரா - மலைப்பாம்பு. விழுங்க வந்தெழுந்த எதிர் விரித்த வாயின் என்பதனை வந்து எதிர் எழுந்த விழுங்க விரித்தவாயின் எனக் கொண்டு கூட்டுக. எழுந்த எதிர் என்பது எழுந்தெதிர் எனப் பெயரெச்சத்து அகரம் விகாரப்பட்டது. நிழலைத்தேடி வருகின்ற யானை பாம்பின் பிளந்த வாயை நிழலிடம் என்று எண்ணி வலியப் புகுந்தது என்பதாம். (11)

**353.** ஏகவெங் கனலர சிருந்த காட்டினிற்
காகமுங் கரிகளுங் கரிந்து சாம்பின
மாகவெங் கதிரெனும் வடவைத் தீச்சுட
மேகமுங் கரிந்திடை வீழ்ந்த போலுமே.

ஏக வெம் கனல் அரசு இருந்த காட்டினில்
காகமும் கரிகளும் கரிந்து சாம்பின
மாக வெம் கதிரெனும் வடவைத்தீச் சுட
மேகமும் கரிந்து இடை வீழ்ந்த போலுமே;

பொ :—ஒப்பற்ற அக்கினிதேவன் அரசாட்சிசெய்யும் காட்டிலே காகங்களும் யானைகளும் கரிந்துபோய்ச் சோர்ந்து கிடப்பவை, விண்ணிலுள்ள சூரியன் என்கின்ற வடவாமுகாக்கினி சுடுதலால், விண்ணில் உலாவுகின்ற மேகமும் கரிந்துபோய் இடையிடையே வீழ்ந்துகிடப்பன போலும்.

கு :—ஏக வெங்கனல் – ஒன்றான நெருப்பு ; ஒப்பற்ற அக்கினி என்பதாம். காகமும், ஓய்ந்த யானையும் பாலைக் கருப்பொருளாயிருந்தும், அதனால் ஆற்ற முடியாத வெம்மையால் கரிந்து வீழ்ந்தன என்றவாறு. மேகமும் என்ற உம்மை பாலையின் கொடுமையைச் சிறப்பித்தலின் உயர்வுசிறப்பு. இடையிடை கிடக்கின்ற கரிந்த காகங்கள் சிறிய மேகங்களுக்கும் யானைகள்பெரிய மேகங்களுக்கும் ஒப்பாவன என்பதாம். (12)

## பேய்த்தேரின் தோற்றம்

**354.** கானகத் தியங்கிய கழுதின் றேர்க்குலம்
தானகங் கரிதலிற் றலைக்கொண் டோடிப்போய்
மேனிமிர்ந் தெழுந்திடில் விசும்பும் வேமெனா
வானவர்க் கிரங்கிநீர் வளைந்த தொத்ததே.

கானகத்து இயங்கிய கழுதின் தேர்க்குலம்,
தான் அகம் கரிதலில் தலைக்கொண்டு ஓடிப்போய்
மேல் நிமிர்ந்து எழுந்திடில் விசும்பும் வேம் எனா
வானவர்க்கு இரங்கி நீர் வளைந்தது ஒத்ததே.

பொ:—அப் பாலைவனத்தில் இங்கும்அங்குமாக இயங்கிக்கொண்டிருக்கிற பேய்த்தேராகிய கானல் நீர்க்கூட்டம், தான் உள் வெந்து

கரிதலால் மிகுதிப்பட்டுச்சென்று, மேல் எழும்புமானல் விண்ணுலகமும் வெந்துவிடுமே என்று எண்ணி அங்குறையும் தேவர்களுக்கு இரங்கி நீர் சூழ்ந்ததை ஒக்கும்.

கு :—இயங்கிய - பார்ப்பவர்கண்ணுக்கு இயங்குவது போலத் தோன்றுகின்ற. கழுது-பேய். கழுதின்தேர்-பேய்த்தேர்; என்றது கானல் நீரை. நீர்-நீர்க்கடவுளாகிய வருணன் என்று உரைப்பாரும் உளர். (13)

**355.** ஏய்ந்தவக் கனலிடை யெழுந்த கானற்றேர்
காய்ந்தவக் கடுவனங் காக்கும் வேனிலின்
வேந்தனுக் கரசுவீற் றிருக்கச் செய்ததோர்
பாய்ந்தபொற் காலுடைப் பளிக்குப் பீடமே.

ஏய்ந்த அக் கனலிடை எழுந்த கானல் தேர்
காய்ந்த அக் கடுவனம் காக்கும் வேனிலின்
வேந்தனுக்கு அரசு வீற்றிருக்கச் செய்தது ஓர்
பாய்ந்த பொன் கால் உடைப் பளிக்குப் பீடமே.

பொ :—அப் பாலைவனத்துப் பொருந்திய அவ்வெப்பத்தினின்றும் உண்டான பேய்த்தேரானது, வெப்ப முற்ற அந்தக் கொடிய பாலைவனத்தைக் காக்கின்ற கோடைக் காலமாகிய அரசனுக்கு அரசு செய்ய வீற்றிருப்பதற்காகப் படைக்கப்பட்டதாகிய ஒரு ஓடவிட்ட பொன்னாற் செய்யப்பெற்ற காலினையுடைய பளிங்குப் பீடத்தை ஒக்கும்.

கு :—பாலைநிலத்திலுள்ள வெப்பத்தால், மண்ணிலிருந்து வெளிப்படும் ஒளியும் காற்றும் சிறுபுழுதியும் சேர்ந்தசைய, நீர் ஓடுவது போன்ற தோற்றம் உண்டாகும்; இத்தோற்றத்திற்குக் கானல் நீர், பேய்த்தேர் என்று பெயர். பாய்ந்த பொன் - ஓடவிட்ட பொன். இது பொன்னிற் சிறந்தது. (14)

### பாலைவனத்தின் பசையற்றநிலை

**356.** தாவரு மிருவினை செற்றுத் தள்ளரு
மூவகைப் பகையரண் கடந்து முத்தியில்
போவது புரிபவர் மனமும் பொன்விலைப்
பாவையர் மனமும்போற் பசையு மற்றதே.

தா வரும் இருவினை செற்றுத் தள்ளரும்
மூவகைப் பகை அரண் கடந்து முத்தியில்
போவது புரிபவர் மனமும் பொன் விலைப்
பாவையர் மனமும் போல் பசையும் அற்றதே.

பொ :—கேடுகள் வருதற்குக் காரணமான இரண்டு வினைகளையும் அழித்து, நீக்கற்கரிய மூன்றுவகையான பகைகளின் அரண்களையும் வென்று, முத்தியையடைய விரும்புகின்றவர்களின் மனத்தையும், பொன்னை விலையாகப் பெற்றுப் போகத்தை விற்கும் பெண்களது மனத்தையும் போலப் பற்றற்று இருந்தது பாலை.

கு:—கேடுகள் ஆற்றொழுக்குப் போல் இடையறாது வருதற்குக் காரணம் இருவினை என்பார் தா வரும் இருவினை என்றார். இருவினை - நுகர் வினையும் வரும்வினையும் ஆகிய இரண்டுமாம். பெரிய வினை என்பாரும் உளர். நுகர் வினையைச் செறுத்தலாவது வலியொடுக்குதல். வருவினையைச் செறுத்தலாவது வந்து பொருந்தாமே தடுத்தல். மூவகைப்பகை - காமம், வெகுளி மயக்கம் என்பன. அவற்றை அரணாக உருவகித்தது பற்றற்ற முனிவரானன்றி வெல்ல முடியாமை கருதி. முத்தியில் போவது புரிபவர்-வீட்டுலகையடைய விரும்புகின்றவர்கள் ; முமுக்ஷுக்கள் என்றவாறும், அவர்கள் மனம் எப்பொருளிலும் தோயாது பற்றற்று நிற்கும். பொருட்பெண்டிர் மனமும் யாரிடமும் பற்றாது நிற்கும் : ஆதலின் நீர்ப் பசையற்ற பாலைக்கு ஒப்பாயின. (15)

'தாவரும்' என்னும் இப்பாடற்குப் பின் 20-ஆம் சுவடியில் இப்பாடல் காணப்பெறுகின்றது.

356 (a) திருகிக் காய்சுரஞ் சிந்திக்கச் சிந்தைநொந்து
உருகிப் போமென் றுரைசெய்ய வேணுமோ
கருகிக் கண்சிவந் துண்டமண் கான்றுநெய்
பருகிப் பின்னையும் பாற்கடற் றுஞ்சுமால்.

**357.** பொரிபரற் படர்நிலம் பொடிந்து கீழுற
விரிதலிற் பெருவழி விளங்கித் தோன்றலால்
அரிமணிப் பணத்தரா வரச னாட்டினும்
எரிகதிர்க் கினிதுபுக் கியங்க லாயதே.

பொரி பரல் படர் நிலம் பொடிந்து கீழ் உற
விரிதலின், பெரு வழி விளங்கித் தோன்றலால்
அரி மணிப் பணத்து அரா அரசன் நாட்டினும்
எரி கதிர்க்கு இனிது புக்கு இயங்கல் ஆயதே.

பொ :—சுட்ட பருக்கைக்கற்கள் பரவியுள்ள பூமியானது வெடித்துப் பாதலம் வரை விரிந்திருப்பதால், பெரிய வழியானது விளங்கிக் காணப்படுதலால், சிவந்த மாணிக்கங்களையுடைய படத்தினையுடைய அரவுகளுக்கெல்லாம் அரசனாகிய ஆதிசேடன் நாட்டிலும், காந்துகின்ற சூரியனுக்கு இடையீடின்றிப் புகுந்துலாவுதல் எளிமையாயிற்று.

கு :—மேலே யுள்ள பருக்கைக் கற்கள் எல்லாம் பழுத்துக் கிடப்பதால் பூமி வெடிக்க அவ்வெடிப்பு பாதலம் வரை விரிய அதன் வழியே சூரியகிரணம் ஆதிசேடன் நாட்டிலும் புகுந்து உலாவுகின்றது என்பது கருத்து. அரிமணி - செம்மணி. பணம்- படம். பரல் - பருக்கைக்கற்கள். (16)

**பாலையின் வெப்பத்தால் அரசிளங்குமரர் வருந்துவர் என விசுவாமித்திரர் எண்ணுதல்**

**358.** எரிந்தெழு கொடுஞ்சுர மினைய தெய்தலும்
அருந்தவ னிவர்பெரி தளவி லாற்றலைப்
பொருந்தின ராயினும் பூவின் மெல்லியர்
வருந்துவர் சிறிதென மனத்தி னோக்கினன்.

எரிந்து எழு கொடுஞ்சுரம் இனையது எய்தலும்,
அருந்தவன், இவர் பெரிது அளவில் ஆற்றலைப்
பொருந்தினர் ஆயினும், பூவின் மெல்லியர்,
வருந்துவர் சிறிது, என மனத்தில் நோக்கினன்.

பொ :—இத்தன்மையதாகிய அனல் பற்றியெரிகின்ற கொடிய பாலையை அடைதலும், பிறர்யாரும் செய்தற்கரிய தவத்தினையுடையவராகிய விசுவாமித்திரமுனிவர் இவர்கள் எல்லையற்ற வன்மையை மிகப் பொருந்தியவர்களானாலும், பூவைக் காட்டிலும் மென்மையானவர்கள். சிறிது வருந்துவார்கள் என்று மனத்தால் கருதினர்.

கு :—இனையது கொடுஞ்சுரம் எனக் கூட்டுக. ஒவ்வொருமுறையும் பன்னீராயிரம் யாண்டுதவஞ்செய்தவனாதலின் யாரும் செய்தற்கரிய தவத்தினையுடையவன் என்றார். மனத்தின் நோக்குதல்- கருதுதல். (17)

## விசுவாமித்திரன் பலை அதிபலையென்னும் அருமறைக ளிரண்டையும் அரசிளங்குமரர்க்கு உபதேசித்தல்

**359.** நோக்கின னவர்முக நோக்க நோக்குடைக்
கோக்குமா ரருமடி குறுக நான்முகன்
ஆக்கிய விஞ்சைக ளிரண்டு மவ்வழி
ஊக்கின னவையவ ருள்ளத் துள்ளினர்.

நோக்கினன் அவர்முகம், நோக்க நோக்குடைக்
கோக் குமாரரும் அடி குறுக, நான்முகன்
ஆக்கிய விஞ்சைகள் இரண்டும் அவ்வழி
ஊக்கினன் ; அவை அவர் உள்ளத்து உள்ளினர்.

பொ :—இராம இலக்குமணர்களுடைய முகங்களை விசுவாமித்திரன் குறிப்பாகப் பார்த்தான். பார்த்ததும், குறிப்பு அறியுந் தன்மையையுடைய அரசிளங்குமாரர் இருவரும், விசுவாமித்திரன் திருவடிகள் இரண்டையும் வணங்கியடைய, பிரமன் படைத்த வித்தைகளாகிய மந்திரங்கள் இரண்டையும் அவ்விடத்து அவர்கட்கு உபதேசித்தான், அவர்களிருவரும் அவற்றை மனத்தில் தியானித்தார்கள்.

கு :—நோக்கினன், அவர்கள் மென்மையும், பாலையின் கொடுமையும் மந்திரம் கொடுக்க எண்ணிய கருணையும் வெளிப்பட நோக்கினன் என்றவாறு. அடிகுறுக - அடிகளில் விழுந்து வணங்க, உபதேசிக்கக் கருதிய குருவின் குறிப்பறிந்து சீடன் செய்ய வேண்டியது அடிவீழ்தலாதலின் அதனை யியற்ற என்றார். விஞ்சைகள் இரண்டு - பலை அதிபலை யென்னும் மந்திரங்கள் இரண்டுமாம். (18)

**360.** உள்ளிய காலையி னூழித் தீயையும்
எள்ளுறு கொழுங்கன லெரியும் வெஞ்சுரம்
தெள்ளுதண் புனலிடைச் சேற லொத்தது
வள்ளலு முனிவனை வணங்கிக் கூறுவான்.

உள்ளிய காலையின் ஊழித் தீயையும்
எள்ளுறு கொழுங்கனல் எரியும் வெஞ்சுரம்
தெள்ளு தண் புனலிடைச் சேறல் ஒத்தது
வள்ளலும் முனிவனை வணங்கிக் கூறுவான்.

பொ:—அவ்வண்ணம் அவர்கள் எண்ணிய காலத்துப் பேரூழிக் காலத்து நெருப்பையும் இகழ்கின்ற மிக்கநெருப்பு எரிகின்ற கொடிய பாலையிலே (இவர்கள் செல்லுதல்) தெளிந்த குளிர்ந்த நீரில் செல்வதை யொத்திருந்தது, வள்ளலாகிய இராமனும் விசுவாமித்திர முனிவரை வணங்கிப் பின்வருமாறு கூறுவான்.

கு :—ஊழித்தீ - யுகாந்த காலத்து உலகையே அழிக்க எழும் பும் தீ. வெஞ்சுரம் சேறல் புனலிடைச் சேறலை யொத்தது என வினைக்கு வினை உவமிக்க. சேறல் என்பதனை வருவித்து முடிக்க. (19)

## இராமன் வினவுதல்

**361.** சுழிபடு கங்கையங் தொங்கன் மெளலியான்
விழிபட வெந்ததோ வேறுதா னுண்டோ
பழிபடர் மன்னவன் படைத்த நாட்டினுங்
கழிவதென் காரண மறிஞகூ றென்றான்.

'சுழிபடு கங்கை அம் தொங்கல் மெளலியான்
விழிபட வெந்ததோ? வேறுதான் உண்டோ?
பழிபடர் மன்னவன் படைத்த நாட்டின் ஊங்கு
அழிவது என் காரணம்? அறிஞ! கூறு' என்றான்,

பொ :—எல்லாம் அறிந்த முனிவர் பெருமானே! நீர்ச்சுழிகள் உண்டாகின்ற கங்கையாற்றையும், அழகிய (கொன்றைமலர்) மாலையையும் அணிந்த முடியினையுடைய சிவபெருமான், நெற்றிக் கண் படுதலால் வெப்பமாயிற்றோ! வேறு காரணம் உண்டோ? பழிமிக்க மன்னன் ஆளுகின்ற நாட்டைக் காட்டிலும் மிகுதியாக இந்நிலம் அழிவதற்கு என்ன காரணம்? தெரிவித்தருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டார்.

கு :—சுழிபடுகங்கை - வேகத்தாற் சுழிகள் உண்டாகின்ற கங்கை. எடுத்த எடுப்பிலேயே சிவபெருமானுடைய நெற்றி விழிபட வெந்ததோ என்றமையான், அதனைவிட வெப்பமிகுந்த ஒன்று இன்மையின் வேறு ஏது, விதந்துகூற இயலாது ஆதலின் வேறுதான் உண்டோ என்று பொதுமையிற் புகன்றார். குடிபழி தூற்றும் கோனது நாடு வெப்பமிக்கு வளங்குன்றி அழியும். அதனைக்காட்டிலும் இந்நிலம் அழியக் காரணம் என்னை? என்று வினவினான் இராமன் என்பதாம். (20)

## விசுவாமித்திரன் தாடகை வரலாறு கூறுதல்

**362.** என்றலு மிராமனை
நோக்கி யின்னுயிர்
கொன்றுழல் வாழ்க்கையள்
கூற்றின் றோற்றத்தள்
அன்றியு மையிரு
நூறு மையன்மா
ஒன்றிய வலியின
ளுறுதி கேளெனா.

என்றலும், இராமனை நோக்கி, இன் உயிர்
கொன்று உழல் வாழ்க்கையள்; கூற்றின் தோற்றத்தள்;
அன்றியும், ஐயிரு நூறு மையல் மா
ஒன்றிய வலியினள்; உறுதி கேள் எனா?

பொ: —என்று இராமன் வினவுதலும், விசுவாமித்திரன் இராமபிரானைப்பார்த்து இனிய உயிர்கள் பலவற்றையும் கொன்று திரிகின்ற வாழ்க்கையுடையவளும், எமனையொத்த தோற்றத்தை யுடையவளும். அல்லாமலும் ஆயிரம் மதயானைகளின் வலி ஒருங்கு திரண்டால் ஒத்த வலிமையுடையவளும், ஆகிய ஓர் அரக்கியின் மன வுறுதியைக் கேட்பாயாக என்று பின்வருமாறு சொல்லத்தொடங் கினான்.

கு: —இன்னுயிர் கொன்று உழல் வாழ்க்கையள் என்றது உயிர்களை உணவிற்காகக் கொன்று தின்று வாழலாம்; இவள் ஒரு பயனுமின்றி உயிர்களைக் கொல்வதையே வாழ்க்கையாகக் கொண்டவள் என்றவாறாம். உறுதி - அவள்வரலாற்றிலே காணப் படும் அவளுடைய உறுதி. கேள் எனாக் கூறலுற்றனன் என ஒரு சொல் வருவித்து முடிக்க. மையல்மா – மதம்பிடித்த யானை. (21)

இப்பாடலின் பின், 20–ஆம் ஏட்டில் பின் வரும் பாடல் காணப்பெறுகின்றது.

362 (a) ஓங்கிய தவத்தி னாலே யுயர்ந்தமா முனிவர் தம்மைத்
தீங்கது செய்து கொன்று தேவர்தம் பதங்க ளெங்கும்
ஏங்கிடத் திரியுங் கானில் இயங்குறு போதி லிந்த
வீங்கிடை யரக்கி வந்த வாறெலாம் விளம்பக் கேணீ,

தாடகையுருவ வருணனை 363—365

**363.** மண்ணுறுத் தெடுப்பினுங்
கடலை வாரினும்
விண்ணுருத் திடிப்பினும்
வேண்டிற் செய்கிற்பாள்
எண்ணுருத் தெரிவரும்
பாவ மீண்டியோர்
பெண்ணுருக் கொண்டெனத்
திரியும் பெற்றியாள்.

மண் உருத்து எடுப்பினும் கடலை வாரினும்
விண் உருத்து இடிப்பினும் வேண்டின் செய்கிற்பாள்;
எண் உருத் தெரிவு அரும் பாவம் ஈண்டி ஓர்
பெண் உருக் கொண்டெனத் திரியும் பெற்றியாள்.

பொ :—மண்ணுலகமுழுவதையும் கோபங்கொண்டு எடுக்க விரும்பினும், கடல்நீர் முழுதையும் வாரிக் குடிக்க விரும்பினும் கோபித்து ஆகாயத்தை இடிக்க விரும்பினும் செய்து முடிக்கும் ஆற்றலுடையவள். எண்ணளவும், உருவமும் இவ்வளவு என்று அறியமுடியாத தீவினைகள் அனைத்தும் ஒருங்கு திரண்டு ஒருபெண் வடிவங்கொண்டால் ஒப்பத் திரியுந்தன்மையை உடையவள்.

கு: —எண் உரு. உம்மைத்தொகை. முன் இரண்டடிகளிலும் அவளுடைய ஆற்றலும், பின்னிரண்டடிகளில் அவளுடைய உருவச்சிறப்பும் உரைக்கப்பெற்றன; இப்பாடலும் அடுத்துவரும் இரண்டு பாடல்களும் சில பிரதிகளில் 38, 39, 40-ஆம் பாடல்களாகக் காணப்படுகின்றன. (22)

**364.** பெருவரை யிரண்டொடும் பிறந்த நஞ்சொடும்
உருமுறழ் முழக்கொடு மூழித் தீயொடும்
இருபிறை செறிந்தெழு கடலுண் டாமெனின்
வெருவரு தோற்றத்தள் மேனி மானுமே.

பெரு வரை இரண்டொடும் பிறந்த நஞ்சொடும்
உரும் உறழ் முழக்கொடும் ஊழித் தீயொடும்
இரு பிறை செறிந்து எழு கடல் உண்டாம் எனின்
வெருவரு தோற்றத்தள் மேனி மானுமே.

பொ :—பெரிய மலைகள் இரண்டோடும், உண்டான விடத்தோடும், இடியை ஒத்த ஒலியோடும், யுகாந்தகாலத்துத் தியோடும் இரண்டு பிறைமதிகள் நெருங்கிய ஓர் கடலிருக்குமாயின் அது யாரும் அஞ்சத்தக்க தோற்றத்தை யுடையவளாகிய அவ்வரக்கியின் உடலை ஒத்திருக்கும்.

கு :—தனங்களாகிய இருமலைகளையும், நஞ்சுபோன்ற தீத்தன்மைகளையும் இடியைப்போன்ற பேச்சையும், ஊழித்தீ போன்ற செம்பட்டை மயிரையும் இருபிறைகள் போன்ற கோணற்பற்களையும் உடையவள் இவள் என்பதாம். (23)

**365.** சூடக வரவுறழ் சூலக் கையினள்
காடுறை வாழ்க்கையள் கண்ணிற் காண்பரேல்
ஆடவர் பெண்மையை யவாவுந் தோளிணாய்
தாடகை யென்பதச் சழக்கி நாமமே.

**சூடக அரவு உறழ் சூலக் கையினள்**
**காடு உறை வாழ்க்கையள் கண்ணில் காண்பரேல்**
**ஆடவர் பெண்மையை அவாவும் தோளிணாய்!**
**தாடகை என்பது அச் சழக்கி நாமமே.**

பொ :—ஆடவர்கள் கண்ணாற் காண்பார்களாயின் பெண் தன்மையை விரும்புதற்குக் காரணமான தோளின் அழகையுடைய இராமபிரானே! பாம்பு வளையலாகப் பொருந்தியதும், சூலத்தை யேந்தியதுமாகிய கையையுடையவளும் காட்டின்கண் தங்கிய வாழ்க்கையையுடையவளும் ஆகிய அந்தக் கொடியாள் பெயர் தாடகை என்பதாம்.

கு :—காணுதற்றொழில் கண்ணுக்கே உரியதாகவும் கண்ணிற் காண்பரேல் என்றது, காணுதல் அறிதல் என்னும் பொருளினும் வருமாதலின், கேட்டறிதலின்றிக் கண்ணால் நேரே காண்பாராயின் என்பது விளக்கி நின்றது. ஆடவர் பெண்ணாகமுடியாது ஆதலின் பெண் தன்மையை விரும்பும் எனத் தன்மையைக் குறித்துக் கூறினர். பும்ஸாம் திருஷ்டி சித்தாபஹாரிணம் என்பர் வால்மீகி. (24)

### தாடகை வரலாறு கூறுதல்

**366.** கன்னவி றோளினாய் கமலத் தோனருள்
மன்னுயி ரனைத்தையும் வாரி வாய்மடுத்
தின்னுயிர் வளர்க்குமோ ரெரிகொள் கூற்றநேர்
அன்னவள் யாவளென் றறையக் கேட்டியால்.

கல் நவில் தோளினாய்! கமலத்தோன் அருள்
மன் உயிர் அனைத்தையும் வாரி வாய்மடுத்து?
இன் உயிர் வளர்க்கும் ஓர் எரிகொள் கூற்றம் நேர்
அன்னவள் யாவள் என்று அறையக் கேட்டியால்!

பொ :—மலையையொத்த தோளையுடையவனே! பிரமன்பெற்ற நிலைபேறுடைய உயிர்கள் அனைத்தையும் இரு கைகளாலும் வாரி யுண்டு, தனது இனிய உயிரை வளர்க்கின்ற ஓர் கொடுந்தன்மை வாய்ந்த யமனை ஒத்த அவள் யார் என்று நான் சொல்லக் கேட்பாயாக.

கு :—குயவனுக்குப் பலநாள் வேலை, தடியடிக்காரனுக்கு ஒரு கண வேலை என்பது போலப் பலநாள் பிரமன் படைத்த உயிர்கள் அனைத்தையும் வாரி ஒரே வாயில் உண்ணும் ஆற்றலள் என்றார். ஈண்டு யாவள் என்றது, அவள் குலநலம் முதலியவற்றையுட் கொண்டு, உணர்த்த எண்ணிக் கூறியதாம்.

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை. (25)

### சுகேதுவின் வரலாறு 367—371

**367.** இயக்கர்தங் குலத்துளா
னுலக மெங்கணும்
வியக்குறு மொய்ம்பினா
னெரியின் வெம்மையான்
மயக்கிலன் சரனெனும்
வலத்தி னானருள்
துயக்கிலன் சுகேதுவென்
றுளனோர் தூய்மையான்.

இயக்கர்தம் குலத்து உளான், உலகம் எங்கணும்
வியக்குறு மொய்ம்பினன், எரியின் வெம்மையான்,
மயக்கிலன், சரன் எனும் வலத்தினன் அருள்
துயக்கிலன், சுகேது என்று உளன், ஓர் தூய்மையான்.

பொ :—இயக்கர் குலத்தில் வந்தவன் ; எல்லாவுலகங்களிலும் வியந்து பாராட்டப்படும் வலிமையுடையவன் ; நெருப்பைப் போன்ற கொடுமையை யுடையவன் ; மயக்கம் இல்லாதவன் ; சற்சரன் என்னும் வலிமையுடையவன் பெற்ற தளர்ச்சியே இல்லாத சுகேது என்று புகழப்பெறுகின்ற தூய்மையாளன் ஒருவன் உளன்.

கு :—சற்சரன் என்னும் பெயரின் கூறு சரன் என்பது. 'மயக்கில்சற் சரனெனும்' எனப்பாடங்கொண்டு இவ்வுரை கூறுவாரும் உளர். சரன் என்பது குஞ்சரம் என்பதன் விகாரம் என்பர் சிலர். வால்மீகி சர்ஜன் என்பர். இவ்விடத்தும் சம்பன் என்றொரு பாடபேதம் வால்மீகத்திலேயுள்ளது. '' தீயினுட் டெறலும் நீ '' எனவும், 'வளித்தலைஇய தீயும்' என்றமைக்கியைய 'வலியும் தெறலும்' எனவும் வரும் சங்கச் செய்யுட் குறிப்புக்களும் தீவலிமைக்கு எடுத்துக் காட்டாதலை விளக்கும். (26)

### சுகேது தவஞ் செய்தது

**368.** அன்னவன் மகவிலா
தயருஞ் சிந்தையான்
மன்னெடுந் தாமரை
மலரின் வைகுறும்
நன்னெடு முதல்வனை
வழுத்தி நற்றவம்
பன்னெடும் பகலெலாம்
பயின்ற பான்மையான்.

அன்னவன் மகவிலாது அயரும் சிந்தையான்,
மன் நெடுந் தாமரை மலரின் வைகுறும்
நல்நெடு முதல்வனை வழுத்தி, நற்றவம்
பன்னெடும் பகல் எலாம் பயின்ற பான்மையான்.

பொ :—அத்தகைய சுகேது என்பவன் தனக்குப் பிள்ளையின்மையால் தளர்ந்த மனமுடையவனாக, நிலைபெற்ற பெரிய

தாமரைப்பூவில் எழுந்தருளியிருக்கின்ற நல்ல புகழான் நீண்ட தலைவனாகிய பிரமதேவனைத் துதித்துப் பல நாட்கள் நல்ல தவம் பயின்ற தன்மையுடையவன்.

கு :—மன் நெடுந்தாமரை என்பதற்குத் திருமாலின் உந்தியந் தாமரைக்கு, என்றும் அழிவின்மையானும் பாற்கடலின் ஆழத்திற்கு ஏற்ப நீண்டிருப்பதானும் அழியாது நிலைபெற்ற நீண்ட தாமரை என்பது பொருளாம். (27)

### பிரமன் வரமளித்தல்

**369.** முந்தின னருமறைக்
கிழவன் முற்றுநின்
சிந்தனை யென்னெனச்
சிறுவ ரின்மையால்
நொந்தன னருள்கென
நுணங்கு கேள்வியாய்
மைந்தர்க ளிலையொரு
மகளுண் டாமென்றான்.

முந்தினன், அருமறைக் கிழவன் 'முற்றும் நின்
சிந்தனை என்?' எனச் 'சிறுவர் இன்மையால்
நொந்தனன், அருள்க!' என, 'நுணங்கு கேள்வியாய்!
மைந்தர்கள் இலை ; ஒரு மகள் உண்டாம்' என்றான்.

பொ :—அரிய வேதங்களுக்குரியவனாகிய பிரமன் சுகேதுவின் முன்னர்த் தோன்றினான். 'முற்றுப்பெறவேண்டிய உன் நினைவு யாது?' என்று கேட்க, 'ஐய! எனக்குப் பிள்ளை யில்லாமையால் வருந்தினேன். புதல்வர்ப்பேற்றை அருள வேண்டும்' என வேண்டிக்கொள்ள, பிரமதேவன், 'நுணுகிய கேள்விஞானத்தையுடையவனே! இப்பிறப்பில் உனக்கு ஆண்மகவு இல்லை. ஒரு பெண் மகவு மட்டும் உண்டு' என்றான். (28)

### பிரமன் வரங்கொடுத்து மறைதல்

**370.** பூமட மயிலினைப் பொருவும் பொற்பொடும்
ஏமுறு மதமலை யீரைஞ் ஞாறுடைத்
தாமிகு வலியொடுந் தனயை தோன்றுநீ
போவென மலரயன் புகன்று போயினான்.

'பூ மட மயிலினைப் பொருவும் பொற்பொடும்
ஏமுறும் மதமலை ஈரைஞ்ஞூறுடைத்
தாமிகு வலியொடும் தனயை தோன்றும், நீ
போ!'என மலர் அயன் புகன்று போயினன்.

பொ :—'செந்தாமரை மலரில் எழுந்தருளியுள்ள இளமையான மயில்போன்ற திருமகளை ஒத்த அழகோடும், மதக்களிப்புமிக்க ஆயிரம் யானைகளின் மிக்க வலிமையோடும் ஒரு மகள் பிறப்பாள். நீ செல்க!' எனப் பிரமன் வரங்கொடுத்துச் சென்றான்.

கு ;—அழகால் திருமகளையும், ஆற்றலால் ஆயிரம் யானைகளையும் விஞ்சிய மகளொருத்தி பிறப்பாள். நீபோ எனப் பிரமன் சுகேதுவைப் பார்த்துக் கூறினன் என்பது கருத்து. மதமலை - யானை ; குறிப்புமொழி. தாமிகுவலி – மிக்கவலி. ஒருபொருட் பன்மொழி. 'தாவே வலியும் வருத்தமுமாகும்' ஆகலின் மிக்கவலி எனலாயிற்று. புகன்று – விரும்பிச் சொல்லி. (29)

### சுகேது தன்மகளைச் சுந்தனுக்கு மணமுடித்தல்

**371.** ஆயவ னருள்வழி யலர்ந்த தாமரைச்
சேயவ ளெனவளர் செவ்வி கண்டிவட்
காயவன் யார்கொலென் றுய்ந்து தன்கிளை
நாயகன் சுந்தனென் பவற்கு நல்கினன்.

**ஆயவன் அருள் வழி. அலர்ந்த தாமரைச்**
**சேயவள் என, வளர் செவ்வி கண்டு, 'இவட்கு**
**ஆயவன் யார்கொல்?' என்று ஆய்ந்து, தன்கிளை**
**நாயகன் சுந்தன் என்பவற்கு நல்கினன்.**

பொ :—அப் பிரமதேவனுடைய அருளின் வண்ணமே, (தோன்றி) செந்தாமரை மலரிலுள்ள திருமகளைப்போல வளர்கின்ற மகளின் அழகைக் கண்டு, இவளுக்குத் தக்க கணவன் யார் என்று ஆராய்ந்து, தன் சுற்றத்தாருள் தலைவனாகிய சுந்தன் என்னும் இயக்கனுக்கு மணஞ்செய்து கொடுத்தான்.

கு: —சேயவள் – சிவந்த மேனியளாகிய திருமகள். செவ்வி - பருவச் சிறப்பான் விளைந்த அழகு. தன் மகள் அழகைக்கண்டு இவளுக்குத் தக்க கணவன் யாரென்று ஆராய்ந்து, தன் சுற்றத் தாருட் டலைவனாகிய சுந்தன் என்பவற்குக் கொடுத்தான் என்பது கருத்து. (30)

### சுந்தனும் தாடகையும் மணக்களிப்பெய்துதல்

**372.** காமனு மிரதியுங் கலந்த காட்சியீ
தாமென வியக்கனு மணங்க ளுளும்வே
றியாமமும் பகலுமோ ரீறின் றென்னலாய்த்
தாமுறு பெருங்களிச் சலதி மூழ்கினர்.

காமனும் இரதியும் கலந்த காட்சி ஈது
ஆம் என இயக்கனும் அணங்கு அ(ன்)னளும் வேறு
யாமமும் பகலும் ஓர் ஈறு இன்று என்னலாய்த்
தாம் உறு பெருங்களிச் சலதி மூழ்கினர்,

பொ :—மன்மதனும் இரதிதேவியும் தம்முட் புணர்ந்த தோற்றம் இதுவாம் என்று பாராட்டிக் கூறும்வண்ணம், இயக்கர் குலத் தலைவனாகிய சுந்தனும், வருத்துந் தெய்வத்தையொத்தவளாகிய தாடகையும் இரவும் பகலும் ஒரு முடிவே யில்லையாம்படி மிக்க கலவியாகிய பெரிய மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினர்கள்.

கு :—சுந்தனையும் தாடகையையும் பார்க்கும் அறிஞர்கள் மன்மதனும் ரதியும் இப்படித்தான் கூடியிருப்பர் என்று புகழும் படியாகக் கலந்து களிப்பில் மூழ்கியிருந்தனர் என்றவாறு. சலதி – கடல். தாம் – அசை: தாம் உறு-தாங்கள் அடைந்த எனலுமாம்.
(31)

### சுவாகு மாரீசர்கள் தோன்றுதல்

**373.** பற்பல நாட்செலீஇப் பதுமை போன்றொளிர்
பொற்பினள் வயிற்றிடைப் புவன மேங்கிட
வெற்பணி புயத்துமா ரீச னும்விறல்
மற்பொரு சுவாகுவும் வந்து தோன்றினர்.

பற்பல நாள் செலீஇப், பதுமை போன்று ஒளிர்
பொற்பினள் வயிற்றிடைப், புவனம் ஏங்கிட,
வெற்பு அணி புயத்து மாரீசனும், விறல்
மல் பொரு சுவாகுவும் வந்து தோன்றினர்.

பொ :—பலநாள் கழித்து, திருமகள் போல விளங்குகின்ற அழகினையுடையவளாகிய தாடகையின் வயிற்றில் உலகமெல்லாம்

வருந்த மலையொத்த தோள்களையுடைய மாரிசனும், வலிமையோடு மற்போர் செய்கின்ற சுவாகுவும் வந்து பிறந்தனர்.

கு :—பதுமை - தாமரையை இடமாகக்கொண்ட திருமகள். இவர்கள் இருவரும் எல்லா உயிர்களையுங் கொன்று தின்பவர்களாதலின் புவனம் ஏங்கிடத் தோன்றினர் என்றார். (32)

### மக்கள் வன்மைகண்டு சுந்தன் களித்தல்

**374.** மாயமும் வஞ்சமும் வரம்பி லாற்றலும்
தாயினும் பழகினர் தமக்கும் தேர்வொணா
தாயவர் வளர்வுழி யவரை யீன்றவக்
காய்சினத் தியக்கனுங் களிப்பின் மேன்மையான்.

மாயமும், வஞ்சமும், வரம்பில் ஆற்றலும்,
தாயினும் பழகினர் தமக்கும் தேர்வொணாது
ஆய், அவர் வளர்வுழி, அவரை ஈன்ற அக்
காய்சினத்து இயக்கனும் களிப்பின் மேன்மையான்.

பொ :—மாயையும், வஞ்சகமும், எல்லையற்ற வன்மையும், பெற்றதாயைக் காட்டினும் மிகுதியாகப் பழகினவர்களுக்கும் தெரிய முடியாதவண்ணம் இருப்பவர்களாகிய அம்மக்களிருவரும் வளர்கின்ற காலத்து, அவர்களைப் பெற்ற, கொதிக்கின்ற கோபத்தோடு கூடிய அச் சுந்தன் என்னும் இயக்கனும் மகிழ்ச்சியாற் செருக்குற்றவனாய்.

கு :—இப்பாடலும், வருகின்ற பாடலும் குளகம். மாயம் - மந்திரவன்மையாற் செய்யும் சூழ்ச்சி. வஞ்சம் - அறிவின் வலிமையானும், நுணுக்கத்தானும் செய்யும் சூது. தாய் பெற்ற நாள் முதல் குழந்தையின் உடல் வளர்ச்சியைக் கவனித்தது போலவே அறிவின் செப்பத்தையும் கவனித்து வந்திருப்பாள். அவளாலும், அவளைப்போலவே அகமும் புறமும் ஒத்துப் பழகியவர்களாலும் அறிந்து தெளிந்துகொள்ள இயலாத வஞ்சனை முதலியவற்றை யுடையர் எனச் சிறப்பித்தவாறு: கம்பரே 'தாயினும் பழகினரும் தன்னிலை தெரிக்கலாகா, மாயை வல்லுருவத்தான்!' எனச் சார்த்தூலனை அறிவித்தல் காண்க. களிப்பு - பெறுதற்கரிய பேறுபெற்ற காலத்து உளதாகும் உள்ளச் செருக்கு, (33)

**சுந்தன் அகத்தியராச்சிரமத்தில் மரங்களைப்பறித்து வீசுதல்**

**375.** தீதுறு மவுணர்க டீமை தீர்தற
மோதுறு கடலெலா மொருகை மொண்டிடு
மாதவ னுறைவிட மதனின் வந்துநீள்
பாதவ மனைத்தையும் பறித்து வீசினான்.

தீது உறும் அவுணர்கள் தீமை தீர்தர
மோது உறு கடல் எலாம் ஒரு கை மொண்டிடும்
மாதவன் உறைவிடம் அதனின் வந்து, நீள்
பாதவம் அனைத்தையும் பறித்து வீசினான்.

பொ:—தீமைமிக்க அசுரர்களின் பொல்லாங்கு நீங்க, (கரையை) மோதுகின்ற கடலனைத்தையும் ஒருகையால் மொண்டு குடித்த பெருந்தவத்தோனாகிய (அகத்தியன்) உறையுமிடத்தில் வந்து உயர்ந்த மரங்கள் எல்லாவற்றையும் (வேரொடும்) பறித்து (நாற்புறங்களிலும்) எறிந்தான்.

கு:—விருத்திராசுரன் அசுரக்கூட்டத்தோடு கடலில் ஒளிந்து கொண்டான். இந்திரன் அகத்திய முனிவரை வேண்டிக் கொள்ள அகத்தியர் கடல்நீர் முழுதையும் உண்டு ஒளிந்திருந்த அசுரர்களை இந்திரன் வென்றபின்பு, மீட்டும் இந்திரன் வேண்டுகோளின் வண்ணம் கடல்நீரை உமிழ்ந்தார் என்ற வரலாறு கடல் எலாம் ஒரு கைமொண்டு இடும் மாதவன் என்ற பகுதியில் அடங்கியுள்ளது. இடும் – வயிற்றில் இடுகின்ற. பாதபம் – மரம். கடல் குடித்த மாதவன் உறைவிடம் என ஆச்சிரமத்தைச் சிறப்பித்தது அவருடைய தவஆற்றலின்முன் இவனுடைய செருக்கு எம்மாத்திரம் என்பதைத் தெரிவிக்க. (34)

**அகத்தியர் விழிக்கச் சுந்தன் சாம்பராதல்**

**376.** விழைவுறு மாதவம் வெஃகி னோர்விரும்
புழைகலை யிரலையை யுயிருண் டோங்கிய
வழைமுதன் மரனெலா மடிப்ப மாதவன்
தழலெழ விழித்தனன் சாம்ப ராயினான்.

விழைவு உறு மாதவம் வெஃகினோர் விரும்பு
உழை கலை இரலையை உயிர் உண்டு ஓங்கிய
வழை முதல் மரன் எலாம் மடிப்ப, மாதவன்
தழல் எழ விழித்தனன், சாம்பர் ஆயினான்.

பொ :—சுந்தன், விரும்பியன யாவும் தாமே வந்து அடையும் பெரிய தவத்தை விரும்பிச் செய்கின்ற முனிவர்கள் விரும்புகின்ற பெண்மானும், ஆண்மானும், இரலைமானும் ஆகிய இவற்றின் உயிரை உண்டு, வானோங்கி வளர்ந்துள்ள சுரபுன்னை முதலிய மரங்கள் எல்லாவற்றையும் அழிக்க, மாதவனாகிய அகத்தியர் தீப்பொறி கனல விழித்து நோக்கினர். சுந்தன் சாம்பர் ஆயினன்.

கு :—''வேண்டிய வேண்டியாங்கெய்தலாற் செய்தவம் ஈண்டு முயலப்படும்'' என்பது குறளாதலின், விழைந்தன யாவும் தாமே வந்தடையும் பெரியதவம் என்றார். எல்லாவற்றினும் பற்றுவிட்ட முனிவர்கள் புல்லுண் வாழ்க்கையையுடைய மான்முதலியவற்றின் மீது கருணைவைத்துள்ளார்கள் என்பது காட்ட மாதவம் வெஃகினோர் விரும்பு உழை முதலியன என்றார். உழை – பெண்மான், கலை – கொம்புகளோடு கூடிய ஆண்மான், இரலை – கடம்பமான், இது இக்காலத்து 'கடம்பா' என வழங்குகிறது. (35)

### கணவன் இறந்தமைகேட்டுத் தாடகை மக்களோடு அகத்தியராச்சிரமம் அடைதல்

**377.** மற்றவன் விளிந்தமை மைந்தர் தம்மொடும்
பொற்றொடி கேட்டுவெங் கனலிற் பொங்குரு
முற்றுற முடிக்குவன் முனியை யென்றெழா
நற்றவ னுறைவிட மதனை நண்ணினாள்.

**மற்றவன் விளிந்தமை, மைந்தர் தம்மொடும்**
**பொற்றொடி கேட்டு, வெம் கனலிற் பொங்குரு,**
**'முற்றுற முடிக்குவன் முனியை' என்று எழா,**
**நற்றவன் உறைவிடம் அதனை நண்ணினாள்.**

பொ :—பொன்னாலாகிய வளையலை யணிந்த தாடகையானவள், தன்மக்களிருவருடனும் (தன்கணவனாகிய) சுந்தன் இறந்ததைக் கேட்டு, கொடிய நெருப்பைப் போலப் பொங்கி, 'அகத்தியரை அடியோடு அழிப்பேன்' என்று எழுந்து, நல்ல தவத்தையுடையவராகிய அகத்திய முனிவர் உறையுமிடத்தை அடைந்தாள்,

கு :—மற்று - வினைமாற்றின்கண் வந்தது. பொற்றொடி மைந்தர் தம்மொடும் அவன் விளிந்தமை கேட்டு, பொங்குரு, முனியை முற்றுற முடிக்குவன்' என்று எழா நற்றவன் உறைவிடமதனை நண்ணினாள் எனமுடிக்க. (36)

## தாடகையின் குமாரர்கள் அகத்தியரை அணுகுதல்

**378.** இடியொடு மடங்கலும் வளியு மேங்கிடக்
கடிகெட வமரர்கள் கதிரு முட்குறத்
தடியுடை முகிற்குலஞ் சலிப்ப வண்டமும்
வெடிபட வதிர்த்தெதிர் விளித்து மண்டவே.

இடியொடு மடங்கலும் வளியும் ஏங்கிடக்
கடிகெட அமரர்கள், கதிரும் உட்குறத்
தடி உடை முகில் குலம் சலிப்ப, அண்டமும்
வெடிபட, அதிர்த்து எதிர் விளித்து மண்டவே.

பொ :—இடியும், வடவைத் தீயும், காற்றும் அஞ்சவும், தேவர்கள் அச்சத்தால் ஒளிகெடவும், சூரியன் சந்திரன் முதலியவர்களும் அச்சம் அடையவும், மின்னலோடுகூடிய மேகக்கூட்டங்கள் நடுங்கவும், அண்டங்கள் வெடிபடவும், ஆரவாரித்துக்கொண்டு எதிராக அழைத்து (மாரீச சுவாகு இருவரும்) அகத்தியரை அணுக;

கு :—மடங்கல் - வடவைத்தீ. ஏங்கிட - அச்சத்தால் உடல் இளைக்க. கடி – விளக்கம். உட்குற - அஞ்ச. தடி – மின்னல். விளித்து – அழைத்து. மண்ட – நெருங்க.

சுபாகு மாரீசர்கள் இடியும் ஊழித்தீயும் புயற்காற்றும் அஞ்ச, தேவர்கள் ஒளிகெட, சூரிய சந்திரர் நடுங்க, மேகம் ஓட, அண்டம் வெடிக்க ஆரவாரித்து, எதிராக, அழைத்துக்கொண்டே யணுக என்பது கருத்து. (37)

## அகத்தியன் சபித்தல்

**379.** தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன்
உமிழ்கனல் விழிவழி யொழுக வுங்கரித்
தழிவன செய்தலா லரக்க ராகியே
இழிகென வுரைத்தன னசனி யெஞ்சவே.

தமிழ் எனும் அளப்பரும் சலதி தந்தவன்,
உமிழ்கனல் விழிவழி ஒழுக, உங்கரித்து,
"அழிவன செய்தலால் அரக்கர் ஆகியே
இழிக!" என உரைத்தனன், அசனி எஞ்சவே.

பொ :—தமிழ்மொழியென்னும் யாராலும் அளவிடுதற்கரிய கடலைக் கொடுத்தவராகிய அகத்திய முனிவர், கண்களின் வழியே கனல் சிந்த, உங்காரம் செய்து, 'அழியத்தக்க காரியங்களைச் செய்தலால், நீவிர் அரக்கர்களாகி இழிக' என்று, இடியும் குறையச் சபித்தார்.

கு :—தமிழ்மொழி யாராலும் அளவிடுதற்கரிய இலக்கண நுட்பமும், இலக்கியப்பரப்பும், பொருட்செறிவும் உடையது ஆதலின் அளப்பருஞ்சலதி என்று உருவகிக்கப் பெற்றது. தழற்புரை சுடர்க்கடவுள் தந்த தமிழ் தந்தான் என்பாராகலின் சலதி தந்தவன் என்றார். சலதி - கடல், உங்கரித்து – உங்காரம் என்னும் ஒலிக்குறிப்பிடைச் சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம். அதட்டி என்பதாம். அகத்தியன் சுடுசொல்லுக்கு ஆற்றாது இடியும் ஓசைகுறைய என்பதாம். அகத்தியர் அவ்விருவரையும் அரக்கராகுக எனச் சபித்தார் என்றவாறு. (38)

### தாடகைமுதலியோர் அரக்கராதல்

**380.** வெருக்கொள வுலகையும் விண்ணு ளோரையும்
முருக்கியெவ் வுயிருமுண் டுழலு மூர்க்கராம்
அரக்கர்க ளாயின ரக்க ணத்தினில்
உருக்கிய செம்பென வுமிழ்கட் டீயினர்.

**வெருக்கொள உலகையும் விண்ணுளோரையும்**
**முருக்கி எவ்வுயிரும் உண்டு உழலும் மூர்க்கராம்**
**அரக்கர்கள் ஆயினர் அக்கணத்தினில்,**
**உருக்கிய செம்பு என உமிழ்கண் தீயினர்.**

பொ :—அக்கணத்தில், உருக்கப்பெற்ற செம்பைப்போலச் சிவந்த தீயைக் கக்குகின்ற கண்களையுடையவர்களாகிய அம்மூவரும், அஞ்சும் வண்ணம் உலகங்களையும், தேவர்களையும் அழித்து எல்லாவுயிரையும் உண்டுச் சுற்றுகின்ற மூடர்களாகிய அரக்கர்கள் ஆனார்கள்.

கு :—அக்கணத்தில் உருக்கியசெம்பென தீ உமிழ் கண்ணினர், முருக்கி உண்டு உழலும் மூர்க்கராம் அரக்கர்கள் ஆயினர் எனக் கூட்டுக. வெருக்கொள – அஞ்ச. உலகு – ஆகுபெயராக உயிர்கள் மேனின்றது. கண்ணிலிருந்து வெளிப்படும் தீயினுக்கு உருக்கிய செம்பொன் ஒப்பு. (39)

### சுபாகு மாரீசர்கள் சுமாலியோடு உறவுகொள்ளுதல்

**381.** ஆங்கவன் வெகுளியு மறைந்த சாபமும்
தாங்கின ரெதிர்செயுந் தருக்கி லாமையின்
நீங்கினர் சுமாலியை நேர்ந்து நிற்கியாம்
ஓங்கிய புதல்வரென் றுறவு கூர்ந்தனர்,

ஆங்கு அவன் வெகுளியும் அறைந்த சாபமும்
தாங்கினர், எதிர் செயும் தருக்கு இலாமையின்
நீங்கினர்; சுமாலியை நேர்ந்து, 'நிற்கு யாம்
ஓங்கிய புதல்வர்' என்று உறவு கூர்ந்தனர்.

பொ :—அப்பொழுது அகத்தியமுனிவர் கோபத்தையும், அவர் கூறிய சாபத்தையும் ஏற்றுக்கொண்டனர். அதற்கு மாற்றாகத் தீமை செய்யும் வலிமையின்மையால் அவ்விடத்தை விட்டகன்றனர்; சுமாலி என்னும் அரக்கனை யடைந்து 'உனக்கு நாங்கள் சிறந்த புதல்வர்களாக இருப்போம்' என்று உறவு கொண்டாடினார்கள்.

கு :—ஆங்கு – காலச்சுட்டு. சுமாலி என்பவன் இராவணன் தாயாகிய கேகசி என்பவளுடைய தகப்பன், சுகேசன் என்னும் அரக்கனுக்கு மகன். இவன் தன்னுடன் பிறந்த மாலி, மாலியவான் இவர்களோடு முனிவர்களையும், தேவர்களையும் மற்றுமுள்ள நல்லோர்களையும் வருத்திவந்தான். தேவர்கள் வேண்டுகோளின் வண்ணம் திருமால் மாலியைக் கொன்றார். சுமாலி மாலியவானோடு பாதலத்திற்போயொளித்தான். இராவணன் பிறந்ததும் இலங்கைக்கு உரியவனாகிய குபேரன் இராவணன் சண்டைக்கு வரத் தோற்று இலங்கையை இராவணற்குக் கொடுத்துச்சென்றான். இராவணன் ஆட்சிக்காலத்துச் சுமாலியும் மாலியவானும் இலங்கை வந்தனர் என்பது வரலாறு. சுமாலி பாதலத்திருக்கும் போதுதான் சுபாகு மாரீசர்கள் உன் மக்களாவோம் எனச்சென்றனர் என்பது உணரத்தக்கது. (40)

### சுபாகு மாரீசர்கள் இராவணனுக்கு மாமனாய் உலகிற்குத் தீமைபுரிதல்

**382.** அவனெடும் பாதலத் தனேக நாட்செலீஇத்
தவனுறு தசமுகன் றனக்கு மாதுலர்
இவரெனப் புடைத்தழித் துலக மெங்கணும்
பவனனிற் றிரிகுநர் பதகி மைந்தர்கள்.

அவனொடும் பாதலத்து அனேக நாள் செலீஇத்
தவன் உறு தசமுகன் தனக்கு மாதுலர்
இவர் எனப் புடைத்து அழித்து உலகம் எங்கணும்
பவனனில் திரிகுநர் பதகி மைந்தர்கள்.

பொ :—பாதகியாகிய தாடகையின்பிள்ளைகளாகிய சுபாகு மாரீசர்கள் சுமாலியோடும் பாதலத்திற் பலநாளிருந்து, தவமிக்க பத்து முகங்களை உடையவனாகிய இராவணன் 'இவர்கள் எனக்கு நன்மாமனர் என்று பாராட்ட, எல்லாவுலகங்களையும் அடித்து, அழித்து புயற்காற்றைப்போல அலைகின்றவர்கள் ஆனார்கள்.

கு :—இராவணன், 'இவர்கள் என் மாமனார்கள்' என்று பாராட்டியதால் உலகை அடித்து அழித்துத் தடையின்றிச் சுற்றி வந்தனர் என்பதாம். பாதகி யென்பது பதகி என முதல் குறுகியது. காற்று எங்கும் தடையின்றி உலாவருதல் போல இவர்களும் எங்கும் என்றும் உலாவினர் என்பதாம். (41)

இப்பாடலின்பின், பின்வரும் பாடல் 20-ஆம் ஏட்டில் அதிகமாகக் காணப்படுகிறது.

382 (a) ஆங்கவர் போய பின்னை யரக்கியிவ் வனத்தி லெய்தி
யோங்கிய முனிவ ரோடு முற்றதோர் பகையை யுன்னித்
தீங்குறு குணத்தான் மிக்க சிறப்புடை யவர்களோடும்
ஏங்கியிவ் வுயிர்கள் சால இறந்திடத் திரிய லுற்றாள்.

**மக்களைப்பிரிந்த தாடகை இங்கு வசிக்கின்றாள் எனல்**

**383.** மிகுந்திறன் மைந்தரை வேறு நீங்குறாத்
தகுந்தொழின் முனிவரன் சலத்தை யுன்னியே
வகுந்துவின் வசுவரி வதிந்த திவ்வனம்
புகுந்தன ளழலெனப் புழுங்கு நெஞ்சினாள்.

மிகுந்திறல் மைந்தரை வேறு நீங்குறாத்,
தகும் தொழில் முனிவரன் சலத்தை உன்னியே,
வகுந்துவின் வசு அரி வதிந்தது இவ்வனம்
புகுந்தனள், அழலெனப் புழுங்கு நெஞ்சினாள்.

பொ:—ஆற்றல் மிக்க தன் பிள்ளைகளை விட்டு நீங்கி, தகுதி வாய்ந்த தவத்தொழிலையுடைய முனிவர் பெருமானாகிய அகத்தியனுடைய கோபத்தை யெண்ணி, தீயைப்போலப் புழுங்குகின்ற மனமுடைய தாடகையானவள், வழிமுழுதும் சுவாலையோடு

கூடிய அக்கினி குடிகொண்டிருக்குமிடமாகிய இந்தக்காட்டிற் புகுந்தாள்.

கு :—வகுந்து - வழி, வசு - ஒளி, (சுவாலை) அரி – நெருப்பு. (42)

### தாடகையால் இவ்வனம் வளம் அழிந்தது எனல்

**384.** உளப்பரும் பிணிப்பறு வுலோப மொன்றுமே
அளப்பருங் குணங்களை யழிக்கு மாறுபோல்
கிளப்பருங் கொடுமைய வரக்கி கேடிலா
வளப்பரு மருதவைப் பழித்து மாற்றினாள்.

உளப் பரும் பிணிப்பு அரு உலோபம் ஒன்றுமே
அளப்பு அரும் குணங்களை அழிக்கும் ஆறு போல்
கிளப்பு அரும் கொடுமைய அரக்கி கேடு இலா
வளப்பரு மருதவைப்பு அழித்து மாற்றினாள்.

போ:—மனத்தில். பேராசை நீங்காத உலோப குணம் ஒன்றுமே ஏனைய எல்லையற்ற நற்குணங்களையும் அழிப்பது போல, சொல்ல முடியாத கொடுமைகளை யுடையவளாகிய தாடகை கேடில்லாத வளம்பல நிறைந்த மருதநிலத்தை அழித்துப் பாலை வனமாக மாற்றி விட்டாள்.

கு :—உளப் பெரும்பிணிப்பு உரு எனப்பாடங் கொண்டு மனத்திற் பெருந்தொடர்பு அடையாத எனப் பொருள் கொள் வாரும் உளர். பெருந்தொடர்பாவது பெருந்தன்மையான சம்பந்தம் என்பதாம். வளம் பரு மருத வைப்பு – வளப்பத்தால் மிகுந்த மருத நிலம். (43)

### இராவணன் ஆணையால் இவள் இன்னல்செய்கின்றாள் எனல்

**385.** இலங்கையர சன்பணி
யமைந்தொரிடை யூறு
விலங்கல்வலி கொண்டெனது
வேள்விநலி கின்றாள்
அலங்கன்முகி லேயிவளிவ்
வங்கநில மெங்கும்
குலங்களொ டடங்கநனி
கொன்றுதிரி கின்றாள்.

'இலங்கை அரசன் பணி அமைந்து ஓர் இடையூரு
விலங்கல் வலி கொண்டு எனது வேள்வி நலிகின்ருள் :
அலங்கல் முகிலே! இவள் இவ் அங்க நிலம் எங்கும்
குலங்களொடு அடங்க நனி கொன்று திரிகின்ருள்.'

பொ:—மாலையையணிந்த மேகம் போன்ற இராமபிரானே! இவள் இலங்கையரசனுகிய இராவணன் கட்டளையை ஏற்று, ஒப்பற்ற பெரிய தடையாகி, மலையின் வலிமை போன்ற வலிமையால் என்னுடைய யாகத்தைக் கெடுக்கின்ருள். மற்றும், இந்த அங்க நாடு எங்கும் சென்று உயிர்களின் கூட்டமனைத்தையும் கொன்று திரிகின்ருள்.

கு :—விலங்கல் - மலை; ஆகுபெயராக, உருவத்தாலும் உறுதியாலும் ஒத்த யானையைக் காட்டிற்று. (44)

தாடகை உயிரினத்தையே ஒழித்துவிடுவாள் எனல்

386. முன்னுல களித்துமுறை
நின்றவுயி ரெல்லாம்
தன்னுண வெனக்கருது
தன்மையினள் மைந்த
என்னினி யுணர்த்துவ
தினிச்சிறிது நாளின்
மன்னுயி ரனைத்தையும்
வயிற்றினிடும் என்ருன்.

'முன் உலகு அளித்து முறை நின்ற உயிர் எல்லாம்
தன் உணவு எனக் கருது தன்மையினள், மைந்த!
என் இனி உணர்த்துவது? இனிச் சிறிது நாளில்,
மன்னுயிர் அனைத்தையும் வயிற்றின் இடும்' என்ருன்.

பொ :—'மைந்த!, பழமையான உலகங்களில் தோற்றுவிக்கப் பெற்று முறையே நிலைபெற்ற உயிர்கள் எல்லாவற்றையும் தன் உணவாகக்கருதுகின்றதன்மையை உடையவள். இனியும் அவளைப் பற்றி யறிவிக்க வேண்டியது என்ன இருக்கிறது? இன்னும் சில நாளில், நிலைபேறுடைய உயிர்களை எல்லாம் வயிற்றில் அடக்கி விடுவாள்; அவ்வளவுதான்; என்று' கூறினுர்.

கு ;—இனியும் இவள் உயிர் கொள்ளாது விட்டிடுவையாயின் எல்லா உயிர்களையும் அவள் வயிற்றில் அடக்கி விடுவாள் என்பதாம். உயிர் அடக்கி விடுதலாவது உயிரின் நிலைக்களனாகிய உடலைத் தின்றல். உயிர் தானிஆகுபெயராக உடலை யுணர்த்திற்று. உயிர் என்றும் அழியாத பொருளாதலின் மன்னுயிர் எனப்பட்டது. (45)

### தாடகை எங்கிருப்பவள் என்று இராமன் வினவுதல்

**387.** அங்கிறைவ னப்பரி சுரைப்பவது கேளாக்
கொங்குறை நறைக்குல மலர்க்குழல் துளக்கா
எங்குறைவ தித்தொழி லியற்றுபவ ளென்றான்
சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான்.

அங்கு இறைவன் அப்பரிசு உரைப்ப, அது கேளா,
கொங்கு உறை நறைக் குல மலர்க் குழல் துளக்கா.
'எங்கு உறைவது இத்தொழில் இயற்றுபவள்?' என்றான்,
சங்கு உறை கரத்து ஒரு தனிச் சிலை தரித்தான்.

பொ:—பாஞ்ச சன்யம் என்னும் சங்கு தங்குகின்ற திருக்கரத்திலே ஒப்பற்ற பெருமை வாய்ந்த வில்லை ஏந்தியவனாகிய சிராமபிரான், அப்போது விசுவாமித்திர முனிவர் அவ்வாறு சொல்ல அதனைக் கேட்டு, தேன் நிறைந்த மணத்தோடு கூடிய கூட்டமாகிய மலர்களையணிந்த குழலை யசைத்து 'இக்கொடுந்தொழிலை இயற்றுகின்றவளாகிய தாடகை தங்கியிருப்பதுஎங்கு?' என்றுவினவினான்.

கு :—இறைவன் என்றது விசுவாமித்திரரை. தனிச்சிலை தரித்தானாகிய இறைவன்கேளா என்று கொண்டுகூட்டி இராமனை உணர்த்திற்றாகக் கொள்ளுதலுமாம், சென்னி - சென்னி என்பதன் தொகுத்தல்விகாரம். சங்குறை கரத்து ஒரு தனிச்சிலை தரித்தான் என்றது பஞ்சாயுதம் தாங்கும் நிலையிலிருந்து அவதாரமாகி அனைத்தையும் விட்டு வில் ஒன்றையுமே தாங்கினான் என்னுங் குறிப்புத் தருகின்றது. 'சங்கும் ஆழியும் விட்டு அம்பு வில் அங்கைகொண்டாய்' என்னும் அரங்கத்தந்தாதிப் பகுதியும் ஈண்டு நினைவுகூர்தற்கு உரியது. சங்குறை கரம் என்றது ஈண்டு இடக்கரத்தை யுணர்த்தும். வில்லை வாளா போகட்டுக் கிடப்பது இடதுதோளிலே யாதலின் இங்ஙனம் கூறினர் என்க. (46)

## தாடகை வருதல் 388—389

**388.** கைவரை யெனத்தகைய காளையுரை கேளா
ஐவரை யகத்திடை யடைத்தமுனி யைய
இவ்வரை யிருப்பதவ ளென்பதனின் முன்போர்
மைவரை நெருப்பெரிய வந்ததென வந்தாள்,

கைவரை எனத் தகைய காளை உரை கேளா,
ஐவரை அகத்திடை அடைத்த முனி, 'ஐய!
இவ்வரை இருப்பது அவள்' என்பதனின் முன்பு, ஓர்
மைவரை நெருப்பு எரிய வந்தது என வந்தாள்.

பொ :—கையோடு கூடிய மலையாகிய யானை என்று சொல்லத் தக்க வலிமை யுற்ற காளைப்பருவத்தராகிய சிராமன்,விசுவாமித்ரர் கூறிய வார்த்தைகளைக்கேட்டு, ஐம்பொறிகளாகிய கள்ளர்கள் ஐவரையும் வெளிப்படாதவாறு, மனத்திலேயே அடைத்து வைத்திருக்கின்ற விசுவாமித்திர முனிவரானவர், ஐய! அவள் இருப்பது இம்மலையிற்ருன் என்பதற்கு முன், ஓர் கரியமலை, நெருப்புப்பற்றி எரிந்து கொண்டே வந்தாற்போல வந்தாள்.

கு :—கைவரை எனத்தகைய காளை – யானையை ஒத்த ராமன். கைவரை–யானை;கையோடு கூடிய மலைபோன்றிருத்தலின். காளை என்பது பருவங்குறித்தபெயராக இராமனை யுணர்த்திற்று. ஐவரை – மெய்வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளைக் கள்வராக உருவகித்து எண்ணினராதலின் ஐவர் எனப் பலர் பால் விகுதி கொடுத்து ஓதினர். அகத்திடையடைத்தலாவது. 'சென்றவிடத்தாற் செலவிடாது நன்றின்பால் உய்த்தல்.' தாடகைமேனி கரியமலைக்கும், அவள் தலைமயிர், நெருப்பெரிவதற்கும் ஒப்பு. (47)

**389.** சிலம்புகள் சிலம்பிடை செறித்தகழ லோடு
நிலம்புக மிதித்தன ணெளித்தகுழி வேலைச்
சலம்புக வனற்றறுக ணந்தகனு மஞ்சிப்
பிலம்புக நிலைக்கிரிகள் பின்தொடர வந்தாள்.

சிலம்புகள் சிலம்பு இடை செறித்த கழலோடு
நிலம்புக மிதித்தனள்; நெளித்த குழி வேலைச்
சலம்புக, அனல் தறுகண் அந்தகனும் அஞ்சிப்
பிலம்புக, நிலைக்கிரிகள் பின் தொடர, வந்தாள்.

பொ :—தாடகை, சிலம்புகளின் உள்ளே, மலைகளைச் (பரலாக) செறித்து அணியப்பெற்ற காலோடு பூமி உள்ளழுந்தும்படியாக மிதித்தனள். அதனால் குழிந்த குழிகளில் கடல் நீர் முழுதும் புகவும், நெருப்புப்போலும் கொடிய அஞ்சாமையோடு கூடிய யமனும் பயந்து மலைக்குகைகளில் போய் மறையவும், இடம் விட்டுப் பெயராத மலைகளுங்கூட இவள் வருகின்ற வேகத்திற் பின் தொடர்ந்து வரவும் (தாடகை) வந்தாள்.

கு :—' சிலம்பிடை சிலம்பு செறித்த கழல் ' எனக் கூட்டுக. பூமி நெளிந்து குழிவதற்கு ஏது மலைகளைப் பருக்கைகளாகப் போடப்பட்ட சிலம்பணியை யணிந்த கால்களால் அவள் பூமியை மிதித்தது. அங்ஙனம் மிதிக்க அதனால் பூமியிற்குழி விழுந்தது. அதில் கடல் நீர் முழுதும் விழுந்தது என்பது கருத்து. தறுகண் – அஞ்சாமை. அந்தகன் – அனைவருக்கும் இறுதியைச் செய்பவன் என்பதாற் காரணப்பெயர். (48)

### தாடகை சினத்தோடு விழித்துப்பார்த்தல்

390. இறைக்கடை துடித்தபுரு
வத்தளெயி றென்னும்
பிறைக்கடை பிறக்கிட
மடித்தபில வாயள்
மறைக்கடை யரக்கிவட
வைக்கன லிரண்டாய்
நிறைக்கடல் முளைத்தென
நெருப்பெழ விழித்தாள்.

இறைக்கடை துடித்த புருவத்தள், எயிறு என்னும்
பிறைக்கடை பிறக்கிட மடித்த பில வாயள்,
மறைக் கடை அரக்கி, வடவைக்கனல் இரண்டாய்
நிறைக் கடல் முளைத்தென நெருப்பு எழ விழித்தாள்.

பொ :—சிறிது துடிக்கின்ற கடைப்புருவத்தையுடையவளும் பல் என்னும் இருபிறை இரண்டு கடைவாயினும் விளங்க மடித்த பிலம்போன்ற வாயையுடையவளும், வேதவொழுக்கங்களுக்குப் புறம்பான ஒழுகலாற்றினையுடைய அரக்கியும் ஆகிய தாடகையானவள், வடவாமுகாக்கினி இரு கூறாகி நிறைதவறாத கடலில் முளைத்தாற்போல (இரு கண்களிலிருந்தும்) நெருப்புச் சிந்த விழித்துப் பார்த்தாள்.

கு :—இறை - சிறுமையென்னும் பொருளில் வந்த உரிச்சொல். துடித்த புருவக் கடையள் எனப் பிரித்துக் கூட்டுக. பிறங்கிட என்பது செய்யுள் ஓசைநயம்பற்றிப் பிறக்கிட என வலித்தல்விகாரம்பெற்றது. அவளது கரியமேனி கடலுக்கும், அவள் இரு கண்ணினின்று எழும் தீ வடவாமுகாக்கினிக்கும் உவமை என்பர் சிலர். ஈண்டு கண்ணிற்குக் கடலும், அதிலெழும் கோபத் தீ வடவைத் தீக்கும் ஒப்பென்றுரைக்கப்பெற்றது. பெண்கள் கண்ணுக்குக் கடலே உவமித்தல் மரபு; கடலுக்கு நிறையாவது இறைவனுணேவழிநின்று எல்லேகடவாத்தன்மை. (49)

### தாடகை ஆர்ப்பரித்தல்

391. கடங்கலுழ் தடங்களிறு
கையொடுகை தெற்று
வடங்கொள நுடங்குமிடை
யாண்மறுகி வானேர்
இடங்களு நெடுந்திசையு
மேழுலகு மெங்கும்
அடங்கலு நடுங்கவுரு
மஞ்சநனி யார்த்தாள்.

**கடம் கலுழ் தடம் களிறு கையொடு கை தெற்று**
**வடம் கொள நுடங்கும் இடையாள், மறுகி வானேர்**
**இடங்களும் நெடுந்திசையும் ஏழ் உலகும் எங்கும்**
**அடங்கலும் நடுங்க, உரும் அஞ்ச, நனி ஆர்த்தாள்.**

பொ :—மதநீர் ஒழுகுகின்ற பெரிய யானேகளைத் துதிக்கையோடு துதிக்கை பொருந்தப் பிணேத்து மேகலே முதலிய வடங்களாகக்கொள்ள அதனுல் அசைந்தாடுகின்ற இடையையுடையவளாகிய தாடகை, தேவருலகும் நீண்ட திசைகளும் ஏழாகிய உலகங்களும் எங்கும் எல்லாம் கலங்கி நடுங்க இடியேறும் அஞ்சும்படியாக ஆரவாரம் செய்தாள்.

கு :—கடம்-மதநீர். வடம்-மேகலே முதலிய வடங்களாலாகிய இடுப்பு அணிகள். யானேகளேக் கையோடு கைபொருந்தக் கட்டி எண் கோவைவடம், பதினுறுகோவைவடமுதலிய அணிகளாகக் கொள்ள, அதனுல், இவள் இடை அசைந்தாடுகின்றதன்றி

இயல்பாக ஆடாத இடையென்று அணிகூறுவார் போன்று இடையின் உறுதியும் உரைத்தவாறு. மறுகி நடுங்க எனக் உரும் - கூட்டுக. இடி. (50)

தாடகை இராமலக்குமணர்களைப் பார்த்துப் பேசுதல்
392—393

**392.** ஆர்த்தவரை நோக்கிநகை
செய்தெவரு மஞ்சக்
கூர்த்தநுதி முத்தலைய
யிற்கொடிய கூற்றைப்
பார்த்தெயிறு தின்றுபகு
வாய்முழை திறந்தோர்
வார்த்தையுரை செய்தன
ளிடிக்குமழை யன்னாள்.

ஆர்த்து, அவரை நோக்கி, நகை செய்து, எவரும் அஞ்சக்,
கூர்த்த நுதி முத்தலை அயில் கொடிய கூற்றைப்
பார்த்து, எயிறு தின்று, பகுவாய் முழை திறந்து, ஓர்
வார்த்தை உரை செய்தனள், இடிக்கும் மழை அன்னாள்.

பொ :—இடிக்கும் மேகத்தை ஒத்தவளாகிய தாடகையானவள் அவ்வண்ணம் ஆரவாரித்து, இராம லக்குமணர்களைப் பார்த்து ஏளனச் சிரிப்புச் சிரித்து, எல்லாரும் அஞ்சும்படி, கூரிய நுனியையும் மூன்றாகிய தலைகளையும் உடைய சூலமாகிய கூற்றுவனை நோக்கிப் பற்களைக் கடித்து, பிளவுபட்ட வாயாகிய குகையைத் திறந்து ஒரு வார்த்தை சொன்னாள்.

கு :—இடிக்கு மழையன்னாள் என்றது நிறத்தாலும், ஒலியாலும் ஒத்த தன்மைபற்றிக் கூறியது. (51)

**393.** கடக்கரும் வலத்தெனது
காவலிதில் யாவும்
கெடக்கரு வறுத்தன
னினிச்சுவை கிடக்கும்

விடக்கரி தெனக்கருதி
யோவிதிகொ டுந்தப்
படக்கருதி யோபகர்மின்
வந்தபரி சென்றே.

'கடக்க அரும் வலத்து எனது காவல் இதில் யாவும்
கெடக் கரு அறுத்தனன்; இனிச் சுவை கிடக்கும்
விடக்கு அரிது எனக் கருதியோ? விதி கொடு உந்தப்
படக்கருதியோ? பகர்மின் வந்த பரிசு!' என்றே.

பொ:—இப்பகுதி முழுதும் யாராலும் வெல்லுதற்கரிய வன்மையையுடைய எனது காவலில் உள்ளதாகும். இதில் எல்லாம் அழிந்துபோக, விதையும் இல்லையாம்படி கருவறுத்து விட்டேன், ஆதலால் நீவிர் வந்த தன்மை, இனிச் சுவையோடு கூடிய ஊன் இவளுக்குக் கிடைப்பது அரிது என்று எண்ணியோ? அல்லது ஊழ்வினை பிடர்பிடித்து உந்த இறப்பை விரும்பியோ? சொல்லுங்கள் என்று.

கு:—இனி எதுவும் முளையாதவண்ணம் செய்துவிட்டேன் என்பாள் கருவறுத்தனன் என்றாள். இரக்கமோ என்பாள், தாடகையாகிய இவளுக்கு இனிச் சுவையூன் கிடைக்காதே என்று வந்தீர்களோ என்றும், அறியாமையே என்பாள், இருந்துவருந்து வானேன்? வலியச் சென்று மரணம் அடையலாம் என்று வந்தீர் களோ என்றும் ஏளனம் செய்தாள் என்றவாறு. விடக்கு - ஊன். என்று என்பது வரும்பாடலில் உரைத்தனன் என்பதோடு முடியும். (52)

தாடகை இராமலக்குமணர்களை நோக்கிச் சினத்தல்

394. மேகமவை யிற்றுக
விழித்தனள் புழுங்கா
மாகவரை யிற்றுக
வுதைத்தனண் மதித்திண்
பாகமெனு முற்றெயி
றதுக்கியயில் பற்று
ஆகமுற வுய்த்தெறிவ
னென்றெதி ரழன்றாள்.

மேகம் அவை இற்று உக விழித்தனள்; புழுங்கா
மாக வரை இற்று உக உதைத்தனள்; மதித் திண்
பாகம் எனும் முற்று எயிறு அதுக்கி, அயில் பற்று,
'ஆகம் உற உய்த்து எறிவன்' என்று எதிர் அழன்றாள்.

பொ :—(வானிலுள்ள) மேகங்கள் தம் தன்மைகெட்டுச் சிதற (அனல் கக்கும்) விழிகளால் விழித்துப் பார்த்தாள்; திசைகளிலுள்ள எட்டு மலைகளும் உடைந்து உதிரும்படியாக மனம் வெதும்பிக் காலால் உதைத்தாள்; சந்திரனுடைய உறுதிவாய்ந்த இரு பிளவுகள் என்று சொல்லத்தக்க முதிர்ந்த பற்களைக் கடித்துச் சூலத்தை ஏந்தி இவர்கள் மார்பிலே பொருந்த எய்து, இவர்களைக் கொல்வேன் என்று, அவர்களுக்கு எதிர்சென்று கோபித்தாள்,

கு :—மேகம் அவை - இவை ஒரு சொல் நீர்மைய. இவள் விழி தீ கக்குவன ஆதலின் நீரும், அனலும், காலும் என்ற மூன்றன் கூட்டமாகிய மேகங்கள் தன்மைகெட்டுச் சிதறிப்போயின என்பதாம். (53)

### இராமன் அவளைப் பெண்ணென எண்ணிக் கணைதொடாமை

395\. அண்ணன்முனி வற்கது
கருத்தெனினு மாவி
உண்ணென வடிக்கணை
தொடுக்கில னுயிர்க்கே
துண்ணெனும் வினைத்தொழி
 றொடங்கியுள ளேனும்
பெண்ணென மனத்திடை
பெருந்தகை நினைந்தான்.

அண்ணல் முனிவற்கு அது கருத்து எனினும், 'ஆவி
உண்' என வடிக்கணை தொடுக்கிலன்; உயிர்க்கே
துண் எனும் வினைத் தொழில் தொடங்கி உளளேனும்,
பெண் என மனத்திடை பெருந்தகை நினைந்தான்.

பொ :—பெருமையிற் சிறந்த முனிவராகிய விசுவாமித்திரற்கு அவளைக் கொல்லுதலாகிய அது உடன்பாடாயினும், (இராமன், 'அம்பே! நீ சென்று) இவள் உயிரை உண்ணுக' என்று கூறிய, அம்புகளைத் தொடுத்தான் அல்லன். திடுக்கிடும்படியான கொலை

வினையை உயிருக்கே செய்யத்தொடங்கினுள் ஆயினும், பெருந் தகுதிவாய்ந்த இராமபிரான் இவள் ஒரு பெண்தானே என மனத்தில் எண்ணினுன்.

கு :—'என் இனி யுணர்த்துவது இனிச் சிறிது நாளில் மன்னுயிர் அனைத்தையும் வயிற்றில் இடும்' என்று விசுவாமித்திரன் கூறியதனை உட்கொண்டு, 'முனிவர்க்கு அது கருத்தெனினும்' என்று கூறியவாறு. 'ஆவி உண்' என்றது இராமன் அம்மை நோக்கிக் கூறும் கூற்றை உட்கொண்டு கூறியது. வடி – கூர்மை. துண்ணெனும் வினைத்தொழில் உயிர்க்கே தொடங்கிஉளளேனும் எனக் கூட்டுக. வினையால் ஆணுயினும் உருவாற் பெண் என்பதை இராமன் உணர்ந்தமைக்கு ஏது அவனது பெருந்தன்மை என்பார் பெருந்தகை என்று கூறினர், (54)

## முனிவன் இராமன் கருத்தறிந்து மொழிதல்.

396. வெறிந்த செம்மயிர்
வெள்ளெயிற் ருடனை
எறிந்து கொல்வெனென்
றேற்கவும் பார்க்கிலாச்
செறிந்த தாரவன்
சிந்தைக் கருத்தெலாம்
அறிந்து நான்மறை
யந்தணன் கூறுவான்.

வெறிந்த செம்மயிர் வெள் எயிற்ருள், 'தனை
எறிந்து கொல்வென்' என்று ஏற்கவும் பார்க்கிலாச்
செறிந்த தார் அவன், சிந்தைக் கருத்து எலாம்
அறிந்து, நால் மறை அந்தணன் கூறுவான்.

பொ :—முடைநாற்றம் வீசுகின்ற சிவந்த மயிரையும் வெண்மையான பற்களையும் உடைய தாடகை 'தன்னை எறிந்து கொல்வேன் என்று எதிர்த்துவரவும், அதனைப் பொருட்படுத்தாத நெருங்கிய மாலையையணிந்த இராமபிரானுடைய மனக்கருத்தெல்லாவற்றையும், நான்கு வேதங்களையும் உணர்ந்த அந்தணனுகிய விசுவாமித்திரன் தெரிந்துகொண்டு (பின்வருமாறு) கூறுவான் ஆயினன்.

கு :—வெறிந்த – வெறிமணம் பொருந்திய. வெறி – முடைநாற்றம். வெறியென்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த பெய

ரெச்சம் வெறிந்த என்பது. இனி வெறிந்த என்பதற்குச் செறிந்த எனப் பொருள் கூறுவாரும் உளர். மேனியின் கருமை மிகுதியால் எயிறுகளின் வெண்மை விளங்கித் தோன்றுதலின் 'வெள் எயிற்ருள்' என்ருர். செம்மயிர் வெள்ளெயிறு என முரண் வருதல் காண்க. ஏற்கவும் – எதிர்த்து வரவும். வருஞ் செய்யுளில் விசுவாமித்திரன் அறிவிப்பன யாவும் விதியொடு பட்டனவே என இராமன் துணிய இங்கு விசுவாமித்திரனை 'நான் மறையந்தணன்' எனக் குறித்தமை காண்க. (55)

### தாடகையைப் பெண்ணல்லள் எனல்

**397.** தீதென் றுள்ளவை
யாவையுஞ் செய்தெமைக்
கோதென் றுண்டில
ளித்தனை யேகுறை
யாதென் றெண்ணுவ
திக்கொடி யாளையும்
மாதென் றெண்ணுவ
தோமணிப் பூணினுய்.

'தீது என்று உள்ளவை யாவையும் செய்து, எமைக்
கோது என்று உண்டிலள் : இத்தனையே குறை :
யாது என்று எண்ணுவது ? இக்கொடியாளையும்
மாது என்று எண்ணுவதோ ? மணிப் பூணினுய் !'

பொ :—'இரத்தினங்கள் இழைத்த அணிகளை யணிந்த இராமனே! உலகில் தீமை என்றுள்ளன எல்லாவற்றையும் செய்து, சக்கை யென்று எண்ணி எங்களை உண்ணுமல் விட்டிருக்கின்ருள். இவ்வளவே குறை. இவள் செயலைப் பற்றி என்ன என்று எண்ணுவது ? இத்தகைய கொடியவளையும் பெண் என்ரு நினைப்பது ?'

கு :—தீது என்று உள்ளவை-வேத முதலிய விதிநூல்களிலும் உலகியல்வழக்கங்களிலும், சமுதாய அமைப்பிலும் தீமையென்று கூறப்பட்டவை எல்லாம் என்றவாறு. முனிவர்களாகிய நாங்கள் விரதங்களாலும், தவத்தாலும் ஊன்வற்றி இளைத்தவர்களாதலின் சாரமற்றவர்கள் என்று உண்ணுமல் ஒதுக்கிவிட்டாள் என்பார். 'கோது என்று எம்மை உண்டிலள்' என்ருர். சாரமான உடலையே

இவள் விரும்புவாள் என்பதை "சுவை கிடக்கும் விடக்கு அரிது எனக் கருதியோ வந்த பரிசு" என அவள் கூறுவதாலும் அறியலாம். உருவங்கொண்டு எண்ணலாகாது. செயல் கண்டு சிந்தித்துத் தண்டிக்கவேண்டும் என்பது கருத்து. (56)

## ஆடவர் ஆண்மை இவள்பேர்சொன்னாலும் அகலும் எனல்

**398.** நாண்மை யேயுடை
யார்ப்பிழைத் தானகை
வாண்மை யேபெற்ற
வன்றிற லாடவர்
தோண்மை யேயிவள்
பேர்சொலத் தோற்குமால்
ஆண்மை யென்னும
தாரிடை வைகுமே.

'நாண்மையே உடையார்ப் பிழைத்தால் நகை;
வாண்மையே பெற்ற வன்திறல் ஆடவர்
தோண்மையே இவள் பேர் சொலத் தோற்குமால்;
ஆண்மை என்னும் அது, ஆர் இடை வைகுமே?'

பொ :—'நாணம் உடையவர்களாகிய பெண்களைக் கொன்றால் அச்செயல் சிரிப்பிற்கு இடமாம். வாள் வீரத்தைப்பெற்ற மிக்க வலிமையையுடைய ஆடவர்களின் தோள்வீரமானது இவளுடைய பேரைச் சொன்ன அளவில் தோற்றுவிடுமாயின், ஆண்மை என்னும் அக்குணம் யாரிடம் அமைந்திருக்குமோ?'

கு :—பெண்களைக் கொல்வது நகைப்பிற்கு இடந்தான். இவள் பேரைச் சொன்னாலே ஆடவர் ஆண்மையெல்லாம் அகலுமாயின் ஆண்மை இருப்பது இவளிடமா? ஆடவர்களிடமா? எண்ணிப் பார்க்க என்பதாம். நாணமுடையாரைக் கொன்றால் என்றது இவள் நாணம் உடையவளல்லள்; இவளைக் கொல்வது நகையாகாது எனக் குறிப்பித்தவாறு. பிழைத்தல் - தவறுசெய்தல். ஈண்டு இலக்கணையாகப் பெருந்தவறாகிய கொல்லுதலை யுணர்த்திற்று.

இங்ஙனம் அன்றி முதலடிக்கு 'நாண்மையேயுடையார் பிழைத்தார்' எனப் பாடங்கொண்டு, இவளொடுபொருது, தோற்று வெட்கியவர்களே உயிர்பிழைத்தவர்கள் என உரைப்

பாரும் உளர். இப்பாடத்தில் நகை என்பதனை வாண்மைக்கு அடைமொழியாக்கி விளக்கத்தையுடைய வாட்டொழில் எனப் பொருள் கொள்க, வசத்தது ஆகும் எனற்பாலது வசத்தாகும் என விகாரப்பட்டது. (57)

### ஆடவர்க்கும் தாடகைக்கும் வேறுபாடின்றெனல்

399. இந்திர னிடைந் தானுடைந் தோடினர்
தந்தி ரம்படத் தானவர் வானவர்
மந்த ரம்மிவ டோளெனின் மைந்தரோ
டந்த ரம்மினி யாதுகொ லாமையா.

'இந்திரன் இடைந்தான்; உடைந்து ஓடினர்
தந்திரம் படத் தானவர் வானவர்;
மந்தரம் இவள் தோள் எனின், மைந்தரோடு
அந்தரம் இனி யாது கொல் ஆம்? ஐயா!'

பொ:—'(இவள்முன் நிற்கமாட்டாமையால்) இந்திரன் தோற்ருன்; அசுரர்களும், தேவர்களும் படைகள் உடையத் தோற்று ஓடினர்கள்: இவளுடைய தோள்கள் மந்தரமலையை ஒத்தன என்ருல், வலிமையுடைய ஆடவர்களோடு இவளுக்கு இனி வேறுபாடியாதோ? ஐய!'

கு:—இவள் தோளை மந்தரமலைக்கு ஒப்பு உரைத்தமையின் மந்தரம் பாற்கடலைக் கடைந்ததுபோல இவள் தோள்கள் சேனைக் கடலைக் கலக்கும் என்றவாறும். மைந்தர்–வலிமையுடைய ஆடவர் என, காரணம் விளங்க உரைத்தல்வேண்டும். மைந்து – வலிமை, அந்தரம் – வேறுபாடு. இவளிடம் காண்பது ஆண்மையே, பெண்மையன்று என்பதாம். நான்காம் அடிக்கு இவ்வாறன்றி அந்தரம் மைந்தரோடு ஆண்மையாது? என்று கொண்டுகூட்டி, 'முடிவாக ஆண்மக்களிடத்தில் ஆண்மை ஏது? எல்லா ஆண்மையும் இவளிடமே' என்று உரைப்பாரும் உளர், (58)

### விசுவாமித்திரர் மேலுஞ்சில கூறுதல்

400. மன்னர் மன்னவன் காதல மற்றுமொன்
றின்னம் யானுரைக் கின்றதி யாதெனின்
முன்னோர் கால நிகழ்ந்த முறைமையீ
தென்ன வோதலுற் ருன்றவத் திறலான்.

'மன்னர் மன்னவன் காதல! மற்றும் ஒன்று
இன்னம் யான் உரைக்கின்றது யாது எனின்,
முன்னோர் காலம் நிகழ்ந்த முறைமை ஈது'
என்ன ஓதலுற்றான் தவத்து ஈறிலான்.

பொ:—எல்லையற்ற தவத்தையுடைய விசுவாமித்திரன், 'சக்கரவர்த்தித் திருமகனே! வேறொன்று மேலும் யான் சொல்வது யாது எனின், முன்னொரு காலத்து நிகழ்ந்த முறையாகும், இது' என்று சொல்லத் தொடங்கினான்.

கு:—இது முதல் நான்கு கவிகள் சில பிரதிகளில் இல்லை தவத்து ஈறு இலான் என்றது பன்னீராயிரம் பன்னீராயிரம் ஆண்டுகளர்க்ப் பல ஆண்டுகள் தவம்செய்தவனாதலின். (59)

திருமால் கியாதியைக்கொன்ற வரலாறு கூறுதல்

401. பிருகு வென்னும் பெருந்தவன் றன்மனை
வருக யற்கட் கியாதிவல் லாசுரர்க்
குருகு காத லுறவுற வாதலே
கருதி யாவி கவர்ந்தன னேமியான்.

'பிருகு என்னும் பெருந்தவன்தன் மனை,
வரு கயல் கண், கியாதி, வல் ஆசுரர்க்கு
உருகு காதல் உற உறவு ஆதலே
கருதி ஆவி கவர்ந்தனன் நேமியான்.'

பொ:—பிருகு என்னும் பெரிய தவத்தினையுடையவன் மனைவியாகிய, கயல் மீனையொத்த கண்களையுடைய கியாதி என்பவள், வலிய அசுரர்கள்மாட்டு இரக்கத்தால் அன்புற, அவள் அவர்களுக்குத் துணையாயினமையை எண்ணித் திருமால் அவள் உயிரைக் கவர்ந்தார்.

கு:—வல் அசுரர் என்பதில் அகரம் நீண்டு வல்லாசுரர் என ஆயிற்று. முன்னொருகாலத்துத் தேவர்கட்கும் அசுரர்க்கும் பெரும் போர் நடந்தது. திருமால் அசுரர்களை வெருட்டினர்; அவர்கள் வெருண்டோடிப்போய்ப் பிருகுமுனிவர் ஆச்சிரமத்திலே நுழைந்தனர். பிருகுமுனிவர் பத்தினியாகிய கியாதி என்பவளிடம் அடைக்கலம்புகுந்தனர். அவள் இரங்கி அசுரர்களை மறைத்து வைத்துக் காத்தனள். திருமால் கியாதியைப் பலவாறு வேண்டிக் கொண்டும் அடைக்கலம் புகுந்த அவர்களைக் காட்டிக்கொடுக்க

மறுத்தனள். திருமால் சினங்கொண்டு அவள் தலையை முன்னர்க் கொய்தார், அசுரர்கள் இருக்குமிடம் அறிந்து பின் அவர்களைக் கொன்றார் என்பது வரலாறு. (60)

### இந்திரன் குமதியைக் கொன்ற வரலாறு கூறுதல்

**402.** வான கந்தனின் மண்ணினின் மன்னுயிர்
போன கந்தனக் கென்றெணும் புந்தியள்
தான வள்கும திப்பெய ராடனை
ஊனொ ழித்தனன் வச்சிரத் தும்பர்கோன்.

'வானகம் தனில், மண்ணினின், மன்னுயிர்
போனகம் தனக்கு என்று எணும் புந்தியள்,
தானவள், குமதிப் பெயராள் தனை
ஊன் ஒழித்தனன் வச்சிரத்து உம்பர்கோன்.'

பொ :—'தேவருலகினும், பூவுலகினும் உள்ள உயிர்கள் அனைத்தையும் தனக்கு உணவென்று கருதும் புத்தி படைத்தவளும் அரக்கியும் ஆகிய குமதியென்னும் பெயருடையவளை, இந்திரன் வச்சிராயுதத்தால் உடலை நீக்கினான்.'

கு :—ஊன் ஒழித்தனன் - கொன்று உடலையும் உயிரையும் வேறுபிரித்தான் என்பதாம். (61)

### திருமாலுக்கும் இந்திரனுக்கும் தீமையாவிளைந்தது ? எனல்

**403.** ஆத லாலரிக் காகண் டலன்றனக்
கோது கீர்த்தியுண் டாயவல் லாதிடை
ஏத மென்பன வெய்திய வோசொலாய்
தாத டர்ந்து தயங்கிய தாரினாய்.

'ஆதலால், அரிக்கு, ஆகண்டலன் தனக்கு,
ஓது கீர்த்தி உண்டாயது அல்லாது, இடை
ஏதம் என்பன எய்தியவோ ? சொலாய் !
தாது அடர்ந்து தயங்கிய தாரினாய் !'

பொ :—'மகரந்தங்கள் செறிந்து விளங்குகின்ற மாலையை யுடைய இராமனே! ஆதலால், திருமாலுக்கும், இந்திரனுக்கும்,

எல்லாராலும் பாராட்டப்பெறுகின்ற கீர்த்தியுண்டாயினவே அல்லாமல், இடையில் குற்றம் என்பன எவையேனும் எய்தினவா? நீயே சிந்தித்துச் சொல்லுக.'

கு :—பெண் கொலையால் அவ்விருவர்க்கும் விளைந்தன புகழே. அங்ஙனமாக இவள் பெண்ணுமல்லள்; இவளைக் கொல்லின் புகழன்றிக் குற்றம் விளைதற்கு இடமேயில்லை; என இராமபிரானைத் தெளிவித்தவாறு. ஆகண்டலன்-மலைகளைக் கண்டம் செய்தவன் என்பதாம். மலைகளைச் சிறகரிந்த வரலாறு ஒட்டி எழுந்த காரணப் பெயர் இது. (62)

## இவள் பெண் அல்லள் எனல்

404. கறங்க டற்றிகி ரிப்படி காத்தவர்
பிறங்க டைப்பெரி யோய்பெரி யோரொடும்
மறங்கொ டி.த்தரை மன்னுயிர் மாய்த்துநின்
றறங்கெ டுத்தவட் காண்மையும் வேண்டுமோ.

'கறங்கு அடல் திகிரிப் படி காத்தவர்
பிறங்கடைப் பெரியோய்! பெரியாரொடும்
மறம் கொடு இத்தரை மன்னுயிர் மாய்த்து, நின்று,
அறம் கெடுத்தவட்கு, ஆண்மையும் வேண்டுமோ!'

பொ :—'ஒலிக்கின்ற வலிய சக்கரத்தால் உலகத்தைக் காத்த இட்சுவாகு வமிசத்தில் உதித்த பெரியோனே! வீரங்கொண்டு; இப்பூமியிலுள்ள நிலைபெற்ற உயிர்கள் எல்லாவற்றையும் பெரியோர்களோடும் அழித்து, தான்மட்டும் அழியாதுநின்று. புண்ணியச் செயல்களை அழித்த தாடகைக்கு ஆண்வடிவமும் வேண்டுமோ?' வேண்டாம்.

கு :—திகிரி – ஆணைச்சக்கரம். படி – பூமி. பிறங்கடை – வழித்தோன்றல். உலகவர் அனைவரும் பாராட்டொலியைச் செய்கின்ற கடக்கமுடியாத வலிமையோடு கூடிய ஆணைச்சக்கரம் என்பதாம்; எங்கும் சுழல்கின்ற வலிய ஆணை என்றுமாம். இவளுக்குப் புண்ணிய பாவம் இல்லை என்பார் 'அறங்கெடுத்தவட்கு' என்று கூறினர். ஆண்மை - ஆண்வடிவம்; ஆகுபெயர். இத்துணைக் கொடுமை செய்தும் இவளைக் கொல்ல உனக்குத் தடையாக இருப்பது இவள் வடிவுஒன்றுதானே, அதனைப் பற்றிச் சிறிதும் சிந்திக்க வேண்டாம் என்பதை விளக்க 'ஆண்மையும் வேண்டுமோ' என்றார். (63)

இவள் கூற்றினும் கொடியள் எனல்

405. சாற்று நாளற்ற தெண்ணித் தருமம்பார்த்
தேற்றும் விண்ணென்ப தன்றி யிவளைப்போல்
நாற்றங் கேட்டலுந் தின்ன நயப்பதோர்
கூற்றுண் டோசொலாய் கூற்றுறழ் வேலினாய்.

'சாற்றும் நாள் அற்றது எண்ணித், தருமம் பார்த்து,
ஏற்றும் விண் என்பது அன்றி, இவளைப் போல்.
நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பது ஓர்
கூற்று உண்டோ? சொலாய்! கூற்று உறழ் வேலினாய்!'

பொ :—'சொல்லப்படுகின்ற வாழ்நாள் உலந்ததை எண்ணி, தருமராசன் கட்டளையை நோக்கி (உயிரைப் பிரித்து) விண்ணில் ஏற்றிவிடும் என்பதல்லாமல், நாற்றத்தை உணர்தலும் தின்ன விரும்புகின்ற ஒரு யமன் உண்டோ! யமனை ஒத்த வேற்படையை உடையவனே! நீ சொல்.'

கு :—"சாற்று நாளற்றதென்று தருமராசற்கா வந்த - கூற்றினைக்குமைப்பர் போலும்" என்ற அப்பர் தேவாரப் பாடலையும் நோக்குக. (64)

இவளைப் பெண் எனல் எளிமையாம் என்றல்

406. மன்னும் பல்லுயிர் வாரித்தன் வாய்ப்பெய்து
தின்னும் புன்மையிற் றீமையெ தோவைய
பின்னுந் தாழ்குழற் பேதைமைப் பெண்ணிவள்
என்னுந் தன்மை யெளிமையின் பாலதே.

'மன்னும் பல் உயிர் வாரித் தன் வாய்ப் பெய்து
தின்னும் புன்மையின் தீமை எதோ? ஐய!
பின்னும் தாழ் குழல் பேதைமைப் பெண் இவள்
என்னும் தன்மை எளிமையின் பாலதே!'

பொ:—'ஐய! நிலைபேறுடைய பல உயிர்களையும் அள்ளியள்ளித் தன் வாயிற் கொட்டிக்கொண்டு தின்கின்ற இந்த இழிதகைமையைக் காட்டிலும் தீயசெயல் எதுவோ? இத்தகைய இவளை, மீட்டும் தாழ்ந்த கூந்தலையுடைய பேதமைக் குணம்நீங்கப் பெறாத

பெண் என்று கூறுந்தன்மையானது அறியாமையின்பாற்பட்டதே யாம்.'

கு :—உயிர் வாரித் தன் வாய்ப்பெய்து என்றது உடலிலிருந்து உயிரை நீக்கி, அவ்வுடலைத் தின்று என்றவாறும். பேதைமைப் பெண் - மாதர்க்கு அணிகலமாகிய பேதமைக் குணத்தையுடைய பெண். எளிமை என்பதற்கு மாட்டாமை எனப்பொருள்கொண்டு இவளைப் பெண் என்று எண்ணுவது இவளோடு போர் செய்ய மாட்டாமையாகிய கோழைத்தனத்தால் அன்றி பெண்ணைக் கொல்லலாகாது என்ற வீரத்தின் விளைவன்றும் என்றும் உரைக்கலாம். ஏகாரம் - அசை. (65)

### விசுவாமித்திரன் தாடகையைக் கொல்லுக எனல்

**407.** ஈறி னல்லறம் பார்த்திசைத் தேனிவட்
சீறி நின்றிது செப்புகின் றேனலேன்
ஆறி நின்ற தறனன் றரக்கியைக்
கோறி யென்றெதி ரந்தணன் கூறினான்.

'ஈறு இல் நல் அறம் பார்த்து இசைத்தேன், இவள்
சீறி நின்று இது செப்புகின்றேன் அலேன் :
ஆறிநின்றது அறன் அன்று ; அரக்கியைக்
கோறி!' என்று எதிர் அந்தணன் கூறினான்.

பொ :—"முடிவற்ற நல்ல அறநூல்களைப் பார்த்துத்தான் சொன்னேன். இவளைச் சினந்து நின்று இவ்வார்த்தைகளைச் சொன்னேன் அல்லேன், இதுவரை (பொறுத்து) சினம் ஆறியிருந்த இதுவும் தருமமன்று; ஆதலால் அரக்கியாகிய இவளைக் கொல்வாயாக" என்று விசுவாமித்திரன் மறுமொழி கூறினான்.

கு :—அறம் பார்த்து – அறநூல்களைப் பார்த்து. அறம் பாடிற்றே என்புழிப்போல, காரிய வாகுபெயரான் அறம் என்பது அறநூல்களையுணர்த்திற்று. அரசதருமம் இதுவாதலின் உன்னிடம் சொன்னேன் என்றுமாம். அறம் பார்த்துச் சொன்னேன்; இவள் மேல் எனக்கு ஒன்றும் கோபம் இல்லை ; இதுவரை பொறுத்திருந்ததே பாவம்; உடனே இவளைக் கொல்: என்று கூறினான் என்பதாம். (66)

### இராமன் இசைதல்

408. ஐய னங்கது கேட்டற னல்லவும்
எய்தி ஞலது செய்கவென் றேவிஞல்
மெய்ய நின்னுரை வேதமெ னக்கொடு
செய்கை யன்றோ வறஞ்செயு மாறென்ருன்.

ஐயன் அங்கு அது கேட்டு, 'அறன் அல்லவும்
எய்திஞல் அது செய்க என்று ஏவிஞல்,
மெய்ய! நின் உரை வேதம் எனக் கொடு
செய்கை அன்றோ அறஞ் செயும் ஆறு?' என்ருன்.

பொ:—இராமபிரான் அதனைக் கேட்டு, ' உண்மைவடிவான வனே! அறமல்லாத செயல்களும் உண்டாஞல், அதனைச் செய்க என்று நீ ஏவிஞல், உன் வார்த்தைகளை வேதவாக்கியமாகக் கொண்டு செய்தல் அல்லவா தருமம் செய்யும் வழி' என்று கூறிஞன்.

கு:—அறம் அல்லாத செயல்களும் நீ செய் என்று ஏவிஞல் அதனைச் செய்வதே அறம் என்பதாம். 'ஆசிரியன் என்றும் அறத் திற்றிரிந்த செயல்களைச் செய்யத்தூண்டான்; தூண்டின் பெரும் பயன் ஒன்று உலகிற்குளதாம்; ஆதலின் அதனைச் செய்வேன் என்றவாருாம். (67)

### தாடகை இராமன்மேல் சூலத்தை வீசுதல்

409. கங்கைத் தீம்புன ஞடன் கருத்தெலாம்
மங்கைத் தீயனை யாளும் மனக்கொளாச்
செங்கைச் சூலவெங் தீயினைத் தீயதன்
வெங்கட் டீயொடு மேற்செல வீசிஞள்.

கங்கைத் தீம் புனல் நாடன் கருத்தெலாம்
மங்கைத் தீ அனையாளும் மனக்கொளாச்,
செங்கைச் சூல வெம் தீயினைத் தீயதன்
வெம் கண் தீயொடு மேல் செல வீசிஞள்.

பொ:—கங்கை நதியின் இனிய புனல் வளம்படுக்கும் கோசல நாட்டையுடைய மன்னவன் குமாரஞகிய இராமன் கருத்தை யெல்லாம் நெருப்பை யொத்த கொடியாளாகிய தாடகையும்

மனத்திற்கொண்டு, தனது சிவந்த கையில் இருக்கின்ற முத்தலைச் சூலமாகிய கொடிய நெருப்பை, கொடிய தனது கண் நெருப்போடு கூடி இராமன் மேற் செல்ல வீசினள்.

கு :—இவள் பெண்ணாயிற்றே! இவள்மீது நாம் ஏன் முதற் கண் அம்பு தொடுக்கவேண்டும் என்ற கருணையும் நீதியும் நிறைந்த கருத்துடன் இருக்கும் இராமன் நிலையை எண்ணி, அவளே முதற் போர்தொடுத்தாள் என்ற நயம் புலப்பட இராமனை, 'கங்கைத்தீம் புனலுடன்' என்றார். தாடகையையும் அவள்ஏவிய சூலத்தையும் தீயாக உருவகித்தார்; கங்கைத் தீம்புனல் நாடன் முன்பு அவை அழிந்து செயலற்றுப் போவதை விளக்குதற்கு என்க. (68)

### தாடகைவீசிய சூலம் இராமனைநோக்கி வருதல்

**410.** புதிய கூற்றனை யாள்புகைந் தேவிய
கதிர்கொண் மூவிலைக் காலவெந் தீமுனி
விதியை மேற்கொண்டு நின்றவன் மேலுவா
மதியின் மேல்வருங் கோளென வந்ததே.

புதிய கூற்று அனையாள் புகைந்து ஏவிய
கதிர் கொள் மூவிலைக் கால வெந்தீ, முனி
விதியை மேல் கொண்டு நின்றவன்மேல், உவா
மதியின்மேல் வரும் கோள் என, வந்ததே.

பொ :—புதிய யமனை யொத்த தாடகையானவள் மனங் கொதித்துச் செலுத்திய ஒளியோடுகூடிய மூன்று இலை வடிவாகிய யுகாந்த காலத்துக் கொடிய தீயானது, விசுவாமித்திர முனிவருடைய கட்டளையைத் தாங்கிநிற்கின்றவனாகிய இராமபிரான் மேல், நிறைமதியின்மேல் வருகின்ற இராகு என்னும் கிரகத்தைப் போல வந்தது.

கு: —பெண்வடிவமைந்த ஒருகூற்று இல்லையாதலின் புதிய கூற்று என்றார். அன்றியும் வாழ்நாள் முடிந்ததா என்று பாராமலும், உயிர்கொள்ளும் உபாயம் தேடிக் காத்திராமலும் வருகின்ற கூற்றாதலின் புதிய கூற்று என்றார் எனலுமாம். விதி - கட்டளை. (69)

### இராமபிரான் தாடகையின் சூலத்தை இருதுண்டாக்குதல்

411. மாலு மக்கணம் வாளியைத் தொட்டதும்
கோல விற்கால் குனித்ததும் கண்டிலர்
கால னைப்பறித் தக்கடி யாள்விட்ட
சூல மற்றன துண்டங்கள் கண்டனர்.

மாலும் அக்கணம் வாளியைத் தொட்டதும்
கோல வில் கால் குனித்ததும் கண்டிலர்
காலனைப் பறித்து அக் கடியாள் விட்ட;
சூலம் அற்றன துண்டங்கள் கண்டனர்.

பொ:—திருமாலின் அவதாரமாகிய இராமபிரானும், அக்கணத்திலேயே, அழகிய வில்லை வளைத்ததையும், அம்பைத்தொடுத்ததையும் யாரும் கண்டிலர்: அக்கொடியவளாகிய தாடகை யமனிடமிருந்து பறித்து வீசிய சூலம் இருதுண்டமாக அற்றுவீழ்ந்தனவற்றைக் கண்டார்கள்.

கு :—அத்துணை விரைவாக இராமன், அவள் விட்ட சூலத்தை அம்பு கொண்டு அறுத்தார் என்பதாம். காலனைப்பறித்து என்பதற்கு யமனை அவனிருக்கும் தென்றிசையை விட்டுப் பறித்து விட்டால் ஒத்த சூலம் எனப் பொருள் கொள்வாரும் உளர். விரைந்து வெற்றி தரும் வில்லாதலின் 'கோலவில்' என்றார். கால் குனித்தல்—வில்லின் ஒரு நுனியைக் காலின் நுனியால் மிதித்துக் கொண்டு வளைத்தல். (70)

### தாடகை மலைகளை வீசுதலும் இராமன் அவற்றை விலக்குதலும்

412. அல்லின் மாரி யனைய நிறத்தவள்
சொல்லின் மாத்திரை யிற்கட றூர்ப்பதோர்
கல்லின் மாரியைக் கைவகுத் தாளது
வில்லின் மாரியின் வீரன் விலக்கினன்.

அல்லின் மாரி அனைய நிறத்தவள்,
சொல்லின் மாத்திரையில் கடல் தூர்ப்பது ஓர்
கல்லின் மாரியைக் கைவகுத்தாள்; அது
வில்லின் மாரியின் வீரன் விலக்கினன்.

பொ :—இராக்காலத்து மேகத்தை ஒத்த நிறத்தை யுடைய தாடகை பேசி வாய்மூடு முன்பு கடலையும் தூர்க்கக் கூடிய

மலைகளின் மழையைக் கையாற் பெய்தாள். வீரனாகிய இராம பிரான் அம்மழையை வில்லிலிருந்து வெளிப்படும் அம்புமழையால் மாற்றினான்.

கு:—மாரி–மழை, ஈண்டு ஆகுபெயராக மேகத்திற்கு ஆயிற்று. அவள் மேனியின் கருமைமிகுதியை இராக்காலத்து மேகத்திற்கு உவமை கூறி விளக்கினர். சொல்லின் மாத்திரையில்- ஒரு சொல் சொல்லி வாய் மூடுவதற்கு முன்பு. கல் – மலை. (71)

இச்செய்யுட்குப் பின் 12, 23, 24, 43 ஆம் ஏட்டில் பின் வரும் பாடல் காணப்படுகின்றது.

412 (a) விலக்கி நின்றபின் வெங்கணை விரைவினின் வாங்கிக்
கலக்கம் வானவர் தவிர்ந்திடக் காலனுங் களிப்ப
இலக்கில் வையகத்து இடுக்கணும் இமையவர் துயரும்
உலக்க ஊழித்தீ ஒப்பதோர் சுடுசரம் உய்த்தான்.

1, 3, 5, 6, 13, 14, 19, 20, 21, 25, 26, 29, 33, 44, ஆம் எண் உள்ள ஏடுகளில் பின் வரும் பாடல் மேற்செய்யுளின் பின் காணப் படுகிறது.

412 (b) ஏக்க மோட இமையவ ரெங்கணும்
தாக்கும் வள்ளற் கிளவலுந் தாக்கினான்
மூக்கும் வன்செவி யும்முறை போயிடப்
போக்கினான் அவள் மாயைப் புணர்ப்பெலாம்.

**இராமபாணம் தாடகையின் மார்பில் ஊடுருவிச்சென்றது எனல்**

413. சொல்லொக்குங் கடிய வேகச்
★ சுடுசரங் கரிய செம்மல்
அல்லொக்கு நிறத்தி னாண்மேல்
விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கு நெஞ்சிற் றங்கா
தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன
பொருளெனப் போயிற் றன்றே.

சொல் ஒக்கும் கடிய வேகச் சுடுசரம், கரிய செம்மல்,
அல் ஒக்கும் நிறத்தினாள்மேல் விடுதலும், வயிரக் குன்றக்
கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது அப்புறம் கழன்று, கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போயிற்றுஅன்றே.

பொ :—கரிய திருமேனியை யுடைய இராமபிரான் முனிவர் களின் சாபச் சொல்லை யொத்த மிக்க விரைவினையுடைய காந்து கின்ற அம்பை, இருளையொத்த நிறத்தினை யுடையவளாகிய தாடகையின் மேல் செலுத்துதலும், வயிரமலையாகிய கல்லை ஒத்த அவள் மார்பில், அவ்வம்புதங்காமல் முதுகுப்பக்கமாகத் தொளைத் துக் கொண்டு கழன்று, ஒன்றையுங்கல்லாத மூடர்களுக்கு நல்ல அறிவாளிகள் சொன்ன உயர்ந்த உபதேசப்பொருள்களைப்போலப் போய்விட்டது.

கு :—முனிவர்களின் சுடுசொல்லாகிய சாபம் சபிக்கப்பெற் றோரை மிக்க விரைவிற் சென்று பற்றுதல் இயல்பாதலின் அதனை இராமபாணத்திற்கு ஒப்புக் கூறினர். அன்றியும் சுடுசரம் என்ற பொருளடையை உவமைக்கும் கூட்டிச் சுடு சொல் எனக் கொண்டு சாபம் எனப் பொருள் காண்க. சொல் எனப் பொதுமையிற் கூறின் அருட்சொல் ஈண்டு உவமமாகாது; ஆதலின் பொருந்தாது. புனிதமாகிய இராம பாணம். (பாவம்போக்கியாள்வதாகிய இராம பாணம்) பாவியாகிய அவள் நெஞ்சில், தங்கிற்றிலது; கழன்று போயிற்று என்பதாம். கல்லாத மூடர்களுக்கு அவர்கள் போக் கொடு பொருந்தாத நல்லுரைகள் புகுந்த சுவடுமின்றி உடனே மறந்து போமாதலின் அது ஊடுருவிப்போன இராமபாணத் திற்கு ஒப்புக் கூறப்பட்டது. (72)

### இராமபாணம்பட்டுத் தாடகை கீழே வீழ்தல்

**414.** பொன்னெடுங் குன்ற மன்னான்
புகர்முகப் பகழி யென்னும்
மன்னெடுங் கால வன்காற்
றடித்தலு மிடித்து வானில்
கன்னெடு மாரி பெய்யக்
கடையுகத் தெழுந்த மேகம்
மின்னெடு மசனி யோடும்
வீழ்வதே போல வீழ்ந்தாள்.

**பொன் நெடுங் குன்றம் அன்னான் புகர் முகப் பகழி என்னும் மன் நெடுங் கால வன் காற்று அடித்தலும், இடித்து வானில் கல் நெடு மாரி பெய்யக் கடை உகத்து எழுந்த மேகம், மின்னெடும் அசனியோடும் வீழ்வதே போல வீழ்ந்தாள்.**

பொ :—பொன்மலையை ஒத்தவனாகிய இராமபிரானது, புகர் முகப் பாணம் என்னும் மிகப் பெரிய ஊழிக்காற்றானது அடித்தலும், கல்மழையைப் பெய்ய யுகாந்தகாலத்து ஆகாயத்தில் எழுந்த மேகமானது மின்னலோடும், இடியோடும் விழ்வதைப் போல அரற்றிக்கொண்டு வீழ்ந்தாள்.

கு :—பகழி யென்னும் காற்று அடித்தலும் கடையுகத்து வானில் எழுந்த மேகம் வீழ்வதேபோல இடித்து வீழ்ந்தாள் எனக் கூட்டுக. நீல மேனி இராமனைப் பொன்னெடுங்குன்றம் அன்னான் என்றது உயர்வும், திட்பமும், தெய்வத்தன்மையும் கருதி யென்க. புகர் முகப் பகழி – தாமரை மொட்டுப் போன்ற முகத்தை யுடைய ஒருவகைஅம்பு. ''புண்டரிகத்தின் முகையன்ன புகர் முகம் விட்டான்.'' (கம்ப. இராவணன் வதை 108) என்ற பகுதியையும் காண்க. மின்னலை அவளுடைய பற்களுக்கும், இடியை அவளுடைய அரற்றொலிக்கும் மேகத்தை அவள் உடலுக்கும் உவமமாகக் கொள்க. (73)

**தாடகையிறந்தது இராவணனுக்கு ஓர் உற்பாதமாம் எனல்**

**415.** பொடியுடைக் கான மெங்குங்
குருதிநீர் பொங்க வீழ்ந்த
தடியுடை யெயிற்றுப் பேழ்வாய்த்
தாடகை தலைக டோறும்
முடியுடை யரக்கற் கந்நாள்
முந்தியுற் பாதமாகப்
படியிடை யற்று வீழ்ந்த
வெற்றியம் பதாகை யொத்தாள்.

**பொடி உடைக் கானம் எங்கும் குருதிநீர் பொங்க வீழ்ந்த தடி உடை எயிற்றுப் பேழ்வாய்த் தாடகை, தலைகள் தோறும் முடி உடை அரக்கற்கு அந்நாள் முந்தி உற்பாதம் ஆகப் படி இடை அற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை ஒத்தாள்.**

பொ :—புழுதி நிறைந்த காடு முழுதும், இரத்த நீர் பொங்கி யோடும் வண்ணம் கீழேவிழுந்த ஊன் ஒட்டிக் கொண்டிருக்கின்ற பற்களையும், பிளந்தவாயையும் உடைய தாடகையானவள், தலைகள் பத்திலும் கிரீடம் அணிந்த அரக்கனாகிய இராவணனுக்கு (வரப் போகும் மரணநாளாகிய) அந்நாளுக்கு முந்தி உண்டான உற்பாத

மாகப் பூமியில் அறுந்து வீழ்ந்த வெற்றிக்கொடியை ஒத்திருந் தாள்.

கு :—உற்பாதம் - பின்வரும் தீங்கை முன்னர்க் குறிப்பிக்கும் தீக்குறிகள். கொடியற்று வீழ்தல் தீய அடையாளம். தடி-ஊன். (74)

### காடுமுழுதும் குருதிபரவுதல்

**416.** கான்றிரிந் தாழி யாகத்
தாடகை கடின மார்பத்
தூன்றிய பகழி வாயூ
டொழுகிய குருதி வெள்ளம்
ஆன்றவக் கான மெல்லா
மாயின தந்தி மாலைத்
தோன்றிய செக்கர் வானந்
தொடக்கற்று வீழ்ந்த தொத்தே.

கான் திரிந்து ஆழி ஆகத் தாடகை கடின மார்பத்து
ஊன்றிய பகழி வாயூடு ஒழுகிய குருதி வெள்ளம்.
ஆன்ற அக் கானம் எல்லாம் ஆயினது; அந்தி மாலைத்
தோன்றிய செக்கர் வானம் தொடக்கு அற்று வீழ்ந்தது ஒத்தே.

பொ :—காடு மாறிக் கடலாகும்படி, தாடகையினது வலிய மார்பில் ஊன்றிய அம்பின்வாயில் ஒழுகிய இரத்தப் பெருக்கா னது, சந்தியா காலத்துத் தோன்றிய செவ்வானம் தொடர் பற்றுக் கீழே விழுந்ததுபோல அகன்ற அக்காடு முழுதும் பர விற்று.

கு:—வாய் - கூர்மை. கான் திரிந்து ஆழியாக, ஒழுகிய குருதி வெள்ளம் செக்கர் வானம் வீழ்ந்தது ஒத்து, கானம் எல்லாம் ஆயி னது எனக் கூட்டுக. (75)

### கூற்றுவன் அரக்கர் குருதிச்சுவையறிந்தான் எனல்

**417.** வாசநாண் மலரோ னன்ன
மாமுனி பணிம ருத
காசுலாங் கனகப் பைம்பூட்
காகுத்தன் கன்னிப் போரில்

கூசிவா ளரக்கர் தங்கள்
குலத்துயிர் குடிக்க வஞ்சி
ஆசையா லுழலுங் கூற்றுஞ்
சுவைசிறி தறிந்த தன்றே.

வாச நாள் மலரோன் அன்ன மாமுனி பணி மருத
காசு உலாம் கனகப் பைம்பூண் காகுத்தன் கன்னிப் போரில்
கூசி வாள் அரக்கர் தங்கள் குலத்து உயிர் குடிக்க அஞ்சி
ஆசையால் உழலும் கூற்றும் சுவை சிறிது அறிந்தது அன்றே.

பொ :—வாசனை பொருந்திய அன்றலர்ந்த தாமரைப் பூவில் எழுந்தருளிய பிரமனை ஒத்த பெரிய விசுவாமித்திர முனிவருடைய ஆணையைக் கடவாத இரத்தினங்கள் கிடந்து அசைகின்ற பொன்னுலாகிய பசிய அணிகளையுடைய இராமபிரானுடைய முதற் போரில், கொடிய அரக்கர் குலத்தவர்களின் உயிரைக் குடிக்கப் பயந்து, கூசி, ஆசை மிக்கு வருந்திநின்ற யமனும் அரக்கர் உயிர்ச்சுவையைச் சிறிது அறிந்தான்.

கு :—வாசம் நாள் மலரோன் – பிரமன். பிரமன் அன்ன முனி யென்றது, இவர் பிரம இருடிகளுள் ஒருவர் ஆயினமை கருதி. காசு–மணிகள். காகுத்தன்–ககுத்தன் மரபில் வந்த இராமன். கன்னிப்போர்-முதற்போர். அழியாதபோர் எனலுமாம். வாள் அரக்கர்–கொடியஅரக்கர். தாடகையின் உயிரைக்குடித்துச் சிறிது அறிந்தது என்றூர். கூற்று - வேந்து என்பது போலச் சொல்லால் அஃறிணையும், பொருளால் உயர்திணையும் ஆகலின் சொல்லமைதிக் கேற்ப அறிந்தது என அஃறிணை முடிபேற்றது. அன்று ஏ அசைகள். (76)

### தேவர் மகிழ்ச்சி

**418.** யாமுமெம் மிருக்கை பெற்றே
முனக்கிடை யூறு மில்லை
கோமகற் கினிய தெய்வப்
படைக்கலங் கொடுத்தி யென்னு
மாமுனிக் குரைத்துப் பின்னர்
விற்கொண்ட மழைய னுன்மேல்
பூமழை பொழிந்து வாழ்த்தி
விண்ணவர் போயி னரே.

'யாமும் எம் இருக்கை பெற்றேம், உனக்கு இடையூறும் இல்லை,
கோமகற்கு இனிய தெய்வப் படைக்கலம் கொடுத்தி' என்ன
மாமுனிக்கு உரைத்துப்,பின்னர் வில் கொண்ட மழை அனன்மேல்
பூ மழை பொழிந்து வாழ்த்தி, விண்ணவர் போயினரே.

பொ :—தேவர்கள், நாங்களும் எங்கள் இருப்பிடங்களைப் பெற்றவர்களானேம்; உனக்கும் யாகம் செய்தற்குத் தடையொன்றும் இல்லை. மன்னவகுமாரராகிய இராமபிரானுக்கு நல்ல தெய்வத்தன்மையுள்ள படைகளைக் கொடுப்பாயாக என்று, விசுவாமித்திர முனிவருக்குச் சொல்லி, பிறகு வில்லையேந்திய மேகத்தையொத்த இராமபிரான்மீது பூமாரி பொழிந்து வாழ்த்திச் சென்றனர்.

கு :—பெற்றேம் என்றது துணிவு பற்றி எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. விற்கொண்ட மழையனன்-மின்னலின் ஒளியைக் கொண்ட மேகத்தை யொத்த வில்லை யேந்திய இராமபிரான் என உவமைக்கும் பொருளுக்கும் ஒப்பப் பொருள் காண்க. வில் - மின்னல், வில். (77)

தாடகை வதைப் படலம் முற்றிற்று.

# 8. வேள்விப் படலம்

வேள்விப்படலம் என்பது வேள்வியைப்பற்றிப் பேசும் படலம் என்று பொருள்படும். இங்கே வேள்வி என்பது விசுவாமித்திர முனிவன் இயற்றிய யாகத்தைக் குறித்தது.

அச்சுப் புத்தகங்களில் 59 பாடல்களுடையதாய் வேள்விப் படலம் என்ற ஒரே தலைப்பில் முற்றுப்பெற்றுள்ள இது, ஓலைச் சுவடிகள் சிலவற்றில் மூன்று படலங்களாகக் காணப்படுகிறது. முன் உள்ள 15 செய்யுட்கள் கௌசிகையாற்றுப் படலம்* என்ற தலைப்பின் கீழும். அடுத்த 24 செய்யுட்கள். மாவலி வேள்விப் படலம்† என்ற தலைப்பின்கீழும், இறுதியிலுள்ள 20 செய்யுட்கள், வேள்விப் படலம்‡ என்ற தலைப்பின்கீழும் வரையப்பட்டுள்ளன. அம் மூன்றனுள், கௌசிகிப் படலம் என்பது, விசுவாமித்திரமுனிவனுடைய முன்னோர்வரலாறும், அவன் தமக்கையான கௌசிகியின் வரலாறும் விரிப்பது. மாவலி வேள்விப் படலம் என்பது மாவலி என்னும் பெயருடைய அசுர சக்கரவர்த்தி செய்த யாக நிகழ்ச்சிபேசுவது. விசுவாமித்திரன் வேள்விப் படலம் என்பது அம்முனிவன் செய்த யாக நிகழ்ச்சியை விரித்துரைப்பது.

இவ்வாறு ஒரு படலத்தை மூன்று படலமாக்கிய பகுப்பு, கற்பார் எளிதிற் கற்கத்தக்கதாய் அமைவுடையதுபோற் காணப் படலாம். பார காவியங்களுள் சிறு பிரிவுகள் கதையொடு

---

*இப் படலம் பின்வரும் பெயர்களிட்டும் சில சுவடிகளில் வரையப் பட்டுள்ளது.

1. கௌசிகையாற்றுப் படலம் 13, 17, 18, 20, 22, 40.
2. கௌசிகைப்படலம் ; 24.
3. கோமதியாற்றுப்படலம் ; 15, 19, 23, 25, 43.
4. புனிதமாநதிப்படலம் ; 16, 21.
5. கோமுகியாற்றுப்படலம் ; 14.

†இப் படலம். சில சுவடிகளில் பின்வரும் பெயர்கள் இட்டும் வரையப் பட்டுள்ளது.

1. மாவலி வேள்விப் படலம் ; 12, 15, 19, 23, 27, 43.
2. மாவலி யாகப்படலம் ; 5.
3. மாவலி வாணப்படலம் ; 24, 25, 29
4. மாவலியாண்மைப்படலம் ; 41.
5. மாவலியரணப்படலம் ; 13, 17, 18, 22, 40.
6. மாவலியரண்புகுபடலம் ; 16, 20, 21,

‡இப் படலம், சில சுவடிகளில் பின்வரும் பெயர்கள் இட்டும் வரையப் பட்டுள்ளது.

1. வேள்விப்படலம் ; 5, 15, 18, 19, 20, 23, 24, 25, 29, 30, 40, 41, 43, 44.
2. விசுவாமித்திரன் வேள்விப்படலம் ; 12, 13, 14, 27.
3. யாகப்படலம் ; 26.

தொடர்புடையவாய் நுவல்பொருள்பற்றி அமைக்கப்படும். மேற்கூறிய கௌசிகிவரலாறும், மாவலி வேள்விநிகழ்ச்சியும், 'கொடுத்த மைந்தரைக்கொண்டு சிந்தைமுந், தெடுத்த சிற்றம் விட்டு இனிது வாழ்த்திமேல் அடுத்த வேள்விபோய் முடித்தும் நாமென' நடந்த விசுவாமித்திரமுனிவன்பால் இராமபிரான் செல்லும் நெறியிடை எதிர்ப்பட்ட ஓர் ஆற்றைப் பற்றியும் சோலையைப் பற்றியும் வினவ, அதற்குக் கௌசிகி வரலாறும் சித்தாச்சிரமவரலாறும் அங்கே திருமால் தவம் செய்தமையும், காசிபர் வேண்டுகோளால், அவர்க்கு மகவாகிய (திருமாலின் அமிசமான) வாமனப் பெருமான் கீர்த்தியும், சித்தாச்சிரமத்திலேதான் தன் வேள்வி நிகழ இருத்தலும் முனிவன் கூறிய விடையாயும் நெறியிடை நிகழ்ச்சியாயும் இடைப்பிறவரலாயும் இருத்தலின் கௌசிகி வரலாறு மாவலி வேள்விநிகழ்ச்சி முதலியன, நுவலும் கதையொடு தொடர்புடையவாகா. எனவே விசுவாமித்திரன் வேள்வியே கதையொடு தொடர்புடையதாகும். ஆகவே வேள்விப் படலம் என்றுள்ள ஒரு தலைப்பே அமைவுடையதாதல் வெளிப்படை. இனி இப்படலத்தின் நுவல் பொருட்சுருக்கம் வருமாறு :—

இப்படலத்தின் முதல் மூன்று செய்யுட்கள் (491-421) விசுவாமித்திர முனிவன் இராமபிரானுக்கு அருமையான படைக்கலங்களை (மந்திரங்களுடன்) வழங்க, அவை இராமபிரானை அடைந்து மகிழ்ந்து அவர் பணிபுரிந்த செய்தி பேசுவன. இச்செய்தி வான்மீகத்துள் 26-ஆம் சருக்கத்தின் 28ஆம் சுலோகம் முதல் 28-ஆம் சருக்கத்தின் 16-ஆம் சுலோகம்வரை விரித்துப் பேசப்பட்டது.

அடுத்து 422-முதல் 433 வரை உள்ள பாடல்கள், விசுவாமித்திரனுடைய முன்னோர் வரலாறும் அம்முனிவனுடைய தமக்கையான கௌசிகியின் வரலாறும் விரிப்பன. இவ்வரலாறுகள் வான்மீகத்துள், விசுவாமித்திரமுனிவன் வேள்விமுற்றியபின் மிதிலை நோக்கிச் செல்லத் தொடங்கியபோது (32, 33, 34-ஆம் சருக்கங்களில்) பேசப்படுகின்றன.

434, 435, 457-ஆம் பாடல்கள் சித்தாச்சிரமத்தின் பெருமை பேசுவன. 436 முதல் 456 வரையிலுள்ள பாசுரங்கள் மாவலி வேள்வி நிகழ்ச்சியும் வாமனப்பெருமான் பெருமையும் கூறுவன. இப்பகுதி வான்மீகத்து 29-ஆம் சருக்கத்தாற் பேசப்பட்டது

458 முதல் 476 முடியவுள்ள பாக்கள், விசுவாமித்திரமுனிவன் வேள்விநிகழ்ச்சி உரைப்பன. இப்பகுதி வான்மீகத்து 30-ஆம் சருக்கத்துக் கூறப்பட்டது.

இவற்றுள் இராமபிரான் விசுவாமித்திர முனிவன்பால் படைக்கலம் பெற்றமை, 'நின் மகற்கு உறுத்தலாகலாவுறுதி எய்தும் நாள்' (331), 'ஐய நின் மகற்கு அளவில் விஞ்சை வந்து எய்துகாலம்' (332) என்று தசரதனை நோக்கி வசிட்டமுனிவன் கூறிய பேறுகளுள் ஒன்றாகக் கொள்ளல் தகும். அடுத்துப் பேசப் படும் குசிகவம்மிச வரலாறு, இராமபிரானுக்கு அளவில் விஞ்சைகள் கற்பித்த ஆசிரியனான விசுவாமித்திர முனிவனுடைய முன்னோர் பெருமை பேசுவதாய் அமைவுடையதாகும். குசநாபன் மகளிர் ஒழுகலாறு, மணமாவதற்குமுன் மகளிர் தந்தையர் காப்பில் இருக்கற்பாலர் என்பதும், அவர்க்குத் தக்க நாயகரைத் தேடித்தரும் கடமை தந்தையர்க்குரியதென்பதும், நன்னெறி யொழுகினார்க்குத் தீங்குவராது; வரினும் நெடிதுநின்று வருத் தாது, கடிதகலும் என்பதும் விளக்குவதாய் அமைந்தது. இரிசிக முனிவன் கௌசிகி என்போர் வரலாறு இல்வாழ்க்கையில் தலைப் படுவோர் குறிக்கொள்ள வேண்டிய நன்னெறியுணர்த்துவது.

இங்கு, கடலினிடத்து முத்தும் பவளமும் மணிகளும் ஆகிய வளங்கள் மிகும்படி மழைபொழியும் மேகம்போலக் குணக்கட லான இராமபிரான்பால் மேலும் ஆற்றல் மிகும்படி அளவில் விஞ்சைகளைப் பொழிந்த மேகமாகிய விசுவாமித்திரன் பெருமை யும், அம்முனிவனுடன் பிறந்து, தன் நாயகனான இரிசிகன் மகிழ ஒழுகி அவன் அருள்மாரியால், மாநிலத்துறுகண் நீக்க நதிவடி வுற்ற கௌசிகியின் பெருமையும் புலனாவதாம். அன்றியும், குசிகவமிச வரலாற்றில் கௌசிகி வரலாறுவரை விசுவாமித்திரன் கூற்றாக்கி, எஞ்சிய விசுவாமித்திரன் வரலாற்றை மிதிலைக் காட்சிப் படலத்துச் சதாநந்த முனிவர் கூற்றாக்கி முற்றுவித்த கதையமைப்பும் ஊன்றி நோக்கி உளங்கொளத்தகும்.

அடுத்துப் பேசப்படுவது சித்தாச்சிரமம். சித்தாச்சிரமம் என்பதற்கு விரும்பிய பேற்றைப் பெறுவிக்கும் இடம் என்று பொருள். இது பண்டு திருமால் நூறாழிக்காலம் தவம்புரிதற்கு இடமாகிய பெருமை வாய்ந்தது.

தாடகைவதைப் படலத்தின் தொடக்கத்தே காமனாச்சிரம வரலாறு பேசப்பட்டது. சிவபிரான் மேற்கொண்ட தவம் அழிய முயன்ற மன்மதன் உடல் இழந்த செய்தி அங்கே கூறப்பட்டது, சித்தாச்சிரமத்திலே திருமால் தவஞ்செய்தமை கூறப்படுகிறது. யாதுகருதி இத் தவநிலை மேற்கொளப்பட்டதென்பது புலனாக வில்லை. 'அமலமூர்த்தி கருதியது அறிதல் தேற்றாம்' என்று ஆசிரியரே கூறுகிறார். இருபெருந் தேவர் தவமும் உலக நலங் கருதியதாய் அமைதல் கூடும். இவ்வரலாறுகள் தவத்தின் பெருமை விரிப்பனவாய் அமையும். சித்தாச்சிரமத்தில் காசிபன்

முயன்ற தவம் திருமாலை மகனைகப் பெறும்பேறு நல்கியது. இது நிற்க.

சித்தாச்சிரமத்தின் தூய்மை கூறப்புக்க ஆசிரியர், அது, 'தங்கள் நாயகரே தெய்வம்; அவர்க்குச் செய்யும் தொண்டே தவம்' எனக் கொண்டு ஒழுகும் கற்புடைய மகளிர் மனம்போலத் தூய்மை வாய்ந்ததென்கிறார். 'இது தெய்வம் தொழாஅள் கொழு நற் றொழுதெழுவாள்' (55) என்னும் தமிழ்மறையின் விளக்கமாய் அமைந்தது. இதனால், கொழுநனையே தெய்வமாகக் கொண்டு தொழுது ஒழுகும் குலமகள், நினைத்தவையும் சொல்லியவையும் செய்யுமவையும் தவறின்றி நன்கு முற்றுதல்போல, அக்குலமக ளிர் மனமனைய தூய்மைவாய்ந்த சித்தாச்சிரமத்தின்கண் நிகழும் நற்செயல்களும் இனிது நிறைவுறும் என அவ்வாச்சிரமத்தின் பெயர்ப் பொருளும் விளங்குதல் காணலாம்.

அடுத்தது மாவலி வேள்வி நிகழ்ச்சி. மாவலி வேள்வி, வேள்வியும் வேள்விப்பயனும் வேள்வியாற் பூசிக்கப்படுபவனும் ஆன இறைவனைத் தானம் பெறுபவனாகப் பெற்ற பெருஞ்சிறப் புடையது. மாவலி என்பான் ஓர் அசுர வேந்தன்; மூவுலகும் தன் குடைக்கீழ் ஒதுங்க வென்ற பேராற்றலன்; ஒப்பாரை மிக்காரையில்லாத பெருவண்மையன்; உயர்வற வுயர்நலமுடைய திருமால் வாமன வடிவில் இரவலனாய் நின்று வேண்ட, 'இவன் திருமால், வஞ்சவேடத்தொடு வந்துளான், இவற்கு வழங்கல் தகாது' என்று தன் குரவனான வெள்ளி தடைசெய்ததனையும் மதியாது வழங்கிப் பேரிசை கொண்டவன்; ஏழுலகுந்தனிக்கோல் செல்ல வீற்றிருக்கும் அறவாழியந்தணன் தாள்சூடி உய்ந்த பெருந் தகை இவன் ஒழுகலாறு: 'ஈதல் இசைபடவாழ்தல்' (231), 'நல்லாறெனினும் கொளல் தீது, மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று' (222), 'கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன் னின், இரப்பும் ஓர் ஏ எர் உடைத்து'(1053) என்னும் திருக்குறட் பாக்களுக்கு எடுத்துக்காட்டாய்த் திகழ்வது.

இவன் வேள்வியை ஒரு காரணமாகக்கொண்டு, ஆசிரியர் இங்கே இறைவனமிசமான வாமனப்பெருமான் வைபவத்தை விரிக்கிறார். வாமனன் உலகம் அளந்த செய்தி, 'மடியிலாமன்ன வன் எய்தும், அடியளந்தான், தாஅய தெல்லாம் ஒருங்கு' (610) என்று திருக்குறளிலும் பேசப்பட்டது. வாமனப் பெருமான் கொண்ட குறளுருவும், அதுகொண்டு அவன் இயற்றிய செயலருமையும், "உருவுகண் டெள்ளாமை வேண்டும். உருள்பெருந்தேர்க்கு அச்சாணியன்னா ருடைத்து" (667) என்னும் திருக்குறட்கு எடுத்துக்காட்டாகும் பெருமை வாய்ந்தன. ஆழ்வார்களும் இப் பெருமான் பக்கல் மிக்க ஈடுபாடுடையர்.

உலக முழுதுடைய நெடுமால் மூன்றடிமண் இரக்கப்புக்க நிலையில் அவனுடைய பருவுடல் குறள்வடிவாயிற்று. அதுபோல அவன் புகழுடலான புலவர் பெருமான் பாடல்களும் குறிய வாயின. தாம் மேற்கொள்ளப்புக்க இரத்தற்றொழில் நினைத்த அளவிலே நெடியோனான திருமாலும், பயந்தவர்களும் இகழ் குறளாயினான் போலும். "இரவினை உள்ளுங்கால் உள்ளம் உருகுமால் என்கொலோ கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு" (305) என்பது நாலடி. இரப்பினை நினைக்கும்போதே உள்ளம் உருகுமெனின், இரக்கப்புக்க நிலையில் உடல் குறுகுதலும் இயல்பு தானே.

'மாவலி வேள்வி முற்றித் தக்கார்க்குப் பூமி முதலியவற்றை வழங்க முற்பட்ட அந்நிலையில் இந்திரன் முதலிய தேவர் வேண்டு கோளால், திருமால் காசிப முனிவர்க்கும் அதிதிக்கும் மகவாய்த் தோன்றிக் குறிய மாணுருவுடன் அவன்பாற் சென்று, மூவடிமண் இரந்து பெற்றுத், தன் ஒளியால் மாவலியை ஒடுங்கச் செய்து, உலகமெல்லாம் அளந்துகொண்டு, இந்திரனுக்குக் கொடுத்தார்' என்னும் அளவே வான்மீகத்திற் காணப்பட்டது.

மாவலி வழங்கப்புக்க நிலையில் சுக்கிரன் தடுத்தமையும் அதை மறுத்து மாவலி வழங்கியதும் கம்பரால் விரிக்கப்பட்டது.

சுக்கிரன், தன் சொற்கொள்ளாது, மாவலி வாமனனுக்கு மூன்றடிமண் நீரொடு வழங்க முற்பட்ட நிலையில், தன் மாணவனை மாவலிக்கு நன்மை செய்பவனாய்த் தானநீர் வாமனன் கையில் விழாதவாறு வண்டுருக்கொண்டு சென்று கிண்டியின் சுரையை (-துவாரத்தை) அடைத்திருக்க, வாமனன் தன்கைத் தருப்பைப் புல்லால் துவாரத்தைச் சோதித்த அளவில் சுக்கிரன் கண் இழந்து ஒதுங்கினான் என்று ஒரு வரலாறு,

"மிக்க பெரும்புகழ் மாவலி வேள்வியில்
தக்கதி தன்றென்று தானம் விலக்கிய
சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய
சக்கரக் கையனே அச்சோ அச்சோ
சங்கம் இடத்தானே அச்சோ அச்சோ"

(பெரியாழ்வார் திருமொழி. 1. 8. 7.)

என்னும் அருளிச் செயலால் அறியப்படுகிறது.

"வெள்ளியென்னும் வேதியன் நாட்டம் கெடுத்தார்" (திரு வேங்கடமாலை-) என்று திவ்யகவி பிள்ளைப் பெருமாளையங்காரும் சுக்கிரன் கண்ணிழந்த செய்தி கூறுவர்.

மேலும், மாவலிக்கு நமுசி என்பானொரு மகன் இருந்தானென்றும், அவனும் வாமனனுக்கு வழங்கியதை மறுத்து, வாமனன் உலகளக்கப்புக்கபோது அளக்கவொட்டாது திருவடிகளைப் பிடித்துத் தகைந்தானென்றும், பெருமான் அவனை வானிற் சுழற்றி வென்றபின்பே உலகளந்துகொண்டானென்றும் ஒரு வரலாறு,

"என் இது ! மாயம் ; என் அப்பன் அறிந்திலன்
முன்னைய வண்ணமே கொண்டு அளவாய்" என்ன,
மன்னும் நமுசியை வானிற் சுழற்றிய
மின்னு முடியனே ! அச்சோ அச்சோ
வேங்கட வாணனே ! அச்சோ அச்சோ.

(பெரியாழ்வார் திருமொழி-1-8-8)

என்னும் அருளிச் செயலால் அறியப்படுகிறது.

சுக்கிரன் கண் இழந்ததும் நமுசி தடுத்ததும் கம்பரால் கூறப்படவில்லை. எனினும் சில ஓலைச் சுவடிகளுள், 452-ஆம் பாடலுக்குப்பின்.

குறியவன் கையில் நீர் விழாமல் குண்டிகை
மறிபட வாமனன் மலர்க்கைத் தர்ப்பையால்
செறிவது நீக்கிடச் சிதைந்து கண் உடைந்து
உறுதுயர் வெள்ளியும் ஒதுங்கிப் போயினான்.

என்று ஒரு பாடல் காணப்படுகிறது. இச்செய்யுள், முன் குறித்த அருளிச் செயற் பாசுரம்போலச் சுக்கிரன் கண் இழந்த செய்தி பேசுதலின், இங்கே இயைபுடையதுபோலத் தோன்றினும், பல பழஞ்சுவடிகளுள் இது காணப்படாமையாலும், "நெடியவன் குறியகை நீரினீட்டினான்" என்று முடிவுறும் 452-ஆம் பாடலோடு "கயந்தரு நறும்புனல் கையில் தீண்டலும்" என்று அடுத்த 453-ஆம் பாடல் இயைந்துசெல்லுதலை இது நடுவே புகுந்து தடுத்தலாலும் பெரியாழ்வார் திருமொழியில் அடுத்துப் பேசப்பட்ட நமுசி தடை இங்கே பேசப்படாமையாலும், வாமனன் வேண்டினான்; மாவலி வழங்கமுற்பட்டான்; சுக்கிரன் தடுத்தான்; மாவலி அத்தடையையும் மீறி வழங்கினான்; வாமனன் அளந்துகொண்டனன் ; என்னும் இவ்வளவே இங்கே கதையமைதிக்குத்தக வேண்டுவது ஆதலாலும், இதன் நடை கம்பர் கவி நடையின் வேறுபட்டுக் காணப்படுதலாலும்,இதுவரை வெளியான பதிப்புக்களில் இச்செய்யுள் மூலத்தோடு சேராமையாலும் இதனை மிகைப்பாடலென்று கொண்டு உரை முடிவிற் காட்டலாயிற்று.

இங்கே பேசப்பட்ட வாமனவைபவம் மாவலி கொடைத் திறம் முதலியவற்ருல், முறையே, ஆழ்வார்கள் ஈடுபட்ட இறைவனுடைய அவதார விசேடங்களை இடம் வாய்த்த பொழுதெல்லாம் விரித்துப் பேசி மகிழ்தலும், திருக்குறளுட்கண்ட அரிய ஒழுக லாறுகளை ஆங்காங்கு விளக்கிச் செல்லுதலும் ஆசிரியர்க்கு இயல் பென்பது புலப்படும்.

இப்படலத்தின் முடிவிற் பேசப்பட்டது விசுவாமித்திர முனிவன் வேள்வி நிகழ்ச்சியாகும். இம்முனிவன், அரசனுயிருந்து பின் அப்பதவியைத் துறந்து, தவஞ் செய்து, பிரம இருடி என்று உலகுமதிக்க நின்ற பெருந்தகை; 'பெண்ணினுக்குஞ் சுவையில் பிறர்பிறர்க்கு-எண்ணி நோக்கி இயம்பரும்' இன்பமாயும் பண்ணின் நோக்கும் பராவமுதாயும், யாவர்க்கும் புகலிடமாயும் விளங்கும் செங்கண்மாலின் அமிசமான இராமபிரானைப் பசுங்கண்ணிற் கண்டு, கையடையாகப் பெற்று மனங்களித்துத் துயிலெடை மங்கலம்பாடி, அவனே முன்னின்று காக்கத் தன் வேள்வியை முற்றுவிக்கும் பேறுபெற்றவன். இவன் வரலாறு, 'தவமும் தவமுடையார்க்காகும்' (262) 'ஒன்ஞர்த்தெறலும் உவந்தாரை ஆக்கலும்' (264) 'வேண்டிய வேண்டியாங் கெய்தலால்' (265) 'சுடச்சுடரும்' (268) என்று தொடங்கும் திருக்குறள்களுக்கு எடுத்துக்காட்டாகும் பெருமை வாய்ந்தது.

தவம் மேற்கொண்டு, தவஞ் செய்வார்க்குக் கேடுவிளைக்கும் உட்பகையான காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்றையும் ஒழித்துநின்ற விசுவாமித்திர முனிவனுக்குப் புறப்பகையும் மூன்று உளதாயிற்று. புறப்பகையாய் நின்ற மூவர் தாடகை சுவாகு மாரீசன் என்போர், காமம் வெகுளி மயக்கம் என்ற மூன்றனுள் மயக்கமாகிய அவிச்சையினின்று மற்றையிரண்டும் தோன்றுதல் போல, இம்முனிவர்க்குப் புறப்பகையாய் அமைந்த மூவருள், தாடகை என்பாள் தாயாக, ஏனையிருவரும் அவளிடமிருந்து தோன்றியவராவர். தவத்தையும் வேள்வியையும் அழித்து இடையூறுவிளைக்கும் அம்மூவரையும் முனிவன் ஒழிக்கக் கருதினன். தான் தவசியாய் ஒருயிரையும் கொல்லா விரதம் மேற்கொண்டவனுதலால் அவரை ஒழித்தற்குத் தக்க அரசர் துணை நாடி நின்ருன். வாலறிவன் ஆதலால் அவரை ஒழிக்கத் தக்கான் இராமபிரானே என்று துணிந்து, தசரதசக்கரவர்த்தி பக்கல்இராமபிரானைப் பெற்றுத் தன் இருக்கை நோக்கி வருங்கால் எதிர்ந்த தாடகையை இராமபிரானுல் ஒழித்திட்டான்; அச்செய்தி முன்படலத்தாற் பேசப்பட்டது. ஏனை இருவரையும் போக்கிய செய்தி இப்படலத்தாற் பேசப்படுகிறது.

இக்காவியம் நுவலும் பொருள்களுள் சிறந்தனவான தக்காரை அளித்தலும் தீயோரை ஒறுத்தலும் ஆகிய இரண்டுக்கும் தோற்றுவாயான இடம் தாடகைவதைப்படலமும் இவ்வேள்விப் படலமுமே ஆகும். தீயோருள் முன் எண்ணத்தக்க இராவணன் அழிவுக்கும் இங்கே வித்து இடப்படுகிறது, 'இலங்கையரசன் பணி', 'பொடியுடைக்கானம்' என்று தொடங்கும் பாடல்கள் அதற்குச் சான்ருய் அமையும்.

விசுவாமித்திர முனிவன் வேள்வி நிகழ்ந்துகொண்டிருக்கையில், சுபாகு மாரீசன் முதலிய கொடிய அரக்கர் அவ்வேள்வியை அழிக்கத் திரண்டு வருகின்றனர். அவரைக் கண்டு அஞ்சிய சித்தாச்சிரம வாசிகளான முனிவர் இராமபிரானிடம் அபயம்புக, அவன் அவர்களை அஞ்சற்க என்று கைகவித்து அவ்வரக்கர்களை வெருட்டி வெல்கின்ருன்.

சித்தாச்சிரம முனிவர்க்கும் விசுவாமித்திரமுனிவற்கும் இடர் நீக்கியது தக்கோரைத் தலையளித்ததாகும். சுபாகு மாரீசர்களை வென்றது தீயோரை ஒறுத்ததாகும்.

விசுவாமித்திர முனிவருக்குப் புறப்பகையாய் நின்ற மூவரில் தாடகையும் சுவாகுவும் கொல்லப்பட்டனர். மாரீசன் கடலில் தள்ளப்பட்டுத் தப்பி ஓடிவிடுகிருன். இந்நிலையில் விசுவாமித்திரன் முதலியோர் இடர் நீங்கிவிடுகிறது. எனினும் தாடகையும் சுபாகுவும்போல மாரீசனும் மாண்டு ஒழிய வேண்டியவனே, பின் கதை நிகழ்ச்சிக்கு மாரீசன் வேண்டுமாதலின் அவன் உய்ந்தொழிந்தனன்போலும், இராமபிரான் அறிந்தே அவ்வாறு உய்ந்துபோகவிட்டான் எனின் அப்பெருமான் தான் மானிடனுகவே ஒழுகும் குறிக்கோளொடு மாறுபடும், ஆதலின், மாரீசனை உய்ந்துபோகவிட்டது, வாளியின் செயலாக்கி, அதற்கு அத்தன்மையுண்மை தெய்வவாளி (470) என்று அடைமொழி கொடுத்துப் பெறவைத்த ஆசிரியர் கவித்திறம் போற்றத்தகும்.

திருமாலின் அமிசமான இராமபிரானே முன்னின்று காக்க நிறைவேறிய விசுவாமித்திரமுனிவன் வேள்வி மற்றையோர் வேள்வியினும் பெருமைமிக்கது என்பதும், அப்பெருமானைக் காப்பவனுகப் பெற்றுத் தன்வேள்வியை முற்றுவித்துக் கொண்ட விசுவாமித்திரமுனிவன், பிறரைக் காவலராகப்பெற்றுத் தம் வேள்வியை முற்றுவித்துக்கொண்ட மற்றையோரினும் பெருமைவாய்ந்தவன் என்பதும் சொல்லாமலே விளங்கும்.

---

# 8. வேள்விப் படலம்

விசுவாமித்திரன் இராமனுக்குப் படைக்கலம் தருதல்

419. விண்ணவர் போய பின்றை
விரிந்தபூ மழையி னூலே
தண்ணெனும் கான நீங்கித்
தாங்கருந் தவத்தின் மிக்கோன்
மண்ணவர் வறுமை நோய்க்கு
மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணறன் சொல்லே யன்ன
படைக்கல மருளி னூனே.

விண்ணவர் போய பின்றை
விரிந்த பூ மழையினூலே
தண் எனும் கானம் நீங்கித்
தாங்கரும் தவத்தின் மிக்கோன்
மண்ணவர் வறுமை நோய்க்கு
மருந்து அன சடையன் வெண்ணெய்
அண்ணல் தன் சொல்லே அன்ன
படைக்கலம் அருளினூன் ஏ.

பொ :—பரவிய பூமழையால் குளிர்ந்த அவ்வனத்தினின்று நீங்கித் தேவர்கள் சென்ற பின், பகைவரால் தடுத்தற்கு அரிய தவத்தின் மேம்பட்டவனுகிய விசுவாமித்திரமுனிவன், பூமியிலுள்ளாருடைய வறுமைநோய் தீர்க்கும் மருந்துபோல்பவனும் திருவெண்ணெய்நல்லூரில் வாழும் பெருமையிற் சிறந்தோனும் ஆன சடைய வள்ளலின் சொல்லை ஒத்த படைக்கலங்களை இராமனுக்கு உதவினூன்.

கு :—சடையன்சொல் தவருது பயன்விளைப்பதுபோல் தவருது பகைகளைந்து பயன்விளைவிக்க வல்ல படைக்கலம் என்றவாறு. தாடகையை வதைத்தபின் அன்று தாடகையிருந்த வனத்தில் தங்கி, இராமனுக்கு விசுவாமித்திரன் படைக்கலம் வழங்கிய பின்பே அவ்விடத்தை விட்டு விசுவாமித்திரனும் இராமலக்குமணரும் புறப்பட்டனர் என்பது வான்மீகத்திற் கண்டது. (1)

28 என்னும் குறியீடுள்ள சுவடியில் இச்செய்யுளுடன் தாடகைவதைப்படலம் முற்றுப்பெறுகிறது.

### படைக்கலங்கள் இராமபிரானை அடைதல்

420. ஆறிய வறிஞன் கூறி
யளித்தலு மண்ண றன்பால்
ஊறிய வுவகை யோடு
மும்பர்தம் படைக ளெல்லாம்
தேறிய மனத்தான் செய்த
நல்வினைப் பயன்க ளெல்லாம்
மாறிய பிறப்பிற் றேடி
வருவபோல் வந்த வன்றே.

ஆறிய அறிஞன் கூறி
அளித்தலும், அண்ணல் தன் பால்
ஊறிய வுவகை யோடும்
உம்பர்தம் படைகள் எல்லாம்,
தேறிய மனத்தான் செய்த
நல்வினைப் பயன்கள் எல்லாம்
மாறிய பிறப்பில் தேடி
வருவபோல் வந்த அன்று ஏ.

பொ :—பொறியடக்க முடைய அறிஞனாகிய விசுவாமித்திர முனிவன், (படைக்கலங்களின் பெயர் முதலியவற்றைக்) கூறிக் கொடுத்தலும், தேவர்களுடைய படைக்கலங்க ளெல்லாம், தெளிந்த மனமுடையானொருவன் (ஒரு பிறப்பில்) செய்த நல்வினையின் பயன்கள் யாவும், அவன் மறு பிறப்புற்றக்கால் அவனைத் தேடி வருதல் போல, பெருமையிற் சிறந்தோனான இராமபிரான் பக்கல் மிக்க மகிழ்ச்சியோடும் வந்து சேர்ந்தன.

கு :—ஆறுதல் - அடங்குதல்; இங்கே பொறியடக்கத்தைக் குறித்துநின்றது. அறிஞன் என்றது மெய்ப்பொருளுணர்வுடையோன் என்றவாறு. கூறி-(படைக்கலங்களின் பெயரும், அவற்றின் வரலாறும், அவற்றுக்குரிய தெய்வங்களும், மந்திரங்களும், அவற்றைப் பூசிக்கும் முறையும் ஏவும் முறையும் மீட்கும் முறையும் முதலியவற்றைச்) சொல்லி. விசுவாமித்திர முனிவனால் கொடுக்கப்பட்டவை, தெய்வப்படைக்கலங்களாதலின் அவற்

றுக்கு நல்வினைப்பயன்களை உவமை கூறினர். "பல்லாவுள் உய்த்து விடினும், குழக்கன்று, வல்லதாம் தாய் நாடிக் கோடலைத் - தொல்லைப் பழவினையும் அன்ன தகைத்தே தற்செய்த, கிழவனை நாடிக் கொளற்கு" (101) என்னும் நாலடிச்செய்யுளும் இங்கு நோக்கத்தகும். 'செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்றது' (28) என முன்னும், 'இருவினை யென்னலான' (அயோத்தியா, குகப். 46) எனப்பின்னும் ஆசிரியர், வினையினை உவமை கூறுதலும் காணலாம். (2)

**படைக்கலங்கள் இராமபிரானுக்குப் பணிபுரிய முன்வருதல்**

**421.** மேவினம் பிரித லாற்றேம்
வீரநீ விதியி னெம்மை
ஏவின செய்து நிற்று
மிளையவன் போல வென்று
தேவர்தம் படைகள் செப்பச்
செவ்விதென் றவனு நேரப்
பூவைபோ னிறத்தி னாற்குப்
புறத்தொழில் புரிந்த வன்றே.

**'மேவினம் பிரிதல் ஆற்றேம்;**
**வீர! நீ விதியின் எம்மை**
**ஏவின செய்து நிற்றும்**
**இளையவன் போல' என்று**
**தேவர்தம் படைகள் செப்பச்**
**'செவ்விது' என்று அவனும் நேரப்**
**பூவை போல் நிறத்தினாற்குப்**
**புறத்தொழில் புரிந்த அன்றே.**

பொ :—தேவருடைய அத்திரங்கள், 'வீர! (நின்பால்) அடைந்தோம்: (இனிப்) பிரியோம்; நீ எங்களை ஏவின பணிகளை இளையவ(னை இலக்குவ)னைப்போல முறைப்படி செய்வோம்' என்று சொல்ல, இராமனும், 'நன்று' என்று இசைய, (அப்படைகள்), பூவை வண்ணனை இராமபிரானுக்கு அன்றே குற்றேவல் செய்தன.

கு :—பிரிதல் ஆற்றேம் என்று கொண்டு பிரிதலைப் பொறுக்கும் வன்மையுடையோமல்லோம் என்று உரைப்பினும் அமையும்.

இளையவன்போல என்றது இலக்குவன் எல்லாக்காலத்தும் எல்லா இடத்தும் எல்லா நிலையினும் உடனுறைய்மன்னி எல்லாப் பணிகளும் செய்தல்போல என்றவாறு. (3)

27 என்னும் குறியீடுள்ள சுவடியில் இச்செய்யுளுடன் தாடகை வதைப்படலம் முற்றுப்பெறுகிறது.

**இராமபிரான் வினவும் விசுவாமித்திரன் விடையும்**

**422.** இனையன நிகழ்ந்த பின்னர்க்
காவத மிரண்டு சென்றார்
அனையவர் கேட்க வாண்டோ
ரரவம்வந் தணுகித் தோன்ற
முனைவவீ தியாவ தென்று
முன்னவன் வினவப் பின்னர்
வினையற நோற்று நின்ற
மேலவன் விளம்ப லுற்றான்.

**இனையன நிகழ்ந்த பின்னர்க்**
**காவதம் இரண்டு சென்றார்,**
**அனையவர் கேட்க ஆண்டு ஓர்**
**அரவம் வந்து அணுகித் தோன்ற,**
**'முனைவ! ஈது யாவது?' என்று**
**முன்னவன் வினவப் பின்னர்**
**வினை அற நோற்று நின்ற**
**மேலவன் விளம்பலுற்றான்.**

பொ:—இவை நிகழ்ந்தபின், அவர்கள் இரண்டு காதவழி நடந்து சென்றனர், அங்கே ஒரு பேரொலி அணிமையில் அவர் செவிப்புலனாக, மூத்தோனான இராமன், 'முனிசிரேட்டரே! இவ்வொலி எதனால் எழுந்தது? என்று வினவ, அதன்மேல் விசுவாமித்திரமுனிவன் கூறுவானாயினன்.

கு:—இனையன-இவை. காவதம்-காதம். அனையவர்-அவர்; என்றது விசுவாமித்திரன் இராமன் இலக்குவன்என்போரை, அரவம்-ஒலி. முனைவன்-முனிவன், முன்னவன்-மூத்தோன்; இராமன். வினை அறநோற்று நின்ற மேலவன்-(அறமும் பாவமும் ஆகிய) இரு வினைகளும் தொலையத் தவஞ்செய்து அத்தவநெறியிலே நிலைத்த மேலோன்; விசுவாமித்திரன். (4)

26 என்னும் குறியீடுள்ள சுவடியில் இச்செய்யுளுடன் தாடகை வதைப் படலம் முற்றுப்பெறுகிறது.

27 என்னும் குறியீடுள்ள சுவடியில் கோமதி யாற்றுப்படலம் தொடங்குகிறது.

### விசுவாமித்திரனும் இராமலக்குமணரும் கோமதிநதியை அடைதல்

**423.** மானச மடுவிற் றோன்றி
வருதலாற் சரயு வென்றே
மேன்முறை யமரர் போற்றும்
விழுநதி யதனி னேடும்
ஆனகோ மதிவந் தெய்து
மரவம தென்ன வப்பால்
போனபின் பவங்க டீர்க்கும்
புனிதமா நதியை யுற்றார்.

**'மானச மடுவில் தோன்றி வருதலால் சரயு என்று ஏ மேல் முறை அமரர் போற்றும் விழுநதி அதனினோடும், ஆன கோமதி வந்து எய்தும் அரவம் அது'என்ன அப்பால் போனபின், பவங்கள் தீர்க்கும் புனித மா நதியை உற்றார்.**

பொ :—அவ்வொலி', 'மானசசரசினின்று தோன்றி வருதலால் சரயு என்று தேவர்கள் உயர்ந்த முறையில் போற்றும் சிறந்த ஆற்றுடன் அந்தக் கோமதிநதி வந்து கூடுதலால் எழுந்த ஒலி' என்று (விசுவாமித்திரமுனிவன்) கூற, அவ் வெல்லை கடந்து சென்றபின் தீவினைகளைப்போக்கும் தூய பெரிய யாற்றை அடைந்தனர்.

கு :—மானசமடு – மானசசரசு. சரஸ் என்னும் வடசொல் நீர்நிலை என்று பொருள்படும். ஸரஸில் தோன்றியது – சரயு. ஆன – அந்த. பவம்-பிறவி; என்றது பிறவிக்குக் காரணமான தீவினையை. இங்கே கூறிய புனிதமாநதி இன்னதென்று புலப்பட வில்லை. கௌசிகி நதியாயிருக்கலாம் போலும். (5)

26 என்னும் குறியீடுள்ள சுவடியில் வேள்விப் படலம் தொடங்குகிறது.

## கௌசிகிநதியின் வரலாறு 424—433

### குசன் மக்கட்பேறு

**424.** சுரர்தொழு திறைஞ்சற் கொத்த
தூநதி யாவ தென்று
வரமுனி தன்னை யண்ணல்
வினவுற மலருள் வைகும்
பிரமனன் றளித்த வென்றிப்
பெருந்தகைக் குசனென் றோதும்
அரசர்கோன் மனைவி தன்பா
லளித்தவர் நால்வ ராவர்.

'சுரர் தொழுது இறைஞ்சற்கு ஒத்த
தூ நதி யாவது?' என்று
வர முனிதன்னை அண்ணல்
வினவுற, மலருள் வைகும்
பிரமன் அன்று அளித்த வென்றிப்
பெருந்தகைக் குசன் என்று ஓதும்
அரசர் கோன், மனைவிதன்பால்
அளித்தவர் நால்வர் ஆவர்.

பொ :—'தேவர்களும் வணங்கிப் பூசித்தற்கேற்ற தூயநதியின் வரலாறு யாது?' என்று இராமபிரான் முனிசிரேட்டனை விசுவாமித்திரனை வினவ (முனிவன் கூறுவானாயினன்.) தாமரைப் பூவில் தங்கும் பிரமனால் முற்காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட வெற்றியொடு பெருந்தன்மையும் உடையவனாகிய குசனென்று உலகம் பாராட்டிப் பேசும் அரசர்க்கரசன் தன் மனையாளிடம் தோற்றுவித்த மக்கள் நால்வராவர்.

கு :—யாவது - யாது. வர முனி - மேன்மையுள்ள முனி; விசுவாமித்திரன். கௌசிகி நதியின் வரலாறு வான்மீகத்தில் விசுவாமித்திரன் வேள்வி முற்றி மிதிலைக்குச் செல்லத் தொடங்கிய பொழுது பேசப்பட்டது. (6)

### குசனுடைய மைந்தர்பெயரும் அவர் ஆண்ட நகரங்களின் பெயரும்

425. குசன்குச நாபன் கோதில்
குணத்தினு தூர்த்தன் கொற்றத்
திசைகெழு வசுவென் றோது
மிவர்பெய ரிவர்க டம்முட்
குசன்கவு சாம்பி நாபன்
குளிர்மகோ தயமா தூர்த்தன்
வசையிறன் மவன மற்றை
வசுகிரி விரசம் வாழ்ந்தார்.

குசன், குசநாபன், கோது இல்
குணத்தின் ஆதூர்த்தன், கொற்றத்து
இசை கெழு வசு என்று ஓதும்
இவர் பெயர், இவர்கள் தம் உள்
குசன் கவுசாம்பி, நாபன்
குளிர் மகோதயம், ஆதூர்த்தன்
வசை இல் தன்மவனம், மற்றை
வசு கிரிவிரசம் வாழ்ந்தார்.

பொ :—இந்நால்வர் பெயரும் குசன் குசநாபன் ஆதூர்த்தன் வெற்றியால் விளைந்த புகழையுடைய வசு என்றுகூறப்படும். இவர்களுள் குசன் கௌசாம்பி நகரிலும், குசநாபன் குளிர்ந்த மகோதயம் என்னும் நகரிலும், ஆதூர்த்தன் குற்றமற்ற தன்மவனம் என்னும் நகரிலும், மற்றையோனான வசு கிரிவிரசநகரிலும் ஆட்சி புரிந்து வாழ்ந்தார்கள்.

கு :—முன்னவன் பெயர் குசாம்பன் எனவும் மூன்றாமவன் பெயர் ஆதூர்த்தரஜஸ் என்றும் வான்மீகம் கூறும். (7)

### குசநாபற்கு நூறுபெண்கள் பிறந்தமை

426. அவர்களிற் குசநா பற்கே
யையிரு பதின்ம ரஞ்சொல்
துவரிதழ்த் தெரிவை நல்லார்
தோன்றினர் வளரு நாளில்

இவர்பொழிற் றலைக்க ணயத்
தெய்துழி வாயு வெய்திக்
கவர்மனத் தினனு யந்தக்
கன்னியர் தம்மை நோக்கி.

அவர்களில் குசநாபற்கு ஏ ஐயிருபதின்மர் அம் சொல் துவர் இதழ்த் தெரிவை நல்லார் தோன்றினர், வளரும் நாளில், இவர், பொழில் தலைக்கண் ஆயத்து எய்துழி, வாயு எய்திக், கவர் மனத்தினன் ஆய், அந்தக் கன்னியர் தம்மை நோக்கி.

பொ :—அந்த நால்வருள், குசநாபனுக்கு (க் கிருதாசி என்பாளிடம்) அழகிய மொழியும் பவளம் போன்ற இதழும் உடைய நல்லவரான நூறு பெண்கள் தோன்றி வளர்ந்து வருங் காலத்தில் இவர்கள், சோலையின்கண் (மலர்கொய்தற்குத்) தோழியர்கூட்டத்துடன் சென்றபொழுது. வாயுதேவன் அங்கு வந்து, (அம் மகளிரை) முயங்கும்விழைவுடையனாய் அம்மகளிரைப் பார்த்து.

கு :—இதுவும் அடுத்த (429-ஆம்) பாட்டும் ஒரு தொடர். நோக்கி என்னும் எச்சம் அடுத்த பாட்டுள் உரைப்ப என்பதனோடு இயையும். 'இவர்பொழில்' என்று கொண்டு உயர்ந்தசோலை என்று பொருள் கூறலும் ஆம். துவர் - பவளம். ஆயம் – தோழியர்கூட்டம். கவர்தல் – முயங்குதல். 'கவர்மனத்தினனாய்' என்பதற்கு அம்மகளிரால் பறித்துக்கொள்ளப்பட்ட மனமுடையனாய் (அம்மகளிரின் அழகால் அவரிடம் சென்ற மனமுடையனாய்) என்று பொருள் உரைத்தலும் ஆம். (8)

### நூறுமகளிரும் வாயுதேவன் விருப்பிற்கு இசையாது இடர் உறுதல்

**427.** கொடித்தனி மகரங் கொண்டான்
குனிசிலைச் சரத்தா னொந்தேன்
வடித்தடங் கண்ணீ ரென்னை
மணத்திரென் றுரைப்ப வெந்தை
அடித்தலத் துரைத்து நீரோ
டளித்திடி னணைது மென்ன
ஒடித்தனன் வெரிநை வீழ்ந்தா
ரொளிவளை மகளி ரெல்லாம்.

'கொடித் தனி மகரம் கொண்டான்
குனி சிலைச் சரத்தால் நொந்தேன்;
வடித் தடம் கண்ணீர்! என்னை
மணத்திர்' என்று உரைப்ப 'எந்தை
அடித்தலத்து உரைத்து, நீரோடு
அளித்திடின் அணைதும்' என்ன,
ஒடித்தனன் வெரிநை; வீழ்ந்தார்
ஒளிவளை மகளிர் எல்லாம்.

பொ :—'மாவடுவின் பிளவை ஒத்த பெரிய கண்களையுடையவர்களே! ஒப்பற்ற மீனக்கொடியுடைய மன்மதனது வளைந்த வில்லினின்று புறப்படும் அம்புகளால் வருந்தினேன்: (அவ்வருத்தந் தீர என்னை அணைவீர்களாக' என்று சொல்ல, அவர்கள் 'எங்கள் தந்தையிடம் இதனை (நீர்) கூற, (அவர் அதற்கு இசைந்து, உமக்கு எங்களை) நீருடன் கொடுத்தால் அணைவோம்' என்றுகூற, (வாயு முனிந்து அவர்களுடைய) முதுகை ஒடிக்க, (அதனால்) ஒளிவாய்ந்த வளைகளை அணிந்த அம்மகளிர் அனைவரும் விழுந்தார்கள்.

கு :—எந்தை அடித்தலத்து உரைத்து என்றது தந்தைபால் அம்மகளிர்க்குள்ள பெருமதிப்பை உணர்த்தியது. உரைத்து என்னும் செய்தென் எச்சத்தை உரைக்க எனச் செயவென் எச்சமாகத் திரிக்க. ஒடித்தனன் என்பது முற்றெச்சம். (9)

குசநாபன் மகளிரைப் பிரமதத்தனுக்கு மணஞ்செய்வித்தல்

428. சமிரண னகன்ற பின்னர்த்
தையலார் தவழ்ந்து சென்றே
அமிர் துகு குதலை மாழ்கி
யரசன்மாட் டுரைப்ப வன்னான்
நிமிர்குழல் மடவார்த் தேற்றி
நிறைதவன் சூளி நல்கும்
திமிரறு பிரம தத்தற்
களித்தனன் றிருவ னாரை.

சமிரணன் அகன்ற பின்னர்த்,
தையலார் தவழ்ந்து சென்றே
அமிர்து உகு குதலை மாழ்கி,
அரசன் மாட்டு உரைப்ப, அன்னான்

நிமிர் குழல் மடவார்த் தேற்றி,
நிறை தவன் சூளி நல்கும்
திமிர் அறு பிரமதத்தற்கு
அளித்தனன், திரு அனுரை.

பொ :—வாயு நீங்கியபின் அம்மகளிர் தவழ்ந்து சென்று, அமுதமும் சுவைகெடும் இனிய மழலைச் சொல்லொடு மயங்கி, அரசனாகிய குசநாபனிடம் (நிகழ்ந்தன) சொல்ல, அவன் நீண்டகூந்தலையுடைய அம்மகளிரைத் தேற்றி, நிறைந்த தவத்தையுடையனான சூளி என்பவன் உதவிய மயக்கம் நீங்கிய பிரமதத்தன் என்பானுக்குத் திருமகள் போல்வாராகிய அம்மகளிரை(மணம் செய்து) கொடுத்தான்.

கு :—சமீரணன் – வாயு. நிமிர்தல் - நீளுதல். திமிரம் என்பது அம் கெட்டுத் திமிர் என நின்றது. திமிரம் - இருள் ; அஃது இங்கே மயக்கத்தை உணர்த்தி நின்றது. மகளிர் நூற்றுவருள் ஒவ்வொருவரும் திருமகளை ஒப்பவர் என்றபடி. சூளி, பிரமதத்தன் என்னும் முனிவருக்கு ஸோமதை என்னும் கந்தருவமகளிடம் பிறந்தவன்; காம்பிலியை என்னும் நகரத்தை ஆண்டு வந்தவன்; என்பது வான்மீகத்திற் கண்டது. (10)

மகளிர் கூன்நீக்கமும் குசநாபன் புதல்வற்பேறும்

429. அவன்மலர்க் கைக டீண்டக்
கூனிமிர்ந் தழகு வாய்த்தார்
புவனமுற் றுடைய கோவும்
புதல்வரில் லாமை வேள்வி
தவர்களிற் புரித லோடுந்
தகையுறத் தழலி னுப்பண்
கவனவே கத்து ரங்கக்
காதிவந் துதயஞ் செய்தான்.

அவன் மலர்க் கைகள் தீண்டக்,
கூன் நிமிர்ந்து அழகு வாய்த்தார் ;
புவனம் முற்று உடைய கோவும்
புதல்வர் இல்லாமை, வேள்வி

தவர்களின் புரிதலோடும்,
தகை உறுஅத் தழலின் நாப்பண்
கவன வேகத் துரங்கக்
காதிவந்து உதயம் செய்தான்.

பொ:—அந்தப் பிரமதத்தன், தாமரை மலர்போன்ற (அம் மகளிர்) கைகளைத் தீண்டுதலும், (அம்மகளிர்) கூன் நீங்கி மிக்க அழகுடையரராயினர். உலகம் முழுதும் உடைய அரசனுன குசநாப னும், தனக்குப் புத்திரர் இல்லாமையால் தவத்தின் மிக்காரைக் கொண்டு வேள்விசெய்தலும், நன்மைமிக்க அவ்வேள்வித்தீயின் இடையே மிக்க வேகம் வாய்ந்த குதிரைகளையுடைய காதியென்ப வன் வந்து தோன்றினன்.

கு:—புவனமுற்றும் என உம்மை விரிக்க. (11)

### காதி அரசெய்தியதும் மக்களைப்பெற்றதும்

430. அன்னவன் றனக்கு வேந்த
னரசொடு முடியு மீந்து
பொன்னக ரடைந்த பின்னர்ப்
புகழ்மகோ தயத்தில் வாழும்
மன்னவன் காதிக்கி யானுங்
கவுசிகி யென்னு மாதும்
முன்னர்வந் துதிப்ப வந்த
முடியுடை வேந்தர் வேந்தன்.

**அன்னவன்தனக்கு வேந்தன் அரசொடு முடியும் ஈந்து, பொன்னகர் அடைந்த பின்னர்ப், புகழ் மகோதயத்தில் வாழும் மன்னவன் காதிக்கு, யானும் கவுசிகி என்னும் மாதும் முன்னர் வந்து உதிப்ப, அந்த முடியுடை வேந்தர் வேந்தன்.**

பொ:—அரசனுன குசநாபன், அந்தக் காதிக்கு அரசபதவியும் அதற்குரிய முடியும் தந்து சுவர்க்கம் அடைந்தபின், மகோதயத் தில் வாழும் அரசனுகிய காதிக்கு, முன்னே கௌசிகி என்னும் பெண்ணும் (பின்னே) யானும் வந்து பிறக்க, அந்த முடிசூடிய அரசர்க்கரசன்.

கு:—இச்செய்யுளும் அடுத்துப் பின்வரும் பாடலும் ஒரு தொடர். இதனுள், 'முடியுடை வேந்தர் வேந்தன்' என்ற எழு

வாய் பின்வரும் செய்யுளில் 'ஈந்தான்' என்னும் பயனிலைகொண்டு முடியும், காதியின் மகளாய்ப் பிறந்த நிலையில் சத்தியவதி என்ற பெயரும், அவள் பின் நதியாயின நிலையில், கௌசிகி என்ற பெயரும் வான்மிகத்துக் கண்டது. கௌசிகி முன் பிறந்தாள் : 'எம் முனுள் நங்கை' (15) என்று இப்படலத்தே பின் கூறப்பட்டது; ஆதலின், 'முன்னர்க் கௌசிகி என்னும் மாதும்' (பின்னர்) யானும் என்று கூட்டி உரைவரையலாயிற்று. (12)

### கௌசிகியை இரிசிகன் மணந்துவாழ்ந்து பிரமபதம்புகுதல்

**431.** பிருகுவின் மதலை யாய
பெருந்தகைப் பிதாவு மொவ்வா
இரிசிக னென்ப வற்கு
மெல்லிய லாளை யீந்தான்
அருமறை யவனுஞ் சின்னா
ளறம்பொரு ளின்ப முற்றி
விரிமலர்த் தவிசோன் றன்பால்
விழுத்தவஞ் செய்து மீண்டான்.

பிருகுவின் மதலை ஆய பெருந்தகைப் பிதாவும் ஒவ்வா
இரிசிகன் என்பவற்கு மெல் இயலாளை ஈந்தான்;
அரு மறை அவனும் சில் நாள் அறம் பொருள் இன்பம் முற்றி
விரி மலர்த் தவிசோன் தன் பால் விழுத் தவம் செய்து மீண்டான்.

பொ :—(முடியுடை வேந்தர் வேந்தனான காதி,) பிருகு முனிவனுடைய புதல்வனாகிய பெருங்குணமுடைய தந்தையும் உவமையாகாத (பெருமைவாய்ந்த) இரிசிகன் என்பவனுக்கு மென்மைத் தன்மையுடைய அக்கௌசிகியை (மணஞ்செய்து) கொடுத்தான்; அறிதற்கரிய மறைகளை யறிந்த அந்த இரிசிகனும் (கௌசிகியோடு) சில நாள் (வாழ்ந்து) அறம் பொருள் இன்பங்களை அடைந்து, பின் சிறந்த தவஞ்செய்து, மலர்ந்த தாமரையாகிய பீடத்திலிருக்கின்ற பிரமன்பால் மீண்டான்.

கு :—பிருகுவின் மதலையாய இரிசிகன், பெருந்தகைப் பிதாவும் ஒவ்வா இரிசிகன் என இயைக்க. (13)

## இரிசிகன் பிரமனுலகிற்புகுதல்

**432.** காதலன் சேணி னீங்கக்
கௌசிகி தரிக்க லாற்ருள்
மீதுறப் படர லுற்ருள்
விழுநதி வடிவ மாகி
மாதவர்க் கரசு நோக்கி
மாநிலத் துறுக ணீக்கப்
போதுக நதியா யென்னுப்
பூமக னுலகு புக்கான்.

காதலன் சேணில் நீங்கக் கௌசிகி தரிக்கல் ஆற்ருள், மீது உறப் படரல் உற்ருள், விழுநதி வடிவம் ஆகி; மா தவர்க்கு அரசும் நோக்கி, "மா நிலத்து உறுகண் நீக்கப் போதுக நதியாய்" என்னுப் பூமகன் உலகு புக்கான்.

பொ:—காதலனை இரிசிகன் விசும்பிலே பிரிந்து நீங்குதலால் கௌசிகி ஆற்ருதவளாய், ஒரு சிறந்த நதியின் உருக்கொண்டு விசும்பிலே அவனைத் தொடரச் சென்ருள்; பெரிய தவத்தினர்க்கு அரசனுகிய இரிசிகனும், (கௌசிகி தன்னைத் தொடர்ந்து வருதலைப்) பார்த்து, 'பெரிய பூதலத்துள்ளாருடைய துன்பங்களை நீக்கும் பொருட்டு நதியாகவே செல்லுக' என்று கூறிப் பிரமன் உலகிற் புக்கான்.

கு:—இங்கே, மாதவர்க்கு அரசு என்றது இரிசிகனை. உறுகண் – துன்பம்; போதுக – செல்லுக. 'போது கோமதியா வென்னு' என்று பல ஏடுகளிற் காணப்படும் பாடம் 5-ஆம் பாடலில் 'ஆனகோமதிவந்தெய்தும் அரவம்' என்பதனேடு பொருந்தியமைகிறது. (14)

## கௌசிகிவரலாறுகேட்டு வியந்த குமரர் வினவும் முனிவன் விடையும்

**433.** எம்முனு ணங்கை யிந்த
விருநதி யாயி னுளென்
றம்முனி புகலக் கேளா
வதிசய மிகவுந் தோன்றச்

செம்மலு மிளைய கோவுஞ்
சிறிதிடந் தீர்ந்த பின்னர்
மைம்மலி பொழில்யா தென்ன
மாதவன் கூற லுற்றான்

'எம் முனாள் நங்கை, இந்த இரு நதி ஆயினாள்' என்று
அம் முனி புகலக் கேளா அதிசயம் மிகவும் தோன்றச்
செம்மலும் இளையகோவும் சிறிது இடம் தீர்ந்த பின்னர்
'மை மலி பொழில் யாது? என்ன மாதவன் கூறல் உற்றான்.

பொ:—எமக்கு முன்பிறந்தவளான பெண்களிற் சிறந்த கௌசிகி, இந்தப் பெரிய ஆறாயினாள் என்று அந்த விசுவாமித்திர முனிவன் கூறக் கேட்டு இராமனும் இலக்குவனும் மிகவும் ஆச்சரியம் தோன்றச் சிறிது நிலம் கடந்தபின், (ஒரு சோலை எதிரே தோன்ற) இந்த 'இருண்டசோலை யாது?' என்று வினவப் பெரிய தவத்தையுடைய விசுவாமித்திரன் கூறுவானாயினான். (15)

### சித்தாச்சிரமத்தின் பெருமை

**434.** தங்கணா யகரிற் றெய்வந்
தான்பிறி தில்லென் றெண்ணும்
மங்கைமார் சிந்தை போலத்
தூயது மற்றுங் கேளாய்
எங்கணான் மறைக்குந் தேவ
ரறிவுக்கும் பிறர்க்கு மெட்டாச்
செங்கண்மா லிருந்து மேனாட்
செய்தவஞ் செய்த தன்றே.

'தங்கள் நாயகரில், தெய்வம்
தான் பிறிது இல்' என்று எண்ணும்
மங்கைமார் சிந்தை போலத்
தூயது; மற்றும் கேளாய்!
எம் கண் நால் மறைக்கும் தேவர்
அறிவுக்கும் பிறர்க்கும் எட்டாச்
செங்கண்மால் இருந்து மேல் நாள்
செய் தவம் செய்தது; அன்று ஏ.

பொ :—(இப்பொழில்) 'தங்கள் கணவரினும் சிறந்த பிறிதொரு தெய்வம் இல்லை' என்று நினைக்கின்ற கற்புடைய மகளிர் மனம்போலத் தூய்மை வாய்ந்தது; மேலும், (அதன் பெருமையைக்) கேட்பாயாக :—எங்களுக்குக் கண்ணாகிய நான்கு வேதங்களுக்கும் தேவர்களுடைய அறிவுக்கும் மற்றையோர் அறிவுக்கும் அகப்படாத செவ்விய கண்களையுடைய திருமால் முற்காலத்தே தங்கிச் செய்யத்தக்க தவத்தைச் செய்யப்பெற்ற பெருமையுடையது.

கு :—தங்கள் கணவரினும் சிறந்த பிறிதொரு தெய்வம் இன்றெனவே அவரைப் பூசித்தலினும் சிறந்த பிறிதொரு தவமும் இன்று என்பது தானே போதரும். இது, 'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்' என்னும் திருக்குறட் பொருளமைதியுடையது. 'தங்கள் நாயகரிற் றெய்வம் தவம் பிறிதிலவென் றெண்ணும்' என்று பாடங்கொண்டு, "தங்கள் கணவரினும் சிறந்த தெய்வமும் தவமும் வேறில்லை யென்று கருதும்" என்று பொருளுரைப்பாரும் உண்டு. கண்போன்று நன்னெறி தீநெறிகளைக் காட்டுதலால் 'எம் கண் (ஆகிய) நான்மறையென்றார். எங்கள் நான்மறை எனினும் ஆம். (16)

### திருமால் தவஞ்செய்தமை

435. பாரின்பால் விசும்பின் பாலும்
பற்றறப் படிப்ப தன்னான்
பேரென்பா னவன்செய் மாயப்
பெரும்பிணக் கொருங்கு தேர்வார்
ஆரென்பா னமல மூர்த்தி
கருதிய தறித றேற்றும்
ஈரைம்பா னூழிக் கால
மிருந்தவ மியற்றி யிட்டான்.

'பாரின்பால் விசும்பின்பாலும்
பற்று அறப் படிப்பது, அன்னான்
பேர்' என்பான், 'அவன் செய் மாயப்
பெரும்பிணக்கு ஒருங்கு தேர்வார்
ஆர் ?' என்பான், அமல மூர்த்தி
கருதியது, அறிதல் தேற்றும்;
ஈர் ஐம்பான் ஊழிக் காலம்
இருந்தவம் இயற்றியிட்டான்.

பொ :—மண்ணுலகினும் வானுலகினும் பற்றறும்பொருட்டுப் படிப்பது அவன் திருநாமம் என்று உலகத்தாரால் கூறப்படுபவனும், 'அவன் செய்யும் மாறுபாட்டொடு கூடிய மாயச் செயல்கள் முழுவதையும் அறிவார் எவர்? என்று உசாவப்படுபவனுமான தூய திருவுருவுடைய அந்த இறைவன் குறிக்கோள் இது என்று அறியோம்; அவன் நூறு ஊழிக்காலம் பெரியதவத்தைச் செய்தான்.

கு:—அன்னான், அவன், அமலமூர்த்தி என்பவை முன்பாட்டில் உள்ள செங்கண்மால் என்பதனைச் சுட்டி நின்றன. (17)

## மாவலி வரலாறு 436—452

### மாவலி மூன்றுலகும் வௌவுதல்

**436.** ஆனவ னிங்குறை கின்றவந் நாள்வாய்
★ ஊனமில் ஞால மொடுங்கு மெயிற்றாண்
ஏனமெ னுந்திறன் மாவலி யென்பான்
வானமும் வையமும் வௌவுதல் செய்தான்.

**ஆனவன் இங்கு உறைகின்ற அந் நாள்வாய்,**
**ஊனம் இல் ஞாலம் ஒடுங்கும் எயிற்று ஆண்**
**ஏனம் எனும் திறல் மாவலி என்பான்,**
**வானமும் வையமும் வௌவுதல் செய்தான்.**

பொ :—அவன் இங்கே இருக்கின்ற அக்காலத்தில், குற்றமற்ற உலகம் ஒடுங்கிக் கிடக்கும் பற்களையுடைய வராகப் பெருமான் என்று கூறத்தக்க ஆற்றலையுடைய மாவலி யென்று வழங்கும் பெயருடையான் வானுலகத்தையும் மண்ணுலகத்தையும் கவர்ந்தான். (18)

### மாவலி வேள்விமுற்றித் தானம்வழங்கக் கருதுதல்

**437.** செய்தவன் வானவ ருஞ்செய லாற்றா
நெய்தவழ் வேள்வியை முற்றின னின்றான்
ஐயமில் சிந்தைய னந்தணர் தம்பால்
வையமும் யாவும் வழங்க வலித்தான்.

செய்தவன் வானவரும் செயல் ஆற்று
நெய் தவழ் வேள்வியை முற்றினன் நின்றான்
ஐயம் இல் சிந்தையன் அந்தணர் தம்பால்
வையமும் யாவும் வழங்க வலித்தான்.

பொ :—(வெளவுதல்) செய்தவனான மாவலி, தேவரும் செய் தற்கு அரியதும் நெய் மிகவும் பயிலுவதுமான ஒரு வேள்வியை முற்றுவித்து நின்று ஐயமற்ற மனமுடையனாய், அந்தணரிடம் உலகத்தையும் பிற எல்லாவற்றையும் வழங்கக் கருதினான்.

கு:—செய்தவன் என்பது முன்பாட்டில் வானமும் வையமும் வெளவுதல் செய்தான் என்பதன் அநுவாதம். (19)

தேவர்முறையீடும் திருமால் அருளுதலும்

438. ஆயத றிந்தனர் வானவ ரந்நாள்
மாயனை வந்து வணங்கி யிரந்தார்
தீயவன் வெந்தொழி றீரென நின்றார்
நாயக னும்மது செய்ய நயந்தான்.

ஆயது அறிந்தனர் வானவர் அந்நாள்
மாயனை வந்து வணங்கி இரந்தார்;
'தீயவன் வெம் தொழில் தீர்' என நின்றார்;
நாயகனும் அது செய்ய நயந்தான்.

பொ :—தேவர்கள், (மாவலிபால்) நிகழ்ந்ததனை அறிந்தவர் களாய் அப்பொழுது திருமாலைக் கிட்டி வணங்கி நின்று, கொடி யோனான மாவலியின் தீயசெயலை ஒழித்தருளுக' என்று வேண்டி னார்: தலைவனான திருமாலும் அதனைச் செய்ய விரும்பினான்.

கு:—ஆயது - நிகழ்ந்தது=மாவலி வையமும் யாவும் வழங்க வலித்தது. தீயவன் என்றது மாவலியைக்குறித்தது. (20)

திருமால் காசிபன் மகவாதல்

439. கால நுனித்துணர் காசிப னுக்கும்
வாலதி திக்குமோர் மாமக வாகி
நீல நிறத்து நெடுந்தகை வந்தோர்
ஆலமர் வித்தி னருங்குற ளானான்.

காலம் நுனித்து உணர் காசிபனுக்கும்
வால் அதிதிக்கும் ஓர் மா மகவு ஆகி,
நீல நிறத்து நெடுந்தகை வந்து, ஓர்
ஆல் அமர் வித்தின் அரும் குறள் ஆனான்.

பொ :—நீலநிறநெடியோனான திருமால், (நன் மகனைப் பெறுதற்கேற்ற) காலத்தைக் கூர்ந்து நோக்கி அறிந்த காசிப முனிவனுக்கும், தூய அதிதிக்கும் ஒரு குழவியாய் வந்து, (பெரிய) ஆலமரம் அடங்கிய (சிறிய) விதைபோல, அறிதற்கரிய பெருமையுடைய (விசுவரூபம் அடங்கிய) குறள் உருவாய்த் தோன்றினான்.

கு :—நீல நிறத்து நெடுந்தகை - திருமால். 'ஆலம்வித்தனைய தெண்ணியழிவினு ளகன்று நின்றேன்' (சீவகசிந்தாமணி 476) என்று கருவில் தங்கிய சீவகனைக் கூறியதும் இங்கு ஒருபுடை ஒப்பு நோக்கத்தகும். (21)

### வாமனன் மாவலியிடம் செல்லுதல்

**440.** முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சை
கற்பதொர் நாவன னற்படு கையன்
அற்புத னற்புத ரேயறி யுந்தன்
சிற்பத மொப்பதொர் மெய்க்கொடு சென்றான்.

முப்புரி நூலினன், முஞ்சியன், விஞ்சை
கற்பது ஓர் நாவன், அனல் படு கையன்,
அற்புதன், அற்புதரே அறியும் தன்
சிற்பதம் ஒப்பது ஓர் மெய்க்கொடு சென்றான்.

பொ :—வியக்கத்தக்கவனாகிய வாமனன், முப்புரிநூலினையும், தருப்பைப்புல்லால் ஆகிய அரைஞாணினையும், மந்திரங்களை உருச்சொல்லும் நாவினையும், எரிவளரும் கையினையும் உடையனாய் அதிசயம் விளைக்கும் அறிஞர்களாலேயே அறியத்தக்க தன் ஞானவுருவத்தை ஒத்த வடிவு பூண்டு (மாவலியின் வேள்விச்சாலைக்குச்) சென்றான்.

கு:—முஞ்சி-தருப்பைப் புல்லாற்செய்த அரைநாண். விஞ்சை-மந்திரம். சிற்பதம் - ஞானசொரூபம் ; எங்கும் பரவி விளங்கும் அத்தன்மை சிறிதும் குன்றாது ஒடுங்கி யோகியரின் உள்ளத்தே காட்சியளிக்கும் இறைசொரூபம். (22)

### மாவலி வாமனனைவரவேற்று முகமன் கூறுதல்

**441.** அன்றவன் வந்த தறிந்துல கெல்லாம்
வென்றவன் முந்தி வியந்தெதிர் கொண்டான்
நின்றனி னந்தண ரில்லை நிறைந்தோய்
என்றனி னுய்ந்தவர் யாருள ரென்றான்.

அன்று அவன் வந்தது அறிந்து, உலகு எல்லாம்
வென்றவன் முந்தி வியந்து, எதிர் கொண்டான் ;
'நின் தனின் அந்தணர் இல்லை ; நிறைந்தோய்
என் தனின் உய்ந்தவர் யார் உளர் ?' என்றான்.

பொ :—உலகையெல்லாம் வென்ற மாவலி, அப்போது அந்த வாமனன் வந்ததை அறிந்து வியந்து விரைந்து (அவனை) எதிர் கொண்டு '(அறிவும் ஒழுக்கமும்) நிறைந்தவனே! அந்தணருள் நின்னினும் சிறந்தோர் இல்லை; (அந்தணரருட்கு இலக்காய் உய்ந்தோருள்) என்னினும் உய்தி பெற்றுயர்ந்தோர் எவர் உளர்?' (ஒருவரும் இல்லை.) (23)

### வாமனன் மாவலியைப் பாராட்டுதல்

**442.** ஆண்டகை யவ்வகை கூற வறிந்தோன்
வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி
நீண்டகை யாயினி நின்னுழை வந்தோர்
மாண்டவ ரல்லவர் மாண்பில ரென்றான்.

ஆண் தகை அவ் வகை கூற அறிந்தோன்,
'வேண்டினர் வேட்கையின் மேல்பட வீசி
நீண்ட கையாய்! இனி நின் உழை வந்தோர்
மாண்டவர்; அல்லவர் மாண்பு இலர்' என்றான்.

பொ :—ஆடவருள் மேம்பட்டவனான மாவலி, அவ்வாறு பாராட்டிப்பேச (எல்லாம்) அறிந்தோனான வாமனன், 'விரும்பினோர் விரும்பிய அளவினும் மிக வரையாது வழங்கியதனால் பெரிய கைத்தலங்களை யுடையவனே! உன்னிடம் (ஒன்றைப் பெற விழைந்து) வந்தவரே பெருமையுடையோர்; அவ்வாறு வராதவர் பெருமையில்லாதவர் ' என்றான்.

கு :—' கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன் நின்று - இரப்பும் ஓர் ஏ எர் உடைத்து' (திருக்குறள். 1053) என்றாராகலின், 'நின்னுழை வந்தோர் மாண்டவர்' என்றார். (24)

## மாவலி வழங்கலும் வெள்ளி தடுத்தலும்

**443.** சிந்தை யுவந்தெதி ரென்செய வென்றான்
அந்தணன் மூவடி மண்ணரு ளுண்டேல்
வெந்திற லோய்தர வேண்டுமெ னுமுன்
தந்தன னென்றனன் வெள்ளி தடுத்தான்.

சிந்தை உவந்து எதிர் 'என் செய?' என்றான்,
அந்தணன் 'மூவடி மண் அருள் உண்டேல்,
வெந்திறலோய்! தரவேண்டும்' எனுமுன்,
'தந்தனன்' என்றனன்: வெள்ளி தடுத்தான்.

பொ :—(மாவலி) மனம் மகிழ்ந்து வாமனன் உரைக்கு மறுமொழியாக, 'யான் என்ன செய்ய வேண்டும்?' என்றான்; அந்தணனாகிய வாமனன், 'பெருவலியுடையோனே! என்பால் உனக்கு அருள் உளதேல், மூன்றடி மண் தர வேண்டும்' என்று சொல்லு முன்னே, மாவலி 'தந்தேன்' என்றான்; வெள்ளி அவன் கொடுப்பதைத் தடுத்தான்.

கு:—அந்தணன், 'வெந்திறலோய்! அருளுண்டேல், மூவடி மண் தர வேண்டும்' எனு முன் என இயைக்க, வெள்ளி-சுக்கிரன். 'வெம் திறல் ஓய்தர வேண்டும்' என்று பிறிதோர் பொருளும் தொனிக்க நின்றது. (25)

## வெள்ளிகூறிய தடையுரை

**444.** கண்டதி றத்திது கைதவ மைய
கொண்ட னிறக்குற னென்பது கொள்ளேல்
அண்டமு முற்றும கண்டமு மேனுள்
உண்டவ னுமிது ணர்ந்துகொ ளென்றான்.

'கண்ட திறத்து இது கைதவம், ஐய!
கொண்டல் நிறக் குறள் என்பது கொள்ளேல்;
அண்டமும் முற்றும் அகண்டமும் மேல் நாள்
உண்டவன் ஆம் இது, உணர்ந்துகொள்!' என்றான்.

பொ:—(வெள்ளி) 'ஐய! காணப்பட்ட தன்மையையுடைய இது, மாயவடிவமாகும்; மேகம்போன்ற கரியநிறமுடைய குறளுருவென்று கருதாதே, முற்காலத்தே உலகத்தையும் உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும் மற்றும் அனைத்தையும் சிறிதும் எஞ்சாமல் உண்டவனுவன் இவன்; இதை நீ நன்கு அறிந்து கொள்க;' என்றான்.

கு:—திறம் - தன்மை; உடலும் ஆம். கைதவம் - வஞ்சகம். (26)

வெள்ளியை நோக்கி மாவலி விளம்பல் 445-451

445. நினைக்கிலை யென்கை நிமிர்ந்திட வந்து
தனக்கிய லாவகை தாழ்வது தாழ்வில்
கனக்கரி யானது கைத்தல மென்னின்
எனக்கிதன் மேனலம் யாதுகொ லென்றான்.

'நினைக்கிலை; என்கை நிமிர்ந்து இட, வந்து
தனக்கு இயலாவகை தாழ்வது, தாழ்வு இல்
கனக் கரியானது கைத்தலம் என்னின்,
எனக்கு இதன்மேல் நலம் யாதுகொல்?' என்றான்.

பொ:—(மாவலி, வெள்ளியை நோக்கி,) 'நீ நன்றாக ஆலோசிக்கவில்லை; என்கை மேனின்று வழங்கும்படி, தன்னுடைய பெருமைக்குத் தகாதவாறு வந்து தாழ்வது, ஒரு குறையும் இல்லாத நீருண்டமேகம் போன்ற கருநிற முடைய திருமாலின் கைத்தலம் என்றால் எனக்கு இதினும் மேம்பட்ட பேறு வேறு யாது உளது?' (ஒன்றும் இல்லை) என்று கூறினன்.

கு:—தாழ்வது–தாழ்ந்து நின்று ஏற்பது என்றபடி. நிமிர்ந்திட என்பதனை ஒரு சொல்லாகக்கொண்டு மேற்பட என்று பொருளுரைத்தலும் ஆம். (27)

**446.** துன்னினர் துன்னல ரென்பது சொல்லார்
முன்னிய நன்னெறி நூலவர் முன்வந்
துன்னிய தான முயர்ந்தவர் கொள்க
என்னினி வன்றுணை யாவரு யர்ந்தார்.

'துன்னினர் துன்னலர் என்பது சொல்லார்,
முன்னிய நல் நெறி நூலவர், முன்வந்து
உன்னிய தானம் உயர்ந்தவர் கொள்க
என்னின், இவன் துணை யாவர் உயர்ந்தார்?'

பொ :—மதிக்கத்தக்க ஒழுக்கநெறி கூறும் அறநூலுடையார், "நட்பினர் பகைவர் என்னுமல், உயர்ந்தோர் முன் வந்து நினைந்த தானம் பெறுக' என்று கூறுவராயின், (இப்போது இங்குவந்துள்ள) இவனளவு உயர்ந்தவர் யார்? (ஒருவரும் இல்லையே).

கு :—முன்னுதல் - மதித்தல். நன்னெறி நூல் - ஒழுகலாறு கூறும் தரும சாத்திரம். இவன் துணை – இவனளவு. (28)

**447.** வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில வின்னுயி ரேனும்
கொள்ளுத றீது கொடுப்பது நன்றால்.

'வெள்ளியை ஆதல் விளம்பினை; மேலோர்
வள்ளியர் ஆக, வழங்குவது அல்லால்
எள்ளுவ என் சில ? இன் உயிரேனும்
கொள்ளுதல் தீது; கொடுப்பது நன்று ஆல்.'

பொ :—'புல்லறிவுடையை ஆதல் (வெளிப்பட இவ்வாறு தடை) கூறினை. உயர்ந்தோர் வண்மையுடையவராக நின்று வழங்குவதன்றிச் சிலபழிகளைக் கூறுவது ஏன்? இனிய உயிரேயாயினும் (பிறரிடம் ஏற்றும்) பெறுதல் தீது; கொடுத்தல் நல்லது.'

கு :—வெள்ளியை என்பதற்கு வெள்ளி யென்னும் பெயருடையை என்று பொருளுரைத்தலும் ஆம். இப்பொருள் கொள்ளுங்கால் ஆதல் விளம்பினை என்பதற்கு (உன்புத்திக்கு நல்லது) ஆதலைச் சொன்னாய் என்று பொருள் கொள்க. 'கொள்ளுதல் தீது

கொடுப்பது நன்று' என்றது, 'நல்லா றெனினுங் கொளல் தீது, மேலுலகம் இல் எனினும் ஈதலே நன்று' (222) என்னும் திருக் குறட் கருத்தமைந்தது. (29)

**448.** மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா
தேந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய்
வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனும்
ஈந்தவ ரல்ல திருந்தவர் யாரே.

'மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர்கள்; மாயாது
ஏந்திய கைகொடு இரந்தவர்; எந்தாய்!
வீந்தவர் என்பவர்; வீந்தவரேனும்
ஈந்தவர் அல்லது இருந்தவர் யாரே?'

பொ:—'எந்தையே! இறந்தோர் இறந்தோரல்லர்; இறவாமல் ஏந்திய கையைக்கொண்டு ஏற்றவரே இறந்தோராவர்; இறந்தோ ரானுலும், வள்ளியோரையன்றி மற்றையோருள் நிலைத்திருந்தோர் யாவர்?

ரு:—குரவனுதலின் 'எந்தாய்!' என்ருன். இரவலன் இருந்தும் பயனெய்தாமையின் செத்தவனே ஆவன்; கொடையாளி இறந்தா லும் புகழாகிய நிலைத்த பயன் பெற்றமையின் இருந்தவனே ஆவன் என்றவாறு. மாய்தல் வீதல் என்பவை சாதல் என்னும் ஒரு பொருள் குறித்தன. இங்கு, 'நத்தம் போற் கேடும் உளதாகும் சாக்காடும், வித்தகர்க்கல்லால் அரிது' என்னும் குறளின் கருத்து அமைந்தமை காணத்தகும். (30)

**449.** அடுப்ப வரும்பழி செய்ஞ்ஞரு மல்லர்
கோடுப்பவர் முன்பு கொடேலென நின்று
தடுப்பவரே பகை தம்மையு மன்னுர்
கெடுப்பவ ரன்னதொர் கேடிலை யென்ருன்.

'அடுப்ப அரும் பழி செய்ஞ்ஞரும் அல்லர்,
கொடுப்பவர் முன்பு, 'கொடேல்' என நின்று
தடுப்பவரே பகை; தம்மையும் அன்னுர்
கெடுப்பவர்; அன்னது ஓர் கேடு இலை' என்ருன்.

பொ :—தடுத்தற்கரிய பழி வந்து சேரும்படி (தீவினைகளைச்) செய்பவரும் பகைவரல்லர்; கொடுப்பவர் எதிரே நின்று 'கொடேல்' என்று தடுப்பவரே பகைவராவர்; (அவ்வாறு, தடுக்கும்) அவர், தங்களையும் கெடுப்பவர் ஆவர்; அக்கேட்டினை ஒத்த தொரு கேடு (வேறு) இல்லை.

கு :—அரும்பழி அடுப்ப வினை செய்ஞ்ஞரும் பகை அல்லர் எனவும், கொடுப்பவர் முன்பு நின்று கொடேல் எனத் தடுப்பவரே பகை எனவும் இயையும். பகை என்பது முன்னும் கூட்டப் பட்டது. தடுப்பவரே என்பதனுள் ஏகாரம் தேற்றம். தம்மையும் கெடுப்பவர் என்றமையால், தம்மைச் சார்ந்தோரையும் கெடுத்தல் பெறப்படும். பழிச்செயல் புரிவோர் தாம் கெடுவர்; அவர் சுற்றம் கெடுதல் இல்லை. கொடுப்பதைத் தடுப்பவரோ தாமும் கெட்டுத் தம் சுற்றத்தையும் கேடடைவிப்பர்; என்று கொடுப்பதைத் தடுத்தலால் விளையும் கேட்டின் மிகுதி காட்டிய வாறு. கொடுப்பதைத் தடுப்பவருடைய சுற்றமும் கெடுமென்பது பின் 33-ஆம் பாடலாலும் விளங்கும். (31)

**450.** கட்டுரை யிற்றம கைத்துள போழ்தே
இட்டிசை கொண்டற னெய்த முயன்றோர்
உட்டெறு வெம்பகை யாவ துலோபம்
விட்டிட லென்று விலக்கினர் தாமே.

**கட்டுரையில் 'தம கைத்து உள போழ்தே**
**இட்டு, இசை கொண்டு, அறன் எய்த முயன்றோர்,**
**உள் தெறு வெம் பகையாவது உலோபம்;**
**விட்டிடல்' என்று விலக்கினர் தாம் ஏ.**

பொ :—'தம்முடைய பொருள் தம்மிடம் உள்ளபொழுதே கொடுத்துப் புகழெய்தி அறமும் அடைய முயன்றோருடைய ஆற்றலை அழிக்கும் கொடிய உட்பகையாவது, உலோபகுணம் ஆகும், (அதனை) விட்டிடுக' என்று அறநூலோர் உறுதிமொழிக ளால் விலக்கினர்கள்.

கு :—கட்டுரையில் விலக்கினர் என இயையும். கைத்து - பொருள்; அறநூலோர் என்னும் எழுவாய் வருவித்துரைக்கப் பட்டது. 'அடுப்ப அரும்பழி' என்று தொடங்கும் முன் பாடலால் புறப்பகையிற் கொடியது கூறினர்; இப்பாடலால் உட்பகையிற் கொடியதும் கூறியவாறு. (32)

**451.** எடுத்தொருவ ருக்கொருவ ரீவதனின் முன்னே
★ தடுப்பது நினக்கழகி தோதகவில் வெள்ளி
கொடுப்பது விலக்குகொடி யோர்தமது சுற்றம்
உடுப்பதுவு முண்பதுவு மின்றியொழி யுங்காண்.

'எடுத்து, ஒருவருக்கு ஒருவர் ஈவதனின் முன்னே,
தடுப்பது, நின்க்கு அழகிதோ? தகவு இல் வெள்ளி!
கொடுப்பது விலக்கு கொடியோர்தமது சுற்றம்,
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி ஒழியும் காண்.'

போ :—'நடுநிலையற்ற சுக்கிரனே! ஒருவருக்கு ஒருவர் (தம்மிடம் உள்ளதொரு பொருளை) எடுத்துக் கொடுப்பதன்முன்பே தடுத்தல் (குரவனுன) உனக்கு அழகாகுமோ? கொடையைத் தடைசெய்யும் கொடியோருடைய சுற்றம் உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி ஒழியும்; (இதனை அறியாயோ?)'

கு :—தகவு – நடுநிலை, (திருக்குறள் 114). வேள்விமுடிவில் கொடைவிரதம் பூண்ட சீடனுன எனக்கும் வேதபாரகனுய்த் தானம் பெறத் தக்கவனுய் வந்த வாமனனுக்கும் இடையே ஒரு பாற் சாராது நின்று நல்லது சொல்லவேண்டிய நீ, நடுநிலைபிறழ்தல் தகுமோ என்றவாறு. கொடுப்பதைத் தடுப்பார் சுற்றம் உடுப்பதும் உண்பதும் இன்றி ஒழியும் எனவே தடுப்போர் உண்பதும் உடுப்பதும் இன்றியொழிதல் சொல்லவேண்டாதாயிற்று. தடுப்பவர் கெடுதல் 31-ஆம் பாட்டிலும் பெறப்பட்டது. இச்செய்யுள், 'கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம், உண்பதூஉம் இன்றிக் கெடும்' என்னும் திருக்குறளின் (166) பொருளமைதியுடையது. (33)

மாவலி வாமனனுக்கு மூன்றடிமண் தருதல்

**452.** முடியவிம் மொழியெலா
★ மொழிந்து மந்திரி
கொடியனென் றுரைத்தசொ
லொன்றுங் கொண்டிலன்
அடியொரு மூன்றுநீ
யளந்து கொள்கென
நெடியவன் குறியகை
நீரி னீட்டினுன்.

முடிய இம் மொழியெலாம் மொழிந்து, மந்திரி
கொடியன், என்று உரைத்த சொல் ஒன்றும் கொண்டிலன்
'அடி ஒரு மூன்றும் நீ அளந்து கொள்க' என,
நெடியவன் குறிய கை நீரில் நீட்டினன்.

பொ :—இவ்வகையான சொற்களையெல்லாம் முற்றச்சொல்லி அமைச்சனான வெள்ளி, வந்த வாமனன் கொடியவன் (அவனுக்கு தானம் கொடுத்தல் ஆகாது) என்று, கூறிய சொல் ஒன்றையும் ஏற்றுக்கொள்ளாது (வாமனனை நோக்கி) 'நீ ஒரு மூன்று அடி நிலமும் அளந்துகொள்க' என்று மாவலி கூற, நெடியோனான (திருமாலின் கூறாகிய) வாமனன் தன் குறிய கையினை மாவலி வார்க்கும் தான நீரில் நீட்டினன்.

கு :—இம்மொழியெலாம் முடிய மொழிந்து எனவும், நீ ஒரு மூன்றடியும் அளந்து கொள்க எனவும் இயையும். இம்மொழி யெலாம் என்றது 27 முதல் 33 முடியவுள்ள பாடல்களில் வாமனன் சுக்கிரன் கூற்றை மறுத்துக் கூறுங் கூற்றாக வந்த வற்றை. கொண்டிலன் என்பது முற்றெச்சம். (34)

இப்பாடலின் பின் சில சுவடிகளில் பின்வரும் பாடல் வரையப்பட்டுள்ளது.

452 (a) குறியவன் கையினீர் விழாமற் குண்டிகை
மறிபட வாமனன் மலர்க்கைத் தர்ப்பையாற்
செறிவது நீக்கிடச் சிதைந்து கண்ணுடைந்
துறுதுயர் வெள்ளியு மொதுங்கிப் போயினான்.

### குறளன் நெடியோனாதல்

**453.** கயந்தரு நறும்புனல்
கையிற் றீண்டலும்
பயந்தவர் களுமிகழ்
குறளன் பார்த்தெதிர்
வியந்தவர் வெருக்கொள
விசும்பி னோங்கினான்
உயர்ந்தவர்க் குதவிய
வுதவி யொப்பவே.

கயம் தரும் நறும் புனல் கையில் தீண்டலும்,
பயந்தவர்களும் இகழ் குறளன், பார்த்து, எதிர்
வியந்தவர், வெருக் கொள, விசும்பின் ஓங்கினன் ;
உயர்ந்தவர்க்கு உதவிய உதவி ஒப்ப ஏ.

பொ :—மென்மையும் நறுமையும் வாய்ந்த தானநீர் கையிற் பட்ட அளவில் பெற்றோர்களும் இகழும் குறளுருவுடைய வாமனன் உயர்ந்தோர்க் குதவிய கொடைப்பயன்போல, எதிரே நின்று நோக்கி வியந்தவர் அஞ்சும்படி வானில் உயர்ந்தான்.

கு :—கயம் – மென்மை. ' கயவென்கிளவி மென்மையுமாகும்' (சொல். 332) என்பது தொல்காப்பியம். பயந்தவர் – ஈன்றவர், பெற்றோர்க்குத் தங்கள் மகவு அழகற்றதாயினும், அழகுடையதாகத் தோன்றுதல் இயல்பு. காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு என்பது பழமொழி ; எனினும் வாமனனுடைய உருவம், அவன் பெற்றோரும் இகழத்தக்கதாயிருந்ததென்று, அதன் அழகற்ற நிலை கூறியவாறு : வெரு - அச்சம். இச்செய்யுள், " உதவி வரைத்தன்றுதவி யுதவி - செயப்பட்டார் சால்பின் வரைத்து" (திருக்குறள் - 105) " உறக்குந் துணையதோர் ஆலம்வித் தீண்டி - இறப்ப நிழற் பயந்தாஅங் - கறப்பயனும், தான் சிறிதாயினும் தக்கார்கைப்பட்டக்கால், வான்சிறிதாப் போர்த்துவிடும்" (நாலடி 38) என்பவற்றின் பொருளமைந்தது. " நேமியொடு வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை, நீர் செலநிமிர்ந்த மாஅல் போல " (முல்லைப் பாட்டு 1-3) என்றார் சான்றோரும். (35)

### திரிவிக்கிரமன் உலகளந்தமை

**454.** நின்றகான் மண்ணெலா நிரம்பி யப்புறம்
சென்றுபா விற்றிலை சிறிது பாரென
ஒன்றவா னகமெலா மொடுக்கி யும்பரை
வென்றகான் மீண்டது வெளிபெ ருமையே.

நின்ற கால், மண் எலாம் நிரம்பி, அப்புறம்
சென்று பாவிற்று இலை ; சிறிது பார் என,
ஒன்ற வான் அகம் எலாம் ஒடுக்கி, உம்பரை
வென்ற கால், மீண்டது ; வெளி பெருமையே.

பொ :—பூமியில் ஊன்றிய (வாமனப் பெருமான்) திருவடியானது, மண்ணுலகு முழுவதும் நிறைந்து, பூமி சிறியதாயிற்றென்று மேலும் சென்று பரவவில்லை ; வானுலகத்தின் இடம் முழுவதும் ஒருங்கு அடக்கி, அம் மேலுலகைக் கடந்த (எடுத்த) திருவடி, மேலும் அளத்தற்கு இடம் இல்லாமையால் திரும்பியது.

கு :—நின்றகால் - ஊன்றிய திருவடி. பாவுதல் - பரவுதல். வெளி – தாள் பரவாத வெற்றிடம் ; 'படிக்களவாக நிமிர்த்த நின் பாத பங்கயம்' (திருவாய்மொழி 9,2,2) என்றூர் சடகோபரும். (36)

விசுவாமித்திரமுனிவன் வாமனனை வியத்தல்

455. உலகெலா முள்ளடி யடக்கி யோரடிக்
கலகிலா தவ்வடிக் கன்பன் மெய்யதாம்
இலைகுலாந் துழாய்முடி யேக நாயகன்
சிலைகுலாந் தோளிணுய் சிறியன் சாலவே.

'உலகு எலாம் உள் அடி அடக்கி ஓர் அடிக்கு
அலகு இலாது அவ் அடிக்கு அன்பன் மெய்யதாம் ;
இலை குலாம் துழாய் முடி ஏக நாயகன்,
சிலை குலாம் தோளிணுய்! சிறியன் சாலவே !'

பொ :—'வில் விளங்கும் தோளினையுடையாய் ! உலகம் எல்லாவற்றையும் தன் உள்ளங்காலில் ஒடுங்கச்செய்து, மூன்ரும் அடி அளத்தற்கு இடம் பெருமையால் அம் மூன்ரும் அடிக்கு அன்பனுகிய மாவலியின் உடலே அளக்கும் இடமாயிற்று. (இவ்வாறு அளந்த) துளவிலையோடு விளங்கும் திருமுடியையுடைய ஒப்பற்ற இறைவன் மிகவும் சிறியன் !'

கு :—அலகு – அளவு ; இங்கே அளக்கும் இடத்தைக் குறித்து நின்றது. அன்பன் என்றது மாவலியை. மெய் இங்கே மெய்யின் சிறந்த உறுப்பாகிய தலையை உணர்த்திநின்றது. மூன்ரும் அடிக்கு இடம் இல்லாமையால் மாவலி தலையில் அடிவைத்து, அவனைப் பாதலத்தில் இருத்தினன் என்பது கதை. சிறியன் சாலவே என்பது உலகளந்த திருவுருவை வியந்தவாறு. " ஒரு குறளாய் இருநிலம் மூவடி மண்வேண்டி, உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி, 'ஒன்றும் தருக' என மாவலியைச் சிறையில் வைத்த தாடாளன் " (பெரியதிருமொழி. 3, 4, 1) என்னும் அருளிச் செயலும் இங்கு நோக்கத் தகும். இனி, 'உலகமெலாம் உள்ளடியடக்

இற்று ஓரடி, அலகிலா அவ்வடிக்கு அமைந்த மெய்யனே' என்று பாடங்கொண்டு, வாமனப் பெருமானுடைய ஒரு திருவடி, உலகம் என்று உள்ளவை எல்லாவற்றையும் உள்ளங் காலில் ஒடுக்கி விட்டது. அப்பெருமான், அவ்வடிக்கு ஏற்ற (பெரிய) திருவுருவுடையவனே' என்று பொருளுரைத்தலும் அமையும் (37)

## வாமனன் இந்திரனுக்கு விண்ணுலகம் ஈந்து தன முன்னையிடம் சேர்தல்

**456.** உரியதிந் திரற்கென வுலக மீந்துபோய்
விரிதிரைப் பாற்கடற் பள்ளி மேவினன்
கரியவ னுலகெலாங் கடந்த தாளிணை
திருமகள் கரந்தொடச் சிவந்து காட்டவே.

'உரியது இந்திரற்கு' என உலகம் ஈந்து போய்,
விரி திரைப் பாற்கடல் பள்ளி மேவினன்;
கரியவன் உலகு எலாம் கடந்த தாள் இணை
திருமகள் கரம் தொடச் சிவந்து காட்டவே.

பொ :—கருநிறமுடைய வாமனன், தான் அளந்துகொண்ட உலகம் இந்திரனுக்கு உரியதென்று (அவனுக்குக்) கொடுத்துச் சென்று, உலகம் எல்லாவற்றையும் கடந்த தன் திருவடியிணை பெரிய பிராட்டியார் வருடுதலால் சிவந்து தோன்றும்படி (தன் முன்னையிடமாகிய விரிந்த அலைகளையுடைய திருப்பாற்கடலில் பாம்பணையின்கண் அடைந்தான்.

கு :—கரியவன். உலகம் ஈந்துபோய், தாளிணை திருமகள் கரந் தொடச் சிவந்து காட்ட, பாற்கடற் பள்ளிமேவினன் என இயையும். (38)

## சித்தாச்சிரமத்தின் பெருமை

**457.** ஆதலா லருவினை யறுக்கு மாரிய
காதலாற் கண்டவர் பிறவி காண்குறுர்
வேதநூன் முறைமையால் வேள்வி முற்றுவேற்
கீதலா லில்லைவே றிருக்கற் பாலதே.

'ஆதலால், அரு வினை அறுக்கும்; ஆரிய!
காதலால் கண்டவர் பிறவி காண்குறார்;
வேத நூல் முறைமையால் வேள்வி முற்றுவேற்கு
ஈது அலால் இல்லை வேறு இருக்கற்பாலதே.'

பொ :—'பூசிக்கத்தக்கவனே! இவ்வனம், (மங்கைமார் சிந்தை போலத் தூயது; செங்கண்மால் செய்தவம் செய்தது;) ஆதலால் ஒழித்தற்கரிய வினைத்தொடர்பை ஒழிக்கும்; (இதனைப்) பத்தியொடு கண்டவர் பிறவி காணார்; வேத சாத்திர முறைப்படி யாகத்தை முற்றுவிக்க நினைந்த எனக்கு இந்தச் சோலையையன்றித் தங்குதற்குத் தக்க வேறு இடம் இல்லை.'

கு :—ஆரிய! ஈது அருவினை அறுக்கும்; கண்டவர் பிறவி காண்குறார்; ஆதலால் வேள்வி முற்றுவேற்கு ஈதலால் இருக்கற்பாலது வேறு இல்லை; என இயையும். ஈது என்பது முன்னும் கூட்டப்பட்டது. (39)

### விசுவாமித்திரன் வேள்வி தொடங்குதல்

458. ஈண்டிருந் தியற்றுவென் யாகம் யானென
நீண்டபூம் பழுவத்து நெறியி னெய்திப்பின்
வேண்டுவ கொண்டுதன் வேள்வி மேவினான்
காண்டகு குமரரைக் காவ லேவியே.

'ஈண்டு இருந்து இயற்றுவென், யாகம் யான்,' என,
நீண்ட பூம் பழுவத்து நெறியின் எய்திப், பின்
வேண்டுவ கொண்டு, தன் வேள்வி மேவினான்,
காண் தகு குமரரைக் காவல் ஏவியே.

பொ :—இங்கே தங்கி யான் வேள்வியைச் செய்வேன் என்று கூறிப் (பின்பு) பெரியதும் பூக்களோடு கூடியதும் ஆன சோலை வழியே சென்று, வேள்விக்கு வேண்டும் பொருள்களைச் சேகரித்துக்கொண்டு, காணத்தக்க (அழகுடைய) சக்கரவர்த்தித்திருக் குமாரர்களை (வேள்வியை அரக்கர் அழிக்காதவாறு) காக்கும்படி கட்டளையிட்டுவிட்டுத் தன் யாகத்தைச்செய்ய முற்பட்டான்.

கு :—வேள்விக்கு வேண்டும் பொருள்களாவன தருப்பை, சமித்து, புரசிலை, பூ, பொரி, நெய் முதலியன. (40)

### வேள்வியை இராமலக்குமணர் காத்தல்

**459.** எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர்.

எண்ணுதற்கு ஆக்க அரிது; இரண்டு மூன்று நாள்
விண்ணவர்க்கு ஆக்கிய முனிவன் வேள்வியை,
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்,
கண்ணினைக் காக்கின்ற இமையில் காத்தனர்.

பொ :—உலகங்காக்கும் அரசன் மைந்தரான இராமலக்குமணர்கள் (பிறரால்) நினைத்தற்கும் செய்தற்கும் அரியதாகத் தேவர்பொருட்டு ஆறுநாள் விசுவாமித்திரமுனிவன் செய்த யாகத்தைக் கண்ணைக்காக்கும் இமைபோலக் காத்தனர்.

கு :—முனிவன் ஆக்கிய வேள்வியை மன்னன் மைந்தர்கள் காத்தனர்; (இக்காவல் பிறரால்) எண்ணுதற்கும் ஆக்கற்கும் அரிது என இயைத்துரைத்தலும் ஆம். இரண்டு மூன்றுநாள்—ஆறுநாள். விசுவாமித்திரன் வேள்வி ஆறுநாள் நிகழ்ந்தமை வான்மீகத்தும் கூறப்பட்டது. (41)

### இராமபிரான் அரக்கர் எப்பொழுது வருவர் என முனிவனை வினவுதல்

**460.** காத்தனர் திரிகின்ற காளை வீரரில்
மூத்தவன் முழுதுணர் முனியை முன்னி நீ
தீத்தொழி லியற்றுவ ரென்ற தீயவர்
ஏத்தருங் குணத்தினாய் வருவ தென்றென்றான்.

காத்தனர் திரிகின்ற காளை வீரரில்
மூத்தவன், முழுது உணர் முனியை முன்னி, " நீ
தீத்தொழில் இயற்றுவர் என்ற தீயவர்
ஏத்தரும் குணத்தினாய்! வருவது என்று?" என்றான்.

பொ :—வேள்வியைக் காத்துச் சுழன்றுகொண்டிருக்கின்ற காளைப்பருவமுடைய வீரருள், மூத்தோனான இராமபிரான், முழுதும் அறிந்தவனான விசுவாமித்திரனை அணுகி, 'புகழ்தற்கரிய

குணமுடையவனே! 'தீயசெயல் புரிவர்' என்று நீ சொல்லிய கொடியவர் எப்பொழுது வருவர்?' என்று வினவினன்.

கு:—காத்தனர் காத்து; முற்றெச்சம். முன்னுதல் - அணுகுதல். முழுதும் என உம்மை விரிக்க. முழுதும் – (இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்கால நிகழ்ச்சி முழுவதையும். (42)

### அரக்கர் வருதல்

**461**. வார்த்தைமா றுரைத்திலன்
முனிவன் மௌனியாய்ப்
போர்த்தொழிற் குமரனுந்
தொழுது போந்தபின்
பார்த்தனன் விசும்பினைப்
பருவ மேகம்போல்
ஆர்த்தன ரிடித்தன
ரசனி யஞ்சவே.

வார்த்தை மாறு உரைத்திலன் முனிவன், மௌனியாய்ப்
போர்த் தொழில் குமரனும் தொழுது போந்த பின்
பார்த்தனன் விசும்பினைப், பருவ மேகம் போல்
ஆர்த்தனர், இடித்தனர், அசனி அஞ்சவே.

பொ :—விசுவாமித்திரமுனிவன், மோனவிரதம் பூண்டு, மறுமொழி கூறாதாயினன். போர்த்தொழில்வல்ல குமரனான இராமபிரானும், வணங்கித் தன்னிடம் திரும்பிவந்தபின் ஆகாயத்தை நோக்கினன்; அரக்கர் கார்கால மேகம்போல் ஆரவாரித்தார்கள்; இடியும் அஞ்சும்படி அதட்டினார்கள்.

கு :—மாறு வார்த்தை – மறுமொழி. முனிவன் மௌனியாய் மாறு வார்த்தை உரைத்திலன் எனவும் அசனி அஞ்ச இடித்தனர் எனவும் இயையும். அசனி – இடி. இடித்தல் – அதட்டுதல். (43)

### அரக்கர் சினந்து பொருதல் 462—464

**462**. எய்தன ரெறிந்தன
ரெரியு நீருமாப்
பெய்தனர் பெருவரை
பிடுங்கி வீசினர்

வைதனர் தெழித்தனர்
மழுக்கொண் டோச்சினர்
செய்தன ரொன்றல
தீய மாயமே.

எய்தனர், எறிந்தனர், எரியும் நீருமாப்
பெய்தனர், பெருவரை பிடுங்கி வீசினர்,
வைதனர், தெழித்தனர், மழுக் கொண்டு ஓச்சினர்,
செய்தனர் ஒன்று அல தீய மாயமே.

பொ :—(அம்பு முதலியவற்றை) எய்தார்கள்; (ஈட்டி முதலிய படைகளை) எறிந்தார்கள்; நெருப்பும் நீருமாகப் பெய்தார்கள்; பெரிய மலைகளைப் பிடுங்கி வீசினார்கள்; வைதார்கள்; அதட்டினார்கள்; மழுவாயுதத்தால் எறிந்தார்கள்; எண்ணிறந்த கொடிய மாயச்செயல்களைச் செய்தார்கள். (44)

**463.** ஊனகு படைக்கல முருத்து வீசின
கானக மறைத்தன கால மாரிபோல்
மீனகு திரைக்கடல் விசும்பு போர்த்தென
வானக மறைத்தன வளைந்த சேனையே.

ஊன் நகு படைக்கலம் உருத்து வீசின,
கானகம் மறைத்தன கால மாரி போல்;
மீன் நகு திரைக் கடல் விசும்பு போர்த்தென,
வானகம் மறைத்தன வளைந்த சேனையே.

பொ :—முனிவன் வேள்விச் சாலையை வளைந்த அரக்கர் படை, மீன்கள் களித்து விளையாடும் அலைகளோடுகூடிய கடல் எழுந்து ஆகாயத்தை மறைத்தாற்போல வானப் பரப்பு முழுவதையும் மறைத்துவிட்டன; அவ்வரக்கர் சினந்து வீசிய ஊனொடுகூடி விளங்கும் படைக்கலங்கள், கார்கால மேகம்போல அவ்வனத்தை மறைத்தன.

கு :—வளைந்தசேனை, கடல் விசும்பு போர்த்தென வானகம் மறைத்தன; (அச்சேனை) உருத்து வீசின படைக்கலம் காலமாரி போல் கானகம் மறைத்தன என இயையும். (45)

### வளைந்த சேனையின் தோற்றம்

**464.** வில்லொடு மின்னுவாண் மிடைந்து லாவிடப்
பல்லியங் கடிப்பினி னிடிக்கும் பல்படை
ஒல்லென வுரறிய வூழிப் பேர்ச்சியின்
வல்லைவந் தெழுந்ததோர் மழையும் போன்றதே.

வில்லொடு மின்னு வாள் மிடைந்து உலாவிடப்
பல் இயம் கடிப்பினின் இடிக்கும் பல் படை
ஒல் என உரறிய ஊழிப் பேர்ச்சியின்,
வல்லை வந்து எழுந்தது ஓர் மழையும் போன்றது; ஏ.

பொ :—விற்படையோடு மின்னுகின்ற வாட்படையும் நெருங்கி உலாவப் பலவகை வாச்சியங்கள் குறுந்தடியால் (அடிக்கப்பட்டு) முழங்கும் பலவாய் மிக்க அரக்கர்படை, ஊழி முடிவின்கண் ஒல்லென்று பேரொலியுடையவாய் விரைந்துவந்தெழுந்த ஒப்பற்ற மேகத்தையும் ஒத்தது.

கு :—உரறுதல் - முழங்குதல். வல்லை – விரைவு. முன்பாட்டில் சேனைக்குக் கடல் உவமை கூறப்பட்டது; ஆதலின் மழையும் போன்றதென்றார். (46)

### அரக்கர் படையினை இராமபிரான் இலக்குவற்குக் காட்டுதல்

**465.** கவருடை யெயிற்றினர் கடித்த வாயினர்
துவர்நிறப் பங்கியர் சுழல்கட் டீயினர்
பவர்சடை யந்தணன் பணித்த தீயவர்
இவரென விலக்குவற் கிராமன் காட்டினான்.

"கவர் உடை எயிற்றினர், கடித்த வாயினர்,
துவர் நிறப் பங்கியர், சுழல் கண் தீயினர்,
பவர் சடை அந்தணன் பணித்த தீயவர்,
இவர்" என இலக்குவற்கு இராமன் காட்டினான்.

பொ :—"பிளவுபட்ட கோரப்பற்களையுடையவர்களும், சினத்தால்) கடித்த உதட்டையுடையவர்களும், செம்பட்டை நிறம் பொருந்திய மயிருடையவர்களும் சுழல்கின்ற கண்களில் நெருப்பினையுடையவர்களும் ஆகிய இவர், அடர்ந்த சடையையுடைய அந்தணனை விசுவாமித்திரனாற் சொல்லப்

பட்ட கொடியவர்'' என்று இலக்குவனுக்கு இராமபிரான் காட்டினான்.

(47)

கு :—பவர் - செறிவு.

### இலக்குவன் இராமபிரானிடம் கூறுதல்

**466.** கண்டவக் குமரனுங்
கடைக்கண் டீயுக
விண்டனை நோக்கித்தன்
வில்லை நோக்கினான்
அண்டர்நா யகவினிக்
காண்டி யீண்டவர்
துண்டம்வீழ் வனவெனத்
தொழுது சொல்லினான்.

கண்ட அக் குமரனும், கடைக் கண் தீ உக
விண் தனை நோக்கித் தன் வில்லை நோக்கினான்;
'' அண்டர் நாயக! இனிக் காண்டி; ஈண்டு அவர்
துண்டம் வீழ்வன'' எனத் தொழுது சொல்லினான்.

பொ :—(இராமபிரான் காட்ட அரக்கர்படையைக்) கண்ட அந்த இலக்குவனும் தன் கடைக்கண்களினின்று தீப்பொறிகள் சிந்தும்படி (அரக்கர்படை செறிந்துநின்ற) ஆகாயத்தைப் பார்த்துத் தன் வில்லையும் நோக்கி (இராமனைப்பார்த்து) ''தேவர் தலைவனே! இனி இப்பொழுதே அவ்வரக்கருடைய உடலின்அற்ற சிறிய பகுதிகள் வீழ்வனவற்றைப் பார்ப்பாய்'' என்று வணங்கிக் கூறினான்.

கு :—நோக்கி, தொழுது சொல்லினான்: என இயையும். ஈண்டு அவர் துண்டம் வீழ்வன காண்டி என்க. (48)

### இராமபிரான் வேள்விச்சாலையைச் சரக்கூடமாக்குதல்

**467,** தூமவே லரக்கர்தந் நிணமுஞ் சோரியும்
ஓமவெங் கனலிடை யுகுமென் றுன்னியத்
தாமரைக் கண்ணனுஞ் சரங்க ளேகொடு
கோமுனி யிருக்கையோர் கூட மாக்கினான்.

'தூம வேல் அரக்கர் தம் நிணமும் சோரியும்
ஓம வெம் கனலிடை உகும்' என்று உன்னி, அத்
தாமரைக் கண்ணனும் சரங்களே கொடு
கோமுனி இருக்கை ஓர் கூடம் ஆக்கினன்.

பொ :—அந்தத் தாமரைக்கண்ணனாகிய இராமபிரான். புகை உமிழும் வேற்படையேந்திய அரக்கருடைய கொழுப்பும் உதிரமும், விரும்பத்தக்க ஓமத்தீயின்கண் சிந்துமென்று எண்ணி, (அவை சிந்தாதவாறு) சிறந்தமுனிவனாகிய விசுவாமித்திரனுடைய யாகசாலையை ஒரு சரக்கூடமாக்கினன். (49)

சித்தாச்சிரம முனிவர் இராமபிரானிடம்
அடைக்கலம் புகுதல்

468. நஞ்சட வெழுதலு
நடுங்கி நாண்மதிச்
செஞ்சடைக் கடவுளை
யடையுந் தேவர்போல்
வஞ்சனை யரக்கரை
வெருவி மாதவர்
அஞ்சன வண்ணநின்
னபயம் யாமென்றார்.

நஞ்சு அட எழுதலும், நடுங்கி, நாள் மதிச்
செஞ் சடைக் கடவுளை அடையும் தேவர் போல்
வஞ்சனை அரக்கரை வெருவி, மாதவர்,
'அஞ்சன வண்ண; நின் அபயம் யாம்' என்றார்.

பொ :—(திருப்பாற்கடல் கடைந்த காலத்து) ஆலகால விஷம் கொல்லும்படி தோன்றுதலும், அஞ்சி, இளம்பிறைதரித்த செஞ்சடைக் கடவுளாகிய சிவபெருமானைச் சரணமடைந்த தேவர்களைப் போல, சிறந்த தவசிகள் வஞ்சனைமிக்க அரக்கருக்கு அஞ்சி, (இராமபிரானை அணுகி), 'மைபோலும் நிறமுடையாய்! நாங்கள் உன் அடைக்கலம்' என்றனர். (50)

### இராமபிரான் அரக்கரொடு பொருதல் 469–470

**469.** கவித்தனன் கரதலங்
கலங்க லீரெனச்
செவித்தல நிறுத்தினன்
சிலையின் தெய்வநாண்
புவித்தலங் குருதியின்
புணரி யாக்கினன்
குவித்தன னரக்கர்தஞ்
சிரத்தின் குன்றமே.

கவித்தனன் கரதலம்; கலங்கலீர் எனச்
செவித்தலம் நிறுத்தினன் சிலையின் தெய்வ நாண்;
புவித்தலம் குருதியின் புணரி ஆக்கினன்;
குவித்தனன் அரக்கர்தம் சிரத்தின் குன்றம் ஏ.

பொ :—(இராமபிரான் அம்முனிவரை நோக்கி)'நீங்கள் அஞ்ச வேண்டா' என்று கையமைத்து, (தன்)கோதண்டத்தின்தெய்வத் தன்மையுள்ள நாணியைக் காதளவும் இழுத்து நிறுத்தி, பூமியை உதிரக்கடலாக்கி, அரக்கருடைய தலைமலைகளைக் குவித்தான்.

கு :—கலங்கலீர் எனக் கரதலங்கவித்தனன், சிலையின் தெய்வ நாண் செவித்தலம் நிறுத்தினன் என்பதற்கு 'நீவிர் அஞ்ச வேண்டா என்று அபயமுத்திரை காட்டி, அம்முனிவர் செவி யின்கண் தன் தெய்வ வில்லின் நாணொலியை நிற்கச் செய்து' என்று பொருள் உரைத்தலும் அமையும். கோதண்டத்தின் நாணொலி உற்றார்க்கு அச்சத்தைப் போக்கும்; பகைவர்க்கு அச் சத்தை விளைக்கும், 'பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலி யும், சார்ங்கவில் நாணொலியும் தலைப் பெய்வது எஞ்ஞான்று கொலோ' (நாச்சியார் திருமொழி 99) என்பது அருளிச்செயல். (51)

### இராமபிரான் ஏவிய வாளி, சுவாகுவைக் கொன்று மாரீசனைக் கடலிலே தள்ளுதல்

**470.** திருமக ணயகன் றெய்வ வாளிதான்
வெருவரு தாடகை பயந்த வீரர்கள்
இருவரி லொருவனைக் கடலி னிட்டதங்
கொருவனை யந்தக புரத்தி னுய்த்ததே.

திருமகள் நாயகன் தெய்வ வாளி தான்,
வெரு வரு தாடகை பயந்த வீரர்கள்
இருவரில், ஒருவனைக் கடலின் இட்டது; அங்கு
ஒருவனை அந்தகபுரத்தின் உய்த்ததே.

பொ :—இலக்குமியின் நாயகனான (திருமாலின் அமிசமான) இராமபிரானுடைய தெய்வத்தன்மை வாய்ந்த அத்திரமானது, அஞ்சத்தக்க தாடகையென்பாள் பெற்ற வீரர்களான மக்கள் இருவருள், ஒருவனை (மாரீசனை)க் கடலில் தள்ளியது; மற்றொருவனை (சுவாகுவை)க் கூற்றுவன் நகரில் செல்லச் செய்தது; (52)

அரக்கர்படை இரிந்து ஓடுதல்

471. துணர்த்தபூந் தொடையலான்
பகழி தூவினன்
கணத்திடை விசும்பினைக்
கவித்துத் தூர்த்தலால்
பிணத்திடை நடந்திவர்
பிடிப்ப ரீண்டென
உணர்த்தின ரொருவர்மு
னொருவ ரோடினர்.

துணர்த்த பூந்தொடையலான் பகழி தூவினன்,
கணத்திடை விசும்பினைக் கவித்துத் தூர்த்தலால்,
பிணத்திடை நடந்து 'இவர் பிடிப்பர் ஈண்டு' என
உணர்த்தினர் ஒருவர் முன் ஒருவர் ஓடினர்.

பொ :—பூங்கொத்துக்களையுடைய அழகிய மாலையை யணிந்த இராமபிரான், அம்புகளைப் பொழிந்து, ஒரு கணப்பொழுதினுள் ஆகாயத்தை வளைத்து நிறைத்தமையால் (அஞ்சிய) அரக்கர், நம்மைப் பிடித்துக்கொள்வார்கள் என்று தம்முள் ஒருவர்க்கொருவர் தெரிவித்து, ஒருவர் முன் ஒருவர் பிணத்திடை நடந்து விரைந்து ஓடுவாராயினர். (53)

### போர்க்களத்தில் நிகழ்ந்தவை

**472.** ஓடின வரக்கரை யுருமின் வெங்கணை
கூடின குறைத்தலை மிறைத்துக் கூத்துநின்
ருடின வலகையு மையன் கீர்த்தியைப்
பாடின பரந்தன பறவைப் பந்தரே.

ஓடின அரக்கரை உருமின் வெம் கணை
கூடின; குறைத்தலை, மிறைத்துக் கூத்து நின்று
ஆடின; அலகையும், ஐயன் கீர்த்தியைப்
பாடின; பரந்தன பறவைப் பந்தரே.

பொ:—அஞ்சி ஓடிய அரக்கரை, இடிபோலும் கொடிய அம்பு கள் விடாது தொடர்ந்தன; தலையற்ற கவந்தம், விறைத்து நின்று கூத்தாடின; பேய்களும் இராமபிரானுடைய கீர்த்தியைப் பாடின; (கழுகு முதலிய) பறவைகளால் ஆகிய பந்தல்கள் பரவின. (54)

### தேவர்கள் இராமபிரானைப் பாராட்டுதல்

**473.** பந்தரைக் கிழித்தது பரந்த பூமழை
அந்தர துந்துமி முகிலி னார்த்தன
இந்திரன் முதலிய வமர ரீண்டினர்
சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தினர்.

பந்தரைக் கிழித்தது பரந்த பூ மழை;
அந்தர துந்துமி முகிலின் ஆர்த்தன;
இந்திரன் முதலிய அமரர் ஈண்டினர்,
சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தினர்.

பொ:—(தேவர்களால் பொழியப்பட்டுப்) பரவிய பூமழை, (பறவைகள் நெருங்கி மொய்த்தமையால் ஆகிய) பந்தலைக் கிழித் தது; தேவ துந்துமிகள் மேகம் போல முழங்கின; இந்திரன் முதலியதேவர்கள் திரண்டு, அழகிய கோதண்டபாணியான இராம பிரானை வணங்கி வாழ்த்தினர்கள்.

கு:—இளம் பருவத்தே மிகக் கொடிய அரக்கரை வென்று தம் துயர் தீர்த்த இராமபிரான் திருமேனிப் பொலிவுக்கு ஒரு கண் ணெச்சில் படாதவாறு தேவர்கள் வாழ்த்துவராயினர் என்க.

வில்லுக்கு அழகு, இராமபிரான் திருக்கரத்தோடு சேர்ந்தமையால் உளதாகிய பொலிவு; அன்றி, பகைவர்கள் உளராயபோது படைக் கலமாகவும் மற்றைப்போது அணிகலன்களாகவும் இறைவனுக்கு ஆயுதங்கள் பயன்படுதல் பற்றிக் கூறியதுமாம். (55)

**474.** புனித மாதவ ராசியின்
★ பூமழை பொழிந்தார்
அனைய கானத்து மரங்களு
மலர்மழை சொரிந்த
முனியு மவ்வழி வேள்வியை
முறைமையின் முற்றி
இனிய சிந்தைய னிராமனுக்
கினையன விசைத்தான்.

புனித மாதவர், ஆசியின் பூ மழை பொழிந்தார்; அனைய கானத்து மரங்களும், அலர் மழை சொரிந்த; முனியும், அவ்வழி வேள்வியை முறைமையின் முற்றி, இனிய சிந்தையன், இராமனுக்கு இனையன இசைத்தான்.

பொ :—தூய சிறந்த தவமுடையவர்கள் வாழ்த்தொடு மலர் மழை சொரிந்தார்கள்; அவ்வனத்தில் உள்ள (ஓரறிவுயிர்களான) மரங்களும் பூமழை பொழிந்தன; விசுவாமித்திர முனிவனும், அப் பொழுது வேள்வியை விதிப்படி முடித்து, மகிழ்ந்த மனம் உடைய வனாய், இராபிரானிடம் இத்தன்மையான பாராட்டுரைகளைச் சொல்வானாயினன். (56)

விசுவாமித்திர முனிவன் இராமபிரானைப் பாராட்டுதல்

**475.** பாக்கி யம்மெனக் குளதென
நினைவுறும் பான்மை
போக்கி நிற்கிது பொருளென
வுணர்கிலென் புவனம்
ஆக்கி மற்றவை யகிலமு
மணிவயிற் றடக்கிக்
காக்கு நீயொரு வேள்விகாத்
தனையெனுங் கருத்தே.

"பாக்கியம் எனக்கு உளது என
நினைவுறும் பான்மை
போக்கி, நிற்கு இது பொருள் என
உணர்கிலென், புவனம்
ஆக்கி மற்று அவை அகிலமும்
அணிவயிற்று அடக்கிக்
காக்கும் நீ, ஒரு வேள்வி
காத்தனை எனும் கருத்தே.

பொ :—உலகங்களைப் (பிரமனுயிருந்து) படைத்து, அவ்வுல கங்களையெல்லாம் பிரளய காலத்து அழகிய வயிற்றிலே ஒடுக்கி, அழியாது காக்கும் (ஆற்றலுடைய) நீ ஒரு வேள்வி காத்தனை என்று கருதும் உலகினர் கருத்தால், என் வேள்வியை நீ காக்கும் பாக்கியம் எனக்கு உளதாகியது என்று நினையும் முறைமையை விட்டு, உனக்கு என் வேள்வி காத்தலாகிய இது ஒரு காரியம் என்று நினைக்கிலேன்.

கு.:—இது – (என் வேள்வி காத்த) இச்செயல். பொருள் - காரியம். 'ஒரு பொருள் சொல்லுவதுடையேன்'(8) என்பது கலித் தொகை. பிரளய வெள்ளத்தில் அழிந்துபடாமே வயிற்றில் ஒடுக்கிய உலகங்கள், வயிற்றில் புக்க உணவுபோல் அழிந்தொழி யாதபடி குறிக்கொண்டு காத்த செயலருமைதோன்ற 'அனைத் தையும் அணிவயிற்றடக்கிக் காக்கும் நீ' என்றார்; கருத்தே 'நிக ழாது' என ஒரு சொல் வருவித்து முடித்தலும் உண்டு. ''கருத்தே என்பதற்கு வினை முடிபில்லாமல் வேண்டுமென்றே விடப்பட் டிருக்கிறது. மனம் அவச முறுங்கால், சொல்லக்கருதியதில் ஒரு பகுதியைச் சொல்லி, சொல்லாமலே அறிந்துகொள்ளக்கூடிய எஞ்சிய பகுதியைச் சொல்லாது விடுதல் உலக வழக்கிற் போலச் செய்யுள் வழக்கிலும் உண்டு'' என்பர், வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள். (கம்ப ராமாயண சாரம். பால காண்டம் 72-ஆம் பாட்டுரை.

(57)

இராமபிரான், முனிவன்பால் இன்று யான்செய்யும் பணி என் எனல்

476. என்று கூறிய பின்னரவ்
வெழின்மலர்க் கானத்
தன்று தானுறைந் தருந்தவ
முனிவரோ டிருந்த

குன்று போற்குணத் தானெதிர்
கோசலை குரிசில்
இன்றி யான்செயும் பணியென்கொல்
பணியென விசைத்தான்.

என்று கூறிய பின்னர், அவ்
எழில் மலர்க் கானத்து
அன்று தான் உறைந்து,
அருந்தவ முனிவரோடு இருந்த
குன்று போல் குணத்தான்
எதிர், கோசலை குரிசில்,
'இன்று யான் செயும் பணி என் கொல்?
பணி' என இசைத்தான்.

பொ ;—என்று சொல்லியபின், அழகிய மலர்கள் நிறைந்த அவ் வனத்தில் அன்று தங்கி, செய்தற்கரிய தவத்தைச் செய்யும் முனிவர்களோடு கூடியிருந்த மலைபோலும் நற்குண முடைய விசுவாமித்திரமுனிவன் முன்பு, கோசலையின் குமாரனாகிய இராமபிரான், 'இப்பொழுது யான் செய்யத் தக்க பணி யாது? கட்டளையிடுக' என்று கூறுவானாயினன். (58)

விசுவாமித்திர முனிவன் கூறுதல்

477. அரிய யான்சொலி னையநிற்
கரியதொன் றில்லை
பெரிய காரிய முளவவை
முடிப்பது பின்னர்
விரியும் வார்புனன் மருதஞ்சூழ்
மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியுங் காண்டுநா
மெழுகெனப் போனார்.

"அரிய யான் சொலின் ஐய! நிற்கு
அரியது ஒன்று இல்லை;
பெரிய காரியம் உள; அவை
முடிப்பது பின்னர்;

விரியும் வார் புனல் மருதம் சூழ்
மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியும் காண்டும் நாம்
எழுக" எனப் போனர்.

போ :—(இராமபிரானை நோக்கி) "ஐயனே! நான் அருமையானவை என்று கருதிச் சில சொன்னாலும், உனக்கு அரிய செயல் ஒன்றும் இல்லை. பெரிய செயல்களும் உள்ளன; அவை பின் முடிக்கத்தக்கன; பரவி ஒழுகுகின்ற மிக்க நீர்வளம் உள்ள மருத நிலத்தாற் சூழப்பட்ட மிதிலையிலுள்ளார்க்கு அரசனாகிய சனகன் செய்யும் வேள்வியையும் நாம் காண்போம்; புறப்படுக' என்றுகூற யாவரும் சென்றார்கள்;

கு :—ஒன்றும் என உம்மை விரிக்க. பெரிய காரியம் என்றது அடைந்தார்ப்புரத்தலும் அரக்கரையழித்து இராவணனை முடித்தலும் முதலியவற்றை. (59)

வேள்விப் படலம் முற்றிற்று.

# 9. அகலிகைப் படலம்

கோசிக முனிவர் தம் வேள்வியை முடித்துக்கொண்டு இராம லட்சுமணர்களுடன் சோணை நதிக்கரையை அடைந்தனர். அப்போது சூரியன் அஸ்தமிக்கலானான். அன்றிரவு அருகிருந்த சோலை ஒன்றில் அம்மூவரும் தங்கினார்கள். தாமரை முதலிய நறு மலர்களோடு வளங்களும் மிக்க அச்சோலை இராமபிரான் மனத்தைக் கவர்ந்தமையால் அதன் வரலாறுபற்றி முனிவரை அவர் உசாவலானார்.

முனிவரும்,—'காசிபரின் மனைவியருள் ஒருத்தியாகிய திதி என்பாள் தன் புத்திரர்களான அவுணர்கள் அனைவரும் இந்திராதி தேவர்களின் சூழ்ச்சியால் இறந்து ஒழிந்தனராக, அத்தேவ கணத்தாரை அழிக்கவல்ல புத்திரன் ஒருவனைப் பெறவேண்டித் தன் கணவன் ஆணையால் பெருந்தவம் புரிந்த வனம் இது' என்று கூறிப் பின் துருவாசமுனிவர், இந்திரனுக்கிட்ட பெருஞ் சாபத்தால், துறக்கச் செல்வங்கள் யாவும் கடலிற் சென்று ஒளித்ததும், தேவர்களனைவரும் திருமாலை அடைந்து வேண்ட, அவராணையால் அத்தேவர்கள் அசுரர்களுடன்கூடி இரு பக்கங்களிலும் நின்று கடலைக்கடைந்து, இழந்த செல்வங்களை அமிர்தத்தோடுபெற்றதும், அவ்வமிர்தத்தைத் திருமாலே மோகினி உருக்கொண்டு பகிர்ந்து கொடுக்க நேர்ந்தபோது, அம்மோகினி உருவில் மயங்கி அவுணர்களெல்லாம் தம்மிற் பொருது மாய்ந்ததும், முடிவில் தேவர்களுக்கே அமுதம் அளிக்கப்பட்டதும், தன் மக்கள் மாண்டது பற்றி, சூழ்ச்சி செய்த தேவர்களை அழிக்கவல்ல புத்திரன் ஒருவனைப் பெறவேண்டி, மேற்கூறிய அசுரர்களின் தாயாகிய திதி என்பாள் கடுந்தவம் புரிந்து கருத்தரித்ததும், அக்கருவை இந்திரன் வேற்றுருக் கொண்டு அவள்வயிற்றுட் புகுந்து சிதைத்து, சத்தமருத்துக்களாக்கியதுமாகிய வரலாற்றினை 29 கவிகளால் விரித்துக் கூறுகின்றார் கம்பநாடர். இவர் கூறிய இவ்வரலாறு வான்மீகத்தில் இல்லை. ஆனால், கோசிகர், தம் முன்னோரான அரசர்கள் ஆண்ட இடம் அச்சோணைநதிப் பிரதேசம் என்று தம் மரபினர் வரலாற்றையும் தம்மையும் பற்றிக் கூறியதாக வான்மீகர் விரித்துரைப்பர். மேலே கூறிய அமிருதம் பெற்ற வரலாறு, கங்கைக்கு அப்பாலுள்ள விசாலைப் பிரதேசத்துக் குரியதாக, பின்வரும் அக் கங்கா மான்மியத்தில் கூறப்பட்டுள்ளது.

இனி, குமாரக் கடவுள் அவதரித்த சரவணப் பூம்பொய்கை அச்சோணைநதிச் சோலைக்கு அடுத்துள்ளதென்று கூறி, ஒரு கவி

யில் ஆங்கு நிகழ்ந்த குமார சம்பவ வரலாற்றை மிகச் சுருக்க மாகவே கம்பர் பாடினர். வான்மீகமோ அக்கடவுளின் அவதா ரச் செய்திகளை விரிவாக எடுத்து உரைக்கின்றது. கம்பநாடர் சுருக்கிக் கூறியது, 'முனிவர் மொழிந்த வரலாறு தமிழர்பண்பாட் டுக்கு ஏற்றதன்று என்ற கருத்துட்கொண்டுபோலும்.

இவ்வாறு பழைய சரித்திரங்களைக் கேட்டு அன்றிரவை இராம லட்சுமணர் கழித்த பின்பு, சூரியோதயம் ஆயிற்று. முனிவர் முதலிய மூவரும் நித்தியக் கடன்களை முடித்துக்கொண்டு அவ்வனத்தை விட்டு நீங்கிக் கங்கைப்பேரியாற்றைக் கண்டார் கள். இங்கே, 'பொன்னியைப் பொருவும், கங்கை யென்னும் அக் கரைபொரு திருநதி கண்டார்' என்று நம் கவியரசர் பாடுதல், அவரது தேசாபிமானத்தையும், 'கங்கையிற் புனிதமாய காவிரி' என்ற முன்னோர் திருவாக்கையும் விளக்குகின்றது.

அம் மகாநதியைக் கண்டதும் அதன் மான்மியத்தை அறிய விரும்பி இராமபிரான் கோசிக முனிவரை உசாவினர்; அப்போது அப்பெருமானின் முன்னோய அயோத்திமாநகரில்வாழ்ந்த சகரன் என்ற சக்கரவர்த்தி உலகினை ஆட்சிபுரிந்ததும், அவன் பரிவேள்வி செய்ய விரும்பி வேள்விக்குரிய குதிரையோடு, தன் பெயரன் அம்சுமானைத் திக்கு விசயம் செய்துவருமாறு அனுப்ப, அக் குதிரையை இந்திரன் ஒளித்ததும், அதனை எங்கும் தேடிக் காணு மல் அச்செய்தியை அம்சுமான் சகர மன்னனுக்கு அறிவிக்க, அவன் தன் புத்திரர் அறுபதினாயிரவரை அனுப்பியதும், அவர் கள் உலக முழுவதும் துருவியும் அஃது அகப்படாமையால், பூமி யைத் தோண்டிப் பாதலம் சென்று ஆங்குக் கபில முனிவரின் பின்புறமாக அவ்வேள்விப் பரியைக் கண்டு சீறி அம்முனிவரரை நெருங்கி அடர்க்க, கபிலர் சினத்தீயால் அச்சாகரர் யாவரும் சாம்பரானதும், அதனைச் சகரன் அறிந்து அம்சுமானை அனுப்ப, அவன் கபிலரின் பின்புறமாகக் கட்டப்பட்டிருந்த குதிரையை இரந்துவேண்டிப் பெற்றுத் திரும்பியதும், பின்பு தான் மேற் கொண்ட பரிவேள்வியை முற்றுவித்துத் தன்வழித்தோன்றலான அவனுக்கே அரசியலை அளித்து, அச் சகர சக்கரவர்த்தி பரலோக மடைந்ததும், அம்சுமானும் ஆட்சி புரிந்து சென்ற பின் அவன் மரபில் பகீரதன் என்பான் பிறந்ததுமாகிய வரலாறுகளும், கபிலர் சாபத்தால் சாம்பரான தன் முன்னோர்கள் நற்கதியடைய வேண்டி, அப்பகீரதன் வசிட்டர் யோசனைப்படி, பிரமனைக் குறித்துத் தவஞ்செய்ததும், 'கங்காதேவி பூமியிலிழிந்து அச் சாம்பரில் தோய்வாளாயின், அவர்கள் யாவரும் நற்கதி பெறுவர் எனவும் அதன்பொருட்டுச் சிவபிரானை நோக்கித் தவம் புரிக எனவும் பிரமன் பிரத்தியட்சமாகிக் கூற, பகீரதன் அவ்வாறே

கடுந்தவம் புரிந்து அப்பெருமான் அருள் பெற்றதும், பகீரதன் வேண்டுகோளின்படி கடுவேகங்கொண்டு இழிந்த கங்கைப் பெரு வெள்ளத்தைச் சிவபெருமான் தம் சடாபாரத்தில் தாங்கி அதி லுள்ள சிறு பகுதியைப் பூமியில் விட்டதும், சன்னு முனிவரால் அவ்வெள்ளம் இடையில் தடைசெய்யப்பெற, பகீரதனுடைய வேண்டுகோளால் அவர்தம் செவி வழியே அதனை விடுக்க, அது சாகரர்கள் சாம்பரான இடத்தையடைந்து, அவர்கள் நற்கதி பெறும்படி செய்ததும், இவ்வாறு பகீரதனது வியக்கத்தக்க பெரு முயற்சியால் வானதியான கங்கை பூமியிலிழிந்தமையால் பாகீரதி என்ற பெயரும், சன்னுமுனிவரின் செவிவழி வந்தமையால் சான்னவி என்ற பெயரும் பெற்று நிலவுலகில் பெரும் புண்ணிய நதியாக விளங்குவதுமாகிய வரலாறும் கோசிக முனிவரால் விரித்துக் கூறப்பட்டன.

இவற்றையெல்லாம் முனிவரர் வாய்ப்படக் கேட்ட இராம லட்சுமணர்கள் வியப்பும் உவப்பும் அடைந்து, அவரைத் தொழு தனர். பின் மூவரும் கங்கையைக் கடந்து, அப் பிரதேசத்திலுள்ள விசாலைநகரத்து அரசனால் உபசரிக்கப்பெற்றபின், விதேக நாட்டை அடைந்தார்கள். அந்நாட்டினுடைய வளமும் அழகும் வருணிக்க முடியாதவை, அவற்றையெல்லாம் கண்டு சென்ற இராமபிரான், அதன் தலைநகரான மிதிலையின் கோட்டை மதிற் புறத்தே கோசிகமுனிவருடன் வந்து தங்கினர். அப்போது கௌதம பத்தினியாகிய அகலிகை என்பாள் கருங்கல்லாய்க் கிடந்ததோர் வெளியிடத்தை அம்மூவரும் நெருங்கினர். அச் சமயம், இராமபிரானது திருவடித் தூள்கள் அக்கல்லின்மேற் பட்டன படவே, அகலிகை தன் சாப உரு நீங்கிப் பண்டை உருவத்தொடு தோன்றி, ஒரு மின்னற்கொடி என்னும்படி பணி வுடன் நின்றாள். அவளைக் கண்டதும் கோசிக முனிவர் இராம பிரானுக்கு அவள் வரலாற்றைக் கூறத்தொடங்கி, "வேண்டு மென்றே தீச்செயலைச் செய்த இந்திரனுக்கு ஆயிரஞ் செங்கண் களை அளித்த கௌதம முனிவரின் பத்தினி அகலிகையென்பாள் இவளே' என்று கூறினர். அப்போது இராமபிரான், 'அன்னை போல்வாளான இவளுக்கு எதுபற்றி இக்கல்லுருவம் நேர்ந்தது? என்று வினவக் கோசிகர் கூறுவாராய்,முன்காலத்தில் இந்திரனான வன் கௌதம முனிவர் இல்லாத சமயத்தைத் தானே உண்டாக் கிக்கொண்டு அம்முனிவரது உருவுடன் அகலிகையை அணைந்து, அவளுடன் புரிந்த கலவியிடையே, 'தீச்செயல் புரிபவன் இந்திரன்' என்று அறிந்தனள். அப்போது வெளிச்சென்ற கௌதம முனி வர் தாம் சென்றது அகாலமென்று அறிந்து ஆங்கு முடுகிவந்த னர். அதுசமயம் அகலிகை பெருநாணங்கொண்டுநிற்க, இந்திரன்

பூனையுருக்கொண்டு ஓடினன். அதுகண்ட கௌதமர் இருவர் சேர்க்கையையு மறிந்து, அவர்களுள் அகலிகையைக் கல்லாகும் படியும், இந்திரனுக்கு ஆயிரம் பெண்குறிகள் உண்டாகும்படியும் சபிக்க, உடனே அகலிகை கருங்கல்லாகவும், இந்திரன் உடலில் ஆயிரம் பெண்குறிகளுடையனாகவும் ஆயினர். அகலிகையின் வேண்டுகோளின்படி, இராமன் திருவடித் தூளால் அவள் தன் பழைய உருவடையவும், தேவர்களின் பிரார்த்தனைப்படி ஆயிரம் பெண்குறிகள் நீங்கி ஆயிரம் கண்களுடையனாக இந்திரன் பிறர்க்குத் தோன்றவும் சாப விமோசனம் கூறினர். இவையே பண்டு நிகழ்ந்தபடியென்று கோசிகர்கூறி, 'முன் நடந்த தாடகைப் போரில் உன் திருக்கைச் சிறப்பைக் கண்டேன்; இங்கு உன் திருவடிச் சிறப்பினைக் கண்டேன்' என்று விசுவாமித்திரர் உருக்கமாக உரைத்து முடித்தனர். பின்பு இராமபிரான் தன்முன் நின்ற அகலிகையை நோக்கி, 'அன்னையே! உன் கணவரான கௌதம முனிவரின் அருள் கிடைக்கும்படி வழிபடு; மனத்துன்பம் நீங்கி அம்முனிவர்பாற் செல்க' என்று அவளை விடுத்தனர். அதன் பின் கோசிகர் முதலிய மூவரும் கௌதமர் வாழும் ஆச்சிரமத்துக்கு நேரே சென்றார்கள். சென்றவர்களைக் கௌதம முனிவர், வியப்பும் மகிழ்ச்சியுமடைந்து எதிர்கொண்டு உபசரிக்க, கோசிக முனிவர், அம்மாதவனை நோக்கி 'இதோ எழுந்தருளியுள்ள இராமபிரான் திருவடித் தூளால், தேவரீர் முன்பு கூறியபடியே நும் பத்தினி அகலிகை சாபவிமோசனம் பெற்றுப் பண்டை யுருவோடு நிற்கின்றாள்; நெஞ்சினாற் பிழைப்பில்லாத இவளை தேவரீர் கருணையோடு கைக்கொள்வீராக' என்று கூற, அம்முனிவரும் அவருடைய கருத்தை ஏற்கலாயினர். பின் கோதமருடைய திருவடிகளில் இராமபிரான் தண்டனிட்டு வலம்வந்து வணங்கி, உத்தமியான அவ்வகலிகையை முனிவன் கையில் ஏற்பித்துவிட்டு, அக் கௌதமரது ஆசிரமத்தை நீங்கிச் சென்று மிதிலாநகரத்தைக் கண்டார்கள்.

இவ்வரலாற்றில், இந்திரன் அம் முனிபத்தினியுடன் கலந்து களித்தபின், கணவரான கௌதமர் விரைந்து வரக்கூடும் என்றுணர்ந்து பூனையுருக்கொண்டு வெளியே சென்றான் என்றார் கம்பநாடர். வால்மீகி முனிவரோ, தனது உருவெடுத்துக் கொண்டே இந்திரன் செல்வதை நேரிற் கண்டனர் கௌதமர் என்பர். இந்திரனது அத்தீச்செயலை அறிந்து, அவன் தன் ஆண்மையை இழக்கும்படி சபித்தனர் அம்முனிவர் என்பர் வான்மீகி. கம்பரோ, 'ஆயிரமாதர்க்குள்ள அறிகுறியுனக்குண்டாக' என்று சாபமும், பின் தேவர்கள் வேண்டுகோளின்படி அவை ஆயிரங் கண்களாகத் தோன்றும்படி சாப நீக்கமும்

கௌதமர் கூறினர் என்றூர். இவ்வாறு சபித்த முனிவரர், தம் ஆசிரமத்திருந்த அகலிகையைக் கண்டு கடுஞ்சினங் கொண்டு, 'விலைமகளனைய நீ கருங்கல்லாகுக' என்று கடுஞ்சாபமும், பின் அவள் வேண்ட 'நெடுங்காலத்துக்குப்பின் இராமபிரானது திருவடித் தூள்பட்டு முன்னையுருப் பெறுவாய்' என்று சாப நீக்கமும் அருளினர் என்பர் கம்பநாடர்; வால்மீகியோ 'அனேக ஆண்டுகள் வரை உணவின்றிக் காற்றையுண்டு சாம்பலில் விழுந்து தவித்து, பிராணிகள்கண்ணுக்குப் புலப்படாமலே இவ்வாசிரமத்தில் வசிப்பாயாக; இராமபிரான் எப்போது இங்கு எழுந்தருள்வரோ அப்போது உனக்குச் சாபவிமோசனமாகும். எனச் சாபமும் அதன் நீக்கமும் கூறுகின்றூர்; கம்பர் கூறியபடி இந்திரன் பூனையாய்ச் சென்றதும், அகலிகை கல்லுருவாய்ச் சபிக்கப்பெற்றதும் தமிழ்நாட்டில் வழங்கிய பழைய வரலாறுகளேயாம். இது, திருப்பரங் குன்றத்தில்—

'இந்திரன் பூசை யிவள் அகலிகை இவள்
சென்ற கௌதமன் முன்னுறக் கல்லுரு
ஒன்றிய படியிது'

என்று ஓவியந் திட்டப்பட்டிருந்த செய்தியைக் கூறும் பரிபாடற் பகுதியாலும், பாத்ம புராணம், கதாசரித் சாகரம் போலும் வடநூல்களாலும் அறியப்படுகின்றது. இக்கருத்தெல்லாம் உள்ளடங்க—

'' ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி '' என்றூர் வள்ளுவனூரும்.

---

# 9. அகலிகைப் படலம்*

## மூவரும் சோணை நதியை அடைதல்

478. அலம்பு மாமணி யாரத்தொ
டகிலளை புளின
நலம்பெய் பூண்முலை நாகிள
வஞ்சியா மருங்குல்
புலம்பு மேகலைப் புதுமலர்ப்
புனையறற் கூந்தற்
சிலம்பு சூழுங்காற் சோணையாந்
தெரிவையைச் சேர்ந்தார்.

அலம்பும் மா மணி ஆரத்தொடு அகில் அளை புளினம்
நலம் பெய் பூண் முலை நாகு இள வஞ்சி ஆம் மருங்குல்
புலம்பு மேகலைப் புதுமலர்ப் புனை அறல் கூந்தல்
சிலம்பு சூழும் கால் சோணை ஆம் தெரிவையைச் சேர்ந்தார்.

பொ :—அலைகளால் அலைக்கப்பெற்ற பெருமணி சந்தனங்களோடு அகிலும் பொருந்திய மணல்மேடுகளான, இன்ப நலந் தரும் அணிபூண்ட தனங்களையும், இளமைமிக்க வஞ்சிக்கொடியாகிய இடையையும், புதுமலராகிய ஒலிக்கும் மேகலாபரணத்தையும் அழகிய கருமணலான கூந்தலையும், மலையைச் சுற்றிச் செல்லும் நீர்க்கால்களாகிய சிலம்பணி யணிந்த பாதங்களையும் உடைய சோணையாகிய பெண்ணினை விசுவாமித்திரன் இராமன் இலக்குமணன் என்ற மூவரும் அடைந்தார்கள்.

கு :—உருவக அணி. முத்து முதலியனவும் சந்தனம் அகில்களின் துண்டங்களும் நதியினாற் புளினத்திற் கொணர்ந்துசேர்க்கப்பட்டிருத்தலின், முத்துமாலைகளையும் சந்தனம் அகில் தேய்வைகளையும் அணிந்த தனங்கட்கு அஃது உருவகமாயிற்று. புளினம் - ஆற்றிடைக் குறை, மணல்மேடு. சோணை - மகதநாட்டின் வழியே ஓடுவதும் கங்கா நதியிற் கலப்பதுமான ஓர் உபநதி, சிலம்பு சூழுங் கால் என்பது - மலையைச் சூழ்ந்து செல்லும் நீர்க்கால் என்றும்,

*இப்படலம் சில சுவடிகளில், (1) துருவாசர் சாபப் படலம், (2) கங்கை வரலாற்றுப் படலம், (3) அகலிகைப் படலம் என மூன்று படலமாக வரையப்பட்டுள்ளது.

சிலம்பு என்னும், அணிசூழ்ந்த பாதம் என்றும் சிலேடை வாயி லாக உருவகிக்கப்பட்டது. சோணை என்பது பெண்பாற் பெய ராதல் – சேரன் செங்குட்டுவன் தாய்க்கு நற்சோணை என்ற வழக் காலும் பிறவற்றாலும் தெரியலாம். (1)

சூரியாத்தமன வருணனை

479. நதிக்கு வந்தவ ரெய்தலு
மருணன்ற னயனக்
கதிக்கு முந்துறு கலினமான்
றேரொடுங் கதிரோன்
உதிக்குங் காலையிற் றண்மைசெய்
வான்றன துருவிற்
கொதிக்கும் வெம்மையை யாற்றுவான்
போற்கடல் குளித்தான்.

நதிக்கு வந்து அவர் எய்தலும்,
அருணன் தன் நயனக்
கதிக்கும் முந்துறு கலினம் மான்
தேரொடும், கதிரோன்
உதிக்கும் காலையில் தண்மை செய்வான்
தனது உருவில்
கொதிக்கும் வெம்மையை ஆற்றுவான்போல்
கடல் குளித்தான்.

பொ :—சோணையாற்றுக்கு அம்மூவரும் வந்தடைந்த அளவில் சாரதியான அருணனது கட்பார்வை செல்லும் தூரத்தினும் முற்படச் செல்வதும் கடிவாளம் கொண்டதுமான குதிரைகள் பூட்டிய ஒற்றையாழியங்தேருடனே சூரியபகவான். தான் உதய மாகுங்காலத்தில் அம்மூவர்க்கும் குளிர்ச்சி செய்யவேண்டி (இயற்கையில்) கொதிக்கின்ற தன் வெப்பத்தை ஆற்றிக்கொள் பவன் போல மேலைக்கடற்குள் மூழ்கலானன்.

கு :—அருணன் தன் நயனக் கதிக்கு முந்துறு கலினமா – சாரதியின் கட்புலன் எவ்வளவு தூரம் செல்லுமோ அதனிலும் அதிக தூரம் வெகுவேகமாகச் செல்லவல்ல குதிரை என்க. அருணன்-சூரியன்தேர்ப்பாகன்: காசியபப் பிரம்மாவுக்கு வினதை யிடம் பிறந்தவனென்றும், கருடனுக்குமூத்தவனென்றும் கூறுவர்.

உலகங்களைப் புதியவாகப் படைக்கவல்ல முனிவரிடம் அச்சம் காரணமாகவும், தன்குலத்து அவதார மூர்த்திகளாதலின் இராம இலக்குமணரிடம் அன்பு காரணமாகவும், தன் இயற்கையை மாற்றிக் கொள்ள விரும்பினன் கதிரோன் என்பார், 'தண்மை செய்வான்' என்றும், அத்தகைய சூரியன் முதலில் தன்னைக் குளிர்வித்துக் கொண்டல்லது பிறர்க்குத் தண்மை செய்தல் முடியாதாதலின், 'தன்னுருவிற் கொதிக்கும் வெம்மையை ஆற்றுவான் போல' என்றும் கூறினர். அம்மூவரும் சோணை நதிக்கரை வந்தடைந்த காலம் பின்பனியுள்ள பங்குனித் தொடக்கமாதலால், காலையில் அதிகக் குளிராய் இருத்தல்பற்றித் தற்குறிப்பேற்ற அணியால் இங்ஙனம் கூறினர் என்க. (2)

### மூவரும் ஒரு சோலையில் தங்குதல்

**480.** கறங்கு தண்புனற் கடிநெடுந்
 தாளுடைக் கமலத்
தறங்கொ ணாண்மலர்க் கோயில்க
 ளிதழ்க்கத வடைப்பப்
பிறங்கு தாமரை வனம்விட்டுப்
 பெடையொடு களிவண்
டுறங்கு கின்றதோர் நறுமலர்ச்
 சோலைபுக் குறைந்தார்

**கறங்கு தண் புனல் கடி நெடும்
 தாள் உடைக் கமலத்து
அறம் கொள் நாள் மலர்க் கோயில்கள்
 இதழ்க் கதவு அடைப்பப்
பிறங்கு தாமரை வனம் விட்டுப்
 பெடையொடு களிவண்டு
உறங்குகின்றது ஓர் நறு மலர்ச்
 சோலை புக்கு உறைந்தார்.**

**பொ :—**ஒலிக்கின்ற குளிர்ந்த நீர்நிலைகளில் உள்ளனவும், மணம் மிக்க நீண்ட தாள்களையுடையனவும், (உணவூட்டி,) அறச் செயல் புரிவனவுமான அன்று பூத்த தாமரை மலர்க்கோயில்கள், தம் இதழ்களாகிய கதவுகளை அடைத்தலால், விளக்கமுற்ற அத் தாமரை வனத்தைவிட்டு நீங்கிக், களித்த வண்டுகள் தம் பெடையுடன் சென்று உறங்குதற்கேற்ற மணங்கமழ் பூக்கள்

உடையதோர் சோலையுள் புகுந்து, அன்றிரவு அம்மூவரும் தங்கினார்கள்.

கு:—கமலக் கோயில்கள் - திருமகள் தங்கும் கமலாலயங்கள். அறம்கொள் கோயில்கள் - உணவூட்டும் தருமசாலையான கோயில்கள். உணவு – இங்குத் தேன் முதலியன. தாமரைக் கோயில்களில் பகல்முழுவதும் பெடையுடன் தங்கிய வண்டுகள், இரவு வந்தவுடன் அவற்றின் இதழ்களான கதவுகள் அடைபட்டமையால், வேறு சிறந்த இடம் நாடிச் சென்றன என்றவாறு. அறச்சாலைகள் இரவில் பெரும்பாலும் அடைக்கப்படுதலாலும், புனிதமான அவ்விடங்கள் பெடைகளுடன் களித்து உறங்குவதற்கேற்ற இடம் ஆகாமையாலும் வண்டினங்கள் அவற்றுக்கேற்றதோர் மலர்ச்சோலையை நாடலாயின. (3)

### அச்சோலையைப்பற்றி இராமபிரான் வினவ முனிவர்பிரான் விடைதருதல்

**481.** இனைய சோலைமற் றியாதென
விராகவன் வினவ
வினையெ லாமற நோற்றவன்
விளம்புவான் மேனாட்
டனய ரானவர்க் கிரங்கியே
காசிபன் றனது
மனையு ளாடவம் புரிந்தன
ளிவணென வலித்தான்.

**இனைய சோலை மற்று யாது? என இராகவன் வினவ,
வினை எலாம் அற நோற்றவன் விளம்புவான் 'மேல் நாள்
தனயர் ஆனவர்க்கு இரங்கியே, காசிபன் தனது
மனையுளாள், தவம் புரிந்தனள் இவண்' என வலித்தான்.**

பொ:—இத்தகைய பூஞ்சோலை(யின் வரலாறு) யாது என்று இராமபிரான் உசாவ, கருமபந்தங்களெல்லாம் ஒழியும்படி தவம் புரிந்த விசுவாமித்திரன் விடைகூறுவானாய், 'முற்காலத்தில் காசிப முனிவரின் மனைவியருள் ஒருத்தியான திதி என்பவள் தன் மக்களான அசுரர்பொருட்டுச் சோகித்து இங்கேதான் தவம்புரிந்தாள்' என்று தெளியக் கூறினான்.

கு :—பகைவரான இந்திராதி தேவர்களால் அடியுண்டு மாண்ட தன் புத்திரர்பொருட்டுச் சோகித்த திதி, அவ்விந்திரனையும் தேவர்களையும் கொல்லவல்ல புத்திரன் ஒருவனைப் பெறுதல் வேண்டி இங்குத் தவம் புரிந்தனள் என்பது வரலாறு. (4)

### வித்தியாதரமங்கை திருமகள்பால் மலர்மாலை பெறுதல்

**482.** அண்ட கோளகைக் கப்புறத்
தென்னையா ளுடைய
கொண்ட னீள்பதத் தெய்தியோர்
விஞ்சையர் கோதை
புண்ட ரீகைமென் பதத்திசை
புணர்த்தனள் புகழ
வண்ட ருமது மாலைகைக்
கொடுத்தனண் மகிழ்ந்து

அண்ட கோளகைக்கு அப்புறத்து என்னை ஆள் உடைய கொண்டல் நீள் பதத்து எய்தி ஓர் விஞ்சையர் கோதை புண்டரீகை மென் பதத்து இசை புணர்த்தனள் புகழ வண்டு அரு மதுமாலை கைக் கொடுத்தனள் மகிழ்ந்து.

பொ :—என்னை அடிமைகொண்ட மேகவண்ணனான திருமாலின் அண்ட கடாகத்துக்கு அப்புறத்ததாகிய வைகுந்த லோகத்தை வித்தியாதர மங்கையொருத்தி அடைந்து, அங்கே இலக்குமிப் பிராட்டியின் திருவடிகளின்கீழ் யாழிசை கூட்டி அவளைப் பாடிப் புகழ்ந்தனளாக, அதற்கு மகிழ்ந்து, வண்டுகள் நீங்காத தேனையுடைய தன் பூமாலையை அப் பிராட்டி அவள் கையில் அளித்தருளினாள்.

கு :—அசுரர் மாண்டதற்குக் காரணமான பாற்கடல் கடைந்த வரலாறு கூறுவான் தொடங்கி இதுமுதல் 25 பாடல்களால் அதனைச் சிறப்பிக்கின்றார். நீள்பதம் என்றது. 'அடைந்தார் மீண்டு வாராத பரமபதம் அன்றென்றும் திரும்பி வருதற்குரிய காரண வைகுண்டலோகமென்றும்' கூறுவர். 'என்னையாளுடைய கொண்டல்' என்ற விசுவாமித்திரர் கூற்றால், அவரது திருமால் பத்தித்திறம் தெளியப்படும். அப்பத்திமைச் சிறப்பை 'பாக்கியம் எனக் குளதென' (வேள்வி-57) என்ற பாடலாலும் அறிக. விஞ்சையர்-பதினெண் தேவ கணத்தாருள் ஒரு பிரிவினர். புண்டரீகை - தாமரை மலரை இடமாகவுடைய திருமகள். (5)

## விஞ்சைமகள் மாலையைத் துருவாசமுனிவருக்கு அளித்தல் 483—484

**483.** அன்ன மாலையை யாழிடைப்
பிணித்தய னுலகம்
கன்னி மீடலுங் கசட்டுடை
முனியெதிர் காணு
வென்னை யாளுடை நாயகிக்
கிசையெடுப் பவளென்
றன்ன டாளிணை வணங்கிநின்
றேத்தலு மனையாள்.

அன்ன மாலையை யாழிடைப் பிணித்து அயன் உலகம்
கன்னி மீடலும், கசட்டு உடை முனி எதிர் காணு
என்னை ஆள் உடை நாயகிக்கு இசை எடுப்பவள் என்று
அன்னள் தாள் இணை வணங்கி நின்று ஏத்தலும் அனையாள்.

பொ :—அத்தகைய பூமாலையை யாழினில் கட்டியவளாய்ச் சத்தியலோகத்திற்கு அவ் விஞ்சைமகள் மீளுதலும், அழுக்குடை அணிந்த துருவாச முனிவர் எதிரே அவளைப் பார்த்து, "என்னை ஆட்கொள்ளும் பிராட்டிக்கு இசைபாடி மகிழ்விப்பவள் இவள்' என்று அவ் விஞ்சைமகளின் திருவடிமலர்களில் வணங்கித் துதித்த அளவில் அவளும்,

கு:—இக் கவியின் பின்னிரண்டடிகளால், துருவாச முனிவரது திருமாலடிமைச் சிறப்பும், அச்சிறப்புக் கேற்ற பிற அடிமைச் செயல்களும் விளக்கமாம். துருவாசன் என்ற வடசொற்கு அழுக்கு முதலிய குற்ற முள்ள உடையுடையவன் என்பது உறுப்புப் பொருளாதலால் 'கசட்டுடை முனி' எனப்பட்டது. குசேலர் என்பதும் இத்தகையதே. 'கசட்டுரை' என்ற பாடமும் உண்டு. கோபங் கொண்ட சொல்லையுடையான் என்பது இதன் பொருள் என்பர். கசடு என்பது கோபத்துக்கு நேர் பொருளாகாமையாலும் 'கசட்டுடை' என்று பிரதிகள் பலவற்றிற் காணப்படுதலாலும் பொருணயம் உடைமையாலும் அப்பாடமே கண்டுக்கொள்ளப்பட்டது, யாழ் - தெய்வம்சமான கருவியாதலால் திருமகள் சூடிய தெரியலைத் தான் அணியாது அக்கருவியிடமே விஞ்சை மகள் சூட்டலாயின ளென்க; 'தெய்வஞ் சான்ற தீஞ்சுவை நல்யாழ்' என்பதனால் யாழின் தெய்வத்தன்மையும் 'கோதை சுற்றிய சீறியாழ்' என்பதனால் அதற்கு மாலை சூட்டிப் போற்றுதலும் வழக்காதல் காண்க. (6)

484. உலகம் யாவையும் படைத்தளித்
துண்டுமி ழொருவன்
இலகு மார்பகத் திருந்துயிர்
யாவையு மீன்ற
திலக வாணுதல் சென்னியிற்
சூடிய தெரியல்
அலகின் மாமுனி பெறுகென
வளித்தன ளளியால்.

'உலகம் யாவையும் படைத்து அளித்து
உண்டு உமிழ் ஒருவன்
இலகும் பார்பு அகத்து இருந்து உயிர்
யாவையும் ஈன்ற
திலக வாள் நுதல், சென்னியில்
சூடிய தெரியல்
அலகு இல் மாமுனி பெறுக' என
அளித்தனள் அளியால்.

பொ :—எல்லா உலகங்களையும் படைத்தும் காத்தும் திருவயிற்றுட் கொண்டு ஒடுக்கியும் பின் அவற்றை வெளிப்படுத்தியும் அருள்கின்ற ஒப்பற்ற பகவானது விளங்கும் திருமார்பில் வீற்றிருந்து, ஆன்ம கோடிகளையெல்லாம் பெற்றவளும், திலகமணிந்து ஒளிரும் நெற்றியுடையவளும் ஆன திருமகள் முடியிற் சூடிய இத் திருமாலையை, 'அளவற்ற பெருமையுடைய முனிவனே! பெறுவாயாக' என்று கூறி, அன்போடு அதனைத் துர்வாசமுனிவற்குக் கொடுத்தாள்.

கு :—திருமாலின் திவ்விய சத்தியின் உருவமே திருமகள் ஆதலாலும், அப்பெருமானது நாயகியாதல்பற்றி எல்லா ஆன்ம கோடிக்கும் தாய்முறையானவளாதலாலும், ''மார்பகத்திருந்து, உயிர்யாவையும் ஈன்ற'' எனப்பட்டது. (7)

துருவாசன் இந்திரலோகமடைதல்

485. தெய்வ நாயகி சென்னியிற்
சூடிய தெரியல்
ஐய யான்பெறப் புரிந்ததெத்
தவமென வாடி

வெய்ய மாமுனி சென்னியிற்
சூடியே வினைபோய்
உய்யு மாறிதென் றுவந்துவந்
தும்பர்நா டடைந்தான்.

'தெய்வநாயகி சென்னியில்
சூடிய தெரியல்
ஐய! யான் பெறப் புரிந்தது எத்
தவம்' என ஆடி
வெய்ய மாமுனி சென்னியில்
சூடியே, வினை போய்
உய்யும் ஆறு இது என்று உவந்து உவந்து
உம்பர் நாடு அடைந்தான்.

பொ :—'தெய்வநாயகியான பிராட்டி திருக்குழலிற் சூடிய மாலையைப் பெறுதற்கு யான் புரிந்த தவம் எத்தகையதோ? இது பெருவியப்பே' என்னும் நினைப்போடு ஆனந்தக் கூத்து ஆடித் தன்சிரத்தில் அதனைச் சூடியவனாய், இருவினைகளும் நீங்கி உய்யும் வகை இதுவே, என்று எண்ணுந்தோறும் மகிழ்ந்தவனாகித் தேவ லோகத்தை அடையலானான் முனிவன்.

கு :—'' ஐ வியப்பாகும் '' (தொல்) என்பதனால், ஐய - என்ற இடைத்திரி சொல் ஆச்சரியம் என்ற பொருள் பயக்கும். இயற்கையில் வெய்ய மாமுனியாயினும், திருமகளின் மலர்மாலை பெற்ற பெரு மகிழ்ச்சியோடு, இந்திரலோகம் செல்லலாயினன் என்றபடி. (8)

## இந்திரன் பவனிகண்டு முனிவர் வியப்படைதல் 486—489

**486.** பெய்யு மாமுகில் வெள்ளியம்
பிறங்கன்மீப் பிறழுஞ்
செய்ய தாமரை யாயிர
மலர்ந்துசெங் கதிரின்
மொய்ய சோதியை மிலைச்சிய
முறைமைபோன் றொளிரும்
மெய்யி னோடையி ராவதக்
களிற்றின் மேல் விளங்க.

பெய்யும் மா முகில், வெள்ளியம் பிறங்கல் மீப் பிறழும்
செய்ய தாமரை ஆயிரம் மலர்ந்து, செங் கதிரின்
மொய்ய சோதியை மிலேச்சிய முறைமை போன்று ஒளிரும்
மெய்யினேடு, அயிராவதக் களிற்றின்மேல் விளங்க.

பொ :—வெள்ளியங்கிரியின்மேற் பெய்ய நிற்பதோர் காள மேகமானது, பிறழ்கின்ற செந்தாமரைமலர்கள் ஆயிரம் மலரப் பெற்று, சூரியனது ஒளிக்கற்றையினைத் தன் மேற் கொண்ட தன்மையை யொத்து விளங்கும் மேனியோடு ஐராவதக் களிற்றின் மேல் பிரகாசிக்கவும்,

கு :—இந்திரனது பவனிச் சிறப்பை இது முதல் நான்கு குளகப் பாடல்களால் சிறப்பிக்கின்ருர். வெள்ளிமலை – ஐராவதத் துக்கும், காளமேகம்-இந்திரனுக்கும், ஆயிரந்தாமரை மலர்கள், அவனது ஆயிரங் கண்களுக்கும், சூரிய கிரணங்கள் அவன் பூண்டுள்ள அணிகளுக்கும் உவமைகளாம். பவனிக் காட்சியைப் பார்வையிடும்போது உண்டாம் இந்திரனது கண்கள் பலவற்றின் பிறழ்ச்சியைக் குறிப்பார் 'பிறழும் செய்ய தாமரை' என்ருர். (9)

**487.** அரம்பை மேனகை திலோத்தமை
யுருப்பசி யனங்கன்
சரம்பெய் தூணியிற் றளிரடி
நூபுரந் தழைப்பக்
கரும்பை யுஞ்சுவை கைப்பித்த
குதலையர் விளரி
நிரம்பு பாடலோ டாடினர்
வீதிக ணெருங்க.

அரம்பை மேனகை திலோத்தமை உருப்பசி, அனங்கன்
சரம் பெய் தூணியில் தளிர் அடி நூபுரம் தழைப்பக்,
கரும்பையும் சுவை கைப்பித்த குதலையர் விளரி
நிரம்பு பாடலோடு, ஆடினர் வீதிகள் நெருங்க.

பொ :—கருப்பஞ்சாற்றினையும் இன்சுவையாற் கைப்பித்த மழலைமொழியோடு பாடும், அரம்பை, மேனகை, திலோத்தமை, உருப்பசி என்ற தேவகணிகையர், காமதேவனது சரங்கள் பெய்த அம்பருத் தூணிகள் போல்வனவும், தளிரின் மென்மை

கொண்டனவுமான பாதங்களிலே சிலம்பொலி தழைக்கும்படி, விளரி என்னும் இசை நிறைந்த பண்ணைப் பாடிய வண்ணம் நடனமாடிக் கொண்டு வீதிகளில் நெருங்கவும்.

கு :—தேவமாதரின் இன்னிசைக்கு நூபுர ஒலி தாள மிடல் போல் அமைந்து சிறந்ததென்பார் 'சிலம்பொலி தழைப்ப' என்றூர். "புலவர் போற்றும் சினைவரால் பகழியாவம் நெற்சினை" (கிஷ்கிந்தா—நாடவிட்ட, 35) என்று, கணைக்காலுக்கு இக்கவியரசர் கூறும் உவமைகளுள் பகழியாவமும் ஒன்றுதல் காண்க. (10)

488. நீல மால்வரை தவழ்தரு
கதிர்நிலாக் கற்றை
போல வேயிரு புடையினுஞ்
சாமரை புரளக்
கோல மாமதி குறைவற
நிறைந்தொளி குலாவ
மேலி வர்ந்தென வெள்ளியந்
தனிக்குடை விளங்க.

நீல மால்வரை தவழ்தரு கதிர் நிலாக் கற்றை
போலவே இரு புடையினும் சாமரை புரளக்
கோலம் மா மதி குறைவு அற நிறைந்து ஒளி குலாவ
மேல் இவர்ந்து என வெள்ளி அம் தனிக் குடை விளங்க.

பொ :—நீல மணிமயமான மலையில் தவழும் நிலாக் கதிர்களின் தொகுதிபோல இந்திரனது இருபக்கங்களிலும் சாமரைகள் புரளவும், அழகிய பூரணசந்திரன் மறுவற்று நிறைந்து ஒளி தவழ மேலிடமாக இருந்தது போல, வெண்கொற்றக் குடை விளங்கவும்.

கு :—நீலமலை இந்திரனுக்கும், நிலாக்கற்றை சாமரைக்கும் உவமைகளாம். வெள்ளி – வெண்மை. (11)

489. தழங்கு பேரியுங் குறட்டொடு
பாண்டிலுஞ் சங்கும்
வழங்கு கம்பலை மங்கல
கீதத்தை மறைப்ப

முழங்கு நான்மறை மூரிநீர்
முழக்கென வுலகை
விழுங்கு மாவரும் விழாவணி
கண்டுளம் வியந்தான்.

தழங்கு பேரியும் குறட்டொடு பாண்டிலும் சங்கும்
வழங்கு கம்பலை, மங்கல கீதத்தை மறைப்ப,
முழங்கும் நான் மறை மூரி நீர் முழக்கு என உலகை
விழுங்குமா வரும் விழா அணி கண்டு, உளம் வியந்தான்

பொ:—ஒலிக்கின்ற பேரி குறடு, பாண்டில், சங்குகள் வழங்கும் ஆரவாரம், (இன்னிசையிற் பாடும்) மங்கல கீதத்தைக் கேட்க முடியாதபடி மறைப்பவும், முழங்கும் நான்கு வேத ஒலி போலவும், பெரிய கடலோசை போலவும் உலகத்தை விழுங்கும்படி (அயிராவதத்தின் மேல்) வரும் பவனிச்சிறப்பைப் பார்த்து வியப்புற்முன் (முனிவன்).

கு:—'உலகை விழுங்குமா வரும்' என்றது - மிகத்திரண்டு வரும் என்றபடி. வாத்தியங்களின் பேரோசையால் மங்கல கீதம் மறைப்புண்டது என்றது மேலே நிகழப் போகும் பெருந் தீங்கைக் குறிப்பாலுணர்த்தியவாறும். பேரி முதலியவை பெரிய துக்ககாலத்தும் முழங்கக் கூடியன என்க. (12)

துருவாசன் இந்திரனுக்குத் தந்த மாலையை அயிராவதம் காலின் கீழ் இட்டுத் தேய்த்தல்

**490.** தனையொ வாதவன் மகிழ்ச்சியால்
வாசவன் றன்கை
வனையு மாலையை நீட்டலுந்
தோட்டியால் வாங்கித்
துனைவ லத்தயி ராவதத்
தெருத்திடைத் தொடுத்தான்
பனைசெய் கையினுற் பறித்தடிப்
படுத்ததப் பகடு.

தனை ஒவாதவன், மகிழ்ச்சியால் வாசவன்தன் கை
வனையும் மாலையை நீட்டலும், தோட்டியால் வாங்கித்
துனை வலத்து அயிராவதத்து எருத்திடைத் தொடுத்தான்:
பனை செய் கையினுல் பறித்து அடிப்படுத்தது அப் பகடு.

பொ :—தன்னை ஒப்பவராகப் பிறரை இல்லாத அத் துருவாசமுனி, தானடைந்த மகிழ்ச்சியால் அணிந்திருந்த தன் மாலையை இந்திரனது கரங்களில் கொடுத்தற்கு நீட்டிய வளவில், (அவன் தன் கைகளால் வாங்காமல்) அங்குசத்தால் வாங்கி, விரைந்து செல்லும் வலிய ஐராவதக் களிற்றின் பிடரில் (அதனை) அணிந்தான்; அந்தக் களிறு, பனைமரம் போன்ற தன் துதிக் கையால் (அம்மாலையை) இழுத்து வாங்கித் தன் காலின் கீழிட்டுத் தேய்த்தது.

கு :—'பனை செய்கை'—செய்—உவமையுருபு (சீவக 2490) 'தூம்புடைப் பனைக்கை வேழம்' (பெரிய திருமொழி 4.6.1) என்பதனுல் யானைக் கைக்குப் பனைமரம் உவமையாதல் காண்க. இங்கு நீண்டவடிவிற்கு உவமை. தொடுத்தான் – என்பதனுல் அலங்காரகமாக அணிந்தான் என்பது பெறப்படும். (13)

## துருவாசமுனிவர் சினம்

491. கண்ட மாமுனி விழிவழி
யொழுகுவெங் கனலால்
அண்ட கூடமுஞ் சாம்பரா
யொழியுமென் றழியா
விண்டு நீங்கினர் விண்ணவ
ரிருசுடர் மீண்ட
எண்டி சாமுக மிருண்டன
சுழன்றதெவ் வுலகும்.

கண்ட மாமுனி விழிவழி ஒழுகு வெம் கனலால்
அண்ட கூடமும் சாம்பராய் ஒழியும் என்று அழியா
விண்டு நீங்கினர் விண்ணவர் இரு சுடர் மீண்ட
எண் திசாமுகம் இருண்டன சுழன்றது எவ் உலகும்.

பொ :—(அதனை) நோக்கிய துருவாசமுனி கண்களின் வழியே பொழிகின்ற கொடுங் கோபத்தியால் அண்ட கோளங்களும் சாம்பராய் அழிந்தொழியும் என்று நினைத்து, மனம் வருந்தித் தேவரெல்லாம் தனித்தனி ஓடிப்போயினர், சந்திர சூரியர்களும் மேற் செல்லாமல் திரும்பினர்; எண் திசையிடங்களும் இருட்சிபெற்றன; எல்லா உலகமும் சுழல்வனவாயின.

கு :—"சாபத்தாலும் சாபமொழிதன்னால் வளருந் தவத்தாலும் கோபத்தாலும் பேர் படைத்த கொடிய முனிவன்" (வில்லி-பாரதம்) என்பாராதலால், துருவாசனது கோபமிகுதி இந் நிகழ்ச்சிகளை விளைவித்தன என்று சிறப்பித்தார் என்க. (14)

துருவாசமுனிவர் இந்திரனை வெகுளுதல்

492. புகையெ ழுந்தன வுயிர்தொறு
மெயில்பொடித் தவனின்
நகையெ ழுந்தன நிவந்தன
புருவநன் னுதலில்
சிகையெ ழுஞ்சுடர் விழியின
னசனியுந் திகைப்ப
மிகையெ ழுந்திடு சதமக
கேளென வெகுண்டான்.

புகை எழுந்தன உயிர் தொறும், எயில் பொடித்தவனின்
நகை எழுந்தன, நிவந்தன புருவம் நல் நுதலில்,
சிகை எழும் சுடர் விழியினன், அசனியும் திகைப்ப
மிகை எழுந்திடு சதமக! கேள் என வெகுண்டான்.

பொ :—(அம்முனிவனது சினத்தால்) மயிர்க்கால்கள் தோறும் புகைகள் கிளம்பின; திரிபுரத்தை எரித்துச் சாம்பராக்கின சிவபிரானைப் போல அவற்குச் சிரிப்புக்கள் உண்டாயின; புருவங்கள் அழகிய நெற்றியிலே நெரிந்து ஏறின; இந்நிலையில் சுவாலைகள் கிளம்பியெழும் நெருப்பை உமிழ்கின்ற கண்களை உடையவனாய், இடியும் இஃது எவ்வோசையோ என்று திகைப்ப, 'செருக்கு நிறைந்த இந்திரனே! கேட்க' என்று (அவனை நோக்கி) சினந்து கூறுவானாயினன்.

கு :—எயில் – திரிபுரம். பொன், வெள்ளி, இரும்புகளாலான எயிற்குலங்கள் மூன்று. சிவபிரான் கோபச்சிரிப்பால் எயில்கள் எரிக்கப்பட்டமையின் 'எயில் பொடித்தவனின் நகையெழுந்தன' என்றார். (திருக்கோவை-36, 167) மிகை செருக்கு (தொல்-பொ. 260) 'பிரமதேஜஸ்' உடையன் ஆதலால் 'நன்னுதல்' என விசேடித்தார்.
(15)

துருவாசமுனிவன் மாலை பெற்ற வரலாறு கூறுதல்

4௯3. பூத நாயகன் புவிமக
ணாயகன் பொருவில்
வேத நாயகன் மார்பகத்
தினிதுவீற் றிருக்கும்
ஆதி நாயகி விருப்புறு
தெரியல்கொண் டணைந்த
மாத ராள்வயிற் பெற்றனன்
முயன்றமா தவத்தால்.

பூத நாயகன் புவிமகள் நாயகன் பொரு இல்
வேத நாயகன் மார்பு அகத்து இனிது வீற்றிருக்கும்
ஆதி நாயகி விருப்பு உறு தெரியல் கொண்டு அணைந்த
மாதராள் வயின் பெற்றனன் முயன்ற மா தவத்தால்.

பொ :—பஞ்ச பூதங்களை நியமிக்கும் கர்த்தாவும், பூமிதேவிக்குக் கொழுநனும். ஒப்பற்ற வேதங்களால் புகழப்படும் தலைவனும் ஆன திருமாலின் திருமார்பிடத்தே இனிது எழுந்தருளியுள்ள ஆதிநாயகியான திருமகள் விருப்பத்துடன் அணிந்திருந்த இப் பூமாலையைப் பெற்றுவந்த வித்தியாதர மகளிடத்தினின்று யான் முற்பிறப்பிற் புரிந்த தவப்பயனால் அதனைப் பெற்றேன். (16)

துருவாசமுனிவன் இந்திரனுக்குச் சாபமிடுதல்

494. இன்று நின்பெருஞ் செவ்விகண்
டுவகையி னீந்த
மன்ற லந்தொடை யிகழ்ந்தனை
நினதுமா நிதியும்
ஒன்ற லாதபல் வளங்களு
முவரிபுக் கொளிப்பக்
குன்றி நீதுய ருறுகென
வுரைத்தனன் கொதித்தே.

இன்று நின்பெரும் செவ்வி கண்டு, உவகையின் ஈந்த
மன்றல் அம் தொடை இகழ்ந்தனை, நினது மா நிதியும்
ஒன்று அலாத பல் வளங்களும் உவரி புக்கு ஒளிப்பக்,
குன்றி நீ துயர் உறுக என உரைத்தனன் கொதித்தே.

போ —இன்று உலாவரும் நின்வைபவத்தைப் பார்த்து (இஃது உனக்கே தகுமென்று) மகிழ்ச்சியுடன் கொடுத்த மணமிக்க மாலையைப் போற்றாது இகழ்ந்தாய் : (அச்செருக்கினால்) உன் பெரிய நிதிகளும், பலவகையான உன் செல்வங்களும் கடலிலே போய் மறைய, நீயும் பெருமை குறையப்பெற்றுத் துன்பம் அடைவாயாக-என்று சாபவுரை கூறினன் சீற்றங்கொண்டு, அம்முனிவன். (17)

## இந்திரன் செல்வம் யாவும் கடலில் மறைதல்

**495.** அரம டந்தையர் கற்பக
நவநிதி யமிர்தச்
சுரபி வெம்பரி மதமலை
முதலிய தொடக்கற்
றொருபெ ரும்பொரு ளின்றியே
யுவரிபுக் கொளிப்ப
வெருவி யோடினர் விண்ணவர்
கண்ணன்மே வாரின்

அரமடந்தையர் கற்பகம் நவநிதி அமிர்தச்
சுரபி வெம் பரி மத மலை முதலிய தொடக்கு அற்று
ஒரு பெரும்பொருள் இன்றியே உவரி புக்கு ஒளிப்ப
வெருவி ஓடினர் விண்ணவர் கண்ணன் மேவாரின்.

போ :—(முனிவன் சாபமிட்ட அளவில்) இந்திர சம்பத்துக்களான அரம்பை முதலிய தேவமாதரும், கற்பகதருவும், நவநிதிகளும், பால் சுரக்கும் காமதேனுவும், (உச்சைச்சிரவமென்ற) வேகக் கடுமையுடைய குதிரையும், மதமுடைய ஐராவதக்களிறும், முதலாக யாவும் சடையப்பவள்ளலின் பகைவர்போலக் கடலிற் புக்கு ஒளித்த அளவில் அதுகண்ட தேவர்கள் அஞ்சித் திசைதோறும் ஓடினர்.

கு :—கண்ணன் - திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளல், இச்சடையற்குக் கண்ணன், சரராமன் என்ற வேறு பெயர்களும்உண்டு. இவன் சோழ அரசியலில் தலைவனாகவும்,வீரமுடையனாகவும் கூறப்படுவன். மேவார் – பகைவர். கண்ணன் பகைவர்கள் அவற்கு அஞ்சிக் கடலில் ஒளித்தல் போல இந்திரச் செல்வங்கள் ஒளித்தன என்று உவமித்தார். " மாகதர் கோமான் முனிந்தால் மன்னருக்கெல்லாம் கடலோ விடம்" என்றும் "கோக்

கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர் '' என்றும் முன்னோர் கூறுதலி னின்று பகைவர் அஞ்சிப் புக்கொளிக்கும் இடங்களிற் கடலும் ஒன்றுதல் அறிக. தம்மைப் பெரிதும் அபிமானித்து ஆதரித்த சடைய வள்ளலைத் தம் செய்ந்நன்றி காட்டி உவமித்தவாறு. (18)

இப்பாடலின் தொடர்ச்சியாகச் சில பிரதிகளில் கண்ட அதிகப் பாடல் :—

495 (a) அந்த வேலையி லிந்திரன் சிந்தைநொந் தழிந்து
வந்து வானவர் முனிவனை வழிபட்டு வழுத்த
நந்து நின்பெருஞ் செல்வமா லருளினுல் நயந்து
முந்து மென்றுசா பத்தினின் மோக்கமு மொழிந்தான்.

## தேவர்கள் திருமாலைச் சரணடைதல்

**496.** வெய்ய மாமுனி வெகுளியால்
விண்ணக முதலாம்
வைய மியாவையும் வறுமைநோய்
நலிதர வானோர்
தையல் பாகனுஞ் சதுமுகக்
கடவுளுங் கூடிச்
செய்ய தாமரைத் திருவுறு
மார்பனைச் சேர்ந்தார்.

**வெய்ய மாமுனி வெகுளியால், விண்ணகம் முதலாம்
வையம் யாவையும் வறுமை நோய் நலிதர, வானோர்
தையல் பாகனும் சதுமுகக் கடவுளும் கூடிச்
செய்ய தாமரைத் திரு உறு மார்பனைச் சேர்ந்தார்.**

பொ :—கொடிய பெருமுனிவரின் கோபத்தால் தேவலோக முதலான உலகங்களையெல்லாம் வறுமைநோய் வாட்டுதலால், தேவர்களும், சிவபிரானும், நான்முகக் கடவுளும் ஒருங்குகூடிச் செந்தாமரையை ஆசனமாகவுடைய திருமகள் உறையும் மார்பினை யுடைய திருமாலிடம் புகலடைந்தனர்.

கு :—திரிலோகாதிபதியாதலின், அவன் பெற்ற சாபக்கேட் டால் வையம் யாவும் வருந்தலாயின வென்க. தெய்வச் செல்வ

முழுமையும் இழந்தவர்கள், அச்செல்வத்தின் அதிதேவதையான இலக்குமிதேவி நாயகனை அடையலாயினர் என்பது குறிப்பு. திருமறு மார்பனை - என்பது பாடமாயின், திருவையும் ஸ்ரீவற்ச மென்னும் மறுவையும் உடைய மார்பனை என உரைக்க. (19)

பிரமன் முதலியோர்க்குத் திருமால் அபயமளித்தல்

**497.** வெஞ்சொன் மாமுனி வெகுளியால்
விளைந்தமை விளம்பிக்
கஞ்ச நாண்மலர்க் கிழவனுங்
கடவுளர் பிறருந்
தஞ்ச மில்லைநின் சரணமே
சரணெனச் சலியா
தஞ்ச லஞ்சலென் றுரைத்தன
னுலகெலா மளந்தோன்.

வெஞ்சொல் மாமுனி வெகுளியால்
விளைந்தமை விளம்பிக்,
கஞ்ச நாள் மலர்க் கிழவனும்
கடவுளர் பிறரும்
'தஞ்சம் இல்லை; நின் சரணமே
சரண்' எனச் சலியாது,
'அஞ்சல் அஞ்சல்' என்று உரைத்தனன்
உலகெலாம் அளந்தோன்.

பொ :—தாமரைப் பூவில் உதித்த பிரமதேவனும் பிற கடவுளரும் கடுஞ்சாபமிட்ட மாமுனிவனது சீற்றத்தால் நிகழ்ந்தவற்றைக் கூறி, 'எங்கட்கு வேறு புகலிடமில்லை; நின் திருவடிகளே புகலிடம்' என்று வேண்ட, மனம் பதறாமல் 'அஞ்சாதீர், அஞ்சாதீர்' என்று (பின்வருமாறு) அபயம் அருளினன் உலகளந்த மூர்த்தியான திருமால்.

கு:—வேற்றுமையின்றி அசுரர்களால் விளைந்த அச்சமும் கேடும் நீங்கி உலகம் உய்யுமாறு காத்தவனாதலின் 'உரைத்தனன் உலகெலாம் அளந்தோன்' என்றார். (20)

### திருமால் பாற்கடலைக் கடையுமாறு கட்டளையிடல்

**498.** மத்து மந்தரம் வாசுகி
கடைகயி றடைதூண்
மெத்து சந்திரன் சுராசுரர்
வேறுவே றுள்ள
கொத்தி ரண்டுபால் வலிப்பவ
ரோடதி கொடுத்துக்
கத்து வாரிதி மறுகுற
வமிழ்தெழக் கடைமின்.

மத்து மந்தரம், வாசுகி கடைகயிறு, அடை தூண்
மெத்து சந்திரன், சுராசுரர் வேறு வேறு உள்ள
கொத்து இரண்டுபால் வலிப்பவர், ஓடதி கொடுத்துக்
கத்து வாரிதி மறுகுற அமிழ்து எழக் கடைமின்.

பொ: —(குலமலைகள் ஏழனுள் ஒன்ருன) மந்தரமலை மத்தாகவும், (அட்டமா நாகங்களுள் ஒன்ருன) வாசுகி கடைகின்ற கயிருகவும், (யாவரும்) புகழும் சந்திரன் அடைதூணுகவும், வேறுபட்ட இனத்தவரான தேவர்களும் அசுரர்களும் (வால்தலை) இருபக்கங்களிலும் நின்று கடைபவராகவும், ஓஷதியைப் பெய்து ஒலிக்கும் கடல் கலங்கும்படி, அமிர்தம் உண்டாகக் கடைமின். (21)

### தேவர்களின் மகிழ்ச்சி

**499.** யாமு மவ்வயின் வருதுநீர்
கதுமென வெழுந்து
போமி னென்றருள் புரிதலு
மிறைஞ்சினர் புகழ்ந்தார்
நாம மின்றெனக் குனித்தனர்
நல்குர வொழிந்த
தாமெ னும்பெருங் களிதுளக்
குறுத்தலா லமரர்.

'யாமும் அவ்வயின் வருதும், நீர் கதுமென எழுந்து
போமின்,' என்று அருள் புரிதலும், இறைஞ்சினர் புகழ்ந்தார்,
'நாமம் இன்று' எனக் குனித்தனர், 'நல்குரவு ஒழிந்த—
தாம்' எனும் பெருங்களி துளக்குறுத்தலால் அமரர்.

பொ :—(அவ்வாறு) கடையுமிடத்தே நாமும் வருவோம், விரைவாக நீங்கள் புறப்பட்டுச் செல்லுங்கள், என்று அருளிச் செய்த அளவில், தேவர்கள் வணங்கித் துதித்து, 'நம் வறுமை நீங்கியதாம்' என்னும் களிப்பு ஆட்டுதலால், இனி நமக்கு அச்ச மில்லை என்று கூறியபடி ஆனந்தக் கூத்தாடினர். (22)

### தேவர்கள் பாற்கடல் கடைதல்

**500.** மலைபி டுங்கினர் வாசுகி
பிணித்தனர் மதியம்
நிலைபெ றும்படி நட்டன
ரோடதி நிரைத்தார்
அலைபெ றும்படி பயோததி
கடைந்தன ரவனி
நிலைத ளர்ந்திட வனந்தனுங்
கீழுற நெளித்தான்.

மலை பிடுங்கினர், வாசுகி பிணித்தனர், மதியம்
நிலைபெறும்படி நட்டனர்; ஓடதி நிரைத்தார்,
அலை பெறும்படி பயோததி கடைந்தனர், அவனி
நிலை தளர்ந்திட அனந்தனும் கீழ் உற நெளித்தான்.

பொ :—(அவர்கள்) மந்தர கிரியைப் பெயர்த்து வந்து அதனை வாசுகிப் பாம்பாற்கட்டிச் சந்திரனைத் தூணாக நிலைபெற நிறுவி, மூலிகைகளை நிரப்பி, அலை யெழும்படி பாற்கடலைக் கடைந்தார்கள். (அப்பொழுது தேவாசுரர்கள் ஒருங்குகூடிப் பாரமிகுதியால்) பூமி நிலைகுலையக் கீழே அதனைத் தாங்கிநின்ற ஆதிசேடனும் உடம்பை மிகவும் நெளிக்கலானான். (23)

### பாற்கடலைக் கடைதற்குத் திருமால் உதவிபுரிதல்

**501.** திறல்கொ ளாமையாய் முதுகினில்
மந்தரந் திரிய
விறல்கொ ளாயிரந் தடக்கைகள்
பரப்பிமீ வலிப்ப

மறனி லாமுனி வெகுளியின்
மறைந்தன வரவே
யறனி லார்மனத் தடையலா
நெடுந்தகை யமைத்தான்.

திறல் கொள் ஆமையாய், முதுகினில் மந்தரம் திரிய,
விறல் கொள் ஆயிரம் தடக்கைகள் பரப்பி மீ வலிப்ப,
மறன் இலா முனி வெகுளியின் மறைந்தன வரவே,
அறன் நிலார் மனத்து அடையலா நெடும் தகை அமைத்தான்.

பொ :—அறநெறி நில்லாதாருடைய மனங்களிலே செல்லாத பெருங்குணத்தவனான திருமால், தன் முதுகில் மந்தரமலை சுழலும்படி வலிமையுள்ள கூர்மாவதாரமாகியும், வெற்றிபெற்ற தன் ஆயிரம் திருக்கைகளைப் பரப்பியும், பாவமற்ற துருவாசமுனியின் கோபத்தால் நீங்கி ஒளித்த பொருள்கள் மீண்டு வரும்படி செய்தருளினன்.

கு :—மறனிலா – என்பதற்குத் கோபம் மனத்தில் அடங்கி நிற்கப்பெறாத என்றும் அறனிலா – என்பதற்குத் தருமநெறி இல்லாத என்றும் பொருள்கூறலும் அமையும். திருமாலுக்குக் கூறப்பட்ட அடைமொழிகளால் பாசண்டிகளான அசுரர்களுக்கு அனுகூலமற்றவன் திருமால் என்பது குறித்தபடியாம். (21)

### அமிர்தத்தைத் தேவர்களே பெறுதல்

**502.** இறந்து நீங்கின யாவையு
மெம்பிரா னருளாற்
பிறந்த வவ்வயிற் சுராசுரர்
தங்களிற் பிணங்கச்
சிறந்த மோகினி மடந்தையா
லவுணர்தஞ் செய்கை
துறந்து மாண்டன ராரமிர்
தமரர்கள் துய்த்தார்.

இறந்து நீங்கின யாவையும் எம்பிரான் அருளால்
பிறந்த; அவ்வயின், சுர அசுரர் தங்களில் பிணங்கச்
சிறந்த மோகினி மடந்தையால் அவுணர் தம் செய்கை
துறந்து மாண்டனர்; ஆர் அமிர்து அமரர்கள் துய்த்தார்.

பொ :—மறைந்து ஒழிந்த பொருள்களெல்லாம், எம்பெருமானுன திருமாலருளால் (பாற்கடலினின்றும்) மீளவும் உண்டாயின. உண்டாயபொழுது சுரர்களும் அசுரர்களும் (அமுதத்தின் பொருட்டு) அது தத்தமக்கு உரியதென்று மாறுபட, அக்காலத்து (கண்டவர்களை மயக்கும்படி திருமால் கொண்ட) சீரிய மோகினிவடிவால் அசுரர்கள் (அமுதத்திற்காகப் பிணங்கிய) தம் செய்கை யொழிந்து (அப்பெண்ணை யடைய விரும்பித் தமக்குள் பொருது) நின்ற பொழுது இறந்தார்கள். அதனுல் அமிர்தத்தைத் தேவர்களே உண்டு அனுபவித்தார்கள்.

கு :—கடலுள் ஒளித்த தெய்வச் செல்வங்களெல்லாவற்றிலும் களிப்புமிகுதி தரும் அமுதினைப் பருகுவதிலுள்ள ஆசைப்பெருக்கே பிணங்குதற்கேதுவாயிற்று-என்பார். 'சுராசுரர் தங்களிற் பிணங்க' என்றுர். சுரர் என்பது-அமுதமாகிய உணவினர் என்றும், அசுரர் என்பது – அவ்வுணவு இல்லார் என்றும் பொருள்படும். அமுதம் – பிணி மூப்பு இறப்பு நீக்கிக் களிப்புத் தருவது. அமுதருந்தியவர் மரண மற்ற தன்மையரென்பது, 'ஆரமு தமரர்கள் துய்த்தார்' என்று குறிப்பிற்பெற வைக்கப் பட்டது. (25)

28 – என்னும் குறியீடுள்ள சுவடியில் 'இறந்து நீங்கின' என்பதன் பின் பின்வரும் செய்யுள் காணப்படுகிறது :—

502 (a) உய்த்த காலையி லரக்கரா மிராகுவென் போனைச்
சித்த நீங்கிய மாயனேர் தெறுவியாற் சிதைத்தான்
பித்த னுன்முகன் கடவுளர் முதலியர் பேச
மெய்த்த போதனன் கோட்களி னிரண் டென விடுத்தான்

## பாற்கடலில் தோன்றிய பொருள்களைத் திருமால் பங்கிடுதல்

**503.** வெருவு மாலமும் பிறையும்வெள்
விடையவற் கீந்து
தருவும் வேறுள தகைமையும்
சதமகற் கருளி
மருவு தொல்பெரு வளங்களும்
வேறுற வழங்கித்
திருவு மாரமு மணிந்தனன்
சீதர மூர்த்தி.

வெருவும் ஆலமும் பிறையும் வெள் விடையவற்கு ஈந்து,
தருவும் வேறு உள தகைமையும் சதமகற்கு அருளி,
மருவு தொல் பெரு வளங்களும் வேறு உற வழங்கித்,
திருவும் ஆரமும் அணிந்தனன் சீதர, மூர்த்தி.

பொ :—யாவரும் அஞ்சும் ஆலகால விடத்தையும் சந்திரனையும் வெண்ணிறம் பொருந்திய இடபாரூடனை சிவபிராற்குக் கொடுத்து, பஞ்சதருக்களையும் ஏனை (இழந்த) செல்வங்களையும் இந்திரற்கு உதவி, மற்றும் சிறப்பு வாய்ந்த பழைய பெரிய வளங்களை வெவ்வேறு தேவர்கட்குத் தனித்தனி அளித்து (முடிவில்) திருவையும் கௌஸ்துப மணியையும் தான் அணிநது கொண்டனன் திருமால்.

கு :—ஆலகால விடமும் சந்திரனும் சிவபிராற்கும், கற்பகதரு முதலியவை இந்திரற்கும், புஷ்பக முதலியன குபேராதிகட்கும் எஞ்சிய திருமகளையும் கௌஸ்துபமணியையும் தனக்கும் பகிர்ந்து கொண்டான் திருமால் என்க. தேவர்கள் அமுதுபெறத் தான் திருவையும் மணியையும் பெற்றதனை - ''விண்ணவர் அமுதுண அமுதின் வந்த பெண்ணமு துண்டவெம் பெருமானே'' என்று சிறப்பித்தார் திருமங்கை மன்னனும். பாற்கடல் கடைந்த வரலாறும் அவ்வத்தேவர் பெற்ற செல்வங்களும் இதிகாச புராணங்களில் விரித்துக் கூறியவற்றைச் சுருங்கக் கூறியவாறு. மணியுடன் திருவையும் திருமால் அணிந்தமையின் 'சீதரமூர்த்தி' எனச் சிறப்பிக்கலாயிற்று. (26)

### தேவரைக் கொல்லவல்ல புதல்வனைத் தருமாறு திதி தன் கணவனை வேண்டல்

**504.** அந்த வேலையிற் றிதிபெருந்
துயருழந் தழிவாள்
வந்து காசிபன் மலரடி
வணங்கியென் மைந்தர்
இந்தி ராதியர் புணர்ப்பினு
லிறந்தன ரெனக்கோர்
மைந்த னீயரு ளவர்தமை
மடித்தலுக் கென்றாள்.

அந்த வேலையில், திதி, பெருந்துயர் உழந்து அழிவாள்,
வந்து, காசிபன் மலர் அடி வணங்கி, 'என் மைந்தர்
இந்திராதியர் புணர்ப்பினுல் இறந்தனர்; எனக்கு ஓர்
மைந்தன் நீ அருள், அவர் தமை மடித்தலுக்கு' என்றாள்.

பொ :—அக்காலத்தில் (அசுரர்களின் தாயான) திதி என்பாள் (புத்திர சோகத்தால்) பெருந்துன்பங்கொண்டு மனம் அழிபவளாய் (தன்கொழுநனை) காசிப முனிவன் அருகே வந்து அவனது தாமரைமலர்போலும் திருவடிகளை வணங்கி, இந்திராதி தேவர்களின் சூழ்ச்சியால் என்மைந்தர்கள் இறந்தார்கள். அத் தேவர்களை மடிக்கவல்ல புத்திரன் ஒருவனை எனக்கு நீ அளித்தருள்வாயாக என்று வேண்டி நின்றாள்.

கு :—தேவர்களது வேண்டுகோளே மோகினி அவதார மூலம் அசுரர்கள் செயலொழிந்து மடிதற்குக் காரணமாதலின், 'இந்திராதியர் புணர்ப்பினுல்' என்றார். (27)

### திதி தவம்புரிதல்

**505.** என்று கூறலு மகவுனக்
களித்தன மினிநீ
சென்று பாரிடைப் பருவமோ
ராயிரந் தீர
நின்று மாதவம் புரிதியே
னினைவுமுற் றுதியென்
றன்று கூறிடப் புரிந்தன
ளருந்தவ மனையாள்.

என்று கூறலும், 'மகவு உனக்கு அளித்தனம்; இனி நீ
சென்று, பாரிடைப் பருவம் ஓர் ஆயிரம் தீர
நின்று, மாதவம் புரிதியேல் நினைவு முற்றுதி' என்று
அன்று கூறிடப் புரிந்தனள் அருந்தவம் அனையாள்.

பொ :—(திதி) இவ்வாறு வேண்டுமளவில் (காசிப முனிவன்) 'உனக்குப் புத்திரனொருவனைக் கொடுத்தோம்; இனி நீ பூமியிற் போய் ஆயிரம் ஆண்டுகள் கழிய, நிலையாகப் பெருந்தவம் புரிவாயாயின் நின் கருத்து நிறைவேறப் பெறுவாய்' என்று கூறியருள அந்தத் திதி, பிறர் செயற்கரிய தவத்தைச் செய்துமுடித்தாள்.

கு :—இப்பூமியில் அவள் தவம் செய்த தலம் 'குசப்பிலவம்' என்பர். (28)

### இந்திரன் திதியின் கருவைச் சிதைத்தல்

**506.** கேட்ட வாசவ னன்னவட்
கடிமையிற் கிடைத்து
வாட்ட மாதவத் துணர்ந்தவள்
வயிற்றுறு மகவை
வீட்டி யேயெழு கூறுசெய்
திடுதலும் விம்மி
நாட்ட நீர்தர மருத்தெனு
நாமமு நவின்ருன்.

**கேட்ட வாசவன், அன்னவட்கு அடிமையில் கிடைத்து,
வாட்டம் மா தவத்து உணர்ந்து, அவள் வயிற்று உறு மகவை
வீட்டியே எழுகூறு செய்திடுதலும், விம்மி
நாட்டம் நீர்தர, மருத்து எனும் நாமமும் நவின்ருன்.**

பொ :—(தீய நோக்குடன் திதி தவம் செய்தலைக்) கேட்ட இந்திரன், அவட்கு அடிமைத் தொழில்புரியும் வேலையில் அமைந்து (அவளது) பெருந்தவத்தில் ஒரு சோர்வை உணர்ந்து (அச்சமயத்தே) அவள் வயிற்றில் தங்கிய கருவான மகவை (நுண்ணிய உருக்கொண்டு சென்று) பிளந்து ஏழு துண்டங்களாக்கின அளவில், அவள் அவ்வாறு சிதைந்ததற்கு விம்மி அழுது, கண்களில் நீர் பெருக்கவும், இந்திரன் (அவ்வேழு துண்டங்களுக்கும்) 'சப்த மருத்துக்கள்' என்று பெயரிட்டுச் சென்ருன்.

கு :—கிடைத்தல் – அமைதல்; இயைதல். 'கரத்தொடு கரதலங் கிடைப்பப் பூட்டி' (கம்பரா-யுத்-மந்திரப்-100) என்ப. சோர்வு நேர்ந்தமைக்கு வால்மீகமும் புராணங்களும் வேறு வேறு காரணம் கூறும். சப்த மருத்துக்களின் பெயர்:— ஆவகம், பிரவகம், சம்வகம், உத்வகம், விவகம், பரிவகம், பராவகம் என்பன என்றும், அவற்றுக்குரிய இடங்களும் பிறவும் முன்னூல்களில் விவரிக்கப்பட்டுள்ளன. (29)

### திதி தவம்செய்த இடமும் சரவணமும் காட்டல்

**507.** ஆய திவ்விட மவ்விட
மவிர்மதி யணிந்த
தூய வன்றனக் குமைவயிற்
ருேன்றிய தோல்லை

வாயு வும்புனற் கங்கையும்
பொறுக்கலா வலத்த
சேய்வ ளர்ந்தருள் சரவண
மென்பதுந் தெரித்தான்.

ஆயது இவ்விடம், அவ்விடம் அவிர் மதி அணிந்த
தூயவன் தனக்கு உமைவயின் தோன்றிய, தொல்லை
வாயுவும் புனல் கங்கையும் பொறுக்கலா வலத்த
சேய், வளர்ந்தருள் சரவணம் என்பதும் தெரித்தான்.*

பொ:—இவ்வாறான வரலாறுடையது இவ்விடம், அவ்விடமோ விளங்கும் சந்திரனைத் தரித்த சிவபிரானுக்கு உமாதேவியின் மூலம் பிறந்த(வனும்), பழமையான வாயுதேவனாலும் நீர்மய மான கங்காதேவியாலும் தாங்க முடியாத ஆற்றலுடையவனு மான குமாரக் கடவுள் வளர்ந்தருளிய சரவணமாகும் என்பதனை யும் விசுவாமித்திரன் இராமபிராற்குத் தெரிவித்தான்.

கு :—அவ்விடம் என்றது எதிரே சேய்மையிற் காணப்பட்ட தொரு சோலையை. சரவணம் – நாணற்காடு. தங்கட்குச் சேனா பதி ஒருவர் வேண்டும் என்ற தேவர்களின் வேண்டுகோளின்படி (வாயுவைத் துணைக்கொண்ட அக்கினி தேவன்) சிவபிரானது திருமேனியினின்று வெளிப்பட்ட வீரியத்தைத் தாங்கிக் கங்கை யில் விட, அக்கங்கையும் அதனைத் தாங்கமாட்டாமல் அதனை நாணற் காட்டில் விட, குமரக் கடவுள் ஆறுமுகங்கொண்டு உதித்துக் கார்த்திகை மகளிர் முலைகொடுக்க வளர்ந்துவரலானார் என்பது ஒரு வரலாறு. (30)

## சூரியோதய வருணனை

**508.** காலன் மேனியிற் கருகிருள்
கடிந்துல களிப்பா
னீல வார்கலித் தேரொடு
நிறைகதிர்க் கடவுண்

* 3 என்னும் குறியீடுள்ள சுவடியில் இச்செய்யுளோடு கடல் கடைந்த படலம் முற்றுப்பெறுகிறது. 20-ஆம் சுவடியில் சரவணப்படலம் முற்றுப் பெறுகிறது.

மாலின் மாமணி யுந்தியி
னயனொடு வந்த
மூல தாமரை முழுமலர்
முளைத்தென முளைத்தான்.

காலன் மேனியில் கருகு இருள் கடிந்து, உலகு அளிப்பான்,
நீல ஆர்கலித் தேரொடும் நிறை கதிர்க் கடவுள்,
மாலின் மா மணி உந்தியின் அயனொடு வந்த
மூல தாமரை முழுமலர் முளைத்தென, முளைத்தான்.*

பொ :—இயமனது உடனிறம் போலக் கறுத்த இருளை நீக்கி உலகினைக் காக்கும்பொருட்டு, நிறைந்த கிரணங்களையுடைய சூரியபகவான், தன் இரதத்துடன் நீலநிறமான கடலிலே-திருமாலின் கருமணி போன்ற திருநாபியினின்று பிரமதேவனோடு தோன்றிய (உலக சிருட்டிக்கு) மூலமான தாமரை முழுமலர் முளைத்தது போல உதித்தான்.

கு :—நிறத்தாலும் கொடுமையாலும் இயமன் போன்றதென்பார்—'காலன் மேனியிற் கருகிருள்' என்றார். திருமால் கருங்கடற்கும், திருமாலின் உந்தி உதய பருவதத்திற்கும், அவ்வுந்தியிற் றோன்றிய பிரமன் சூரியனுக்கும், தாமரைமலர் அவன் தேருக்கும் உவமைகளாம் என்க. "தேவும் எப்பொருளும் படைக்கப், பூவில் நான்முகன்" தோன்றியவனாதலின்,'அயனொடு வந்த மூலதாமரை' எனப்பட்டது. (31)

### மூவரும் கங்கையைக் காணுதல்

509. அங்கு நின்றெழுந் தயன்முதன்
மூவரு மனையார்
செங்க ணேற்றவன் செறிசடைப்
பழுவத்தி னிறைதேன்
பொங்கு கொன்றையீர்த் தொழுகலாற்
பொன்னியைப் பொருவும்
கங்கை யென்னுமக் கரைபொரு
திருநதி கண்டார்.

* 5, 15, 16, 21 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் சமுத்திரமதனப் படலம் இச்செய்யுளுடன் முற்றுப்பெற்றுள்ளது.

13, 17, 18, 22, 40 என்னும் சுவடிகளில் இச்செய்யுளுடன் துருவாசர் சாபப்படலம் முற்றுப்பெற்றுளது.

அங்குநின்று எழுந்து அயன் முதல்
மூவரும் அனையார்
செங்கண் ஏற்றவன் செறி சடைப்
பழுவத்தின் நிறை தேன்
பொங்கு கொன்றை ஈர்த்து ஒழுகலால்
பொன்னியைப் பொருவும்
கங்கை என்னும் அக் கரைபொரு
திருநதி கண்டார்.*

பொ. :—திரிமூர்த்திகளை ஒத்த விசுவாமித்திரமுனிவன் முதலாய மூவரும் அச்சோலையினின்றும் புறப்பட்டு, செங்கண்களைக் கொண்ட இடபத்தையுடைய சிவபிரானது செறிந்த சடாடவியில் அணிந்த கொன்றைமலரை இழுத்துக்கொண்டு பெருகுதலால் பொன்னிநதியை ஒத்த கங்கையென்று பேர்பெற்ற இருகரைகளையும் மோதும் தெய்வநதியைக் கண்டார்கள்

கு :—கோசிக முனிவரைப் பிரமனுக்கும் இராமபிரானைத் திருமாலுக்கும் இலக்குமணரைச் சிவபிரானுக்கும் உவமை கொண்டு, 'அயன்முதன் மூவரும் அனையார்' என்றார். 'கால்தாக்க நிமிர்ந்து புகைந்து கனன்றுபொங்கும் ஆருக்கனல்' (நகர்நீங்கு) என்பது முதலிய இடங்களில், இராமபிரானது அயோத்திப் பிரிவில் இலக்குமணர் கொண்ட பெருஞ்சீற்றம் அறியப்படுமாதலின் அவர்க்கு உருத்திரமூர்த்தியை உவமித்தல் தகும். பகைவரைக் காணிற் சீறியெழுவதாதலின் வாகனமும் கொடியுமான இடபத்துக்குச் 'செங்கண்' என அடை கொடுக்கப்பட்டது. செங்கண் — சினமிக்க கண் என்றவாறு. சிவபிரான் சடையில் அணிந்த கொன்றைமலர்களை ஈர்த்துக்கொண்டு கங்கை இழியுமாறே, பொன்னியும் அம்மலர்களை மலையினின்று ஈர்த்திழிதலால் பொன்னியைப் பொருவும் கங்கை என்றார். "நலந்திகழ் சடையான் முடிக்கொன்றை மலரும் நாரணன் பாதத் துழாயும், கலந்திழி புனலாற் புகர்படு கங்கை" என்ற பெரிய திருமொழிப் பாசுரக் கருத்து இப்பாடலுள் அமைதல் குறிப்பிடத்தகும். காவிரியைக் கங்கைக்கு உவமையாக்கியது, 'கங்கையிற் புனிதமாய காவிரி' என்ற பெரியார் வாக்கைத் தழுவிய தென்க. "தெய்வப் பொன்னியெனலாய புனலாறுமுள" எனப் பின்பும் உவமைகூறிச் சிறப்பிப்பர் இவ்வாசிரியர். இவ்வுவமையால் கம்பநாடர்க்குத் தம்நாட்டை வளப்படுத்தும் காவிரிநதி பற்றிய பேரபிமானம் புலப்படும். (32)

* 28, 29 என்னும் சுவடிகளில் இச்செய்யுளுடன் துருவாசப்படலம் முற்றுப்பெற்றது.

23-25, 43 என்னும் சுவடிகளில் துர்வசர் சாபப்படலம் முற்றுப் பெற்றது.

கங்கையின் வரலாறு

510. இந்த மாநதிக் குற்றுள
தகைமைய யாவும்
எந்தை கூறுகென் றிராகவன்
வினவுற வெனையாள்
மைந்த நின்றிரு மரபுளா
னயோத்திமா நகர்வாழ்
விந்தை சேர்புயன் சகரனிம்
மேதினி புரந்தோன்.

'இந்த மா நதிக்கு உற்றுள தகைமைய யாவும்
எந்தை கூறுக' என்று இராகவன் வினவுற, எனை ஆள்
மைந்த! நின் திரு மரபு உளான், அயோத்தி மா நகர் வாழ்
விந்தை சேர் புயன், சகரன், இம் மேதினி புரந்தோன்.

போ :—இந்த மகாநதிக்கு அமைந்துள்ள பெருமைகளெல்லாவற்றையும், 'எந்தை போன்ற முனிவரே, சொல்வீராக' என்று இராமபிரான் கேட்க, என்னை ஆட்கொண்டருளும் திருமகனே! நினது புனிதமான சூரிய குலத்திற் பிறந்தவனும், அயோத்திமா நகரில் வாழ்ந்த வீரமகள் பொருந்திய தோள்கள் உடையவனும் ஆகிய சகரன் என்பான் இப்பூமி முழுதையும் ஆண்ட சக்கரவர்த்தி ஆவன்.

கு:—தன் வேள்வியைக் காத்ததனுலும் அவதார உண்மையை அறிந்தவனுதலாலும் 'எனையாள் மைந்த' என முனிவன் அருமை பாராட்டிக் கூறலாயினன் என்க. விந்தை-விந்தமலையில் வாழும் கொற்றவை. அவள் வாழ்விடமாக, வெற்றி வீரரின் தோள்மலையைக் கூறுவது கவிமரபு, ' திறல் மடந்தை திருத்தோளின் மிசை வாழ ' (பெருந்தொ, 897) என்பர். (33)

சகரனுடைய புத்திர பௌத்திரர்கள்

511. விறல்கொள் வேந்தனுக் குரியவ
ரிருவரில் விதர்ப்பை
பெறுறையி னல்கிய வசமஞ்சற்
கஞ்சுமான் புதல்வன்

பறவை வேந்தனுக் கிளையமென்
சுமதிமுற் பயந்த
அறனின் மைந்தர்க ளறுபதி
னுயிரர் வலத்தார்.

விறல் கொள் வேந்தனுக்கு உரியவர் இருவரில், விதர்ப்பை பொறையின் நல்கிய அசமஞ்சற்கு அஞ்சுமான் புதல்வன்; பறவை வேந்தனுக்கு இளைய மென் சுமதி முன் பயந்த அறனின் மைந்தர்கள் அறுபதினுயிரர் வலத்தார்.

பொ :—(உலகமெல்லாம்) வெற்றி கொண்ட சகரன் என்ற அந்தச் சக்ரவர்த்திக்கு உரிய பனைவியர் இருவரில் மூத்தவளான விதர்ப்ப ராசன் புத்திரியானவள் கருவிற் சுமந்து பெற்ற அசமஞ்சன் என்பானுக்கு அம்சுமான் என்பவன் புத்திரனுவன். புள்ளரசனுன கருடனுக்குத் தங்கையாய மெல்லியல் வாய்ந்த சுமதி (என்னும் இரண்டாம் மனைவி) முன்பெற்ற, அறநெறியினின்ற, குமாரர்களாக வலிமை பெற்று இருந்தவர்கள் அறுபதினுயிரவர்.

கு :—விதர்ப்பை-பிறந்த நாட்டினுல் வந்த பெயர்; கேசினி என்பது இவள் இயற்பெயர் என்பர்.

சகரன் தன் மனைவியர் இருவரோடும் இமயமலைக்கருகே தவம் புரிகையில். பிருகுமாமுனி எதிர் தோன்றி 'உன்மனைவியரிருவருள் ஒருத்தி வமிசவிருத்தியுள்ள புத்திரன் ஒருவனையும், மற்றவள் பெருவலிமை பெற்ற மக்கள் அறுபதினுயிரவரையும் பெறுவர் என்று அனுக்கிரகிக்க, அவ்வாறே மூத்த மனைவியான கேசினி மகனெருவனைப் பெற்றனள் என்றும், சுமதி சுரைக்காயைப் போன்றதோர் கருப்பிண்டத்தைப் பெற, வெடித்த அதினின்று அறுபதினுயிரவர் குமரர் தோன்றினர் என்றுப், மூத்தவளது மகன் பெயர் அசமஞ்சன் என்றும், அவன் ஊர்க்குழந்தைகளைப் பிடித்துச் சரயுநதி நீரில் எறிந்து, அவை துடித்து மரிப்பது கண்டு சிரித்து விளையாடினனென்றும், அக்கொடுந்தொழிலை அறிந்த தந்தை அவனைக் காட்டுக்குத் துரத்திவிட்டான் என்றும் முதனூல் கூறும். (34)

### சகரன் வேள்விக்குதிரையை இந்திரன் ஒளித்தது

512. திண்டி றற்புனை சகரனுந்
தனயர்சே வகங்கள்
கண்டு முற்றிய வயமகம்
புரிதலுங் கனன்று

வண்டு துற்றதார் வாசவற்
குணர்த்தினர் வானோர்
ஒண்டி றற்பரி கபிலன
திடையினி லொளித்தான்.

திண் திறல் புனை சகரனும் தனயர் சேவகங்கள்
கண்டு, முற்றிய அய மகம் புரிதலும், கனன்று
வண்டு துற்ற தார் வாசவற்கு உணர்த்தினர் வானோர்,
ஒண் திறல் பரி கபிலனது இடையினில் ஒளித்தான்.

பொ :—பெருவலிமை கொண்ட சகரமன்னனும் தன் புத்திரர்களின் வீரச்செயல்களைப் பார்த்து, வேதவிதிகள் நிறைந்த அசுவமேதயாகம் புரியத்தொடங்கிய அளவில், தேவர்கள் அதற்குச் சினந்து, வண்டுகள் மொய்க்கும் பூமாலை அணிந்த இந்திரனுக்கு அச்செய்தியைக் கூறினர். (அவன் உடனே) ஒளியும் வலிமையும் கொண்ட அரசனது யாகக் குதிரையைப் (பாதாளத்துத்தவம்புரியும்)கபில முனிவரது பக்கத்தில் (மாயையாற் கொண்டு சென்று) மறைத்துவைத்தான்.

கு :—தேவர்கள் சினந்து இந்திரனுக்கு உணர்த்த, அவ்விந்திரன் யாகக் குதிரையைக் கபிலமுனிவர்க்கு அருகில் மறைத்து ஒளித்ததற்குக் காரணம்-அசுவமேத யாகங்கள் நூறு செய்தவன் இந்திரபதவி பெறுவான் என்பது மரபாதலால், தம் பெரும் பதத்தை இழக்க நேருமோ என்ற அச்சமும், அதனால் உண்டான பொறாமையுமேயாம் என்க. கடுந்தவம் புரியும் கபிலரது முன்புறமாயின், தபோதனரான அவரது முற்பார்வையில் யாவும் சாம்பராகும் என்ற அவரது ஆணையுண்மையால்,அவர்க்குப் பின்புறமே குதிரை ஒளிக்கப்பட்டதென்பதும், அதனால் கபிலனதிடையினில் என்பதற்கு அவர்க்குப் பின்பக்கமாக என்பதே பொருளாம் என்பதும் பெறப்படும். பின்னர், 'ஏறுமாதவக் கபிலன் பின் இவுளி கண்டு' (அகலிகை -38) எனவருதலாலும் இப்பொருளே வலியுறுதல் காண்க. (35)

வேள்விக்குதிரை மறைந்ததை அம்சுமான் சகரனிடம் தெரிவித்தல்

**513.** வாவு வாசிபின் சென்றன
னஞ்சுமான் மறுகிப்
பூவி னோரிட மின்றியே
நாடினன் புகுந்து

தேவர் கோமகன் கரந்தமை
யறிந்திலன் றிகைத்து
மேவு தாதைதன் றாதைபா
லுரைத்தனன் மீண்டு.

வாவு வாசிபின் சென்றனன் அஞ்சுமான், மறுகிப்
பூவின் ஓர் இடம் இன்றியே நாடினன் புகுந்து,
தேவர் கோமகன் கரந்தமை அறிந்திலன், திகைத்து,
மேவு தாதைதன் தாதைபால் உரைத்தனன் மீண்டு.

பொ :—தாவிச் செல்லும் குதிரையின் பின்பே (அதற்குக் காவலாய்ப்) போன அம்சுமான், தேவர்கோமானுன இந்திரன் ஒளித்ததை அறியாமல், பூமியுள் ஓரிடமும் ஒழியாது தேடியும் (குதிரை காணுமற்போனமைக்குக்) கலங்கித் திரும்பி வந்து, சிங் காதனத்தில் வீற்றிருந்த தன் தந்தையின் தந்தையான சகரனுக்கு (செய்தியைத்) தெரிவித்தான்.

கு :—'மேவுதாதைதன் தாதைபால்' என்பதனுள் 'மேவு' என் பதற்கு அன்பு பொருந்திய என்றும், (யாகத்தை முடிப்பதில்) விருப்பங்கொண்டுள்ள என்றும் பொருள் கொள்ளினும் ஆம்.
(36)

**சகரர் பூமியைக் குடைந்து வேள்விக்குதிரையைத் தேடுதல்**

**514.** கேட்ட வேந்தனு மதலையர்க்
கம்மொழி கிளத்த
வாட்ட மீக்கொளச் சகரர்கள்
வடவையின் மறுகி
நாட்டம் வெங்கனல் பொழிதர
நானிலந் தடவித்
தோட்டு நுங்கினர் புவியினைப்
பாதலந் தோன்ற.

கேட்ட வேந்தனும், மதலையர்க்கு அம்மொழி கிளத்த,
வாட்டம் மீக்கொளச் சகரர்கள் வடவையின் மறுகி,
நாட்டம் வெங்கனல் பொழிதர நானிலம் தடவித்,
தோட்டு நுங்கினர் புவியினைப் பாதலம் தோன்ற.

பொ :—(அஞ்சுமான் சொன்னது) கேட்ட சகரராசனும் தம் மக்கள் அறுபதினுயிரவர்க்கும், அச்செய்தி கூறி வேதனை மிகுதியும் அடைய. அதுகண்ட அச்சகரர்கள் வடவைத்தீயைப் போலச் சினங்கொண்டு புறப்பட்டுக் கண்கள் கொடுந்தீப் பொழியப் பூவுலகு (முழுதும்) தேடியும் (யாகக் குதிரையைக் காணுமையால்) பாதலம் தோன்றும்படி பூமியைத் தோண்டி (அதனுள்) நுழைந்தார்கள்.

கு :—தொட்டு என்பது 'தோட்டு' என எதுகை நோக்கி நீண்டது. 'கடறேட்டா ரெனின்' (குலமுறை 8) என்று பின்னரும் இவ்வாறே கூறுதல் காண்க. நுங்குதல் தின்றல்; உட்கொள்ளுதல். ''பகைவர் மண் நுங்கி'' (பு-வெண்பா - 4, 15; கிட்கிந்தை 11).

(37)

சகரர் பாதலஞ்சென்று கபிலமுனிவர் பின்புறம்
குதிரையைக்கண்டு அம்முனிவரை வருத்துதல்

**515.** நூற்றி யோசனை யகலமு
மாழமு நுடங்கக்
கூறு செய்தன ரென்பரால்
வடகுண திசையின்
ஏறு மாதவக் கபிலன்பி
னிவுளிகண் டெரியிற்
சீறி வைதனர் செருக்கினர்
நெருக்கினர் சினத்தார்.

நூறு யோசனை அகலமும் ஆழமும் நுடங்கக்
கூறு செய்தனர் என்பரால்: வடகுண திசையின்,
ஏறும் மாதவக் கபிலன்பின் இவுளி கண்டு எரியின்
சீறி வைதனர் செருக்கினர் நெருக்கினர் சினத்தார்.

பொ:—நூறு யோசனை அளவில், அகலமும் ஆழமுமாய்ப் பூமி மெலியும்படி வடகிழக்குத்திசையில் பிளவுபடுத்தினர் என்பர் (முன்னோர்); அங்ஙனம் தோண்டிப் பாதலத்துட் சென்ற சகரர்கள், வளர்கின்ற பெருந்தவத்தினரான கபிலமுனிவரின் பின்புறமாக (கட்டப்பட்டிருந்த தம்) குதிரையைப் பார்த்துத் தீயைப் போலச் சீறி, வசை மொழிகளைக் கூறிச் செருக்கும் சினமும் உடையராய் நெருக்கி (அவரை) வருத்தலானார்கள்.

கு :—நெருக்கிச் செறுத்தற்குக் காரணம் - இவனே குதிரையைத் திருடிய கள்வன் என்று தவருகக் கருதியதேயாம். நுடங்குதல் - மெலியதாதல். (38)

கபிலர் சினத்தால் சகரர் சாம்பராதலும் தூதர் அரசற்கு அதனை அறிவித்தலும்

**516.** மூளும் வெஞ்சினத் தருந்தவன்
முனிந்தெரி விழிப்பப்
பூளை சூடித னகையினி
லெயில்பொடிந் தனபோல்
ஆளு மைந்தரா றயுதருஞ்
சாம்பரா யவிந்தார்
வேள்வி கொண்டநல் வேந்தனுக்
குரைத்தனர் வேய்கள்.

மூளும் வெம் சினத்து அருந்தவன் முனிந்து எரி விழிப்பப்
பூளைசூடிதன் நகையினில் எயில் பொடிந்தன போல்
ஆளும் மைந்தர் ஆறு அயுதரும் சாம்பராய் அவிந்தார்;
வேள்வி கொண்ட நல் வேந்தனுக்கு உரைத்தனர் வேய்கள்.

பொ:—பொங்கிய கொடுங் கோபங் கொண்ட அரிய தவமுனிவனை கபிலன், தீப்பறக்க வெகுண்டு விழித்த அளவில், பூளைப்பூச் சூடிய சிவபிரானது புன்சிரிப்பால் திரிபுரங்களும் சாம்பராயின வாறே, ஆட்சிக்குரிய அரசகுமாரர்கள் அறுபதினுயிரவரும் சாம்பலாய் ஒழிந்தார்கள்; இச்செய்தியை ஒற்றர்கள் (சென்று)யாகஞ் செய்யத் தொடங்கிய நற்குணமுள்ள அரசனுக்கு உரைத்தனர்.

கு :—பூளை கரந்தை ஊமத்தை எருக்கு கூவிளை கொன்றை இவற்றின் மலர்கள் சிவபிரானுக்கு உரியவை. பூளையை உழிஞை என்றும் கூறுவர். (39)

அம்சுமான் குதிரைகொணரப் பாதலஞ்சேர்தல்

**517.** உழைத்து வெந்துயர்க் கீறுகாண்
கிலனுணர் வொழியா
அழைத்து மைந்தன்றன் மைந்தனை
யவர்கழிந் தனரேல்

இழைத்த வேள்வியின் றிழப்பதோ
வெனவவ னெழுந்து
தழைத்த மாதவக் கபிலன்வாழ்
பாதலஞ் சார்ந்தான்.

உழைத்து, வெந்துயர்க்கு ஈறு காண்கிலன், உணர்வு ஒழியா, அழைத்து மைந்தன்தன் மைந்தனை, 'அவர் கழிந்தனரேல் இழைத்த வேள்வி இன்று இழப்பதோ?' என, அவன் எழுந்து தழைத்த மாதவக் கபிலன் வாழ் பாதலம் சார்ந்தான்.

பொ :—(புத்திரசோகத்தால்) துடித்துக் கொடிய தன் துக்கத்துக்கு ஒரு முடிவுகாணுதவனாய் உணர்ச்சியற்று, தன் மகன் மகனை அம்சுமானைத் தன்பால் வரச்செய்து, 'என்புத்திரர்கள் இறந்துபோயினராயின், செய்யத் தொடங்கிய யாகத்தை இப்போது (யான்) செய்யாது கைவிடுவதோ என்று கேட்க, அந்த அம்சுமான் (உடனே) புறப்பட்டுப் பெருந்தவம் புரியும் கபிலன் வாழும் பாதாள லோகத்தை அடைந்தான்.

கு :—கழிந்தனரேல் - இறந்தார்களாதலால்; ஏல் - ஏதுப் பொருளது. (40)

## கபிலமுனிவரிடத்தினின்று வேள்விக்குதிரை பெறுதல்

**518.** விண்டு நீங்கின ருடலுகு
பிறங்கல்வெண் ணீறு
கண்டு துண்ணெனு மனத்தினன்
கபிலமா முனிதன்
புண்ட ரீகமென் றூடொழு
தெழுந்தனன் புகழக்
கொண்டு போதிநின் னிவுளியென்
றுற்றதுங் குறித்தான்.

விண்டு நீங்கினர் உடல் உகு பிறங்கல் வெண் நீறு கண்டு, துண் எனும் மனத்தினன், கபில மா முனிதன் புண்டரீக மென் தாள் தொழுது எழுந்தனன், புகழக், 'கொண்டுபோதி நின் இவுளி' என்று உற்றதும் குறித்தான்.

பொ :—உயிரை விட்டு நீங்கின தன் சிறிய தாதையரின் உடல்கள் எரிந்து சிந்திய சாம்பற் குன்றைக் கண்டு அம்சுமான் திடுக்

கிட்ட மனத்தினனாய், கபிலமாமுனிவரின் தாமரை போன்ற திருத் தாள்களில் விழுந்து வணங்கி எழுந்து நின்று, (தான் வந்த கார ணத்தை)தெரிவித்த அளவில், அம்முனிவன் 'உனது குதிரையைக் கொண்டு போகுக' என்று அனுமதி தந்து, நடந்த செய்தியையும் சொன்னான்,

கு:—தன் சிறிய தாதையர் போல முனிவன் சினத்துக்கு ஆளாகாமல் அவனை வேண்டி அனுமதி பெறலாயினன் அம்சுமான் என்க. உற்றது – இந்திரன் குதிரையைக் கொணர்ந்து தன் பின்பக்கமாக ஒளித்ததும், அதனை அறியாது சாகரர் தன்னை வைது வருத்தியதும், அதனால் தன் கோபத்துக்கு ஆளானதும் ஆகும். (41)

## சகரன் வேள்விமுற்றிப் பரலோகம் செல்லல்

519. பழுதி லாதவ னுரைத்தசொற்
 கேட்டலும் பரிவாற்
றொழுது வாம்பரி கொணர்ந்தவி
 சுரர்களுக் கீயா
முழுதும் வேள்வியை முற்றுவித்
 தரசனு முடிந்தா
னெழுது கீர்த்தியாய் மைந்தனுக்
 கரசிய லீந்து.

பழுது இலாதவன் உரைத்த சொல் கேட்டலும், பரிவால் தொழுது, வாம்பரி கொணர்ந்து, அவி சுரர்களுக்கு ஈயா, முழுதும் வேள்வியை முற்றுவித்து, அரசனும் முடிந்தான்; எழுது கீர்த்தியாய்! மைந்தனுக்கு அரசியல் ஈந்து.

பொ:—கவிகளால் வரையத்தக்க மிக்க புகழுடையவனே! குற்றமற்ற கபிலமுனிவன் கூறிய சொற்களைக் கேட்டபின், அஞ்சுமான் அம்முனிவனை அன்புடன் வணங்கிப் பின் தாவிச் செல்லும் அக்குதிரையைக் கொண்டுவர, சகர மன்னனும் தேவர்களுக்கு அவிசைக் கொடுத்து, தான் மேற்கொண்ட யாகத்தை முற்று வித்து (ப்பின்பு) இளைஞனான அஞ்சுமானுக்கு அரசுரிமையைக் கொடுத்து (ப் பின்) இறந்தான்.

கு:—கொணர்ந்து – கொணர; எச்சத்திரிபு, பழுதிலாமை – தவஞ் செய்வோர்கள் வெருவரச் சென்றடை காம வெகுளி மயக்

கங்கள் நீங்கல். மைந்தன் என்பது, புத்திரன் என்னும் பொருளி லன்றி, வீரனுன இளைஞன் என்ற பொருளில் வந்தது, ''திரிந்த னர் மைந்த ரெல்லாம்'' (வரைக்காட்சி 30) என்புழிப் போல. (42)

### அஞ்சுமான் மரபில் பகிரதன் பிறத்தல்

**520.** சகரர் தொட்டலாற் சாகர
மெனப்பெயர் தழைப்ப
மகர வாரிதி சிறந்தது
மகிதல முழுது
நிகரின் மைந்தனே புரந்தன
னிவனெடு மரபிற்
பகிர தன்னெனும் பார்த்திவன்
வந்தவ தரித்தான்.

சகரர் தொட்டலால், சாகரம் எனப் பெயர் தழைப்ப
மகர வாரிதி சிறந்தது; மகிதலம் முழுதும்
நிகரில் மைந்தனே புரந்தனன்; இவன் நெடு மரபில்
பகிரதன் எனும் பார்த்திவன் வந்து அவதரித்தான்.

பொ :—சகர குமாரர்கள் தோண்டியதனுல் 'சாகரம்' என்ற பெயர் விளங்க, சுறுமீன்களுடைய கடலானது சிறப்புப்பெற்றது: பூவுலக முழுதும் ஒப்பற்ற அஞ்சுமான் என்ற குமரனே புரந்து வந்தான்; தொடர்ந்து நீண்ட இவனது வமிசத்தில் பகீரதன் என்ற அரசன் ஒருவன் தோன்றினுன்.

கு :—அஞ்சுமானின் குமாரன் திலீபனும், அத் திலீபன் மகன் பகீரதனும் ஆவர் என்க. உலகோர் விடாய் தீரவும் புனிதமெய்த வும் கங்கையைக் கொணர்ந்தவனுதலின் 'அவதரித்தான்' என உயர் சொல்லால் சிறப்பித்தார். தொட்டல், தொள் பகுதி. (43)

### பகீரதன் தன் மூதாதையர்செய்தி வசிட்டரை வினுதல்

**521.** உலகம் யாவையும் பொதுவறத்
திகிரியை யுருட்டி
இலகு மன்னவ னிருந்துழி
யிறந்தமை வினவ

அலகி றொன்முனி யுரைத்திடக்
கேட்டன னரசன்
திலக மண்ணுற வணங்கிநின்
றொருமொழி செப்பும்.

உலகம் யாவையும் பொது அறத் திகிரியை உருட்டி,
இலகு மன்னவன் இருந்துழி, இறந்தமை வினவ,
அலகில் தொல் முனி உரைத்திடக் கேட்டனன் அரசன்,
திலகம் மண் உற வணங்கி நின்று ஒரு மொழி செப்பும்.

பொ :—உலகமெல்லாம் பொது என்ற தன்மை இன்றித் தனக்கே உரியதாம்படி ஆஞ்ஞா சக்கரத்தைச் செலுத்தி விளங்கும் பகீரத சக்கரவர்த்தி ஆண்டுவரும்போது (ஒருநாள்), முன் நிகழ்ந்த செய்திகளை அவன் விசாரித்து வருங்கால், (தவப் பெருமைக்கு) எல்லையில்லாத பழைய முனிவரான வசிட்டர், முன் நிகழ்ந்த குலவரலாறுகளைக் கூறக் கேட்டுவந்த பகீரதன், தன் நெற்றித் திலகம் நிலத்திற் பதியும்படி கீழ்வீழ்ந்து வணங்கிநின்று அம்முனிவனை நோக்கி ஒரு வார்த்தை கூறுவானாயினன்.

கு :—குல வரலாறுகளை முனிவர் கூறினரெனவே, சாகரர் அழிந்த செய்தியும் கூறப்பட்டதென்பது பெறப்படும். முக்கியமான அச் சாகரர் செய்தி தெரிந்ததும், பகீரதன் அது பற்றியே முனிவரை உசாவிய செய்தி அடுத்த பாடலிற் கூறப்படுகின்றது. (44)

முதாதையர் நற்கதியடையும் வகையைப் பகிரதன் வினவ முனிவர்கூறத் தொடங்கல்

**522.** கொடிய மாமுனி வெகுளியின்
மடிந்தவெங் குரவர்
முடிய நீணிர யத்தினி
லழுந்திடு முறைமை
கடியு மாறெனக் கருந்தவ
மதற்குறு கருமம்
அடிகள் சாற்றுக வென்றலு
மந்தண னறைவான்.

'கொடிய மாமுனி வெகுளியின் மடிந்த எம் குரவர்
முடிய நீள் நிரயத்தினில் அழுந்திடும் முறைமை
கடியும் ஆறு, எனக்கு அருந்தவம் அதற்கு உறு கருமம்
அடிகள் சாற்றுக' என்றலும், அந்தணன் அறைவான்.

பொ :—'கபிலமாமுனியது கொடிய சிற்றத்தால் முடிந்த எங்கள் முன்னோர்கள் யாவரும் பெரிய நரகத்தில் ஆழ்ந்து கிடக்குந் தன்மையை நீக்கும்படி, யான் செய்தற்குரிய அரிய தவத்தையும் செய்முறைகளையும் அடிகளே! எனக்குச் சொல்லியருள்வீராக' என்று வேண்டி நின்ற அளவில், சீரிய அருளாளனாகிய வசிட்டன் சொல்பவனானான்.

கு :—பெருமுனிவர்களின் கோபத்தாலும் சாபத்தாலும் இறந்தவர்களுக்கு நற்கதி யில்லை என்பர். அடிகள் - பெரியோர், முனிவர். பாதர் என்பது வடமொழி. (45)

### வசிட்டமுனிவன் உபாயம் கூறல்

523. வைய மாளுடை மன்னவர்
மன்னவ மடிந்தோர்
உய்ய நீடவ மொழிவறு
பகலெலா மொருங்கே
செய்ய நாண்மலர்க் கிழவனை
நோக்கிநீ செய்தி
நைய லென்றினி துரைத்தன
னவையறு முனிவன்.

'வையம் ஆளுடை மன்னவர் மன்னவ! மடிந்தோர்
உய்ய, நீள் தவம், ஒழிவு அறு பகல் எலாம் ஒருங்கே
செய்ய நாள் மலர்க் கிழவனை நோக்கி நீ செய்தி;
நையல்' என்று இனிது உரைத்தனன் நவை அறு முனிவன்.

பொ :—பூவுலகை ஆட்சிபுரியும் அரசர்க்கு அரசனே! 'இறந்த உன் மூதாதையர் நற்கதிபெறும்படி செந்தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய பிரமதேவனைக் குறித்து முடிவில்லாத பல நாட்கள்வரை இடைவிடாமல் பெருந்தவத்தைச் செய்வாயாக, மனம் வருந்த வேண்டா' என்று முக் குற்றங்களுமற்ற வசிட்டமுனிவன் இனிமையாகக் கூறியருளினன். (46)

### பகீரதன் தவம்புரியப் பிரமதேவன் தோன்றுதல்

**524.** ஞாலம் யாவையுஞ் சுமந்திரன்
றன்வயி னல்கிக்
கோலு மாதவத் திமகிரி
மருங்கினிற் குறுகிக்
கால மோர்பதி னுயிர
மருந்தவங் கழிப்ப
மூல தாமரை முழுமுதற்
கிழவன்முந் தினனே.

ஞாலம் யாவையும் சுமந்திரன் தன் வயின் நல்கிக்,
கோலும் மாதவத்து இமகிரி மருங்கினில் குறுகிக்,
காலம் ஓர் பதினுயிரம் அருந்தவம் கழிப்ப,
மூல தாமரை முழுமுதல் கிழவன் முந்தினனே.

பொ :—(தான் ஆண்டுவந்த) உலகப் பரப்பு முழுமையும் சுமந்திரனிடம் ஒப்படைத்துவிட்டுப் பெரிய தவத்தைச் செய்தற்குரிய தலமான இமயமலைப்பாகத்தை அடைந்து, பதினுயிரம் வருட காலம் அரிய தவத்தைச் செய்து கழித்த அளவில், பிரபஞ்சத் தோற்றத்துக்கு மூலமான (திருமாலின்) உந்தித் தாமரையில் தோன்றிய - எல்லாப் பிராணிகட்கும் முதல்வனுன-பிரமதேவன் அவன்முன் விரைந்து தோன்றினுன்.

கு :—சுமந்திரன் என்பதற்கு நல்ல ஆலோசனை உடையவன் என்பது உறுப்புப்பொருள்; இது சூரிய வமிசத்தரசரின் மந்திரி கட்கு வழங்கும் பொதுப்பெயர். காலம் - வருடகாலம். முழுமுதலான திருமாலின் எல்லாவற்றுக்கும் மூலமான உந்தித் தாமரை மலரில் தோன்றியவன் என இறுதியடித் தொடருக்குப் பொருள் கொள்ளினுமாம். (47)

### பிரமன், கங்காநதியால் நின் முன்னேர் நற்கதி பெறுவர் எனல்

**525.** நின்பெ ருந்தவ மகிழ்ந்தன
னினதுநீள் குரவர்
முன்பி றந்தன ரருந்தவன்
முனிவினு தலினுல்

மன்பெ ரும்புவி யதனில்வா
னதிகடி தணுகி
என்பு தோயுமே லிருங்கதி
பெறுவரென் றிசைத்தான்.

'நின் பெருந்தவம் மகிழ்ந்தனன்; நினது நீள் குரவர்
முன்பு இறந்தனர் அருந்தவன் முனிவின் ஆதலினால்,
மன் பெரும் புவி அதனில் வான் நதி கடிது அணுகி,
என்பு தோயுமேல், இருங்கதி பெறுவர்' என்று இசைத்தான்.

பொ :—(பிரத்தியட்சமான பிரமன் பகீரதனை நோக்கி) நின் மாதவத்தை அறிந்து யான் மகிழ்ச்சி அடைந்தேன், பெருந்தொகையினரான நின்குல முன்னோர்கள், அருந்தவ முனிவனான கபிலனது சீற்றத்தால் முன் காலத்தே மாண்டொழிந்தனராதலின், (அன்னார் இறந்த) நிலைபேறான இப் பெரும்புவியில் ஆகாய கங்கை விரைந்துவந்து, பொடியான அவர்கள் எலும்புகள் அதன் புனித நீரில் படியுமானால், அப்பொழுதே (அவர்கள்) நற்கதியடைவார்கள் என்று சொன்னான். (48)

பிரமன் வரம் தந்து மறைதல்

**526.** மாக மாநதி புவியிடை
நடக்கின்மற் றவடன்
வேக மாற்றுதல் கண்ணுதற்
கன்றிவே றரிதால்
தோகை பாகனை நோக்கிநீ
யருந்தவந் தொடங்கென்
றேகி னானுல கனைத்துமெவ்
வுயிர்களு மீன்றான்.

'மாக மா நதி புவி இடை நடக்கின், மற்று அவள் தன்
வேகம் ஆற்றுதல் கண்ணுதற்கு அன்றி, வேறு அரிதால்;
தோகை பாகனை நோக்கி நீ அருந்தவம் தொடங்கு, என்று
ஏகினான்; உலகு அனைத்தும் எவ்வுயிர்களும் ஈன்றான்.

பொ :—'ஆகாய கங்கையானது பூவுலகில் நடந்துவரின் அதன் வேகத்தைப் பொறுத்துத் தாங்குதல் நெற்றிக்கண்ணுள்ள சிவபிரானுக்கு (எளியதே) அன்றி ஏனையோர்க்கு அருமையுடைய

தாகும். அதனல், உமாதேவியைப் பாகத்தே கொண்ட அப்பிரானை நோக்கி (முதலில்) அரிய தவத்தைச் செய்யத் தொடங்குக' என்று (பகீரதனுக்குக்) கூறியருளி, உலகமனைத்தையும் எல்லாப் பிராணிகளையும் படைத்த பிரமதேவன் மறைந்து சென்றான்.

கு :—வேறு-வேற்றோர் ; உயிர்கள் - பிராணி ராசிகள். சீவான்மாக்கள் நித்தியமாதலின் ஈன்றது ஆன்ம கோடிகளை யன்றென்க. (49)

## பகீரதன் சிவபிரானையும் கங்கையையும் குறித்து நோற்றல்

527. மங்கை பாகனை நோக்கிமுன்
மொழிந்தன வருடம்
தங்கு மாதவம் புரிதலுந்
தழனிறக் கடவுள்
அங்கு வந்துநின் கருத்தினை
முடித்துமென் றகன்றான்
கங்கை யைத்தொழக் காலமை
யாயிரங் கழித்தான்.

மங்கை பாகனை நோக்கி, முன் மொழிந்தன வருடம்
தங்கு மா தவம் புரிதலும், தழல் நிறக் கடவுள்,
'அங்கு வந்து நின் கருத்தினை முடித்தும்' என்று; அகன்றான்
கங்கையைத் தொழக் காலம் ஐயாயிரம் கழித்தான்.

போ :—(அதுகேட்ட பகீரதன் உடனே) உமாதேவியைப் பாகத்திற்கொண்ட சிவபிரானைக் குறித்து முற்கூறிய (பதினாயிர) வருடம் நிலைத்த பெருந்தவத்தைச் செய்த அளவில், செந்தீ வண்ணனை அக்கடவுள், (தவம் புரியும்) அவனிடம் வந்து, 'உன் கருத்தை நிறைவேற்றுவோம்' என்று கூறி அகன்றான். (அதன் பின்பு) கங்கா தேவியை (பிரத்தியட்சமாகப் பெற்று) வணங்குதற்குப் பகீரதன் ஐயாயிர வருடகாலம் (தவத்திலே) போக்கினன்.

கு :—' நின் கருத்து ' என்றது கங்கை வெள்ளம் வேகமாக ஓலித்து வருங்கால் அதன் வேகத்தை நீரே ஏற்றுத் தாங்கவேண்டும் என்றதனை, வந்து - என்பது, முடித்தும் என்றதனோடு இயையும். (50)

### கங்கை கூறுதல்

528. ஒரும டக்கொடி யாகிவந்
துனதுமா தவத்தென்
பொருபு னற்கொடி வரினதன்
வேகமார் பொறுப்பார்
அரனு ரைத்தசொல் விநோதமற்
றின்னுநீ யறிந்து
பெருகு நற்றவம் புரிகென
வரநதி பெயர்ந்தாள்.

ஒரு மடக்கொடி ஆகி வந்து, உனது மா தவத்து என் பொரு புனல் கொடி வரின், அதன் வேகம் ஆர் பொறுப்பார்? அரன் உரைத்த சொல் விநோதம், மற்று இன்னும் நீ அறிந்து பெருகும் நல் தவம் புரிக, என வரநதி பெயர்ந்தாள்.

பொ :—(நதிகளிற்) சிறந்த கங்காதேவி இளங்கொடி போன்ற தோர் பெண்வடிவுகொண்டு (பகீரதன்) முன்வந்து, 'நீ செய்த பெருந்தவத்தால், மோதிவரும் எனது நீண்ட நீர்ப்பெருக்கு (சில வுலகிலிழிந்து) வரின், அப்புனலின் வேகத்தைத் தாங்க வல்லவர் யாவருளர்? ஆதலால், (உனக்கு) சிவபிரான் வரமளித்துக் கூறிய வார்த்தை விளையாட்டேயாம்; மீளவும் அவனது உளக் கருத்தை அறியும்பொருட்டு, (குறைவற) வளரும் சிறந்த தவத்தை மேலும் நீ புரிவாயாக' என்று கூறிச்சென்றாள்.

கு :—நீருருவான கங்கையே அழகிய பெண் வடிவோடுவந்து பிரத்தியட்சமாயினளென்பார், 'ஒரு மடக்கொடியாகிவந்து' என் றும், என் புனற் பெருக்கு நீ செய்த தவப்பயனாக வரத்தடை யில்லை என்பார் – 'மாதவத்து என் பொருபுனற்கொடிவரின்' என்றும், மோதிவருதலும் கீழிழிதலுமாகியவற்றாற்கடுமையுடைய அவ்வெள்ளப்பெருக்கைத் தாங்கவல்லவர் எவருமே இல்லை என்பார் 'அதன் வேகமார் பொறுப்பார்' என்றும், நீ சிவனை நோக் கிச் செய்த தவம் குறைவுகளுடையதாதலால் அப்பிரான் உனக்கு விளையாட்டாக அளித்தவரம் உன் உட்கருத்தை முற்றுவிக்க வல்லதில்லை என்பார் 'இன்னும் நீ அறிந்து பெருகு நற்றவம் புரிக' என்றும் கங்காதேவி கூறலாயினள் என்க.

மடக்கொடி – இளங்கொடிபோன்ற பெண்; அன்மொழித் தொகை, பொருபுனற்கொடி – என்பதனை, பொருகொடிப் புனல் என்று மாற்றுக. கொடி - நீட்சி; கருங்கொடிப்புருவம் (சீவக)

எனவும் 'கொடி மூக்கும் குழைக்காதும் குறைத்தழித்தால்' (ஆரணிய. சூர்ப்பநகைப். 119) எனவும் இப்பொருளில் வருதல் காண்க, வானத்தினின்று கீழிழியும்போது நீண்டு தொடர்ந்து வருவதால் 'கொடிப்புனல்' எனப்பட்டது. இப்பாட்டுக்கு வேறு பாடங்களும் பொருளும் கூறுவாரும் உளர். (51)

### பகீரதன் சிவபிரானையும் கங்கையையும் குறித்து மீண்டும் நோற்றல் 529-530

**529**. கரந்தை மத்தமோ டெருக்கலர்
கூவிளை கடுக்கை
நிரந்த பொற்சடை நின்மலக்
கொழுந்தினை நினையா
அரந்தை யுற்றவ னிரண்டரை
யாயிர மாண்டு
புரிந்து நற்றவம் பொலிதர
வரையுறை புனிதன்.

கரந்தை மத்தமோடு எருக்கலர் கூவிளை கடுக்கை
நிரந்த பொன் சடை நின்மலக் கொழுந்தினை நினையா,
அரந்தை உற்றவன், இரண்டரை ஆயிரம் ஆண்டு
புரிந்து நற்றவம் பொலிதர, வரை உறை புனிதன்.

பொ :—(கங்காதேவியின் சொற்கேட்டு) துன்பமுற்ற பகீரதன் கரந்தை, ஊமத்தை, எருக்கு, வில்வம், கொன்றை இவற்றின் மலர்களைக் கலந்தணிந்த பொன்போலும் சடையுடையவனும் அழற்கொழுந்து போன்ற புனிதனுமான சிவபிரானைத் தியானித்தவண்ணம், இரண்டாயிரத்தைந்நூறு வருடம் பக்தியுடன் உயர்ந்த தவம் புரிந்து விளங்க, அப்போது கைலாச வாசியான அப் பரிசுத்த மூர்த்தி.

கு :—இது குளகச்செய்யுள். கூவிளை - வில்வம்; இங்கு அதன் இலைக்கும் ஏனைய அவற்றின் பூக்களுக்கும் முதலாகு பெயர்களாம். (52)

**530**. எதிர்ந்து நின்னினை வென்னென
விறைஞ்சியெம் பெரும
அதிர்ந்து கங்கையீ தறைந்தன
ளென்றலு மஞ்சேல்

பிதிர்ந்தி டாவகை காத்துமென்
றேகிய பின்றை
முதிர்ந்த மாதவ மிரண்டரை
யாயிர முடித்தான்.

எதிர்ந்து, 'நின் நினைவு என்' என, இறைஞ்சி, 'எம் பெரும!
அதிர்ந்து, கங்கை ஈது அறைந்தனள்' என்றலும், 'அஞ்சேல்
பிதிர்ந்திடாவகை காத்தும்' என்று ஏகிய பின்றை,
முதிர்ந்த மாதவம் இரண்டரை ஆயிரம் முடித்தான்.

பொ :—எதிர்தோன்றி, (மறுமுறை நீ தவம் செய்த) எண்ணம் எதுபற்றி என்று உசாவ, எம்பெருமானே! கங்காதேவி (என் தவத்துக்குப் பிரத்தியட்சமாகி) 'அவன் கூறியது இது' என்று மனமதிரும்படி சொன்னாள் என்ற அளவில், 'நீ பயப்படாதே; கங்கைநீர் சிறிதும் சிந்தாதவாறு அதனைத் தடுத்து இரட்சிப்போம்' என்று கூறியருளிச் சென்றபின்பு, இரண்டாயிரத்து ஐந்நூறு வருடம் கங்காதேவியை நோக்கித் தவம்புரிந்து நிறைவேற்றினன். (53)

பகீரதன் புரிந்த தவங்களின் சிறப்பு

**531.** பெருகு நீரொடு பூதியும்
வாயுவும் பிறங்கு
சருகும் வெங்கதி ரொளியையுந்
துய்த்துமற் றதையும்
பருக லின்றியு முப்பதி
ணயிரம் பருவ
முருகு காதலின் மன்னவ
னருந்தவ முயன்றான்.

பெருகு நீரொடு பூதியும் வாயுவும் பிறங்கு
சருகும் வெங்கதிர் ஒளியையும் துய்த்து, மற்று அதையும்
பருகல் இன்றியும், முப்பதிணயிரம் பருவம்
முருகு காதலின் மன்னவன் அருந்தவம் முயன்றான்.

பொ :—பகீரத வேந்தன், முற்றி நிலைமாறிய இலைச்சருகுகளையும், புழுதியையும், வழிந்தோடும் நீருடனே காற்றினையும், வெப்பமான சூரிய கிரணத்தையும் முதலில் உண்டு, பின்பு அக்கிரணத்

தையும் உண்டலின்றி, முப்பதினுயிரம் ஆண்டளவு முதிர்ந்த பத்தியோடு அரியதவத்தை வருந்திச்செய்தான்.

கு:—இதனுல் பகிரதன் கங்கை வருதற்பொருட்டுப் புரிந்த தவங்களின் இயல்புகளையும் அவற்றின் மொத்த வருடங்களையும் கவி சிறப்பித்தவாறு. பிறங்குதல் - நிலைமாறுதல் (சீவக-175). சூரியகிரணம் உண்டற்ருெழிற் குரியதன்றி நீர்போற் பருகுதற் குரி'பதாதலின் 'மற்றதையும் பருகலின்றி என்ருர். பருவம் - வருடம்; 'பருவமோ ராயிரந்நீர' என்ருர் முன்னும் (அகலிகை-28) பிரமனைக் குறித்துப் பதினுயிரமும், சிவனைக் குறித்துப் பதினுயிரமும், கங்கையைக் குறித்து ஐயாயிரமும் மீண்டும் சிவனைக்குறித்து இரண்டரையாயிரமும் மீண்டும் கங்கையைக்குறித்து இரண்டரையாயிரமும் ஆக முப்பதினுயிர வருடம் விடாது நெடுந்தவம் புரிந்தான் என்க. இனி, பருவம் என்பது ஆறு இருதுக்களைக் குறிப்பதென்று கொண்டு ஒவ்வொரு இருதுவுக்கும் ஐயாயிரமாக ஆறனையும் 'முப்பதினுயிரம் பருவம்' என்றும், நீர், பூழ்தி, வாயு, சருகு, கதிரொளி, முழுப்பட்டினி என்ற தவநிலைகள் ஒவ்வொன்றுக்கும் ஐயாயிரம் ஆண்டு என்று கொண்டு முப்பதினுயிரம் பருவம் என்றும் கணக்கிட்டு உரை கூறலும் உண்டு. ஏற்பன கொள்க. சருகு புழுதி நீர் வாயு கதிரொளி ஒன்றுமுண்ணுமை எனற்பாலன, செய்யுள் நோக்கிப் பிறழ நின்றது; 'உடை செல்வ மூனெளிகல்வி யென்றைந்தும்' (குறள் 739) என்புழிப் போல. (54)

### கங்கைவெள்ளத்தைச் சிவபிரான் சடையினில் கரத்தல்

532. உந்தி யம்புயத் துதித்தவ
னுறைதரு முலகும்
இந்தி ராதிய ருலகமும்
நடுக்குற விரைத்து
வந்து தோன்றினள் வரநதி
மலைமகள் கொழுநன்
சிந்தி டாதொரு சடையினிற்
கரந்தனன் சேர.

உந்தி அம்புயத்து உதித்தவன் உறைதரும் உலகும்
இந்திராதியர் உலகமும் நடுக்கு உற இரைத்து
வந்து தோன்றினள் வரநதி, மலைமகள் கொழுநன்,
சிந்திடாது ஒரு சடையினில் கரந்தனன் சேர.

பொ :—(பகீரதன் தன் தவத்தை முடித்த பின்) வரநதியான கங்கையானவள், திருமாலின் நாபீ கமலத்தில் தோன்றிய பிரம தேவன் வாழும் சத்திய லோகமும் இந்திரன் முதலிய தேவர்களின் உலகங்களும் நடுங்குத லடையும்படி ஆரவாரித்துக் கொண்டு பூவுலகில் வந்து சேர்ந்தாள். அங்ஙனம் சேரும்பொழுது, உமா காந்தனான சிவபிரான் ஒப்பற்ற தன் சடையிடையே (அக்கங்கைநீர் சிறிதும்) சிந்திடாதபடி ஒருசேர அடக்கி மறைத்தருளினன்.

கு :—தன்னை நோக்கித் தவம் புரிந்த பகீரதற்கு அவன் விரும்பிய வரத்தை அளித்துப் புவியில் இழிந்து வந்தவள் என்பார், 'வந்து தோன்றினள் வரநதி' என்றும், 'அரனுரைத்த சொல் வினோதம் என்.........வேகமார் பொறுப்பார்' என்று முன் கூறிய வகையே, மிக்க உக்கிரத்துடன் செருக்கி வந்தன ளென்பார், பிரமலோகம் இந்திரலோக முதலியனவும் கலங்க 'இரைத்து வந்து தோன்றினள்' என்றும், வந்த அவள் செருக்கினை முழுதும் அடக்கினன் சிவபிரான் என்பார் 'சிந்திடாதொரு சடையினில் கரந்தனன் சேர' என்றும் கூறினர். (55)

### கங்கையை ஒரு சிறிது பூமியில் விடுதல்

533. புன்னு னித்தரு பனியென
வானதி புனிதன்
சென்னி யிற்கரந் தொளித்தலும்
வணங்கினன் றிகைத்து
மன்ன னிற்றலும் வருந்தனஞ்
சடையள்வா னதியின்
றென்ன விட்டன னொருசிறி
தவனிபோந் திழிந்தாள்.

புல் நுனித் தரு பனி என
வான் நதி, புனிதன்
சென்னியில் கரந்து ஒளித்தலும்,
வணங்கினன், திகைத்து,
மன்னன் நிற்றலும், 'வருந்தல், நம்
சடையள் வான் நதி இன்று'
என்ன விட்டனன்; ஒரு சிறிது
அவனி போந்து இழிந்தாள்.

போ :—புல்லின் நுனியில் தங்கிய பனிநீர்த்துளிபோல, வானதியான கங்கை. புனிதனான சிவபிரான் சடைமுடியில் மறைந்து ஒளித்தனளாக, பகீரதன் நதிவரவு காணாது மன மயங்கிச் சிவபிரானை வணங்கி நின்ற அளவில், 'மனம் வருந்தாதே; ஆகாய கங்கை இப்போது நம் சடையிடத்து உள்ளாள்' என்று கூறி, அதன் மிகச் சிறியதொருபகுதியை வெளிவிட, அக்கங்கை நிலத்திலே வந்திறங்கினாள். (56)

## கங்கையைச் சன்னுமுனிவன் பருகி வெளியிட, அது சாகரரின் உடற்சாம்பலை நனைத்தல் 534-535

**534.** இழிந்த கங்கைமுன் மன்னவன்
விரைவொடு மேகக்
கழிந்த மன்னவர் கதிபெற
முடுகிய கதியால்
அழுந்து மாதவச் சன்னுவின்
வேள்வியை யழிப்பக்
கொழுந்து விட்டெரி வெகுளியன்
குடங்கையிற் கொள்ளா.

இழிந்த கங்கை முன் மன்னவன் விரைவொடும் ஏகக்,
கழிந்த மன்னவர் கதி பெற முடுகிய கதியால்,
அழுந்து மாதவச் சன்னுவின் வேள்வியை அழிப்பக்,
கொழுந்து விட்டு எரி வெகுளியன் குடங்கையில் கொள்ளா,

போ :—இறங்கிச் செல்லும் கங்காநதிக்கு முன்னே பகீரதன் வேகமாகச் செல்ல, இறந்த சாகரர் நற்கதி பெறும்பொருட்டு அந்நதி விரைந்து சென்ற செலவால், பெருந்தவத்தில் மன மாழ்ந்து நின்ற சன்னுமுனிவனது யாகத்தை அழித்த அளவில், சுவாலை விட்டு எரிகின்ற கோபாக்கினியுடையனாய்த் தன் உள்ளங்கையில் (அதன் வெள்ள நீர் முழுதையும்) அவன் முகந்து கொண்டு.

கு:—இதுவும் அடுத்துப்பின் வரும் செய்யுளும் குளகம்.

(57)

**535.** உண்டு வந்தனன் மறைமுனிக்
கணங்கள்கண் டுவப்பக்
கண்டு வேந்தனும் வணங்கிமுன்
னிகழ்ந்தன கழறக்
கொண்டு போகெனச் செவிவழிக்
கொடுத்தனன் குதித்து
விண்டு நீங்கின ருடலுகு
பொடியின்மே வினளே.

உண்டு உவந்தனன் மறை முனிக்
கணங்கள் கண்டு உவப்பக்
கண்டு வேந்தனும், வணங்கி, முன்
நிகழ்ந்தன கழறக்
'கொண்டு போக' எனச் செவி வழிக்
கொடுத்தனன், குதித்து
விண்டு நீங்கினர் உடல் உகு
பொடியின் மேவினளே.

பொ :—உடனிருந்த வேதம்வல்ல முனிவர் குழாங்கள் கண்டு மகிழும்படி குடித்துக் களித்தான்; பகிரதனும் அதனைப் பார்த்து (முனிவனை) வணங்கி முன் நிகழ்ந்த செய்திகளை (யெல்லாம்) தெரிவித்த அளவில், (அதற்கிரங்கிய அவன்) 'ஆயின் அழைத்துச் செல்லுக' என்று கூறித் தன் காதின் வழியாக (அந்நதியைத்) திருப்பிக் கொடுத்தனன் : (உடனே கங்கையும்) அவன் செவி வழியே விரைந்து பெருகி, முன் இறந்தழிந்த சாகரரின் உடல் களினின்று உக்க சாம்பரில் போய்ச் சேர்ந்தாள்.

கு :—சன்னுமுனிவன் செவிவழியே வெளிவந்ததனால் கங்கைக்குச் 'சான்னவி' என்றதோர் பெயருண்டாயிற்று என்க. (58)

### பகீரதன் அயோத்திக்கு மீளுதல்

**536.** நிரய முற்றிய சகரர்க
ணெடுங்கதி செல்ல
விரைம லர்பொழிந் தார்த்தன
விண்ணவர் குழாங்கண்

முரைச முற்றிய பல்லிய
முறைமுறை துவைப்ப
அரைச னப்பொழு தணிமதி
லயோத்திமீண் டடைந்தான்.

நிரய முற்றிய சகரர்கள்
நெடுங்கதி செல்ல,
விரை மலர் பொழிந்து ஆர்த்தன
விண்ணவர் குழாங்கள்;
முரைசம் முற்றிய பல் இயம்
முறை முறை துவைப்ப,
அரைசன் அப்பொழுது அணி மதில்
அயோத்தி மீண்டு அடைந்தான்.

பொ:—(உடனே) நரகத்துன்பத்தில் அழுந்தியிருந்த சகர குமரர்கள் நற்பதவிகளில் சென்று சேர, தேவர்கணங்கள் மணம் பொருந்திய (கற்பக) மலர்களை(ப் பகிரதன்மேற்) சொரிந்து ஆரவாரஞ் செய்தன. பேரிகைகளும் நிறைந்த வேறு பல வாச்சியங்களும் வரிசை வரிசையாக முழங்க, அப் பகீரதன் மீண்டு அழகிய மதில் சூழ்ந்த அயோத்திமாநகரை அடைந்தான். (59)

### கங்கையின் சிறப்பு

**537.** அண்ட கோளகைப் புறத்ததா
யகிலமன் றளந்த
புண்ட ரீகமென் பதத்திடைப்
பிறந்துபூ மகனூர்
கொண்ட தீர்த்தமா யரன்கொளப்
பகிரதன் கொணர
மண்ட லத்துவந் தடைந்ததிம்
மாநதி மைந்த.

**அண்ட கோளகைப் புறத்ததாய், அகிலம் அன்று அளந்த**
**புண்டரீக மென் பதத்திடைப் பிறந்து, பூமகனூர்**
**கொண்ட தீர்த்தமாய், அரன் கொளப், பகிரதன் கொணர,**
**மண் தலத்து வந்து அடைந்தது; இம் மா நதி மைந்த!**

பொ :—சக்கரவர்த்தித் திருமகனே! இந்த மகாநதி இவ்வண்ட கடாகத்துக்கு அப்புறத்தில் உள்ளதாய், முன்பு உலகமனைத்தை யும் திரிவிக்கிரமனாய் அளந்த திருமாலின் தாமரை போன்ற மெல்லிய திருவடியிலே தோன்றிப் பிரமதேவன் கொண்ட பாத தீர்த்தமாகிச் சிவபிரான் ஏற்றுக் கொள்ளும்படி பகீரதன் (பெருந்தவஞ்செய்து) கொணர்தலால் இந்நிலவுலகிடை வந்து அடையலாயிற்று.

கு :—'சது முகன் கையிற் சதுப்புயன் தாளிற் சங்கரன் சடை யினிற்றங்கி.........இழிபுனற் கங்கை' என்றார் பெரியாரும் (திவ்-பெரியாழ்வார் திருமொழி 7-4-3). திருமால் உலகளந்த காலத் தில் சத்திய லோகம் வரை சென்ற அப்பரமனது திருவடியைப் பிரமன் தன் கைக்கமண்டலத்தாற் கழுவி விளக்க அந்த ஸ்ரீபாத தீர்த்தமே கங்காநதியாகப் பெருகிய தென்பர். (60)

### கங்கையின் வேறு பெயர்கட்குக் காரணம்

**538.** சகரர் தம்பொருட் டருந்தவம்
பெரும்பக றள்ளிப்
பகிர தன்கொணர்ந் திடுதலாற்
பகிரதி யாகி
மகித லத்திடைச் சன்னுவின்
செவிவழி வரலால்
நிகரில் சானவி யெனப்பெயர்
படைத்ததிந் நீத்தம்.

சகரர்தம்பொருட்டு அருந்தவம் பெரும்பகல் தள்ளிப்
பகிரதன் கொணர்ந்திடுதலால், 'பகிரதி' ஆகி,
மகிதலத்திடைச் சன்னுவின் செவிவழி வரலால்,
நிகரில் 'சானவி' எனப் பெயர் படைத்தது இந் நீத்தம்.

பொ :—கங்கையின் நீர் வெள்ளம், சகர குமாரர்கள் நற்கதி அடையும்பொருட்டு, அனேக காலம் அரிய தவத்திலே கழித்துப் பகீரதனால் கொண்டுவரப் பட்டதனால், 'பாகீரதி' எனவும், சன்னு முனிவரின் காதுகளின் வழியாக வந்தனால் ஒப்பில்லாத 'சான்னவி' எனவும் பூவுலகிலே பெயர்கள் பெற்றது. (61)

## மூவரும் விதேகநாட்டை அடைதல் 539-540

**539.** என்று கூறலும் வியப்பினெ
டுவந்தன ரிறைஞ்சிச்
சென்று தீர்ந்தனர் கங்கையை
விசாலைவாழ் சிகரக்
குன்று போற்புயத் தரசன்வந்
தடியிணை குறுக
நின்று நல்லுரை விளம்பிமற்
றவ்வயி னீங்கா.

என்று கூறலும், வியப்பினொடு உவந்தனர் இறைஞ்சிச்,
சென்று தீர்ந்தனர் கங்கையை; விசாலை வாழ் சிகரக்
குன்றுபோல் புயத்து அரசன் வந்து அடி இணை குறுக,
நின்று நல் உரை விளம்பி, மற்று அவ்வயின் நீங்கா.*

பொ :—என்று, விசுவாமித்திரர் கூறிய அளவில் (கேட்ட இராம லக்குமணர்கள்) வியப்பும் உவப்பும் அடைந்தவராய் (அக்கங்கையை) வணங்கி அதனைக் கடந்து (பின்பு) விசாலை நகரில் வாழ்பவனும் சிகரத்தோடு கூடிய மலைபோலும் புயங்களை யுடையவனுமான அரசன் எதிர்கொண்டு வந்து, (முனிவனது) இருபாதங்களையும் (விழுந்து) வணங்க, (மூவரும்) அங்கே (சிறிது போது) தங்கி, இன் சொற்களைக் கூறிவிட்டுப் பின்பு அவ்விடத்தினின்று புறப்பட்டு. (62)

**540.** பள்ளி நீங்கிய பங்கயப்
பழனநன் னாரை
வெள்ள வான்களை களைவுறு
கடைசியர் மிளிர்ந்த
கள்ள வாணெடுங் கண்ணிழல்
கயலெனக் கருதா
அள்ளி நாணுறு மகன்பணை
மிதிலைநா டடைந்தார்.

---

*இச்செய்யுளுடன் 3, 14, 19, 20, 24 என்னும் சுவடிகளில் கங்கைப்படலம் முற்றுப்பெறுறுள்ளது.

5, 13, 16, 17, 18, 21—23, 25, 28, 29, 40 என்னும் சுவடிகளில் கங்கை வரலாற்றுப்படலம் முற்றுப்பெற்றுள்ளது.

44 என்னும் சுவடியுள் வரலாற்றுப்படலம் முற்றுப்பெற்றுள்ளது.

பள்ளி நீங்கிய பங்கயப் பழன நல் நாரை,
வெள்ள வான்களை களைவு உறு கடைசியர் மிளிர்ந்த
கள்ள வாள் நெடும் கண் நிழல் கயல் எனக் கருதா,
அள்ளி, நாண் உறும், அகன்பணை மிதிலை நாடு அடைந்தார்.*

பொ :—தாமரைகளையுடைய கழனிகளிலே (அப்போது) துயி லெழுந்த உயர்ந்த நாரைகள், நீர்ப்பெருக்கில் உண்டான நீண்ட களைகளைக் களைகின்ற உழவர்மகளிரது பிறழ்ச்சியும் (ஆடவருள் ளத்தை மயக்கும்) வஞ்சமும் ஒளியுமுள்ள கண்களின் நிழலைக் கயல் மீன்களென்று கருதி, தம்மூக்கால் கொத்தி, (அவை மீன்க ளல்லாமையால்) வெட்குதற்கிடமான அகன்ற வயல்களையுடைய விதேக நாட்டினை அம்மூவரும் சேர்ந்தார்கள். (63)

### விதேகநாட்டுச் சோலைகளின் சிறப்பு

541. வரம்பில் வான்சிறை மதகுகள்
முழவொலி வழங்க
அரும்பு நாண்மல ரசோகங்க
ளலர்விளக் கெடுப்ப
நரம்பி னான்றதேன் றாரைகொ
ணறுமலர் யாழிற்
சுரும்பு பாண்செயத் தோகைநின்
றாடுவ சோலை.

வரம்பு இல் வான் சிறை மதகுகள் முழவு ஒலி வழங்க,
அரும்பு நாள் மலர் அசோகங்கள் அலர் விளக்கு எடுப்ப,
நரம்பின் நான்ற தேன் தாரை கொள் நறுமலர் யாழில்
சுரும்பு பாண் செயத், தோகை நின்று ஆடுவ சோலை.

பொ :—அந்நாட்டுச் சோலைகளில் அளவற்ற பெரிய நீர்நிலையின் மதகுகள், முழவின் ஓசையைத் தரவும், அசோக மரங்கள் அரும்புகின்ற புதிய பூக்களாகிய ஒளிரும் விளக்குகளை ஏந்தவும் (யாழ்) நரம்புபோலச் சிறந்த மதுவொழுக்கைக் கொண்ட மண மலர்களான வீணைகளிலே வண்டுகள் பாடுதலைச் செய்யவும், மயில்கள் (தோகைகளை விரித்து) நிலைபெற்று ஆடுவனவாகும்.

---

* 15 என்னும் குறியீடுள்ள சுவடியில் கங்கைப்படலம் இச்செய்யுளுடன் முற்றுப்பெறுகிறது.

கு :—மதகினின்று வெளிவரும் நீரொலியை முழவொலியாக வும் அசோகமலரை விளக்காகவும் கூறியதற்கேற்ப, மதகுகளை முழவடிப்பவராகவும் அசோக மரங்களை மகளிராகவும் கொள்க. சிறை – நீர்நிலைகளின் கரை; ஆகுபெயர். 'சிறையு முண்டோ செழும்புனன் மிக்குழி' என்றார் மணிமேகலையினும். அந்நாட்டுச் சோலைகள் நடனவரங்கு போன்றிருந்தன என்றபடி. (64)

### கழனிகளின் சிறப்பு

**542.** பட்ட வாணுதல் மடந்தையர்
பார்ப்பெனுந் தூதால்
எட்ட வாதரித் துழல்பவ
ரிதயங்கள் வெறுப்ப
வட்ட நாண்மரை மலரின்மேல்
வயலிடை மள்ளர்
கட்ட காவியங் கட்கடை
காட்டுவ கழனி.

**பட்ட வாள் நுதல் மடந்தையர் பார்ப்பு எனும் தூதால்**
**எட்ட ஆதரித்து உழல்பவர் இதயங்கள் வெறுப்ப,**
**வட்ட நாள் மரை மலரின் மேல் வயல் இடை மள்ளர்**
**கட்ட காவி, அம் கண் கடை காட்டுவ கழனி.**

பொ :—அந்நாட்டுக் கழனிகள் ஒளிபொருந்தும் நெற்றியுடைய வராய் நீர்நிலையில் தங்கும் உழவர்மகளிரின் பார்வையாகிய தூதினால் (மயங்கி அவரைச்) சேர விரும்பித்திரியும் ஆடவர் மனங்கள் வெறுக்கும்படி, வயல்களிலே உழவர்கள் வட்டவுரு வான புதிய தாமரைமலர்களின்மேலே களைந்து எறிந்த கருங் குவளைமலர்களால் அழகிய கண்களின் கடைப்பகுதிகளைக் காட்டுவனவாகும்.

கு :—பட்டம் - நீர்நிலை, 'பட்ட மென்கமு கோங்கு படப்பை' (நாட்டுப் - 26) என்றார் முன்னும். இனி, பட்டம் - நெற்றியணியு மாம். வெறுப்புற்றதன் காரணம்:—தாமரை மலரிற் பொருந்திய குவளைப்பூக்களை நோக்கித் தம்மை குறிப்பாற் கண்காட்டி அழைக் கின்ற மகளிரின் முகமென மயங்கி, அதனருகில் வந்த ஆடவர்கள் உண்மை அறிந்ததும், அவை பூக்களாய் மயக்கின என்றேனும், தாமரை மலர்மேற் கிடக்கும் குவளைப் பூக்களைக் கண்டு வேறு மகளிர் பார்க்கலாயினர் என்றேனும் கொள்க. (65)

பொய்கைகளின் சிறப்பு

**543.** தூவி யன்னந்த மினமென்று
நடைகண்டு தொடரக்
கூவு மென்குயிற் குதலையர்
குடைந்ததண் புனல்வாய்
ஓவில் குங்குமச் சுவடுற
வொன்றொடொன் றூடிப்
பூவுறங் கினும் புள்ளுறங்
காதன பொய்கை.

தூவி அன்னம் தம் இனம் என்று நடை கண்டு தொடரக்
கூவும் மென் குயில் குதலையர் குடைந்த தண் புனல்வாய்,
ஓவில் குங்குமச் சுவடு உற, ஒன்றொடு ஒன்று ஊடிப்
பூ உறங்கினும் புள் உறங்காதன பொய்கை.

பொ :—(அந்நாட்டு) நீர்நிலைகள், சிறகுகளையுடைய அன்னங்கள் நடையழகினைப் பார்த்து தம் இனம் என்று மயங்கிப் பின் தொடர (ப் பெறுபவரும்) மெல்லிய குயில்கள் போன்ற மழலைச் சொல்லுடையவருமாகிய மகளிர் முழுகி விளையாடும் குளிர்ந்த நீரினிடமாக, அவர்களது அழிந்து நீங்குதலில்லாத குங்குமக் குழம்பின் அடையாளங்கள் பொருந்துதலால், அந்த அன்னங்கள் ஒன்றோடொன்று பிணங்கி (அவை தங்கிய) தாமரைகள் உறங்கினாலும் அப்புட்களின் ஒலி நீங்காதனவாகும்.

கு :—அன்னங்கள் பிணங்குதற்குக் காரணம், குங்குமக்குழம்பு படிந்திருத்தலால், தம் இனமானவற்றையே பிறசாதிப் பறவைகளென மயங்கியதாகும். வேற்றுப்புட்களைத் தமக்குரிய இடங்களிற் கண்ட அளவில் அவற்றோடு கலகமிடுதல் பறவைகளின் இயல்பு. இனிக் குங்குமக் குறிகளால் ஆண் அன்னங்களுடன் பெண் அன்னங்கள் கலவியில் ஊடலாயின என்று உரைப்பினுமாம். (66)

யாறுகளின் சிறப்பு

**544.** முறையி னின்முது மேதியின் முலைவழி பாலும்
துறையி னின்றுயர் மாங்கனி தூங்கிய சாறும்
அறையு மென்கரும் பாடிய வமுதமு மழிதே
நறையு மல்லது நளிர்புனல் பெருகலா நதிகள்.

முறையினின் முது மேதியின் முலை வழி பாலும்,
துறையில் நின்று உயர் மாங்கனி தூங்கிய சாறும்,
அறையும் மென் கரும்பு ஆடிய அமுதமும், அழி தேம்
நறையும் அல்லது நளிர் புனல் பெருகலா நதிகள்.

பொ :—(அந்நாட்டு) யாறுகள், ஒன்றன்பின் ஒன்றாக முதிய எருமைகளின் முலைகளினின்று பெருகும் பாலும், கரைகளிலே நிலைபெற்று ஓங்கியுள்ள மா மரங்களினின்று வழியும் இரசமும், துண்டங்களாக அறுபட்ட கரும்புகளை (ஆலையில் வைத்து) ஆட்டுவதனாலுண்டான சாறும், சிதைந்த தேன்கூடுகளினின்று ஓடும் தேனும் என்ற இவை (மாறி மாறிப் பெருகுவதேயல்லாமல்) குளிர்ந்த நீர் பெருகப்பெறாதனவாம்.

கு :—மேதியின் முலைவழி பால் பெருகியோடுவதை, 'கருமேதிகள், ஊரினின்ற கன்றுள்ளிட உண்முலை, தாரைகொள்ளத் தழைப்பன சாலியே' என்று நாட்டுப்படலத்தும் (25) கூறினர். தூங்குதல் - இடையறாது ஒழுகுதல், 'விம்பனி தூங்க' (திருக்கோ -320) 'தூங்கு திரையாறொழுகு சூழலது' (ஆரணிய. அகத்தியப். 57) என்பன காண்க. அறைதல் - துண்டங்களாகத் தறித்தல்; 'அறையுறு கரும்பின் தீஞ்சேறு'' (பதிற்றுப்பத்து-75) என்ப. (67)

நீரோடைகளின் சிறப்பு

545. இழைக்கு நுண்ணிடை யிடைதர
முகடுயர் கொங்கை
மழைக்கண் மங்கைய ரரங்கினில்
வயிரியர் முழவ
முழக்கு மின்னிசை வெருவிய
மோட்டிள மூரி
உழக்க வாளைகள் பாளையிற்
குதிப்பன வோடை.

இழைக்கும் நுண் இடை இடைதர முகடு உயர் கொங்கை
மழைக் கண் மங்கையர், அரங்கினில் வயிரியர் முழவம்
முழக்கும் இன் இசை, வெருவிய மோட்டு இள மூரி
உழக்க, வாளைகள் பாளையில் குதிப்பன ஓடை.

பொ :—(அந்நாட்டு) ஓடைகள், நூலிழையினும் நுட்பமான இடையானது வருந்தி மெலிய, (மலைச்) சிகரம் போல் ஓங்கிய

கொங்கைகளையும், மழைபோற் குளிர்ந்த கண்களையுமுடைய இளம்பெண்கள், (நாட்டியமாடும்) நாடகசாலையிலே, வயிரியர் முழக்கும் மத்தள ஓசைக்கு அஞ்சியோடும் பருமையும் இளமையும் உடைய எருமைகள் விழுந்து கலக்குதலினால் (அதற்குஅஞ்சி) வாளைமீன்கள் (தெங்கு கமுகுகளின்) பாளைகளின்மேல் தாவிப் பாயப் பெறுவனவாகும்.

கு :—வயிரியர் - கூத்தர்; வாத்தியக்காரர். (68)

## குளங்களின் சிறப்பு

**546.** படைநெ டுங்கண்வா ளுறைபுகப்
படர்புனன் மூழ்கிக்
கடைய முன்கடற் செழுந்திரு
வெழும்படி காட்டி
மிடையும் வெள்வளை புள்ளொடு
மொலிப்பமெல் லியலார்
குடைய வண்டினங் கடிமலர்
குடைவன குளங்கள்.

படை நெடுங் கண் வாள் உறை புகப் படர் புனல் மூழ்கிக் கடைய, முன் கடல் செழுந்திரு எழும் படி காட்டி, மிடையும் வெள் வளை புள்ளொடும் ஒலிப்ப, மெல் இயலார் குடைய, வண்டு இனம் கடி மலர் குடைவன குளங்கள்.

பொ :—தடாகங்கள், மென்மைத் தன்மையுள்ள மகளிர்தம் நீண்ட கண்களாகிய வாளாயுதங்கள் (இமைகளாகிய) உறையினுட் புகும்படி பரந்த நீரில் இறங்கி மூழ்கி, (தாம் அதிலின்று எழும்போது) முன்பு திருப்பாற்கடலைக் கடைய அங்கிருந்து அழகு செழித்த இலக்குமி எழுந்த தன்மையைத் தோற்றுவித்து, செறிய அணிந்த வளையல்கள் நீர்வாழ் பறவைகளோடு ஒப்ப ஒலிக்கும்படி நீரில் திளையா நிற்க, வண்டினங்கள் மணமுள்ள மலர்களைக் குடைந்து மதுவுண்டு மகிழ்வனவாயின.

கு :—'நெடுங்கண்வா ளுறை புக' என்றது புனலில் மூழ்குமிடத்துக் கண்கள் மூடியபடியைக் குறிப்பதாம். கண்ணாகிய வாள் இமையாகிய உறையுட்புக என்றமையால் ஏகதேச உருவகம். (69)

அகலிகை கல்லாய்க்கிடந்த மேட்டை மூவரும் காணுதல்

**547.** இனைய நாட்டினை இனிதுசென்
றிஞ்சிசூழ் மிதிலை
புனையு நீள்கொடிப் புரிசையின்
புறத்துவந் திருத்தார்
மனையின் மாட்சியை யழித்திழி
மாதவப் பன்னி
கனையு மேட்டுயர் கருங்கலோர்
வெள்ளிடைக் கண்டார்.

**இனைய நாட்டினை இனிது சென்று, இஞ்சி சூழ் மிதிலை
புனையும் நீள் கொடிப் புரிசையின் புறத்து வந்து இறுத்தார்;
மனையின் மாட்சியை அழித்து, இழி மாதவப் பன்னி,
கனையும் மேட்டு உயர் கருங்கல் ஓர் வெள்ளிடைக் கண்டார்.**

பொ :—இத்தகைய விதேக நாட்டினுள் (இராமலட்சுமணர் களும் விசுவாமித்திரமுனிவனும்) இன்பமுறச் சென்று மதில்கள் பலவற்ருல் சூழப்பட்ட மிதிலா நகரை அழகுசெய்யும் உயர்ந்த துவசங்களுள்ள புறமதிலின் வெளியிடத்தே வந்து தங்கினர், அவ்வளவில், இல்லறச் சிறப்பான கற்பினை அழித்ததனுல் இழிவை யடைந்த பெருந்தவத்தளான கௌதம பத்தினி (அக லிகை சாபவுருவில்) செறிந்த மேட்டினிடம் உயர்ந்து தோன் றும் கருங்கல்லினை வெளியிடத்தே கண்டார்கள்.

கு :—மாதவப்பன்னி – பெருந்தவத்தனுன கௌதமமுனிவ ரின் பத்தினி என்றும் ஆம். (70)

அகலிகை முன்னையவடிவம் பெறுதல்

**548.** கண்ட கன்மிசைக் காகுத்தன்
கழற்றுகள் கதுவ
உண்ட பேதைமை மயக்கற
வேறுபட் டுருவம்
கொண்டு மெய்யுணர் பவன்கழல்
கூடிய தொப்பப்
பண்டை வண்ணமாய் நின்றனண்
மாமுனி பணிப்பான்.

கண்ட கல் மிசைக் காகுத்தன் கழல் துகள் கதுவ,
உண்ட பேதைமை மயக்கு அற, வேறுபட்டு, உருவம்
கொண்டு மெய் உணர்பவன் கழல் கூடியது ஒப்பப்
பண்டை வண்ணமாய் நின்றனள்; மாமுனி பணிப்பான்.

பொ :—அங்ஙனம் கண்ட கல்லின்மேலே இராமபிரானது திருவடித்தூள் பட்டதனால். உள்ளத்துக்கொண்ட அஞ்ஞான மயக்கம் நீங்கும்படி தத்துவஞானம் பெற்றவன் தன் அஞ்ஞான மயமான யாக்கைநிலைமாறி. உண்மையான உருக்கொண்டு பரமனது திருவடிகளை அடைதலைப்போல (அவ்வகலிகை) முன்னை உருவம் கொண்டு எழுந்து நின்றாள். (அதனைக் கண்ட விசுவாமித்திரமுனிவன்) இராமபிரானை நோக்கிப் பின்வருமாறு சொல்பவனானன்.

கு :—உண்ட - அறிவைக்கெடுத்த எனவும் பொருளுரைப்பர். பேதைமை மயக்கு - அவித்தையின் தொடர்ச்சி. வேறுபட்டு உருவங் கொள்ளுதலாவது கருமசரீரம் நீங்கித் திவ்விய சரீரம் பெறுதல். (71)

## அகலிகையை முனிவன் இராமனுக்கு அறிவித்தல்

**549.** மாயிரு விசும்பிற் கங்கை
மண்மிசை யிழித்தோன் மைந்த
மேயின வுவகை யோடு
மின்னென வொதுங்கி நின்றாள்
தீவினை நயந்து செய்த
தேவர்கோன் றனக்குச் செங்கண்
ஆயிர மளித்தோன் பன்னி
யகலிகை யாகு மென்றான்.

மா இரு விசும்பில் கங்கை மண் மிசை இழித்தோன் மைந்த!
மேயின உவகையோடு மின் என ஒதுங்கி நின்றாள்,
தீவினை நயந்து செய்த தேவர் கோன்தனக்குச் செங்கண்
ஆயிரம் அளித்தோன் பன்னி, அகலிகை ஆகும், என்றான்.

பொ :—மிகப் பெரிய ஆகாயத்தினின்று கங்காநதியை (இப்) பூவுலகில் இழியச்செய்து கொணர்ந்தவனது மரபிற் பிறந்த குமரனே! பொருந்தின மகிழ்ச்சியோடும் மின்னற்கொடி போல

ஒருபுறத்தே (நாணத்தால்) ஒதுங்கிநின்ற இவள், (பிறன்மனை விழைதலாகிய) கொடுந்தொழிலை விரும்பிச் செய்த தேவேந்திரனுக்குச் சிவந்த ஆயிரங் கண்களைக் கொடுத்த கௌதம முனிவன் பத்தினியான அகலிகையாவாள் என்றான்.

கு :—தீமையை விரும்பிச் செய்த தேவேந்திரனுக்கு மேனி முழுதும் இழிவான குறியுளவாகச் சபித்த கௌதம முனிவன், அவன்றான் வேண்டக் கண்ணாயிரங்களாக மாற்றியளித்தான் என்பது வரலாறு. 'ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா-னிந்திரனே சாலுங் கரி' என்பர் வள்ளுவனாரும். (72)

### அகலிகையின் சாபவரலாற்றை இராமன் உசாவுதல்

**550.** பொன்னையேர் சடையான் கூறக்
கேட்டலும் பூமின் கேள்வன்
என்னையே யென்னையே யிவ்
வுலகிய லிருந்த வண்ணம்
முன்னையூழ் வினையி னாலோ
நடுவொன்று முடிந்த துண்டோ
அன்னையே யனையாட் கிவ்வா
றடுத்தவா றருளு கென்றான்.

பொன்னை ஏர் சடையான் கூறக்
கேட்டலும் பூமின், கேள்வன்,
என்னையே! என்னையே! இவ்
உலகியல் இருந்த வண்ணம்;
முன்னை ஊழ் வினையினாலோ?
நடுவு ஒன்று முடிந்தது உண்டோ?
'அன்னையே அனையாட்கு இவ்வாறு
அடுத்த ஆறு அருளுக' என்றான்.

பொ :—பொன்னையொத்த சடைமுடியுடைய கோசிகமுனிவன் இவ்வாறு கூறக் கேட்டவுடன், பூமிதேவிக்கு நாயகனான இராமபிரான் 'இந்தப் பூவுலக இயல்பு இருந்தவகை எத்தன்மையது எத்தன்மையது!! (என்று வியப்புற்றவனாய்) ''இங்ஙனம் நிகழ்ந்தது முற்பிறப்பிற் செய்த வினையின் பயனாலோ? அன்றி இடையில்நேர்ந்ததொரு செய்கையுண்டோ? (உலகிற்குத்) தாயேபோலும் இவட்கு இவ்வாறு நேர்ந்த காரணத்தைக் கூறியருள்வீராக'' என்றான்.

கு :—' என்னையே என்னையே ' என்பது வியப்புக் குறிக்கும் அடுக்கு. ' பூமின் கேள்வன் ' என்பது திருமகளுருவான சீதா தேவிக்கு நாயகனாகப் போகிறவன் எனப் பின் நிகழவிருப்பதைக் குறிப்பிட்ட வாறுமாம். கண்டார் யாவரும் அன்பு செய்வதன்றி காதல் செய்தற்குரியவளல்லள் என்பார். ' அன்னையே அனையாள் ' என்றார். (73)

### இந்திரன் அகலிகையை அணைய விழைதல்

551. அவ்வுரை யிராமன் கூற
வறிவனு மவனை நோக்கிச்
செவ்வியோய் கேட்டி மேனாட்
செறிசுடர்க் குலிசத் தண்ணல்
அவ்விய மவித்த சிந்தை
முனிவனை யற்ற நோக்கி
நவ்விபோல் விழியி னுடன்
வனமுலை நணுக லுற்றான்.

அவ் உரை இராமன் கூற,
அறிவனும் அவனை நொக்கிச்
செவ்வியோய்! கேட்டி, மேல் நாள்
செறி சுடர்க் குலிசத்து அண்ணல்,
அவ்வியம் அவித்த சிந்தை
முனிவனை அற்றம் நோக்கி,
நவ்வி போல் விழியினாள் தன்
வனம் முலை நணுகல் உற்றான்.

பொ :—(கீழ்க்கூறிய) வினாவுரையை இராமபிரான் சொல்ல, ஞானியான முனிவனும் அப்பிரானை நோக்கி, எல்லா நற்குணங்களும் நிறைந்தவனே! யான் கூறுவதனைக் கேட்பாயாக முன் ஒரு காலத்திலே மிக்க ஒளியுள்ள வச்சிராயுதமுடைய தலைவனான இந்திரன், அழுக்காறு நீங்கிய தூயமனமுடைய கௌதமமுனிவன் தன் ஆச்சிரமத்து இல்லாத சமயம் பார்த்து, (அங்குச் சென்று) மான்விழியாளான அகலிகையின் அழகிய தனங்களைச் சேர விரும்பினான்.

கு :—பிரமதேவன் உத்தம மங்கையரது உருவச் சிறப்பெல்லாம் ஒருங்கமையப் படைத்த அகலிகையை இந்திரன், ' இத்

தகையளை மணப்பதற்குத் தன்னையன்றி வேறு யாருமில்லை என்று செருக்கி நின்றனனென்றும், பிரமன் அவளை அவனிடம் சேர்க்காது 'காப்பாற்றுக' என்று கூறிக் கௌதம முனிவரிடம் கொடுத்தனர் என்றும், முனிவர் அவளுருவில் ஈடுபட்டு அவளிடம் காதல் கொள்ளாது காத்துப் பிரமதேவனிடம்பின்பு அளித்தனர்என்றும் அதுகண்டு வியந்த அப்பிரமன் பின் அவருக்கே மனைவியாக்கினனென்றும், அதனால் இந்திரன் பொறாமைகொண்டு அவளது கற்பினையழிக்க முயன்றனன் என்றும் வரலாறு கூறுவர்.

முதலடியில் நோக்கி என்ற வினையெச்சத்துக்குக் கூறுவானுயினன் என்று முற்று வருவித்து முடிக்க. அவ்வியம்-அழுக்காறு. 'அவ்விய நெஞ்சத்தா னுக்கமும்' என்ற குறளின் விசேடவுரையால் அறிக. 'நவ்விபோல் விழியினாள்' என்பதனால் அகலிகையின் கண்ணழகாலும் அவற்றின் குறிப்புக்களாலும் ஈடுபட்டவன் இந்திரன் என்பது பெறப்படும், 'தையலாள் நயன வேலும் மன்மதன் சரமும்பாய' என அடுத்துவரும் தொடரையும் நோக்குக. (74)

### இந்திரன் கௌதமனுருவொடு புகுதல்

**552.** தையலா ணயன வேலு
மன்மதன் சரமும் பாய
உய்யலா முறுதி நாடி
யுழல்பவ னொருநா ளுற்ற
மையலா லறிவு நீங்கி
மாமுனிக் கற்றஞ் செய்து
பொய்யிலா வுள்ளத் தான்ற
னுருவமே கொண்டு புக்கான்.

தையலாள் நயன வேலும்
மன்மதன் சரமும் பாய,
உய்யலாம் உறுதி நாடி
உழல்பவன், ஒரு நாள் உற்ற
மையலால் அறிவு நீங்கி,
மா முனிக்கு அற்றம் செய்து,
பொய் இலா உள்ளத்தான் தன்
உருவமே கொண்டு புக்கான்.

பொ:—அகலிகையின் கண்களாகிய வேலாயுதங்களும் காமதேவனது சரங்களும் தன்மேற் பாய்வதனால் (மிக வருந்தி) அக்

காம நோய் நீங்கி உய்யும்படியானதொரு உபாயத்தை ஆராய்ந்து உழலும் அவ்விந்திரன், ஒரு தினத்தில் மிக்க காமமயக்கத்தால் நல்லறிவுகெட்டு, மாதவனான கௌதமமுனிக்குப் பிரிவையுண்டாக்கி, வஞ்சகமற்ற மனமுள்ள அம்முனி வடிவத்தையே தான் மேற்கொண்டு அவனாச்சிரமத்துட் புகுந்தான்.

கு :—அகலிகை கண்கள் நெறியின் புறஞ்சென்றதென்பது தோன்ற, 'தையலாள் நயன வேலும்......பாய' என்றார்; 'ஆசலம் புரி......புறஞ்செலா' என்றதனால் மகளிரின் கண்களாகிய அம்பு வேறு ஆடவர்மேற் பாயாமை கற்பு நெறிக்கு உற்றமை காண்க. இந்திரன் காமமுற்றான் என்பது குறிக்க, 'மன்மதன் சரமும் பாய உழல்பவன்' என்றார். அற்றம் – ஈண்டுப் பிரிவு என்க; பிரிந்த சமயம் என்பது பொருள். 'தந்தையை அற்றம் நோக்கி' என்றார் கீழும் (திருவவதார-41). (75)

### இந்திரன் அகலிகையை அணைந்திருத்தலும் கௌதம முனிவர் வருதலும்

**553.** புக்கவ ளோடுங் காமப்
புதுமண மதுவின் றேறல்
ஒக்கவுண் டிருத்த லோடு
முணர்ந்தன ளுணர்ந்த பின்னும்
தக்கதன் றென்ன வோரா
டாழ்ந்தன ளிருப்பத் தாழா
முக்கண னனைய வாற்றன்
முனிவனு முடுகி வந்தான்.

புக்கு, அவளோடும் காமப்
புதுமண மதுவின் தேறல்
ஒக்க உண்டு, இருத்தலோடும்,
உணர்ந்தனள்; உணர்ந்த பின்னும்
தக்கது அன்று என்ன ஓராள்,
தாழ்ந்தனள் இருப்பத், தாழா
முக்கணன் அனைய ஆற்றல்
முனிவனும் முடுகி வந்தான்.

பொ :—(இவ்வாறு வேற்றுருவங்கொண்டு) சென்று அவ்வகலிகையோடு புதுக்கலப்பால் அமைந்த காமமாகிய மதுவின்

தெளிவை இருவரும் ஒக்கவுண்டு இன்புற்றிருக்கையில் (தன்னோடு மகிழ்பவன் இந்திரனே என்ற) தவற்றை அறிந்து கொண்டாள்; அறிந்த பின்பும், இத்தீச்செயல் தனக்குத் தகுதியானதன்று என்று அதனை விலக்க எண்ணாமல் அச்செயலில் தான் மனங் கவிந்திருக்க, அச்சமயத்தில் முக்கணனை சிவபிரானை ஒத்த பேராற்றலுடைய முனிவனும் தாழாமல் மீண்டு வேகமாக வந்து சேர்ந்தான்.

கு :—அவ்வின்பம் புதுமண மதுத்தெளிவையுண்டது போன்றிருந்தமையின், தான் முன் துய்த்திராத அதனை அளிப்பவன் இந்திரனே என்று கருதியதாம். தான் துயிலெழுந்து சென்றது அகாலமென்றும், அவ்வாறு செல்லும்படி இந்திரனே கோழியாய் நின்று கூவித் தன்னை வஞ்சித்தவனென்றும் தன் ஞானக் கண்ணாலறிந்தமையின், 'தாழா முடுகி வந்தான்' என்றார். ஒழுக்கத்தையும் உணர்வையும் அழித்தலில் பிறர்மனை விழைதலும் மதுபானமும் ஒப்பன வாதலின் அவை உருவகப் படுத்தப்பெற்றன. 'முக்கணனனைய வாற்றல் முனிவன்' என்றதால் பெருஞ் சினத்துடன் முனிவன் வந்தனன் என்பது பெறப்படும். (76)

## இந்திரன் அஞ்சிப் பூனையாய்ப் போதல்

**554.** சரந்தரு சாப மல்லாற்
றடுப்பருஞ் சாபம் வல்ல
வரந்தரு முனிவ னெய்த
வருதலும் வெருவி மாயா
நிரந்தர முலகி னிற்கு
நெடும்பழி பூண்டா ணின்றாள்
புரந்தர னடுங்கி யாங்கோர்
பூசையாய்ப் போக லுற்றான்.

சரம் தரு சாபம் அல்லால் தடுப்பு அரும் சாபம் வல்ல
வரம் தரு முனிவன் எய்த வருதலும், வெருவி, மாயா
நிரந்தரம் உலகில் நிற்கும் நெடும்பழி பூண்டாள் நின்றாள்,
புரந்தரன் நடுங்கி ஆங்கு ஓர் பூசையாய்ப் போகல் உற்றான்.

பொ :—(தடுக்கக்கூடிய) பாணங்களைத் தொடுக்கும் வில்லின் தொழிலா லல்லாமல், (எவராலும்) தடுக்கமுடியாத சாபத்தைக் கொடுக்கவும் அருளிக்கூறவும் வல்ல கௌதமமுனிவன் (ஆசிரமத்தைச்) சேரவந்த வளவில், எக்காலத்திலும் நிலவுலகில் அழியாமல்

நிற்கும் பெரும்பழிச்செயலை மேற்கொண்ட அகலிகை அச்சத்தால் மனம் பதறி நின்றுவிட்டாள். இந்திரனோ நடுங்கலுற்று ஒரு பூனையின் வடிவங்கொண்டு அங்குநின்று செல்லத்தொடங்கினன்.

கு :—பெருமுனிவரின் சாபத்தைக் கடவுளருந் தடுக்க வல்லவ ரல்ல ரென்பது, 'தடுப்பருஞ் சாபம் வல்ல' என்பதனுற் பெற வைத்தார். '' வில்லம்பிற் சொல்லம்பே மேலதிகம் '' என்பர். சாபத்தோடு அனுக்கிரகமும் புரியவல்ல நிறைமொழியாளன் என்பது தோன்றச் 'சாபம் வல்ல வரந்தரு முனிவன்' என்றார். (77)

## கௌதமன் இந்திரனுக்குச் சாபங் கொடுத்தல்

555. தீவிழி சிந்த நோக்கிச்
செய்ததை யுணர்ந்து செய்ய
தூயவ னவ்வை நின்கைச்
சுடுசர மனைய சொல்லால்
ஆயிர மாதர்க் குள்ள
வறிகுறி யுனக்குண் டாகென்
றேயின னவையெ லாம்வந்
திறையந்தன விமைப்பின் முன்னம்.

தீவிழி சிந்த நோக்கிச்,
செய்ததை உணர்ந்து, செய்ய,
தூயவன், அவனை நின்கைச்
சுடுசரம் அனைய சொல்லால்,
' ஆயிரம் மாதர்க்கு உள்ள
அறிகுறி உனக்கு உண்டாக' என்று
ஏயினன் ; அவை எலாம் வந்து
இயைந்தன இமைப்பின் முன்னம்.

பொ :—செப்பமும் தூய்மையுமுடைய முனிவரன் கண்கள் தீப் பொறி சொரியச் சினந்து பார்த்து, செய்யப்பட்ட தீச்செயலை அறிந்து, நின் திருக்கையால் ஏவப்படும் அம்புபோன்ற சுடு சொல்லால் இந்திரனை நோக்கி மாதர்க்குள்ள குறிகள் ஆயிரம் உனக்கு (உடல் முழுவதும்) உண்டாகக்கடவன என்று, சாபச் சொல்லை ஏவினன். அவ்வாறே அப் பெண்குறிக ளாயிரமும் இமைப்பொழுதில் (அவனுடம்பில்) பொருந்தின.

கு :—செய்தது-தன்னை வஞ்சித்ததும் பிறனில் விழைதலாகிய தீச்செயலைப் புரிந்ததும் ஆம். முனிவரது தடுப்பருஞ் சாபத்துக்கு இராமபாணத்தை யுவமித்தது ; 'தடுத்தற்குரிய ஏனைய அம்பு போன்றதன்று நின் கை அம்பு' என்று (தான் தாடகை வதத்தில் கண்கூடாகக் கண்டதை) விசுவாமித்திரன் நினைவிற்கொண்டு கூறியதாம். ஒரு பெண்ணின் குறியில் விழைவு கொண்டு தீச் செயல் புரிந்தமையால், அதனிடம் வெறுப்புண்டாகும் பொருட்டு அக்குறிகள் ஆயிரம் தோன்றுமாறு சபித்தான் முனிவன் என்க. (78)

### கௌதமன் அகலிகைக்குச் சாபங் கொடுத்தல்

**556.** எல்லையி னுண மெய்தி
யாவர்க்கு நகைவந் தெய்தப்
புல்லிய பழியி னோடும்
புரந்தரன் போய பின்றை
மெல்லிய லாளை நோக்கி
விலைமக ளனைய நீயும்
கல்லிய லாதி யென்றான்
கருங்கலாய் மருங்கு வீழ்வாள்.

**எல்லையில் நாணம் எய்தி, யாவர்க்கும் நகை வந்து எய்தப்**
**புல்லிய பழியினோடும் புரந்தரன் போயபின்றை,**
**மெல்லியலாளை நோக்கி, விலைமகள் அனைய நீயும்**
**கல் இயல் ஆதி என்றான்; கரும் கல் ஆய் மருங்கு வீழ்வாள்.**

பொ :—தேவேந்திரன் (தன் உடல் முழுதும் கேடடைந்து விட்டதனால்) அளவில்லாத நாணத்தையடைந்து (கண்டவர் கேட்டவர்) யாவர்க்கும் நகைப்பு வந்தெய்தும்படி நேர்ந்த தன் பழியோடும் தன் உலகம் சென்ற பின்பு (முனிவன்), மெல்லியலாளான தன் மனையாளைப் பார்த்து, (தீயொழுக்கத்தால்) வேசையையொத்த 'நீயும் கல்வடிவ மாகுக' என்று சபித்தான். (உடனே) அவள் கருங்கல் வடிவாய்ப் பக்கத்திலே வீழ்வாளாயினள்.

கு :—'மெல்லியலாள்' என்றதனால் சிரிய சாயலுடையாள் என்பதனோடு மனத்திட்பமற்ற இயல்பினள்என்றபொருளும் புலப்படும். 'தேவர் மெல்லியர்' (யுத்த. மந்திரப். 32) என்புழியும் காண்க. விலைமகள் - பொதுமகள். புல்லிய - அற்பமான என்றுமாம். (79)

அகலிகை வேண்டக் கௌதமன் சாபம் நீங்கும்வகை கூறுதல்

557. பிழைத்தது பொறுத்த லென்றும்
பெரியவர் கடனே யென்பர்
அழற்றருங் கடவு ளன்னாய்
முடிவிதற் கருளு கென்னத்
தழைத்துவண் டிமிருந் தண்டார்த்
தசரத ராம னென்பான்
கழற்றுகள் கதுவ விந்தக்
கல்லுருத் தவிர்தி யென்றான்.

பிழைத்தது பொறுத்தல் என்றும்
பெரியவர் கடனே என்பர்,
'அழல் தரும் கடவுள் அன்னாய்!
முடிவு இதற்கு அருளுக' என்னத்,
'தழைத்து வண்டு இமிரும் தண் தார்த்
தசரத ராமன் என்பான்
கழல் துகள் கதுவ, இந்தக்
கல் உருத் தவிர்தி' என்றான்.

பொ :—(அவ்வாறு விழ்பவள் முனிவனை நோக்கி) 'அக்கினியை வெளிவிடும் நெற்றிக்கண்ணையுடைய உருத்திர பகவானை ஒத்த முனிவனே! (சிறியோர்) செய்த பிழையைப் பொறுப்பது எக் காலத்தும் பெரியோர்களின் கடமையேயாகும் என்று கூறுவர் (முன்னோர்); (அதனால்) இச்சாபத்துக்கு ஒரு முடிவை அருள்வீராக' என்று வேண்டிநிற்க, (அதற்கிரங்கிய முனிவன்) செழிப்புடையதாய் வண்டுகள் ஒலிக்கும் குளிர்ந்த பூமாலையணிந்த தசரத ராமனது திருவடித்தூள் உன்மேற் படியும்போது இந்தக் கல்லுரு நீங்குவாய் என்று (சாபம் நீங்க வகையும்) அருளினான்.

கு :—பிழைத்தது—அறியாமையால் நேர்ந்த தவறு. அறியாமையாவது, தேவேந்திரன் கௌதமவுருக்கொண்டு வந்து தன்னுடன் களிக்கையில் அவனைத் தன் கணவனாகவே கருதியவளாயினும், இந்திரனே இத்தீச்செயல் புரிபவன் என்று தெரியவந்த பின்பும் அதனை விலக்க விரையாது இணங்கிநின்றதாகும். இத்தவற்றுக்காகவே 'விலைமகளனைய நீயும் கல்லியலாதி' என்று சபித்தான் என்க. கல்லியலாவது - பசு முதலிய விலங்குகள் தம் தினவு தீர உரிஞ்சிக் கொள்ளுங் கற்றறி போலுந் தன்மை. அவதாரமூர்த்தியாதலாலும், பத்து மாதம் சிறையிருந்து தன்

கற்புநெறியை நிலைநாட்டிய சீதாதேவியின் கொழுநனுக அடுத்து நிகழப்போவதாலும் 'தசரத ராமன்' என்பான் கழற்றுகள் கதுவ என்றுர். 'சிறியோர் செய்த சிறுபிழையெல்லாம், பெரியோராயிற் பொறுப்பது கடனே' என்ற முன்னேர் வாக்கு இங்கு ஒப்பிடத் தகும். (80)

## இந்திரன் சாபத்தை முனிவன் போக்குதல்

**558.** அந்தவிந் திரனைக் கண்ட
வமரர்கள் பிரமன் முன்னு
வந்துகோ தமனை வேண்ட
மற்றவை தவிர்த்து மாருச்
சிந்தையின் முனிவு தீர்ந்து
சிறந்தவா யிரங்கண் ணுக்கத்
தந்தம துலகு புக்கார்
தையலுங் கிடந்தாள் கல்லாய்.

அந்த இந்திரனைக் கண்ட அமரர்கள், பிரமன் முன்னு வந்து, கோதமனை வேண்ட, மற்று அவை தவிர்த்து, மாருச் சிந்தையின் முனிவு தீர்ந்து, சிறந்த ஆயிரம் கண் ஆக்கத், தம் தமது உலகு புக்கார்; தையலும் கிடந்தாள் கல்லாய்.

பொ:—அத்தேவேந்திரனைப் பார்த்த தேவர்கள் (தம் அரசற்கு நேர்ந்திருப்பதை எண்ணி) பிரமதேவனை முன்னிட்டுக்கொண்டு வந்து இந்திரனது சாப நீக்கத்துக்கு அருள்செய்யும்படிவேண்ட, கௌதமமுனி உடனே உள்ளம் மாறித் தன் வெகுளி தணிந்து அவ்விந்திரன் கொண்ட ஆயிரம் பெண்குறிகளும் சிறந்த ஆயிரம் கண்களாகும்படி அருளைச்செய்ய, (மகிழ்ந்த தேவர்கள்) தத்தம் உலகங்கட்குப் போய்ச்சேர்ந்தனர்; அகலிகையும் கல்லுருவாய்க் கிடந்தாள்.

கு:—'குணம் என்னுங் குன்றேறி நின்ருர் வெகுளி கணம்' என்பராதலின், 'மாருச் சிந்தையின் முனிவு தீர்ந்து' என்றுர். 'கௌதமர் இந்திரனை ஆண்குறி இழக்கும்படி சபித்தார்' என்று வால்மீகம் கூறினும், "அணங்குடை வச்சிரத்தோன் ஆயிரங் கண்ணேய்க்கும்......பல்பொறி" (கலித். முல்லை. 5) என்பதனல் 'ஆயிரங் கண்ணுக்க' என்றதும் பழைய வழக்கேயாதல் காண்க. (81)

இப்பாடலின் பின் பல பிரதிகளில் பின்வரும் பாடல் காணப் படுகிறது.

558. (a) வண்ணவார் குழலினுட்கு
மாதவன் றனக்கு மாசென்
றெண்ணலான் செய்த குற்ற
மிறை வனிபொறுப் பாயென்று
பண்ணவ ரிரப்பக் கோசம்
பத்துநா றவையும் போக்கி
அண்ணல் விண்ணவனுக் கென்று
மாயிரங் கண்ணு கென்ருன்.

## விசுவாமித்திரன் இராமனைப் புகழ்தல்

**559.** இவ்வண்ண நிகழ்ந்த வண்ண
மினியிந்த வுலகுக் கெல்லாம்
உய்வண்ண மன்றி மற்ருேர்
துயர்வண்ண முறுவ துண்டோ
மைவண்ணத் தரக்கி போரின்
மழைவண்ணத் தண்ண லேயுன்
கைவண்ண மங்குக் கண்டேன்
கால்வண்ண மிங்குக் கண்டேன்.

இவ் வண்ணம் நிகழ்ந்த வண்ணம்,
இனி இந்த உலகுக்கு எல்லாம்
உய் வண்ணம் அன்றி, மற்று ஓர்
துயர் வண்ணம் உறுவது உண்டோ?
மை வண்ணத்து அரக்கி போரின்
மழை வண்ணத்து அண்ணலே! உன்
கை வண்ணம் அங்குக் கண்டேன்,
கால் வண்ணம் இங்குக் கண்டேன்.

பொ:—இச்செய்தியே முற்காலத்து நிகழ்ந்தபடியாகும். நீ அவதரித்தபின்பு இவ்வுலகிலுள்ள ஆன்மகோடிக்கெல்லாம் உய்யும் வழியே அல்லாமல் அதற்கு மாறுபட்டதொரு துன்பவழி உளதாதல் கூடுமோ? மேகம் போன்ற திருமேனி நிறமுள்ள பெருமானே! அஞ்சனம் போலுங் கருநிறங்கொண்ட தாடகையோடு நீ புரிந்த போரில், உன் கைகளின் திறத்தை அங்கே

பார்த்தேன் ; இவ்விடத்தே உன் திருவடியின்திறத்தைப் பார்க்கலானேன் (என்று புகழ்ந்து விசுவாமித்திரன் அகலிகை வரலாற்றை முடித்தான்.)

கு :—இராமபிரானது கருநிறத்துக்கும் அரக்கியின் கருநிறத்துக்கும் வேறுபாடு தோன்ற 'மைவண்ணத்தரக்கி', 'மழைவண்ணத் தண்ணல்' என்றார். மழைவண்ணத்தண்ணல் என்றதனால், கருணை மழை பொழிந்து உலகைக் குளிர்விப்பவன் இராமமூர்த்தி என்பது புலப்படும். அசேதனமான கருங்கல்லும் திருவடித்துகளால் நல்வடிவம் பெற்றதாயின், திருவடியடையும் சேதனர் கருமபந்தம் நீங்கித் திவ்ய சரீரம் பெறத் தடையில்லை என்பதனை இச்சாப நீக்க வரலாறு விளக்குவதாம் என்க (82)

## இராமன் அகலிகையை வணங்கிச் செல்லுதல்

560. தீதிலா வுதவி செய்த
சேவடிக் கரிய செம்மல்
கோதிலாக் குணத்தான் சொன்ன
பொருளெலா மனத்திற் கொண்டு
மாதவ னருளுண் டாக
வழிபடு படரு றுதே
போதுநீ யன்னை யென்று
பொன்னடி வணங்கிப் போனான்.

தீது இலா உதவி செய்த
சேவடிக் கரிய செம்மல்,
கோது இலாக் குணத்தான் சொன்ன
பொருள் எலாம் மனத்தில் கொண்டு,
'மாதவன் அருள் உண்டாக
வழிபடு, படர் உறுதே
போது நீ அன்னை' என்று
பொன் அடி வணங்கிப் போனான்.

பொ :—தீங்கற்ற உபகாரத்தைப் புரிந்தருளின சிவந்த திருவடிகளையுடைய இராமபிரான், குற்றமற்ற நற்குணம் நிறைந்த கௌசிகமுனிவன் சொன்ன செய்தி முழுவதையும் திருவுளத்துக் கொண்டு (அகலிகையை நோக்கி) 'அன்னையே' பெருந்தவத்தனான கௌதமனது அருளுண்டாகும்படி நீ அவனுக்கு வழிபாடு செய்க,

(இடையில் நேர்ந்த) துன்பத்தை நினைத்து வருந்தாதே, செல்க' என்று கூறி, (அவளுடைய) பாதங்களை வணங்கி, (பின்) அப்பால் செல்லலானான்.

கு:—முனிபத்தினியாதலாலும், அப் பத்தினித் தன்மைக் கேற்ற முன்னையுருப் பெற்று விளங்குவதாலும் அகலிகையை 'அன்னை' என்று அழைத்ததோடு வணக்கமுஞ் செய்தனன் தாசரதி என்க. 'சேவடிக் கரிய செம்மல்' என்றது - முரண் தொடை; "திருவடியும் கையும் கனிவாயும் செய்ய கரியவன்' என்றார் இளங்கோவடிகளும், (ஆய்ச்சியர்குரவை. படர்க்கைப்பரவல் 2) (83)

## விசுவாமித்திரன் அகலிகையை ஏற்றுக்கொள்ளுமாறு கௌதமரிடம் கூறுதல் 561-562

**561.** அருந்தவ னுறையு டன்னை
யணையவ ரணுக லோடும்
விருந்தினர் தம்மைக் காணு
விம்மலால் வியந்த நெஞ்சன்
பரிந்தெதிர் கொண்டு புக்குக்
கடன்முறை பழுது றுமற்
புரிந்தபின் காதி செம்மல்
புனிதமா தவனை நோக்கி.

அருந்தவன் உறையுள் தன்னை அணையவர் அணுக லோடும், விருந்தினர் தம்மைக் காணு விம்மலால் வியந்த நெஞ்சன், பரிந்து எதிர்கொண்டு புக்குக் கடன் முறை பழுது உறுமல் புரிந்தபின், காதி செம்மல், புனித மாதவனை நோக்கி.

பொ:—செயற்கரிய தவத்தைப் புரியும் கௌதம முனியின் உறைவிடத்தை அவர்கள் (மூவரும்) போய்ச் சேர்ந்த அளவில், (உத்தம) விருந்தினராய் வந்த அவர்களைப் பார்த்துத் தன்னை மறந்து வியந்த மனத்தினனான அக்கௌதமன் அன்புகொண்டு எதிர் சென்று அழைத்துவந்து, கடமையாகிய விருந்துபசார முறை குறைவுபடாமல் புரிந்தபின்பு, காதி என்ற அரச முனிவன்

புத்திரனுன விசுவாமித்திரன், தவத்தால் தூயரான அக் கௌதம ரைப் பார்த்து,

கு :—இதுவும் அடுத்துப் பின்வரும் பாடலும் குளகம். (84)

562. அஞ்சன வண்ணத் தானற
னடித்துகள் கதுவா முன்னம்
வஞ்சிபோ லிடையாண் முன்னை
வண்ணத்த ளாகி நின்றாள்
நெஞ்சினாற் பிழையி லாளை
நீயழைத் திடுக வென்னக்
கஞ்சநாண் மலரோ னன்ன
முனிவனுங் கருத்துட் கொண்டான்.

'அஞ்சன வண்ணத்தான் தன்
அடித் துகள் கதுவா முன்னம்,
வஞ்சி போல் இடையாள் முன்னை
வண்ணத்தள் ஆகி நின்றாள்;
நெஞ்சினல் பிழை இலாளை,
நீ அழைத்திடுக' என்னக்,
கஞ்ச நாள் மலரோன் அன்ன
முனிவனும் கருத்துள் கொண்டான்.

பொ :—கரிய திருமேனியனுன இராமனது திருவடிப்பொடி தன்மேற்படுதற்கு முன்பே வஞ்சிக் கொடிபோலும் இடை யுடைய அகலிகை பழைய வடிவத்தையுடையளாய் எழுந்து நின்றாள்; மனமாரச் செய்த தவறிலாத இவளை நீ அழைத்துச் சேர்த்துக் கொள்வாயாக' என்று கூற, தாமரை மலரில் தோன் றிய பிரமதேவனையொத்த கௌதமமுனிவனும் அச்சொற்களை ஏற்றுக்கொள்ளலானுன்.

கு :—'தீவினை நயந்து செய்த தேவர்கோன்' என்று முன்கூறிய விசுவாமித்திரனே, அகலிகையை 'நெஞ்சினாற் பிழையிலாள்' என்று இப்போது கூறுதலால், அறநெறி தவறிய ஆண்மகனது வஞ்சச் செய்கையே, இயற்கையில் மனநெகிழுந் தன்மையளான அகலிகை தன் பெண்மைநெறி தவறியதற்குக் காரணமாயிற்று, என்பது குறிப்பிட்டவாறும். இது பற்றியே ''மாசறு கற்பின் மிக்க அணங்கு'' என்று பின் கவியிலும் கவி கூறலாயினர் என்க. (85)

## அகலிகையைக் கௌதமரிடம் சேர்ப்பித்து மூவரும் மிதிலையை அடைதல்

**563.** குணங்களா லுயர்ந்த வள்ளல்
கோதமன் கமலத் தாள்கள்
வணங்கினன் வலங்கொண் டேத்தி
மாசறு கற்பின் மிக்க
அணங்கினை யவன்கை யீந்தாண்
டருந்தவ னோடும் வாச
மணங்கிளர் சோலை நீங்கி
மணிமதிற் கிடக்கை கண்டார்.

குணங்களால் உயர்ந்த வள்ளல், கோதமன் கமலத் தாள்கள் வணங்கினன், வலம் கொண்டு ஏத்தி, மாசு அறு கற்பின் மிக்க அணங்கினை அவன் கை ஈந்து, ஆண்டு அருந்தவனோடும் வாச மணம் கிளர் சோலை நீங்கி, மணி மதில் கிடக்கை கண்டார்.

பொ :—நற்குணங்களால் உயர்ந்தவனும் வள்ளலுமான இராமன், கௌதமரது திருவடித்தாமரைகளை வலம்வந்து வணங்கியவனைத் துதித்துக் குற்றமற்ற கற்பினால் மிக்க அத் தெய்வப்பெண் போன்றவளை அம்முனிவன் கைத்தலம்பற்றக் கொடுத்து, அரிய தவத்தினனான விசுவாமித்திரனோடும் நறுமணங் கமழும் அச்சோலையை நீங்கி, அழகிய மிதிலைநகரின் புறமதிலைப் பார்த்தார்கள்.

கு :—வள்ளல் - என்றது சாபத்தால் கருங்கல்லாய் நெடுங் காலங் கிடந்த அகலிகைக்கு அவளது முன்னையுருக் கொடுத் தருளிய பெருங் கொடைமை நோக்கி. 'கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வது' கற்புநெறிக்கு உரியதாதலால், புதிய தொரு திருமணம் போலவே அழகிய மங்கையொருத்தியை மாதவன் கைத்தலம் பற்றும்படி அவதார மூர்த்தியே அளித்த னன் என்பார் 'அணங்கினை அவன்கையீந்து' என்றார். (86)

அகலிகைப் படலம் முற்றிற்று.

# 10. மிதிலைக் காட்சிப் படலம்

இப்படலத்திற் கண்ட செய்திகள் பெரும்பாலும் வான்மீகத்தில் காணப்படா. அந்த ஆதிகாவியத்தில் கூறப்பட்டதெல்லாம், முனிவர் இராமலட்சுமணரோடும் கௌதம ஆசிரமத்தினின்று மிதிலாநகரில் பிரவேசித்து, நேரே சனகமகாராசனுடைய யாக சாலைக்குச் சென்றதும், அங்கே அம்மன்னவராலும் அவர் குலகுருவான சதானந்த முனிவரராலும் பெரிதும் உபசரிக்கப் பட்டதுமேயாகும்.

கம்பரோ, கௌதமாச்சிரமத்தினின்றும் புறப்பட்ட முனிவர் முதலிய மூவரும் மிதிலைக்கோட்டையுட் பிரவேசித்து, அம்மகாநகரத்தின் இயற்கைவளமும் செயற்கை வளமுமான அற்புதக்காட்சிகளையெல்லாம் கண்டுகளித்த வண்ணம் சென்று கொண்டிருந்தன ரென்றும், அதன் பின்பு சனகமகாராசருடைய அரண்மனையைச் சேர்ந்த சோலைகளையும் அகழியையும் கடந்து அவர் புத்திரியாகிய சீதாதேவி வாழும் கன்னியாமாடத்தருகே சிறிது நேரம் நின்றன ரென்றும், அவற்றின் சிறப்புக்களை யெல்லாம் பல பாடல்களால் வருணித்துச் செல்லுகின்றூர், இவ்வாறு கன்னிமாடத்தருகே சிறிது நேரம் நின்ற போது, நிகழ்ந்த செய்திகள் யாவும் 'காதல் நாடக உருவில்' நம் கவியரசரால் வியப்பும் உவப்பும்படச் சித்திரிக்கப்படுகின்றன. மேற் கூறியபடி, அரசனது வேள்விச் சாலைக்குச் செல்ல அம்மாநகரில் பல்வேறுவழிகள் இருத்தல்கூடுமன்றோ? அவற்றையெல்லாம் விடுத்து அவ்விடம் போக, விசுவாமித்திரருக்குக் குறுக்குவழி யொன்று தெரியும்போலும். நீண்டும் அகன்றும் செல்லும் அகழியின் கரையில் பூம்பொழிலுள்ள நெறியொன்று கன்னிமாடத்தின் அருகே இருந்தது. ஆண்மக்கள் எவரும் அவ்வழியே செல்ல இயலாத 'அருங்கடி வரைப்பு' அது. ஆயினும், பெருமுனிவரான கோசிகர் தம் சீடருடன் அங்கே போகத் தடை என்னை? நீரும் நிழலும் அமைந்து, குளிர்ந்திருந்த அந்தவழி நெடுந்தூரம் நடந்து வந்த இளங் கோமக்களின் தாபத்தைத் தீர்க்கவும் வல்லதன்றோ! ஆகவே கன்னிமாடத்தின் அருகே அமைந்த அந்த நெறியை அடைந்த முனிவரர், அங்கே அவ்விளங் குமரர்களைச் சிறிது இளைப்பாற்றுவிக்கவும் நேர்ந்ததுபோலும்!

மிதிலையுட் புகுந்ததுமுதல், இராம லட்சுமணர்கள் ஆங்குள்ள அற்புதக் காட்சிகளையெல்லாம். 'கண்டார்', 'கண்டார்' என்றே கூறிவந்த கம்பநாடர், இங்கே 'கன்னிமாடத்து...அயல்

நின்றார்' என்று கூறுதல் குறிப்பிடத்தக்கது. வேள்விச்சாலையை நோக்கிச் சென்றுகொண்டேயிருந்தவர்களுக்கு, அம்மாடத் தருகில் நிற்க வேண்டிய அவசியம் என்னையோ? அக்கன்னிமாடத்தின் அழகும் காம்பீரியத்தோற்றமும், நீர் நிலைகளின் இன்ப நிலையும், அவ்வாறு நின்ற இராமபிரான் கருத்தைக் கவரக் கூடியனவாயிருந்தன எனலாம். அம்மாடத்தின் மேல் நிலையில் பெரிய முற்றம் ஒன்றும், அன்னம் முதலிய அழகிய புள்ளினங்கள் வாழ்வதற்குரிய அறைகளும் இருந்தன. இப்பறவைகள் அம்மாடத்தில் வாழும் தலைவியின் விளையாடல் குறித்து வளர்க்கப்படுவனவாம். இவற்றையெல்லாம் இராமபிரான் கண்ணுறவும் நேர்ந்தது. அவ்வுத்தமப் பறவைகள் தம் பேடுகளுடன் குலாவிக் களிப்பதையும் பார்க்கலானான் அப்பெருமான். இளம்பருவமுற்ற அவருக்கு அஃது எத்தகைய உணர்ச்சி விளைத்ததோ அறியோம்.

இந்நிலையில், அக் கன்னிமாட முற்றத்தே அழகிய சேடியரெல்லாம் தன்னைச் சூழ்ந்துவர, பொன்னின் சோதியும், பூவின் நறுமணமும், தேனின் நறுஞ்சுவையும், செஞ்சொற் கவியின்பமும் போன்றவளாய்க், கண்களுக்கோர் திருவிழாப் போலக் காட்சி விளைத்து நின்றாள் திவ்விய சுந்தரியான பெண்மணி ஒருத்தி. அவளைக் 'குன்றும் சுவரும் திண்-கல்லும் புல்லும் கண்டு உருகப் பெண் கனி நின்றாள்' என்று வருணிக்கின்றார் கம்பர்பெருமான். இங்கே, 'பெண்கனி நின்றாள்' என்ற தொடர் குறிப்பிடத்தக்கது. இவ் வருங்கனி முதிர்ந்து சிதறிப் பழுதாகவும் நேருமோ என்று அஞ்சி அசேதனப் பொருள்களும் அவள் நிலைமைக்கு இரங்குவனவாயின என்ற கருத்து இத்தொடரில் தொனித்தல் காணலாம்.

மேலும், அழகிய தோழியர்களிடையே அப்பெண்ணரசி, 'சத கோடி மின் சேவிக்க மின்னரசென்னும்படி நின்றாள்' என்று நம் கவிஞர் சிறப்பித்தலும் நோக்கத்தகும். அம்மின்னரசு, வெளியில் தன் பேரொளியை விசியது என்ற குறிப்பும் இதனுள் தோற்றுகின்றது. அந்தப் பேரொளி இராமபிரான் திருமுகத்திலும் தாக்கியதுபோலும். இவ்வாறு தாக்கிய கருத்தையே, 'கன்னி நன் மனையில்...அன்னவள், மின்னின் மின்னிய மேனி கண்டான்' என இப் படலத்தே பின்னும் இராமபிரானைக் கூறுமிடத்துக் கம்பர் விளக்குதலும் காணலாம். மன்னொளி தாக்கிய அப்போது அந்தச் சோதியின் பக்கமாக அவர் திருக்கண்கள் திருப்பலாயின இவ்வாறு மேல்மாடப்பக்கம் திரும்பியதும், அண்ணலும் அவளை நோக்கினான், அவளும் கீழ் நின்ற அவனை நோக்கலானாள்; அப்போது கண்ணொடு கண்ணிணைகள் கவ்விய வண்ணம் ஒன்றையொன்று உண்ணலாயின; உள்ளுணர்வுகளும் ஒன்றின. திவ்விய சுந்தரியின் கண்கள் அக் கட்டழகனது திருத்தோள்களிலும் கட்டழகன்

கண்கள் அச்சுந்தரியின் தனபாரங்களிலும் ஆழ்ந்து தைத்தன. அவ்விருவர் நோக்கங்களாகிய பாசம் இருவர் உள்ளங்களையும் சமமாக இழுத்து நின்ற நிலையில், இவள் உள்ளத்தே அவனும் அவன் உள்ளத்தே இவளுமாக மாறிப் புகுந்து கொண்டார்கள். அதனுல் இரண்டுடலும் ஒருயிரும் ஆயினர் என்று சிறப்பிக்கின்றுர் கவிஞர்பெருமான்.

இவ்வாறு உத்தமமக்களிடம், காமக் கூட்டமான தெய்வப் புணர்ச்சி நிகழ்ந்து வருவதை நூல்கள் மூலம் நாம் படித்திருக்கின்ருேம். உலகியலான அக்கூட்டம் முன்னை நல்லூழ்களின் விளைவேயாம். அத்தகையதன்று மேற் கூறிய தெய்வக்கூட்டம், ஊழின் வினைவாலன்றி, தெய்வங்களான ஆண் பெண் பாலார் இருவர், முன்னறிந்து கூடிய கூட்டம் இது. ஆதலால், எங்கிருந்தோ வந்த புருடன் ஒருவனுடன் கன்னிமாடத்துள் இருந்த பெண்ணொருத்தி தற்செயலாகக் காதல் கொண்டாளென்று இதனைக் கொள்வதற்கு இடமே இல்லை யென்கின்றுர் நம் கவியரசர்.

‘கருங்கடற் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினுற் பேசல் வேண்டுமோ’

என்பது அவர் திருவாக்கு. பாற்கடலில் பள்ளிகொண்டருளிய பரமன் தேவர் பிரார்த்தனைக்காக முன்பே அவர்களுக்கு அளித்த வரத்தின் சரித்திரம் இங்கே நினையத்தகும்.

இனி, அவதாரபுருடனுன இராமபிரானுக்குக் கம்பர் கூறியது ஒருவாறு பொருந்தும் எனலாம். ‘மிதிலைக் கன்னிமாடத் திருந்த, அப்பெண்ணரசியை, அவ்வாறு தெய்வமாகக் கருதத் தகுமோ’ எனின், அதற்கும் விடையளிப்பவர் போல,

‘மலர்மேனின்றிம் மங்கையிவ் வையத் திடைவைகப்
பலகாலுந்தம் மெய்ந்நனி வாடும் படி நோற்றுர்
அலகோ வில்லா வந்தணரோநல் லறமேயோ
உலகோ வானே வும்பர்கொலோவீ துணரேமால்’

என்று கூறுகின்றுர் நம் புலவர்.

இவ்வாறு நிகழுமிடையே, தம்முடன் வந்த கோமக்களை உடனழைத்துக்கொண்டு முனிவரரும் மெல்ல நடந்துகொண்டே மறைந்தனர். கன்னிமாடத்தருகே சிறிது நேரத்தில் நடந்த இக் காதல் நாடகம் யாவும் முனிவர்க்குத் தெரியுமோ தெரியாதோ அறியோம். ஆனுல், ஆண்பாலாரின் பிரவேசமே யில்லாத அம்மாடவழியில், சுந்தர மூர்த்தியான இராமபிரானை, அவர் அழைத்து வந்ததற்குக்காரணம் என்னையோ? இஃது எவ்வாருயினும் ஆகுக;

நீதி நெறிகளை நன்முறையில் நிறுத்த அவதரித்த பகவானிடம், அவர் செல்லும் இடைவழியில் அரசிளங்குமரியொருத்தி காதல் கொண்டாளென்பது மேற் கூறியபடி பரதெய்வங்களின் செயலே யாயினும், உலகியலுக்கு அது பொருந்துமாறு எங்ஙனம்? என்ற கேள்வி இங்கு எழுதல் கூடியதே; அதற்கும் விடை சொல் பவர் போல,

'பிறையெனும் நுதலவள் பெண்மை யென்படும்
நறைகம ழலங்கலான் நயன கோசரம்
மறைதலும் மனமெனும் மத்த யானையின்
நிறையெனு மங்குசம் நிமிர்ந்து போயதே'

என்கிறார் நம் கவிச்சக்கரவர்த்தி. 'சீதா தேவி நற்குணங்கள் நிறைந்த பெண்மணியே யாயினும், உலகியலின்படி தெய்வம் இடைநின்று கூட்டுவதால், அவள் உள்ளம் முன் அறிந்திராத இராமன்பாற் கலந்துவிட்டது; கலந்த நிலையில், கண்ட இடத்தே மனம் செல்லாதிருக்க வேண்டித் தன் இயற்கைக் குண மான, நிறை அல்லது கற்பு என்ற அங்குசத்தை இட்டுத் தன் மனமாகிய மத்த யானையை, அடக்கி யொடுக்கத் தன்னாலான அரும்பாடு பட்டாள் அப் பெண்மணி; அந்த நிறையங்குசத்தைக் கைவிடுதலின்றியே அவள் மேற்கொண்ட அப் பெருமுயற்சியை, அந்தயானை பொருட்படுத்தவில்லை. பொருட்படுத்தாததோடு, கைக் கொண்ட நிறையங்குசம் சிதையிடமேயாக, அந்த அங்குசத்தின் பிடிப்பு விலகும்படி அதன் கொக்கியை நிமிரச்செய்துவிட்டு, மதம் பிடித்த அவ்யானை இராமன்பால் ஓடிவிட்டது. ஓர் உத்த மப் பெண்மணிக்குத் தற்காப்புக்காகச் செய்யக் கூடிய முறை இத னினும் வேறு யாதுண்டு? ஆகவே, சீதா தேவியின் நிறையில் யாதொரு பழுதும் நேர்ந்திலது என்று, இத்தகைய கருத்தெல் லாம் உள்ளடங்கும்படி மேற் கூறிய பாடல் அமைந்திருத்தல் காணலாம்.

இத்தெய்வக் கூட்டத்தின்பின் அடைந்த விரக வேதனைகளை 47-கவிகளால் அருமைபெருமையுறச் சிறப்பிக்கின்றார் கம்ப நாடர். இராமபிரான் கன்னிமாடத்தை விட்டு முனிவரோடு சென்ற சமயம், அவரது திருமுகத்தில் புன்முறுவல் ஒன்று பூத் ததாம். அம்முறுவலால் தன் வசம் இழந்தாள் அப் பெண்ணரசி. இதனை—

இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியும்
சந்திர வதனமுந் தாழ்ந்த கைகளும்
சுந்தர மணிவரைத் தோளு மேபல
முந்தியென் னுயிரையம் முறுவ லுண்டதே.

என்ற பாடலால் அறியத் தகும், இவ்வாறே சீதாதேவியின் விரக தாபம் பற்றிக் கம்பர் கூறிய கவிகள் யாவரும் படித்து இன்புறத் தக்கன.

இனி மிதிலைமாநகருள் அழகியதொரு பொன்மாளிகையில் அவ்விரவிலே முனிவருடன் இராமலக்குமணர்கள் தங்கலானார்கள். அப்போது சனகரின் குலகுருவான சதானந்த முனிவர் வந்து கோசிகமுனிவர்க்கு முகமன்கள் கூறியதோடு, தம்மை வணங்கிய இராமலக்குமணர்க்கு ஆசிகளும் அருளினர். உடனே கோசிகர் அக்கோக்குமரர்களின் அருஞ்செயல்களைப் பாராட்டிக் கூற, சதானந்தரும் கேட்டு மகிழ்ந்து விசுவாமித்திரர் வரலாற்றை அக்குமரர்கள்கேட்கும்படி விரித்துரைத்துப் பின் இத்தகைய மகா முனிவரைச்சார்ந்துள்ள நுங்கட்கு அடைதற்கரியது உலகில் யாது உளது !' என்று முடித்து விடைபெற்றனர். இக்கோசிகர் வரலாற்றை 45-பாடல்களால் கம்ப நாடர் விரித்துக் கூறுகின்றார். அதன் சுருக்கமாவது :—

ஆதியில் அரசராயிருந்து ஆட்சி புரிந்த கோசிகர் ஒருகால் வேட்டைமேற் சென்றபோது, வசிட்ட முனிவரது ஆச்சிரமம் புக, அவராணையால் காமதேனுவால் அரசர் பெரிதும் உபசரிக்கப் பெற்றதும், அத்தேனு மூலம் பெற்ற பேருபசாரத்தால் மகிழ்ந்த அவர், அத்தெய்வப் பசுவையே தமக்குரியதாகப் பெற விரும்பி வசிட்டரிடம் கேட்டதும், அதற்கு அவர் இணங்காமற்போகவே, முடிவில் அப்பசுவைக் கோசிகர் வலிந்து கவர்ந்துசெல்ல முயன்றதும், அத்தேனுவின் சிற்றத்தாலும் ஆற்றலாலும் அவர் படை முழுதும் அழிந்து பெரிதும் பரிபவப்படவே, ' இவையெல்லாம் வசிட்டருடைய சூழ்ச்சி' என்று கருதித் தம் பெருவலிகொண்டு அம்முனிவரையே தாக்கியதும், அத்தாக்குதலை யெல்லாம் தம் பிரமதண்டத்தால் முனிவர் அடக்கி ஒடுக்கியதும், தம் வலிமை முழுதும் பயன்பெறாமல், அவ்வரசர் வசிட்டரது தவப் பெருமையை உணர்ந்து, அதனைத் தாமும் அடையும்படி பலதிசைகளிலும் சென்று பெருந்தவம் புரிந்து அத் தபோபலத்தால் சுனச்சேபன் திரிசங்கு என்பார்க்கு நற்பேறும் உறுதிகளும் அளித்ததும், முடிவில் பிரமாதிதேவர்கள் எதிர் தோன்றி அவரது அரிய பெரிய தவச்செயற்கு வியந்து, வசிட்டரைப்போலவே ' பிரம இருடி ' என்ற பட்டத்தை அவர் விரும்பிய வண்ணம் அளித்துச் சென்றதுமாகிய செய்திகளாம். இவற்றைக் கேட்ட இராமலக்குமணர்கள் பெரிதும் ஆனந்தமுற்றார்கள். இதன் பின் மூவரும் பிரிந்து தங்கட்குஅமைந்ததனித்தனி இடங்களில் பள்ளிகொள்வாராயினர். அவ்விரவிலே, சயன அறையில் இராமபிரானுக்கு உறக்கம் வரவில்லை. கன்னிமாடத்துக் கண்ட அப்பெண்மணியின்

சிந்தையேயாய் அவர் விரகவேதனைப்பட்டார். இந்நிகழ்ச்சியை 10-பாடல்களால் கம்பர் வருணித்தல் குறிப்பிடத்தக்கது. இராமுழுதும் உறக்கமின்றிச் சிந்தனையில் ஆழ்ந்திருந்ததனால் சூரியன் உதித்ததும் தெரியாமல் இராமபிரான் துயில்வராயினர். அவர் துயிலுணர்ந்ததும், செய்கடன்களை முடித்துக்கொண்டு கோசிகமுனிவரை அடிவணங்கி அவருடனும் தம்பியுடனும் சனகரது வேள்விச் சாலையை அடைந்தார்.

அக்காலையில், சனகமன்னன் தான் மேற்கொண்ட யாகத்தை முற்றுவித்து, முனிவர்கள் தற்சூழ மணிமண்டபத்தில் வீற்றிருந்தான். கோசிகரும் அரசனது பக்கத்தில் இட்டிருந்த ஆதனத்தே இராமலக்குமணர்களோடு அமர்ந்தனர், அருகில் வீற்றிருந்த அவ்விளங்குமரர் இருவருடைய பேரழகுகளைச் சனகன் தன் இருகண்களாலும் பருகிக் களித்தவனாய்க் கோசிகரை நோக்கி. 'அடிகளே! இவர்கள் யாவர்களோ! தெரிய அருள்விராக' என்று உசாவினன். அம்முனிவரும், 'விருந்தினர்கள்-நின்னுடைய வேள்வி காணிய வந்தார், வில்லும் காண்பார்' என்று பொதுவாகக் கூறிவிட்டுப் பின் அவர் குலவரலாற்றையும், அன்னரது நிரதிசயமான அருமை பெருமைகளையும் விரித்துரைக்கத் தொடங்கினர்-என்பது இப்படலத்தின் கதைச் சுருக்கம்.

இவ்வாறு மிதிலைக்காட்சிப்படலத்தின் பெரும்பாகமும், ஒரு காதல் நாடகம்போலவே அமைக்ப்பட்டுள்ளதைக் காணலாம், புலவர்பெருமானது இக்கற்பனைகளை வால்மீகத்தில் ஊகித்தற்கும் இடமில்லை. 'இனி நிகழப்போகும் சிவதனுசின் முறிவுக்குப் பின் சீதாதேவி இராமனைக் கண்டாள்' என்பதன்றி வேறெதுவும் வால்மீகி முனிவரால் கூறப்பட்டிலது. அவரது ஆதிகாவியத்தின் போக்கை அடியொற்றியே இராமசரிதம் பெரும்பாலும் கம்பர் பாடியவராயினும், தமிழ் நாட்டாரின் வழக்க வொழுக்க வரலாறுகட்கும், நடையுடை பாவனைகட்கும் ஏற்ற முறையில், கூட்டியும் குறைத்தும் புகுத்தியும் மாற்றியும் கதாபாகங்களை அங்கங்கு நடத்திச் செல்வதே இப்புலவரது இயல்பாயுள்ளது. இவற்றுக்குப் பிற நூல்களிலும் உலகவழக்கிலும் ஆதாரங்களும் உண்டு.

'தலைவன் தலைவியரிடையே உள்ளங் கலந்து ஒருமைப்பாடு தோன்றியபின்புதான் கற்புநெறி நிலைபெற்றோங்கும் என்பது தமிழ்நூல்வழக்கு, 'கற்பெனப் படுவது களவின் வழித்தே' (களவியல்) என்பர் முன்னோர். இவ்வழக்கைத் தழுவியே சீதாராமர்களின் மதியுடம்பாடு கம்பர்பெருமானல் சித்திரிக்கப்படுகின்றது. உள்ளப்புணர்ச்சியாகிய இம்மதியுடம்பாடு அப்புலவரின் சொந்தக் கற்பனையுமன்று.

'ஆள்வினை முடித்த அருந்தவ முனிவன்
வேள்வி போற்றிய இராமன் அவனொடு
மிதிலை மூதூர் எய்திய ஞான்றே
மதியுடம் பட்ட மான்கட் சீதை
கடுவிசை வின்ஞாண் இடியொலி கேளாக்
கேட்ட பாம்பின் வாட்ட மெய்தித்
துயி லெழுந்து மயங்கினள்'

(தொல்–பொருள.தி–54 நச். உரை) என்ற முன்னோர்வாக்காலும் இது தெளியப்படும். இவ்வாறே தமிழ்வழக்குகளைத் தழுவி நாடகப் போக்கில் நம் புலவர் அமைத்த கதைக்கூறுகள் பல. அதனால் இவரது மகாகாவியத்தை நாம் நாடகக்காப்பியம் என்றே கூறலாம். சங்கநாளிலே இத்தகைய காப்பியங்கள் வழக்கிலிருந் தன என்பது, 'நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்' என்ற மணிமேகலைத் தொடராலும் அறியப்படும். இதுபற்றிப்போலும் **கம்பநாடகம்** என்று திருவாய்மொழியீட்டின் அரும்பத உரை காரர் கம்பர்காப்பியத்தை வழங்குவராயினர் என்க. இவ்வாறே, வடமொழியிலும் தென்மொழியிலும் திசைமொழிகளிலும் காலதேச வழக்கங்களை யொட்டி இராம சரிதங்கள் முன்பே பாடப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் ஆராய்ந்து பெரும் பாலும் அவை கூறிய முறையில் அமைக்கப்பட்டதே 'கம்ப இராமாவதாரம்' என்க.

'எற்றுங்கு மேனி ரகுராம சரிதை யாவும்
கற்று, ஆர்கலியிற் பெரிதாந்தமிழ்க் கம்பநாடன்
உற்றுங்கு உரைத்தான்' (இரகுவமிசம்)

என்றார் அரசகேசரியாரும்.

---

# 10. மிதிலைக் காட்சிப் படலம்*

## மிதிலை வருணனை : கொடிகளின் தோற்றம்

564. மையறு மலரி னீங்கி
யான்செய் மாதவத்தின் வந்து
செய்யவ ளிருந்தா ளென்று
செழுமணிக் கொடிக ளென்னும்
கைகளை நீட்டி யந்தக்
கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை யொல்லை வாவென்
றழைப்பது போன்ற தம்மா.

**மை அறு மலரின் நீங்கி, யான் செய் மா தவத்தின் வந்து,
செய்யவள் இருந்தாள்: என்று, செழு மணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி, அந்தக் கடி நகர், கமலச் செங்கண்
ஐயனை 'ஒல்லை வா' என்று அழைப்பது போன்றது அம்மா.**

பொ :—காவலையுடைய அம் மிதிலைநகரம் திருமகள் தன்குற்ற மற்ற தாமரைமலரிடத்தை விட்டு நீங்கி, யான்புரிந்த பெருந்தவப் பேற்றால் என்னிடம் வந்து அவதரித்துள்ளாள் என்று கருதி, பேருறுதி வாய்ந்த துவசங்கள் என்னும் கரங்களை உயர எடுத்துச் செந்தாமரைக் கண்ணனை இராமபிரானை 'விரைவில் வந்து சேருக' என்று அழைப்பதை ஒத்திருந்தது.

கு :—பிராட்டி வாழும் தாமரை பிறமலர் போல மலர்ந்து குவிதலும் வாட்டமடைதலும் பெருமையால் 'மையறுமலர்' என்றும் திருமகள் தன் இயற்கை வாழ்விடத்தை விட்டு மிதிலா நகரைச் சிறந்த வாழ்விடமாகக் கருதி வந்ததற்குக் காரணம் தன் நல்வினையே அன்றிப் பிறிதில்லை என்பார் 'மலரினீங்கி யான் செய் மாதவத்தின் வந்து' என்றும் கூறினார். திருமாலின் அவதாரமூர்த்தி இராமபிரானாதலின், அவன் தன் தேவியைத் தேடி எங்கும் திரிய வேண்டா; இங்கேதான் அவள் வளர்கிறாள்: அதனால் 'விரைந்து வருக' என்று கொடிச்சீலைகளின் அசைவுகள் தோற்றமளித்தன;

---

* இது, மிதிலைக் காட்சிப் படலம், கைக்கிளைப் படலம், கோசிகப் படலம், இராகவன் விரக வேதனைப் படலம் என நான்கு படலமாகவும் சில சுவடிகளில் வரையப்பட்டுள்ளது.

என்று உருவகத்தை உறுப்பாகக்கொண்டு தற்குறிப்பேற்ற அணி பெறக் கவி புனைந்து கூறியவாறு. மணிக்கொடிகள்—திட்பமுடைய பதாகைகள்; மணிக்கயிறு என்பதுபோல; அழகிய கொடிகள் என்றும் ஆம். கடிநகரே அமைப்பதாகக் கூறப்படுதலின் இங்கே கூறப்பட்ட கொடிகள் எயில்மதிலின்மீது அமைந்தவை என்று கொள்க. (1)

**565.** நிரம்பிய மாடத் தும்பர்
நீண்மணிக் கொடிக ளெல்லாம்
தரம்பிற ரின்மை யுன்னித்
தருமமே தூது செல்ல
வரம்பில்பே ரழகி னளை
மணஞ்செய்வான் வருகின் றானென்
றரம்பையர் விசும்பி னாடு
மாடலி னாடக் கண்டார்.

நிரம்பிய மாடத்து உம்பர்
நீள்மணிக் கொடிகள் எல்லாம்,
தரம் பிறர் இன்மை உன்னித்
தருமமே தூது செல்ல,
'வரம்பு இல் பேர் அழகினளை
மணம் செய்வான் வருகின்றான்' என்று
அரம்பையர் விசும்பின் ஆடும்
ஆடலின் ஆடக் கண்டார்.

பொ:—நிறைந்துள்ள மாளிகைகளின்மேலே நீண்டமைந்துள்ள மணிக்கொடிகள் யாவும் (சீதாதேவியைத் திருமணம் புரிதற்கு) தக்கார் பிறரெவருமே இல்லாமையை நினைத்து அறக் கடவுளே தூதாகப் போக, எல்லையற்ற பேரழகியான அச்சானகியைத் திருமணம்புரிதற்பொருட்டு (இராமபிரானே) வருகின்றான் என்று மகிழ்ந்து, தெய்வமகளிர் விண்ணிடை நின்று ஆடும் நிருத்தம்போலக் காற்றால் அசைந்தாடுதலை மூவரும் கண்டார்கள்.

கு:—இக்கொடிகள் மாளிகைகளின் மேல் தனித்தனி நாட்டப் பெற்றவை என்க. நிரம்பிய — சிற்பத்தொழில் முற்றிய எனினும் ஆம். குலம் குணம் உரு முதலியவற்றில் ஒப்புடைய ஆண் பெண்களின் திருமணம் அறங்கடைக்கூட்ட நிகழ்வதாதலின் "தருமமே

தூதுசெல்ல என்றார். அரம்பையர்க்குக் கொடிகளும் அவர்கள் கையசைத்தாடுதற்குக் கொடித்துகில்களின் அசைவும் உவமைக ளாகும். (2)

## மிதிலையுள் மூவரும் கண்ட காட்சிகள் 566—584

### யானைப் போர்

**566.** தயிருறு மத்திற் காம
சரம்படத் தலைப்பட் டூடும்
உயிருறு காத லாரி
னொன்றையொன் றொருவ கில்லாச்
செயிருறு மனத்த வாகித்
தீத்திரள் செங்கண் சிந்த
வயிரவாண் மருப்பி யானை
மலையென மலைவ கண்டார்.

தயிர் உறு மத்தில் காம சரம் படத் தலைப்பட்டு ஊடும் உயிர் உறு காதலாரின், ஒன்றை ஒன்று ஒருவகில்லாச் செயிர் உறும் மனத்த ஆகித், தீத்திரள் செங்கண் சிந்த, வயிர் வாள் மருப்பு யானை, மலை என மலைவ கண்டார்.

பொ :—தயிர்கடையும் மத்தைப்போல மன்மதபாணம் தம்மை அலைத்தலால் கூடிப்பின் (விளையாட்டாக ஒருவருக்கொருவர்) மனம் பிணங்கி நிற்கும் உயிரையொத்த காதலரான ஆடவரும் மகளிரும் போல, வயிரம் போன்ற உறுதியும் வெண்மையுமுள்ள தந்தங்களை யுடைய யானைகள் சினமிக்க மனங்கொண்டு செங்கண்கள் தீப் பொறிகள் சிந்தும்படி ஒன்றையொன்று விட்டு நீங்காமலே இரு மலைகள் பொருவனபோலப் போர்செய்வனவற்றைப் பார்த்தார் கள்.

கு :—உள்ளன்புடன் ஊடிப் பிணங்கி நிற்கும் ஆண் பெண் இருபாலாரையும் உவமித்தலால் இங்கு நிகழும் யானைப்போர், ஆடவரால் விளையாட்டு நிமித்தம் மூட்டப்படுவதே என்க. 'வரு செருவொன்றின் மையினால்... இருசிறை வாரணப் போரும் இகன் மதவாரணப்போரு மினைய கண்டே' (கலிங்-பரணி, 10, 45). (3)

துகிற்கொடித் தோற்றம்

567. பகற்கதிர் மறைய வானம்
பாற்கடல் கடுப்ப நீண்ட
துகிற்கொடி மிதிலை மாடத்
தும்பரிற் றுவன்றி நின்ற
முகிற்குலந் தடவுந் தோறு
நனைவன முகிலிற் சூழ்ந்த
அகிற்புகை கதுவுந் தோறும்
புலர்வன வாடக் கண்டார்.

பகல் கதிர் மறைய வானம் பால் கடல் கடுப்ப நீண்ட துகில் கொடி, மிதிலை மாடத்து உம்பரில் துவன்றி நின்ற, முகில் குலம் தடவும் தோறும் நனைவன; முகிலின் சூழ்ந்த அகில் புகை கதுவும் தோறும் புலர்வன ஆடக், கண்டார்.

பொ:—சூரிய கிரணங்கள் மறையவும் விண்ணிடம் திருப்பாற் கடலை ஒத்துத் தோன்றவும் மிதிலைநகரில் மாடங்களிற் செறிந்த நீளமான கொடிச்சீலைகள், மேகக்கூட்டம் தோயும்பொழுதெல்லாம் (அதன் நீரால்) நனைவனவாகவும், (அம்) மேகம் போலச் சூழ்ந்து கொண்ட அகிற்றுண்டங்களின் புகை (தம்மேல் வந்து) பொருந் தும்பொழுதெல்லாம் உலர்ந்து அசைந்து நிற்பனவாகவும் கண் டார்கள்.

கு :—'பாற்கடல் கடுப்ப' என்ற உவமையால் கொடித்துகில் கள் வெண்ணிறத்தவை என்பது பெறப்படும்; வெண்மை நிறம் மங்கலவண்ணமாதலால்இராமபிரான் வருகைக்கு ஏற்றதாதலும் காண்க; அகிற்புகை - கூந்தல் சீலை முதலியவை நன்மணம்பெற ஊட்டப்படுவது. (4)

மூவரும் மிதிலைமா நகரின் உட்செல்லுதல்

568. ஆதரித் தமுதிற் கோலேய்த்
தவயவ மமைக்குந் தன்மை
யாதெனத் திகைக்கு மல்லா
மதனற்கு மெழுத வொண்ணுச்

சீதையைத் தருத லாலே
திருமக ளிருந்த செய்ய
போதெனப் பொலிந்து தோன்றும்
பொன்மதின் மிதிலை புக்கார்.

ஆதரித்து அமுதில் கோல் தோய்த்து
'அவயவம் அமைக்கும் தன்மை
யாது?' எனத் திகைக்கும் அல்லால்
மதனற்கும் எழுத ஒண்ணுச்
சீதையைத் தருத லாலே
திருமகள் இருந்த செய்ய
போது எனப் பொலிந்து தோன்றும்
பொன் மதில் மிதிலை புக்கார்.

பொ :—(சீதாதேவியின்) திருமேனியை ஒத்ததோர் சித்திர வுருவை எழுத விரும்பி,'தேவாமிர்தத்தில் எழுது கோலைத்தோய்த்துக்கொண்டு, அவள் உறுப்புகளைச் சித்திரிக்கும் விதம் யாதோ என்று திகைத்துநிற்றல் அல்லாமல், மன்மதனுக்கும் எழுத அரிய (பேரழகுடைய) சீதையைப் பெற்ற சிறப்பாலே, இலக்குமிதேவி வாழும் செந்தாமரைமலர்போல விளக்கமுற்றுத் தோன்றும் பொன்மதில் சூழ்ந்த மிதிலைநகரினுள்ளே (மூவரும்) புகுந்து சென்றூர்கள்.

கு :—உலகிற் சிறந்த அழகு வாய்ந்த மகளிரையெல்லாம் அறிந்து அவர்கள்மேல் ஆடவர்க்குக் காதல் விளைவிக்கக்கூடியவன் காமதேவனே யாதலால், அவனை ஓவியத்துறை வல்லானுகக் கற்பித்துக்கொண்டு, பிராட்டியின் ஒப்புயர்வற்ற அழகுருவை அவனும் எழுத வல்லனல்லன் என்றும், வாழ்விடமாதல், அழகு, வாட்டமின்மை குவியாமை என்பவற்ருல் ஒத்தலின், 'திருமக ளிருந்த செய்ய - போதெனப் பொலிந்து தோன்றும்...மிதிலை' என்றும் கூறினர். (5)

மூவரும் மிதிலைநகர் வீதியிற் செல்லுதல் 569—571

569. சொற்கலை முனிவ னுண்ட
சுடர்மணிக் கடலுந் துன்னி
அற்கலந் திலங்கு பன்மீ
னரும்பிய வானும் போல

விற்கலை நுதலி னரு
மைந்தரும் வெறுத்து நீத்த
பொற்கலன் கிடந்த மாட
நெடுந்தெரு வதனிற் போனார்.

சொல் கலை முனிவன் உண்ட சுடர் மணிக் கடலும், துன்னி
அல் கலந்து இலங்கு பல் மீன் அரும்பிய வானும் போல,
வில் கலை நுதலினாரும் மைந்தரும் வெறுத்து நீத்த
பொன் கலன் கிடந்த மாட நெடுந் தெரு அதனில் போனார்.

பொ :—தமிழிலக்கண நூலை அருளிய அகத்தியனாற் பருகப் பட்டு (நீர்வற்றிக்) கிடந்ததனால் விளக்கமுள்ள இரத்தினாகரமான கடலும், இரவில் செறிந்து கலந்து விளங்கும் நட்சத்திரக் கூட்டங்கள் தோன்றும் ஆகாசமும் போல, ஒளியுள்ள பிறைபோலும் நெற்றியையுடைய மகளிரும் ஆடவரும் வெறுப்புற்றுக் கழற்றி யெறிந்த பொன்னாபரணங்கள் விழுந்துகிடக்கப்பெற்ற மாளிகைகள் அமைந்த அரசவீதிவழியே அவர்கள் சென்றார்கள்.

கு :—முனிவன் உண்ட மணிக்கடல் - அகத்தியன் கடல்நீர் முழுதையும் குடித்தபொழுது இரத்தினங்கள் கிடே ர ற நின்ற கடல் என்றபடி. அகத்தியம் என்ற இலக்கணநூலை ஆதியில் ஆக்கியளித்தவராதலால் அம்முனிவரைச் 'சொற்கலை முனிவன்' என்றார். 'சப்தசாத்திரம்' என்பதற்கேற்ப இலக்கணநூல் சொற்கலையெனப்பட்டது. சத்தம் – சொல்; 'சத்தமுஞ் சோதிடமும்' என்றார் நாலடியாரிலும். ஊடல் கூடல்களில் முறையே வெறுப்புக்குரியதாகவும் இடையூறாகவும் இருத்தலால் 'வெறுத்து நீத்த பொற்கலன்' எனப்பட்டது. (6)

'570. தாறுமாய் தறுகட் குன்றந்
தடமத வருவி தாழ்ப்ப
ஆறுமாய்க் கலின மாவி
லாழியா லழிந்தோ ராறாய்ச்
சேறுமாய்த் தேர்க ளோடத்
துகளுமா யொன்றோ டொன்று
மாறுமா றாகி வாளா
கிடக்கிலா மறுகிற் சென்றார்.

தாறு மாய் தறுகண் குன்றம் தட மத அருவி தாழ்ப்ப,
ஆறும் ஆய்க், கலின மா விலாழியால் அழிந்து ஓர் ஆறுய்ச்,
சேறும் ஆய்த், தேர்கள் ஓடத் துகளும் ஆய், ஒன்றோடு ஒன்று
மாறு மாறு ஆகி, வாளா கிடக்கிலா மறுகில் சென்றார்.

பொ :—இருப்புமுட்கோலை முறிக்கின்ற வன்கண்மையுள்ள களிற்றியானைகள் மிக்க மதநீர்ப்பெருக்கை இழிய விடுவதனால் கருநிறமுள்ளதோர் நதியாகியும், கடிவாளம்பூண்ட குதிரைகளின் (வெண்மையான) வாய்நுரையால் அக்கருப்பு அழிந்து வேறோர் வெண்ணிற நதியாகவும் இரதங்கள் இடைவிடாது ஓடித்திரிதலால் சேறும்பின் புழுதியுமாகியும், இவ்வாறு ஒன்றோடொன்று பெரிதும் மாறுபட்டு, ஒருநிலையில் நில்லாத பெருவீதியிடையே (மூவரும்) போனார்கள்.

கு :—தாறு - தாற்றுக்கோல்; இருப்புமுள்ளை நுனியிலுடையது (வழக்கு). யானையைக் 'குன்றம்' என்றதற் கேற்ப, அதன் மதநீரை 'அருவி' என்றார். (7)

**571.** தண்டுத லின்றி யொன்றித்
 தலைத்தலை சிறந்த காதல்
உண்டபின் கலவிப் போரி
 னொசிந்தமென் மகளி ரேபோல்
பண்டரு கிளவி யார்தம்
 புலவியிற் பரிந்த கோதை
வண்டொடு கிடந்து தேன்சோர்
 மணிநெடுந் தெருவிற் சென்றார்.

தண்டுதல் இன்றி ஒன்றித்
 தலைத்தலை சிறந்த காதல்
உண்டபின், கலவிப் போரின்
 ஒசிந்த மென் மகளிரே போல்
பண் தரு கிளவியார்தம்
 புலவியில் பரிந்த கோதை,
வண்டொடு கிடந்து, தேன் சோர்
 மணி நெடும் தெருவில் சென்றார்.

பொ :—தலைவன் தலைவியராகிய இருவரிடத்தும் நீங்குதலில்லாமல் ஒரு தன்மையதாய் மிக்கிருந்த காதற்பயனான காம இன்பத்தை

அவ்விருவரும் ஒக்க அனுபவித்தபின்பு அக்கலவிப்போரில் இளைத்துக்கிடந்த மெல்லியலாரான மங்கையர்போல, இசையின்பந்தரும் சொல்லாரான பெண்டிரின் ஊடல்களிலே அவர்களால் கழற்றியெறியப்பட்ட மாலைகள் வண்டுகளோடு கீழே கிடந்து தேன் வழிதற்கு இடமான அழகிய பெருவீதிகளிற் சென்றார்.

கு :—கலவியின் இறுதியில் மெலிவுற்றுத் துயிலும் மகளிர்போல, ஊடற்காலத்து வெறுப்பால் கழற்றி எறியப்பட்ட பூமாலைகள் வண்டுகளுடனே தேன் சோரக் கீழே விழுந்துகிடந்தன என்பது கருத்து. மகளிர் அணிந்த கத்தூரிதிலகம் வண்டு ஆகவும் தேன் சோர்ந்து கிடக்கும் மாலைகள் கலவியினைப்பால் வியர்வரும்பித் துயிலும் மகளிராகவும் கொள்க. (8)

### மகளிர் ஆடல்

**572.** நெய்திர ணரம்பிற் றந்த
மழலையி னியன்ற பாடல்
தைவரு மகர வீணை
தண்ணுமை தழுவித் தூங்கக்
கைவழி நயனஞ் செல்லக்
கண்வழி மனமுஞ் செல்ல
ஐயநுண் ணிடையா ராடு
மாடக வரங்கு கண்டார்.

**நெய் திரள் நரம்பில் தந்த மழலையின் இயன்ற பாடல், தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்கக், கைவழி நயனம் செல்லக், கண்வழி மனமும் செல்ல, ஐய நுண் இடையார் ஆடும் ஆடக அரங்கு கண்டார்.**

பொ :—தேனொழுக்குப் போலத் திரண்ட நரம்பினாலெழுப்பிய இசைபோல அமையப்பெற்றதும் மழலைச் சொல்லொடுகூடியதுமான பாடலின் இசையும், தடவி வாசிக்கும் மகரவீணையின் இசையும் மத்தளவொலியும் ஒன்றோடொன்று இணைந்து இலயப்பட்டு இன்னொலி செய்யவும், (பாவனைக்குறிப்புக்களைக் காட்டும்) கைகளின் வழியே கண்களின் நோக்கம் செல்லவும், அந்நோக்கின் வழியே மனத்தின் குறிப்புச் செல்லவும் (அபிநயித்துக்கொண்டு) வியப்புண்டாக்கும் நுண்ணிய இடையுடைய மகளிர் நிருத்தம் செய்கின்ற பொன்மயமான நடனசாலைகளைக் கண்டார்கள்.

கு :—நெய் - தேன். நெய்க்கண் ணிருஅல்; (கலித்-42). தந்த பாடல் இயைந்த பாடல் என இயைக்க. கை, கருத்து, மிடறு சரீரம் என நான்கன் தொழில்களாலும் நடனமுறை நிகழும் என்பர். இவற்றுள் கைவழி நயனமும் கண்வழி மனமும் செல்ல என்பதனுல் முறையே கையின் தொழிலும், கருத்தின் தொழிலும், 'நரம்பின் தந்த பாடல்' என்றதனுல் மிடற்றின் தொழிலும் 'ஆடும்' என்றதனுல் சரீரத்தின் தொழிலும் கூறப்பட்டன. மகரவீணை—சுறுமீனின் அங்காந்த வாய்போலும் நுனியமைந்த யாழ்வகை. ஒசிந்து நடித்தற்குப் பருத்த உடலுடையார் தக்கவராகார் என்பது மரபாதலின், 'நுண்ணிடையா ராடும்' எனப்பட்டது. மனத்தின் வழிக் கண் செல்ல என்னுது 'கண்வழிமனமுஞ் செல்ல' என்றது பயிற்சி மிகுதியால் என்க. ஐய – வியப்பிடைச்சொல். இடை நுண்ணியதாயினும் ஆடற்றிறமையைக் காட்டிய வியப்பு. (9)

### மாதர்கள் ஊசலாடுதல்

**573.** பூசலி னெழுந்த வண்டு
மருங்கினுக் கிரங்கிப் பொங்க
மாசுறு பிறவி போல
வருவது போவ தாகிக்
காசறு பவளச் செங்காய்
மரகதக் கமுகிற் பூண்ட
ஊசலின் மகளிர் மைந்தர்
சிந்தையோ டுலவக் கண்டார்.

**பூசலின் எழுந்த வண்டு, மருங்கினுக்கு இரங்கிப் பொங்க, மாசு உறு பிறவி போல வருவது போவது ஆகிக், காசு அறு பவளச் செங்காய் மரகதக் கமுகில் பூண்ட ஊசலில், மகளிர், மைந்தர் சிந்தையோடு உலவக் கண்டார்.**

பொ :—மறுவற்ற செந்நிறக் காய்களையுடையவான மரகதமணி நிறமுள்ள கமுக மரங்களில் பிணைக்கப்பட்ட ஊஞ்சல்களிலே பெண்கள், ஆரவாரத்துடன் மேலெழுந்த வண்டுகள், இடையின் மென்மைக்கு இரங்குவது போல ஒலியாநிற்க, குற்றம் நிறைந்த பிறவிபோல வருவதும் போவதுமாகி ஆடவரின் மனங்களோடு ஆடுவதைப் பார்த்தார்கள்.

கு :—பிறப்புக்கு ஊசலாட்டம் ஒப்புமை கூறப்படுவதை, 'உருமாறிப் பலபிறப்பும் பிறந்துஞ் செத்தும் ஊசலாடுவது'

என்ற பின்னோர் பாசுரத்தாலும் (பிள்ளைப்பெருமாளையங்கார் இயற்றிய திருவரங்கக் கலம்பகம் 58) அறிக. ஊசலாட்டத்தில் மாறிமாறிப் போய்வரும் மகளிரின் அழகினை விடாது கண்டு காதல் புரிதலால் 'மைந்தர் சிந்தையோடு உலாவ' என்றார். கமுக மரங்களில் கயிறுகளைப் பிணைத்து ஊசலாடுவது இன்றும் மலை நாட்டு வழக்காகும். (10)

### கடைவீதிகளின் சிறப்பு

**574.** வரப்பறு மணியும் பொன்னு
மாரமுங் கவரி வாலும்
சுரத்திடை யகிலு மஞ்ஞைத்
தோகையுந் தும்பிக் கொம்பும்
குரப்பணை நிரப்பு மள்ளர்
குவிப்புறக் கரைக டோறும்
பரப்பிய பொன்னி யன்ன
வாவணம் பலவுங் கண்டார்.

வரம்பு அறு மணியும் பொன்னும் ஆரமும் கவரி வாலும் சுரத்து இடை அகிலும் மஞ்ஞைத் தோகையும் தும்பிக் கொம்பும், குரம்பு அணை நிரப்பும் மள்ளர் குவிப்புறக், கரைகள் தோறும் பரப்பிய பொன்னி அன்ன ஆவணம் பலவும் கண்டார்.

பொ :—அளவற்ற அரதனங்களையும் பொன்னையும் முத்துக்களையும் கவரிமானின்வாலையும் பாலைநிலத்திலுண்டாகும் அகில் துண்டங்களையும், மயிற்பீலிகளையும் யானைத்தந்தங்களையும் கழனிகளுக்கு வரப்புக்களாகிய கரைகளை அமைக்கும் உழவர்கள் குவித்துவைக்கும்படி—கரைகளிலெல்லாம் பரவச்செய்கின்ற காவிரிநதியை ஒத்த—கடைவீதிகள் பலவற்றையும் பார்த்தார்கள்.

கு :—அகன்று நீண்ட ஆவணவீதிகளின் இரு சிறகுகளிலும் மணி முதலிய பண்டங்கள் பரவிக்கிடத்தல் காவிரியின் இருகரைகளிலும் மலைபடு திரவியங்கள் குவிந்து கிடப்பனபோலும் என்றபடி; 'யாறு கிடந்தன்ன அகனெடுந் தெருவின்' (மதுரைக் காஞ்சி 359) என்பராதலின், காவிரியாறு ஆவணவீதிக்கு உவமையாயிற்று. பாலைநிலப் பொருளாதல்பற்றிச் சுரத்திடையகிலும் எனப்பட்டது. (11)

**மூவரும் மகளிரிசைகேட்டு ஏகல்**

**575.** வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ
மாடகம் பற்றி வார்ந்த
கள்ளென நரம்பு வீக்கிக்
கையொடு மனமுங் கூட்டி
வெள்ளிய முறுவ றோன்ற
விருந்தென மகளி ரீந்த
தெள்விளிப் பாணித் தீந்தேன்
செவிமடுத் தினிது சென்றார்.

வள் உகிர்த் தளிர்க்கை நோவ
மாடகம் பற்றி, வார்ந்த
கள் என நரம்பு வீக்கிக்,
கையொடு மனமும் கூட்டி,
வெள்ளிய முறுவல் தோன்ற
விருந்து என, மகளிர் ஈந்த
தெள்விளிப் பாணித் தீம் தேன்,
செவி மடுத்து இனிது சென்றார்.

பொ :—கூர்மையான நகங்களுடையவும் தளிர் போல் மெல்லியவுமான தம் கைவிரல்கள் நோவுமாறு, சுருதிக் கருவியின் முறுக்காணிகளைப் பிடித்துத் திருகி, ஒழுகும் தேன் தாரைபோன்ற அதன் நரம்புகளை இறுக்கி, அந்நரம்புகளை மீட்டுகின்ற கைவிரல்களுடனே மனநிலையையும் (ஒரு சேரக்) கூட்டி, (தம்) வெண்முறுவல் வெளிப்பட (புதியராய் வந்து கேட்பவர்க்கு) விருந்துணவு போல அளித்த தெளிவுள்ள வாய்ப்பாட்டான இனிய தேனை இரு செவியாலும் கேட்டு இன்புற்றுச் சென்றார்கள்.

கு: —மாடகம் பற்றி நரம்பு வீக்கி - முறுக்காணிகளைத் திருகிச் சுருதி லயம்பெற நரம்பிசைகளை அமைத்து. அவ்வாறு அமைத்துக்கொண்ட பின்பே வாய்ப்பாட்டுத் தொடங்கப் பெறும்; இதற்குரிய கருவி யாழ் போன்றதாம். 'தும்புருயாழ்' என்பது இதுவே என்றும், தும்புரு முனிவர் இவ்வியாழின் இசை லயம்பெறப் பாடிவந்தமையின் அப்பெயர் பெற்றதென்றும் கூறுவர். இதனை இக்காலத்தார், தம்புரு, தம்புரா எனத் திரித்து வழங்குவர். இதனில் பாடகர்களே சுருதி லயப்படுத்திக்கொண்டு அதன் நரம்புகளை மீட்டி இன்னொலி எழுப்புவதும் மரபு. விளிப்

பாணி - வாய்ப்பாட்டிசை ; 'விளியாக் கொண்டு' (சீவக. 2691), 'விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும்' (திரிகடுகம் 11) என்பன காண்க. (12)

## குதிரைகள் சுழன்றோடுதல்

**576.** கொட்புறு கலினப் பாய்மா
குலான்மகன் முடுக்கி விட்ட
மட்கலத் திகிரி போல
வாளியின் வருவ மேலோர்
நட்பினி னிடைய ருவாய்
ஞானிய ருணர்வி னொன்றாய்க்
கட்புலத் தினைய வென்று
தெரிவில திரியக் கண்டார்.

கொட்பு உறு கலினம் பாய்மா, குலால் மகன் முடுக்கி விட்ட மண்கலத் திகிரி போல வாளியின் வருவ, மேலோர் நட்பினின் இடை அருவாய், ஞானியர் உணர்வின் ஒன்றாய்க், கண் புலத்து இனைய என்று தெரிவில திரியக் கண்டார்.

பொ :—சுழன்ற செலவுடையனவும், கடிவாளம் பூண்டு பாய்ந்து செல்வனவுமாகிய குதிரைகள், குயவனால் சுழற்றிவிடப் பட்டதும் மட்கலம் செய்யும் கருவியுமான சக்கரம்போல, மண் டல கதியாக வருகின்றவை, பெரியோரின் நட்பு இடையீடில் லாமைபோல இடையறாத தன்மையுடையனவாகவும், தத்துவ ஞானிகளின் அறிவில் (உலகின் பேதமான தோற்றங்களெல்லாம்) அபேதமாகவே தோன்றுதல் போலவும் கட்புலனுக்கு இத்தன் மைய என்று அறிதல் கூடாதனவாய்த் திரிதலைக் கண்டார்கள்.

கு :—குலால்மகன் - குலாலனுன மகன் : திரிபு, குலாலன் - குயவன். குயவனது திகிரிச் சுழற்சியைக் குதிரை வேகத்துக்கு உவமையாக்குக. 'கூட்டுற முடுக்கிவிட்ட குயமகன் திகிரிபோல வாட்டிறல் தேவதத்தன் கலினமாத் திரியுமன்றே' (சீவக. 786) என்றார் பிறரும். வாளி - வட்டவடிவாய் ஓடுதல். ஒன்றன்பின் ஒன்றாய் மண்டல கதியிற் செல்லும் குதிரைகள் அக்கதியில் இணைந்து ஓடுவதற்குப் பெரியோர்களின் நட்புறவை எடுத்துக் காட்டியது, அவற்றின் இணைப்பொழுங்கும் இடையறாமையும் ஆகும். பலவாயுள்ள குதிரைகள் இடையீடின்றி மண்டல கதி யாய்த் தொடர்ந்தோடும் வேகத்தால் ஒன்றாகவே தோற்றமளிப்

பதனால் 'ஞானிய ருணர்வின் ஒன்ருய்' என்ருர். உலகின் பல் வேருயுள்ள எண்ணிறந்த தோற்றங்கள் யாவும், தத்துவ தரிசி களுக்கு ஒன்ருகவே தோன்றும் என்பர். 'ஒன்றே யென்னின் ஒன்றேயாம் பலவே யென்னின் பலவேயாம். (யுத்தகாண்டக் கடவுள் வணக்கப் பாடல்) எனல் காண்க. 'இருவகைச் சாரியு மெதிர்ந்து வட்டமாய் - வருவழி நெகிழி போல் மறுகெலா மொரு - துரகத மேனிலை நின்ற தோற்றமொத் - தொருவற நடத்தினு னெருகணத்தினே' என்பர் பின்னேரும் (பரஞ்சோதி யார் திருவிளை. நரிபரி 99). (13)

### மாடங்களில் மாதர்கள் காட்சி

**577.** வாளரம் பொருத வேலும்
மன்மதன் சிலையும் வண்டின்
கேளொடு கிடந்த நீலச்
சுருளுஞ் செங்கிடையுங் கொண்டு
நீளிருங் களங்க நீக்கி
நிரைமணி மாட நெற்றிச்
சாளரந் தோறுந் தோன்றுஞ்
சந்திர வுதயங் கண்டார்.

வாள் அரம் பொருத வேலும், மன்மதன் சிலையும், வண்டின் கேளொடு கிடந்த நீலச் சுருளும், செம் கிடையும் கொண்டு, நீள் இரும் களங்கம் நீக்கி, நிரை மணி மாட நெற்றிச் சாளரம் தோறும் தோன்றும், சந்திர உதயம் கண்டார்.

பொ :—ஒளிதங்கிய அரம் அராவிய வேலாயுதத்தையும் காம தேவனது வில்லையும் வண்டினங்களோடு பொருந்திய நீலமணிச் சுருளையும் சிவந்த கிடேச்சுக்களையும் தம்மிடம் கொண்டு நீண்ட காலம் தம்பால் தங்கியிருந்த பெரிய களங்கத்தை ஒழித்து, ஒழுங் காக மணிகள் பதித்த மாளிகைகளின் மேலிடத்தே அமர்ந்த சாளர வாயில்கள் தோறும் தோன்றும் சந்திரர்களின் உதயத் தைப் பார்க்கலானர்கள்.

கு :—வீதிகளில் நிகழும் நிகழ்ச்சிகளைக் காணும் நோக்குடன் தத்தம் மாளிகை மேனிலைகளிலே சாளரங்களில் நிற்கும் மகளிரின் முகங்களின் தோற்றத்தைச் சிறப்பித்தவாறு. 'வாளரம் பொருத

வேல்'—கண்கள். 'வாளரங் துடைத்த வைவேல்' என்றார் சிந்தாமணியினும் (461). மன்மதன் சிலை, புருவம். வண்டொடு கிடந்த நீலச் சுருள், கூந்தல். செங்கிடை—அதரம். களங்க நீக்கித் தோன்றும் சந்திரன், முகமண்டலம் என்க. (14)

### மதுவருந்தி ஊடிய மகளிர் முகக்காட்சி

**578.** பளிக்குவள் ளத்து வார்த்த
பசுநறுந் தேறன் மாந்தி
வெளிப்படு நகைய வாகி
வெறியன மிழற்று கின்ற
வொளிப்பினு மொளிக்க வொட்டா
வூடலை யுணர்த்து மாபோற்
களிப்பினை யுணர்த்துஞ் செவ்விக்
கமலங்கள் பலவுங் கண்டார்

**பளிக்கு வள்ளத்து வார்த்த பசு நறுந் தேறல் மாந்தி, வெளிப்படு நகைய ஆகி, வெறியன மிழற்றுகின்ற, ஒளிப்பினும் ஒளிக்க ஒட்டா ஊடலை உணர்த்துமாபோல் களிப்பினை உணர்த்தும் செவ்விக் கமலங்கள் பலவும் கண்டார்.**

பொ :—பளிங்குக் கிண்ணத்திலே வார்க்கப்படும் புதிய மணமுள்ள மதுத்தெளிவைக் குடித்து, அதனால் வெளிப்படுகின்ற சிரிப்பையுடையனவாயும், பிதற்றல் கொண்ட வார்த்தைகளைப் பேசுவனவாயும் மறைத்துவைக்க முயன்றும் அது முடியாத ஊடற் செய்திகளை அறிவிக்கும் வகையில் மதுக்களிப்பினை வெளிப்படுத்துநிற்கும் அழகிய செந்தாமரைமலர்கள் பலவற்றையும் கண்டார்கள்.

கு :—கமலங்கள் – என்றது மதுவருந்திய மகளிர்முகங்களை. 'களிப்பினை யுணர்த்தும் கமலங்கள்' என்றதனால் மதுவை மட்டும் வெளியிடும் கமலங்கள் போலன்றி அம் மதுக்களிப்பினையும் அதன் பயனாக ஊடற் செய்திகளையும் வெளியிடும் கமலங்கள் என்றபடி. 'உணர்த்துமாபோல்' என்பது 'சொல்லுவதுபோல் செய்க' என்புழிப்போல், 'உணர்த்தும் வகையில்' (முறையில்) எனப் பொருள் கொள்க. (15)

## மகளிர் பந்தாடுங் காட்சி

**579.** மெய்வரு போக மொக்க
வுடனுண்டு விலையுங் கொள்ளும்
பையர வல்கு லார்த
முள்ளமும் பளிங்கும் போல
மையரி நெடுங்க ணோக்கம்
படுதலுங் கருகி வந்து
கைபுகிற் சிவந்து காட்டுங்
கந்துகம் பலவும் கண்டார்.

மெய் வரு போகம் ஒக்க உடன் உண்டு விலையும் கொள்ளும்,
பை அரவு அல்குலார் தம் உள்ளமும், பளிங்கும் போல
மை அரி நெடுங்கண் நோக்கம் படுதலும் கருகி வந்து,
கை புகில் சிவந்து காட்டும், கந்துகம் பலவும் கண்டார்.

பொ :—உடற்சேர்க்கையா லுண்டாம் காமவின்பத்தை ஆடவரொப்பத் தாமும் அனுபவித்து (அவ்வாடவர் தம்மாலடைந்த அவ்வனுபவத்திற்காக) விலைப்பொருளை வாங்குபவரும், பாம்பின் படம் போன்ற அல்குலை யுடையவருமாகிய வேசையரது உள்ளமும் பளிங்கும் போல, மைதீட்டியும் செவ்வரி படர்ந்துமுள்ள அவர்கள் கண்களின் பார்வை படும்பொழுது கருநிறங் கொண்டும் கைகளிடம் வந்து பொருந்தும்போது செந்நிறம் கொண்டும் தோற்றுகின்ற பந்துகள் பலவும் கண்டார்கள்.

கு :—வேசையருள்ளம், உண்மைக் காதலில்லாமல் ஆடவர் கைப்பொருளை நோக்கிக் கூடுதலும், பளிங்கு தனக்கொரு நிற மின்றி அடுத்த பொருளின் நிறத்தை யேற்றுக் காட்டுதலும்போல ஆட்டத்தில் உயர்ந்தும் தாழ்ந்தும் வரும் பந்துகள், மகளிரின் மைதீட்டிய கண்களின் பார்வைபட்டு மேற்செல்லும்போது கறுத்தும் அவை கைகளில் வரும்போது சிவந்தும் தோன்றலாயின என்பது கருத்து. இங்கு கூறிய பந்துகள் எல்லா நிறத்தையும் ஏற்றற்குரிய வெண்ணிற மானவை என்க. 'பிற நெஞ்சிற் பேணிப் புணர்பவர்' (குறள்-917) அடுத்தது காட்டும் பளிங்குபோல் (குறள் 706) என்பன இங்கு ஒப்பிடத்தகும். 'விற்றிடும் அல்குறன்னை மீளவுந் தமதே யாக்கி - மற்றைய நாளும் விற்கும் வரைவிலார்' என்றார் பின்னோரும் (காஞ்சிப்). (16)

## மகளிர் வட்டாடும் இடங்கள்

580. கடகமுங் குழையும் பூணு
மாரமும் கலிங்க நுண்ணூல்
வடகமு மகர யாழும்
வட்டினி கொடுத்து வாசத்
தொடையலங் கோதை சோரப்
பளிக்குநாய் சிவப்பத் தொட்டுப்
படைநெடுங் கண்ணூர் வட்டாட்
டாடிடம் பலவுங் கண்டார்.

கடகமும் குழையும் பூணும்
ஆரமும் கலிங்க நுண் நூல்
வடகமும் மகர யாழும்
வட்டினி கொடுத்து, வாசத்
தொடையல் அம் கோதை சோர,
பளிங்கு நாய் சிவப்பத் தொட்டுப்,
படை நெடுங் கண்ணூர் வட்டாட்டு
ஆடு இடம் பலவும் கண்டார்.

பொ:—கைவளைகளையும் காதணிகளையும் மற்றும் பல ஆபரணங்களையும் அரதனமாலைகளையும், நுண்ணிய நூலிழைகளால் அமைத்த மேற்போர்வைகளையும் மகர வீணைகளையும் பந்தயப் பொருளாக வைத்து, மணமாலைகள் அணிந்த தம் கூந்தல் தளரும்படி பளிங்காலமைந்த 'நாய்' என்ற காய்கள் செந்நிறங் கொள்ளும்படி தம் கரங்களால் தொட்டு, வேல்போலும் நீண்ட கண்களையுடைய மாதர்கள் (கட்டமும் காய்களுமாக வைத்து) வட்டாட்டாடும் இடங்கள் பலவற்றையும் பார்த்தார்கள்.

கு:—விளையாட்டில் உள்ள ஊக்க மிகுதியால் சோர்ந்து கூந்தல் அவிழ்ந்த நிலையையும் அறியாதவராயினர் என்பார் 'கோதை சோர' என்றார். வடகம்-மேலாடை; 'வடகத்தோ டுடுத்த தூசு' என்பர் பின்னும் (வரைக்காட்சி 48). வட்டினி-பந்தயப்பொருள் 'வட்டிகை என்றும் பாடமுண்டு. வட்டாட்டு-உண்டையுருட்டி ஆடும் ஆட்டம்; கல்லாச் சிறார் நெல்லிவட்டாடும்' (நற்றிணை. 3) என்பர். 'கண்ணூர் ஆடும் பண்ணைகள்' என்றும் பாடம். (17)

### நீர்நிலைகளில் மகளிராடுங் காட்சி

581. பங்கயங் குவளை யாம்பல்
படர்கொடி வள்ளை நீலஞ்
செங்கிடை தரங்கக் கெண்டை
சினைவரா லினைய தேம்பத்
தங்கள்வே றுவமை யில்லா
வவயவந் தழுவிச் சாலும்
மங்கையர் விரும்பி யாடும்
வாவிகள் பலவுங் கண்டார்.

**பங்கயம் குவளை ஆம்பல் படர் கொடி வள்ளை நீலம்**
**செங்கிடை தரங்கக் கெண்டை சினைவரால் இனைய தேம்பத்,**
**தங்கள் வேறு உவமை இல்லா அவயவம் தழுவிச், சாலும்**
**மங்கையர் விரும்பி ஆடும் வாவிகள் பலவும் கண்டார்.**

பொ :—தாமரை செங்குவளை ஆம்பல் படர்கொடியான வள்ளை கருங்குவளை இவற்றின் மலர்களும் சிவந்த நெட்டிகளும் நீரலை களில் திரியும் கெண்டை மீன்களும் இவை போல்வன பலவும் வருந்தும்படி, வேறு உவமப் பொருள்கள் இல்லாத தங்கள் உட லுறுப்புக்களைத் தழுவிய வண்ணம் சிறந்த மகளிர்கள் விரும்பி நீராடுகின்ற தடாகங்கள் பலவற்றையும் பார்த்தார்கள்.

கு:—தாமரை முதல் வராலீறுகவுள்ள நீர்வாழும் பொருள்கள். உடல்வருந்துதற்குக் காரணம் மகளிர் குடைந்து நீராடுதல். அவர் உறுப்புக்கட்கு உவமை யாகாமையால் உள்ளமும் வருந்த லாயின என்க. வரால் – கணைக்காலுக்கு உவமை. ஏனைய தெரிந்தவை. ஒப்பற்றவான முகம் செவி கண்களைக் கைகளால் மூடிக்கொண்டு நீராடல் மகளிர் இயல்பாதலின் ‘வேறுவமை யில்லா அவயவந் தழுவி’ என்றார். (18)

### மைந்தர் வட்டாடும் இடங்கள்

582. இயங்குறு புலன்க ளெங்கு
மிங்குங்கொண் டேக வேகி
மயங்குபு திரிந்து நின்று
மறுகுறு முணர்வி தென்னப்

புயங்களிற் கலவைச் சாந்தும்
புணர்முலைச் சுவடு நீங்காப்
பயங்கெழு குமரர் வட்டாட்
டாடிடம் பலவுங் கண்டார்.

இயங்குறு புலன்கள் அங்கும் இங்கும் கொண்டு ஏக ஏகி, மயங்குபு திரிந்து நின்று மறுகுறும் உணர்வு இது, என்னப் புயங்களில் கலவைச் சாந்தும் புணர் முலைச் சுவடும் நீங்காப் பயம் கெழு குமரர் வட்டாட்டு ஆடிடம் பலவும் கண்டார்.

பொ :—(பலவிடத்தும்) செல்லும் ஐம்புலன்களும் அங்கு மிங் கும் அலைக்க அவற்றின் வழியே சென்று மயங்கித் திரியும் கலக்க முற்ற சிற்றறிவு இஃதென்று சொல்லும்படி, நறும் பண்டங்கள் கலக்கப் பெற்ற சந்தனக் குழம்பும் கலவி புரிந்த மகளிரின் தனச் சுவடுகளும் நீங்காத செல்வப்பயன்கள் மிகுதி யுடைய இளங் குமரர்கள் வட்டாட்டத்தை ஆடுகின்ற இடங்கள் பலவற்றையும் பார்த்தார்கள்.

கு:—வட்டு - உருட்டும் உண்டை. இவ்வாட்டத்தில் வகுத்த தானங்களில் இவ்வட்டுச் செல்வதற்காக இளைஞர் மனம் ஒரு நிலை நில்லாது திரிதலைப் புலன்களோடு உவமித்தார். 'அரங்கின்றி வட் டாடியற்றே' (குறள் 431) என்ற ஆன்றோர் கூற்றும் அறிக. (19)

### இளமைந்தர்களின் காட்சி

583. வெஞ்சுட ருருவுற் றன்ன
மேனியர் வேண்டிற் றீயும்
நெஞ்சின ரீசன் கண்ணி
னெருப்புரு வனங்க னன்னர்
செஞ்சிலைக் கரத்தர் மாதர்
புலவிகள் திருத்திச் சேந்த
குஞ்சியர் சூழ நின்ற
மைந்தர்கள் குழாங்கள் கண்டார்.

வெம் சுடர் உரு உற்று அன்ன மேனியர், வேண்டிற்று ஈயும் நெஞ்சினர், ஈசன் கண்ணில் நெருப்பு உரு அனங்கன் அன்னர் செஞ்சிலைக் கரத்தர், மாதர் புலவிகள் திருத்திச் சேந்த குஞ்சியர், சூழ நின்ற மைந்தர்கள் குழாங்கள் கண்டார்.

போ :—வெப்ப முள்ள சூரியன் உருவமெடுத்தது போலும் (பேரொளி கொண்ட) மேனியரும் இரப்போர்க்கு வேண்டிய பொருளைக்கொடுக்கும் வள்ளன்மை மன முள்ளவர்களும், சிவபிரானது நெற்றிக் கண்ணின் நெருப்புக்கு அழிந்தொழியாத மன்மதன் போலும் பேரழகு படைத்தவர்களும், வில்லேந்திய செங்கையுடையவர்களும், மகளிருடல்களைத் தவிர்த்து நின்றதனால் சிவந்த முடியுடையவர்களும் ஆன இளங்குமரர்களின் கூட்டங்களைப் பார்த்தார்கள்.

கு :—'மாதர் புலவிகள் திருத்திச் சேந்த குஞ்சியர்'-என்றது ஊடற் காலத்து மகளிர் பாதங்களில் மைந்தர்கள் விழுந்து அவ்வூடல் தீரவேண்டுங்காலத்து, அவரது செம்பஞ்சூட்டிய பாதங்கள் பட்டு, அதனாற் சிவந்த குஞ்சியை யுடையவர் என்பதாம். தன் தலைமைக்கு மாறாகத் தலைவன், தலைவியினடிவீழ்ந்து பணிதல் புலவிக்காலத்து உண்டென்பது " கொடுமை யொழுக்கங்கோடல் வேண்டி - அடிமேல் வீழ்ந்த கிழவன் " (தொல் பொருள் கற்பியல் 6) என்பதனால் அறிக. (20)

### பூஞ்சோலைகளின் காட்சி

**584.** பாகொக் குஞ்சொற் பைங்கிளி
★ யோடும் பல பேசி
மாகத் தும்பர் மங்கையர்
நாண மலர் கொய்யும்
தோகைக் கொம்பி னன்னவர்க்
கன்னந் நடை தோற்றுப்
போகக் கண்டு வண்டின
மார்க்கும் பொழில் கண்டார்.

பாகு ஒக்கும் சொல் பைங்கிளியோடும் பல பேசி,
மாகத்து உம்பர் மங்கையர் நாண மலர் கொய்யும்,
தோகைக் கொம்பின் அன்னவர்க்கு, அன்னம் நடை தோற்றுப்
போகக் கண்டு, வண்டு இனம் ஆர்க்கும் பொழில் கண்டார்.

போ :—சர்க்கரைப்பாகு போன்ற இன்சொற்கள் பலவற்றைக் கிளியோடும் பேசி விண்மேல் வாழும் தேவமாதர்களும் (அழகில் தோற்று) நாணும்படி பூக்களைக் கொய்யும், பீலிகளுள்ள கொம்பு போன்ற மகளிர்க்கு, அன்னங்கள் நடையழகில் ஒப்பாகாமல் தோல்வியுற்றுப் பின் செல்வதைப் பார்த்து, வண்டுகளின் கூட்டம் ஆரவாரிக்கும் பூஞ்சோலைகளைப் பார்த்தார்கள்.

கு :—தோகையுடைய கொம்பின் அன்னவர் – மயிற்பீலியையுடைய கொம்பை ஒத்தவர்; இல்பொருளுவமை, கூந்தலையுடைய மாதர் என்றபடி; இன் சாரியை. இயற்கையின் ஒலிக்கும் வண்டுகளின் ஆரவாரத்தை, அன்னங்கள் மாதரின் நடைக்குத் தோற்றுப் பின்வாங்குவது கண்டு ஆர்த்ததாகத் தற்குறிப்பணி பெறக் கூறினர். (21)

அரண்மனையைச் சூழ்ந்துள்ள அகழி

585. உம்பர்க் கேயும் மாளிகை
யோளி நிழல்பாய
இம்பர்த் தோன்றுந் நாகர்த
நாட்டி னெழில் காட்டிப்
பம்பிப் பொங்குங் கங்கையி
ஞழ்ந்த படைமன்னன்
அம்பொற் கோயிற் பொன்மதில்
சுற்றும் அகழ் கண்டார்.

உம்பர்க்கு ஏயும் மாளிகை ஒளி நிழல் பாய,
இம்பர்த் தோன்றும் நாகர்தம் நாட்டின் எழில் காட்டிப்,
பம்பிப் பொங்கும் கங்கையின் ஆழ்ந்த படை மன்னன்
அம்பொன் கோயில் பொன் மதில் சுற்றும் அகழ் கண்டார்.

பொ :—தேவர்கள் (வந்து தங்குவதற்கும்) ஏற்ற மாளிகை வரிசைகளின் சாயை தன்பாற் படிதலால், நிலவுலகில் தோன்றும் தேவலோக அழகினைத் தன்னிடம் காண்பிப்பதும், அலைகள் மிகுந்து மேலே ஓங்கும் கங்கா நதிபோல ஆழ்ந்துள்ளதும், சேனையுடைய சனகராசனது பொன்மயமான அரண்மனையின் அக மதிலைச் சூழ்ந்துள்ளதுமான அகழியைப் பார்த்தார்கள்.

கு :—ஏயும் மாளிகை, தோன்றுந் நாகர், சுற்றும்மகழ் என்பன விரித்தல்விகாரங்கள். (22)

கன்னிமாடத்தை அணுகி நிற்றல்

586. பொன்னின் சோதி போதினி
ஞற்றம் பொலிவே போல்
தென்னுண் டேனிற் றீஞ்சுவை
செஞ்சொற் கவியின்பக்

கன்னிம் மாடத் தும்பரின்
மாடே களிபேடோ
டன்னம் மாடு முன்றுறை
கண்டங் கயனின்ருர்.

பொன்னின் சோதி, போதினின் நாற்றம், பொலிவே போல்
தென் உண் தேனில் தீஞ்சுவை, செம் சொல் கவி இன்பக்
கன்னிம் மாடத்து உம்பரின் மாடே, களி பேடோடு
அன்னம் ஆடும் முன் துறை கண்டு அங்கு அயல் நின்ருர்*

பொ :—பொன்னின் பேரொளியும், மலர்களின் நறுமணமும், வண்டுகளுண்ணும் தேனின் தீஞ்சுவையும், வளமுள்ள கவிகளின் இன்பமும் போன்ற கன்னிகையானவள் வாழும் மாடத்தின் மேனிலைக்கு அருகே களித்த பேடுகளுடன் அன்னங்கள் கலந்து குலாவப் பெற்ற முற்றத்தைக் கண்டு (மூவரும்) அதன் பக்கத்தில் நின்ருர்கள்.

கு :—ஒளியும் நறுமணமும் தீஞ்சுவையும், கவியின்பமும் போல அனுபவிக்கத்தக்காள், அம்மாடத்தில் வாழும் கன்னிப்பெண் என்றபடி. 'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு-மொண்டொடி கண்ணே யுள' (குறள் 1101) என்றபடி. ஐம்புல இன்பங்களும் ஆரத்துய்த்தற்குரிய உத்தம கன்னிகைக்கு, இங்கே ஊற்றின்பத்தை மட்டும் ஒழித்துக் கூறியமை குறிப் பிடற்பாலது.

கவி என்பது வளம்பெற்ற சொற்களைத் தன் உயிர்நிலையாகக் கொண்டதாதலின், 'செஞ்சொற்கவி' எனப்பட்டது. 'செவ்விய மதுரஞ்சேர்ந்த நற்பொருளிற்சீரிய கூரிய தீஞ்சொல்' என்றும் 'செஞ்சொலறிவாளர்' என்றும் பிற இடங்களிலும் கவியின் சொல்வளம் சிறப்பிக்கப்படுதல் காண்க. (நகரப். 1., யுத்த நாகபா சப் 263). செஞ்சொற்கவி என்பதற்குத் தமிழ்க்கவி என்று பொருளுரைத்தலும் ஆம். கன்னி - சீதாதேவி. அவளது மாடம் என்றதனல், அம்மூவருங் கண்டு நின்ற மாளிகை கன்னிமாடம் என்பதாயிற்று. அம்மாடத்து மேனிலைக்கு அருகே அன்னங்கள் பேடுகளுடன் மகிழ்ந்தாடுதற்குரிய உறையுள்களும் முன்றில்களும் அமைந்திருந்தன என்பது, அன்னமாடுந்துறைக்கு அருகு நின்ருனைய - கன்னிமாடத்திடைக் கண்டதும்' (நாடவிட்ட 76)

---

இச்செய்யுளுடன் சில சுவடிகளில் மிதிலை காண் படலம் அல்லது மிதிலைக் காட்சிப் படலம் முற்றுப்பெறுகிறது.
3 என்னும் குறியீடுள்ள சுவடியில் இச்செய்யுளுடன் அகலிகை சாப மோட்சம் முற்றுப் பெற்றுள்ளது.

என்று பின்னரும், 'அன்னமாடும் முன்றுறை கண்டு' என்று இங்கும் கூறுதலாலறிக. முன்துறை-முன்னிடம், முற்றம். அன்னம் மயில்கள் போலும் அழகிய பறவைகட்கு வாழ்விடந் தந்து வளர்ப்பதும் (சீவக சிந் 2528) அவற்றுடன் அன்போடு விளையாடுவதும் அரசியரின் இயல்புகளாம். 'அன்ன முள பொன்னிவளொடன் பின் விளையாட' என்பர் பின்னும் (அகத்தியப் 2). அன்னத்தின் அன்புற்ற காதற் பெருக்கை, 'அன்னத் தன்ன அன்புகொள் காதல்' என்பர் முன்னோரும் (பெருங் 2. 7. 16).

இனி, 'பொன்னின் சோதி......கவியின்பம்' என்று பாடங் கொண்டு, சோதி முதலியவை போன்றவளான பிராட்டி என்றும், 'பொலிவே போல்' என்ற தொடரை இடைநிலைவிளக்காக்கிச் 'சோதி முதலியவற்றின் பொலிவு போன்றவளான பிராட்டி' என்றும் உரை கூறுதலும் உண்டு.

மிதிலை மாநகரின் அழகிய காட்சிகளை யெல்லாம், 'கண்டார், கண்டு சென்றார்' என்றே இதுகாறும் கூறி வந்து, 'கண்டு அங்கு அயல் நின்றார்' என இங்குமட்டும் நிற்றலைக் கூறியது குறிப்பிடத் தக்கதாம். மிதிலையுள் 'ஆடவர் அணுகா அருங்கடி வரைப்பான' கன்னி மாடத்தருகே, முனிவர் இராமனை வேண்டுமென்றே அழைத்துச் சென்றதன் நோக்கம், பிராட்டியிடம் காதலைப் பெருக்கிப் பெருமானை இணைப்பதே என்றும், அதனால் பொழிலும் அகழும் சூழ்ந்து குளிர்ந்துள்ள அக் கன்னிமாடத்தருகே அப் பெருமான் இளைப்பாறும் நிமித்தம் சிறிது தாழவைத்தனர் அவர் என்றும், அத் தாமதத்துக்கு, களிபேடோடு அன்னம் ஆடிக் காதல் பெருக்கும் களத்தைக் குறிப்பிட்டனர் என்றும், இடம் நோக்கிக் கருதத்தகும்.

இனி பொன்னின் சோதி முதலியவற்றை ஒத்த சீதா தேவியைக் கன்னிமாடத்து உம்பரிற் கண்டு அயல் நின்றார் என்று பொருள் கூறுவாரும் உளர்.

(சேடியர்) 'அடிபோற்றி முறை சாரப் பூவினொதுங்கி'
'சதகோடி மின்சேவிக்க மின்னரசென்னும் படி நின்றாள்'
'கல்லும் புல்லும் கண்டுருகப் பெண்கனி நின்றாள்'

என்று, கன்னிமாட முகப்பிற்கு நடந்து வந்து பார்வைக்கிடமாகப் பிராட்டி நின்ற நிலைமை கூறி 'எண்ணரு நலத்தினளினையள் நின்றுழி' என்று இவ்வாறு ஒருதலைக்காம நிகழ்ச்சியைப் பின்பு சிறப்பித்தலானும், பூஞ்சோலையையும், அகழையும், புகழ்ந்தவாறே கன்னிமாடத்தினையும் கவி தனியே குறிப்பிட வேண்டியவராதலானும், சீதாதேவியை இராமன் கண்டதாகப் பொருள் கூறுதல் ஏற்புடையதன்று என்க, (23)

கன்னிமாடத்துள்ள சீதாதேவியின் சிறப்பு 587—593

**587.** செப்புங் காலைச் செங்கம
லத்தோன் முதல்யாரும்
எப்பெண் பாலுங் கொண்டுவ
மிப்போ ருவமிக்கும்
அப்பெண் டானே யாயின
போதிங் கயல்வேறோர்
ஒப்பெங் கேகொண் டெவ்வகை
நாடி யுரைசெய்வேம்.

செப்பும் காலைச், செங்கமலத்தோன் முதல் யாரும்
எப் பெண்பாலும் கொண்டு உவமிப்போர் உவமிக்கும்
அப் பெண் தானே ஆயின போது, இங்கு அயல் வேறு ஓர்
ஒப்பு, எங்கே கொண்டு எவ்வகை நாடி உரை செய்வேம்.

பொ :—(சீதாதேவிக்கு உவமை) சொல்லுமிடத்து, செங்கமலத்தை இருப்பிடமாகக்கொண்ட பிரமதேவன் முதலாக உள்ள யாவரும் எண்திசைகளிலும் ஒப்புப் பொருள்களை ஆராய்ந்து கொண்டு உவமிப்பவர்கள், உவமானமாக எடுத்துச் சொல்லும் அப்பெண்ணாகிய திருமகள் தானே (சீதையாக இங்கு) வந்துள்ள போது, இவ்விடத்து அத்திருமகளை விட வேறோருவமைப் பொருளை எவ்விடம் தேடிக் கண்டு எவ்வாறு எடுத்துரைப்பேம்.

கு :—இது கவிக் கூற்று, உவமையற்றவள் சீதாதேவி என்பது கருத்து. (24)

**588.** உமையா ளொக்கும் மங்கைய
ருச்சிக் கரம்வைக்கும்
கமையாண் மேனி கண்டவர்
காட்சிக் கரைகாணார்
இமையா நாட்டம் பெற்றில
மென்றா ரிருகண்ணால்
அமையா தென்றா ரந்தர
வானத் தவரெல்லாம்.

உமையாள் ஒக்கும் மங்கையர் உச்சிக் கரம் வைக்கும்
கமையாள் மேனி கண்டவர், காட்சிக் கரை காணார்,
இமையா நாட்டம் பெற்றிலம் என்றார், இரு கண்ணால்
அமையாது என்றார் அந்தர வானத்தவர் எல்லாம்.

பொ :—உமாதேவி போலும் சிறப்புடைய மாதர்களும் தலை மேல் கைகளை வைத்து வணங்குதற்குரிய பொறையாட்டியான சானகியின் திருமேனியழகைப் பார்த்த மண்ணுலகத்தவர், இவள் அழகின் எல்லையைக் காணும்படி, இமையாத கண்களைப் பெற்றோமில்லையே என்று குறைவுற்றனர்; இமையா நாட்டம் பெற்ற மேலுலகத்துத் தேவர்கள் எல்லாம் (இவ்வழகைப் பார்த்து அளவிட) நம் இரண்டு கண்களால் முடியாது என்று கூறுவாரானார்.

கு :—அழகினை முழுதும் பருகுதற்கேற்றபடி கண்கள் அமைந்திலவே என்று மண்ணோர் போலவே விண்ணோரும் தம் குறைபாடு களைக் கூறி வருந்தினர் என்றபடி. கமையாள் – பொறையுடையாள்; '' இரும்பொறை என்பதொன்றும்... களிநடம் புரிய '' என்பர் பின்னும் (சுந்தர. திருவடிதொழுத 62). (25)

**589.** வென்றம் மானைத் தாரயில்
வேலுங் கொலைவாளும்
பின்றம் மானப் பேர்கய
லஞ்சப் பிறழ்கண்ணாள்
குன்றம் மாடக் கோவி
னளிக்குங் கடலன்றி
அன்றம் மாடத் தும்ப
ரளிக்கு மமுதன்னாள்.

வென்று அம் மானைத் தார் அயில் வேலும் கொலை வாளும்
பின்ற, மானப் பேர் கயல் அஞ்சப், பிறழ் கண்ணாள்
குன்றம் ஆடக் கோவின் அளிக்கும் கடல் அன்றி,
அன்று அம் மாடத்து உம்பர் அளிக்கும் அமுது அன்னாள்.

பொ :—(புலவர்கள் உவமிக்கும்) அழகிய மானை வென்று, மாலையணிந்த கூரிய வேலாயுதமும் கொலைத் தொழிலிற் பயின்ற வாளாயுதமும் (ஒப்பில்) பின்னிடும்படியாகவும், சிறந்த பெருங் கயல் மீன்களும் ஒப்பாகாமல் அஞ்சும்படியாகவும் பிறழ்கின்ற

கண்களையுடைய சானகி மந்தரமலை தன்னிடம் சுழலும்படி அமுதத்தைத் தேவலோகத்துக்கு அளித்த கடலினால் அல்லாமல் அக்காலத்து அக்கன்னிமாடத்தின் மேலிடம் அளித்த அமுதத்தை ஒத்தவள்.

கு :—கோவின் – தேவலோகத்துக்கு ; உருபு மயக்கம் ; திருமாலால் என்றுமாம். அம் மானை – என்பதில் அகரம் உலகறி சுட்டு எனினுமாம். (26)

**590.** பெருந்தே னின்சொற் பெண்ணிவ
ளொப்பா ளொருபெண்ணைத்
தருந்தா னென்று னான்முக
னின்னுந் தரலாமே
அருந்தா வந்தத் தேவ
ரிரந்தா லமுதென்னும்
மருந்தே யல்லா தென்னினி
நல்கும் மணியாழி.

பெரும் தேன் இன் சொல் பெண் இவள் ஒப்பாள் ஒரு பெண்ணைத்,
தரும் தான் என்றால், நான்முகன் இன்னும் தரலாமே?
அருந்தா அந்தத் தேவர் இரந்தால், அமுது என்னும்
மருந்தே அல்லாது, என் இனி நல்கும் மணி ஆழி.

பொ ,—பெருமைபெற்ற தேன்போலும் இன்சொல்லையுடைய இப்பெண்போன்ற பெண்ஒருத்தியை எமக்குப் படைத்துத் தாரும் என்று, அமுதந்தவிர வேறெதனையும் உண்ணாத தேவர்கள் திரண்டு வேண்டினாலும், நான்முகனான பிரமன் இனியும் படைத்தல் கூடுமோ? அத்தேவர்கள் வேண்டுமிடத்து, அமுதம் என்னும் சாவாமருந்து அல்லது, இரத்தினாகரமான கடல், வேறு எதனைக் கொடுக்கவல்லது?

கு :—தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிப் பிரமன் மறுமுறையும் கடல்கடைந்து திரும்பவும் அமுதத்தை அவர்கட்கு அளிப்பதாயிருந்தாலும், அழகான அந்தத் திருமகளைத் திரும்பவும் படைத்துத்தர அவனால் முடியுமோ? அவ்வாறே சானகியை ஒத்த பெண்ணைப் பிரமன் மீண்டு அளிக்கவல்லனல்லன் என்றபடி. அமுதத்தினும் சிறந்த மருந்து இல்லாமையால், அதனையே தேவர்கள் வேண்டுகோட்கு இரங்கிப் பிரமன் கடலை மறுமுறை கடைந்து அளிப்பதன்றி, வேறு சிறந்த மருந்து இல்லாமைபோல

சானகியை ஒப்பாளொரு பெண்ணை அளிக்க அவனும் வல்லவனல் லன் என்ற கருத்துக் கூறுவாருமுளர். தான் – அசை. தரும் - தாரும் என்பதன் விகாரம், 'தேவர் தேயமுந் தருநிலத் தெமக் கெனில்' (சிந்தாமணி-1174) 'தெருளேதரு' (திருவாய்மொழி 9. 8. 8.) என்புழிப் போல. 'உவமிப்போ ருவமிக்கும் அப்பெண் டானே யாயினபோது' 'மலர்மே னின்றிம் மங்கையிவ் வையத் திடை வைக' என்று, திருமகளே சீதா பிராட்டி என மேலே கூறி விட்டதனுல், அத்திருமகளை அமுதுடன் அளித்த கடல், அமுதை யன்றி, திருமகளை மறுபடியும் அளிக்கவல்லதில்லை என்பது முதற் பொருளின் கருத்து. (27)

591. அனையாண் மேனி கண்டபி
 னண்டத் தரசாளும்
வினையோர் மேவும் மேனகை
 யாதிம் மிளிர்வேற்கண்
இனையோ ருள்ளத் தின்னலி
 ஞேர்தம் முகமென்னும்
பனிதோய் வானின் வெண்மதிக்
 கென்றும் பகலன்றே.

அனையாள் மேனி கண்டபின், அண்டத்து அரசு ஆளும்
வினையோர் மேவும் மேனகை ஆதி, மிளிர் வேல் கண்
இனையோர் உள்ளத்து இன்னலினோர் தம் முகம் என்னும்
பனி தோய் வானின் வெள் மதிக்கு என்றும் பகல் அன்றே.

பொ :—விண்ணுலகத்து ஆட்சிபுரியும் இந்திராதி தேவர்கள் விரும்பும் மேனகை முதலிய பிறழ்கின்ற வேற்படைபோலும் கண்களையுடையவரும் (தாம் சானகிக்கு ஒப்பாகாமை அறிந்து) மனவேதனைப் படுபவருமான தெய்வப்பெண்கள், அத்தேவியின் மேனியழகைக் கண்டபின் (அப்பேரழகு) அம்மகளிரின் முகங்க ளான - குளிர்ச்சி கொண்டு விண்ணில் விளங்கிய - வெண்மதிக்கு எப்பொழுதும் பகற்பொழுதாகவே ஆயிற்று.

கு:—இதனுல் தெய்வமகளிரின் முகங்கள், பிராட்டியின் பேரழ கைக் கண்டபின் பகலில் தோன்றும் சந்திர மண்டலம்போல ஒளி மழுங்கியனவாம். (28)

592. மலர்மே னின்றிம் மங்கையிவ்
வையத் திடைவைகப்
பலகா லுந்தம் மெய்ந்நனி
வாடும் படிநோற்றுர்
அலகோ வில்லா வந்தண
ரோநல் லறமேயோ
உலகோ வானே வும்பர்கொ
லோவீ துணரேமால்.

மலர் மேல் நின்று இம் மங்கை இவ் வையத்து இடை வைகப்,
பலகாலும் தம் மெய் நனி வாடும்படி நோற்றுர்,
அலகு ஓ இல்லா அந்தணரோ, நல் அறமேயோ,
உலகோ, வானே, உம்பர்கொலோ! ஈது உணரேம் ஆல்.

பொ :—இத்தகைய சீதாதேவியானவள், செந்தாமரை மலரின் மேலிடத்தினின்று இழிந்து பூவுலகிடையே வாழ்வதற்காகப் பலகாலமாகத் தம் மேனி மிகவும் வாட்டமுறும்படி அருந்தவம் புரிந்தவர்கள், அளவற்ற அந்தணர்களோ, சிறிய தரும தேவதையோ. நிலவுலகமோ, விண்ணுலகோ, எல்லாத் தேவர் களுமோ, இதனுண்மையை அறிகின்றேமில்லை.

கு :—அந்தணர் அறக்கடவுள் உலகு வான் உம்பர் எல்லாம் நோற்ற பெருந்தவப் பயனே பிராட்டியின் அவதாரம் என்றபடி. (29)

593. தந்நே ரில்லா மங்கையர்
செங்கைத் தளிர்மானே
அன்னே தேனே யாரமு
தேயென் றடிபோற்ற
முன்னே முன்னே மொய்ம்மலர்
தூவி முறைசாரப்
பொன்னே சூழும் பூவி
னெதுங்கிப் பொலிகின்றுள்.

தம் நேர் இல்லா மங்கையர், செங்கைத் தளிர் மானே!
அன்னே! தேனே! ஆர் அமுதே என்று அடி போற்ற,
முன்னே முன்னே மொய் மலர் தூவி முறை சார,
பொன்னே சூழும் பூவின் ஒதுங்கிப் பொலிகின்றுள்.

பொ :—தமக்கு உவமையற்ற (கட்டழகு வாய்ந்த) சேடியர் பலர், (கண்ணழகில்) தளிர்போன்ற செங்கைகளையுடைய மான் போன்றவளே ! (அன்பில்) தாயனையாய்! தேன் போல் இனியாய்! அமுதம்போல் பெறுதற்கரியாய் !' என்று அழைத்து, அடிகளை ஏத்தியவராய், அவர் பாதம் வைக்கும் முன்னிடங்களிலெல்லாம் செறிந்த பூக்களைச் சொரிந்து கொண்டு முறையே செல்ல, பொன் போலும் மகரந்தங்கள் சூழ்ந்த பூக்களிடையே ஒதுங்கி நடந்து (அப்பிராட்டி) விளங்குகின்றாள்.

கு :—அரசரும் அவர் பெருந்தேவியரும் வெளிப்போங் காலத்து, சேடியர்களால் இத்தகைய துதியுரைகளும் உபசாரங் களும் பெறுதல் மரபு. இதனை 'அடியீடேத்தல்' என்பர். 'அடியீ டேத்தச் – சின்ன மலர்க் கோதைத் தீஞ்சொலார் போற்றிசைப்ப' (சீவக. 2469). '' அம்மெல்லனிச்சம் மலரும் அன்னத்தூவியும்... நின்னடிபோற்றி...இம்மென்கலை யாரிடுவென் றேத்த ஒதுங்கி னுள் '' (சீவகசிந், 2454)–'' பாண்டியன் பெருந்தேவி வாழ்கென ஆயமுங்காவலுஞ்சென் றடியீடு பரசியேத்த '' (சிலப். 20.19.20.) என்பன காண்க. (30)

**594.** பொன்சேர் மென்காற் கிண்கிணி
யாரம் புனையாரங்
கொன்சே ரல்குன் மேகலை
தாங்கும் கொடியன்னார்
தன்சேர் கோலத் தின்னெழில்
காணச் சதகோடி
மின்சே விக்க மின்னர
சென்னும் படிநின்றாள்.

**பொன் சேர் மென் கால் கிண்கிணி ஆரம், புனை ஆரம்,**
**கொன் சேர் அல்குல் மேகலை தாங்கும் கொடி அன்னார்,**
**தன் சேர் கோலத்து இன் எழில் காணச், சத கோடி**
**மின் சேவிக்க, மின் அரசு என்னும்படி நின்றாள்.**

பொ:–மெல்லிய பாதங்களில் அணியும் பொன்னாலான சதங்கை களையும் இரத்தின மாலைகளையும், சூடும் பூமாலைகளையும், சிறப்பு வாய்ந்த இடையிலணியும் மேகலாபரணத்தையும், தரித்து,கொடி கள்போன்ற சேடியர் பலர், தன்னிடம் பொருந்திய அலங்காரத் தின் இனிய அழகினைப்பார்த்துக் களிக்கும்படியும், பலகோடி மின்

னல்கள் சூழ்ந்து குற்றேவல்செய்ய அவற்றிடையே நின்றதோர் 'மின்னரசு' என்னும்படியும் பிராட்டி நிற்பாளாயினள்.

கு :—'மின்னரசென்னும்படி' என்றதனால் பேரழகுடன் பேரொளியும் பொருந்தியவள் என்பதும், 'நின்றாள்' என்றதனால் இதுவரை சேடியர் அடியிடேத்த நடந்தவள் மேற்செல்லாமல் நிற்பவளாயினள் என்பதும் பெறப்படும்; இங்ஙனம் நின்ற இடம் மாடத்தின் மேனிலையிலே அன்னம் ஆடும் துறைக்கு அருகானது என்பது, 'அன்னமாடுந்துறைக் கருகுநின் றாளையக், கன்னிமாடத்திடைக் கண்டதுங் கழறுவாய்' என்ற இராமபிரான் கூற்றால் தெளிவாகும். அன்னத்துடன் விளையாடுவது பிராட்டி யின் இயல்பு என்பது முன்னரே கூறப்பட்டமையின், அவள் இங்கு வந்து நிற்றற்கு அவ்விளையாட்டே பெருங்காரணம் என்பது கருதத் தகும். ஈற்றடி இல்பொருள் உருவகம். தாங்கும் இன்னெழில் என இயைக்க. தாங்கும் கொடியன்னார் எனின் சேடியர் சிறப்பிக்கப்பட்டபடியாம். (31)

595. கொல்லும் வேலுங் கூற்றமு
மென்னும் மிவையெல்லாம்
வெல்லும் வெல்லும் மென்ன
மதர்க்கும் விழிகொண்டாள்
சொல்லுந் தன்மைத் தன்றது
குன்றுஞ் சுவருந்திண்
கல்லும் புல்லுங் கண்டுரு
கப்பெண் கனிநின்றாள்.

**கொல்லும் வேலும் கூற்றமும் என்னும் இவை எல்லாம், வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழி கொண்டாள், சொல்லும் தன்மைத்து அன்று அது; குன்றும் சுவரும் திண் கல்லும் புல்லும் கண்டு உருகப், பெண் கனி நின்றாள்.**

பொ :—கொலைவல்ல வேலாயுதமும் கூற்றும் என்ற இவை எல்லாவற்றையும் முடிவாக வெல்லக் கூடியன என்று சொல்லு மாறு களிப்புள்ள கண்களைக் கொண்டவள் (பிராட்டி); (அவள்) நின்ற நிலைமை நம்போன்றாரால் சிறப்பிக்கப்படும் தன்மை யுடைய தன்று ; பெண்கனியான அவள் குன்றும் சுவரும் வலிய கல்லும் புல்லும்(எனப் பெரியவும் சிறியவும் ஆன எல்லா

அசேதனப் பொருள்களும்) பார்த்து உருக்கமடையும்படி (அங்கு) நிற்பாளாயினள்.

கு :—'உண்டற் கினியதாகப் பழுத்துள்ளதும் கிடைத்தற்கு அரியதுமான கனியொன்று, நுகர வகையின்றிக் கழிவதே!' என்று அசேதனங்களும் உருகின என்றபடி. இது காணுதவை கண்டன போலக் கூறப்பட்ட ஒருவகை வழுவமைதி. பிறருள்ள இடத்துச் சென்று தாக்கும் வேலும் கூற்றமும் போலன்றி, இருந்த விடத்திலிருந்தே காமநோயைப் பெருக்கி வருத்துவதாதலால், 'வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழி' எனப்பட்டது. (32)

596. வெங்களி விழிக்கொரு விழவு மாயவர்
★ கண்களிற் காணவே களிப்பு நல்கலால்
மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவள்
எங்கணு யகற்கினி யாவ தாங்கொலோ.

வெம் களி விழிக்கு ஒரு விழவும் ஆய் அவர்,
கண்களில் காணவே களிப்பு நல்கலால்,
மங்கையர்க்கு இனியது ஓர் மருந்தும் ஆயவள்,
எங்கள் நாயகற்கு இனி யாவது ஆம் கொலோ.

பொ :—மிக்க விருப்பத்தோடு கூடிய ஆடவர்கண்கட்கு ஒரு சிறந்த திருவிழாக் காட்சிபோற் பொலிகின்ற மகளிர், தம் கண்களாற் பார்த்த அளவிலே உள்ளக் களிப்பைத் தருவதனுல், (அவர்க்கெல்லாம்) இனிப்புத் தரும் ஒப்பற்ற அமுதம்போன்ற பிராட்டி இனி எங்கள் நாதனுன இராமபிரானுக்கு எத்தகைய பொருளாவளோ?

கு :—(தாம்) சீதாராமர்களின் காதற் சிறப்பினைக் கூறப் புகுவார், அதன் தோற்றுவாயாக – ஒப்பற்ற மங்கையர்க்கே அமுதம்போன்று பொலியும் பிராட்டி, ஆடவர் திலகனுன இராமபிரான் காண நேருமாயின் அவர்க்கு எத்தன்மையளாவளோ என்கின்ருர். விழவும் மருந்தும் என்பவற்றின் உம்மைகள் உயர்வுசிறப்பு. அழகிய பெண்டிருக்கும் கண்களில் காணவே களிப்பு நல்கும் அமுதமாக விளங்கியவள் பிராட்டி என்றது அவளை அனுபவித்தற்கு ஆடூஉத்தன்மையை அப்பெண்டிரும் வேண்டி நின்றமை குறிப்பிக்கும். 'பெண்டிரு மாண்மை வெஃகிப் பேதுறு முலையினுளை' என்ருர் பிறரும் (சீவக. 587). (33)

597. இழைகளுங் குழைகளு மின்ன முன்னமே
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரொடும்
பழகிய வெனினுமிப் பாவை தோன்றலால்
அழகெனு மவையுமோ ரழகு பெற்றவே.

இழைகளும் குழைகளும் இன்ன, முன்னமே
மழை பொரு கண் இணை மடந்தைமாரொடும்
பழகிய எனினும், இப் பாவை தோன்றலால்,
அழகு எனும் அவையும், ஓர் அழகு பெற்றவே.

போ:—கழுத்து முதலியவற்றிற் பூணும் பேரணிகளும் காதணியான குழைகளும் ஆகிய இவை (பிராட்டி அவதரிப்பதற்கு) முன்னமே மழையொத்துக் குளிர்ந்த கண்ணிணையுடைய மகளிர்களுடனே பழகிப் போந்தனவேனும் இவள் அவதரித்தலால், (அணிந்தார்க்கு) அழகு தருவன என்று சொல்லப்படும் அவ்வணிகலன்களும் (இப்போது) புதியதோர் அழகினைப் பெறுவனவாயின.

கு :—அழகளிக்கும் அணிகலன்கட்கெல்லாம் அழகளிக்கும் பேரழகி பிராட்டி என்றபடி. (34)

### இராமபிரானும் சீதாதேவியும் ஒருவரையொருவர் கண்டுகொள்ளல்

598. எண்ணரு நலத்தின
ளிணையள் நின்றுழிக்
கண்ணொடு கண்ணிணை
கவ்வி யொன்றையொன்
றுண்ணவு நிலைபெறா
துணர்வு மொன்றிட
அண்ணலு நோக்கினா
னவளு நோக்கினாள்.

எண் அரும் நலத்தினாள் இணையள் நின்றுழி,
கண் ஒடு கண் இணை கவ்வி, ஒன்றை ஒன்று
உண்ணவும், நிலை பெறாது உணர்வும் ஒன்றிட,
அண்ணலும் நோக்கினான்! அவளும் நோக்கினாள்.

பொ :—நினைத்தற்கும் அரிய பேரழகினையுடைய பிராட்டி, இத் தன்மையளாய் நின்றபொழுது, ஒருவர்கண்ணினையோடு மற்றொரு வர் கண்ணினை கவர்ந்துபற்றிக்கொண்டு ஒன்றையொன்று அனு பவிக்கும்படியும், இருவர் உணர்வுகளும் (தத்தம் இடங்களில்) நிலைத்திராமல் ஒன்றி நிற்கும்படியும், இராமபிரானும் (பிராட்டி யைப்) பார்த்தான் ; பிராட்டியும் (இராமனைப்) பார்க்கலானாள்.

கு :—ஆடவரும் மகளிரும் ஒருவரை யொருவர் பொதுநோக்கா கப் பார்த்தல் உலகியல்பு. இங்கே நிகழ்ந்த நோக்கம், அதிவிரை வில் அவ்விருவர் கண்ணிணைகளும் ஒன்றையொன்று கவ்வுதலும், உணர்வொன்றுதலும் புரிந்துவிட்டமையால் இஃது உணர்ச்சி யொத்த காதல் நோக்கமாம் என்க. 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச் சொற்கள் - என்ன பயனு மில' (குறள் - 1100) என்பர் முன்னோர். கன்னிமாடத்தும்பரில் களிபேடோடு அன்னமாடும் முன்துறைக்கண் நின்றவளாதலால், பெருமானும் பிராட்டியும் ஒருவரையொருவர் பார்த்தற்கு மிக எளிதாயிற் றென்க. அண்ணலும் நோக்கினான் என்று முதலில் இராம பிரான் நோக்கியதைக் கூறினார் ; 'சதகோடி மின் சேவிக்க மின் னரசென்னும்படி நின்றவள்' பிராட்டி என்று முற்கவியிற் கூறினராதலின், அவளது திருமேனியின் பேரொளி பெருமான் திருமுகத்தில் தாக்கி வீசியதனால், இவ்வாறு நேர்ந்ததாம், 'ஆயவள், மின்னின் மின்னிய மேனி கண்டானெனச் சொன்ன அண்ணலுக் குற்றது சொல்லுவாம்' (82) என்று பின்வரும் கவிக் கூற்றாலும் இக்கருத்து வலியுறுதல் காண்க. இருவர் கண்ணிணை களும் கௌவியுண்டதனாலும் உணர்வு ஒன்றியதாலும் விளைந்த நிகழ்ச்சிகளை மேல்வரும் பாடல்களில் கூறுகின்றார். (35)

### இருவரும் மிக்க காதல் கொள்ளல் 599-602

**599.** நோக்கிய நோக்கெனு நுதிகொள் வேலிணை
ஆக்கிய மதுகையான் றோளி னாழ்ந்தன
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்
தாக்கணங் கனையவ டனத்திற் றைத்தவே.

நோக்கிய நோக்கு எனும் நுதி கொள் வேல் இணை,
ஆக்கிய மதுகையான் தோளின் ஆழ்ந்தன,
வீக்கிய கனை கழல் வீரன் செங்கணும்,
தாக்கு அணங்கு அனையவள் தனத்தில் தைத்தவே.

பொ :—(அவ்வாறு) நோக்கிய (பிராட்டியின்) பார்வையாகிய கூரிய வேல் இணைகள், ஆக்கம்பெற்ற வன்மையுடைய இராம பிரானது தோள்களிலே ஆழ்ந்து பதியலாயின; ஒலிக்கும் வீரக் கழல் கட்டிய வீரனான இராமனது செங்கண்களும், மோகினித் தேவதையை ஒத்த பிராட்டியின் கொங்கைகளிலே அழுந்திப் பாய்ந்தன.

கு :—மேல் - 'கொல்லும் வேலும்......வெல்லும் வெல்லும்' என்று பிராட்டியின் திருக்கண்கள் சிறப்பிக்கப்பட்டதற்கேற்ப 'நோக்கெனும் நுதிகொள்வேலிணை' எனப்பட்டது. மகளிர்க்குத் தனம்போல ஆடவர்க்குத் தோளிணை, வேட்கை விளைப்பதிற் சிறந்த உறுப்பாம்; தாக்கணங்கு – காமநெறியால் உயிர்கொள்ளும் தெய்வம் (குறள் 918 உரை); மோகினித் தெய்வம் என்பர். மதுகை - வலிமை. (36)

**600.** பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்
தொருவரை யொருவர்த முள்ள மீர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையும்
இருவரு மாறிப்புக் கிதய மெய்தினர்.

பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து,
ஒருவரை ஒருவர் தம் உள்ளம் ஈர்த்தலால்,
வரி சிலை அண்ணலும் வாள் கண் நங்கையும்
இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்தினர்.

பொ :—பருகுவதுபோல விழுங்கி நின்ற அவர்களின் பார்வையான பாசத்தாற் கட்டப்பெற்று ஒருவரை மற்றவர் மனம் இழுத்து நின்றதனால், கட்டமைந்த வில்லாளனான இராமபிரானும் வாள்போலும் கண்ணுடைய சீதாபிராட்டியும் ஒருவர் மனத்துள் ஒருவர் மாறிப் புகுந்து அடைந்தார்கள்.

கு :—இதயம் மாறிப்புக்கு எய்தினர் என இயையும். ஓர் ஆன்மாவுக்கு மனம் ஒன்றேயாயினும், இங்கு இருவர் மனங்களும் மாறிப்புக்கன என்றதனால் அவரவர் மனங்களிரண்டும் ஒன்றே என உணர்த்தியவாறும். "என் நெஞ்சினை...பதுமாபதி...தன்பால் வைத்துத் தானுந் தன்னுடைத், திண்பானெஞ்சினைத் திரித லொன்றின்றி, என்னுழை நிறீஇ', என்றார் பெருங்கதையினும் (3, 8, 92-97). "நாட்டமிரண்டும் அறிவுடம் படுத்தற்குக், கூட்டியுரைக்குங் குறிப்புரையாகும்" (தொல் 66) என்றதனால், உணர்ச்சியொத்தன என்றபடி. (37)

**601.** மருங்கிலா நங்கையும் வசையி லையனும்
ஒருங்கிய விரண்டுடற் குயிரொன் ருயினர்
கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினுற் பேசல் வேண்டுமோ.

மருங்கு இலா நங்கையும், வசை இல் ஐயனும்,
ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினர்,
கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினல், பேசல் வேண்டுமோ.

பொ :—இடையுறுப்புத் தோன்ருத சீதையும் பழிப்புரையற்ற இராமனும், ஒன்ருகும்படி இரண்டு உடம்புகளுக்கு ஒருயிரே என்னும்படி ஆனர்கள். கருங்கடலில் ஆதிசேடசயனத்தே (முன்பு) கலந்திருந்த கூட்டம் நீங்கிப் பிரிந்து சென்றவர்கள், மீண்டும் ஓரிடத்தே கூடினல் (அவர்கட்குள் நிகழும்) காதலைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ ?

கு :—மேல் இரு மனங்களும் ஒன்ருயின என்ருர் ; அவ்வாருயின், மேற்கூறியபடி அவ்விருவர் ஆன்மாவும் "காகத்திருகண்ணிற் கொன்றேமணி கலந்தாங்கு' ஒன்றே என்றும், அதற்கு மூலகாரணம் இன்னதென்றும் இக்கவியில் முன்னிரண்டடிகளில் கூறுதல் காணப்படும்.

இனிக் கன்னிமாடத்தில் வாழும் இளம் பெண்ணெருத்தி, இன்னன் இனையான் என்று அறியப்படாமல் தெருவிற் சென்ற ஆண்மகனெருவனைக் கண்டு காமுற்று உள்ளம் தன் வசமிழந்தாளெனின், அது மானுட நெறிக்கு எங்ஙனம் அடுக்கும்? என்ற ஆசங்கையைப் பின்னிரண்டடிகளிற் பரிகரிக்கின்ருர். தெய்வம் இடைநின்று கூட்ட அவ்விருவரும் உள்ளம் புணர்ந்தனர் என்று மக்களியல்புக் கேற்ப உலகோர் சொல்லக்கூடுமாயினும், முன்பு ஒற்றுமைப்பட்டிருந்த தெய்வங்களே தம்முட்கூடிய கூட்டம் இஃதாதலால், இவ் வுள்ளப்புணர்ச்சி உலகியல் முறையில் நிகழ்ந்ததன்றென்க. திருமால் பள்ளிகொண்டருளும் இடம் பாற்கடலாதலாலும், தேவர்கள் வேண்டுகோளின்படி இராமனைப் அவதரித்ததற்கு மூலத்தானம் அப்பாற்கடலே யாதலாலும், அக்கடற் பள்ளியில் இணைபிரியாதிருந்த திருமாமகளே இக்கன்னிமாடத்து வாழும் பிராட்டி யாதலாலும், சீதாராமரிருவரும் நெடுங்காலம் பிரிய நேர்ந்த நிலையில் அவ்விருவரிடையேயும் இப்போது நிகழ்ந்த காதற் பெருக்கு அளவிட முடியாதது என்பது கருத்து.

பரம்பொருளான திருமாலின் அவதாரமே இராமபிரான் என்பதனைத் தம் வேள்வியிறுதியில் 'புவன - மாக்கி மற்றவை யனைத்தையும் அணிவயிற் றடக்கிக் காக்கு நீ ஒரு வேள்வி காத்தனை' என்று மாமுனிவரான விசுவாமித்திரரே கூறியவாற்றால் அறிக.

'மருங்கிலா நங்கை' என்றவிடத்து இன்மை நுண்மைப்பொருளது. மருங்கில்லாத சீதையென்று பழிப்பது போலக் கூறினும், 'வசையில் ஐயனும்' எனத் தலைவனுக்கும் ஒன்று இல்லாமை கூறியதினின்று அம்மருங்கின் சிறப்பே கூறியபடியாம். கருங்கடல் - பெரிய கடல்; திருப்பாற்கடல்; கருமை - பெருமை (திவா). கரிய கடலெனின் நீலமணி நிறத்தவனுய்ப் பள்ளி கொண்டருளும் திருமாலின் திருமேனிச் சாயையால், அப்பாற்கடலின் நிறம் மாறியதென்க. நீலமணி, பாலைத் தன்னிறமாக்கவல்லதென்பர்; 'காசில் திருமணி, நிறங்கிளர்ந்து தன் நீர்மை கெட்டாங்கு' என்றார் பிறரும் (சீவக. 1325) (38)

### நின்றவர் நடத்தல்

**602.** அந்தமி னோக்கிமை யணைகி லாமையாற்
பைந்தொடி யோவியப் பாவை போன்றனள்
சிந்தையு நிறையுமெய்ந் நலனும் பின்செல
மைந்தனு முனியொடு மறையப் போயினன்.

**அந்தம் இல் நோக்கு இமை அணைகிலாமையால்,**
**பைந்தொடி, ஓவியப் பாவை போன்றனள்,**
**சிந்தையும் நிறையும் மெய் நலனும் பின் செல,**
**மைந்தனும் முனியொடு மறையப் போயினன்.**

பொ :—எல்லையற்ற கண் இமைத்தலைப் பெருமையால் (இராமபிரானைக் கண் இமையாது பார்த்துக்கொண்டேயிருத்தலால்) பைந்தொடியாளான பிராட்டி சித்திரப் பதுமைபோல (அசைவற்று) நின்றாள். அவளது சிந்தையும் மனவுறுதியும் உடலழகும் தன்பின்னே தொடரும்படி, இராமபிரானும் விசுவாமித்திரமுனியோடு கண்மறையச் சென்றான்.

கு :—பிரிவின் உண்டான காதலையால், நினைவு வேறுபடுதல், நிறையழிதல், உடலிளைப்பு, செயலறவு என்ற அவத்தைகள் பிராட்டியிடம் தோன்றலாயின என்பது கருத்து. 'சிந்தையும் நிறையும் மெய்ந்நலனும் பின்செல' என்பது, 'என்நலனும் என்

நிறைவும் என் சிந்தையும் என் வளையும் கொண்டு' என்னும் (திரு நெடுந்தாண்டகம் - 25) அருளிச் செயலை அடியொற்றி எழுந்தது. (39)

## காதல் விஞ்சிய சீதாபிராட்டியின் நிலை 603-607

603. பிறையெனு நுதலவள் பெண்மை யென்படும்
நறைகம ழலங்கலா னயன கோசரம்
மறைதலு மனமெனு மத்த யானையின்
நிறையெனு மங்குச நிமிர்ந்து போயதே.

பிறை எனும் நுதலவள் பெண்மை என்படும்?
நறை கமழ் அலங்கலான், நயன கோசரம்
மறைதலும், மனம் எனும் மத்த யானையின்
நிறை எனும் அங்குசம், நிமிர்ந்து போயதே.

பொ :—நன்மணங்கமழும் மாலையணிந்த இராமபிரான், கட்புலனுக்குப் புலப்படாவகை மறைந்த அளவில் (பிராட்டியது) மனம் என்ற மதம்பிடித்த யானையின் நிறை என்ற அங்குசம் நிமிர்ந்துபோயிற்று. ஆகவே, பிறைபோன்ற நெற்றியுடைய அவ்வது பெண்மைக் குணங்கள் வேறு என்ன நிலைமையை அடையக்கூடும்?

கு :—சிந்தை, நிறை, மெய்ந்நலன்களாகிய பெண்மைக் குணங்கள் யாவும் சிதைந்தொழிந்தன என்றபடி. பிராட்டியின் உள்ளம் முன்னறிந்திராத இராமனோடு ஒன்றிக் கலந்த நிலையில், தன் இயற்கைக் குணமான நிறையென்னும் அங்குசத்தை இட்டு, தன் மனமென்ற மத்த யானையை அடக்கியொடுக்கத் தன்னாலான அரும்பாடுபட்டனளென்பதும், அந்நிறையங்குசத்தைக் கைவிடுதலின்றியே அவள் கொண்ட அப் பெருமுயற்சியைச் சிறிதும் பொருட்படுத்தாமல், கைக்கொண்ட நிறைத்தோட்டி சிதையிடமேயாக, அத்தோட்டியின் பிடிப்பு விலகும்படி அதன் கொக்கியை நிமிரச்செய்துவிட்டு, அவள் மனமாகிய மத்தயானை இராமன்பால் ஓடிவிட்டதென்பதும், ஒரு பெண்மணிக்கு இதனிலும் தற்காப்பாகச் செய்துகொள்ளக்கூடிய முறை வேறில்லை யாதலின் பிராட்டியின் நிறையில் யாதொரு பழுதும் நேர்ந்தில தென்பதும் கருத்து.

'எழில்மருப் பெழில்வேழ மிகுதரு கடாத்தால்
தொழின் மாறித் தலைவைத்த தோட்டிகை நிமிர்ந்தாங்கு'
(கலித்—138)

'துடக்குவரை நில்லாது தோட்டி நிமிர்ந்து
மதக்களி றிரண்டுடன் மண்டியா அங்கு,

(பெருங்கதை 1, 32, 37-38)

எனத் தோட்டி நிமிர்த்துவிட்டு மதயானை செல்லுதலை நிறை யழிதற்கு முன்னோர் உவமைப்படுத்திக் கூறிப்போதலும் இங்கு ஒப்பிடத்தகும். (40)

**604.** மாலுற வருதலு மனமு மெய்யுந்தன்
நூலுறு மருங்குல்போ னுடங்கு வாணெடுங்
காலுறு கண்வழிப் புகுந்த காதனோய்
பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே.

மால் உற வருதலும், மனமும் மெய்யும் தன்
நூல் உறு மருங்குல்போல் நுடங்குவாள், நெடும்
கால் உறு கண் வழிப் புகுந்த காதல் நோய்,
பால் உறு பிரை எனப், பரந்தது எங்குமே.

பொ:—காம்மயல் மிகுதியாகத் தோன்றுதலும் மனமும் உட லும் நூலிழையை ஒத்த தன் நுண்ணிய இடைபோலத் தளர் கின்ற சீதாதேவியின் கருநிறம் கொண்ட நீண்ட கண்களின்மூலம் உட்புகுந்த காதல்நோயானது, பாலிற் சேர்ந்த பிரைத்துளிபோல உடம்பு முழுதும் பரவியது.

கு:—'உடல் சிந்தை வசம்' (கோலங்காண் – 33) ஆதலால் மனம் நுடங்க மெய்யும் நுடங்கிற்றென்க; நுடங்கல் - நுண்ணி தாதல், மெலிதல்; காதல் நோயால் உடல் நூல்போல ஒடுங்க லாயிற்று என்றபடி. காலுறு கண் - கருமணி; பாவை என்பர். கால் - கருநிறம்; 'கால்தோய் மேனிக் கண்டகர்' எனல் காண்க.

காதல் புகுதற்குக் கண்ணின் கருமணியே வழியாதலின் 'காலுறு கண்வழிப் புகுந்தகாதல்' என்றார். பிரை - உறைமோர். பாலினுள் சேர்ந்த சிற்றளவினதான பிரை, பால் முழுதையும் திரித்து மாற்றுவதுபோல, சிற்றுறுப்பான கண்களின் வழிப் புகுந்த காமநோய் உடலத்தைத் திரித்து மாற்றியதென்க. "குடப் பாற் சில்லுறைபோலப் படைக்குநோயெல்லாந் தானாயினனே." (புறநா-276) (41)

**605.** நோமுறு நோய்நிலை நுவல கிற்றிலள்
ஊமரின் மனத்திடை யுன்னி விம்முவாள்
காமனு மொருசரங் கருத்தி லெய்தனன்
வேமெரி யதனிடை விறகிட் டென்னவே.

நோம் உறு நோய் நிலை நுவலகிற்றிலள்,
ஊமரின் மனத்திடை உன்னி விம்முவாள்;
காமனும் ஒரு சரம் கருத்தில் எய்தனன்,
வேம் எரி அதன் இடை விறகு இட்டென்னவே;

பொ:—(பிராட்டி காமநோயால்) வருந்துவாள்; தானுற்ற அந்நோயின் நிலையை எவருடனும் சொல்லமாட்டாதவளாய் ஊமைகள்போல மனத்துள்ளே நினைந்து தேம்புவாள்; (அப் போது) காமதேவனும், எரியும் நெருப்பில் விறகை இட்டாற் போலத் தன் பாணங்களுள் தலைமையானதை அவளது சிந்தையில் எய்யலானான்.

கு:—தன் ஐங்கணைகளுள் நினைப்பை மிகுவிப்பதும் முதற் கணையுமான தாமரைமலரைக் காமதேவன் எய்தனனென்பார், 'ஒரு சரங் கருத்தி னெய்தனன்' என்றார். தாமரையம்பு நினைப்பை மிகுவிப்பதாம். 'நினைக்கும் அரவிந்தம்' (இரத்தினச் சுருக்கம்) என்பர். (42)

**606.** நிழலிடு குண்டல மதனி னெய்விடா
அழலிடா மிளிர்ந்திடு மயில்கொள் கண்ணினாள்
சுழலிடு கூந்தலுந் துகிலுஞ் சோர்தரத்
தழலிடு வல்லியே போலச் சாம்பினாள்.

நிழல் இடு குண்டலம் அதனில் நெய் விடா
அழல் இடா மிளிர்ந்திடும் அயில் கொள் கண்ணினாள்,
சுழல் இடு கூந்தலும் துகிலும் சோர்தரத்
தழல் இடு வல்லியே போலச் சாம்பினாள்.

பொ:—ஒளிவீசும் காதணியான குண்டலம்வரை சென்று, நெய்தடவப் பெறாமலும், நெருப்பிலிட்டுக் காய்ச்சப்பெறாமலும் விளங்கும் வேல்போலும் விழிகளுடைய பிராட்டி சுடைகுழன்ற தன் கூந்தலும் உடையும் நெகிழும்படி, தீயிடைப் பெய்த பூங் கொடிபோல் வாடலானாள்

கு :—'அயில்கொள்' - கொள் உவமவுருபு. நினைப்புமிகுதியால் உடற்சோர்வுற்று வருந்தினள் என்றபடி. (43)

607. தழங்கிய கலைகளு நிறையுஞ் சங்கமும்
மழுங்கிய வுள்ளமு மறிவு மாமையும்
இழந்தவ ளிமையவர் கடைய யாவையும்
வழங்கிய கடலென வறிய ளாயினள்.

தழங்கிய கலைகளும் நிறையும் சங்கமும்
மழுங்கிய உள்ளமும் அறிவும் மாமையும்
இழந்தவள், இமையவர் கடைய, யாவையும்
வழங்கிய கடல் என, வறியள் ஆயினள்.

பொ :—ஒலிக்கும் மேகலையணியையும், நிறையையும், வளையல்களையும், தெளிவற்ற மனத்தையும், அறிவையும், நிறவிசேடத்தையும் (அக் காதல் நோயினுல்) இழந்துநின்ற பிராட்டி, தேவர்கள் கடைந்தபொழுது (தன்னிடத்திலிருந்த சிறந்த பொருள்கள்) எல்லாவற்றையும் கொடுத்துவிட்ட கடல்போல (சீரிய பொருள்களில் ஒன்றும் தன்னிடம் இல்லாது) வறுமைநிலையடைந்தாள்.

கு :—மேகலையணி எண்கோவையுடைமை பற்றியும், உள்ளாடை, மேலாடை எனப் பலவாதல் பற்றியும் - கலைகள் என்ருர். இமையவர் - தேவர்; இமையில் விசேடமுடையர் என்றேனும் இமயமலையில் வாழ்பவ ரென்றேனும் பொருள் கூறுவர். (44)

### சேடியர், பிராட்டியை அழைத்துச் செல்லுதல்

608. கலங்குழைந் துகநெடு நாணுங் கண்ணற
நலங்குழை தரநகின் முகத்தி னேவுண்டு
மலங்குழை யெனவுயிர் வருந்திச் சோர்தரப்
பொலங்குழை மயிலைக்கொண் டரிதிற்போயினர்.

கலம்குழைந்து உக, நெடும் நாணும் கண் அற,
நலம் குழைதர, நகில் முகத்தின் ஏவுண்டு,
மலங்கு உழை என, உயிர் வருந்திச் சோர்தரப்,
பொலம் குழை மயிலைக் கொண்டு அரிதின் போயினர்.

பொ :—அணிகள் நெகிழ்ந்து விழவும், மிக்க நாணம் ஒழியவும், அழகு மாறவும், முலைமுகத்தில் காமபாணத்தால் தாக்குண்டு

(அம்பாலடிபட்ட) மான் போல உயிர்வருந்தி வாடிநிற்க, சேடியர் (அவற்றைக் கண்ணுற்று) பொற்குழைகளையும் மயிலின் சாயலினையுமுடைய சானகியைச் சிரமப்பட்டு அழைத்துச் சென்றார்கள்.

கு :—'நகில் நலம் குழைதர, முகத்தின் ஏ உண்டு மலங்கு உழை என'. எனப் பிரித்து, தனங்கள் அழகுகெடவும், முகத்தில் (வேடன்) அம்பால் அடிபட்டுக் கலங்கும் மான்போலவும் என்றும் பொருள் கூறலாம். (45)

## சேடியர் சீதாபிராட்டியைச் சீதமலரமளிச் சேர்த்தல்

609. காதொடுங் குழைபொரு கயற்க ணங்கைதன்
பாதமுங் கரங்களு மனைய பல்லவம்
தாதொடுங் குழையொடு மடுத்த தண்பனிச்
சீதநுண் டுளிமல ரமளிச் சேர்த்தினர்.

காதொடும் குழை பொரு கயல் கண் நங்கைதன்
பாதமும் கரங்களும் அனைய பல்லவம்
தாதொடும் குழையொடும் அடுத்த தண் பனிச்
சீத நுண் துளி மலர் அமளிச் சேர்த்தினர்.

பொ :—காதுடன் அதன் அணியான குண்டலங்களையும் தாக்குவதும், கயல்மீன்போற் பிறழ்வதுமான கண்களுடைய பிராட்டியின், பாதங்களையும் கரங்களையும் ஒத்த இளந்தளிர்களைக்கொண்டதும், பூந்தாது இலைகளுடன் பொருந்தியதும், மிகக் குளிர்ச்சியுள்ள பனிநீர்த்துளிகள் சேர்ந்ததுமான பூஞ்சேக்கையில், (சானகியைச் சேடியர்கள்) கொண்டுபோய்ச் சேர்த்தார்கள்.

கு :—தண்பனிச் சீதநுண்டுளி - தண் சீதப் பனி நுண் துளி என மாற்றுக. (46)

## அமளி நண்ணிய ஆரணங்கின் நிலை 610-613

610. நாளரு நறுமல ரமளி நண்ணினள்
பூளைவீ புரைபனிப் புயற்குத் தேம்பிய
தாளதா மரைமலர் தழைந்த பொய்கையும்
வாளரா நுங்கிய மதியும் போலவே.

நாள் அரு நறு மலர் அமளி நண்ணினுள்,
பூளை வீ புரை பனிப் புயற்குத் தேம்பிய
தாள தாமரை மலர் ததைந்த பொய்கையும்
வாள் அரா நுங்கிய மதியும் போலவே.

பொ :—பூளைப் பூவை ஒத்த மெல்லிய நுண்ணிய பனிமழைக்கு வாடிய தாள்களைக் கொண்ட தாமரைப் பொய்கையையும் கொடிய பாம்பால் விழுங்கப்பட்ட சந்திரனையும் போல, அன்றலர்ந்த நறுமலர்கள் பரப்பிய பள்ளியினிடமாகப் பிராட்டியும் சேர்ந்தாள்.

கு :—'நல்லதோர் தாமரைப் பொய்கை நாண்மலர்மேற் பனிசோர, அல்லியுந் தாது முதிர்ந்திட்டு அழகழிந்தா லொத்ததாலோ' என்ற பெரியாழ்வார் பாசுரத்தால் (3-9-1) தாமரைப் பொய்கை பனிசோர்வதனுல் வாடி அழகழிதல் அறியப்படும். (47)

611. மலைமிசைத் தடத்துகு மழைக்க ணுலிபோல்
முலைமுகட் டுதிர்ந்திடு நெடுங்கண் முத்தினம்
சிலைநுதற் கடையுறை செறித்த வேற்கணுள்
உலைமுகப் புகைநிமி ருயிர்ப்பின் மாய்ந்தவே.

மலை மிசைத் தடத்து உகு மழைக்கண் ஆலிபோல்,
முலை முகட்டு உதிர்ந்திடும் நெடுங் கண் முத்து இனம்,
சிலை நுதல் கடை உறை செறித்த வேல் கணுள்
உலை முகப் புகை நிமிர் உயிர்ப்பின் மாய்ந்தவே.

பொ :—வில்லையொத்த நெற்றியின் ஓரமான உறையில் செருகிய வேலாயுதம்போலும் கண்களுள்ள பிராட்டி, மலையின்மேலிடத்துப் பொழியும் மேகத்தின் பனித்திரள்போல முலைமுகட்டில் சிந்தின, பெருங்கண்களினின்று பெருகும் முத்தினங்கள், (கொல்லன்) உலைக்களத்தில் எழும் புகைபோல் வெளிப்படும் நெடுமூச்சால் வறண்டு, மறைந்துபோயின.

கு :—சிலை நுதல் – வில்லைப்போன்ற நெற்றி. 'தனுவேனுந் திருநுதலி' (கார்காலப். 67) என்பர். ஆலி – பெரும்பனித்துளி. வேற்கணுளின் முத்தினம் என்க. (48)

**612.** கம்பமில் கொடுமனக் கான வேடன்கை
அம்பொடு சோர்வதோர் மயிலு மன்னவள்
வெம்புறு மனத்தனல் வெதுப்ப மென்மலர்க்
கொம்பென வமளியிற் குழைந்து சாய்ந்தனள்.

கம்பம் இல் கொடு மனக் கான வேடன் கை
அம்பொடு சோர்வது ஓர் மயிலும் அன்னவள்,
வெம்பு உறு மனத்து அனல் வெதுப்ப, மெல் மலர்க்
கொம்பு என அமளியில் குழைந்து சாய்ந்தனள்.

பொ :—கலக்கமில்லாத வன்மனமுடைய காட்டு வேடன் தன் கையால் எய்த அம்பினால், சோர்ந்து விழுவதோர் மயிற்பறவையும் போன்ற பிராட்டி, வெப்பமுற்ற தன் மனத்து உண்டான காமாக்கினி எரிப்பதனால், (அனல்பட்ட அளவில் வாடும்) பூங்கொம்பு போல அம் மலர்ப்பள்ளியில் வாடிச் சாய்ந்தாள்.

கு :—மேல், 'தழலிடு வல்லியே போலச் சாம்பினாள்' (43) என்றபடி, தழலில் வாடிய மென்மலர்க்கொம்பு என்க. அம் பொடு - அம்பால் ஒடு – கருவிப்பொருளது. (49)

**613.** சொரிந்தன நறுமலர் சுறுக்கோண் டேறின
பொரிந்தன கலவைகள் பொறியிற் சிந்தின
எரிந்தன கனல்சுட விழையிற் கோத்தநூல்
பரிந்தன கரிந்தன பல்ல வங்களே.

சொரிந்தன நறுமலர் சுறுக்கொண்டு ஏறின,
பொரிந்தன கலவைகள் பொறியின் சிந்தின,
எரிந்தன கனல் சுட இழையில் கோத்த நூல்
பரிந்தன, கரிந்தன பல்லவங்களே.

பொ :—சொரிந்து பரப்பிய மணமலர்கள் தீய்ந்து அவளுடலில் தைத்தன; பூசப்பட்ட கலவைச் சந்தனம் பொரிந்து தீப்பொறி போலச் சிந்தின; எரியும் காமக் கடுங்கனல் சுடுதலால் அணியிற் கோக்கப்பட்ட நூல்கள் அற்று நீங்கின; (சயனத்திற் பரப்பப் பட்ட) தளிர்கள் கரிந்துபோயின.

கு :—'எரிந்த வெங்கனல் சுட' என்பது மத்திமதீபம், சுறுக் கொள்ளுதல் - தீந்து சுருளுதல்; 'மாலை வண்டொடுஞ் சுறுக் கொண்டேற' என்பர் (அட்ச குமார. 1). (50)

### சீதாபிராட்டி நிலைகண்ட செவிலியர் முதலியோர் செயல்

**614.** தாதியர் செவிலியர் தாயர் தவ்வையர்
மாதுய ருழந்துழந் தழுங்கி மாழ்கினர்
யாதுகொ லிதுவென வெண்ண றேற்றலர்
போதுட னயினிநீர் சுழற்றிப் போற்றினர்.

தாதியர் செவிலியர் தாயர் தவ்வையர்
மாதுயர் உழந்து உழந்து அழுங்கி மாழ்கினர்,
'யாதுகொல் இது?' என எண்ணல் தேற்றலர்,
போது உடன் அயினி நீர் சுழற்றிப் போற்றினர்.

பொ :—பிராட்டியின் பணிப்பெண்களும், செவிலியர்களும், தாய்மார்களும், தமக்கைமுறையினரும் (பிராட்டி உற்ற நோயால்) கடுந்துன்பத்தைப் பெரிதும் அடைந்து பெரிதும் கலங்கினவர்களாகியும், 'இந்நோய்க் காரணம் யாதோ' என ஆலோசித்து அறியமாட்டாதவர்களாகியும், மலர்களோடு கூடிய ஆலத்தி நீரைச் சுழற்றிக் கண்ணூறு கழித்து வாழ்த்தினர்.

கு :—அயினி-செஞ்சோறு; அதனோடு கூடிய நீராதலால் 'அயினி நீர்' எனப்பட்டது; இது கண்ணூறு அச்சம் முதலியவற்றால் உண்டாம் கேடுகளைக் களைவது. ஊட்டுந் தாய், கைத்தாய் என வளர்ப்பவர் பலராதலின் தாயரெனப் பன்மையாற் கூறினர்; அத்தாய்மாரின் மக்களாய்த் தம்மின் மூத்தவரானவர்களைத் தவ்வையர் என்பர் நச்சினார்க்கினியர் (சீவக-184). தேற்றலர்—தேறலர்; தன்வினைப்பொருளது. (51)

### சீதாபிராட்டியின் மனநோய்

**615.** அருகினின் றசைதரு மால வட்டக்கால்
எரியினை மிகுத்திட விழையு மாலையும்
கரிகுவ தீகுவ கனல்வ காட்டலால்
உருகுபொற் பாவையு மொத்துத் தோன்றினள்.

அருகில் நின்று அசைதரும் ஆலவட்டக் கால்,
எரியினை மிகுத்திட, இழையும் மாலையும்
கரிகுவ, தீகுவ, கனல்வ காட்டலால்,
உருகு பொன் பாவையும் ஒத்துத் தோன்றினள்.

பொ :—பக்கத்தினின்று அசைக்கும் ஆலவட்டக்காற்றானது, (காமத்) தீயை வளர்க்க, (பிராட்டி அணிந்த) அணிகளும்பூமாலைகளும், கரிந்தும் தீந்தும் எரிந்தும் போனமையால் உருகும் பொற்பாவையைப் போலவும் காணப்பட்டாள்.

கு :—ஆலவட்டம்-பெருவிசிறி; கரிதல் - நிறங்கருகுதல், தீதல்; கருகி வேதல். (52)

காதல் நோயால் பிராட்டி புலம்பல் 616–622

**616**. அல்லினை வகுத்ததோ ரலங்கற் காடெனும்
வல்லெழு வல்லவேன் மரக தப்பெருங்
கல்லெனு மிருபுயங் கமலங் கண்ணெனும்
வில்லொடு மிழிந்ததோர் மேக மென்னுமால்.

அல்லினை வகுத்தது ஓர் அலங்கல் காடு எனும்,
வல் எழு, அல்லவேல் மரகதப் பெருங்
கல் எனும் இருபுயம், கமலம் கண் எனும்,
வில் ஒடும் இழிந்தது ஓர் மேகம் என்னுமால்.

பொ :—இருளைக் கொண்டு வகுத்தமைக்கப்பட்ட பூமாலைகள் உள்ளதோர் காடு (அவனது மயிர் முடி) என்பாள்; (அவனுடைய இருபுயங்களும்) வலிய தூண்களாம், அல்லவேல் மரகத மயமான பெருமலைகளே என்பாள்: திருக்கண்கள் செந்தாமரை மலர்கள் என்பாள்; (அவனது திருமேனி) இந்திரவில்லுடன் விண்ணின்று இழிந்த தொரு மேகம் என்பாள் பிராட்டி. (53)

**617**. நெருக்கியுட் புகுந்தரு நிறையும் பெண்மையும்
உருக்கியென் னுயிரொடு முண்டு போனவன்
பொருப்புறழ் தோள்புணர் புண்ணி யத்தது
கருப்புவில் லன்றவன் காம னல்லனே.

நெருக்கி, உள் புகுந்து, அரு நிறையும் பெண்மையும்
உருக்கி, என் உயிர் ஒடும் உண்டு, போனவன்,
பொருப்பு உறழ் தோள் புணர் புண்ணியத்தது,
கருப்பு வில் அன்று; அவன் காமன் அல்லனே.

பொ:—மனத்துள்ளே நெருக்கிப் புகுந்து, அழித்தற்கரிய என் மன உறுதியையும் பெண்மைக் குணங்களையும் இளகுவித்து, அவற்றை உயிருடன் கவர்ந்து சென்ற புருடோத்தமனது, மலை போலும் தோளில் சேரும் பாக்கியம் பெற்றது, கரும்பு வில் அன்று; (அதனால்) அவன் மன்மதனல்லன்.

கு:—நெருக்கி உட்புகுதல் - வலாற்காரமாகப் புகுதல். 'தோள்புணர் புண்ணியத்தது' என்றதனால், 'அத்தோளைப் புணர்தற்கு நான் பாக்கியஞ் செய்திலனே' என்று இரங்கினமை தோற்றும். (54)

**618.** பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்
எண்வழி யுணர்வுநா னெங்குங் காண்கிலேன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வனே கொலாம்.

பெண்வழி நலனொடும், பிறந்த நாணொடும்,
எண் வழி உணர்வும் நான் எங்கும் காண்கிலேன்,
மண் வழி நடந்து, அடி வருந்தப் போனவன்,
கண்வழி நுழையும் ஓர் கள்வனே கொல் ஆம்.

பொ ;—பெண்களுக்கு உரிய நற்குணங்களையும், உடன் பிறந்த நாணத்தையும், பகுத்தறிவினையும், (அவ்விளங்குமரன் நடந்து சென்றபின்) எங்கும் (தேடியும்) நான் காண்கின்றேனில்லை. அதனால், தன் திருவடிகள் வருந்தும்படி தரையிடமாக நடந்து சென்ற அவன் கண்களின்வழியே மனத்துள் செல்லவல்லானொரு கள்வன்போலும்.

கு;—பெண்பாற் குரிய நற்குணங்களுள் நாணும் ஒன்றாயினும் 'உயிரினுஞ் சிறந்தன்று நாணே' (தொல்) என்பராதலின், 'பிறந்த நாணொடும்' என வேறு பிரித்தார். 'கண்வழி நுழையுமோர் கள்வன்' ஒரு விசித்திரக் கள்ளன் என்றபடி. 'கட்குத்திக் கள்வன்' (கலித். முல்லை 8) என்பது போல. எண்வழி யுணர்வு-மனத்திடத்துள்ள அறிவு என்றுமாம். (55)

**619.** இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியும்
சந்திர வதனமுந் தாழ்ந்த கைகளும்
சுந்தர மணிவரைத் தோளு மேயல
முந்தியென் னுயிரையம் முறுவ லுண்டதே,

இந்திரநீலம் ஒத்து இருண்ட குஞ்சியும்,
சந்திர வதனமும், தாழ்ந்த கைகளும்,
சுந்தர மணி வரைத் தோளுமே அல,
முந்தி என் உயிரை அம் முறுவல் உண்டதே.

பொ:—இந்திர நீலம் என்ற மணிக்கு ஒப்பாகக் கறுத்த மயிர் முடியும், பூரண சந்திரன்போலும் திருமுகமும் (முழங்கால்) வரை தொங்கும் திருக்கைகளும், அழகிய நீல மணிமலைகள் போன்ற திருத்தோள்களும் அல்ல; அந்தப் புன்முறுவல் தான் முன் கூறி யவை யெல்லாவற்றுக்கும் முற்பட்டு என் உயிரைக் கவர்ந்தது.

கு:—குஞ்சி முதலியன என் உயிரைக் கவர்ந்தனவாயினும், முற்படக் கவர்ந்தது அவனது புன்முறுவலே என்று அம்முறுவல் சிறப்பிக்கப்பட்டதென்க. முறுவல் என்றது - நோக்கும், எதிர் நோக்கும் சிறு பொழுதில் நிகழ்ந்ததனு லுண்டான மகிழ்ச்சியின் குறிப்பு. இந்திர நீலம்—சிறந்த சாதி நீலமணி. (56)

620. படர்ந்தொளி பரந்துயிர் பருகு மாகமும்
தடந்தரு தாமரைத் தாளு மேயல
கடந்தரு மாமதக் களிநல் யானைபோல்
நடந்தது கிடந்ததென் னுள்ள நண்ணியே.

படர்ந்து ஒளி பரந்து உயிர் பருகும் ஆகமும்,
தடம் தரு தாமரைத் தாளுமே அல,
கடம் தரு மா மதக் களி நல் யானை போல்
நடந்தது, கிடந்தது என் உள்ளம் நண்ணியே.

பொ :—அகன்று ஒளி பரந்து காண்போருயிரைப் பருகக் கூடிய அவன் திருமார்பும் செந்தாமரைபோலும் திருவடிகளும் என்னும் இவையே அல்ல; கன்னத்தினின்று வழியும் பெருமத நீரையும் களிப்பையு முடைய சீரிய யானைபோல் அவ்விளமகன் நடந்து சென்ற நடையழகு என்மனத் திடைப் பொருந்தி (எப்பொழுதும்) நீங்காமற் பதிந்தது.

கு;—தடம்தரு தாமரை என்பதற்குப் பொய்கையிற் பூத்த தாமரை என்றும், கடந்தரு என்பதற்குக் கோபம் உண்டாகும் என்றும் பொருள்கொள்ளினுமாம் (சிலப். காவற்பெண்டு. 29).

பெருமானது திருமார்பழகு தாமரைத்தாள்களின் அழகுகள் அன்றியும், அவனது நடையழகு தன் உள்ளத்தை மிகவும் பிணித்தது என்றபடி. (57)

**621.** உரைசெயிற் றேவர்த
முலகு ளானலன்
விரைசெறி தாமரை
யிமைக்கு மெய்ம்மையான்
வரிசிலைத் தடக்கையன்
மார்பி னூலினன்
அரசிளங் குமரனே
யாகல் வேண்டுமால்.

**உரைசெயின் தேவர்தம் உலகு உளான் அலன்,**
**விரை செறி தாமரை இமைக்கும் மெய்ம்மையான்,**
**வரி சிலைத் தடக்கையன், மார்பின் நூலினன்,**
**அரசு இளங்குமரனே ஆகல் வேண்டும் ஆல்.**

பொ :—(அவ்வாண்மகனை இன்னான் என்று சொல்லப்புக்கால்) தேவர் உலகத்தில் உள்ளான் ஒரு விண்ணவன் அல்லன்; மண மிக்க செந்தாமரைபோலும் திருக்கண்கள் இமைக்குந்தன்மை யுடையான்; கட்டமைந்த வில்லேந்தும் பெருந்தகையுடையவனும் திருமார்பில் பூணூல் தரித்தவனுமாகிய அவன் இளமைப்பருவமுடையானொரு அரசிளங்குமரனாகவே இருத்தல் வேண்டும்.

கு:—தேவனோ என்று ஐயுற்ற பிராட்டி, கண்ணிமைத்தலால் அவ்வையம் நீங்கி, கைவில்லும், மார்பினூலும் உடைமையால் ‘அரச குமாரனே அவன்’ என்று, தெளிந்தாளென்க. (58)

**622.** பிறந்துடை நலநிறை பிணித்த வெந்திரம்
கறங்குபு திரியுமென் கன்னி மாமதில்
எறிந்தவக் குமரனை யின்னுங் கண்ணிற்கண்
டறிந்துயி ரிழக்கவு மாகு மேகொலாம்.

பிறந்து உடை நலம் நிறை பிணித்த எந்திரம்
கறங்குபு திரியும் என் கன்னி மா மதில்,
எறிந்த அக் குமரனை, இன்னும் கண்ணில் கண்டு,
அறிந்து, உயிர் இழக்கவும் ஆகுமே கொலாம்.

பொ :—உடன் பிறந்து என் உடைமையானதும் நன்மை யானது மான மன உறுதியெனும் கட்டமைந்த இயந்திர மானது, சுழன்ற வண்ணம் திரிந்து (காவல் புரியும்) என் கன்னி மையாகிய பெருமதிலை அழித்துச் சென்ற அவ்விளங்குமரனை மற்று மொருகால் கண்களாற் கண்டு, அவனை (இன்னுன் இனை யான் என) அறிந்து (அதன் பின்பு) என் உயிரை இழத்த லாயினும் கூடுமோ?

கு :—'கன்னி மாமதில்' என்ருர், நிறைக்காவலால் 'ஆடவர் உள்ளிடம் புகா அருங்கடி வரைப்பு' ஆதலின். 'நிறைக் கதவ நீக்கிக், காவலென் நெஞ்சக் மென்னுங் கன்னிமாடம் புகுந்து, நோவவென் னுள்ளம் யாத்தாய்' (சீவக-1714) என்றும், 'நிறை என்னும் நாணுத்தாழ் வீழ்த்த கதவு' (குறள் 1251) என்றும் உள்ள முன்னோர்கூற்றுக்கள் ஒப்பிடத்தகும்; என்னை இவ்வ ண்ணஞ்செய்த கோமகனை மற்று மொருகால் காணவும், கண்டு அவ்னை அணைதலில்லாது போயினும், இன்னுன் இனையான் என அறியவும் கூடுமோ; நானோ காம வேதனைப்பட்டு உயிர் துறப்பது உறுதி; ஆனுல் அவனைக் கண்களால் ஒரு காற் கண்டு களித்தும் இன்னுன் என்பதறிந்தும் என் உயிர் போவதாயின் அஃது எனது பெரும் பேருகும் என்பது கருத்து. முன் தேவ குமாரனல்லன், மக்களுள் அரசிளங்குமரனே என்று தெளிந்த பிராட்டி, அவ் விளங்குமரன் யாவனோ என்பதனைக் கண்டறிய விரும்பின ளாதலின், 'கண்ணிற் கண்டு அறிந்து' என்ருள் என்க. (59)

பிராட்டி பின்னும் வேட்கை மிகுதியாற் பிதற்றல்

**623.** என்றிவை யினையன விளம்பு மெல்லியல்
நின்றன ளிவணெனு நீங்கி னுனெனும்
கன்றிய மனத்துறு காம வேட்கையால்
ஒன்றல பலநினைந் துருகுங் காலையே.

என்று இவை இனையன விளம்பும் எல்லையில்,
'நின்றனன் இவண்' எனும், 'நீங்கினான்' எனும்,
கன்றிய மனத்து உறு காம வேட்கையால்
ஒன்று அல, பல நினைந்து உருகும் காலையே.

பொ :—இவ்வாறாக இவற்றையும் இவைபோன்ற பலவற்றையும் பிராட்டி தன்னுட் கூறுகின்ற பொழுதில், (உருவெளிப்பாட்டில் அந்த இளங் கோமகன் தன் எதிரில் தோன்றினானாக) 'நான் முன்பு கண்ட மைந்தன் இதோ இங்கு நிற்கின்றான்' என்பாள்; (உடனே அவ்வுருவம் மறைதலால்) 'அவன் நீங்கிவிட்டானே'! என்பாள் ; இவ்வாறு வெதும்பிய மனத்தில், மிக்குத் தோன்றிய காமவேட்கையால் ஒன்றல்லாத பலவற்றை எண்ணியெண்ணி ஏங்கி, மனம் இளகிநின்றபொழுதில்.

கு :—இது குளகம் ; 'கதிரவன் கடலுள் மூழ்கினான்' என்பதனுடன் இயையும். (60)

### சூரியன் அத்தமித்தல்

**624.** அன்னமென் னடையவட் கமைந்த காமத்தீத்
தன்னையுஞ் சுடுவது தரிக்கி லானென
நன்னெடுங் கரங்களை நடுக்கி யோடிப்போய்
முன்னைவெங் கதிரவன் கடலின் மூழ்கினான்.

அன்ன மெல் நடையவட்கு அமைந்த காமத் தீத்
தன்னையும் சுடுவது தரிக்கிலான் என,
நல் நெடும் கரங்களை நடுக்கி ஓடிப்போய்,
முன்னை வெங் கதிரவன் கடலில் மூழ்கினான்.

பொ :—அன்னம்போலும் மெல்லிய நடையையுடைய பிராட்டிக்கு உண்டான காமாக்கினி, (மேலே எழுந்து இயற்கைவெப்பங் கொண்ட) தன்னையுஞ் சுடுவதைப் பொறுக்கமாட்டாதவன்போல் பழமையான வெப்பத்தைக் கொண்ட சூரியன், தன் நீண்ட கரங்கள் நடுங்கியவனாய் விரைந்து சென்று மேற்குக் கடலில் மூழ்கினான்.

கு :—இயற்கை வெப்பமுள்ள கதிரவனையும் சுடவல்லதாயிற்று பிராட்டியின் காமத்தீயின் கடுமை என்றவாறு. (61)

## அந்திமாலை வருணனை 625—626

**625.** விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்
எரிநிறச் செக்கரு மிருளுங் காட்டலால்
அரியவட் கனறரு மந்தி மாலையாங்
கருநிறச் செம்மயிர்க் காலன் றோன்றினான்.

விரி மலர்த் தென்றல் ஆம் வீசு பாசமும்,
எரி நிறச் செக்கரும் இருளும் காட்டலால்,
அரியவட்கு, அனல் தரும் அந்திமாலை ஆம்
கரு நிறச் செம்மயிர்க் காலன், தோன்றினான்.

பொ :—விரிந்த மலர் மணத்துடன் வரும் தென்றலாகிய வீசிப் பிணிக்கும் பாசாயுதமும், தீ நிறமுடைய செவ்வானமாகிய செம் பட்டைமயிரும், இருள் மேனியும் தன்னிடத்தே தோன்றக் காட்டலால், அரும்பெறற் பிராட்டிக்குக் காமக் கனலை வளர்க் கின்ற அந்திக் காலம் என்னும் கருநிறமும் செம்மயிரும் உடைய இயமன் தோன்றலானான்.

கு :—அவ் விராக்காலத்தே அந்திநேரம் இயமனது உருவத் துடன் பயங்கரமாகத் தோன்றியது என்றபடி. செக்கரும் இரு ளும் என்ற முறையே வையாது கருநிறச் செம்மயிர் என்றது எதிர் நிரனிறை. (62)

**626.** மீதறை பறவையாம் பறையுங் கீழ்விளி
ஓதமென் சிலம்பொடு முதிரச் செக்கரும்
பாதக விருள்செய்கஞ் சுகமும் பற்றலாற்
சாதக ரென்னவுந் தகைத்தம் மாலையே.

மீது அறை பறவை ஆம் பறையும், கீழ் விளி
ஓதம் என் சிலம்பொடும், உதிரச் செக்கரும்
பாதக இருள் செய் கஞ்சுகமும் பற்றலால்,
சாதகர் என்னவும் தகைத்து அம் மாலையே.

பொ :—மேலிடமாக ஒலிக்கும் பறவைகளாகிய வார்ச்சியத்தை யும், கீழிடமாக ஒலிக்கும் கடலாகிய காற்சிலம்பையும், செவ்வான மாகிய இரத்தக் குறிகளையும், துன்பம் விளைக்கும் இருளாகிய

கருஞ்சட்டையையும் கொண்டிருப்பதனால், சாதகர் என்று கூறு தற்கும் தகுதியுடையது அம் மாலைக் காலம்.

கு :—பறை - தமருக முதலாய வாச்சியம்; 'மொகுமொகென் றொலிமிகுந் தமருகங்கள் பலவே' (கலிங்-பரணி-கோயில்-18) என்பர். சாதகர் என்பார் கடுநோன்பும் சூளுறவும் கொண்ட தேவி உபாசகர்; 'தமருகங்கள் தருகின்ற சதியின்கண் வருவார், அமரியின்புறு மனுதிவரு சாதகர்களே' (கலிங் – 115) எனல் காண்க. தலைப்பலியிடுதல்போன்ற கொடிய நோன்புகளை நிறை வேற்றும் இவர்கள் (கலிங்-பரணி-110-112) மந்திர சாதகர் எனப்படுவர் (தக்கயாகப் பரணி–91-94). பறைகளும், காற் சிலம்புகளும், இரத்தம் படிந்த குறிகளும், கருஞ்சட்டையும் உடையவர் இன்னோர் (தக்கயாகப்பரணி-91-94). இவரது கருஞ் சட்டை அக்குமணிவடம் நோக்கப்பட்டதாகும் (தக்க - 93- உரை). இனி 'சாதகம் என்னவும்' என்று பாடங்கொண்டு ஒரு வகைப் பூதகணத்தார் என்று வலிந்து பொருள்கூறுவாரும் உளர். (63)

### பிராட்டி வருந்திக் கூறல்

**627.** கயங்க ளென்னுங் கனறோய்ந்து
        கடிநாண் மலரின் விடம்பூசி
இயங்கு தென்றன் மன்மதவே
        ளெய்த புண்ணி னிடைநுழைய
உயங்கு முணர்வு நன்னலமு
        முருகிச் சோர்வா ளுயிருண்ண
வயங்கு மாலை வானோக்கி
        யிதுவோ கூற்றின் வடிவென்றாள்.

கயங்கள் என்னும் கனல் தோய்ந்து,
        கடி நாள் மலரின் விடம் பூசி,
இயங்கு தென்றல், மன்மத வேள்
        எய்த புண்ணின் இடை நுழைய,
உயங்கும் உணர்வும் நல் நலமும்
        உருகிச் சோர்வாள், உயிர் உண்ண
வயங்கும் மாலை வான் நோக்கி,
        'இதுவோ கூற்றின் வடிவு' என்றாள்.

போ :—பொய்கைகள் என்னும் திப்பிழம்பிற் படிந்து, அன்ற லர்ந்த மணமலரினின்று விடத்தை எடுத்துப் பூசிக்கொண்டு, உலாவுகின்ற தென்றற்காற்று, மன்மதன் (தன் அம்புகளை) எய்ததனுலுண்டான புண்களின் துளைகளினுள்ளே (தைத்து) உட்செல்ல, (அதனுல்) குலையும் அறிவும், பெண்மைக் குணங் களும் அழிந்து தளர்பவளாகிய சானகியானவள், தன் உயிரைக் கவரும்பொருட்டு வந்து தோற்றமளிக்கும் மாலைப்பொழுதோடு கூடிய வானத்தை நோக்கி, இயமனது, (பயங்கரமான) வடிவம் இதுதானே என்று எண்ணி அஞ்சினள்.

கு :—'விடம் பூசி' என்றதனுல், அவ் விடம், மலரின் மகரந்தம் என்றும், 'தென்றல்...புண்ணினிடை நுழைய' என்றதனுல் - அத்தென்றலாகிய வேற்படை என்றும் கொள்க; தென்றலாகிய வேல் காமபாணம் தைத்த புண்ணினிடை நுழைந்த தென்க. 'மருமத்தி னெறிவேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும்புழையிற் கனல்நுழைந்தாலென' (கையடை-11) என மேலும் இவ்வாறு கூறியது ஒப்பிடத்தகும். (64)

### அந்திமாலை வந்தமை

**628.** கடலோ மழையோ முழுநீலக்
கல்லோ காயா நறும்போதோ
படர்பூங் குவளை நறுமலரோ
நீலோற் பலமோ பானலோ
இடர்சேர் மடவா ருயிருண்ப
தியாதோ வென்று தளர்வாண்முன்
அடல்சே ரசுரர் நிறம்போலு
மந்தி மாலை வந்ததுவே.

'கடலோ மழையோ முழு நீலக்
கல்லோ காயா நறும் போதோ
படர் பூங்குவளை நறு மலரோ
நீல உற்பலமோ பானலோ,
இடர் சேர் மடவார் உயிர் உண்பது
யாதோ ?' என்று தளர்வாள் முன்
அடல் சேர் அசுரர் நிறம் போலும்
அந்தி மாலை வந்ததுவே.

பொ :—'கருங்கடலோ, காளமேகமோ, முழுதும் நீலநிறமான மலையோ, காயா மரத்தின் மணமலரோ, படரும் அழகுள்ள கருங் குவளையின் நறும்பூவோ, நீலோற்பலமலரோ, கருநெய்தற் பூவோ துயர்பலவும் வந்தடைதற்கு இடமான இளம்பெண்களின் உயிரைக் கவர்வது மேற்கூறியவற்றுள் எதுதானோ? என்று தளர்வாளாகிய சீதாதேவியின் எதிரிலே வலிமை தங்கிய அசுரரின் நிறத்தை ஒத்த அந்திமாலைக் காலமும் வந்துசேர்ந்தது.

கு :—குவளை நீலோற்பலம் பானல் மூன்றும் ஒரு சாதியனவாய்ச் சிறு வேறுபாடுடையனவாகும். பெண்பிறப்பு பலவகையிடர்க்கும் இடமானமைபற்றிப் 'பிறவாதொழிகை நன்றே ஒரு காலமும் பெண் பிறப்பே' (தஞ்சைவா. 310) என்று வருந்திக் கூறுவராதலின், 'இடர் சேர் மடவார்' என்றார். 'காலையந்தியும், மாலையந்தியும்' (புறநா. 34) எனப்படுதலால், 'அந்திமாலை' எனப் பட்டது. இப்பாட்டுக் கவிக்கூற்று. (65)

### மாலைப்பொழுது கண்டிரங்கல்

**629.** மைவா னிறத்து மீனெயிற்று
வாடை யுயிர்ப்பின் வளர்செக்கர்ப்
பைவா யந்திப் படவரவே
யென்னு வளைத்துப் பகைத்தியால்
எய்வா னொருவன் கையோயா
னுயிரு மொன்றே யினியில்லை
உய்வா னுறவிப் பழிபூண
வுன்னோ டெனக்குப் பகையுண்டோ.

மை வான் நிறத்து மீன் எயிற்று
வாடை உயிர்ப்பின், வளர் செக்கர்ப்
பைவாய் அந்திப் பட அரவே!
என் நா வளைத்துப் பகைத்தியால்;
எய்வான் ஒருவன் கை ஓயான்;
உயிரும் ஒன்றே இனி இல்லை;
உய்வான் உற இப் பழி பூண
உன்னோடு எனக்குப் பகை உண்டோ.

பொ :—வானிடத்தே பரவிய இருளாகிய கருநிறத்தையும், நட்சத்திரங்களாகிய விடப்பற்களையும், வாடைக்காற்றாகிய பெரு

மூச்சையும், விரிந்த செவ்வானமாகிய விடப்பைகொண்ட வாயையும் உடைய அந்திப் பொழுதென்னும் படமுடைய நாகமே; எக்காரணத்தால் நின் நாவை வளைத்தவண்ணம் என்னுடன் பகைத்து வருத்துகிறாய்? (என்மீது தன்) அம்புகளை எய்து நிற்கும் காமனென்பான் (அவ்வெய்தற்றொழிலில்) கை சிறிதேனும் ஓய்பவனில்லை; (எனக்குள்ளதோ) ஓருயிர்தான்; மற்றும் கவர என்னிடம் வேறு உயிரில்லை; (மன்மத பாதையினின்று) தப்பிப் பிழைக்க நான் முயன்றுவருங் காலத்து, இப்பெண்பழியை ஏற்பதற்கு என்னோடு உனக்கு என்ன பகைமை உள்ளதோ?

கு :—முன்னிரண்டடிகளும் உருவகவணி. பின்பனிக்கால நிகழ்ச்சியாய் வடகாற்றும் அடித்தலின் 'வாடையுயிர்ப்பின்' என்று பிராட்டி வருந்திக் கூறினாள் என்க. (66)

### இருளைநோக்கிப் புலம்பல்

**630.** ஆல முலகிற் பரந்ததுவோ
வாழி கிளர்ந்த தோவவர்தம்
நீல நிறத்தை யெல்லோரு
நினைக்க வதுவாய் நிரம்பியதோ
கால னிறத்தை யஞ்சனத்திற்
கலந்து குழைத்துக் காயத்தின்
மேலு நிலத்து மெழுகியதோ
விளக்கு மிருளாய் விளைந்ததுவே.

ஆலம் உலகில் பரந்ததுவோ;
ஆழி கிளர்ந்ததோ, அவர் தம்
நீல நிறத்தை எல்லோரும்
நினைக்க அதுவாய் நிரம்பியதோ,
காலன் நிறத்தை அஞ்சனத்தில்
கலந்து குழைத்துக் காயத்தின்
மேலும் நிலத்தும் மெழுகியதோ,
விளக்கும் இருள் ஆய் விளைந்ததுவே.

பொ :—(துன்பம்) விளைத்தற்குரிய இருள்மயமாகியது, ஆலகால விடம் உலகெங்கும் பரவியது தானோ? கருங்கடல் மேலே பொங்கி எழுந்ததோ? அப் புருடோத்தமனது நீலநிறத்தை என்

போன்றாரெல்லாம் நினைத்தலால் அந்நிறமேயாகி வியாபித்ததோ? இயமனது கருநிறத்தை மையோடு கலந்து குழைத்து (அதனை) ஆகாயத்தின் மேலும் பூமியிடத்தும் பூசியதுதானோ?

கு:—காயம்-ஆகாயம்; முதற்குறை. 'வறிது நிலைஇய காயமும்' (புறநா. 20) என்ப. ஆகாயம் முதலிய கருநிறப்பொருள்களுள், ஒரு சில அச்சத்தையும், வேறு சில காம நோயினையும் விளைவிக்குமாறு இருளாயினபோலும் என்று தற்குறிப்பேற்றமாகக் கூறினள் என்க. (67)

### அன்றிற்பறவையை நோக்கி இரங்கியது

631. வெளிநின் றவரோ போய்மறைந்தார்
விலக்க வொருவர் தமைக்காணேன்
எளியள் பெண்ணென் றிரங்காதே
யெல்லி யாமத் திருளூடே
ஒளியம் பெய்யு மன்மதனு
ருனக்கிம் மாய முரைத்தாரோ
அளியென் செய்த தீவினையே
யன்றி லாகி வந்தாயோ.

வெளி நின்றவரோ போய் மறைந்தார்,
விலக்க ஒருவர் தமைக் காணேன்,
எளியள் பெண் என்று இரங்காதே,
எல்லி யாமத்து இருள் ஊடே
ஒளி அம்பு எய்யும் மன்மதனர்
உனக்கு இம் மாயம் உரைத்தாரோ,
அளியென் செய்த தீவினையே
அன்றில் ஆகி வந்தாயோ.

பொ:—(ஓ பறவையே)என் கண்முன்சிறிதுநேரம்வெளிப்படத் தோன்றிய தலைமகனாரோ இப்போது மறைந்துசென்றார்; (அவரைப் போகவொட்டாமல்) தடுப்பதற்கு ஒருவரையும் காணப் பெற்றேனில்லை; (கதியற்ற) எளிமையுடையவளான ஒரு பெண் என்று கருதி (சிறிதும்) இரக்கம் கொள்ளாமலே இரவின் இருளிடையே ஒளிந்துநின்று அம்புகளை (என் மீது) எய்கின்ற காம

தேவர், உனக்கு இந்த வஞ்சச் செயலை உபதேசித்தாரோ; (அல்லது) எளியேன் முற்பிறப்பிற் செய்த பாவமே (நீ இப்பிறப்பில்) அன்றில் உருவங்கொண்டு, வருத்த வந்தனையோ.

கு :—சேடியரும் பணிப்பெண்டிரும் அருகிலிருந்தும் அவர்கள் தன் கருத்தின் குறிப்பை அறியாது வேறு வேறு உபாயமுறைகளைக் கையாளுதலால், 'விலக்க ஒருவர்தமைக் காணேன்' என்றுள். யாமம்-ஏழரை நாழிகை; இங்குப் பொழுது என்ற பொருளில் வந்தது. ஒளி அம்பு - ஒளிந்து நின்று எய்யும் அம்பு. அன்றில் இரவிலும் ஆண் பெண்கள் இணைபிரியாமல் காதல் மிக்கொழுகும் பறவைவகை; வடநூலார் கிரௌஞ்சம் என்பர்; 'அன்றிலொருகண் துயின்றொருகண் ணுர்வத்தால்-இன்றுணை மேல் வைத்துறங்கும் என்னுஞ் சொல்' (நளவெண்பா) என்பதனுல் பிரிவாற்ருத அதனிலை அறியப்படும். (68)

### சேடியர் உதவிபுரிதல்

**632.** ஆண்டங் கனையா ளினையநினைந்
தழுங்கு மேல்வை யகல்வானம்
தீண்ட நிமிர்ந்த பெருங்கோயிற்
சீத மணியின் வேதிகைவாய்
நீண்ட சோதி நெய்விளக்கம்
வெய்ய வென்றங் கவைநீக்கித்
தூண்டல் செய்யா மணிவிளக்கின்
சுடரா லிரவைப் பகல்செய்தார்.

ஆண்டு அங்கு அனையாள் இனைய நினைந்து
அழுங்கும் ஏல்வை, அகல் வானம்
தீண்ட நிமிர்ந்த பெருங்கோயில்,
சீத மணியின் வேதிகைவாய்
நீண்ட சோதி நெய் விளக்கம்
வெய்ய என்று, அங்கு அவை நீக்கித்,
தூண்டல் செய்யா மணி விளக்கின்
சுடரால் இரவைப் பகல் செய்தார்.

பொ:—அவ்விடத்தே அப்பிராட்டி இவையும் இவைபோல்வன பலவும் எண்ணிப் பலவாறு வருந்தும்போது, அகன்ற வானுலகத்தையும் தொடும்படி உயர்ந்து பெரிதாயுள்ள கன்னிமாடத்தில்,

குளிர்ந்த(சந்திரகாந்த) மணியால் இழைத்த வேதிகையிலே, மிக்க ஒளிதரும் நெய்விளக்குகள் வெப்பந்தருவன என்று கருதி அங்கிருந்தவற்றை நீக்கிவிட்டுத் தூண்டுதல் செய்யவேண்டாத இரத்தின தீபங்களின் காந்தியால் இராப்பொழுதைப் பகல்போல வெளிச்சமுண்டாகும்படிசெய்தார்கள் (தோழிமார்).

கு :—சீதமணி - சந்திரகாந்தக்கல்: 'ஆனுதே யிருள் பருகு மருமணி' என்பர் (சீவக சிந். 169). (69)

## சந்திரோதயம் 633—634

**633.** பெருந்திண் ணெடுமால் வரைநிறுவிப்
பிணித்த பாம்பின் மணித்தாம்பின்
விரிந்த திவலை பொதிந்தமணி
விசும்பின் மீனின் மேல்விளங்க
அருந்த வமரர் கலக்கியநா
ளமுத நிறைந்த பொற்கலசம்
இருந்த திடைவந் தெழுந்ததென
வெழுந்த தாழி வெண்டிங்கள்.

பெரும் திண் நெடு மால், வரை நிறுவிப்
பிணித்த பாம்பின் மணித்தாம்பின்
விரிந்த திவலை பொதிந்த மணி
விசும்பின் மீனின் மேல் விளங்க
அருந்த அமரர் கலக்கிய நாள்,
அமுதம் நிறைந்த பொன் கலசம்
இருந்தது, இடை வந்து எழுந்தது என
எழுந்தது ஆழி வெண் திங்கள்.

பொ :—மிக்க வலியோனுய் உலகளத்தற்கு நீண்ட திருமால் (மந்தர) மலையை நாட்டி, அதனிற் கட்டிய (வாசுகி என்ற) பாம்பாகிய முறுக்கேறிய கடைகயிற்றால், தேவர்கள் உண்ணும்படி பாற்கடல் கடைந்தகாலத்தே தெறித்துப் பரவிய நீர்த்துளிகளும் செறிந்த இரத்தினங்களும் வானநட்சத்திரங்களினும் மிக்கு விளங்காநிற்க, அக்கடலினிடையே இருந்த அமுதம் நிறைந்த பொற்கலசமானது, மேலெழுந்து தோன்றியதுபோல் வெண்ணிறத்ததான சந்திர மண்டலம் கருங்கடலினின்றும் உதித்தது.

கு :—சந்திரகிரணத்தால் வெண்ணிறமடைதல் பற்றிக் கருங் கடலுக்குப் பாற்கடலும், அமுதகிரணனன சந்திரனுக்கு அமுத கலசமும் ஏற்ற உவமைகளாதல் காண்க. மணித்தாம்பு - முறுக் கின கயிறு ; மணிக்கயிறு என்பது வழக்கு. (70)

**634.** வண்டா யயனுன் மறைபாட
மலர்ந்த தொருதா மரைப்போது
பண்டா லிலையின் மிசைக்கிடந்து
பாரு நீரும் பசித்தான்போல்
உண்டா னுந்திக் கடல்பூத்த
தோதக் கடலுந் தான்வேருேர்
வெண்டா மரையின் மலர்பூத்த
தொத்த தாழி வெண்டிங்கள்.

வண்டாய் அயன் நான்மறை பாட,
மலர்ந்தது ஒரு தாமரைப் போது,
பண்டு ஆலிலையின் மிசைக் கிடந்து
பாரும் நீரும் பசித்தான்போல்
உண்டான் உந்திக் கடல் பூத்தது,
ஓதக் கடலும் தான் வேறு ஓர்
வெண் தாமரையின் மலர் பூத்தது
ஒத்தது, ஆழி வெண் திங்கள்.

பொ:—(பிரளயப் பெருங்கடலில்) ஆலிலையின்மேலே பள்ளி கொண்டு, பசி உடையவன்போல உலகங்களையும் கடல்களையும் உட்கொண்டருளின திருமாலின் நாபியாகிய கடலானது பிரம தேவன் வண்டை யொத்து (மேனின்று) நான்கு வேதங்களையும் பாடாநிற்க, மலர்ந்ததாகிய ஒரு செந்தாமரைமலரை யுண்டாக்கி யது; அதனை நோக்கி அலைகளையுடைய கருங்கடல் தானும் வேருெரு வெண்டாமரைமலரைப் பூத்ததை ஒத்திருந்தது, கடலி னின்று தோன்றிய சந்திரமண்டலம்.

கு :—பகவானுக்கு வேதம்கூறும் எண்குணங்களுள் 'பசி யின்மை (விஜிகத்ஸை) யும் ஒன்ருதலின் 'பாரும் நீரும் பசித்தான் போல்' என்ருர். "உறுபசியொன் றின்றியே உலகடைய உண் டனையே" என்ருர் இளங்கோவடிகளும் (சிலப் ஆய்ச்சியர் குரவை). திருமாலின் கடல்நீர்ச்சுழிபோன்ற உந்தியினின்று தோன்றியதை 'உந்திக்கடலின்' என்று உபசரித்தார். 'உண்ணும்

சோறு பாராகவும் பருகு நீர் கடலாகவும் வண்டின் ரீங்காரம் அயனது வேதப்பாடலாகவும் கொள்க. பண்டு உந்திக் கடல் பூத்தது ஒரு தாமரைப்போது; (இப்போது) ஓதக் கடலும் வெண் டாமரையின்மலர் பூத்தது என்க. (71)

### நிலாக்கற்றை பரவுதல் 635—637

**635.** புள்ளிக் குறியிட் டெனவொண்மீன்
பூத்தவானம் பொலி கங்குல்
நள்ளிற் செறிந்த விருட்பிழம்பை
நக்கி நிமிர்ந்த நிலாக்கற்றை
கிள்ளைக் கிளவிக் கென்னுங்கொல்
கீழ்பாற் றிசையின் மிசைவைத்த
வெள்ளிக் கும்பத் திளங்கமுகின்
பாளை போன்று விரிந்துளதால்.

புள்ளிக் குறி இட்டென ஒண் மீன்
பூத்த வானம் பொலி கங்குல்
நள்ளில் செறிந்த இருள் பிழம்பை
நக்கி நிமிர்ந்த நிலாக்கற்றை,
கிள்ளைக் கிளவிக்கு என் ஆம் கொல்!
கீழ்பால் திசையின் மிசை வைத்த
வெள்ளிக் கும்பத்து இளம் கமுகின்
பாளை போன்று விரிந்துளது ஆல்.

பொ:—புள்ளியாகிய குறிகளை இட்டுவைத்தாற்போலத் திகழும் நட்சத்திரங்கள், விளங்குகின்ற இராக்காலத்து நடுச்சாமத்தில் திரண்ட இருளின் பிழம்பை உண்டு விளங்கும் நிலவின் தொகுதியானது, கிழக்குத்திசையில், மேலிடமாக வைக்கப்பட்ட வெள்ளிமயமான பூரணகும்பத்தில் வைத்துள்ள இளங்கமுகின் பாளையை ஒத்துப் பரவியது ; இது கிளிமொழியாளான பிராட்டிக்கு எத்தகையதாமோ ?

கு :—ஒன்றும் அறியமுடியாத இருட் செறிவாதலின், அடையாளமறியப் புள்ளிக்குறிகள் இட்டது போன்ற தெனப்பட்டது. பூரண கும்பம் வைத்தலும் விரிந்த பாளைகளை அதனில் அமைத்தலும் மங்களகரமானவை. 'என்னுங்கொல்'—துன்பம் விளைப்பனவேயாகும் என்றபடி. (72)

**636.** வண்ண மாலைக் கைபரப்பி
யுலகை வளைந்த விருளெல்லாம்
உண்ண வெண்ணித் தண்மதியத்
துதயத் தெழுந்த நிலாக்கற்றை
விண்ணு மண்ணுந் திசையனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன்
புகழ்போ லெங்கும் பரந்துளதால்.

வண்ண மாலைக் கை பரப்பி,
உலகை வளைந்த இருள் எல்லாம்
உண்ண எண்ணித், தண் மதியத்து
உதயத்து எழுந்த நிலாக் கற்றை,
விண்ணும் மண்ணும் திசை அனைத்தும்
விழுங்கிக் கொண்ட, விரி நல் நீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன் தன்
புகழ் போல், எங்கும் பரந்து உளது ஆல்.

பொ :—நிறந்தங்கிய மாலைப்பொழுதான தன் கையை விரித்து நீட்டி, உலகினைச்சூழ்ந்துள்ள இருள் முழுவதையும் உண்ணுதற்கு எண்ணி, குளிர்ந்த சந்திரனது உதய காலத்து வெளிப்பட்ட நிலாத்தொகுதியானது, விண்ணுலகமும் மண்ணுலகமும் எல்லாத் திசைகளும் (ஆகிய உலக முழுமையும்) தன்னதாக்கி விழுங்கிய - பரவிச்சிறந்த நீர்வளமுள்ள கழனிகள் வாய்ந்த திருவெண்ணெய்நல்லூரில் வாழும் சடையவள்ளலின் புகழ்போல எங்கணும் பரவியது.

கு :—சடைய வள்ளல் - சோணாட்டு வெண்ணெய்நல்லூர்த் தலைவர். அவ்வள்ளலது வியாபித்த பெரும்புகழ்போல நிலாக் கற்றை வியாபித்தது என்று, தம்மை அபிமானித்ததுபற்றியும், இராமாவதாரத்தைத் தாம் பாடுதற்குக் காரணமாயிருந்ததுபற்றியும் தம் நன்றியதலைக் காட்டி அத்தலைவரை இக்கவியரசர் புகழலாயினர் என்க. கீர்த்தியை வெண்ணிறத்ததாகக் கூறுதல் கவிமரபாதலின் நிலாக்கற்றைக்குப் புகழ் உவமையாயிற்று, 'விழுங்கிக் கொண்ட...சடையன்றன் புகழ் என இயைக்க. (73)

**637.** நீத்த மதனின் முளைத்தெழுந்த
நெடுவெண் டிங்க ளெனுந்தச்சன்
மீத்தன் கரங்க ளவைபரப்பி
மிகுவெண் ணிலவாம் வெண்சுதையால்
காத்த கண்ணன் மணியுந்திக்
கமல நாளத் திடைப்பண்டு
பூத்த வண்டம் பழையதெனப்
புதுக்கு வானும் போன்றுளதால்.

நீத்தம் அதனில் முளைத்து எழுந்த
நெடு வெண் திங்கள் எனும் தச்சன்,
மீத் தன் கரங்கள் அவை பரப்பி,
மிகுவெண் நிலவு ஆம் வெண் சுதையால்,
காத்த கண்ணன் மணி உந்திக்
கமல நாளத்திடைப் பண்டு
பூத்த அண்டம் பழையது எனப்,
புதுக்குவானும் போன்று உளது ஆல்.

பொ :—கடலின் நீர்ப்பெருக்கிலே உதித்தெழுந்த மிக்க வெண்ணிறமுள்ள சந்திரன் என்ற தச்சன், காத்தளிக்கும் திருமாலின் அழகிய உந்தித்தாமரையின் நாளத்தினிடமாக, முன்பு தோன்றின அண்டகோளமாகிய வீடு, இப்போது பழுதாகி விட்டதென்று கருதித் தன் கிரணங்களான கைகளைப் பரப்பி மிக்க வெண்ணிலவான வெண் சாந்தால் அதனைப் புதுப்பிப்பவன்போன்றும் நிலாக்கற்றை பரவியிருந்தது.

கு :—'தச்சன் எடுத்த மாடம்' என்பது வழக்காதலின், விட்டை முழுவெண்சாந்து பூசிப் புதுப்பித்தலும் தச்சன் தொழிலாயிற்று, வெண்சாந்து மங்கல வண்ணமாதலின், அவதார மூர்த்தியின் மங்கல நாளுக்கு முன் அவனிடமிருந்து பூத்த அண்டகோளமாகியவீடு, வெள்ளையடித்துப்புதுப்பிக்கப்பட்டது போலும் என்பது உட்பொருள். சந்திரோதயம் விரகிகளுக்கு வேதனை மிகுவிப்பதாயினும், பின் நிகழப்போகும் மங்கல காரியத்தின் சூசகமாகவும் விளங்குவது என்பதனை இப்பாட்டாலும், கமுகம் பாளையுள்ள பூரணகும்பப் பாடலாலும் (72) கவி குறிப்பிடுகின்றார் என்றே கொள்ளத் தகும். (74)

## தாமரை குவிதலும் ஆம்பல் அலர்தலும்

638. விரைசெய் கமலப் பெரும்போது
விரும்பிப் புகுந்த திருவினெடும்
குரைசெய் வண்டின் குழாமிரியக்
கூம்பிச் சாம்பிக் குவிந்துளதால்
உரைசெய் திகிரி தனையுருட்டி
யொருகோ லோச்சி யுலகாண்ட
அரச னெதுங்கத் தலையெடுத்த
குறும்பு போன்ற தரக்காம்பல்.

விரை செய் கமலப் பெரும் போது
விரும்பிப் புகுந்த திருவினெடும்,
குரை செய் வண்டின் குழாம் இரியக்
கூம்பிச் சாம்பிக் குவிந்துளது ஆல்,
உரை செய் திகிரி தனை உருட்டி
ஒரு கோல் ஓச்சி உலகு ஆண்ட
அரசன் ஒதுங்கத் தலை எடுத்த
குறும்பு போன்றது அரக்கு ஆம்பல்.

பொ :—மணங்கமழும் பெரிய தாமரைமலர், விருப்பத்துடன் தன்பாற் புகுந்த திருமகளுடனே ஒலிக்கும் வண்டுகளின் கூட்டமும் தன்னைவிட்டு நீங்கிப் போம்படி, இதழ் குவிந்து வாடி மூடிக் கொள்வதாயிற்று; செவ்வாம்பற்பூவானது, புகழப்படும் ஆஞ்ஞா சக்கரத்தை எங்குஞ் சுழலச் செய்து, ஒப்பற்ற செங்கோலைச் செலுத்தி, உலக முழுதும் ஆட்சிபுரிந்துவந்த பேரரசன் ஒழிந்த அளவில் தலையெடுத்த குறுநிலமன்னன்போல (தலையெடுத்து) மலர்ந்தது.

கு :—ஒற்றைத்தேராழியை உருட்டி ஒப்பற்ற கிரணத்தை வீசி உலக முழுதும் ஆண்ட சூரியன் மறைந்தது, ஆம்பல் பூக்கள் தலை விரிதற்குக் காரணம் ஆயிற்று என்றவாறு. ''சிரரசாண்டுதன் செங்கோல் சிலநாள் செலீஇக் கழிந்த-பாரர சொத்து மறைந்தது ஞாயிறு'' (திருவிருத்தம்; 80) என்றார் பெரியாரும். (75)

**சந்திரோதயத்தைப் பழித்தல் 639—640**

**639.** நீங்கா மாயை யவர்தமக்கு
நிறமே தோற்றுப் புறமேபோய்
ஏங்காக் கிடக்கு மெறிகடற்கு
மெனக்குங் கொடியை யானையே
ஓங்கா நின்ற விருளாய்வந்
துலகை விழுங்கி மேன்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பி
னிடையே யெழுந்த வெண்ணெருப்பே.

நீங்கா மாயையவர்தமக்கு
நிறமே தோற்றுப் புறமே போய்
ஏங்காக் கிடக்கும் எறிகடற்கும்
எனக்கும் கொடியை ஆனையே,
ஓங்கா நின்ற இருளாய் வந்து
உலகை விழுங்கி, மேன் மேலும்
வீங்கா நின்ற கரு நெருப்பின்
இடையே எழுந்த வெள் நெருப்பே.

பொ :—வளர்கின்ற இருள் என்ற பெயருடன் வந்து உலகமுழுதையும் கவர்ந்து உட்கொண்டு மேன்மேலும் வளர்ச்சியடையும் கரிய நெருப்பினிடையே தோன்றும் வெண்ணிறமுள்ள தீயே! ஒழிதலில்லாத மாயையைச் செய்துவரும் அப்புருடோத்தமனர்க்கு நிறத்தினுல் தோல்வியுற்று உலகின் புறம்பே சென்று ஏங்கிக்கிடக்கும் அலை எறியும் கடற்கும், எனக்கும் நீ கொடுஞ்செயல் புரிவாயாயினையோ.

கு :—மிதிலைமாநகர்க்கு வெகுதூரத்திலுள்ளதனுல் 'புறமே போய் ஏங்காக் கிடக்கும் எறிகடல்' என்ருர். என்பால் மாயையிழைத்து மறைந்தவர்க்கு நிறத்தால் தோற்றமையின், மற்றொருவகையில், என்னைப்போலவே, ஏங்கியும் அலையுண்டும் கிடப்பதாகிய கடல் எனப்பட்டது, ஒன்றில் தோல்வியுற்றவர் வெளியே சென்று தனியிருந்து அழுது இரங்குவர் என்க. (76)

**640.** கொடியை யல்லைநீ
★ யாரையும் கொல்கிலாய்
மடுவி லின்னமு
தத்தொடும் வந்தனை

பிடியின் மென்னடைப்
பெண்ணொடென் றாலெனைச்
சுடுதி யோகடற்
றோன்றிய திங்களே.

கொடியை அல்லை, நீ யாரையும் கொல்கிலாய்,
மடுவில் இன் அமுதத்தொடும் வந்தனை,
பிடியின் மெல் நடைப் பெண்ணொடு, என்றால் எனைச்
சுடுதியோ, கடல் தோன்றிய திங்களே.

பொ :—கடலினின்றும் உதித்த சந்திரனே! நீ இயற்கையில் கொடியவனில்லை; அதனால் எவரையும் கொல்லவல்லவனுமில்லை; (அன்றியும்) மறுவற்ற இனிய அமுதத்துடனும் பிடிபோலும் மென்னடையுடைய திருமகளுடனும் பிறந்தாய் என்றால் என்னைச் சுடுவதும் தகுமோ?

கு :—கடலில் தோன்றித் தட்பமான இயல்புள்ளவனாதலால் கொடியனல்லை; மரணத்தைத் தடுக்கும் அமுதுடன் பிறத்தலால் கொலை புரிதற்கு உரியவனுமில்லை; திருமகளான பெண்ணுடன் பிறத்தலால், பெண்பாலாரிடம் தலையளிசெய்யத்தக்கவன்; இவ்வாறெல்லாமிருப்பவும் என்னை வருத்துவதென்னோ என்றபடி. (77)

## காமவேதனை 641—644

**641.** மீது மொய்த்தெழு வெண்ணில வின்கதிர்
மோது மத்திகை மென்முலை மேற்பட
வோதி மப்பெடை வெங்கன லுற்றெனப்
போது மொய்த்தம ளிப்புரண் டாளரோ.

மீது மொய்த்து எழு வெண் நிலவின் கதிர்
மோது மத்திகை, மென் முலை மேல் பட,
ஓதிமப் பெடை வெம் கனல் உற்றெனப்,
போது மொய்த்து அமளிப், புரண்டாள் அரோ.

பொ :—மேலிடமாகச் செறிந்தெழுந்த வெண்ணிலாவின் கதிர்களாகிய சம்மட்டி, தன் மெல்லிய தனங்கள்மீது படுதலால், பெண்ணன்னமொன்றுகொடியநெருப்பிடைஅகப்பட்டதுபோலத் தாமரைமலர்கள் செறிந்த படுக்கையில் விழுந்து புரண்டாள்.

கு :—சந்திர கிரணத்தைச் சம்மட்டி என்றதனுல் மென்முலை அஃதெறிதற்குரிய பட்டடை என்க. போது – தாமரைமலர்கள்; அவை மொய்த்த அமளி; தீப்பரப்பிய குண்டம்போல்வதாயிற்று. (78)

**642.** நீக்க மின்றிநி மிர்ந்தநி லாக்கதிர்
தாக்க வெந்துத ளர்ந்துச ரிந்தனள்
சேக்கை யாகி யலர்ந்தசெந் தாமரைப்
பூக்கள் பட்டன பூவையும் பட்டனள்.

நீக்கம் இன்றி நிமிர்ந்த நிலாக் கதிர்,
தாக்க வெந்து தளர்ந்து சரிந்தனள்;
சேக்கை ஆகி அலர்ந்த செந்தாமரைப்
பூக்கள் பட்டன, பூவையும் பட்டனள்.

பொ :—நீங்குதலில்லாமல் பரவியுள்ள சந்திரகிரணம் தாக்குதலால் (பிராட்டி) உடல் வெதும்பித் தளர்ந்து கீழே சாய்ந்தாள். (முன்பு அவள்) தங்குமிடமாகி மலர்ந்துநின்ற செந்தாமரை மலர்கள், அவளமிசமான பிராட்டிக்கு இப்போது பள்ளியணையாய், அவளது விரகதாபத்தால் அடைந்த நிலைமைகளை, இனிய பூவை போன்றவளான பிராட்டியும் அடையலானுள்.

கு :—தாமரைப் பூக்கள் பட்டதன்மையாவது - கூம்பிச் சாம்பிப் பொலிவிழந்து வாடி ஒடுங்கிய தென்க. பூவை–நாகணவாய்ப்புள்: மொழியினிமைக்கு உவமை. (79)

**643.** வாச மென்கல வைக்களி வாரிமேல்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்
வீச வீச வெதும்பினள் மென்முலை
ஆசை நோய்க்கு மருந்துமுண் டாங்கொலோ.

வாச மென் கலவைக்களி வாரி மேல்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்,
வீச வீச வெதும்பினள் மென் முலை,
ஆசை நோய்க்கு மருந்தும் உண்டாம் கொலோ!

பொ :—மணமும் மென்மையும் வாய்ந்த கலவைச்சந்தனக் குழம்பை அள்ளிக்கொண்டு தன்னுடலில் (தோழிமார்கள்)

மேன்மேல் பூசுந்தோறும் (விரக தாபத்தில்) அது புலர்ந்ததனுல் தவித்தாள்; (சிவிறி முதலியவற்ருல்) வீசுந்தோறும் வெப்பமடைந் தனள் (பிராட்டி); காதல் நோய்க்கு, தீர்க்கவல்லதோர் மருந்தும் உலகில் உண்டோ.

கு :—வேற்றுப்பொருள்வைப்பணி. ஆசைநோய்க்கு வேறு பரிகாரமில்லாமையை, ''மருந்து பிறிதில்லை யானுற்ற நோய்க்கே'' (நற். 80) 'நீருட், குளிப்பினுங் காமம் சுடுமே குன்றேறி, ஒளிப்பினும் காமம் சுடும்' (நாலடி) என்பவற்ருலும் அறிக. (80)

**644.** தாய ரிற்பரி சேடியர் தாதுகு
வீய ரித்தளிர் மெல்லணை மேனியிற்
காயெ ரிக்கரி யக்கரி யக்கொணர்ந்
தாயி ரத்தி னிரட்டி யடுக்கினர்.

தாயரின் பரி சேடியர், தாது உகு
வீ அரித் தளிர் மெல் அணை, மேனியில்
காய் எரிக் கரியக் கரியக் கொணர்ந்து,
ஆயிரத்தின் இரட்டி அடுக்கினர்.

பொ :—பிராட்டியின் திருமேனியில் எரியும் காமாக்கினியால், மகரந்தப் பொடிகள் சிந்தப்பெற்ற மலர்களைக் கொண்டும் மெல் லிய தளிர்களைக் கொண்டும் அமைக்கப்பட்ட மெல்லிய பள்ளி யணைகள் கருகிக்கொண்டேயிருக்க, தன்னைப்பெற்ற தாய்மாரினும் அன்புகாட்டும் சேடியர்கள் இரண்டாயிரம் படுக்கைகளை ஒன்றன் மேலொன்ருக அடுக்கி அமைத்தார்கள்.

கு :—ஆயிரத்திரட்டி என்பது மிகப்பல என்னும் பொருள்பட நின்றது. (81)

### கவிக்கூற்று

**645.** கன்னி நன்னக ரிற்கமழ் சேக்கையுள்
அன்ன மின்னண மாயின ளாயவள்
மின்னின் மின்னிய மேனிகண் டானெனச்
சொன்ன வண்ணலுக் குற்றது சொல்லுவாம்.

கன்னி நல் நகரில், கமழ் சேக்கையுள்,
அன்னம் இன்னணம் ஆயினள், ஆயவள்
மின்னின் மின்னிய மேனி கண்டான், எனச்
சொன்ன அண்ணலுக்கு உற்றது சொல்லுவாம்.

பொ :—சிறந்த கன்னி மாடத்தில் பூம்பள்ளியணையிலே, அன்னப்புள்ளை ஒத்த பிராட்டி இவ்வாறு விரகதாபம் அடையலானாள்; அத்தகையவளது மின்னலைப் போல மின்னியதால் (அப்பக்கமாக அவள்) திருமேனியை நோக்கினான் என்று மேலே கூறிய இராமபிரானுக்கு உற்றநிலைமைகளை இனிக் கூறத் தொடங்குவோம்.

கு :—இது கவிக்கூற்று. கமழ்சேக்கை என்றதனால் - பூம்பள்ளியணை என்க. பிராட்டியை, மின்னரசென்னும்படிநின்றாள் (31) எனவும் பெருமானை அண்ணலும் நோக்கினான் (35) எனவும் முற் கூறியவற்றைக் கருதி, மின்னின் மின்னிய மேனி கண்டானெனச் சொன்ன அண்ணலுக்கு என்றார். மின்னின் மின்னிய - மின்னைப் போல மின்னியதன் காரணமாக; செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம், இனி மின்னிய என்பதனைப் பெயரெச்சமாகக் கொண்டு மின்னிய மேனியை, மின்னின் (வீசிய ஒளியால்) கண்டான் என இயைத்தும், மின்னலைப்போல மின்னுதலைச் செய்த (மேனி) எனவும் பொருள் கொள்ளினும், மேற்கூறியதே உட் கருத்தாகுமென்க. (82)

### மூவரும் சனகன் எதிர்கொளச்சென்று தங்குதல்

**646.** ஏகி மன்னனைக் கண்டெதிர் கொண்டவன்
ஓகை யோடு மினிதுகொண் டுய்த்திடப்
போக பூமியிற் பொன்னக ரன்னதோர்
மாக மாடத் தனையவர் வைகினர்.

ஏகி மன்னனைக் கண்டு எதிர்கொண்டு, அவன்
ஓகையோடும் இனிது கொண்டு உய்த்திடப்,
போக பூமியில் பொன் நகர் அன்னது ஓர்
மாக மாடத்து, அனையவர் வைகினர்.

பொ :—அவர்கள் (விசுவாமித்திரன் முதலிய மூவரும் அரசன் கோயிலுட்) சென்று, சனகராசனைக் கண்டு. அவன் மகிழ்ச்சியுடன் எதிர்கொண்டு உபசரித்து இனிதாக அழைத்துக்கொண்டு

போய்ப் போக பூமியான அமராவதியில் உள்ள ஆடகமாடம் போலச் சிறந்ததோர் வானளாவிய மாளிகையிற் சேர்ப்பிக்க, அங்கே தங்கலானார்கள்.

கு :—அனையவர் - அவர்கள் (விசுவாமித்திரன் முதலிய மூவரும்). பொன்னகர் - பொன்மயமான மாளிகை; ஆடகமாடம் என்பர். (83)

### சதானந்தமுனிவர் வருதல்

**647.** வைகு மவ்வழி மாதவம் யாவுமோர்
செய்கை கொண்டு நடந்தெனத் தீதறு
மொய்கொள் வீரன் முளரியந் தாளினுன்.
மெய்கொண் மங்கை யருண்முனி மேவினுன்.

வைகும் அவ்வழி, மாதவம் யாவும் ஓர்
செய்கை கொண்டு நடந்தெனத், தீது அறு
மொய் கொள் வீரன் முளரி அம் தாளினுல்
மெய் கொள் மங்கை அருள் முனி மேவினுன்.

பொ :—அவர்கள் தங்கிய அம் மாளிகையிடத்தில் பெருந்தவங்களெல்லாம் சீலமாகிய ஒருருவம் கொண்டு நடந்துவந்ததுபோல ஒப்பற்ற வலிமையுள்ள வீரனுன இராமபிரானது, செந்தாமரை போலும் திருவடி(த் தூளி)யால், பழைய உண்மையுருவமடைந்த அகலியாதேவி பெற்றருளிய, சதானந்தமுனிவன் வந்துசேர்ந்தான்.

கு :—சதானந்தன் – சனககுலத்துக்குப் புரோகிதனுன முனிவன். செய்கை – சீலம்; ஒழுக்கம்; இங்கு ஆகுபெயர்; 'பேரருளாளர் தத்தஞ் செய்கையிற் பிழைப்பதுண்டோ' (யுத்த விபீடண 128) என்புழிப்போல. (84)

### வணங்கிய இராமனை வாழ்த்திச் சதானந்தமுனிவன் கோசிகன்பக்கம் சார்தல்

**648.** வந்தெ திர்ந்த முனிவனை வள்ளலும்
சிந்தை யார வணங்கலுஞ் சென்றெதிர்
அந்த மில்குணத் தானெடி தாசிகள்
தந்து கோசிகன் றன்மருங் கெய்தினுன்.

வந்து எதிர்ந்த முனிவனை, வள்ளலும்
சிந்தை ஆர வணங்கலும், சென்று எதிர்
அந்தம் இல் குணத்தான், நெடிது ஆசிகள்
தந்து, கோசிகன்தன் மருங்கு எய்தினான்.

பொ :—இவ்வாறு வந்து தோன்றிய அம்முனிவனை வள்ளலான இராமபிரானும், மனமகிழ அடிவீழ்ந்து வணங்கியபின், எல்லையற்ற நற்குணங்கள் வாய்ந்த அச் சதானந்தன் ஆசிமொழிகள் மிகுதியுங்கூறி (தன்னை எதிர்கொண்ட) விசுவாமித்திரன் அருகில் அடைந்தான்.

கு :—வள்ளன்மை - அகலிகைக்கு அருளியது போன்ற பெருங்கொடைமை. சென்று எதிர் கோசிகன் என்க. (85)

### சதானந்தன் முகமன் கூறுதல்

**649.** கோத மன்றரு கோமுனி கோசிக
மாத வன்றனை மாமுக நோக்கியிப்
போது நீயிவட் போதவிப் பூதலம்
ஏது செய்த தவமென் றியம்பினான்.

கோதமன் தரு கோ முனி, கோசிக
மாதவன் தனை மா முகம் நோக்கி, 'இப்
போது நீ இவண் போத இப் பூதலம்
ஏது செய்த தவம்' என்று இயம்பினான்.

பொ :—கௌதம முனிவன் பெற்றருளிய முனிவர் தலைவனான சதானந்தன், பெருந்தவத்தனான கௌசிக முனிவனது திருமுகத்தை நோக்கி, இப்போது நீர் இவ்விடம் எழுந்தருளும்படி, இந்த மிதிலை பண்ணிய புண்ணியம் யாதோ என்று உபசார மொழிகளைக் கூறலானான். (86)

### விசுவாமித்திரன் கூறுதல்

**650.** பூந்தண் சேக்கைப் புனிதனை யேபொரு
வேய்ந்த கேண்மைச் சதானந்த னென்றுரை
வாய்ந்த மாதவன் மாமுக நோக்கிநூல்
தோய்ந்த சிந்தைக் கவுசிகன் சொல்லுவான்.

பூந்தண் சேக்கைப் புனிதனையே பொரு
ஏய்ந்த, கேண்மைச் சதானந்தன் என்று உரை
வாய்ந்த மாதவன் மாமுகம் நோக்கி நூல்
தோய்ந்த சிந்தைக் கவுசிகன் சொல்லுவான்.

பொ :—குளிர்ந்த தாமரையாசனத்தையுடைய புனிதனுன பிரமனை ஒத்தவனும், எல்லாரிடத்தும் நட்புடையவனுமான சதானந்தன் என்று புகழ்பெற்ற பெருமுனிவனது திருமுகத்தைப்பார்த்து, கலைகளிலே ஆழ்ந்த மனத்தினனுன விசுவாமித்திரன் ஒரு வார்த்தை சொல்லுவானுயினன்; (அது அடுத்து வருமாறு) (87)

## சதானந்தருக்கு இராமனது பெருமையைக் கௌசிகர் கூறுதல்

**651**. வடித்த மாதவ கேட்டியிவ் வள்ளறுன்
இடித்த வெங்குரற் றுடகை யாக்கையும்
அடுத்தென் வேள்வியு நின்னன்னை சாபமும்
முடித்தென் னெஞ்சத் திடர்முடித் தானென்றுன்.

'வடித்த மாதவ! கேட்டி'; இவ் வள்ளல் தான்,
இடித்த வெம் குரல் தாடகை யாக்கையும்,
அடுத்து என் வேள்வியும், நின் அன்னை சாபமும்
முடித்து, என் நெஞ்சத்து இடர் முடித்தான்' என்றுன்.

பொ :—தெளிந்து செய்யப்பட்ட பெரிய தவமுனிவரே! கேட்பீராக! இந்த வள்ளலான இராமபிரானே, இடிபோன்ற குரலுடைய தாடகையரக்கியின் உடம்பையும் என்யாகத்தையும், நின் தாயான அகலிகையின் சாபத்தையும், ஒன்றன்பின்ஒன்றுக முடித்து, என் நெஞ்சிற் கிடந்த துயரங்களைத் தீர்த்து வைத்தவனுவன் என்றுன்.

கு :—மூவகை முடித்தல்களைச் செய்தவன் இராமன் என்றபடி; அவற்றுள் முதலாவது, கொன்றுமுடித்தது; இரண்டாவது, பூர்த்தி செய்தது; மூன்றுவது, ஒழித்துநீக்கியது என்க. என் நெஞ்சத்து இடராவது—அம்மூவகை முடித்தலும் இதுவரை செய்யப் பெறுமையால் உண்டாய என்துயரங்கள். இவற்றை எளிதிற் செய்தருளியவனுதலால், 'இவ்வள்ளல்' என்றுர். (88)

### சதானந்தர் கோசிகனைப் பாராட்டுதல்

652. என்று கோசிகன் கூறிட வீறிலா
வன்ற போதனன் மாதவ நின்னருள்
இன்று தானுள தேலரி தியாதிந்த
வென்றி வீரர்க் கெனவும் விளம்பிமேல்.

என்று கோசிகன் கூறிட, ஈறு இலா
வன் தபோதனன், 'மாதவ! நின் அருள்
இன்று தான் உளதேல், அரிது யாது இந்த
வென்றி வீரர்க்கு' எனவும் விளம்பி மேல்.

பொ :—என்று விசுவாமித்திரன் சொன்ன அளவில், எல்லை யற்ற கடுந்தவத்தவனான சதானந்தன், 'மாதவனே! நினது கருணை இக்குமரர்களிடம் இப்போது உள்ளதானால் இவ்வெற்றி வீரர் களுக்குச் செய்ய முடியாத அருஞ்செயல் யாதுள்ளது? என்றுகூறி மேலும். (இது குளகச் செய்யுள்.) (89)

### சதானந்தர் இராமபிரானைநோக்கி விசுவாமித்திரர் வரலாறு கூறுதல்

653. எள்ளில் பூவையு மிந்திர நீலமும்
அள்ளல் வேலையு மம்புத சாலமும்
விள்ளும் வீயுடைப் பானலு மேவுமெய்
வள்ள றன்னை மதிமுக நோக்கியே.

எள் இல் பூவையும், இந்திர நீலமும்,
அள்ளல் வேலையும், அம்புத சாலமும்,
விள்ளும் வீ உடைப் பானலும் மேவும் மெய்
வள்ளல் தன்னை, மதி முகம் நோக்கியே.

பொ :—பழிப்பற்ற காயாமலரையும், இந்திரநீலமணியையும், சேறுள்ள கடலையும், மேகத்திரளையும், மலர்ந்த பூக்களைக்கொண்ட நீலோற்பலத்தையும் உவமையாகப் பொருந்திய திருமேனியுடைய வள்ளலான இராமனது சந்திரன்போல் (பொலிவுள்ள) திரு முகத்தைப் பார்த்து. (90)

## விசுவாமித்திரன் வரலாறு 654—700

### அரசாளுகை

**654.** நறும லர்த்தொடை நாயக நானுனக்
கறிவு றுத்துவென் கேளிவ் வருந்தவன்
இறையெ னப்புவிக் கீறில்பல் லாண்டெலாம்
முறையி னிற்புரந் தேயருண் முற்றினன்.

'நறு மலர்த் தொடை நாயக! நான் உனக்கு
அறிவுறுத்துவென், கேள், இவ் அருந்தவன்,
இறை எனப் புவிக்கு, ஈறு இல் பல் ஆண்டு எலாம்
முறையினில் புரந்தே, அருள் முற்றினன்.

போ :—மணமலர்களாலான மாலையணிந்த தலைவனே (இராமபிரானே)! யான் உனக்கு ஒன்று தெரிவிக்கிறேன்; கேட்பாயாக! இந்தஅரிய தவமுனிவன், பூவுலகிற்கு ஓர் அரசனாய், எல்லையில்லாத பல ஆண்டுகள் அளவும், அரசநீதிப்படி பாதுகாத்து உயிர்களிடம் கருணை நிரம்பியிருந்தான்.

கு :—ஆசிரியனது அருமை பெருமைகளைச் சீடன் அறிய வேண்டியவன் என்பது நூலோர்முடிபாதலின், கோசிகனது அத்தகைய வரலாற்றை இராமபிரானுக்கு நிகழ்ந்தவாறு சதானந்தர் கூறலானார் என்க. (91)

### கோசிகன் வசிட்டன் உறைவிடத்தை அடைதல்

**655.** அரசின் வைகி யறனி னமைந்துழி
விரசு கானிடைச் சென்றனன் வேட்டைமேல்
உரைசெய் மாதவத் தோங்கு வசிட்டனும்
பரசு வானவன் பாலணைந் தானரோ.

அரசின் வைகி அறனின் அமைந்துழி,
விரசு கான் இடைச் சென்றனன் வேட்டை மேல்
உரை செய் மாதவத்து ஓங்கு வசிட்டனும்
பரசு வானவன்பால், அணைந்தான் அரோ.

போ :—அரசாட்சியில் மனமூன்றி அறநெறியிலே பொருந்தி ஆண்டுவருங்காலத்து, வேட்டைநிமித்தம் செறிந்த காட்டிடையே சென்று (உலகோர்) புகழும் பெருந்தவத்தனும், தேவ

இருடியுமான வசிட்டமுனிவன் ஆசிரமத்தின்பால் அடைந்தான்.

கு :—வேட்டையாடுதல் அரசர்க்குரியதாயினும், பிராணி வதையாகிய கொடுந்தொழிலாதலால் அதற்குச் சென்றவன், கருணை பொழியும் மாதவன் ஆசிரமத்தை அடையலானன் எனப் பின் நிகழ்ச்சிக்குத் தோற்றுவாய்போலக் குறிப்பிட்டார் என்க. மாதவத்தோங்குவானவன் என்பதனுல் தேவவிருடி என்பது பெற்ரும். (92)

### வசிட்டன் ஆணைப்படி காமதேனு விருந்தளித்தல்

**656.** அருந்ததி கணவன் வேந்தற்
★ கருங்கடன் முறையி னுற்றி
இருந்தரு டருதி யென்ன
விருந்துழி யினிது நிற்கு
விருந்தினி யமைப்பெ னென்னுச்
சுரபியை விளித்து நீயே
சுரந்தரு ளமிர்த மென்ன
வருண்முறை சுரந்த தன்றே.

அருந்ததி கணவன், வேந்தற்கு
அருங்கடன் முறையின் ஆற்றி,
'இருந்து அருள் தருதி' என்ன,
இருந்துழி, 'இனிது நிற்கு
விருந்து இனி அமைப்பென் ' என்னுச்,
சுரபியை விளித்து, ' நீயே
சுரந்தருள் அமிர்தம்' என்ன,
அருள் முறை சுரந்தது அன்று ஏ.

பொ :—அருந்ததி கணவனன வசிட்டமாமுனிவன் கௌசிக ராசனுக்கு அரிய உபசாரக் கடமைகளை முறைதவருமல் செய்து, 'இங்கே தங்கிச் செல்லக் கருணை புரிக' என்று கேட்டுக்கொள்ளக் கௌசிகன் அவ்வாறே ஆங்கு இருந்தபொழுது, 'இனி உனக்கு விருந்திட்டு இனிது உபசரிப்பேன்' என்றுகூறி, (உடனே) காமதேனுவை அழைத்து, 'அமுதம் (போன்ற உணவுமுதலியவற்றை) நீயே (இவற்கு இப்போது) சுரந்தளிப்பாயாக' என்று நியமிக்க, (அத்தெய்வப் பசு) வசிட்டன் நியமனப்படி அப்பொழுதே (எல்லா உணவு முதலிய உபசாரப் பண்டங்களையும்) சுரந்தது.

கு :—திருப்பாற்கடல் கடைந்த காலத்துத் தோன்றிய பொருள்களுள் 'காமதேனு' ஒன்றென்றும், இத்தெய்வப்பசு, தானகவே வசிட்டமுனிவரிடம் வந்ததென்றும், வேண்டுவார்க்கு வேண்டியவற்றைச் சுரந்தளிக்கவல்லது இப்பசுவென்றும் வரலாறு கூறுவர். 'ஆவிற் கருமுனி ஆ' என்றார் முன்னோரும் (திருவள்ளுவமாலை). சபலை என்பது இதன் பெயரென்று வான்மீகம் கூறும். (93)

### காமதேனுவின் விருந்துபசாரத்தைக் கோசிகராசன் சேனையோடும் பெறுதல்

**657.** அறுசுவைத் தாய வுண்டி
யரசநின் னனிகத் தோடும்
பெறுகென வளித்து வேந்தோ
டியாவருந் துய்த்த பின்னர்
நறுமலர்த் தாரும் வாசக்
கலவையு நல்கலோடும்
உறுதுயர் தணிந்து மன்ன
னுய்த்துணர்ந் துரைக்க லுற்றான்.

'அறு சுவைத்து ஆய உண்டி,
அரச! நின் அனிகத்தோடும்
பெறுக' என அளித்து, வேந்தோடு
யாவரும் துய்த்த பின்னர்,
நறு மலர்த் தாரும் வாசக்
கலவையும் நல்கலோடும்,
உறு துயர் தணிந்து, மன்னன்
உய்த்து உணர்ந்து உரைக்கல் உற்றான்.

பொ :—(வசிட்டன் கோசிகராசனை நோக்கி) 'அரசனே அறுசுவைகளோடுகூடிய உணவுகளை நின்சேனைகளுடன் நீ பெற்றுத் துய்ப்பாயாக' என்று சொல்லி, (காமதேனு சுரந்தவற்றையெல்லாம்) அளித்தருளக், கோசிகனும் அவன்படையினர் முதலியோரும்உண்டபின், நறுமலர் மாலைகளும் கலவைச் சந்தனமும் யாவர்க்கும் அளித்துதவ, அரசனான கோசிகன் தான் அடைந்திருந்த ஆயாசந்தீர்ந்தபின், ஆராய்ந்துணர்ந்தவனாய், (வசிட்டனைநோக்கி ஒரு வார்த்தை) சொல்லத் தொடங்கினான். (94)

**கோசிகன் சுரபியைத் தருக என, வசிட்டன் கூறுதல்**
**658–659**

**658.** மாதவ வெழுந்தி லாய்நீ
வயப்பெரும் படைகட் கெல்லாம்
கோதறு மமிர்த மிக்கோ
வுதவிய கொள்கை தன்னால்
தீதறு குணத்தான் மிக்க
செழுமறை தெரிந்த நூலோர்
மேதகு பொருள்கள் யாவும்
வேந்தருக் கென்கை தன்னால்.

'மாதவ! எழுந்திலாய் நீ;
வயப் பெரும் படைகட்கு எல்லாம்,
கோது அறும் அமிர்தம், இக்கோ
உதவிய கொள்கை தன்னால்,
தீது அறு குணத்தால் மிக்க
செழுமறை தெரிந்த நூலோர்,
'மேதகு பொருள்கள் யாவும்
வேந்தருக்கு' என்கை தன்னால்.

பொ :—பெருந்தவ முனிவனே! நீ உன் ஆதனத்தை விட்டு எழுந்திருந்தாயுமில்லை; (இருந்தபடியே) இந்தத் தெய்வப்பசு குற்றமற்ற நல்லுணவுகளை, வெற்றிதரும் பெரிய சேனைகட்கெல்லாம் கொடுத்துதவிய சிறப்புடைமையாலும், குறைவிலா நற்குண மிக்கவர்களும் வேதங்களை யுணர்ந்தவர்களுமான பெரியோர் மேன்மையுள்ள பொருள்களெல்லாம் அரசர்க்கே உரியன' என்று சொல்லுவதனாலும்.

கு :—இது குளகச் செய்யுள். (95)

**659.** நிற்கிது தகுவ தன்று
வீடருஞ் சுரபி தன்னை
எற்கரு ளென்ற லோடு
மியம்பலன் யாதும் பின்னர்

வற்கலை யுடையென் யானே
வழங்கலென் வருவ தாகில்
கொற்கொள்வே லுழவ நீயே
கொண்டகல் கென்று கூற.

‘நிற்கு இது தகுவது அன்றால், நீடு அரும் சுரபி தன்னை
எற்கு அருள்’ என்றலோடும், இயம்பலன் யாதும்; பின்னர்
‘வற்கலை உடையென், யானே வழங்கலென்; வருவது ஆகில்
கொற்கொள் வேல் உழவ! நீயே கொண்டு அகல்க’ என்று கூற.

பொ :—‘ உனக்கு இந்தப் பசு தகுதியுடையதன்று; (அதனால்) பேரருமைவாய்ந்த இச்சுரபியை எனக்குக் கொடுத்தருள்வாயாக’ என்று கூறிய அளவில், வசிட்டன் (சிறிது நேரம்) ஒன்றுங்கூறாதவனாய்ப் பின்பு, (பகைவர்க்கு) அச்சந்தரும் வேற்படையுள்ள அரசே! மரவுரியை உடையாகக் கொண்ட யானே (யாவுந்துறந்த முனிவன்; அதனால் உரிமைபெற்று) ஒன்றைக் கொடுக்கக்கூடியவன் அல்லேன்; அப் பசு உன்பால் வருவதானால், நீயே பிடித்துக் கொண்டு செல்வாய்’ என்று கூறிய அளவில்.

கு :— கொன் – அச்சம் (தொல்-இடை-6). வேல்உழவ-வேற்படையையே ஏராகக்கொண்டு பகைவரான வயலைக் கலக்கி உழுது பயன் விளைக்கும் உழவனே என்றபடி; ‘வில்லேருழவர்...சொல்லேருழவர்’ (திருக்குறள்-872) என்பனபோல. (96)

காமதேனுவைக் கோசிகன் கைப்பற்ற
அது வசிட்டனை உசாவுதல்

660. பணித்தது புரிவெ னென்னாப்
பார்த்திப னெழுந்து பொங்கிப்
பிணித்தனன் சுரபி தன்னைப்
பெயர்வுழிப் பிணியை வீட்டி
மணித்தடந் தோளி னாற்குக்
கொடுத்தியோ மறைகள் யாவும்
கணித்தவெம் பெரும வென்னக்
கலைமறை முனிவன் சொல்வான்.

'பணித்தது புரிவென்' என்னுப்,
பார்த்திபன் எழுந்து பொங்கிப்
பிணித்தனன் சுரபி தன்னைப்
பெயர் வுழிப், பிணியை வீட்டி,
'மணித்தடந் தோளி ஞற்குக்
கொடுத்தியோ மறைகள் யாவும்
கணித்த எம் பெரும!' என்னக்
கலை மறை முனிவன் சொல்வான்.

பொ:—(அதுகேட்ட) கோசிகராசன், முனிவன் 'பணித்த மொழிப்படியே செய்வேன்' என்று எழுந்து மனக்கிளர்ச்சி கொண்டு சென்று, அந்தக் காமதேனுவைப் பிணித்துக்கொண்டு புறப்படும் பொழுதில், அப்பசு, அக்கட்டை அறுத்துவிட்டு (வசிட்டனருகடைந்து) அவனை நோக்கி 'வேதங்களையெல்லாம் அளவிட்டறிந்த எம்பெருமானே! அழகிய தோள்களுடைய கோசிகனுக்கு என்னை அளித்துவிட்டனையோ?' என்று வினவ, தரும நூல் முதலிய கலைகளையும் வேதங்களையும் அறிந்த அம்முனிவன் விடைகூறுவானுனன்.

கு:—வேதம்வல்ல அந்தணன் அரசனுக்குக் கோதானம் புரிதல் தகாது என்பது புலப்பட, 'தோளினுற்குக் கொடுத்தியோ மறைகள் யாவுங்கணித்த எம்பெரும' என்ருர். வீட்டுதல்-(அற்று) விடச் செய்தல். (97)

### வசிட்டன் மொழிகேட்ட காமதேனு சினந்து மயிர் சிலிர்த்தல்

**661.** கொடுத்திலென் யானே மற்றக்
குடைகெழு வேந்தன் ருனே
பிடித்தகல் வுற்ற தென்னப்
பெருஞ்சினங் கதுவு நெஞ்சோ
டிடித்தெழு முரச வேந்தன்
சேனையை யானே யின்று
முடிக்குவென் காண்டி யென்ன
மொய்ம்மயிர் சிலிர்த்த தன்றே.

'கொடுத்திலென் யானே மற்று அக்
குடைகெழு வேந்தன், தானே
பிடித்து அகல்வுற்றது' என்னப்
பெரும் சினம் கதுவும் நெஞ்சோடு
'இடித்து எழும் முரச வேந்தன்
சேனையை யானே இன்று
முடிக்குவென் காண்டி' என்று,
மொய்ம் மயிர் சிலிர்த்தது அன்று ஏ.

பொ —(உன் உடம்பாடின்றி) 'யானே கோசினுக்குக்கொடுத்தேனில்லை; கொற்றக்குடையோனான அவ்வேந்தனே, உன்னைப் பிடித்துக்கொண்டுபோகத்தொடங்கிய செயலிது' என்று முனிவன்கூற, (அதுகேட்ட அப்பசு), பெருங்கோபங்கொண்ட மனத்தோடும், 'இடியை ஒத்து எழும் ஓசையுள்ள வேந்தன் சேனையை யானே இன்று அழித்துவிடுவேன்; காண்பாயாக' என்று (சபதமிட்டு) அப்பொழுதே செறிந்த தன் மேனி மயிர்களைச் சிலிர்த்தது. (98)

### கோசிகன் சேனை அழிதலும், கோசிகன் புதல்வர்கள் வெகுளுதலும்

**662.** பப்பர ரெயினர் சீனர்
சோனகர் முதல பல்லோர்
கைப்படை யதனி னோடுங்
கபிலைமாட் டுதித்து வேந்தன்
துப்புடைச் சேனை யாவுந்
தொலைவுறத் துணித்த லோடும்
வெப்புடைக் கொடிய மன்னன்
றனயர்கள் வெகுண்டு மிக்கார்.

பப்பரர் எயினர் சீனர்
சோனகர் முதல பல்லோர்,
கைப்படை அதனினோடும்
கபிலை மாட்டு உதித்து, வேந்தன்
துப்பு உடைச் சேனை யாவும்
தொலைவு உறத் துணித்த லோடும்,
வெப்பு உடைக் கொடிய மன்னன்
தனயர்கள் வெகுண்டு மிக்கார்.

பொ:—(மயிர்சிலிர்த்துநின்றதும்)பப்பரர்களும், வேடர்களும் சீனர்களும், சோனகர்களும் முதலான மிலேச்சவீரர்கள் பலர், கைகளில் ஆயுதங்களுடன் அப்பசுவினிடம் உதித்து, அக்கோசிக னது வலிய படைகளையெல்லாம் அழியும்படி, கண்டதுண்டங்க ளாக்கின வளவில் (இயற்கையில்) சினங்கொண்ட கொடியோ ரான கோசிகன் புதல்வர்கள் வெகுண்டு தாக்கலானார்கள்.

கு:—பப்பரர் முதலியோர் – விளங்காத வேற்றுமொழிகளைப் பேசும் புறநாட்டாராவர். சோனகரை யவனர் என்பர். (திவா.)

(99)

**வசிட்டனை எதிர்த்த கோசிகன்புதல்வர் இறத்தல்**

**663.** சுரபியின் வலியி தன்றாற்
சுருதிநா லுணர வல்ல
வரமுனி வஞ்ச மென்னா
மற்றவன் சிரத்தை யின்னே
அரிகுவ மென்னப் பொங்கி
யடர்த்தன ரடர வன்னான்
எரியெழ விழித்த லோடு
மிறந்தனர் குமர ரெல்லாம்

'சுரபியின் வலி இது அன்று, ஆல்;
சுருதி நூல் உணர வல்ல
வரமுனி வஞ்சம்' என்னா,
'மற்றவன் சிரத்தை இன்னே
அரிகுவம்' என்னப் பொங்கி
அடர்த்தனர், அடர, அன்னான்
எரி எழ விழித்தலோடும்,
இறந்தனர் குமரர் எல்லாம்.

பொ:—(வெகுண்டெழுந்த) கோசிக குமாரர்கள், 'இவ்வாறு படையழிந்தது காமதேனுவின் வலியாலன்று; சுருதிநூல்களை உணரவல்ல வரம்பெற்ற முனிவன் செய்த வஞ்சகச் செயலாகும்' என்று சொல்லி, 'அவனது தலையை இப்பொழுதே அறுத்திடு வோம்'என்று வீரமொழி கூறிச் சினந்தெழுந்து, எதிர்த்து நெருக்கி னார்கள்; அவ்வாறு நெருக்க, (அப்போது) அவ் வசிட்டமுனிவன் தீப்பறக்கும்படி கண்களால் விழித்துப்பார்த்த அளவிலே, அவர்க ளெல்லாம் இறந்தொழிந்தார்கள். (100)

### கோசிகன் அம்பெய்ய வசிட்டன் பிரமதண்டத்தை எதிருமாறு ஏவுதல்

**664.** ஐயிரு பதின்மர் மைந்த
ரவிந்தமை யரசன் காணு
நெய்பொழி கனலிற் பொங்கி
நெடுங்கொடித் தேர்க டாவிக்
கைதொடர் கணையி னேடுங்
கார்முகம் வளைய வாங்கி
எய்தனன் முனியுந் தன்கைத்
தண்டினை யெதிர்க வென்ருன்

ஐயிரு பதின்மர் மைந்தர் அவிந்தமை அரசன் காணு, நெய் பொழி கனலில் பொங்கி, நெடுங் கொடித் தேர் கடாவிக் கை தொடர் கணையினேடும் கார் முகம் வளைய வாங்கி, எய்தனன்; முனியும், தன் கைத் தண்டினை 'எதிர்க' என்ருன்.

பொ :—(அப்பொழுது) கோசிகமன்னன், தன் புத்திரர் நூறு பேர்களும் அழிந்தமைகண்டு, நெய்யைச் சொரிந்த நெருப்புப் போலச் சீறியெழுந்து, நீண்ட கொடியமைந்த தன் இரதத்தைச் செலுத்தி, வில்லை நன்கு வளைத்து, தன் கையினின்று தொடர்ச்சியாக விடப்படும் அம்புகளால் (வசிட்டன்மீது) எய்யத் தொடங்கினுன்; அம்முனிவனும், கையிலுள்ள பிரமதண்டத்தை நோக்கி 'அவ்வாயுதங்களை நீ ஏற்றிடுக' என்று நியமித்தான்.

கு :—கணையினேடு - கணையினுல்; ஓடு உருபு கருவிப் பொருளது. (101)

### கோசிகன் சிவபிரானைத் துதித்துப் படைபெறுதல்

**665.** கடவுளர் படைக ளீருக்
கற்றன படைகள் யாவும்
விடவிட முனிவன் றண்டம்
விழுங்கிமேல் விளங்கல் காணு
வடவரை வில்லி தன்னை
வணங்கினன் வழுத்த லோடும்
அடலுறு படையோன் றீயா
வன்னவ னகன்ரு னன்றே.

கடவுளர் படைகள் ஈருக்
கற்றன படைகள் யாவும்,
விடவிட, முனிவன் தண்டம்
விழுங்கி மேல் விளங்கல் காணு,
வட வரை வில்லி தன்னை
வணங்கினன் வழுத்தலோடும்,
அடல் உறு படை ஒன்று ஈயா
அன்னவன் அகன்றான் அன்றே.

பொ :—(சிறியவான பாணங்கள் முதல்) தேவர்களின் அத்திரங்கள் ஈருக, அறிந்து பழகிய ஆயுதங்கள் யாவும் கோசிகன் எய்துகொண்டேவர, வசிட்டனது பிரமதண்டமானது அவற்றையெல்லாம் தன்னுட்கொண்டு மேன்மைபெற்று விளங்குதலைப் பார்த்து (கோசிகன்) மகாமேருவை வில்லாக வளைத்த உருத்திர மூர்த்தியை வணங்கித் துதித்த அளவில், அச் சிவபிரான் (எதிர் தோன்றி) வலிமைமிக்க படை ஒன்றை அளித்துவிட்டு மறைந்தான். (102)

### கோசிகன் உருத்திரப்படையை ஏவ வசிட்டன் அதனை உண்டு விளங்குதல்

**666.** விட்டனன் படையை வேந்தன்
விண்ணுளோ ருலகை யெல்லாஞ்
சுட்டன னென்ன வஞ்சித்
துளங்கினர் முனியுந் தோன்றிக்
கிட்டிய படையை யுண்டு
கிளர்ந்தனன் கிளரு மேனி
முட்டவெம் பொறிகள் சிந்தப்
பொருபடை முரண திற்றே.

விட்டனன் படையை வேந்தன்,
விண்ணுளோர், உலகை எல்லாம்
சுட்டனன் என்ன அஞ்சித்
துளங்கினர்; முனியும் தோன்றிக்
கிட்டிய படையை உண்டு
கிளர்ந்தனன்; கிளரும் மேனி
முட்ட வெம் பொறிகள் சிந்தப்
பொரு படை முரண் அது இற்று ஏ.

பொ :—கோசிகன் அப்படையை வசிட்டன் மீது ஏவினன், அதனைக்கண்ட தேவர்கள், 'இந்தப் படையால் எல்லாவுலகையும் எரித்தவன் ஆவான் இவன்' என்று அஞ்சி நடுங்கினர். வசிட்ட முனிவனும் எதிர்வந்து நெருங்கிய அவ்வுருத்திரப்படையை (த்தானே) உட்கொண்டு பொலிகின்ற தன் மேனியிலிருந்து முழு வெப்பமான அனற்பொறிகள் சொரியத் தன்னைத் தாக்கி நின்ற அப்படையின் வலிமை அழியுமாறு (செய்து தன் ஆற்றலால்) பொலிவுற்றான்.

கு :—இற்று - இற; அழியும்படி: எச்சத்திரிபு. (103)

### பிரமதேசு பெறக் கோசிகன் தவமேற் செல்லுதல்

**667.** கண்டன னரசன் காணுக்
கலைமறை முனிவர்க் கல்லால்
திண்டிறல் வலியுந் தேசு
முளவெனல் சீரி தன்றால்
மண்டல முழுதுங் காக்கு
மொய்ம்பொரு வலியன் றென்னு
ஒண்டவம் புரிய வெண்ணி
யும்பர்கோன் றிசையை யுற்றான்.

கண்டனன் அரசன், காணுக்
'கலை மறை முனிவர்க்கு அல்லால்
திண் திறல் வலியும் தேசும்
உள எனல் சீரிது அன்று ஆல்.
மண் தலம் முழுதும் காக்கும்
மொய்ம்பு ஒரு வலி அன்று' என்னு
ஒண் தவம் புரிய எண்ணி,
உம்பர்கோன் திசையை உற்றான்.

பொ :—(தான் விட்ட உருத்திரப்படை செயலற்றதைக்) கண்டு நின்ற அரசன் (தனது ஒப்பற்ற அப்படையும் வீணாய்விட்டதைக்) கண்ணால் பார்த்து, 'உறுதியான வெற்றியும் வலியும் ஒளியும் வேதசாத்திரங்களை அறிந்த முனிவர்களுக்கு அல்லாமல் (பிறருக்கு) உள்ளன என்று கருதுதல் சிறப்புடையதில்லை' புவி முழுதும் அரசாளும் வலிமை (முனிவர்கள் வலிமைக்கு முன்) ஒரு

வலிமையாகமாட்டாது, என்று நிச்சயித்துச் சீரிய தவத்தைச் செய்ய நினைந்து, இந்திரனுக்குரிய கிழக்குத் திக்கை அடைந்தான்.

கு :—திறல் - வெற்றி (புறப் 9-31-கொளு) (104)

கோசிகன் தவத்தைச் சிதைக்குமாறு இந்திரன் திலோத்தமையை ஏவுதல்

668. மாண்டமா தவத்தோன் செய்த
வலனையே மனத்தி னெண்ணிப்
பூண்டமா தவத்த னாகி
யரசர்கோன் பொலியு நீர்மை
காண்டலு மமரர் வேந்தன்
றுணுக்குறு கருத்தி னேடும்
தூண்டின னரம்பை மாருட்
டிலோத்தமை யெனுஞ்சொன் மானை

மாண்ட மா தவத்தோன் செய்த
வலனையே மனத்தின் எண்ணிப்,
பூண்டமா தவத்தன் ஆகி,
அரசர் கோன் பொலியும் நீர்மை
காண்டலும், அமரர் வேந்தன்,
துணுக்குறு கருத்தி னேடும்
தூண்டினன், அரம்பைமாருள்
திலோத்தமை எனும் சொல் மானை.

பொ :—அரசர் தலைவனான கோசிகன், மாட்சிமைபெற்ற மாதவத்தவனான வசிட்டன் பெற்ற வெற்றிச்செயலையே மனதில் விடாது சிந்தித்துப் பெருந்தவம் புரிந்தவனாய்த் திகழும் தன்மையை நோக்கிய அளவில், தேவேந்திரன் மிகக் கலக்கமுற்ற கருத்துடனே, அரம்பை முதலாய தெய்வப்பெண்களுள் திலோத்தமை என்ற புகழ் கொண்ட மான்போன்ற மாதினை (இக்கோசிகன் தவத்தைச் சிதைக்கும்பொருட்டு அவனிடம்) அனுப்பி வைத்தான்.

கு:—இந்திரன் துணுக்குற்றதன் காரணம், பெருந்தவஞ் செய்பவரின் கபாலத்தினின்றும் ஒருவகை அக்கினி மேலெழுந்து தன் பொன்னுலகைச் சுட்டெரிக்குமென்னும் அச்சம் என்பர். மாண்ட-

மாட்சிமைபெற்ற; மாண் என்ற வினைமுதலடியாக வந்த பெயரெச்சம்; ''மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்'' (புறநா 191) என்பர். (105)

கோசிகன் திலோத்தமையோடு கலவியின் மூழ்கிப் பின்பு வெறுப்புறுதல்

669. அன்னவண் மேனி காணு
வனங்கவேள் சரங்கள் பாயத்
தன்னுணர் வழிந்து காதற்
சலதியி னழுந்தி வேந்தன்
பன்னரும் பகறீர் வுற்றுப்
பரிணதர் தெரிந்த நூலின்
நன்னய முணர்ந்தோ ஞகி
நஞ்செனக் கனன்று நக்கான்.

அன்னவள் மேனி காணு,
அனங்கவேள் சரங்கள் பாயத்
தன் உணர்வு அழிந்து, காதல்
சலதியின் அழுந்தி, வேந்தன்,
பன் அரும் பகல் தீர்வு உற்றுப்,
பரிணதர் தெரிந்த நூலின்
நல் நயம் உணர்ந்தோன் ஆகி,
நஞ்சு எனக் கனன்று நக்கான்.

போ:—வேந்தனான கோசிகன், அத் திலோத்தமையின் மேனியழகைக் கண்டு, காமபாணம் பாய்ந்து தைத்தலால் தன் நல்லறிவு கெட்டு அவளது காமக்கடலிலே மூழ்கி, சொல்லற்கரிய பலநாள்கள் அதிலே கழியப் பெற்றவனாய்ப் பின்பு, நல்லறிஞர்கள் ஆராய்ந்து இயற்றிய சாத்திரங்களின் சிரிய பொருள்களை உணர்ந்தவனாகி, தான் துய்த்த இன்பத்தை விடம்போல வெகுண்டு களைந்து நகைப்பானாயினன்.

கு:—நகைத்தற்குக் காரணம்-மேற்கொண்ட தவநிலைக்கு நேர் மாறான செயலில் இழிந்தமை. பரிணதர்-அறிவின் பக்குவமுதிர்ந்தவர்: 'பருணிதர்' என்றும் தமிழில் திரிந்து வழங்கும்; 'பருணிதர்

பணித்த பத்தி நாவருங் கிளவி' என்பர் (கிட்கிந்தா. நாடவிட்ட படலம் 64) (106)

### திலோத்தமையை விட்டுக் கோசிகன் தவம்புரியத் தென்றிசை சார்தல்

670. விண்முழு தாளி செய்த
வினையென வெகுண்டு நீபோய்
மண்மக ளாதி யென்று
மடவர றன்னை யேவிக்
கண்மலர் சிவப்ப வுள்ளங்
கறுப்புறக் கடிதி னேகி
எண்மரில் வலிய னாய
வெமன்றிசை தன்னை யுற்றான்.

விண் முழுது ஆளி செய்த
வினை என வெகுண்டு, நீ போய்
மண் மகள் ஆதி என்று
மடவரல் தன்னை ஏவிக்,
கண் மலர் சிவப்ப உள்ளம்
கறுப்பு உறக் கடிதின் ஏகி,
எண்மரில் வலியன் ஆய
எமன் திசை தன்னை உற்றான்.

பொ :—(இவ்வாறு தன் தவமழிந்தது) தேவலோக முழுதும் ஆட்சி புரியும் இந்திரனது வஞ்சனைச் செயலாகும் என்று அறிந்து, (அச்செயல் புரியத் துணிந்த) 'நீ பூவுலகஞ் சென்று மானுடமகளாகப் பிறப்பாயாக' என்று அத்திலோத்தமையைச் சபித்து விட்டு, (சினத்தால்) கண்கள் செந்நிறம் அடையவும், மனம் செற்றம் கொள்ளவும் (அவ்விடம் விட்டு) விரைவிற் சென்று, எண்டிசை காவலருள் வலியவனான எமனது திக்காகிய தென்றிசையை அடைந்தான்.

கு :—'கூற்றத் தன்ன மாற்றரு முன்பின்' (புறநா 362) என்பராதலின், 'எண்மரில் வலியனாய எமன்' என்றார்; எண்மர்-அட்ட திக்குப் பாலகர். (107)

### திரிசங்கு உடலொடு துறக்கஞ்செல்ல அருளுமாறு வேண்ட வசிட்டன் மறுத்துக் கூறல்

**671.** தென்றிசை யதனை நண்ணிச்
செய்தவஞ் செய்யுஞ் செவ்வி
வன்றிற லயோத்தி வாழு
மன்றிரி சங்கு வென்பான்
தன்றுணைக் குருவை நண்ணித்
தனுவொடுந் துறக்க மெய்த
இன்றெனக் கருளு கென்ன
யானறிந் திலன தென்றான்.

**தென் திசை அதனை நண்ணிச்**
**செய்தவம் செய்யும் செவ்வி,**
**வன் திறல் அயோத்தி வாழும்**
**மன் திரிசங்கு என்பான்,**
**தன் துணைக் குருவை நண்ணித்,**
**'தனுவொடும் துறக்கம் எய்த**
**இன்று எனக்கு அருளுக' என்ன,**
**'யான் அறிந்திலன் அது' என்றான்.**

**பொ:**—தெற்குத் திக்கை யடைந்து தான் செய்ய வேண்டிய தவத்தைத் தொடங்கி நடத்தும்பொழுதில், அயோத்திநகரில் வாழ்கின்ற பெருவலியனான திரிசங்கு என்பான், தனக்குத் துணை புரியும் குலகுருவான வசிட்டனை அடுத்து, 'இந்தப் பூத உடம்புடனே சுவர்க்கம் புகும்படி இப்போது எனக்கு அருள்செய்வாயாக' என்று வேண்ட, (வசிட்டன்) 'சரீரத்தோடு துறக்கம் செலுத்தவல்ல செயலை யான் அறிந்திலேன்' என்றான்.

**கு:**—சத்திய விரதன் என்ற இயற்பெயர் கொண்ட இவ்வேந்தன், தன் தந்தை தடுப்பவும் மீறி, மறையவர் கன்னியைக் கவர்ந்தது, குருவான வசிட்ட முனிவனது பசுவைக் கொன்றது, நீர் தெளித்துப் புனிதமாக்கப்படாத ஊனை உண்டது - ஆகிய மூன்று குற்றங்களுடையவன் ஆயினமைபற்றித் 'திரிசங்கு' எனப் பெயர் பெற்றான் என்றும், மெய்ம்மையனாய்ப் பேர் பெற்ற அரிச்சந்திரனுக்குப் பிதா இவனென்றும் கூறுவர். அது-அச்செயல். (108)

### திரிசங்குவை வசிட்டன் சபித்தல்

672. நினக்கொலா தாகி னைய
நீணிலத் தியாவ ரேனும்
மனக்கினி யாரை நாடி
வகுப்பலியான் வேள்வி யென்னச்
சினக்கொடுந் திறலோய் முன்னர்த்
தேசிகற் பிழைத்து வேறோர்
நினக்கித னாடி நின்றாய்
நீசனாய் விடுதி யென்றான்.

'நினக்கு ஒலாது ஆகின், ஐய!
நீள் நிலத்து யாவர் ஏனும்
மனக்கு இனியாரை நாடி
வகுப்பல் யான் வேள்வி' என்னச்
சினக் கொடுந் திறலோய்! முன்னர்த்
தேசிகன் பிழைத்து வேறு ஓர்
நினக்கு இதன் நாடி நின்றாய்,
நீசன் ஆய் விடுதி' என்றான்.

பொ ;—(திரிசங்கு வசிட்டனை நோக்கி) 'ஐயனே உனக்கு முடியாததானால், பெரிய இப்பூவுலகில் எவராயினும் என் மனத்துக்கு இசைந்தவரைத் தேடி, அவரைக்கொண்டு (எண்ணிய) யாகத்தைச் செய்வேன்' என்று கூற, (வசிட்டன் சினங்கொண்டு அவனை நோக்கி) 'சினமும் கொடிய வலிமையும் உடையோனே! முன்னோர்களுடைய குருவினிடத்து அபசாரப்பட்டு (அவனை நீக்கி) உனக்கு வேண்டிய வேறொரு குருவைத் தேடி நின்றாய்; (அதனால்) நீ புலையனாய்விடுவாயாக' என்று சபித்தான்.

கு:—முன்னர்த் தேசிகர் – முன்னோர்களுடைய ஆசாரியன். பின்னர் முன்னர் என்பன பின்னோர் முன்னோர் என்னும் பொருளவாதல் காண்க. (சிலப் 12; இறுதி உரை) இதன்– இதமானவன்; வடமொழித்திரிபு. (109)

### திரிசங்கு சண்டாளனாதல்

673. மலருளோன் மைந்தன் மைந்த
வழங்கிய சாபந் தன்னால்
அலரியோன் றானு நாணும்
வடிவிழந் தரசர் கோமான்

புலரியங் கமலம் போலும்
பொலிவொரீஇ வதனம் பூவில்
பலருமாங் கிகழ்தற் கொத்த
படிவம்வந் துற்ற தன்றே.

மலருளோன் மைந்தன், மைந்த!
வழங்கிய சாபம் தன்னால்,
அலரியோன் தானும் நாணும்
வடிவு இழந்து, அரசர் கோமான்
புலரி அம் கமலம் போலும்
பொலிவு ஓரீஇ வதனம், பூவில்
பலரும் ஆங்கு இகழ்தற்கு ஒத்த
படிவம் வந்து உற்றது அன்று ஏ.

பொ :—இளைஞனான வீரனே! பிரமதேவன் புத்திரனான வசிட்டன் இட்டசாபத்தால், அரசர்தலைவனான திரிசங்குவுக்கு, சூரியனும் வெள்கும்படி யிருந்த தன் அரசவுரு நீங்கி, உதய காலத்துத் தாமரைமலர்போன்ற முகத்தின்பொலிவு போய், நிலவுலகில் யாவரும் இகழ்தற்குரிய சண்டாளவடிவம் அவ்விடத்து அப்போதே வந்தடைந்தது.

கு;—'மைந்த' என்றது சதானந்தன் இராமனை முன்னிலைப் படுத்திய விளி; 'தொடுகழன் மைந்தர் தொழில்' என்புழிப்போல (புறப் பொருள் 316). மைந்த என்ற விளி, இளைஞனான வீரனை உணர்த்தி நின்றது. இழந்து,ஓரீஇ என்ற வினையெச்சங்கள் இகழ்தற்கு என்ற வினையொடு முடியும். வதனம் பொலிவொரீஇ என இயைக்க. (110)

திரிசங்கு யாவராலும் இகழப்படுதல்

**674.** காசொடு முடியும் பூணுங்
கரியதாங் கனகம் போன்றும்
தூசொடு மணியு முந்நூ
றூறருந் தோற்றம் போன்றும்
மாசொடு கருகி மேனி
வனப்பழிந் திடவூர் வந்தான்
சீசியென் றியாரு மெள்ளத்
திகைப்பொடு பழுவஞ் சேர்ந்தான்.

காசொடு முடியும் பூணும்
கரியது ஆம் கனகம் போன்றும்,
தூசொடும் அணியும் முந்நூல்
தோல் தரும் தோற்றம் போன்றும்,
மாசொடு கருகி மேனி
வனப்பு அழிந்திட ஊர் வந்தான்,
'சீசி' என்று யாரும் எள்ளத்,
திகைப்பொடு பழுவம் சேர்ந்தான்.

பொ:—மணிமாலைகளும் கிரீடமும் மற்றை அணிகளும், கரும் பொன்னுன இரும்பை யொத்தும், ஆடைகளும் தரித்த முப்புரி நூலும், தோலாலான தன்மையை ஒத்தும் உடலானது அழுக்குடன்கூடிக் கறுத்து அழகு கெடத் (திரிசங்கு) தன் நகரஞ் சேர்ந்த அளவில், எல்லாரும் 'சீசீ' என்று தன்னை இகழ்தலால், கலக்கத்துடனே வனத்தை அடையலானுன்.

கு:—காசு - மணி; ஆகு பெயர்; 'நாண்வழிக் காசுபோலவும்' (இறை களவியல். 2: உரை). கரியது ஆம் கனகம் - கரும்பொன்; இரும்பு. (111)

### திரிசங்கு கோசிகன்பால் தன்செய்தி தெரிவித்தல்

**675.** கானிடைச் சிறிது வைகல்
கழித்தொர்நாட் கௌசிகப் பேர்க்
கோனினி துறையுஞ் சோலை
குறுகினன் குறுக வன்னுன்
ஈனனீ யாவ னென்னை
நேர்ந்ததிவ் விடையி னென்ன
மேனிகழ் பொருள்க ளெல்லாம்
விளம்பினன் வணங்கி வேந்தன்.

கான் இடைச் சிறிது வைகல்
கழித்து ஓர் நாள், கௌசிகப்பேர்க்
கோன் இனிது உறையும் சோலை
குறுகினன், குறுக, அன்னுன்,
'ஈனன் நீ யாவன்? என்னை
நேர்ந்தது? இவ் இடையின்' என்ன,
மேல் நிகழ் பொருள்கள் எல்லாம்
விளம்பினன் வணங்கி வேந்தன்.

பொ :—வனத்திலே சில நாட்களைப் போக்கி, ஒரு நாள் கௌசிக நாமம் பெற்ற இவ்வரசன் தவம் செய்து இனிது வசிக்கும் சோலையைத் (திரிசங்கு) அணுகினன்; அணுகிய அளவில், அக்கோசிகன், 'சண்டாளனை நீ யார்? இங்கு வந்ததன் காரணம் என்ன?' என்று வினவ, அத் திரிசங்கு வணங்கியவனாய் முன் நடந்த செய்திகள் அனைத்தையும் சொன்னான். (112)

### திரிசங்கு விரும்பியவாறு கோசிகன் இசைதலும் வசிட்டகுமாரர் மறுத்தலும்

**676.** இற்றிதோ வெனநக் கன்னான்
யானிரு வேள்வி முற்றி
மற்றுல களிப்பெ னென்னா
மாதவர் தம்மைக் கூவச்
சுற்றுறு முனிவர் யாருந்
தொக்கனர் வசிட்டன் மைந்தர்
கற்றில மரசன் வேள்வி
கனற்றுறை புலையற் கீவான்;

'இற்றிதோ' என நக்கு, அன்னான்,
'யான் இரு வேள்வி முற்றி
மற்று உலகு அளிப்பென்' என்னா,
மாதவர் தம்மைக் கூவச்,
சுற்று உறு முனிவர் யாரும்
தொக்கனர்; வசிட்டன் மைந்தர்,
'கற்றிலம், அரசன் வேள்வி
கனல் துறை புலையற்கு ஈவான்'

பொ:—அது கேட்ட கோசிகன், 'இவ்வளவு தானா' என்று இகழ்ந்து சிரித்து, யான் பெரியதோர் வேள்வியை (உனக்காகச்) செய்து முடித்துப் பரலோகத்தை (இவ்வுடலோடடைய) அருள் தந்திடுவேன் என்று கூறி மாதவ முனிவர்களை அழைக்க, சுற்றுப் பக்கத்துள்ள அம்முனிவர்கள் அனைவரும் (அங்கே)வந்து கூடினார்கள். (அப்போது) வசிட்ட குமாரர்கள் 'அரசனொருவன் சண்டாளனொருவனுக்கு வேள்வியை அக்கினியிடமாகச் செய்து தருதலை நாங்கள் எந்த நூலிலும் படித்தறிந்தோமில்லை.'

கு:—இது குளகம். இற்றிதோ-இவ்வளவேயோ; 'இற்றிதுவோ இவர் சேவகம்' என்பர்(யுத்த. படைத்தலைவர் வதை. 4), மற்று உலகு-(இவ்வுலகினும்) வேறாகிய உலகம்; சுவர்க்கம். (113)

## கோசிகன் வசிட்டன் மைந்தரைச் சபித்துவிட்டு வேள்வி தொடங்கல்

677. என்றுரைத் தியாங்க ளொல்லோ
மென்றன ரென்னப் பொங்கிப்
புன்றொழிற் கிராத ராகிப்
போகெனப் புகற லோடும்
அன்றவ ரெயின ராகி
யடவிக டோறுஞ் சென்றார்
நின்றுவேள் வியையு முற்றி
நிராசனர் வருக வென்றான்.

என்று உரைத்து, 'யாங்கள் ஒல்லோம்'
என்றனர்; என்னப் பொங்கிப்
'புன் தொழில் கிராதர் ஆகிப்
போக' எனப் புகறலோடும்,
அன்று அவர் எயினர் ஆகி,
அடவிகள் தோறும் சென்றார்,
நின்று வேள்வியையும் முற்றி,
'நிராசனர் வருக' என்றான்.

பொ :—என்று கூறி, 'யாங்கள் இக்காரியத்துக்கு உடன்படோம்' என்று கூற, (கேட்ட கௌசிகன்) கொதிப்படைந்து, (நீங்கள்) இழிவான செயல்புரியும் வேடர்களாகிவிடக்கடவீர், என்று சாபமொழி கூறியவளவில், அப்பொழுதே அந்த வசிட்ட புத்திரர்கள் வேடர்களாய்க் காடுகள்தோறும் போய்விட்டார்கள். (கோசிகனோ) தொடங்கிய வேள்வியை நிலைநின்று, முடிக்கத் தொடங்கி (ஆகுதி உண்ணுதற்பொருட்டு) 'தேவர்காள் வருவீர்களாக' என்று அழைத்தான்.

கு :—நிராசனர் – தேவர் ; வடசொல் ; உணவை வேண்டாதவர் என்பது உறுப்புப் பொருள். (114)

## கோசிகன் திரிசங்குவைத் தன் தவமகிமையால் வானத்து ஏற்றுதல்

**678.** அரசனிப் புலையற் கென்னே
யனற்றுறை முற்றி யெம்மை
விரசுக வல்லை யென்பான்
விழுமிதென் றிகழ்ந்து நக்கார்
புரைசைமா களிற்று வேந்தைப்
போகநீ துறக்கம் யானே
உரைசெய்தேன் தவத்தி னென்ன
வோங்கினன் விமானத் தும்பர்.

'அரசன், இப் புலையற்கு என்னே
அனல் துறை முற்றி, எம்மை
'விரசுக வல்லை' என்பான்,
'விழுமிது' என்று இகழ்ந்து நக்கார்;
புரைசை மா களிற்று வேந்தைப்
'போக நீ துறக்கம்: யானே
உரைசெய்தேன், தவத்தின்' என்ன
ஓங்கினன் விமானத்து உம்பர்.

பொ :—அவ்வாறு அழைக்கப்பட்ட தேவர்கள், இவ்வரசன் இந்தப் புலையனுக்காக வேள்வித் தீயில் செய்யப்படும் யாககாரியத்தைநிறைவேற்றுபவனாய், எங்களை 'விரைவில் வருவீராக' என்று அழைக்கின்றான்; 'மிக நன்று இச் செயல்' என்று நிந்தித்துஏளனம் செய்து சிரித்தார்கள். (ஆயினும் கோசிகனே) கழுத்திடு கயிறு கொண்ட யானைப் படையினனான அத் திரிசங்குவைநோக்கி, 'துறக்கத்துக்குப் போய்ச் சேர்ந்திடுக; (பிறருதவிவேண்டாமல்) நானே என் தவத்தினால் கட்டளையிட்டுக் கூறுகிறேன்' என்று சொல்ல, அவ்வாறே திரிசங்கு (கிடைத்ததொரு) விமானத்தின் மேலேறி உயரச் சென்றான்.

கு :—விழுமிது – இகழ்ச்சிக்குறிப்பு ; எதிர்மறையிலக்கணை.
(115)

**தேவர்களால் தள்ளுண்ட திரிசங்குவைக் கோசிகன் வானத்தில் நிற்குமாறு செய்தல்**

679. ஆங்கவன் றுறக்க மெய்த
வமரர்கள் வெகுண்டு நீசன்
ஈங்குவந் திடுவ தென்னே
யிருநிலத் திழிக வென்னத்
தாங்கலில் வீழ்வான் மற்றுத்
தாபத சரண மென்ன
ஓங்கின னின்னில் லென்ன
வுரைத்துரு மொக்க நக்கான்.

**ஆங்கு அவன் துறக்கம் எய்த, அமரர்கள் வெகுண்டு, 'நீசன் ஈங்கு வந்திடுவது என்னே? இரு நிலத்து இழிக' என்னத், தரங்கலில் வீழ்வான், மற்றுத் 'தாபத சரணம்' என்ன, ஓங்கினன் 'நில் நில்' என்ன உரைத்து, உரும் ஒக்க நக்கான்.**

பொ :—அவ்விடத்தினின்றே அத் திரிசங்கு சுவர்க்கலோகம் அடைய (அது கண்ட) தேவர்கள் சினந்து, 'சண்டாளன் (ஆன நீ) அவ்வுடம்போடு இவ்விடத்தே வந்து சேர்வது என்ன (அநீதி)? பூமியில்தானே இழிவாயாக' என்று கூறித் தள்ள, தன்னைத் தாங்குவார் இல்லாதவனாய் (தலைகீழாக) விழும் அத் திரி சங்கு, பின்பு (கோசிகனை நோக்கி) 'முனிவனே! (நீயே எனக்குப்) புகலிடம்' என்று ஓலமிட, அதுகேட்ட அம்முனிவன் நிமிர்ந்து நின்று அவ்விடத்தே 'நிற்பாயாக, நிற்பாயாக' என்று உரக்கச் சொல்லி, இடிமுழக்கம்போலச் சிரித்தான்.

கு :—தாங்கலில் வீழ்வான் – தாங்குவார் இல்லாதவனாய் வீழ்பவன் ; 'கேடும் பெருக்கமு மில்லலல்ல' (குறள் 1155) என்புழிப் போல ; இல் அல்ல - இல்லாதன அல்ல. இனி யாவரையும் தாங்கும் இயல்புடைமைபற்றித் தாங்கல் என்பது பூமிக்கு ஒரு பெயரென்றலும் அமையும்; 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல' என்பதும், பொறை எனப் பூமிக்குப் பெயருண்மையும் காண்க. (116)

**கோசிகன் வேறாக உலகமுதலிய படைக்கத் தொடங்கல்**

**680.** பேணலா திகழ்ந்த விண்ணோர்
பெரும்பத முதலா மற்றைச்
சேண்முழு தமைப்ப லென்னாச்
செழுங்கதிர் கோணா டிங்கள்

மாணொளி கெடாது தெற்கு
வடக்கவாய் வருக வென்று
தாணுவோ டூர்வ வெல்லாஞ்
சமைக்குவெ னென்னும் வேலை.

'பேணலாது இகழ்ந்த விண்ணோர்
பெரும்பதம் முதலா மற்றைச்
சேண் முழுது அமைப்பல்' என்னாச்
'செழுங்கதிர் கோள் நாள் திங்கள்
மாண் ஒளி கெடாது, தெற்கு
வடக்கவாய் வருக' என்று
தாணுவோடு ஊர்வ எல்லாம்
சமைக்குவென் என்னும் வேலை.

பொ :—'மதிக்காமல்(என்னையும் திரிசங்குவையும்) அவமதித்த தேவர்களின் பெரிய பதவி முதலாக, மற்றை விண்ணுலகமுழுதையும் வேறு படைப்பேன்' என்று கூறி, அவ்வாறு படைக்கப்பட்ட செழுங்கதிர்களுடைய சூரியனும் சந்திரனும் மற்றக் கிரகங்களும் நட்சத்திரங்களும் தத்தம் சிரிய ஒளி குன்றாமலும் தென்றிசை உதயமும் வடதிசை மறைவும் உடையவாகவும் சஞ்சரித்து வருவன வாகுக' என்று கட்டளையிட்டுச் சரமும் அசரமுமான எல்லாவற்றையும் படைத்திடுவேன் என்று தொடங்கும் பொழுது.

கு :—தாணு – அசரப்பொருள்; நிலையியற்பொருள். ஊர்வ - சரப்பொருள்; இயங்கியற்பொருள்கள். சந்திரசூரியர் கூறப்பட்டுவிட்டதனால் அவையொழிந்த கோள்கள் என்க. நாள் – நாண்மீன்கள். இடம் காலங்களின் வேற்றுமைகளால் நேரிடக்கூடிய ஒளிக்குறைவின்றி என்பார், 'மாணொளி கெடாது' என்றார். (117)

### தேவர்கள் கோசிகனைச் சாந்தப்படுத்தல்

681. நறைத்தரு வுடைய கோனு
நான்முகக் கடவு டானும்
கறைத்தரு களனு மற்றைக்
கடவுளர் பிறருந் தொக்குப்

பொறுத்தருண் முனிவ நின்னைப்
புகல்புகுந் தவனைப் போற்றும்
அறத்திற னன்று தாரா
கணத்தொடு மமைக வன்னான்.

நறைத்தரு உடைய கோனும்,
நான்முகக்கடவுள்தானும்,
கறைத்தரு களனும், மற்றைக்
கடவுளர் பிறரும் தொக்குப்,
'பொறுத்தருள் முனிவ! நின்னைப்
புகல் புகுந்தவனைப் போற்றும்
அறத்திறன் நன்று, தாராகணத்
தொடும் அமைக அன்னான்.

பொ:—மணமுள்ள கற்பக தருவையுடைய இந்திரனும், நான்முகனான பிரமதேவனும், நச்சுக் கண்டமுடைய உருத்திரமூர்த்தியும் மற்றத் தேவர்களும் முனிவர்களும் ஒருங்குகூடி, 'முனிவனே! (தேவர்கள் இகழ்ந்ததைப்) பொறுத்தருள்க. நின்னைச் சரணடைந்தவனைக் கைவிடாது காத்தருளும் தருமநெறி மிகநன்றே; அந்தத் திரிசங்கு நட்சத்திரத் தொகுதியுடன் சேர்ந்தமைபவனாகுக' (என்று கூறி).

கு:—குளகம். (118)

**கோசிகன் மேற்றிசைசென்று தவமியற்றல்**

**682.** அரசமா தவனீ யாதி
யைந்துநாட் டென்பால் வந்துன்
புரைவிளக் கிடுக வென்னாக்
கடவுளர் போய பின்னர்
நிரைதவன் விரைவி னேகி
நெடுங்கடற் கிறைவன் வைகும்
உரவிட மதனை நண்ணி
யுறுதவ முஞற்றுங் காலை.

'அரச மாதவன் நீ ஆதி:
ஐந்து நாள் தென்பால் வந்து உன்
புரை விளக்கிடுக' என்னாக்,
கடவுளர் போய பின்னர்,

நிரைதவன் விரைவின் ஏகி,
நெடுங்கடற்கு இறைவன் வைகும்
உர இடம் அதனை நண்ணி
உறு தவம் உஞற்றும் காலை.

பொ :—'நீ சிறந்த அரச இருடி ஆவாய்; (வடக்கிலுள்ள இருபத்தேழுநட்சத்திரங்களுள்) ஐந்து நட்சத்திரங்கள் தெற்குத் திக்கில் வந்திருந்து உன் மேன்மையைத் தெரிவிக்கக் கடவன' என்று சொல்லி, (கோசிகனைச் சமாதானப்படுத்திவிட்டு), தேவர்கள் புறப்பட்டுச் சென்றபின்பு, நேர்மையான அத் தவமுனிவன் வேகமாகச்சென்று பெரிய கடலுக்குத் தலைவனான வருணன் தங்கும் வலிய இடமான மேற்குத் திசையை அடைந்து மிக்க தவத்தைச் செய்துவருங்காலத்து.

கு :—குளகம். ஐந்து நட்சத்திரங்கள் : அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் என்பன; படைப்புக் காலந் தொட்டு வடதிசையிலிருந்த இவை, கோசிகனுக்காகத் தென்றிசையில் மாறிவந்தன என்பர். (119)

### அம்பரீடன் நரமேதத்திற்குத் தக்க மைந்தனைத் தேடிச்செல்லல்

**683.** குதைவரி சிலைவாட் டானைக்
கோமக னம்ப ரீடன்
சுதைதரு மொழியன் வையத்
துயிர்க்குயி ராய தோன்றல்
வதைபுரி புருட மேதம்
வகுப்பவோர் மைந்தற் கொள்வான்
சிதைவிலன் கனகந் தேர்கொண்
டடவிக டுருவிச் சென்றான்.

குதை வரி சிலை வாள் தானைக்
கோமகன் அம்பரீடன்,
சுதை தரு மொழியன், வையத்து
உயிர்க்கு உயிர் ஆய தோன்றல்,
வதை புரி புருடமேதம்
வகுப்ப ஓர் மைந்தன் கொள்வான்
சிதைவு இலன் கனகம் தேர் கொண்டு
அடவிகள் துருவிச் சென்றான்.

பொ :—குதையுள்ளதும் கட்டமைந்ததுமான விற்களையும் வாள்களையும் கொண்ட சேனையோடு கூடிய கோமகனும், அமுதம் போலும் இன்சொற்களுடையவனும், உலகின் ஆன்மகோடிகட்கெல்லாம் உயிர்போல் அன்பிற் சிறந்தவனுமாகிய அம்பரீடன் என்பான், மனிதன் ஒருவனைக் கொன்று ஓமம் செய்வதாகிய புருடமேதம் புரிவதற்காக, இளைஞனொருவனைப் பொருள் கொடுத்து வாங்கும்பொருட்டு, முயற்சியிற் குறைவற்றவனாய்ப் பொற்காசுகளைத் தேரின்மேல் (நிறைய வைத்துக்) கொண்டு காடுகள் தோறும் தேடிச் செல்பவனானான்.

கு :—'வேள்வியைப் புரிவோன், அவ்வேள்விக்குரிய பசு காணாமற்போய்விடுமாயின், அதற்கு ஈடாக மனிதனொருவனைக் கொன்று ஓமஞ் செய்து யாகத்தை நிறைவேற்றுக' என்பது நூற்றுணிபாதலால் இந்திரனாற் கவரப்பட்ட யாகபசுவுக்குப் பிரதிசெய்ய விரும்பி அங்ஙனம் தேடலுற்றான் என்றும், உயிர்க்கொலையாயினும் வைதிககாரியத்தில் ஊற்றமுடையனாதலாலும், யாகத்திற் செய்யப்படும் நரவதை கொலையாகாது என்பதனாலும், வேள்விக் காரியத்தை முற்றுவிக்க முனைந்தானாதலின் அவனது இயற்கைக் குணங்கள் சிறப்பிக்கப்பட்டன என்றும் கூறுவர். (120)

அம்பரீடற்கு ரிசீகன் மகற்கொடை நேர்தல்

684. நற்றவ ரிசிகன் வைகு
 நனைவரும் பழுவம் நண்ணிக்
கொற்றவன் வினவ லோடு
 மிசைந்தனர் குமரர் தம்முள்
பெற்றவ ளிளவ லெற்கே
 யென்றனள் பிதாமுன் னென்றான்
மற்றைய மைந்த னக்கு
 மன்னவன் றன்னை நோக்கி.

நல் தவ ரிசிகன் வைகும்
 நனைவரும் பழுவம் நண்ணிக்
கொற்றவன் வினவ லோடும்,
 இசைந்தனர், குமரர் தம்முள்,
பெற்றவள், ' இளவல் எற்கே '
 என்றனள் ; ' பிதாமுன் ' என்றான் :
மற்றைய மைந்தன் நக்கு,
 மன்னவன் தன்னை நோக்கி.

பொ :—அங்ஙனம் சென்ற அம்பரீடமன்னன், சிறந்த தவ முனிவனுன ரிசிகன் வசிக்கும் அரும்புமலரும் சோலையை அடைந்து, (வந்த செய்தி கூறி, அவனுடைய மக்களில் ஒருவனை விலைக்குக்) கேட்ட அளவில், தன் புத்திரராயமைந்த மூவருள் 'இளையவன் எனக்கே உரியவன்' (அவனை விற்க முடியாது) என்று சொன்னுள், தாயாகிய ரிசிகர் மனைவி; தந்தையோ 'மூத்தவன் தனக்கே உரியவன்' என்ருன் ; எஞ்சிநின்ற நடுப்பிள்ளையான சுனச்சேபன் என்பான் (தன்னை விலைப்படுத்தற்குப் பெற்ருேர் உடம்பட்டதை அறிந்து) சிரித்து, அம்பரீடராசனைப்பார்த்து,

கு :—இது குளகம். 'தந்தை முதல்மகனிடத்தில், தாய் இளைய கான்முளைபால் சார்வர் அன்பு' என்ற உலகவசனப்படி, சுனச்சேபன் பெற்ருேர்களின் மனேபாவம் இருந்தது என்பதும், அதனுல் நடுமகன்பாடு திண்டாட்டமாயிற்றேனும், தன்மூலம் வறுமை நீங்கவே அவ்வன் இசையலாயினன் என்பதும் பிறவும் இக் கதைப் போக்கு உணர்த்துவதாகும். 'ரவிகுலதிலகன்' என்ற சீவக சிந்தாமணித் தொடர்போல 'ரிசிகன்' என ரகர இகரம் மொழி முதலில் வந்தது. (121)

இச்செய்யுளின்பின் 28 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின் வருமாறு ஒரு அதிகப்பாடல் காணப்படுகிறது :—

684(a) நின்றன னரச னேன்ரு னியெனைக் கொண்டு போகை
நன்றென மொழிந்து நின்ரு னல்கிய தாயை நோக்கி
இன்றெனைக்கொடுத்தியோவென்றிறைஞ்சினன் கசிந்துநின்ருன்
தன்றுணை மார்பிற் சேர்த்துத் தழுவலு மவனை நோக்கி.

**அம்பரீடன் சுனச்சேபனைப் பெற்றுக்கொண்டு செல்லுகையில் உச்சிப்போதாதல்**

**685.** கொடுத்தருள் வெறுக்கை வேண்டிற்
றெற்கமாம் விழுமங் குன்ற
எடுத்தெனை வளர்த்த தாதைக்
கென்றவற் றெழுது வேந்தன்
தடுப்பருந் தேரி னேறித்
தடையிலர் படர்த லோடும்
சுடர்க்கதிர்க் கடவுள் வானத்
துச்சியுஞ் சூழல் புக்கான்.

'கொடுத்தருள் வெறுக்கை வேண்டிற்று,
ஒற்கமாம் விழுமம் குன்ற
எடுத்து எனை வளர்த்த தாதைக்கு'
என்று அவன் தொழுது, வேந்தன்
தடுப்பு அரும் தேரின் ஏறித்
தடை இலர் படர்தலோடும்,
சுடர்க் கதிர்க் கடவுள் வானத்து
உச்சி அம் சூழல் புக்கான்.

பொ :—'என்னை எடுத்து வளர்த்த தந்தைக்கு வறுமைத்துன்பம் கெடும்படி, அவன் வேண்டிய செல்வத்தைக் கொடுத்தருள்வாயாக' என்று அரசனை நோக்கிக்கூறி. அத்தந்தையை வணங்கியவனைத் தடுத்தற்கரிய இரதத்தின்மேல் ஏறிக்கொண்டு, ஒருதடையுமில்லாதவராய் இருவரும் செல்லுகையில், ஒளிவிடும் கிரணங்களுடைய சூரியபகவான், வானத்தின் மத்தியபாகமான அழகிய இடத்தை அடைந்தான்.

கு :—தன்னை இதுவரை பேணிவளர்த்த தந்தைக்குப் பிரதியுபகாரமாகத் தானே பிறனுக்கு விலையாகப் புகுந்தான் என்பார், 'எடுத்து வளர்த்த தாதைக்கு வேண்டிற்றுக் கொடுத்தருள்' என்ருன் என்க. தேரின் ஏறி - தேரின் ஏற எனச் செயவெனெச்சமாக்குக. (122)

**சுனச்சேபன் கோசிகனைக்கண்டு வணங்குதல்**

**686.** அவ்வயி னிழிந்து வேந்த
னருங்கடன் முறையி னூற்றச்
செவ்விய குரிசி ருனுஞ்
சென்றன னியமஞ் செய்வான்
அவ்விய மவித்த சிந்தை
முனிவனை யாண்டுக் காணுக்
கவ்வையி னோடும் பாத
கமலம துச்சி சேர்த்தான்.

அவ்வயின் இழிந்து வேந்தன்
அருங்கடன் முறையின் ஆற்றச்,
செவ்விய குரிசில் தானும்,
சென்றனன் நியமம் செய்வான்,

அவ்வியம் அவித்த சிந்தை
முனிவனை ஆண்டுக் காணக்,
கவ்வையினோடும், பாத
கமலமது உச்சி சேர்த்தான்.

பொ :—(அப்போது) அம்பரீடன் (கோசிகன் தவம்புரியும்) அவ்விடத்தில் தேரினின்றும் இறங்கி, அரிய இடைக்காலக் கடமைகளை முறைப்படி செய்யாநிற்க, உத்தமனான சுனச்சேபனும் அக்கடமையைச் செய்யும்பொருட்டு (தேரினின்றும் இறங்கிப்) போயினன் ; அவ்விடத்தே பொறாமை முதலிய தீக்குணங்களை நீக்கிய தூய மனத்தினனான கோசிகமுனிவனை அவ்விளைஞன் கண்டு, துன்பத்துடனே அவன் திருவடித் தாமரைகளைத் தலைமேற் சூடினான் (தண்டனிட்டு வணங்கினான்).

கு:—பாதகமலமது - சாதியொருமை. (123)

**சுனச்சேபன் தன்குறையைக் கோசிகனிடம் கூறல்**

687. விறப்பொடு வணக்கஞ் செய்த
விடலையை யினிது நோக்கிச்
சிறப்புடை முனிவ னென்னே
தெருமரல் செப்பு கென்ன
அறப்பொரு ளுணர்ந்தோ யென்ற
ன்னையுந் தாதை தானும்
உறப்பொருள் கொண்டு வேந்தற்
குதவின ரென்றா னுற்றோன்.

விறப்பொடு வணக்கம் செய்த
விடலையை இனிது நோக்கிச்
சிறப்பு உடை முனிவன், 'என்னே
தெருமரல் ? செப்புக' என்ன,
'அறப்பொருள் உணர்ந்தோய் ! என்றன்
அன்னையும் தாதை தானும்
உறப் பொருள் கொண்டு, வேந்தற்கு
உதவினர்' என்றான் உற்றோன்.

பொ :—அச்சத்துடன் வணக்கம் புரிந்த அந்த இளைஞனைச் சீரியனான கோசிகமுனிவன் குளிர நோக்கி, 'நீ கலங்குதல் யாது

காரணத்தால்? சொல்லுக' என்று கேட்க, அன்பார்ந்த (உறவினனை) அவ்விளைஞன், 'தருமநூலின் உட்பொருளைத் தெரிந்த அறிஞ! என் அன்னையும் தந்தையும், மிகுதியான செல்வத்தைப் பெற்றுக்கொண்டு, அம்பரீடராசனுக்குப் (புருடமேத வேள்விக்காக) என்னை (விலைக்கு)க் கொடுத்துவிட்டார்கள்' என்று (நிகழ்ந்த செய்திகளைச்) சொல்லலானான்.

கு :—விறப்பு – ஈண்டு அச்சப்பொருளது ; 'விறப்பே வெரூஉப் பொருட்டுமாகும்' என்பது தொல்காப்பியம். (124)

**கோசிகன் சுனச்சேபனுக்குப் பிரதியாகத்**
**தன்மக்களில் ஒருவனைச் செல்லுமாறு கூறல்**

**688.** மைத்துன னோடு முன்னோள்
வழங்கிய முறைமை கேளாத்
தத்துற லொழிநீ யானே
தடுப்பெனின் னுயிரை யென்று
புத்திரர் தம்மை நோக்கிப்
போகவேந் தோடு மென்ன
அத்தகு முனிவன் கூற
வவர்மறுத் தகறல் காணா.

மைத்துனனோடு முன்னோள் வழங்கிய முறைமை கேளாத் 'தத்துறல் ஒழி நீ, யானே தடுப்பென் நின் உயிரை' என்று, புத்திரர்தம்மை நோக்கிப் 'போக வேந்தோடும்' என்ன அத்தகு முனிவன் கூற, அவர் மறுத்து அகறல் காணா.

பொ :—(தனக்கு) முன்பிறந்தவளும் (அவளுக்குக் கணவனாகித் தனது, மைத்துனனான ரிசிகனும், (இங்ஙனம் மகனை விலைக்குக்) கொடுத்துவிட்ட செய்கையைக் கேட்டு, தக்கோனாகிய அம்முனிவன், (சுனச்சேபனை நோக்கி) 'நீ அச்சமுறுதலைத் தவிர்க; யானே உன் உயிரைக் காப்பேன்' என்று அபயம் கூறி, தன் மைந்தர்களைப் பார்த்து, (உங்களில் ஒருவன்) 'அரசனுடன் போகுக' என்று சொல்ல, அம்மைந்தரனைவரும் அக்கட்டளையை மறுத்து ஒழிந்தது கண்டு.

கு ;—குளகம். மைத்துனன் – உடன் பிறந்தாள் கணவன். தடுத்தல் – காத்தல். (125)

### மறுத்த மைந்தர்களைக் கோசிகன் சபித்தல்

**689.** எழுங்கதி ரவனு நாணச்
சிவந்தன னிருக ணெஞ்சம்
புழுங்கினன் வடவை தீய
மயிர்ப்புறம் பொறியிற் றுள்ள
அழுங்கலில் சிந்தை யீர்நீ
ரடவிக டோறுஞ் சென்றே
ஒழுங்கறு புளிஞ ராகி
யுறுதுய ருறுக வென்றான்.

எழும் கதிரவனும் நாணச் சிவந்தனன் இரு கண்; நெஞ்சம் புழுங்கினன், வடவை தீய மயிர்ப் புறம் பொறியில் துள்ள, 'அழுங்கலில் சிந்தையீர் நீர் அடவிகள் தோறும் சென்றே, ஒழுங்கு அறு புளிஞர் ஆகி உறுதுயர் உறுக' என்றான்.

பொ — உதயசூரியனும் வெள்கும்படி இரண்டு கண்களும் செந்நிற மடைந்து, மனம் புழுங்கியவனாய், வடவையனலும் தீயும்படி உரோமத் துவாரங்கள் அனற்பொறிகளை வெளியிடப் பெருஞ் சினங்கொண்டு, தன் மைந்தர்களை நோக்கி, 'இரக்கமற்ற மனமுடையவர்களே! நீங்கள் காடுகளெங்கும் திரிந்து நாகரிகமில்லாத வேடர்களாய் மிக்க துன்பத்தை அடைவீர்களாக' என்று சபித்தனன்.

கு :—அழுங்குதல்–இரங்குதல்; (திருக்கோவை 226). வடவை–வடவாமுகாக்கினி. புளிஞர் - வேடர். (126)

### சுனச்சேபனுக்குக் கோசிகன் இரண்டு மந்திரங்களை உபதேசித்தல்

**690.** மாமுனி வெகுளி தன்னான்
மடிகலா மைந்தர் நால்வர்
தாமுறு சவர ராகச்
சபித்தெதிர் சலித்த சிந்தை
ஏமுற லொழிக வின்னே
பெறுகென விரண்டு விஞ்சை
கோமரு கனுக்கு நல்கிப்
பின்னருங் குறிக்க லுற்றான்.

மாமுனி வெகுளிதன்னால் மடிகலா மைந்தர் நால்வர்
தாம் உறு சவரர் ஆகச் சபித்து எதிர் 'சலித்த சிந்தை
ஏமுறல் ஒழிக; இன்னே பெறுக' என இரண்டு விஞ்சை
கோ மருகனுக்கு நல்கிப் பின்னரும் குறிக்கலுற்றான்.

பொ :—பெருந்தவ முனிவனான வசிட்டனது கோபத்தால் (முன்பு) இறவாதிருந்த தன் புத்திரர் நால்வரும், இழிவுமிக்க வேடர்களாகும்படி கோசிகன் சபித்துவிட்டு (அதன்பின்பு) தன் எதிர்நின்ற மருமகனான சுனச்சேபனுக்கு, 'கலங்கின மனத்தோடு துன்பமுறுதலை நீங்குக; இப்பொழுதே இரண்டு மந்திரங்களைப் பெற்றுக்கொள்க' என்று (அவற்றை உபதேசம் மூலம்) கொடுத்தருளிப் பின்னரும் கூறுவானானான்.

கு :—மாமுனி - வசிட்டன்; இம்முனிவரது சினத்தால் கோசிக புத்திரர் பலர் மடிந்தமை நூறாஞ் செய்யுளிற் காண்க. நால்வரும் என்ற முற்றும்மை தொக்கது, அரசனான கோசிகனுக்கு உடன் பிறந்த முறையினள் மகனாதலின், 'கோமருகனுக்கு' என்றார்; கோமகன் என்பது போலக் கோமருகன் எனப்பட்டது. (127)

### சுனச்சேபனுக்குக் கோசிகன் விடைகொடுத்தல்

691. அரசனோ டேகி யூபத்
தணைக்குபிம் மறையை யோதின்
விரசுவர் விண்ணு ளோரும்
விரிஞ்சனும் விடைவ லோனும்
உரைசெறி வேள்வி முற்று
முன்னுயிர்க் கீறுண் டாகா
பிரசமென் றாரா யென்னப்
பழிச்சொடும் பெயர்ந்து போனான்.

அரசனோடு ஏகி, யூபத்து
அணைக்குபு, இம் மறையை ஓதின்,
விரசுவர் விண்ணுளோரும்
விரிஞ்சனும் விடைவலோனும்;
உரை செறி வேள்வி முற்றும்;
உன் உயிர்க்கு ஈறு உண்டாகா
பிரசம் மென் தாராய்! என்னப்,
பழிச்சொடும் பெயர்ந்து போனான்.

பொ :—'தேனுடைய பூமாலை தரித்தோய்! அம்பரீடராசனுடன் சென்று (அவன்) யூபத்தறியிற் கட்டும்போது இந்த மந்திரங்களைச் சொன்னால், தேவர்களும் பிரமனும் இடபவாகனனான சிவபிரானும் (தத்தம் அவிர்ப்பாகத்தைப் பெற) வந்து சேர்வார்கள்; புகழ்மிக்க வேள்வியும் பூர்த்தியாகும்; உன் பிராணனுக்கும் அபாய முண்டாகாது' என்று (தன் மருகனை நோக்கிச்) சொல்ல, (அதுகேட்டு அவன்) வணங்கித் துதி மொழிகள் கூறியவனாய், (அவ்விடம் விட்டு அரசனுடன்) சென்றான்.

கு :—அணைக்குபு அணைக்க; ஞாயிறு படுபு வந்தான் (தொல்–சொல்-233 நச்) என்புழிப்போல. பிரமசாரியான சுனச்சேபனுக்கு மாலைகூறியது, அவன் மாலையணிந்து யாகபசுவாகக் கொண்டு போகப்படுதலின் என்பர். (128)

### அம்பரீடன் வேள்வி முடிதலும் கோசிகமுனிவன் வடதிசை செல்லுதலும்

**692.** மறைமுனி யுரைத்த வண்ண
மனத்துற மைந்த னாயச்
சிறையுறு கலுழ னன்னஞ்
சேமுதற் பிறவு மூரும்
இறைவர்தொக் கமரர் சூழ
விளவறன் னுயிரும் வேந்தன்
முறைதரு மகமுங் காத்தார்
வடதிசை முனியுஞ் சென்றான்.

மறை முனி உரைத்த வண்ணம்,
மனத்து உற மைந்தன் ஆயச்,
சிறை உறு கலுழன் அன்னம்
சே முதல் பிறவும் ஊரும்
இறைவர் தொக்கு, அமரர் சூழ,
இளவல்தன் உயிரும் வேந்தன்
முறைதரு மகமும் காத்தார்,
வடதிசை முனியும் சென்றான்.

பொ :—கோசிகமுனிவன் கூறியபடியே அந்தக் குமாரன் அம் மந்திரங்களை உள்ளாரத் தியானிக்க (அப்பொழுது) சிறகு வலிமை பெற்ற கருடனும் அன்னப்புள்ளும் இடபமும் முதலாகப் பிறவும்

உள்ள ஊர்திகளை ஏறி நடத்தும் தலைமைத் தேவர்கள், அமரர் கள் தம்மைச் சூழ்ந்துவரும்படி (அவ்வேள்விச்சாலைக்கு) திரண்டு வந்து, அவ்விளைஞனது உயிரையும், வேதமுறைப்படி செய்யப் படும் அந்த வேள்வியையும் (அழிவுறாதபடி) பாதுகாத்தார்கள். கோசிகமுனியும் (மேற்கில் தன் தவம் முற்றுப்பெறுமையால்;) வடதிசை நோக்கிப் போயினன்,

கு :—மறை மனத்து உற ஆய என இயைக்க. ஆய்தல் – சிந் தித்தல். தியானித்தல்: பிறவும் ஊரும் அமரர் – வெள்ளானை, ஆட்டுக்கடா, எருமைக்கடா முதலிய வாகனங்களை நடத்தும் இந் திரன், அக்கினி, இயமன் முதலிய தேவர்கள். (129)

### கோசிகன் தவத்தால் எல்லா உலகும் சலித்தல்

**693.** வடாதிசை முனியு நண்ணி
மலர்க்கரம் நாசி வைத்தாங்
கிடாவுபிங் கலையா னைய
விதயத்தா டெழுத்தொன் றெண்ணி
விடாதுபல் பருவ நிற்ப
மூலமா முகடு விண்டு
தடாதிருட் படலை மூடச்
சலித்ததெத் தலமுந் தாவி.

வடாதிசை முனியும் நண்ணி,
மலர்க்கரம் நாசி வைத்து, ஆங்கு
இடாவு பிங்கலையால் நைய,
இதயத்தூடு எழுத்து ஒன்று எண்ணி,
விடாது பல்பருவம் நிற்ப,
மூலமா முகடு விண்டு,
தடாது இருள் படலை மூடச்
சலித்தது எத் தலமும் தாவி.

பொ :—கோசிகமுனிவனும் வடதிசையை யடைந்து அவ் விடத்தே பூப்போன்ற தன் கைவிரல்களை நாசியிடமாகவைத்து இடைகலையானது பிங்கலையோடு அடங்கும்படி (பிராணயாமஞ் செய்து), மனத்திடையே பிரணவ மகாமந்திரத்தைத் தியானித் துக்கொண்டு, பல ஆண்டுகள் வரை (தவத்தில்) நிலைத்துநிற்க, அப்போது மூலாக்கினியால் அவனது பெரிய கபாலம் வெடித்து

விரிந்து தடையுறுதபடி இருட்படலம் மேலெழுந்து எங்கும் கவிந்து நின்ற அளவிலே, எல்லாவுலகும் சலிப்பதாயின.

கு :—இடைகலை என்னும் நாடியினின்று இடமூக்கால் விடும் சுவாசத்தை இடைகலை என்றும் பிங்கலை என்னும் நாடியினின்று வலமூக்கால் விடும்சுவாசத்தைப் பிங்கலை என்றும், இவை பிராணா யாமஞ் செய்யும்போது நிகழ்வன என்றும் கூறுவர்; யோகநூல் களுள் இதன் விவரம் காண்க. வடாது திசை என்பது வடா திசை எனத் தொக்கது, இடா - என்ற வடசொல் உகரச்சாரியை பெற்று இடாவு என நின்றது. இருட்படலை – இருளின் தொகுதி. இருள் என்றது இருள் போன்ற புகையை; அடுத்த கவியை நோக் குக.

(130)

### கோசிகன் தவக்கனலால் புகை விம்முதல் 694—695

**694.** எயிலெ ரித்தவன் யானையு ரித்தநாட்
★ பயிலு றுத்துரி போர்த்தநன் பண்பெனப்
புயல்வி ரித்தெழுந் தாலெனப் பூதலம்
குயிலு றுத்திக் கொழும்புகை விம்மவே.

எயில் எரித்தவன் யானை உரித்த நாள்,
பயில் உறுத்து உரி போர்த்த நன் பண்பு எனப்,
புயல் விரித்து எழுந்தால் எனப், பூதலம்
குயில் உறுத்திக், கொழும் புகை விம்மவே.

பொ :—திரிபுரத்தை எரித்த சிவபிரான், யானையை உரித்த காலத்தில், உடலோடு செறியச்செய்து அவ் யானைத்தோலை மேலே போர்த்துக்கொண்ட சிறந்த தன்மைபோலவும், மேகங் கள் எங்கும் பரவியெழுந்தாற்போலவும்; பூமியிடமுழுதும் நெருங்கச்செய்து அந்த (மூலாக்கினியின்) தூமமானது மிகுதி யாக,

கு :—குளகம்.

(131)

**695.** தமந்தி ரண்டுல கியாவையுந் தாவுற
நிமிர்ந்த வெங்கதிர்க் கற்றையு நீங்குறக்
கமந்த மாதிரக் காவலர் கண்ணொடுஞ்
சுமந்த நாகமுங் கண்சும் புளித்தவே.

தமம் திரண்டு உலகு யாவையும் தாவுற,
நிமிர்ந்த வெங்கதிர்க் கற்றையும் நீங்குறக்,
கமந்த மாதிரக் காவலர் கண்ணொடும்
சுமந்த நாகமும், கண் சும்புளித்தவே,

பொ :—இருள் ஒருங்கு சேர்ந்து உலகங்கள் எல்லாம் பரவி நிற்க, (அதனால்) சூரியனது மிகுந்த கடுங் கிரணத்தொகுதியும் மறைபட்டுப்போக, (வலி) நிறைந்த திக்குப்பாலகர் கண்களுடனே புவிதாங்கும் திக்குயானைகளின் கண்களும் கூசலாயின.

கு :—நிறைவுப் பொருளதான 'கமம்' என்ற உரிச்சொல் அடியாகக் கமந்த என்ற வினைவிகற்பம் வந்தது (தொல். உரி. 59), சும்புளித்தல் - கூசுதல்; சிம்புளித்தல் எனவும் வழங்குப (பெருங்கதை 4-14-47). (132)

**கோசிகன் தவத்தால் உலகத்துத் தோன்றிய மாறுபாடு**

**696.** திரிவ நிற்ப செகதலத் தியாவையும்
வெருவ லுற்றன வெங்கதிர் மீண்டன
கருவி யுற்ற ககனமெ லாம்புகை
உருவி யுற்றிட வும்பர் துளங்கினர்.

திரிவ நிற்ப செகதலத்து யாவையும்
வெருவல் உற்றன, வெம் கதிர் மீண்டன,
கருவி உற்ற ககனம் எலாம் புகை
உருவி உற்றிட, உம்பர் துளங்கினர்.

பொ ;—மின்னல், முழக்கம் முதலிய தொகுதியுடைய விண்ணிடமுழுதும் புகையானது ஊடுருவிச் சென்றதனால், புவியிடத்தில் சரப்பொருள்களும் அசரப்பொருள்களும் ஆகிய யாவும் அஞ்சுதலை யடைந்தன; கொடிய சூரிய கிரணங்களும் (ஒளி வீசாமல்) திரும்பிவிட்டன; தேவர்களும் நடுக்கமுற்றார்கள். (133)

**தேவர்கள் கோசிகனைச் சந்தித்தல்**

**697.** புண்ட ரீகனும் புட்டிருப் பாகனும்
குண்டை யூர்தி குலிசியு மற்றுள
அண்டர் தாமும்வந் தவ்வயி னெய்திவே
றெண்ட போதனன் றன்னை யெதிர்ந்தனர்.

புண்டரீகனும் புள் திருப் பாகனும்
குண்டை ஊர்தி குலிசியும் மற்று உள
அண்டர்தாமும் வந்து அவ்வயின் எய்தி, வேறு
எண் தபோதனன் தன்னை எதிர்ந்தனர்.

பொ ;—தாமரைமலரில் வாழும் பிரமனும், கருடாரூடனான திருமாலும், இடபாரூடனான சிவபிரானும், வச்சிராயுதமுடைய இந்திரனும் மற்றுமுள்ள தேவர்களும் தனித்தனி வந்து அவ்விடம் சேர்ந்து யாவராலும் மதிக்கப்படும் தவச்செல்வனான முனிவரனைச் சந்தித்தார்கள். (134)

### தேவர்கள் கோசிகனை நீ பிரமவிருடியாவாய் எனல்

**698.** பாதி மாமதி சூடியும் பைந்துழாய்ச்
சோதி யானுமத் தூய்மல ராளியும்
வேத பாரகர் வேறிலர் நீயலால்
மாத போதன வென்ன வழங்கினர்.

பாதி மா மதி சூடியும், பைந்துழாய்ச்
சோதியானும், அத் தூய் மலராளியும்,
'வேத பாரகர் வேறு இலர், நீ அலால்,
மா தபோதன! என்ன வழங்கினர்.

பொ :—பாதியான (கலைகுறைந்த) பெரிய சந்திரனைச் சூடிய சிவபிரானும், பசிய துழாய்மாலை அணிந்த சோதியான திருமாலும், தூய தாமரைமலரில் உறையும் பிரமனும் (ஆகிய திரிமூர்த்திகளும்) 'சிறந்த தவச்செல்வனான பெருமுனிவனே! வேதங்களைக் கரைகண்டு உணர்ந்தவன் நீ அல்லாமல் வேறு எவரும் இல்லை' என்று உபசாரமொழி கூறிப் புகழ்ந்தார்கள்,

கு :—'வேத பாரகனும் மாதபோதனனும் நீயே' என்றதனால் 'பிரம விருடியே நீ' என்றபடியாம்; திருமகள் வாழிடமாதலின் தாமரை தூய்மலர் எனப்பட்டது. (135)

22, 29 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் பின்வருமாறு ஒரு மிகைச் செய்யுள் காணப்படுகிறது.

698 (a) என்றுகூறி யிமையவர் தங்கண்முன்
வன்றபோத வதிட்டன்வந் தென்னையே
நின்றவந்தண னேயென நேர்ந்தவன்
வென்றிவெந்திறற் றேவர் வியப்புற.

### தேவர்கள் தம்மிடஞ் சார்தல்

**699.** அன்ன வாசகங் கேட்டுண ரந்தணன்
சென்னி தாழ்ந்திரு செங்கம லங்குவித்
துன்னு நல்வினை யுற்றதென் றோங்கினன்
துன்னு தேவர்தஞ் சூழலுட் போயினர்.

**அன்ன வாசகம் கேட்டு உணர் அந்தணன்,**
**'சென்னி தாழ்த்து, இரு செங்கமலம் குவித்து,**
**உன்னும் நல் வினை உற்றது,' என்று ஓங்கினன்;**
**துன்னு தேவர், தம் சூழலுள் போயினர்,**

பொ :—(பெருந்தேவர்களின்) அந்த வாசகத்தைச் செவியுற்றறிந்த அந்தணத்தன்மையடைந்த கௌசிகமுனிவன், தலை வணங்கித் தாமரைபோலும் இருகரங்களையும் கூப்பித், தான் கருதிய நற்றவப்பயன் தனக்கு (இன்று) வந்து பொருந்தியது-என்று மனம் பூரிப்பு அடைந்தான்; வந்து சேர்ந்த தேவர்களும் தத்தம் தலத்துக்குச் சென்றார்கள். (136)

### கோசிகன் வரலாற்றைச் சதானந்தர் முடித்தல்

**700.** ஈது முன்னர் நிகழ்ந்த திவன்றுணை
மாத வத்துயர் மாண்புடை யாரிலை
நீதி வித்தகன் றன்னரு ணேர்ந்தனிர்
யாது மக்கரி தென்றன னீறிலான்.

**'ஈது முன்னர் நிகழ்ந்தது; இவன் துணை**
**மாதவத்து உயர் மாண்பு உடையார் இலை;**
**நீதி வித்தகன் தன் அருள் நேர்ந்தனிர்,**
**யாது உமக்கு அரிது?' என்றனன் ஈறு இலான்.**

பொ :—'முன்னே நடந்தேறிய வரலாறு இதுவாம். இம்முனிவரனுக்கு ஒப்பாகப் பெருந்தவத்தால் உயர்ந்த மாட்சிமையுடையவர் (வேறெவரும்) இல்லை; நியமநீதி தவறாதவனும் எல்லாம் வல்லவனுமான இத்தபோதனரது கருணையை நீங்கள் பெற்றுள்ளீர்கள். (ஆதலால்) உங்கட்குச் செயற்கரிய காரியம் யாதுள்ளது?' என்று, (இராம லட்சுமணர்களைநோக்கிச்) சொல்லி (வரலாற்றை) முடித்தான், எல்லையற்ற (நற்குணத்த)வனான சதானந்தமுனிவன். (137)

### சதானந்தர் குமாரர்களை வாழ்த்திச் செல்லல்

**701.** என்று கோதமன் காதலன் கூறிட
வென்றி வீரர் வியப்பொ டுவந்தெழா
ஒன்று மாதவன் றூடொழு தோங்கிய
பின்றை யேத்திப் பெயர்ந்தனன் றன்னிடம்.

என்று கோதமன் காதலன் கூறிட,
வென்றி வீரர் வியப்பொடு உவந்து எழா,
ஒன்றும் மாதவன் தாள் தொழுது ஓங்கிய
பின்றை, ஏத்திப் பெயர்ந்தனன் தன்னிடம்.

பொ :—என்று (இவ்வாறு) கௌதமகுமாரனுன சதானந்த முனிவர் சொல்ல. வெற்றியுள்ள வீரர்களாகிய இராமலட்சுமணர்கள் அதிசயத்தோடு கேட்டு மகிழ்ந்தெழுந்து, பெருமைபொருந்திய தவத்தோனுன அம்முனிவரை விழுந்து வணங்கி எழுந்த பின்பு, அவன் (அக்குமாரர்களை) வாழ்த்திவிட்டுத் தன்னிடத்துக்குப் போயினுன். (138)

### இராமன் சீதையை எண்ணியவண்ணமாயிருத்தல்

**702.** முனியுந் தம்பியும் போய்முறை யாற்றமக்
கினிய பள்ளிக ளெய்தினர் பின்னிருட்
கனியும் போல்பவன் கங்குலுந் திங்களும்
தனியுந் தானுமத் தையலு மாயினுன்.

முனியும் தம்பியும் போய், முறையால் தமக்கு
இனிய பள்ளிகள் எய்தினர், பின், இருள்
கனியும் போல்பவன், கங்குலும் திங்களும்
தனியும் தானும் அத் தையலும் ஆயினுன்.

பொ:—கோசிகமுனிவனும் இலக்குமணனும் சென்று வழக்கப் படியே தத்தமக்கு இனிய படுக்கையிடங்களை அடைந்தார்கள். பின்பு, இருள் மயமான கனியை ஒப்பவனுன இராமபிரான், இரவும், சந்திரனும், தனிமைப்பாடு என்ற ஒன்றும், தானும், அச் சீதாபிராட்டியுமாக ஆயினுன்.

கு :—இரவில் வெண்ணிலா வீசுங்கால் தனியனுகத் தான் இருந்தபொழுது, சீதாபிராட்டி பற்றிய சிந்தனையேயாகி

அவளை உருவெளிப்பாட்டிற் கண்டு காதன்மயக்கமுற்ற நிலையில், துயிலின்றியிருந்தான் என்பது கருத்து. "வாவி புள்ளொலி மாறிய மாலையில், நாவலூரரும் நங்கை பரவையாம், பாவைதந்த படர் பெருங்காதலும், ஆவி சூழ்ந்த தனிமையும் ஆயினர்" (திருத்தொண்டர்பு. தடுத்தாட் 163) என்ற சேக்கிழார்வாக்கு இங்கு ஒப்பிடத்தகும். இருட்கனி களம் பழம் எனினும் ஆம்.

(139)

## சீதையின் உருவெளிப்பாடுகண்டு இராமபிரான் தனனுட்கூறுதல் 703—710

**703.** விண்ணி னீங்கிய மின்னுரு விம்முறை
பெண்ணி னன்னலம் பெற்றதுண் டேகொலோ
எண்ணி னீதல தொன்றறி யேனிரு
கண்ணி னுள்ளுங் கருத்தினுங் காண்பனால்.

விண்ணின் நீங்கிய மின் உரு, இம்முறை
பெண்ணின் நன்னலம் பெற்றது உண்டே கொல்! ஓ,
எண்ணின் ஈது அலது ஒன்று அறியேன், இரு
கண்ணின் உள்ளும் கருத்தினும் காண்பன் ஆல்.

பொ:—மேகத்தினின்று நீங்கின மின்னலின் வடிவம் இவ்வாறு பெண்ணின் பேரழகைப்பெற்றுவந்தது உண்டேயோ; இத்தன்மையல்லது வேறு ஒன்றும் தெரிந்திலேன்; இத்தகைய வடிவத்தை இரண்டு கண்களிலும் மனத்துள்ளும் நான் காண்கின்றேன்,

கு:—முன் கன்னிமாடத்தில் நின்ற சானகியை 'மின்னரசென்னும்படி நின்றாள்' என்றும், அப்பிராட்டியைக் காண நேர்ந்த இராமபிரானை 'மின்னின் மின்னிய மேனி கண்டான்' (மிதிலை 82) என்றும் கூறியவற்றுக்கேற்ப, பெண்ணுருப்படைத்த மின்னல் என, பெருமான் கண்ட உருவெளிப்பாடு சிறப்பிக்கப்படுகின்றது, அவ்வுருவம் அடுத்தடுத்துத் தோன்றியும் மறைந்தும் நிகழ்வதற்கு மின்னலுருவம் ஏற்புடைத்தாதலும் அறியத்தகும். கண்ணினுள்ளும் கருத்தினும் காண்பன் - புறக்கண்ணாலும் அகக்கண்ணாலும் காண்கின்றேன் என்றவாறு.

(140)

**704.** வள்ளச் சேக்கைக் கரியவன் வைகுறும்
வெள்ளப் பாற்கடல் போன்மிளிர் கண்ணினள்
அள்ளற் பூமக ளாகுங்கொ லோவென
துள்ளத் தாமரை யுள்ளுறை கின்றதால்.

வள்ளச் சேக்கைக் கரியவன் வைகுறும்
வெள்ளப் பாற்கடல் போல் மிளிர் கண்ணினள்,
அள்ளல் பூமகள் ஆகுங் கொலோ! எனது
உள்ளத் தாமரையுள் உறைகின்றதால்.

பொ:—நீரில் மிதக்கும் தோணி போன்ற ஆதிசேடனாகிய படுக்கையையுடைய கருநிறத்திருமால் பள்ளிகொள்ளும் நீர் மிகுதியுள்ள பாற்கடல் போலப் பிறழும் கண்களுள்ள நங்கை என் இதய கமலத்தில் உறைவதால், செந்தாமரைமலரில் (எப்போதும்) வாழும் திருமகள் ஆவளோ?

கு;—வள்ளம்-புணை, தோணி. 'வள்ளப்பட்டன மகரக்கடல்' (சுந்தர – அட்சகுமா 28) என்பர். ஆதிசேடனாகிய பள்ளியணை நீர்வெள்ளத்திடையுள்ள தோணிபோன்றிருத்தலின், 'வள்ளச் சேக்கை' என்றார். 'நீள்கடலுள் என்றும் புணையாம் ......திருமாற் கரவு' என்றார் பெரியாரும் (முதல்திருவந்தாதி–53). வள்ளற் சேக்கை என்று பாடங்கொண்டு, திருமாலுக்கு அணை குடை சிங்காதனம் முதலியனவாகத் தன்னையே அளிக்கும் வண்மையுடைய ஆதிசேடன் என்று பொருள்கூறுவாரும் உளர், பிராட்டியின் கண்கள் வெண்ணிறமும் கருவிழிகளுமுடையவாய் மிளிர்தலின், கரியவன் வைகுறும் பாற்கடலுக்கு ஏற்ற உவமேயமாயதென்க. கரியவன் திருமால்; கண்மணியான பாவையைக் 'கிருட்டினன்' என்பது உலகவழக்காதலுங் காண்க, (141)

**705.** அருளி லாளெனி னும்மனத் தாசையால்
வெருளு நோய்விடக் கண்ணின் விழுங்கலால்
தெருளி லாவுல கிற்சென்று நின்றுவாழ்
பொருளெ லாமவள் பொன்னுரு வாயவே.

அருள் இலாள் எனினும், மனத்து ஆசையால்,
வெருளும் நோய் விடக் கண்ணின் விழுங்கலால்,
தெருள் இலா உலகில் சென்று நின்று வாழ்
பொருள் எலாம், அவள் பொன் உரு ஆயவே.

பொ :—(என் பக்கல்) கருணையில்லாதவளாயினும், என்மனக் காதலால் கலக்க மடைவிக்கும் காமநோய் நீங்குமாறு என் கண்களால் அவளை நான் விழுங்கிவிட்டமையின் தெளிவில்லாத இவ்வுலகிலே சராசரங்களான எல்லாப் பொருள்களும் அந்நங்கையின் பொன்மயமான வடிவமேயாகிவிட்டன.

கு :—அருளிலாள் – தானுற்ற நோயினைத் தன்னை உடனே அணைந்து தணித்தருளாதவள்; அத்தகைய அருளை இயல்பில் உடையவளே சானகி என்பது, அவள் குறிப்புக்களால் உணரப் பட்டமையின், 'அருளிலாளெனினும்' என்றார். சென்று நின்று வாழ்பொருள்—சர அசரங்களாகிய பொருள்கள். 'சென்று நின்று வாழ் உயிரெலாம்' என்றார் முன்னரும் ( அரசியல்– 10). இதனால் ''நோக்குவவெல்லாம் அவையே போறல்'' என்ற அவத்தை வகை கூறப்பட்டபடி. (142)

**706.** பூணு லாவிய பொற்கல சங்களென்
ஏணி லாகத் தெழுதல வென்னினும்
வாணி லாமுறு வற்கனி வாய்மதி
காண லாவதோர் காலமுண் டாங்கொலோ.

**பூண் உலாவிய பொன் கலசங்கள், என்**
**ஏண் இல் ஆகத்து எழுதல என்னினும்,**
**வாள் நிலா முறுவல் கனிவாய் மதி,**
**காணல் ஆவது ஓர் காலம், உண்டாங்கொலோ.**

பொ:—அணிகலன்கள் அசையப்பெற்ற பொற்கலசங்கள் போலும் கொங்கைகள், மதிப்பற்ற என் மார்பிடையே அழுந்திப் பதியாமற்போயினும், ஒளிகொண்ட சந்திரகாந்திபோலும் புன் முறுவலையும் கோவைப்பழம்போலும் அதரத்தையும் உடைய (அவளது முக) சந்திரனை (மீண்டும்) பார்க்கக் கூடுவதோர் கால (மேனு)ம் உண்டாகுமோ?

கு:—'முந்தி யென்னுயிரை யம் முறுவலுண்டதே' என்று பிராட்டி தன் விரகதாபத்துக் கூறியதனால், முன் நிகழ்ந்த உள்ளப் புணர்ச்சியில் பிராட்டியைக் கண்டபோது, புன்முறுவற்குறிப்பினைப் பெருமான் வெளிப்படுத்தியவர் என்பது புலப்படும். அத்தகைய முறுவலையே பிராட்டியிடமும் தான் கண்டதைப் புலப்படுத்துவார். 'வாணிலா முறுவற் கனிவாய் மதி' என்றார். யான்நோக்குங்காலை நிலநோக்கும் நோக்காக்கால் – தானோக்கி

மெல்ல நகும்' என்றவாறு. முறுவற்குறிப்பை இராமன் கண்ட துண்டு என்பது இதனால் பெறப்படும். அம் முறுவலைக் கண்ட பெருமான், அதன் அருகிலுள்ள அதரத்தையும் கண்டு, 'முறுவற் கனி வாய்மதி' என்று உடன் கூறினர் என்க. (143)

**707.** வண்ண மேகலைத் தேரொன்று வாணெடுங்
கண்ணி ரண்டு கதிமுலை தாமிரண்
டுண்ணி வந்த நகையுமென் றொன்றுண்டால்
எண்ணுங் கூற்றினுக் கித்தனை வேண்டுமோ.

வண்ண மேகலைத் தேர் ஒன்று வாள் நெடுங்
கண் இரண்டு கதிமுலை தாம் இரண்டு
உள் நிவந்த நகையும் என்று ஒன்று உண்டு ஆல்
எண்ணும் கூற்றினுக்கு இத்தனை வேண்டுமோ!

பொ:—அழகிய மேகலாபரணம் அணிந்த தேர்த்தட்டுப் போலும் அல்குல் ஒன்றும், வாள்கள் போன்ற கண்கள் இரண்டும், பெருத்த தனங்கள் இரண்டும், உள்ளிடமாகப் பொலிந்த புன்முறுவலென ஒன்றும் உண்டு; என்னைக் கொல்ல எண்ணு கின்ற கூற்றினுக்கு இத்தனை கருவிகளும் வேண்டுமோ.

கு :—இவற்றுள் ஒன்றே என்னை வருத்தப் போதியது என்பது கருத்து. ''பண்டறியேன் கூற்றென்பதனை யினியறிந்தேன், பெண் டகையாற் பேரமர்க்கட்டு' (குறள் 1083) என்பது இங்கு ஒப் பிடத்தகும். (144)

**708.** கன்ன லின்கருப் புச்சிலை யான்விரைப்
பொன்னை முன்னிய பூங்கணை மாரியால்
என்னை யெய்து தொலைக்குமென் றாலினி
வன்மை யென்னுமி தாரிடை வைகுமே.

**கன்னல் இன் கருப்புச் சிலையான், விரைப்**
**பொன்னை முன்னிய, பூங்கணை மாரியால்**
**என்னை எய்து, தொலைக்கும் என்றால், இனி**
**வன்மை என்னும் இது, ஆரிடை வைகுமே?**

பொ :—சர்க்கரைப் பாகின் இனிமைக்கு மூலமான கரும்பினை வில்லாகக் கொண்ட காமன், திருமகளான அந்நங்கையை நினைந்து வருந்தும்படி பூங்கணை மழையால் எய்து (எவர்க்கும் வலி தொலையாத) என்னை வலி தொலைப்பான் என்றால், வலிமை என்று கூறப்படும் குணம் யாவரிடத்திலே நிலைக்கக்கூடியது?

கு :—கன்னல் இன் கரும்பு-சர்க்கரைப்பாகின் இனிமைக்குரிய கரும்பு என்றபடி. விரைப் பொன் — தெய்வமணங்கமழும் திரும கள் போன்ற பெண். முன்னிய - நினைக்கும்படி; செய்யிய வென் னும் இவ் வினையெச்சம் 'எய்து' என்பதனோடு இயையும்.

(145)

**709.** கொள்ளை கொள்ளக் கொதித்தெழு பாற்கடற்
பள்ள வெள்ள மெனப்பட ருந்நிலா
உள்ள வுள்ள வுயிரைத் துருவிட
வெள்ளை வண்ண விடமுமுண் டாங்கொலோ.

கொள்ளை கொள்ளக் கொதித்து எழு பாற்கடல்
பள்ள வெள்ளம் எனப் படரும் நிலா,
உள்ள, உள்ள உயிரைத் துருவிட,
வெள்ளை வண்ண விடமும் உண்டாங் கொலோ.

பொ :—(உலக முழுதையும்) கொள்ளை கொள்ளுதற்குப் பொங்கியெழுகின்ற பாற்கடலினது ஆழமான நீர் வெள்ளம் போலப் பரவியுள்ள நிலவானது, (அந் நங்கையை) நினைப்பதனால் தரித்துள்ள என் உயிரை அரிப்பதால், வெண்மை நிறமுள்ளதோர் விடமும் உலகில் உள்ளதுபோலும்!

கு:—கொள்ளை கொள்ளுதல் -ஒருங்கு கவர்ந்து தன்வசமாக் குதல். கருநிறமான விடம் தவிர வெண்ணிற விடமும் உண்டு போலும் என நிலாவினைக் கூறியவாறு. (146)

**710.** ஆகு நல்வழி யல்வழி என்மனம்
ஆகு மோவதற் காகிய காரணம்
பாகு போல்மொழிப் பைந்தொடி கன்னியே
ஆகும் வேறிதற் கையுற வில்லையே.

ஆகும் நல்வழி அல்வழி என் மனம்
ஆகுமோ, அதற்கு ஆகிய காரணம்,
பாகு போல் மொழிப் பைந்தொடி, கன்னியே
ஆகும், வேறு இதற்கு ஐயுறவு இல்லையே.

பொ :—ஆக்கத்துக்குரிய நல்வழியல்லாத தீய நெறியில் என் நேர்மையான மனம் செல்லக்கூடியதாமோ? (அங்ஙனமாகவும் என் மனம் இம் மங்கைபாற்) காதல்கொண்டு சென்றதற்குரிய காரணம், பாகுபோலும் இன்மொழியும் பசும்பொற்றொடியு முடைய இந்நங்கை, (திருமணமாகாத) கன்னிகையே ஆவள்; இதற்கு ஐயப்படவேண்டியதொன்றுமில்லை.

கு:—காளிதாச மகாகவி, தம் சாகுந்தல நாடகத்தில் "சான்றோர், ஐயப்பாட்டிற்குரிய இடங்களில் தம் அந்தக்கரணத்தின் ஆழ்ந்த ஈடுபாட்டையே பற்றுக்கோடாகக் கொள்வர்" (அங்கம், 1. சுலோ. 20) என்று பாடுதல் இங்கு ஒப்பிடத்தக்கது. (147)

## சந்திரன் மறைதல் 711-712

**711.** கழிந்த கங்கு லரசன் கதிர்க்குடை
விழுந்த தென்னவு மேற்றிசை யாள்சுடர்க்
கொழுந்து சேர்நுதற் கோதறு சுட்டிபோய்
அழிந்த தென்னவு மாழ்ந்தது திங்களே.

கழிந்த கங்குல் அரசன் கதிர்க் குடை
விழுந்தது என்னவும், மேல் திசையாள் சுடர்க்
கொழுந்து சேர் நுதல் கோது அறு சுட்டி போய்
அழிந்தது என்னவும், ஆழ்ந்தது திங்களே.

பொ :—இறந்துபோன இரவான அரசனது ஒளியுள்ள வெண் கொற்றக்குடை கீழே விழுந்ததுபோலவும், மேற்குத் திசையான மங்கையது ஒளிக் கொழுந்து பொருந்தியதும் நெற்றியிலணிந்ததுமான மாசற்ற சுட்டி என்னும் அணியானது கெட்டழிந்தது போலவும், சந்திரமண்டலம் மேல் கடலில் ஆழ்ந்தது.

கு :—வெண்கொற்றக் குடைவீழ்தல் – அரசன் ஒழிந்தநிலையையும், அவன் தேவியின் நெற்றிச்சுட்டி அழிந்தமை மேற்றிசையரசியின் துக்கக்குறியையும் உணர்த்தும் என்க. திலகம் இடாமை, நெற்றிச்சுட்டிஅணியாமை முதலியன கணவரையிழந்த

மகளிர்க்கு உரியவை. மேற்குத் திசை பெண்பாலாக உருவகிக்கப் படுதலை 'பால்வாய்ப் பிறைப்பிள்ளை ஒக்கலைக்கொண்டு பகலிழந்த மேல்பாற்றிசைப்பெண் புலம்புறு மாலை' (35) என்ற திருவிருத்தப் பாசுரத்தாலும் அறிக. (148)

**712.** வீசு கின்ற நிலாச்சுடர் வீந்ததால்
ஈச னுமதி யேகவுஞ் சோகத்தாற்
பூசு வெண்கல வைப்புனை சாந்தினை
ஆசை மாத ரழித்தன ரென்னவே.

வீசுகின்ற நிலாச் சுடர் வீந்ததால்,
ஈசனும் மதி ஏகவும், சோகத்தால்
பூசு வெண் கலவைப் புனை சாந்தினை,
ஆசை மாதர் அழித்தனர் என்னவே.

பொ :—உயிர்க்குயிரான சந்திரன் என்ற கணவன் போயின பின்பு, திசைகளாகிய அவன் தேவியர் தாம் பூசிய வெண்கலவை யாகிய சந்தனக் குழம்பை, பிரிந்த சோகத்தால் அழிந்துவிட்ட வர்கள்போல, எத்திக்கிலும் பரவியிருந்த நிலவின் ஒளி ஒழிந்தது.

கு :—'குங்குமஞ் சாந்தங் கொட்டாக் கொம்மை வெம்முலைகள்' (கிட்கிந்தைப் 52) எனக் கணவனை இழந்த மாதர்கள் கூறப்படுத லின், 'சாந்தினை ஆசை மாத ரழித்தன ரென்னவே' என்றார். ஆசைமாதர் – திக்குக்களான மனைவியர்; காதலுடைய மாதர் எனவும் பொருள் தருவதாம். (149)

இச்செய்யுளின் பின் பல சுவடிகளில் பின்வருமாறு ஒரு செய் யுள் காணப்படுகிறது.

712 (a) காதலா லொருத்தியை நினைப்பக் கண்டுயில்
மாதரா ளவன்றிற மறுப்பக் கங்குன்மான்
ஏதிலான் றமியனென் றேக லேனென
ஆதலா லிருந்தன னளிய னென்செய்வான்.

### கதிரவன் தோன்றுதல்

**713.** ததையுமலர்த் தாரண்ண லிவ்வண்ண
★ மயலுழந்து தளரு மேல்வைச்
சிதையுமனத் திடருடையச் செங்கமல
முகமலரச் செய்ய வெய்யோன்

புதையிருளி னெழுகின்ற புகர்முகயா
ஊயினுரிவைப் போர்வை போர்த்த
உதயகிரி யெனுங்கடவு ணுதல்கிழித்த
விழியேபோ லுதயஞ் செய்தான்.

ததையும் மலர்த் தார் அண்ணல் இவ் வண்ணம்
மயல் உழந்து தளரும் ஏல்வை,
சிதையும் மனத்து இடர் உடையச், செங்கமலம்
முகம் மலரச், செய்ய வெய்யோன்,
புதை இருளின் எழுகின்ற புகர்முக
யானையின் உரிவைப் போர்வை போர்த்த
உதயகிரி எனும் கடவுள் நுதல் கிழித்த
விழியே போல், உதயம் செய்தான்.

பொ :—நெருங்கிய மலர்மாலை யணிந்த இராமபிரான், இவ்வாறு காதல் மயக்கால் வருந்தித் தளருங்காலத்தே, செந்நிறத்தவனான சூரியனானவன், நிலைகுலையும் அப்பிரானது மனத்துயரம் நீங்கவும், செந்தாமரைமலர்கள் மலர்ச்சி பெறவும், புள்ளிகளையுடைய முகத்தோடு தோன்றும் இருளாகிய யானையின் தோலாகிய போர்வையைப் போர்த்த உதய மலையாகிய உருத்திர மூர்த்தியின் நெற்றியினின்று வெளிப்படத் தோன்றிய நெருப்புக் கண்போல உதித்தலைச்செய்தான்.

கு :—சிதையுமனத் திடருடைய என்றது மேற்கூறியவாறு வருந்திநின்ற இராமபிரானது துயர்நீங்க என்றபடி. கரிய இருளில் மறைந்துள்ள உதயகிரிக்கு யானையின் கரியதோலைப்போர்த்துள்ள சிவபிரானையும், அம்மலையுச்சியிலுதித்த சூரிய மண்டலத்துக்கு, அப்பிரானது நெற்றியிலுள்ள நெருப்புக் கண்ணையும், யானையின் முகப்புள்ளிகளுக்கு, உதயத்துத் தோன்றும் நட்சத்திரங்களையும் உவமைகளாகக் கொள்க. 'உயிரனைய கொழுநர் வர......மெலிவகலுங் கற்பினர் போற் புண்டரிக முகமலர' எனப் பின் வேறு கூறப்படுதலால், மனத்திடருடைய என்பதற்கு இராமபிரானது வருந்திய நிலைநீங்க என்பதே பொருந்துவதாம். 'தளருமேல்வை, சிதையு மனத்திடருடையவும் செங்கமல முகமலரவும், என உம்மை விரிக்க.

(150)

### வெயில் பரவுதல்

714. விசையாடற் பசும்புரவிக் குரமிதிப்ப
வுதயகிரி விரிந்த தூளி
பசையாக மறையவர்கைந் நறைமலரு
நிறைபுனலும் பரந்து பாய
அசையாத நெடுவரையின் முகடுதொறு
மிளங்கதிர்சென் றளைந்து வெய்யோன்
திசையாளு மதகரியைச் சிந்தூர
மப்பியபோற் சிவந்த மாதோ.

விசை ஆடல் பசும் புரவிக் குரம் மிதிப்ப,
உதய கிரி விரிந்த தூளி
பசை ஆக. மறையவர்கை நறைமலரும்
நிறை புனலும் பரந்து பாய,
அசையாத நெடுவரையின் முகடுதொறும்
இளங்கதிர் சென்று அளைந்து வெய்யோன்,
திசை ஆளும் மதகரியைச் சிந்தூரம்
அப்பிய போல், சிவந்த மாதோ.

பொ:—வேகமும் வலியும் பசுமையுமுடைய (சூரியன் தேர்க்) குதிரைகளின் காற்குளம்புகள் மிதித்தலால் உதயகிரியில் எழும்பிப் பரவிய செந்தூள்கள் பசையாகும்படி, மறையவர்கள் கையால் உயர்த்திவிடப்படும் தேனொழுகும் மலர்களும் மிகுநீரும் பரந்துபாய, (அப்பசையான செந்தூளியைக் கொண்டு) சூரியன் கீழ்த்திசைக்குரிய மதயானைக்குச் சிந்தூரதிலகத்தை அப்பியது போல, சலனமற்ற அவ்வுதயகிரியின் சிகரங்களிலெல்லாம் இளங் கிரணங்கள் படிந்து செந்நிறமுடையவாயின.

கு:—காலையந்தி வழிபாட்டில், மறையவர் மந்திர மூலம் எடுத்துவிடும் அருக்கியநீர், அவ்வேளையிலே மந்தேகர் என்ற அசுரரால் சூரியன்தேர் தடை செய்யப்படுவதை வச்சிரப் படையுருவிற் சென்று தடுத்து, அவர்களையும் அழித்து வருகின்றது என்பது நூன்முடிபாதலின், 'மறையவர்கைந் நறை மலரும் நிறைபுனலும் பரந்துபாய எனப்பட்டது. அருக்கிய நீர் தேன்வழியும் மலரொடு கூட்டியே எடுத்துவிடப்படுதலின் 'நறை மலரும் நிறை புனலும்' என்றார். (151)

**பொய்கைகளில் தாமரை மலர்தல்**

**715.** பண்டுவரும் குறிபகர்ந்து பாசறையிற்
பொருள்வயினிற் பிரிந்து போன
வண்டுதொடர் நறுந்தெரிய லுயிரனைய
கொழுநர்வர மணித்தே ரோடும்
கண்டுமனங் களிசிறப்ப வொளிசிறந்து
மெலிவகலுங் கற்பினார் போற்
புண்டரிக முகமலர வகமலர்ந்து
பொலிந்தனபூம் பொய்கை யெல்லாம்.

பண்டு வரும் குறிபகர்ந்து, பாசறையில்
பொருள் வயினில் பிரிந்து போன
வண்டு தொடர் நறுந்தெரியல் உயிர் அனைய
கொழுநர் வர, மணித்தேரோடும்
கண்டு, மனம் களி சிறப்ப ஒளி சிறந்து
மெலிவு அகலும் கற்பினார் போல்,
புண்டரிகம் முகம் மலர, அகம் மலர்ந்து
பொலிந்தன, பூம் பொய்கை எல்லாம்.

பொ :—(தலைவியரைப் பிரிவதற்கு) முன்பு தாம் மீண்டுவரும் காலத்தைக் குறிப்பிட்டுக்கூறி, (போர்புரிதற்பொருட்டுப்) பாசறைக் காயினும், செல்வமீட்டுவதற்காயினும் பிரிந்து சென்றவரும், வண்டு தொடரும் மணமாலையணிந்தவரும், தம் உயிரை ஒத்தவருமான தலைவர் (குறித்தகாலத்தில்) அழகிய தேரோடும் மீண்டுவர, அதனைக் கண்டு மனம் பெரிதும் பூரித்து, மங்கியிருந்த முகங்களின் காந்திபொலியப் பெற்று, தளர்வு நீங்கின கற்புடைய மனைவியர்போல, (தம்மைப் பிரிந்துசென்ற சூரியனாகிய நாயகன் தேரோடு வரக்கண்டு மகிழ்ந்து) முகங்களாகிய தாமரைகள் மலர்ச்சிபெற அழகிய பொய்கைகள் யாவும் அகம் மலர்ந்து பொலிவனவாயின.

கு :—பகைவரை ஒடுக்கவேண்டிச் சேனையொடும் தலைவர்கள் படை வீட்டில் போர்புரியத் தங்குதல் பாசறைப் பிரிவாம். பொருள் வயிற்பிரிவு – இல்லறம் இனிது நடத்த வேண்டிப் பொருளீட்டற்குக் கலத்திலாயினும் காலினாயினும் பிரிதல். 'பொருள் தரப் போயினர்ப் பிரிந்த பொய்யுடற் – குருள்தரு தேர்மிசையுயிர் கொண்டுய்த்தலால்' (கிட்கிந்-கார்காலப்.-22) என்பர் பின்னும்.

பிரிந்து சென்ற நாயகர் தேரோடு மீண்டுவர மகிழ்ந்த கற்புடை மகளிர்க்கு உதயசூரியன் தேரோடு வர முகமலர்ந்த தாமரைப் பொய்கையை அழகுற, உவமித்தார் என்க. (152)

### சூரியகிரணங்கள் விரிதல்

**716.** எண்ணரிய மறையினொடு கின்னரர்க
ளிசைபாட வுலக மேத்த
விண்ணவரு முனிவர்களும் வேதியருங்
கரங்குவிப்ப வேலை யென்னும்
மண்ணுமணி முழவதிர வானரங்கி
னடம்புரிவா ளிரவியான
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரிந்தா
லெனவிரிந்த கதிர்க ளெல்லாம்.

எண் அரிய மறையினொடு கின்னரர்கள்
இசை பாட, உலகம் ஏத்த,
விண்ணவரும் முனிவர்களும் வேதியரும்
கரம் குவிப்ப, வேலை என்னும்
மண்ணும் அணி முழவு அதிர, வான் அரங்கின்
நடம்புரி வாள், இரவி ஆன
கண்ணுதல் வானவன், கனகச் சடை விரிந்தால்
என, விரிந்த கதிர்கள் எல்லாம்.

பொ :—அளத்தற்கரிய வேதப்பாடல்களோடு கின்னரர்கள் கானமிசைக்கவும், உயர்ந்தோர் துதிக்கவும், தேவர்களும் முனிவர்களும் அந்தணர்களும் கைகூப்பி வணங்கவும், கடலென்னும் மார்ச்சனை பூசிய அழகிய மத்தளம் முழங்கவும், வானமாகிய நடன சாலையில், திருநடஞ்செய்யும் ஒளிபொருந்திய சூரியனாகிய நெற்றிக் கண்ணுள்ள சிவபிரானது பொன்னிறமான சடாபாரம் விரிந்தாற் போலச் செந்நிறக் கதிர்கள் (எங்கும்) பரவின.

கு :—சிவபிரானது திருக்கூத்தில் கின்னரர் வேத இசை பாடுதலும், உலகத்தோர் புகழ்தலும், தேவர் முனிவர் மறையவர்கள் கைகூப்பி வணங்குதலும், முழவு ஒலித்தலும் உண்மையால்

சூரியனுக்கு உவமித்தார். சூரியனை நடம்புரிவோனாகக் கூறியது, அவனது கிரணங்களின் அசைவு பற்றி என்க. 'மாயிரு ஞாலத் துயிர்காண வானரங்கிற்-பாயிரு ளென்னும் படாம் வாங்கிச் - சேய்நின், றறைந்தா ரணம்பாட வாடிப்போய் வெய்யோன், மறைந்தான் குடபால்வரை' (நளவெண்பா. 98) என்றார் பிறரும்.
(153)

### இராமபிரான் பள்ளியெழுதல்

**717.** கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச்
சிலைதடக்கைக் கொண்ட கொண்டல்
எல்லாழித் தேரிரவி யிளங்கரத்தா
லடிவருடி யனந்த றீர்ப்ப
அல்லாழிக் கரைகண்டா னாயிரவாய்
மணிவிளக்க மழலுஞ் சேக்கைத்
தொல்லாழித் துயிலாதே துயராழி
நெடுங்கடலுட் டுயில்கின் றானே.

கொல் ஆழி நீத்து அங்கு ஓர் குனி வயிரச்
சிலை தடக்கைக் கொண்ட கொண்டல்,
எல் ஆழித் தேர் இரவி இளங்கரத்தால்
அடி வருடி அனந்தல் தீர்ப்ப,
அல் ஆழிக் கரை கண்டான் : ஆயிர வாய்
மணி விளக்கம் அழலும் சேக்கைத்
தொல் ஆழித் துயிலாதே, துயர் ஆழி
நெடுங்கடலுள் துயில்கின்றானே.

பொ :—(தீயோரைக்) கொல்லவல்ல சக்கராயுதத்தை நீக்கி விட்டு, ஒப்பற்று வளைந்து உறுதிபடைத்த, கோதண்டவில்லைப் பெரிய திருக்கையிலே கொண்டு, இங்கெழுந்தருளிய மேகவண்ண னை இராமபிரான், பழமையான பாற்கடலில், ஆயிரமுகங்களி லும் மாணிக்கமான தீபங்கள் ஒளி செய்யப்பெற்ற (ஆதிசேட னை) சயனத்திலே துயில் கொள்ளாதவன், (பிராட்டியை அணை யாமையின் உண்டாகிய) மனத்துயரமாகிய, ஆழ்ந்து பெரிதா யுள்ள கடலினிடையே துயில்பவனானான்; (அவனை ஒளியுடைய ஒற்றையாழித் தேரினனான சூரியன் தன் மெல்லிய கிரணங்க

ளாகிய கைகளால் திருவடிகளை இனிதாகத் தடவிக்கொடுத்து, அப் பெருமானது துயில்மயக்கத்தைத் தீர்க்க, (அதனால்) இரவாகிய கடலின் எல்லையை (அவன்) காண்பானுயினன்.

கு :—பிராட்டியின் சிந்தனைமிகுதியால் இரவில் தூக்கம் பிடியாமையின், அவ்விரவு இராமபிரானுக்குக் கடல்போலாயிற்றென்பார் 'அல்லாழி' என்றும், அப்பெருமான் தன் குலத்தவதரித்த அருமைமைந்தனுதலாலும், மேல் நிகழ்தற்குரிய சுபகாரியங்களுண்மையாலும், தனக்குரிய கடன்களைப் பெறும் விருப்பத்தாலும், 'இரவி அடிவருடி அனந்தல் தீர்ப்ப' என்றும் கூறினுர் என்க. *(154)*

**இராமன்முதலியோர் சனகனது வேள்விச்சாலை சார்தல்**

**718.** ஊழிபெயர்ந் தெனக்கங்கு லொருவண்ணம்
புடைபெயர வுறக்க நீத்த
சூழியா னையினெழுந்து தொன்னியமத்
துறைமுடித்துச் சுருதி யன்ன
வாழிமா தவற்பணிந்து மனக்கினிய
தம்பியொடும் வம்பின் மாலை
தாழுமா மணிமௌலித் தார்ச்சனகன்
பெருவேள்விச் சாலை சார்ந்தான்.

ஊழி பெயர்ந்து எனக் கங்குல் ஒருவண்ணம்
புடை பெயர, உறக்கம் நீத்த
சூழி யானையின் எழுந்து, தொல் நியமத்
துறை முடித்துச், சுருதி அன்ன
வாழி மாதவன் பணிந்து, மனக்கு இனிய
தம்பியொடும், வம்பின் மாலை
தாழும் மா மணி மௌலித் தார்ச்சனகன்
பெருவேள்விச் சாலை சார்ந்தான்.

பொ :—யுகமே கழிந்தாற் போல அவ்விராப்போது ஒருவாறு அகன்று கழிய, (இராமபிரான்) உறக்கம் நீங்கி எழுந்த, முகபடாமுள்ள யானைபோலத் துயில் நீங்கியெழுந்து, பழமையான நித்தியக் கடன்களைச் செய்துமுடித்து, வேதத்தின் உருவமே

போன்ற கோசிகமுனிவனை அடிவணங்கி, அவனோடும் தன் திருவுள்ளத்துக்கு இனிமைதரும் இளவலான இலக்குமணனோடும் மணங்கமழும் மாலை தாழ்ந்த சீரிய மணிமகுடத்தையும், குலத்துக்குரிய மாலையையும் அணிந்த சனகமாராசனது பெரிய யாகசாலையை அடைந்தான். (155)

### சனகன் வீற்றிருத்தல்

**719.** முடிச்சனகர் பெருமானு முறையாலே
மறைவேள்வி முற்றிச் சுற்றும்
இடிக்குரலின் முரசியம்ப விந்திரன்போற்
சந்திரன்றோய் கோயி லெய்தி
எடுத்தமணி மண்டபத்து ளெண்டவத்து
முனிவரொடு மிருந்தான் பைந்தார்
வடித்தகுனி வரிசிலைக்கைம் மைந்தனுந்தம்
பியுமருங்கி னிருப்ப மாதோ.

முடிச்சனகர் பெருமானும் முறையாலே
மறை வேள்வி முற்றிச், சுற்றும்
இடிக் குரலின் முரசு இயம்ப, இந்திரன் போல்
சந்திரன் தோய் கோயில் எய்தி,
எடுத்த மணி மண்டபத்துள் எண் தவத்து
முனிவரொடும் இருந்தான்: பைந்தார்
வடித்த குனி வரி சிலைக்கை மைந்தனும்
தம்பியும் மருங்கின் இருப்ப மாதோ.

பொ :—கிரீடந்தரித்த சனகர்குலத்தலைவனான அரசனும் (அப்பொழுது) வேதவிதிப்படி வேள்விச்செயலை முடித்துவிட்டு, இடிமுழக்கம்போலும் பேரிகைகள் சுற்றிலும் ஒலியாநிற்க, தேவேந்திரன் போல, சந்திரமண்டலத்தை அளாவியுள்ள அரண்மனையை அடைந்து, அங்கே உயர்ந்தமைந்த மணிமண்டபத்திலே மதிக்கத்தக்க (விசுவாமித்திரன் முதலாய) தவமுனிவர்களுடனே, பசிய வெற்றிமாலை சூடியவர்களும், தெரிந்தெடுத்த வளைந்தும் வரிந்துகட்டியும் உள்ள விற்களை ஏந்திய, இராமபிரானும் இளவலும் தன் பக்கத்தில் வீற்றிருப்ப இனிதிருந்தான்.

கு:—'முனிவரொடும் இருந்தான்' எனவே தலைமைத் தபோ தனரான விசுவாமித்திரனை முன்பு கொண்டு இருந்தவனென்பதும் 'மருங்கிருப்ப இருந்தான்' எனவே அம் மூவரும் சனகன் பக்கத்தே வீற்றிருந்தவர் என்பதும் பெறப்படும். 'முனிவரொடும்' என்பது, உயர்வுப்பன்மையால் கோசிகனையே குறிப்பது எனினுமாம்.

(156)

### இராமலக்குமணர்களை யாவரென்று சனகன் வினவ முனிவன் கூறுதல்

**720.** இருந்தகுலக் குமரர்தமை யிருகண்ணும்
முகந்தழகு பருக நோக்கி
அருந்தவனை யடிவணங்கி யாரிவரை
யுரைத்திடுமி னடிக ளென்ன
விருந்தினர்க ணின்னுடைய வேள்விகா
ணியவந்தார் வில்லுங் காண்பார்
பெருந்தகைமைத் தயரதன்தன் புதல்வரென
வவர்தகைமை பேச லுற்றான்.

இருந்த குலக் குமரர்தமை இரு கண்ணும்
முகந்து அழகு பருக நோக்கி,
அருந்தவனை அடி வணங்கி, 'யார் இவரை
உரைத்திடுமின்' அடிகள் என்ன,
'விருந்தினர்கள், நின்னுடைய வேள்வி காணிய
வந்தார், வில்லும் காண்பார்
பெருந்தகைமைத் தயரதன்தன் புதல்வர்' என
அவர் தகைமை பேசல் உற்றான்.

பொ:—(தன் பக்கத்திருந்த) உயர்குலத்து மக்களை, தன் இரண்டு கண்களாலும் அவர்களின் அழகுகளை அள்ளிப்பருகும் படி பார்த்து, (உடனே) அருந்தவத்தோனை கோசிகனைப் பாதங் களில் விழுந்து வணங்கியவனாய், 'அடிகளே! இவர்கள் யாவர்; உரைத்தருள்வீராக' என்று உசாவ, (கௌசிகமுனிவன்) உன் பக்கத்தில் புதியராய் வந்தவர்கள் (இன்னோர்);பெருந்தகையனான தசரதசக்கரவர்த்தியின் திருக்குமாரர்கள்; உனது யாகத்தைக்

காணவேண்டி வந்துள்ளார்கள்; (நின்னிட முள்ள) சிவதனுசை யும் (அனுமதி தந்தால்) பார்ப்பார்கள்' என்று கூறி அச் சக்கர வர்த்திகுமாரர்களின் மேன்மையைச் சொல்லத்தொடங்கினன்.

கு :—'யார் இவரை உரைத்திடுமின்' என்ற தொடரை 'இவர் யாரை; உரைத்திடுமின்' என மாற்றுக, 'யாரையோநீ மடக் கொடியோய்' என்புழிப்போல ஈண்டு ஐ இடைச்சொல் (சிலப்-29-49-உரை). 'இவரை யார் உரைத்திடுமின்'-இவர்கள் யாவர் என்பதனை உரைப்பீராக எனலும் ஆம். அவரது குலப்பெருமை அவர்பெருமையே என்பதுணருமாறு, 'அவர்தகைமை பேசலுற் ருன்' என்ருர்; அடிகள் – பெரியோரே! (ஸ்வாமீ) அண்மைவிளி. 'வேள்வி காணவந்தவராயினும், அது முற்றுப்பெற்றமையின், இனி நீ கன்னியாசுற்கமாக வைத்த வில்லையும் ஒருகை பார்க்கக் கூடியவர்கள்' என்பார், 'வில்லும் காண்பார்' என்ருர் என்க.

(157)

மிதிலைக் காட்சிப் படலம் முற்றிற்று.

---

ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும், அச்சுப்பிரதிகளும். அவற்றின் குறியீடுகளும்

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | தஞ்சை சரஸ்வதி மால் | 367–8 | |
| 2 | ,, | 369 | |
| 3 | ,, | 370 | |
| 4 | ,, | 371 | |
| 5 | ,, | 372 | |
| 6* | ,, | 375 | |
| 12 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 30 | |
| 13 | ,, | 42 | |
| 14 | ,, | 46 | வரைக்காட்சிப்படலம் 8-ஆம் பாடல் வரை யுள்ளது. |
| 15 | ,, | 471 | |
| 16 | ,, | 472 | |
| 17 | ,, | 672 | |
| 18 | ,, | 677 | |
| 19 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 20 | ,, | | |
| 21 | ,, | | |
| 22 | ,, | | |
| 23 | திரு. C. திருநாவுக்கரசுப் பிள்ளை, சிதம்பரம். | | |
| 24 | திரு. C. கணேசையர், யாழ்ப்பாணம். | | |
| 25 | திரு. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு. | | |
| 26 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 27 | |
| 27 | ,, | 28 | |
| 28 | ,, | 33 | |
| 29 | ,, | 41 | |
| 30 | ,, | 540 | |
| 31 | அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலை, சென்னை. | 514 | |
| 32 | திரு. சா. கணேசன், கம்பன் கழகம், காரைக்குடி. | (5) | சித்தூர் வீராசாமி நாயுடு பதிப்பு 1884. |
| 33 | ,, | (8) | சாத்தம்பாக்கம் கிருஷ்ணசாமி முதலியார் பரிசோதித்தது. ஜீவரக்ஷாமிருதப் பதிப்பு. 1886. |

* 7 முதல் 11 முடியவுள்ள ஏடுகளில் பாலகாண்டம் இல்லை.

| குறி யீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 34 | திரு. சா. கணேசன், கம்பன் கழகம், காரைக்குடி. | (16) | திருமயிலை சண்முகம் பிள்ளை பரிசோதித்தது. நிரஞ்சன விலாசப் பதிப்பு 1924. |
| 35 | ,, | (18) | அ. குமாரசாமிப்பிள்ளையும் கனகசுந்தரம் பிள்ளையும் பரிசோதித்துப் பதிப்பித்தது 1918. (அரும்பத உரையுடன் கூடியது) |
| 36 | ,, | (21) | காஞ்சிபுரம் ராமசாமி நாயுடு உரையுடன் சென்னை இட்டா பார்த்தசாரதி நாயுடு பதிப்பித்தது 1922. |
| 37 | ,, | (27) | சென்னை வேப்பேரி M.S. அச்சகத்தில் அச்சிடப்பட்டது. (உரையுடன் கூடியது) |
| 38 | திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை, பள்ளி அக்கிரகாரம், தஞ்சை. | | |
| 39 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 40 | |
| 40 | | | ஆழ்வார் திருநகரி ப்ரதிகளின்படி பெரியன் ஸ்ரீனிவாசயைங்கார் பதிப்பித்தது. 1942. |
| 41 | | | வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியர் உரைப் பதிப்பு. |
| 42 | | | கவித்தலம் துரைசாமி மூப்பனார் பதிப்பு. |
| 43 | கனகசுந்தரம்பிள்ளை | | |
| 44 | ,, செப்பரைச்சாமி | | |
| 45 | | | உ. வே. சாமிநாதையர் நூல்நிலையப் பதிப்பு அடையாறு. |
| 46 | | | பூமகள் விலாசம் பதிப்பு 1928. |

## குறிப்பு

இப்பதிப்பில் மூலத்தில் எடுத்துக்கொண்ட பாடங்கள், செய்யுட்களின் தொடரெண் முறைப்படி அடிமுறையாகவும் சீர்முறையாகவும் தடித்த முதலெழுத்தோடு முன்னே காட்டப்பெற்றுள்ளன. அவற்றோடு வேறுபட்ட பாடங்கள் அவற்றின்பின் முறையே சேர்க்கப் பெற்றுள்ளன. பாடங்களின் பின்னே குறிக்கப்பட்டுள்ள எண்கள், அப் பாடங்கள் உள்ள சுவடிகளின் குறியீடுகள். '46—' என்னும் குறியீடு, 46 என்னும் எண் இட்டுக் காட்டிய அச்சுப்புத்தகத்தோடு ஒத்த பாடம் உடைய ஏடுகளின் எண்களையும் குறிக்கும். பிழைபட்ட பாடங்களும் அவற்றைக் காட்டும் சுவடிகளின் எண்களும், சிதைந்த சுவடிகளின் எண்களும் விரிவஞ்சிக் குறிக்கப்படவில்லை.

---

# பாட வேறுபாடு

## சிறப்புப் பாயிரம்

### 1

[இப்பாடல் 1—4, 6, 28, 30, 38 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I நாரணன் விளையாட்டெல்லாம்; 46—
நாரணர் விளையாட்டெல்லாம்; 26.
நாரத முனிவன் கூற; 24.

நாரத முனிவன் கூற; 46—
நாரத முனிவன் செப்ப; 5, 40.
நாரத முனிவன் சொல்ல; 20, 25, 26, 29, 40.
நாரணன் விளையாட்டெல்லாம்; 24.

II கவிதை; 46—
கவிகள்; 40.

அறிந்த வான்மீகி; 46—
அறிந்து வான்மீகி; 5, 14, 24, 25, 27, 29, 35, 40, 41.
அறிந்த வான்மீகன்; 44.

என்பான்; 46—
என்போன்; 20, 43.

III சீரணி சோழநாட்டுத்; 46—
சீரணி சோழநாட்டில்; 12, 27.
சீரணி பொன்னிநாட்டுத்; 40, 41.
சீரணி பொன்னிநாட்டில்; 40.
சீர்புனை மழ...ட்டுத்; 26.

திருவழுந்தூருள் வாழ்வோன்; 46—
திருவழுந்தூருவச்சன்; 12, 26, 27, 29, 35, 40, 41, 45.
திருவழுந்தூரானேச்சன்; 40, 41.
திருவழுந்தூரிலோச்சன்; 40.
திருவெழுந்தூருவச்சன்; 5, 16, 20, 23-25, 43.
திருவெழுந்தூருகச்சன்; 20.
தேரெழுந்தூருவச்சன்; 14.

IV காரணி கொடையான்; 5, 12, 14, 16, 23, 24, 27, 29, 35, 40, 41, 45.
காரணக் கொடையான்; 46—
காரணக் குடையான்; 26.
தாரணி கொடையான்; 20, 25, 40, 41.

கவிதை செய்தான்; 5, 12, 14, 16, 20, 23-25, 29, 35, 40, 41, 43.
கவிசெய்தானே; 46—

### 2

[இப்பாடல் 1—6 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I திருவெண்ணெய்; 46—
தருவெண்ணெய்; 45.

IV சிந்திப்பவர்க்கியாதும்; 46—
சிந்திப்பார்க்கியாதும்; 41.

### 3

[இப்பாடல் 1—6 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

4

[இப்பாடல் 1—6 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

IV கழறலையிற்; 46—
கழற்றலையிற்; 32, 42.

5

III சற்றும்; 45.
சிறிதும்; 40.

6

[இப்பாடல் 1—4, 6, 28, 30 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I எண்ணூற்றேழின்மேல்; 46—
எண்ணூற்றுறின்மேல்; 40.
முந்நூற்றேழின்மேல்; 41.
முந்நூற்றேழன்மேல்; 40.

வாழ்வு; 46—
வாழ்வை; 44.

II நண்ணிய; 46—
நண்ணியே; 43.

கம்பநாடன்; 46—
கம்பைநாடன்; 27.

III அத்தநாளில்; 46—
உத்தரத்திற்; 40, 41, 45.

IV கண்ணியவரங்கர்; 40.
கண்ணியவறிஞர்; 42.
கண்ணிய அரங்கின்; 46—

7

[இப்பாடல் 1—6 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I கழுந்தராயுள கழல்; 40.
கழுந்தராயுன கழல்; 46—
கழுந்தருவுனதடி; 23, 43.

கதிர்மணி; 46—
களமணி; 23, 43.

II வாளிகள் தொடுசிலை; 46—
வேல்விடுமபிநவ; 23, 43.

இராகவ வபிநவ கவிநாதன்; 46—
சேகர வணியாய் கேள்; 23, 43.

III நாயிற தெழுவதன் முன்மறை; 40, 45.
நாயிறு வெழுவதன் முன் மறை; 33, 42.
ஞாயிறு வெழுவதன் முன் மறை; 46—
ஞாயிறு வெழுமளவுங் கவி; 23, 43.

வேதியருடனுராய்ந்து; 46—
வேதியர் தம்மோடே; 23, 43.

IV நாயிறு; 40, 42, 45.
ஞாயிறு; 46—

விழுவதன்முன்கவி; 46—
விழுமளவுங்கவி; 23, 43.

பாடினது; 46—
பாடியது; 45.
பாடுவது; 23, 43.

8

[இப்பாடல் 27—30, 32, 33, 35, 36, 38 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை; 24, 40, 44, என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இரண்டு மூன்றும் அடிகள் முன் பின்னாக மாறியுள்ளன]

I கரைசெறி; 46—
கரைதெரி; 45.
கரைபொரு; 22, 40.
கரையுறு; 40.
கரையொரு; 44.
கரைதரு; 26.

ஏழு; 46—
ஏழும்; 40.
ஆறும்; 40.

ஆயிரத்தெண்ணூறு; 46—
ஆயிரத்தெண்ணூறேடு; 40.
ஆயிரத்தைஞ்ஞூறு; 22, 26.
ஆயிரத்தைஞ்ஞூறும்; 40.
ஆயிரத்தோர்நூறு; 14,15.

II பரவுறு ; 46—
பரவமர் ; 40.
பரவிய ; 44.
பரசமர் ; 26, 40, 41.
பரசமை ; 14.
பரைசெறி ; 15.
பரிவுள ; 22.
பரிவுறும் ; 40.
பருவரை ; 40.

சமரம் பத்துப் ; 46—
பாகமூன்று ; 40.
பாடை பத்துப் ; 24, 40.
பாடை பத்தும் ; 14.
பாசை பத்துப் ; 15, 22.
பத்து நான்கு ; 26.
பத்து நாலு ; 40, 41.
கானம் பத்துப் ; 44.
அமரிரேழும் ; 40.

இருபத்தெட்டே ; 46—
இருபத்தெட்டும் ; 14.
இருபத்தெட்டு ; 22, 24, 40, 44.
அறுபத்தெட்டும் ; 40.
எண்பத்தாறு ; 45.
எண்பத்தொன்று ; 45.

III உரைசெயும் ; 46—
உரைசெறி ; 15, 24, 26, 40, 44.
உரைதெரி ; 14, 22.
உரைதரு : 40, 41.
விரைசெறி ; 40, 45.

ஒருபத்தாறு ; 46—
ஒருபத்தாறும் ; 14, 40.
ஒருபத்தாறில் ; 40.
ஒருநூற்ருறு ; 45.
தொண்ணூற்ருறு ; 45.

IV வர மிகு ; 46—
வரமுறு ; 22, 24, 40.
வரைசெறி ; 15, 40, 44, 45.

தொண்ணூற்ருறே ; 46—
எண்பத்தேழே ; 14, 15, 22, 24, 40, 41, 45.

**9**

[இப்பாடல் 1-6 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

IV கம்பநாட்டாழ்வான் ; 46—
கம்பநாடாள்வான் ; 40.

**10**

[இப்பாடல் 1-4, 6, 28, 38 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I அமரர்க்கன்று ; 46—
அமரர்கட்கு ; 39.

ஈந்த ; 46—
ஈந்து ; 19.

II தமிழிலே ; 46—
தமிழினல் ; 41.
தமிழது ; 44.

தாலை ; 46—
தன்னை ; 12, 14, 16-19, 23-27, 29, 35, 39, 40, 41, 43, 44, 45.
அவனை ; 5, 20, 40.

III கம்பநாடு ; 46—
கம்பைநாடு ; 27.

வள்ளல் ; 46—
கோமான் ; 5, 12, 14, 16-20, 23-27, 29, 35, 39-41, 43, 45.

கவிச்சக்ரவர்த்தி ; 35, 40, 41, 45.
கவிச்சக்கிரவர்த்தி ; 46—

IV மாலையாலே ; 46—
மாலையாக ; 25.

நரர்க்கு மின்னமுதம் ; 5, 12, 14, 16-19, 23, 25-27, 29, 39, 40, 41, 43.
நரர்க்கு மின்றமுதம் ; 40, 45.
நரர்க்கு நல்லமுதம் ; 20, 24, 40.
நரருக்கின்றமுதம் ; 46—
நரருக்கன்றமுதம் ; 44.

### 11

[இப்பாடல் 1-6, 40 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I இம்பர்நாட்டிற் செல்வ மெல்லாம் ; 46—
இம்பர் நாட்டிற் செல்வ மெலாம் ; 41.
இம்பர் நாட்டின் செல்வ மெல்லாம் ; 24.
இம்பர் நாட்டினிற் செல்வம் ; 23, 43.

அரசாண்டிருந்தாலும் ; 46—
அரசாயிருந்தாலும் ; 14.

II உம்பர்நாட்டிற் ; 46—
உம்பர்நாட்டின் ; 24.

கற்பகக்கா ; 46—
கற்பகத்தின் ; 14, 19, 23, 24, 40, 43.

ஓங்கு நீழல் ; 46—
ஓங்கு நிழலில் ; 14, 19.

இருந்தாலும் ; 46—
உறைந்தாலும், 14, 19, 23, 43.

III மேருவனையபுயத் ; 46—
மேருவனையபுயன் ; 24.

IV கவிதையிற்போற் ; 46—
கவிதையைப்போற் ; 14, 19, 23, 24, 43, 45.

### 12

IV வளமுறை ; 43—
வளமுறத் ; 23.

### 13

[இப்பாடல் 1-6, 40 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

II சிதைந்து ; 46—
தேய்ந்து ; 13, 26, 29, 40, 41.
தீய்ந்து ; 25.
தேயுமே ; 46—
தீயுமே ; 26, 29, 31, 39, 40 41.
திருமே ; 40, 41.
மாயுமே ; 13.

III இன்றித்திருமே ; 46—
அன்றித்திருமே ; 41.
இன்றித்தியுமே ; 13.
இன்றித்தேயுமே ; 14.
இன்றிச்செய்யுமே ; 26, 31, 39, 40, 41.

IV இம்மையே ; 46—
இம்மையில் ; 25, 26, 40, 41.
இன்மையே ; 31.

இராமவென் றிரண்டெழுத் தினுல் ; 46—
இராமவென் றிரண்டெழுத் துமே ; 31.
இராமவென் றெழுத்திரண் டினுல் ; 13, 25, 29.
இராம வென்னெழுத்திரண்டு மே ; 26.

### 14

I வேண்டா ; 26—
வேண்டேன் ; 40.

மணிமதில் ; 26—
மணிமதிள் ; 23, 24, 25, 28, 43.

மூதூர் ; 26—
மூதூர்ச் ; 18, 40, 45.

II விசயப் பாடல் ; 26—
விசையப்பாவில் ; 40.
புகழைப் பாடத் ; 13, 28.

தெளிந்ததில் ; 26—
தெரிந்ததில் ; 13-16, 24, 25, 28, 40, 45.

III கேட்போர் ; 26—
கேட்டோர் ; 40.

நெஞ்சில் ; 26—
நெஞ்சம் ; 5, 13, 16-19, 28, 40, 45.
உள்ளம் ; 15, 40.

கருதுவோர்; 26, 40.
கருதுவர்; 12.
கருதினோர்; 13.

இவர்கள் பார்மேல்; 26—
இவர்கள் அன்பால்; 40.
அவர்கள் பார்மேல்; 19.
எழுதிவைப்போர்; 15.
யாவரேனும்; 5, 25, 28, 40.

IV உற்றரசாள்வர்; 26—
உற்றுலகாண்டு; 28, 40.
உற்றரசாண்டு; 5, 24.

பின்னும்; 26—
பின்னர்; 40.

உம்பராய் வீட்டிற்சேர்வார் 26—
உம்பர்வாழ் வீட்டிற் சேர்வார்; 40.
உம்பர்வாழுலகிற் சேர்வார்; 12, 15, 24, 25, 27, 28.
உம்பராய் உலகிற் செல்வார்; 5.
உம்பர்தமுலகிற் செல்வார்; 14.
உம்பர் வானுலகிற் சேர்வார்; 28.
உம்பர்வாழுலகம் சேர்வார்; 40.

## 15

[இப்பாடல் 1-4, 6, என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I இலங்கையானை; 46—
வென்றியானை; 24.

வென்றமால்; 46—
வென்றமா; 5.

வீரமோத; 46—
வீரமோதும்; 5, 14, 25, 40, 41.

II நின்ற ராமாயணத்தில்; 46—
இன்றிராமாயணத்தை; 5, 14, 19, 24, 25, 40, 41.

நிகழ்ந்திடு கதைகடம்மில் 46—
இயல்புடனுலகினிற்பேர்; 5, 14, 19.
இயல்புடனுலகினிற்ப; 24.
இயல்புடனுலகிற்பேராது; 25.
இயல்புடனுலகினிற்போர்; 40, 41.

III ஒன்றினைப்; 46—
ஒன்றதிற்; 5, 19, 25.
ஒன்றிதிற்; 24.
ஒன்றதைப்: 40, 41.

படித்தோர்தாமும்; 46—
படித்தார்தாமும்; 5, 19, 24, 25.

கேட்டோர்தாமும்; 46—
கேட்டார்தாமும்; 5, 19, 25.
கேட்போர்தாமும்; 24.

IV என்றோர்தாமும்; 46—
என்றுர்தாமும்; 5, 19, 25.

எய்திடாரே; 46—
எய்திடாதே; 24.

## 16

[இப்பாடல் 28, 40, என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I இருவரம்பில்; 46—
இருவரம்பின்; 13-15, 29-33, 36, 38-40, 45.

இராமவென்றோரும்பர்; 46—
இராமனென்றோரும்பர்; 40.
இராமாவதாரப்பேர்; 14.
இராமனென்றோதுவோர்; 15.
இராமனென்றுலும்பர்; 19.
இராமனென்றுவிம்பர்; 40.
இராமனென்பாரும்பர்; 40.
இராமவென்பாரும்பர்; 12, 13, 23, 24, 27, 43.
இராமனேன்றுலும்பர்; 40.
இராமவென்றோதினால்; 40, 41.

III கேட்பவர்; 46—
கேட்டவர்; 15.

வைகுந்தம் ; 46—
வைகுண்டம் ; 13, 24, 29, 40.

IV பேசவும் ; 46—
பேசுதல் ; 19, 23, 24, 25, 29, 40, 43.

வேண்டுமோ ; 46—
வேண்டுமே ; 40.

## 17

[இப்பாடல் 27-30 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I தானங்கள் ; 46—
தானமும் ; 12, 14, 17-19, 23, 25, 26, 40, 43, 45.

II கபிலையின் ; 46—
கபிலைநல் ; 41.

தானமே ; 46—
தானமும் ; 12, 14, 17-19, 23, 25, 26, 40, 43, 45.

III தானப் ; 46—
தான ; 17, 18, 19, 23, 40, 43, 45.
தானம் ; 26.

பலனெனச் ; 46—
பலமெனச் ; 17-19, 23, 25, 26, 32, 40, 42, 43, 45
பயனெனச்; 41.

சொல்லுவார் ; 17, 18, 23, 26, 40, 43, 45.
சொல்லுவர்; 46—
சொல்லுவாம் ; 19.

IV மன்னிராம ; 46—
மன்னுராமன் ; 12, 25.

மறவார்க்கரோ ; 46—
மறவாரரோ ; 12.
மறவார்களே ; 25.

## 18

[இப்பாடல் 27, 28, 30, 40 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

II பாடையாதொன்றினுயினும் ; 46—
பாடைகளியாதொன்ருயினும் ; 31.
பாடைகளியாதொன்றி னுயினும் ; 41.
பாடைகள் யாதொன்ருயினும் ; 40.
பாடைகள் யாவதாயினும் ; 29
பாடையாதொன்ருனுயினும் ; 39.
பாடல்களியாவராயினும் ; 26.
பால்களிலியாவராயினும் ; 14.

III ரகுகுலத்திராமன் ; 46—
ரகுகுலராமன் ; 25, 29.
ரகுகுலவிராமன் ; 26.

தன்கதை ; 46—
தென்கதை ; 25, 29.
திண்கதை ; 26.

## 19

[இப்பாடல் 28-34, 36, 38, 46 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I இத்தலத்தின் ; 40.
இத்தலத்தில் ; 12.
இத்தலமெண் ; 26—

இராமாவதாரமே ; 40.
இராமாவதாரப்பேர் ; 26—

II கேட்பரேல் ; 26—
கேட்பிரேல் ; 12, 27.

III புத்திரர்த்தரும் ; 26—
புத்திரன்றரும் ; 12, 27.
புத்திமிக்கரும் ; 40.

IV அத்தலத்தில் ; 12.
எத்தலத்தும் ; 26—

அவன்பதமெய்துமே ; 26—
அவனடியெய்துவார் ; 40.

## 20

[இப்பாடல் 1-6, 40 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I நராயணர் ; 32, 40, 42, 45.
நாராயணர் ; 46—

II சகதண்ட முழுதுக்; 46—
செகதண்ட முழுதுக் ; 32.

**21**

[இப்பாடல் 1-6, 40 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I கதையிலொரு ; 46—
கதையினொரு ; 25.
கதையிலோர் ; 41.
சரிதையோர் ; 44.

கவிதன்னில் ; 46—
கவிதன்னின் ; 41, 44.
விருத்தத்தில் ; 19, 40, 41.
விருத்தத்தை ; 25, 29.

உரைப்போர் ; 46—
உணர்வோர் ; 19, 25, 29, 40, 41.
கேட்போர் ; 40.

II பராவரும் ; 46—
பராபர ; 44.

மலரோனுலகினில் ; 46—
அமரருலகினில் ; 41.

அவனும் ; 46—
அவனுற் ; 14, 19, 24-26, 29, 40, 41.
ஏகிப் ; 44.

பன்முறை ; 46—
பன்னெடும் ; 41.
பண்ணவர் ; 44.
பரவவே ; 26.

வழுத்த விற்றிருந்து ; 46—
வழுத்த விற்றிருந்தும்; 14, 19.
இனிது வீற்றிருந்து ; 26.
பரவ விற்றிருந்து ; 44.
காலம் வீற்றிருந்து ; 41.

III. அண்டர் பொற்பதமும் ; 46—
அண்டமுப்புலமும் ; 24.
பொன்றுநா ளதனினும் ; 46—
பொன்றினுமவற்றொடும் ; 19, 25, 29, 40, 41.
பொன்றினுமவரொடும் ; 14.
பொன்றுநா ளதனிலும் ; 24.

பொன்று ; 46—
பொன்றுது ; 14, 25, 29, 40, 41.
பொன்றுர் ; 24, 44.

IV உலகெனும் ; 46—
உலகினில் ; 14, 19, 24-26, 29, 41, 44.
உலகினுல் ; 40.

பரம ; 46—
ஆய ; 40.
நாலாம் ; 40.

பதத்தினை ; 46—
பதத்திடை ; 41.

அடைகுவரன்றே ; 14, 19, 25, 26, 29, 40, 41, 44.
அணுகுவரன்றே ; 46—

**22**

[இப்பாடல் 1-6, 40 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

II கேட்டோர் ; 41.
கேட்போர் ; 46—

**23**

[இப்பாடல் 4 என்னும் குறியீடுள்ள சுவடியில் இல்லை]

II வீடியல் ; 46—
வீடுயர் ; 1-3, 5, 6, 13, 15, 17-20, 22-24, 26, 28, 31, 39, 40, 43, 44, 45.
வீடிய ; 14.
வீடுறு ; 12.
வீடுறும் ; 27.

வழியதாக்கும் ; 46—
வழியதாகும் ; 45.
வழியுமாக்கும் ; 5, 13, 17, 27, 28, 40, 45.

வழியுமாக்கு ; 12, 15, 18, 19, 22.
வழியுமாகும் ; 45

கமலே ; 46—
கமல ; 1, 20.

III நீறுபட்டழிய ; 46—
நீறுபட்டொழிய ; 1, 5, 6, 13, 15, 17-19, 23, 27, 28, 35, 40, 41, 43.

IV கூறுவோர்க்கே ; 46—
கூறுவோற்கே ; 1, 2, 5, 6, 15, 19, 20, 22, 26, 28, 44.

## காப்புப் பாடல்கள்

### 27

[இப்பாடல், 25, 26, 29, 44 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் மட்டும் உளது]

I பராவரு ; 26—
பராபரம் ; 25, 29.

மறைபயில் ; 26—
நிறைபயில் ; 29.

II கராதல ; 25, 29.
கராசல ; 26—

நிறைபயில் ; 25, 29.
மழைபொழி ; 26—

ஏகி ; 46—
எய்தி ; 25.

III அணங்கைக்கண்டு ; 46—
அணங்குகண்டு ; 41.

அயலார் ; 46—
அயலான் ; 24, 28.

IV அஞ்சிலே 46—
ஐஞ்சிலே ; 12.

ஒன்று ; 12, 13, 14, 15, 24, 25, 27, 28, 31, 40, 41.
ஒன்றை ; 46—
ஒன்றுக்கு ; 44.

வைத்தான் ; 46—
வைத்தான் ; 14, 17, 18, 22, 24, 25, 39, 40, 41.
ஈந்தான் ; 44.

அவனெம்மை ; 46—
அவனம்மை ; 1, 3, 5, 6, 12, 14, 15, 17, 18, 20, 22, 24, 25, 27, 28, 39, 40, 41, 44, 45.
அவனோநாம் ; 26.
அவனன்மை; 40, 41.

அளித்துக்காப்பான் ; 46—
அளித்துக்காப்பாம் ; 23.
அளித்துவைப்பாம் ; 24, 25.
அளித்துவைப்பான் ; 16, 45.
அளித்துவப்பாம் ; 1, 3, 5, 6, 12, 15, 20, 22, 27, 28.
அளித்துவப்பான் ; 2, 13. 17, 18, 19, 40, 45.
அளித்துகப்பான் ; 40.
வணக்கஞ் செய்வோம் ; 26.

### 30

[இப்பாடல் 1-6, 34, 38 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

III திருகை ; 46—
திரிகை ; 41, 45.

### 31

[இப்பாடல் 4, 38, என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

II ஆருயிர்காக்க ; 1, 2, 3, 5, 6. 12, 13, 15, 16, 17, 18-20, 22, 24, 27, 28 40, 41, 44, 45.
ஆரியற்காக; 46—
ஆரியர்க்காக 41, 45.
ஆரியர்க்காக்க ; 41.
ஆருயிர் காப்ப ; 25, 29,
ஆருயிர்க்காக ; 39, 45.

**32**

[இப்பாடல் 1-4, 6, 30, 35, என்னும் குறியீடுள்ள சுவடிகளில் இல்லை]

I புத்தகம் ; 46—
பொத்தகம் ; 13, 14, 15, 17, 18, 22, 25-27, 29, 32, 33, 34, 40, 43, 45.

படிகமாலை ; 46—
படிகைமாலை ; 15, 40.

பொருள்சேர்ஞான ; 46—
பொருடேர்ஞான ; 22.
பொருளேய்ஞான ; 5.
பொருளேஞான ; 13, 25, 29, 40.
புகழ்சேர்ஞான ; 40.

II தரித்த; 46—
தெரித்த; 40.

III முகிழ்முலைத்; 46.
முகிழ்ம்முலை; 26, 28, 36.
முகிண்முலைத்; 40, 42, 45.

**33**

III மராமரம்வாலிமார்பு; 26.
மராமரம்வாலிமார்பும்; 25, 40.
மராமரமேழும்வாலி; 40.

துளைத்தணை; 12, 17-19, 27, 29, 39, 40, 45.
துளைத்தணி; 26—
துளைத்தனன்; 14, 25, 27.
துளைத்தன; 23, 43.
மார்பமும்; 40.

வகுத்துப்; 26—
வளைத்தும்; 14.
துளைத்துப்; 40.

பின்னர்; 12, 17, 18, 27, 39, 40, 45.
பின்னும்; 26—

IV குலமும்; 26—
கிளையும்; 29.

எய்துடன்; 12, 14, 17, 18, 19, 23, 24, 27, 29, 39, 40, 45.
எய்துபின்; 26—

---

